# ॥ श्री दशमहाविद्या ॥

# ॥ ஸ்ரீ தசமஹாவித்யா ॥

ஸ்ரீமத் சத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின்
அருளாசிகளுடன் இந்நூல் வெளியிடப்படுகிறது



ஆக்கியவர் :

கவி - ந்யாய - மீமாம்ஸா - சிரோமணி
திருவெண்காடு
**T.K. முத்துஸ்வாமி சாஸ்திரிகள்**

ஸ்ரீ உச்சிஷ்ட கணபதி உபாஸகர்
ஸ்ரீ மஹா - ப்ரத்யங்கிரா மந்தர சித்தர்
வெளியீடு : R. பெருமாள் காளிதாஸ்,
ஸ்ரீ வித்யா ஆஸ்ரமம் டிரஸ்ட்.
சங்கர் நகர் (அருவங்காடு)
சேலம் - 636 007.

**ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம் டிரஸ்ட்**

உடையாப்பட்டி,

சேலம் - 636 140

முதற் பதிப்பு : 1997



விலை : ரூபாய் 200/-

கிடைக்கும் இடங்கள் :

★ அதிஷ்டானம்,
கிழ 7 ஆம் வீதி,
புதுக்கோட்டை-622 001
☎ 21440

★ ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம்,
உடையாப்பட்டி,
சேலம் - 636140 ☎ 240660

★ சென்னை
ஓம்ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம்
கம்பர் தெரு, மஹாலக்ஷ்மி நகர்,
ராஜ கீழ்ப்பாக்கம்,
தாம்பரம், சென்னை-73

அலுவலக முகவரி:
353A லட்சுமண ஸ்வாமி சாலை,
K.K. நகர், சென்னை-78
Phone: 4834188

★ கோபுர தரிசனம் (ஆன்மீக மாத இதழ்)
1032, 38வது குறுக்குத் தெரு,
திருவள்ளுவர் நகர், திருவான்மியூர்
சென்னை-41 ☎ 490 03 03, 419330

வடிவமைப்பு : ஆர்.எஸ். மணி,
கோபுர தரிசனம், ஆன்மீக மாத இதழ்

*Lasertypeset by:*
**V.K.N. ENTERPRISES,**
*8/1, Dr. Rangachari Rd., Mylapore, Madras-4* Ph: 495 07 75

**Printed at : Page Offset Printers,**
6/2, Devarajan Street, Triplicane, Madras-5



# சத்குரு ஸ்ரீமத் சாந்தாநந்த ஸ்வாமிகள் அருளிய ஸ்ரீமுகம்

சாஸ்திரம் என்று ஒன்றைக் கூறுவதற்கு நான்கு அநுபந்தங்கள் வேண்டும். அவை முறையே அதிகாரி, விஷயம், சம்பந்தம், பிரயோஜனம் ஆகும். பல சாஸ்திரங்களுக்கு பல வகையான அதிகாரிகளும் விஷயங்களும் அவர்களுக்குப் பல வகையான சம்பந்தங்களும் பிரயோஜனங்களும் உண்டு. ஆனால் ஒரு மனிதனின் தாபத்திரயத்தை போக்கக் கூடிய சாஸ்திரமாக மந்திர சாஸ்திரங்களும் பிரம்ம வித்தையாக போற்றப்படும் உபநிஷத் போன்ற ஸ்ருதியும், பகவத் கீதை போன்ற ஸ்மிருதிகளும் பல யுகங்களாக மனுஷ்யர்களால் தக்க அனுஷ்டானத்துடன் உபாசிக்கப்பட்டு சிரேயஸ் அடையப் பெற்றுள்ளது.

பகவான் ஆதி சங்கரர் தோற்றுவித்த ஷண் மதங்களுக்குள் உயிர் நாடியாக விளங்கும் சாக்த மதம் ப்ரம்ம சக்தி உபாஸனைக்கு உரிய மார்க்கங்களை மனுஷ்யர்கள் உய்யும் பொருட்டு விளக்குகின்றது. ப்ரம்ம சக்தி இல்லாமல் இந்த உலகத்தில் எந்த வஸ்துவும், அதாவது அசையும் பொருளோ, அசையாப் பொருளோ, இரண்டுமே இயங்கவோ, இயங்கி இயங்காமல் இருக்கவோ இயலாது. உலகமெங்கும் வியாபித்துள்ள ஆதி பராசக்தியான ஸ்ரீ மாதா புவனேஸ்வரியின் திருவருளால் ஸ்ரீ வித்யா உபாசகர்கள் கருணா சொரூபிணியான பரதேவதையை உபாசித்து உய்யும் பொருட்டு உபாசனா மார்க்கங்களையும், விதிகளையும், பலன்களையும் தெள்ளத் தெளிவாக உள்ளங்கை நெல்லிக்கனி போல உபாசகர்களுக்கு விளங்க . வேண்டும் என என் மனதில் உதித்த சங்கல்பத்தின் பலன்தான் இந்த தச மகா வித்யா நூலாகும். இதில், காளி, தாரா, ஷோடசி, புவனேஸ்வரி, திரிபுர பைரவி, சின்னமஸ்தா, தூமாவதி, ராஜமாதங்கி, கமலாத்மிகா ஆகிய பத்து தெய்வங்களின் உபாசனா விதிகளும் முறைகளும் மஹா பண்டிதரான குரு பக்தி சொரூப மீமாம்ஸா, தர்க்க, வேதாந்த சாஸ்திரஞரான ப்ரம்ம ஸ்ரீ திருவெண்காடு T.K. முத்துஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களைக் கொண்டு சாக்த மதங்களுக்கு ஆதாரமான சகல நூல்களையும் ஆராய்ந்து, மந்திர சாஸ்திரங்களை அலசி, புராணங்கள், இதிகாசங்கள் போன்றவற்றின்

சாராம்ச பாவமும் ஏற்படும் பொருட்டு பல மாதங்கள் முயற்சி செய்து கிடைத்த பலன்தான் இந்த தச மஹா வித்யா என்னும் தெய்வ நூலாகும்.

ஏற்கனவே நம் அருளாணைப்படி ஸ்ரீமான் சாஸ்திரிகள் அவர்கள் " ஸ்ரீ புவனேஸ்வரி தத்துவப் பிரகாசம்" என்ற நூலை எழுதி பக்த கோடிகள் சாந்தஸ்வரூபிணியான ஸ்ரீ மாதா புவனேஸ்வரியைப் பற்றிய பல அரிய விஷயங்களை அறிய முடிந்தது. ஸ்ரீ சாஸ்திரிகள் மந்த்ரமஹர்ணவம் மந்த்ரமஹோததி ஸ்ரீ சாக்த ப்ரமோதம் ஸ்ரீ வித்யார் வைதந்த்ரம் பிரபஞ்ச ஸாரம் ப்ரபஞ்ச ஸாரஸார ஸங்க்ரஹம் மற்றும் பல புராணங்கள் மந்த்ரசாஸ்த்ர பரம ரஹஸ்யங்களை வெளியிடும் பல ஸம்ஹிதைகள் இவற்றை எல்லாம் ஆராய்ந்து தேவையான பல விஷயங்களைத் தேர்ந்தெடுத்து அதிக விஸ்தாரமில்லாமலும் மிகவும் சுருக்காமலும் அளவோடு இந்நூலில் பல சாக்த ரஹஸ்யங்களை பாமரர் முதல் பண்டிதர் வரை ஸாதகர்களை திருப்திப் படுத்தும் வகையில் எளிய தமிழ் நடையில் எழுதியுள்ளார்கள். விசேஷமாய் செய்திகள் அறிந்து கொள்ளும் ஆற்றல் உள்ளவர்களுக்கும் பிரமாண வாக்யங்களைத் தெரிந்து கொள்ள விருப்பமுள்ளவர்களுக்கும் உதவும் வகையில் ஆங்காங்கே வடமொழி பிரமாண வாக்யங்களையும் அதன் தமிழ் வடிவத்தையும் நமக்குத் தந்து உதவியுள்ளார்கள். இதில் காளியைப் பற்றிய உபாசனா பாகத்தில் ஆவிர்பாவ காலம், தேசம், புருஷநாமா பெயர்களின் விளக்கம் மதுகைடபர்களை சம்ஹரித்த மகா காளியின் வரலாறு மற்றும் ஸ்ரீ சாக்ஷாத் காளி தேவிதான் சீதா தேவி என்ற புராண சத்தியார்த்தங்களை விளக்கமாகக் கொடுத்துள்ளார்கள்.

அறிவில்லாதவன் மூடன் என்பதும் அவர்தம் முகத்தில் இருக்கும் கண்கள் புண்களுக்குச் சமானம் என்பதும் வள்ளுவர் வாக்கு. அனைவருக்கும் அறிவு சொரூபமாக இருக்கும் சரஸ்வதி தேவியின் கடாக்ஷம் பெற வேண்டும் என்றால் ஸ்ரீ தாரா வித்யா உபாசனை மிகவும் அவசியம். நீல சரஸ்வதி என்று போற்றப்படும் இந்த அம்பிகையை உபாசிப்பதால் அதி மஹோன்னதமாக ஞாபக சக்தியும் பிரமிப்பூட்டும் ஆத்ம வித்யா பலமும் கிட்டும். மற்றும் தாரா வித்யா மந்திரத்தில் "சகல துஸ்தரான்", "தாரய தாரய" என்ற மந்திர பாகங்களினால் அறிவு நிரம்பப் பெற்று உபாசிப்பவர்கள் துஷ்ட நிக்ரஹம் அடையப் பெறுவார்கள். தாரா தேவியை வஷிஷ்டர் உபாசித்து சித்தி பெற்ற வரலாறும் 30 ரகசிய நாமாக்களும் குரு பரம்பரையும் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. இதில் காளி ஆனந்த ஸ்வரூபிணீ மஹாப்ரளயத்திற்கு பின்னும் நித்யையாய் நிலைத்திருந்தவள். தமோகுணப் பிதானையாய்



இருந்த போதிலும் தன் பக்தர்களைக் காக்கும் போது ஸௌம்ய ரூபிணியாய் காக்ஷி கொடுப்பாள். காளீ உபாஸனை மிகவும் ஸுலபமானது. வாக் ஸித்தியை அளிக்க வல்லது. சீக்கிரம் ஸித்தியளிக்க வல்லது.

தாராவும் காளீ போன்றவளே. ஸ்ரீ தாரா தேவியும் ஸ்ரீ சின்னமஸ்தா தேவியும் சில மஹாப்ரளயங்களுக்குப் பின் முதலில் ஆவிர்பவித்து லோக ஸ்ருஷ்டிக்கு உதவியுள்ளனர் சாஸ்திர ஞானமும் கவிதா விலாஸம்பெற இவள் உபான முக்யமாகும்.

ஸ்ரீ வித்யா ஷோடசீ உபாசனையானது மூன்று பாகங்களாக உபாசகர்கள் நன்கு அறிந்து கொள்ளும் பொருட்டு ஸ்ரீ வித்யா மகிமை ஹ்ரீங்கார விளக்கம், மந்திரோத்தாரம் முதல் பகுதியும் பின் லலிதா சரிதம், சஹஸ்ர நாமத்தின் பெருமை இவைகளும் நன்கு விளக்கமாக எழுதப்பட்டுள்ளன.

ஸ்ரீ மாதா புவனேஸ்வரியைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்வதற்கு நாம் முன்பே பிரசுரித்துள்ள "ஸ்ரீ புவனேஸ்வரி தத்துவப் பிரகாசம்" என்ற நூலைப் படித்து உய்வது சிறந்தது.

திரிபுர பைரவி பாகத்தில் திரிபுரா என்ற நாமத்தின் விளக்கத்தை ஸ்ரீமான் சாஸ்திரிகள் மிகவும் அற்புதமாக விளக்கியுள்ளார்கள். இவ்வளவு விரிவாக திரிபுர பைரவி பற்றி சமீப காலத்தில் எவரும் கூறவில்லை. இதற்குக் காரணம் திரிபுர பைரவி மந்திரம் குரு சிஷ்ய பரம்பரையாக கர்ணா கர்ணிகையாக வந்து கொண்டிருப்பது. இம் மந்திரத்தை உபாசிப்பவன் அஷ்டமா சித்திகள் அடையப் பெறுவான் என்பது திண்ணம். பைரவி தேவியின் தோற்றம், ஸ்துதி போன்றவைகள் ஸ்ரீ சாரதா திலகத்தினின்று எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

ஸ்ரீ பிரசண்ட சண்டிகா எனப்படும் சின்ன மஸ்தாவின் உபாசனையும், தந்திர சாஸ்திர வரலாறும் விசேஷ நியமங்கள் பற்றிய கருத்தும் சின்னமஸ்தா தேவியின் சத்ருநாசம் செய்யக் கூடிய 12 நாமாக்களும் விளக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

கற்பனைகளுக்கெல்லாம் எட்டாத பல ரஹஸ்யங்களை உள்ளடக்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீ சின்னமஸ்தா தேவியின் உபாஸனை ஸாதகர்கள் விரும்பும் அனைத்து ஸித்திகளையும் அளிக்கும். இவள் உபாஸனையின் சிறப்பான அம்சங்கள் நூலில் கூறப்பட்டுள்ளன.

சின்ன மஸ்தாவும் காளியின் வர்க்கத்தைச் சேர்ந்தவளே. காளீ தாரா சின்னமஸ்தா ஸமமான இயல்புடையவர் என்று தெரிகின்றது.

அஞ்ஞானமாகிய அரக்கன் அழிவதற்கு தூமாவதி உபாசனா சாலச் சிறந்தது. "ஓம் தூம் தூம் தூமாவதி ஸ்வாஹா" என்ற சீரிய மந்திரத்தின் பெரிய பெருமை சொல்லிற்கு அடங்காதது. "சொல்லுக்கு அடங்காது பராசக்தி உன் சூரத் தனங்களெல்லாம்" என்பது பாரதி வாக்கு. சத்தியமாக ப்ரம்ம வித்யையை நாடுபவர்கள் தூமாவதி உபாசனை மூலம் அந்தக்கரணச் சுத்தியை அடைவார்கள்.

தூமாவதீ மந்த்ரம் ஏவுதலின் மூலம் வேதனையுற்று வாடுபவருக்கு அத்தொல்லையினின்றும் விடுபட சிறந்த மார்க்கங்கள் கூறப்பட்டுள்ளது. இது பலருக்கு வாழ்வளிக்கும்.

எப்பொழுதுமே பிறரை தூஷிப்பவர்களையும் சான்றோருக்கு இம்சை அளிப்பவர்களையும் ஸ்தம்பனம் செய்ய ஸ்ரீ பகளாமுகி உபாசனை மஹோன்னதமானது.

சகல வச்யங்களும் சான்றோர்கள் மற்றும் நல்லவர்களுக்கு சித்திக்க ராஜ மாதங்கி உபாசனா சாலச் சிறந்தது. மாமதுரையில் அரசாளும் ஆதிபராசக்தியான ஸ்ரீ மீனாட்சியும், ராஜ மாதங்கியும் ஒன்றே. காளிதாச மகா கவி ச்யாமளா தண்டகத்தில் இவள் பெருமையை விவரித்துள்ளார்.

ஸங்கீதம் ஸாஹித்யம் மற்றைய கலைகளில் தேர்ச்சி பெற உதவும். மாதங்கி வித்யை பெண்களுக்கு ஸௌபாக்யம், சிறையிலிருந்து விடுதலை பெற்று மகிழ்வுறவும் பயன்படும். முக்கியமாக வச்யமளிக்கும் என்று கூறப்பட்டுள்ளது. இதில் மாதங்கியின் வரலாறு பற்றி சாஸ்திரிகள் மிகவும் சிறப்பாக எழுதியுள்ளது ஸாதகர்கள் மனதை ஈர்க்கும்.

தனம் என்பது அனைவருக்கும் இஷ்டமானது, இதைக் குறைவின்றி அடைவதற்கு கமலாத்மிகா உபாசனை அவசியம். இவளே ஸ்ரீ சூக்தம் போற்றும் ஐஸ்வர்ய சக்தி. கமலாத்மிகா பற்றிய அனைத்தும் சிறந்த முறையில் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

இந்நூலை வடமொழி தமிழ் மொழி இரண்டிலும் மிகவும் விரைவில் அச்சிட்டு வழங்கிய "கோபுரதரிசனம் கோடி புண்ணியம்" என்ற ஆத்மிக மாதப் பத்திரிகையை சிறப்புற வெளியிட்டு ஆஸ்திக உலகினுக்கு பெருந் தொண்டு செய்யும் ஸ்ரீமான் R.S. மணி அவர்களுக்கு அனைத்து நலங்களும் உண்டாக ஸ்ரீ புவனேச்வரீ ஜகந்மாதாவை வேண்டுகின்றனம்.



தச மஹாவித்யா நூல்போன்று ஓம் ஸ்ரீ ஸ்கந்தாசிரமத்தினின்றும் வெளியாக விருக்கும் இன்னும் பல நூல்களை விரைவில் அச்சிட்டு வழங்கவிருக்கிறோர் என்பதை மிக மகிழ்ச்சியுடனும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலுக்காக பொருள் உதவியும் சரீர உழைப்பும் தந்து இதை அச்சிடுவதற்கு உறுதுணையாக இருக்கின்ற அனைத்து புண்ணிய ஆத்மாக்களுக்கும் வாழ்க்கையில் சதுர்வித புருஷார்த்தங்களும் சித்திக்க கோடான கோடி ஆசிகள்.

சுபம் - சிவம்

12.02.1997
சேலம்

சத்குரு ஸ்ரீமத் சாந்தாநந்த ஸ்வாமிகள்
ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம்

உ

## இந்நூலாசிரியரின் அறிமுகம்

"சுவேதாரண்யம்" என்ற திருவெண்காடு இவர் ஜன்ம பூமி. இவர் தந்தை ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள். தாய் நாகலக்ஷ்மி. இப்போது சென்னையில் தங்கியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நியாயம்—மீமாம்ஸை என்ற இரு சிரோமணிப் பட்டம் பெற்றவர். வேதாந்த சாஸ்திரமும் படித்துள்ளார். மீமாம்ஸா கேஸரீ ஸ்ரீ சீனிவாசாசாரியார், வேப்பத்தூர் பண்டிதராஜ ஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகள் ஆங்கரை ரங்க ஸ்வாமி சாஸ்திரிகள் போலகம் ஸ்ரீ ராம சாஸ்திரிகள் பண்டித ஸ்ரீ ராமச்சந்திர சாஸ்திரிகள் முதலியவர்களிடம் பாடம் கேட்டவர்.

சென்னை ப்ரெஸிடென்ஸி கல்லூரியில் சில ஆண்டுகள் ஆசிரியராய் பணி புரிந்தவர். பாரத ஸர்க்காரின் ஆதரவுடன் ஸ்காந்த தத்துவத்தை உணர்த்தும் ஸ்காந்த விமர்சம் என்ற வடமொழிக் கட்டுரை (The evaluation of the conception of Skanda in sanskrit literature) யும் எழுதியுள்ளார்.

74 தசகங்கள் கொண்ட "கார்த்திகேய கதார்ணவம்" என்ற காவ்யம், மஹாசாஸ்தாவும் மணிகண்டரும், சிறப்பு மிக்க ஸேது ஸ்தலம், புவனேச்வரீ தத்துவ ப்ரகாசம், ஸ்ரீ குரு சங்கரோ தந்தும், 1000 ச்லோகங்கள் கொண்ட ஆஞ்சநேய சரிதம், 2000 சுலோகங்கள் கொண்ட "ஸ்ரீ மஹா கணபதி, அஷ்டமாதாக்கள்", "ஸ்ரீ தசமஹாவித்யா" பல தெய்வங்களைப் பற்றிய ஸ்துதிகள், சுப்ரபாதங்கள், பல கட்டுரைகள் எழுதியுள்ளார். மந்த்ர சாஸ்திரத்திலும் யந்த்ரங்கள் அமைப்பதிலும் பழக்கமுடைய இவர் சாக்தத்தில் ஈடுபாடு உடையவர். வித்வான்களிடத்தில் பரிவும், பணிவும் உடைய இவர் ஸ்காந்த புராணம், தேவீ பாகவதம், மஹா பாரதம், ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீ சங்கர விஜயம் இவைபற்றி பாரதத்தின் பல பகுதிகளுக்குச் சென்று பல உபன்யாசங்களை நிகழ்த்தி வருகின்றார். மற்றும் பல விஷயங்கள் குறித்து ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கின்றார்.

உ

## நூலாசிரியரின் முன்னுரை

அன்புடையீர்!

தெய்வ மணங்கமழும் புதுக்கோட்டையில் ஸ்ரீ ஜகன்மாதா ஸ்ரீ புவனேச்வரீ தேவியைப் பிரதிஷ்டை செய்தும் சேலம் உடையாப்பட்டியில் மஹிமை மிகு மலைகள் சூழ்ந்த ஸ்ரீ ஸ்கந்தாசிரமத்தில் ஸ்ரீ அஷ்டாதசபுஜ துர்காதேவி ஸ்ரீ தண்டபாணியையும் பிரதிஷ்டை செய்தும், சேந்த மங்கலத்தில் ஸ்ரீ முருகப் பெருமானுடன் பல தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்தும் ஆஸ்திகப் பெருமக்களின் மனதில் நிலையான இடம் பெற்றவர் ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்தாவதூத ஸ்வாமிகள். சீர்மிகு ஸித்தர்கள் வரிசையில் கணக்கிடத் தகுந்த மஹான் ஸ்ரீ ஸ்வாமிகள், ஸ்ரீ புவனேச்வரீ மஹாமந்த்ரத்தைப் பல்லாண்டுகள் ஜபித்து ஸ்ரீ புவனேச்வரீ தேவியின் பேரருள் பெற்றவர். மஹாத்மா சேந்தமங்கலம் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாசாவதூத ஸ்வாமிகளிடம் உபதேசம் பெற்று ஆத்ம தத்வமுணர்ந்த ஞானி. சாந்தியும் தவமும் தூய்மையும் உதார குணமும் பெற்ற ஸ்ரீ ஸ்வாமிகள் அல்லும் பகலும் திருப்பணிகள் பல செய்வதிலும் அருள்பாலிக்கும் அற்புத வேள்விகள் பல செய்வதிலும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். பழுத்த வயதிலும் பல நற்பணிகள் செய்து கொண்டு நல்லோருக்கு எடுத்துக்காட்டாய் வாழ்ந்து வருகின்றார். இவர் புதுக்கோட்டையிலும் ஸ்கந்தாசிரமத்திலும் சேந்தமங்கலத்திலும் செய்திருக்கும் திருப்பணிகள் இவர் புகழுக்கு ஜயஸ்தம்பங்களாய்த் திகழ்கின்றன. மூன்று ஸ்தலங்களுக்கும் சென்று தரிசனம் செய்தோரே இதை அறிவர்.

மந்த்ரசாஸ்திரத்தின் மர்மம் அறிந்த ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்கந்தாசிரமத்தின் மண்டபங்களில் பல அரிய யந்த்ரங்களை அமைத்துள்ளார்கள். அத்துடன் மனத்தையும் கண்களையும் கவரும் ஸ்ரீ பஞ்சமுக கணபதி (ஹேரம்பர்) பஞ்சமுக ஆஞ்சநேயர் ஸ்ரீ தத்தாத்ரேயர், ஸ்ரீ த்ன்வந்தரி, ஸ்ரீ ஸ்வர்ணா கர்ஷண பைரவர் (சக்தியுடன்) முதலிய தெய்வங்களை மிகப் பெரிய உருவத்தில் சிலாரூபமாய் அமைத்துள்ளார்கள். அவ்வாறே பல மஹான்களின் உருவங்களையும்

சதுர்வேதங்களின் உருவங்களையும் பிரதிஷ்டை செய்துள்ளார்கள். அண்மையில் காளீ, தாரா, ஷோடசீ, புவனேசீ, பைரவீ, சின்னமஸ்தா, பகளா, தூமாவதீ, ராஜமாதங்கி கமலாத்மிகா என்ற பத்து மஹா வித்யா மூர்த்திகளையும் லோக கல்யாணகாரிகளான அஷ்ட மாதாக்களையும் முருகப் பெருமானுடைய 16 மூர்த்திகளையும் அமைத்துள்ளார்கள். அதில் ஸ்ரீ தக்ஷிணகாளீ, ஸ்ரீ புவனேச்வரீ, ஸ்ரீ தாராதேவீ மூர்த்திகள் தரிசித்தவர் கண்களையும் மனத்தையும் விட்டு என்றும் அகலாதவர்களாவர்.

ஸ்ரீ ஸ்வாமிகள் நாட்டு மக்கள் நலம் பெற ஸ்ரீ தச மஹா வித்யா ஹோமம் செய்தனர். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகள் "தசமஹா வித்யா" பற்றி ஒரு நூல் எழுதுமாறும், அது தெளிவாகவும் சுருக்கமாகவும் சாஸ்திர ஸம்மதமானதாகவும் இருக்க வேண்டும் என்று அருளாணையிட்டார்கள். அவர் அருளாணையை சிரமேற் கொண்டு "ஸ்ரீ தச மஹா வித்யை" என்ற நூலை பல மாதங்கள் ஆராய்ந்து எழுதியுள்ளேன்.

இதுவரை தச மஹா வித்யை பற்றிய பல நூல்கள் வந்துள்ளன. ஆயினும் ஸ்ரீ வித்யார்ணவதந்த்ரம், மந்த்ரமஹார்ணவம், மந்த்ரமஹோததி, சாக்தப்ரமோதம், சாரதா திலகம், ப்ரபஞ்ச ஸாரம், பிரபஞ்ச ஸாரஸங்க்ரஹம், மஹாகால ஸம்ஹிதா, சக்தி ஸங்கம தந்த்ரம், தாரா தந்த்ரம் பல புராணங்கள், பல மஹான்களின் கட்டுரைகள் இவற்றை எல்லாம் ஆராய்ந்து தேவையானதை விடாமலும் தேவையற்றதைத் தொடாமலும் இந்நூலை எழுதியுள்ளேன்.

இந்நூலில் முக்கியமாக தச மஹா வித்யா தேவதைகளின் ஆவிர்பாவகாலம் ஆவிர்ப்பவித்த இடம் சரிதம் மாஹாத்மியம் இவற்றைப்புராணங்களினின்றும் தந்த்ரங்களினின்றும் எடுத்துக் கொடுத்திருக்கிறேன். சரிதமும் மாஹாத்மியமும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டியவையே என்பதை,

श्रुत्वा ममैतन्माहात्म्यं तथा चोत्पत्तयः शुभाः ।
पराक्रमं च युद्धेषु जायते निर्भयः पुमान् ॥

ச்ருத்வா மமைதன் மாஹாத்மியம்
ததாசோத்பத்தயஃ சுபாஃ।
பராக்ரமம் ச யுத்தேஷு
ஜாயதே நிர்பயஃ புமான்॥



என்னுடைய மாஹாத்மியம் உத்பத்தி யுத்தத்தில் பராக்ரமம் இவற்றைக் கேட்பவன் பயமற்றவனாகிறான் என்ற ஸப்தசதீ சுலோகம் நமக்கு அறிவுறுத்துகின்றது.

அவசியமான இடங்களில் மந்ரோத்தார சுலோகத்துடன் அதன் பொருள் ஒவ்வொரு வித்தைக்கும் உரித்தான காயத்ரீ (உரையுடன்) தியான சுலோகங்களுக்கு விளக்கம், தியான பேதங்கள் ஒவ்வொரு வித்தைக்கும் ப்ரக்ருதி-புருஷ நாமாக்கள், இவை எழுதப்பட்டுள்ளன.

இதற்குமுன் ஸ்ரீ ஸ்வாமிகள் அருளாசியுடன் பல நூல்கள் எழுதியுள்ளேன். அவற்றுடன் இந்நூலும் ஆஸ்திகர்களுக்கு மனமகிழ்ச்சியளித்து தெய்வத் திருவருளைக் கூட்டி வைக்கும் எனத் திடமாக நம்புகிறேன்.

## தச மஹா வித்யைகள்

ஸ்ரீ காளீ, தாரா, ஷோடசீ, புவனேச்வரீ, த்ரிபுர பைரவீ, சின்னமஸ்தா (ப்ரசண்ட சண்டிகா என்ற மற்றொரு பெயரும் உண்டு), தூமாவதீ, பகளா, ராஜமாதங்கி, கமலாத்மிகா என்பன தச மஹா வித்யைகளாகும் என்று சாமுண்டா தந்த்ரம் கூறும். காளீ தாரா சின்னமஸ்தா ஸுந்தரீ (ஷோடசீ) பகளா ரமா மாதங்கி புவனா பைரவீ தூமாவதீ என்றும் வரிசைப்படுத்திப் பேசும் சக்தி ஸங்கம தந்த்ரம், மொத்தம் 21 மஹா வித்யைகள் என்றும் கூறுவர்.

மஹாமாயை பரப்ரம்ஹத்தின் துணைவி. வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத எல்லையில்லா மஹிமை கொண்டவள் அவள். பரப்ரம்ஹம் மாயையுடன் இணையும்போது பல ப்ரம்ஹ விஷ்ணு ருத்ராதி புருஷ ரூபங்களும் ஸரஸ்வதீ லக்ஷ்மீ காளீ முதலான ஸ்த்ரீ ரூபங்களும் ஆவிர்ப்பவிக்கின்றன. இதை ஆதிசங்கர பகவத் பாதர் அவர்கள் தம் ஸௌந்தர்ய லஹரீயில் உள்ள,

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविदः
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीममहिमा
महामाये विश्वं भ्रमयसि परब्रह्म महिषि ॥

கிராமாஹா்தேவீம் த்ருஹிணக்ருஹிணீமாகமவித:
ஹரே: பத்னீம் பத்மாம் ஹரஸஹசரீமத்ரிதனயாம்।
துரியா காபி த்வம் துரதிகமநிஸ்ஸீமமஹிமா
மஹாமாயே விச்வம் ப்ரமயஸி பரம்ரம்ஹமஹிஷி॥

என்ற சுலோகம் குறிப்பிடுகின்றது. இந்தக் காளீ முதலான தச ரூபங்களும் அந்த மாஹாமாயா ஸ்வரூபிணியான பராசக்தியின் பேதங்களே என்பதை,

विद्याः समस्ताः तव देवि भेदाः
स्त्रियः समस्ताः सकला जगत्सु।
त्वयैकया पूरितमंबयैतत्
काते स्तुतिः स्तव्यपरा परोक्तिः॥

வித்யா: ஸமஸ்தா: தவ தேவி பேதா:
ஸ்த்ரிய: ஸமஸ்தா: ஸகலா ஜகத்ஸு।
த்வயைகயா பூரிதமம்பயை ததத்
காதே ஸ்துதி: ஸ்தவ்யபரா பரோக்தி:॥

என்ற இந்த ஸப்தசதி சலோகத்தின் மூலம் அறிய முடிகிறது.

## 1. காளீ

தச மஹா வித்யைகளில் காளீ வித்யை முதலாவதாகும். பெண் தெய்வத்தின் மந்த்ரத்தை வித்யை எனக் கூறுவர்.

अथ कालीमनून्वक्ष्ये सद्यो वाक्सिद्धिदायकान्।
आराधितैर्यैः सर्वेष्टं प्राप्नुवन्ति नरा भुवि॥

அத காளீமனூன் வக்ஷ்யே ஸத்யோவாக்ஸித்தி தாயகான்।
ஆராதிதைர்யை: ஸர்வேஷ்டம் ப்ராப்னுவந்தி நரா புவி॥

என்பதால் காளீ மந்த்ரம் வாக்ஸித்தியளிப்பதுடன் அனைத்து இஷ்டங்களையும் அளிக்க வல்லது என்றும்,

विद्याराज्ञ्याः स्मृतेरेव सिद्ध्यष्टकमवाप्नुयात्॥
வித்யாராஞ்யா: ஸ்ம்ருதேரேவ ஸித்யஷ்டகமவாப்னுயாத்॥



என்பதனால் காளீ மந்த்ரம் (தக்ஷிண காளீ மந்த்ரம்) வித்யைகளுக்கு அரசி என்றும் இதை நினைத்த மாத்திரத்திலேயே அணிமாத்யஷ்ட ஸித்திகளையும் ஸாதகன் பெறுகிறான் எனவும் தெரிகின்றது. இங்கு பத்ரகாளீ, தக்ஷிணகாளீ, குஹ்யகாளீ மற்றும் காளி தேவியின் பல பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. அதில் தக்ஷிண காளீ மந்த்ரத்திற்கு ஸித்த ஸாத்யாதி சோதனை தேவையில்லை எனவும் புரச்சரணானுஷ்டானத்திற்குக் கூட அதிகமான பிரயாசை தேவையில்லை எனவும் தெரிகின்றது. இங்கு காளீயின் ஆவிர்ப்பாவ காலம், தேசம், புருஷநாமா, தக்ஷிணா என்ற சொல்லின் பொருள் விளக்கம், மதுகைடபர்களை வதைத்த மஹா காளியின் வரலாறு, ஸீதா தேவியும் காளியின் ஸ்வரூபம் என்ற புராண வரலாறு, காளீ ஸ்தானம் இவை கூறப்பட்டுள்ளன.

## 2. ஸ்ரீ தாரா வித்யா

ஸ்ரீ தாரா வித்யா பகுதியில் ஸ்ரீ தாரா காயத்ரீயின் விளக்கம், ஸ்ரீ தாராதேவீ பஞ்சாக்ஷர மந்த்ர ஜப விதானம் இவற்றுடன் ஸ்ரீ தாரா தேவியின் புருஷாவதாரமே ஸ்ரீ ராமர் எனவும், ஸ்ரீ ராமாவதார வருஷம், மாதம் முதலான விபரமும் கொடுக்கப்பட்டுள்ளது. யந்த்ரத்தில் பூஜை செய்வதற்கான தியான முறையும் கொடுக்கப்பட்டுள்ளது.

தாரா மாஹாத்மியத்தில் சில ஸமயம் காளி ஆதியில் ஆவிர்ப்பவிக்கிறாள். சில ஸமயம் தாரா ஆதியில் ஆவிர்ப்பவிக்கிறாள் என்ற செய்தியும், காளிக்கும் தாரா தேவிக்கும் பேதமில்லை என்ற சித்தாந்தமும் விசேஷாம்சமாகும். தாரா தேவியின் ஆவிர்ப்பாவ காலம் காள ராத்ரீ எனவும் காள ராத்ரீ விளக்கமும் எழுதப்பட்டுள்ளது. இந்தத் தாரா தேவியை உபாஸித்தே வஸிஷ்டர் ஸித்தி பெற்றார் என்ற தாரா தந்த்ரம் கூறும் வரலாறும் தாரா தேவியின் 30 ரஹஸ்ய நாமாக்களும் குரு பரம்பரையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## 3. ஸ்ரீ வித்யா (ஷோடசீ)

இது மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டு ஸ்ரீ வித்யா மஹிமை, ஹ்ரீங்கார விளக்கம், மந்த்ரோத்தாரம் முதல் பகுதியிலும், லலிதா சரிதம், லளிதா ஸஹஸ்ர நாமாவின் பெருமை இவை இரண்டாம் பகுதியிலும், லளிதா ஸ்துதி (அயிகிரி நந்தினி சந்தத்தில்) எழுதப்பட்டுள்ள 15 சுலோகங்களும் ஸம்பத்கரீ அச்வாரூடா தண்டினீ மந்த்ரிணீ பாலா

இவர்களின் வரலாற்றுக் குறிப்பாய் உள்ள 5 சுலோகங்களும் எழுதப்பட்டுள்ளன. இந்த லலிதா ஸ்துதி முன்பு என்னால் எழுதப்பட்டு ஸ்ரீ புவனேச்வரீ விஜயத்தில் பிரசுரிக்கப்பட்டதாகும். லலிதா ஸஹஸ்ர நாமாவின் முக்கியமான சில நாமாக்களைத் தன்னகத்தே கொண்டது. ஷோடசீ மந்த்ர ஜப விதானமும் கொடுக்கப்பட்டுள்ளது.

## 4. ஸ்ரீ புவனேச்வரீ

ஞானமே உருவானவள் ஸ்ரீ புவனேச்வரீ ஜகன்மாதா. இவளே பிரபஞ்சம் அனைத்திற்கும் மூல காரணம் என்று ஆதிசங்கர பகவத் பாதர் கூறியுள்ளார்கள்.

हरित्वाच्च हरत्वाच्च पुंप्रकृत्योस्तु युक्तयोः ।
श्लिष्टोच्चरितमेवेदं शब्दं तद्रूपमीरितं ॥

ஹரித்வாச்ச ஹரத்வாச்ச பும் ப்ரக்ருத்யோஸ்து யுக்தயோ:।
ச்லிஷ்டோச்சரிதமேவேதம் சப்தம் தத்ரூப மீரிதம்॥

எனச் சாரதா திலகத்தின் உரைகாரரான ஸ்ரீ ராகவபட்டர் ஹரி-ஹரன் என்ற ப்ரக்ருதி புருஷ ரூபமாயுள்ள ஆதி சக்தியே ஸ்ரீ புவனேச்வரீ. புவனேச்வரீ மந்த்ரமான ஹ்ரீங்காரத்தின் உள்ளே ஹரிஹரன் என்ற இரண்டு நாமாக்களும் அமைந்திருப்பதனாலும், ஸ்ரீ புவனேச்வரீ யந்த்ரங்களுக்கிடையில் ஹர ஈ, ஹரி ஈ எனப் போட வேண்டும் என மந்த்ர சாஸ்த்ரங்கள் விதித்திருப்பதாலும் இவர் கருத்து மன்த்திற்கு உகந்ததாய் இருக்கின்றது.

भुवनं खलु माया स्यादीश्वरी तस्य नायिका ।
புவனம் கலு மாயா ஸ்யாத் ஈச்வரீ தஸ்ய நாயிகா।

என்ற தேவீ பாகவதப்படி புவனம் என்றால் மாயை. அதற்கு ஈச்வரீ புவனேச்வரீ என்ற விளக்கம் கொடுத்திருக்கின்றார், ஸ்ரீ வ்யாஸாசாரியார்.

ஸப்தசதீ பாராயணத்திற்கு முக்கியமானதாகக் கருதப்படும் ராத்ரி சூக்தத்தினால் பேசப்படுகின்ற காளராத்ரீ தேவதையின் அதிஷ்டாத்ரீ தேவதை ஸ்ரீ புவனேச்வரீ என்று,

ब्रह्ममायात्मिका रात्रिः परमेशलयात्मिका ।
तदधिष्ठात्रिदेवी तु भुवनेशी प्रकीर्तिता ॥



ப்ரம்ஹமாயாத்மிகா ராத்ரி: பரமேசலயாத்மிகா।
ததிஷ்டாத்ரிதேவீ து புவனேசீ ப்ரகீர்த்திதா॥

என்று தேவீ புராணம் கூறுகின்றது என தேவீ ஸப்த சதியின் உரை ஸர்ஸ்வம் கூறுகின்றது.

புவனேச்வரீ தேவியைக் குறிக்கும் மந்த்ரம் ஹ்ரீங்காரம். இதை சாக்த ப்ரணவம் என்பர் சாக்தர். இதில் பஞ்ச பூதங்களும் கைலாஸம், பூமி, பாதாளம் முதலிய அகில உலகங்களும் அடங்கியுள்ளன என தக்ஷிணா மூர்த்தி ஸம்ஹிதை கூறும். இந்த ஹ்ரீங்காரம் துர்கா ஸூக்தம் तामग्निवर्णां (தாமக்னிவர்ணாம்) என்ற மந்திரத்தினின்றும் உத்தாரம் செய்யப்பட்டதாகும் என தேவீ பாகவதத்தின் உரைகாரர் சைவ நீலகண்டர் கூறுவார்.

புவனேச்வரீ தேவியே குண்டலினீ சக்தியாகத் திகழ்ந்து வர்ண ஸ்வரூபிணியாய் வெளி வருகின்றாள். குண்டலினீ சக்தியின் விஸ்தாரமான விளக்கமும் இதில் கொடுக்கப்பட்டுள்ளது.

இதில் நான்கு புவனேச்வரீ மந்த்ரங்கள் தக்ஷிணா மூர்த்தி உத்தார கோசத்தினின்றும், நான்கு மந்த்ரங்கள் சாரதா திலகத்தினின்றும் கொடுக்கப்பட்டுள்ளன. சாரதா திலகத்தின் உரைகாரர் எட்டு மந்திர பேதங்களைத் தந்து உதவியுள்ளார்.

இதில் ஸ்ரீ புவனா ஜகன் மங்கள கவசம், ஸ்ரீ புவனேச்வரீ கவசம் என்ற இதுவரை வெளிவராத இரண்டு கவசங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டும் படிப்பவருக்கு ஸகல ஸித்திகளையும் அளிக்கும்.

ஸ்ரீ புவனேச்வரீ மாலா மந்த்ரம், ஜகன் மங்களா மாலா மந்த்ரம் என இரண்டு மாலா மந்த்ரங்களும் இடம் பெற்றுள்ளன. இங்கு ஹ்ரீங்காரத்தின் பொருள், விளக்கம், புவனேச்வரீ சொல் விளக்கம், பாசம், அங்குசம் இவற்றின் விளக்கம் இவையெல்லாம் முடிந்த வரையில் எழுதப்பட்டுள்ளன. ஷட்கர்மாக்களுக்கான பல தியான சுலோகங்களும் (இதுவரை வெளிவராதவை) உரையுடன் எழுதப்பட்டுள்ளன. இதன் விரிவை என்னால் எழுதப்பட்டு, ஸ்ரீ ஸ்வாமிகளால் வெளியிடப்பட்ட ''புவனேச்வரீ தத்வ ப்ரகாசம்'' என்ற நூலில் காண்க.

## 5. த்ரிபுர பைரவீ

இந்தப் பகுதியில் த்ரிபுரா காயத்ரீயின் பொருள், ''த்ரிபுரா'' என்பதன் பல பொருள்கள், சாரதா திலகத்தில் கூறப்பட்டுள்ள மூல மந்த்ரம், உத்தாரம், மூல மந்த்ரத்தின் மூன்று கூடங்கள், ஒவ்வொரு கூடத்திற்கான தேவதாத்யானம், அதன் பலன்கள் விளக்கப்பட்டுள்ளன. இந்த த்ரிபுரா பைரவீ குலப் பெண் போன்று காப்பாற்றப்படுபவள். இம் மந்திரம் குரு சிஷ்ய பரம்பரையாக, கர்ணா கர்ணிகையாக வந்து கொண்டிருக்கின்றது. இம் மந்திரத்தை உபாஸிப்பவன் அனைத்து சித்திகளுக்கும் அதிபன் ஆகின்றான் எனவும், பிரமாண சுலோகங்களுடன் கூறப்பட்டுள்ளது. ஸமஷ்டி த்யான விளக்கம், பைரவீ தேவியின் தோற்றம் பற்றி விஸ்தாரமான வரலாறும் விளக்கப்பட்டுள்ளது.

த்ரிபுர பைரவீ மணிமாலை என்ற 12 சுலோகங்கள் கொண்ட பைரவீ ஸ்துதியும் சாரதா திலகத்தினின்றும் எடுத்து உரை கொடுக்கப்பட்டிருக்கின்றது. பைரவீ பேதங்களும் இடம் பெற்றுள்ளன.

## 6. சின்னமஸ்தா

இவளுக்கு ''ப்ரசண்ட சண்டிகா'' என்றொரு பெயரும் உண்டு. இது ஆறாவது வித்யையாகும். இம் மூர்த்தியின் தோற்றம், மற்றைய மூர்த்திகளின் தோற்றத்தினின்றும் மாறுபட்டதும் விசித்திரமானதும் ஆகும். இந்தத் தேவீ தன் தலையை வெட்டி எடுத்துக் கையில் பிடித்திருப்பாள். தன் இரு பக்கத்திலும் வர்ணிணீ, டாகினீ என்ற இரு சக்திகள் இருப்பர். தேவியின் கழுத்தின் நடுவினின்றும் பெருகும் ரத்தத்தை தேவியின் தலை பருகுகின்றது. மற்றைய இரு சக்திகளும் கழுத்தின் இரு புறத்தினின்றும் பெருகும் ரத்தத்தைப் பருகுகின்றனர். இது குண்டலினீ சக்தியின் ஒருவாரான குறிப்பு என்றே பலரும் கூறுகின்றனர். இங்கு அதன் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. அதற்கான தந்த்ர சாஸ்திர வரலாறும் உள்ளது. பராசக்தியின் தேஹத்தில் காளீ, சின்னமஸ்தா, தாரா என்ற மூன்று சக்திகளும் இடா, ஸுஷும்னா, பிங்களா என்ற நாடி போன்றவர்கள் என்ற கருத்தும் பிரமாணத்துடன் கொடுக்கப்பட்டுள்ளது. பராசக்தியின் செயல்களுக்கு நம் சிற்றறிவைக் கொண்டு மட்டும் காரணம் கூறிவிட முடியாது. மனுஷ்ய லோகத்தின் அனுபவங்களுக்கும் அப்பாற்பட்டது அவள் செய்கை. இதற்கெல்லாம் அவரவர் புத்தி சக்திக்கு ஏற்றாற்போல் விளக்கம் கொடுக்கலாம். ஆயினும் அது சாஸ்திரத்திற்கு விரோதமாய் அமைந்து விடக் கூடாது.



இதில் விசேஷாம்சம் இந்த வித்யோபாஸனைக்கு விசேஷ நியமங்கள் ஒன்றும் கிடையாது என்பதாகும். சின்னமஸ்தா தேவியின் சத்ரு நாசம் செய்யக் கூடிய 12 நாமாக்களும் உள்ளன.

## 7. தூமாவதீ

ஏழாவது வித்யையாகக் கருதப்படும் தூமாவதீ, அழகிய தோற்றம் உடையவள் அல்ல. பாபிகளுக்குப் பராசக்தியே அலக்ஷ்மீயாகவும் தோற்றமளிப்பாள் என்பதை,

सा श्रीः स्वयं सुकृतिनां भवनेषु, अलक्ष्मीः
पापात्मनां, कृतधियां हृदयेषु बुद्धिः ।
श्रद्धा सतां कुलज़नप्रभवस्य लज्जा
तां त्वा नतास्म परिपालय देवि विश्वं ॥

ஸா ஸ்ரீः ஸ்வயம் ஸுக்ருதினாம் பவனேஷு, அலக்ஷ்மீ:
பாபாத்மனாம், க்ருததியாம் ஹ்ருதயேஷு புத்திः।
ச்ரத்தா ஸதாம் குலஜனப்ரபவஸ்ய லஜ்ஜா
தாம் த்வா ஸ்தாஸ்ம பரிபாலய தேவி விச்வம்॥

''அல்க்ஷ்மீः பாபாத்மனாம்'' என்பதனால் குறிப்பிடுகின்றது ஸப்த சதியிலுள்ள இந்த தேவீ ஸ்தோத்ரம்.

धूमावतीमनुः प्रोक्तः शत्रु निग्रहकारकः ।

தூமாவதீமனு ப்ரோக்தः சத்ருநிக்ரஹகாரகः।

என்று ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரத்தில் சத்ருக்களை நீக்க இவள் மந்த்ரம் பயன்படும் என்று பலச்ருதி கூறப்பட்டுள்ளது. இவளை உபாஸித்தால் இவள் சத்ருக்களுக்கு மஹிஷி (எருமை) ரூபத்துடனோ, வராஹ ரூபத்துடனோ ஸ்வப்னத்தில் தோன்றி ஹிம்ஸை அளிப்பாள். இம் மந்திரத்தின் ஏவலால் துன்புறுபவர்களுக்குச் சாந்தி பெற இங்கு உபாயங்கள் விளக்கப்பட்டுள்ளன. இவை துன்பமுற்றவர்களுக்கு நிச்சயம் ஆறுதல் அளிக்கும். அனுபவமுள்ள உபாஸகர்கள் மூலமாய் மற்ற ரஹஸ்யங்களை அறிந்து கொள்வதே நன்மை பயக்கும்.

## 8. பகளாமுகீ

இந்தப் பகளாமுகீ வித்யை சத்துருக்களை கட்டுப்படுத்தி வைக்க உதவும். அதே சமயத்தில் ஸாதகர்களுக்கு ஹிதத்தையும் அளிக்கும். இந்த வித்யையை பிரம்மாஸ்திரமாகவும் கொள்ளுவர். மந்த்ரோபாஸனையினால் காற்றைக் கூட அசையாமல் இருக்கச் செய்து விடலாம் என்று மந்த்ர சாஸ்திரம் உறுதி கூறுகின்றது. இவளை உபாஸிக்க மஞ்சள் வஸ்த்ரம், மஞ்சள் பூக்கள், மஞ்சளாலான ஜப மாலை இவை மிக முக்கியமானவை ஆகும். இவளுடைய ஆவிர்ப்பாவ வரலாறும் ப்ரமாணத்துடன் கூறப்பட்டுள்ளது. இந்த ஸ்ரீ பகளாமுகீ தேவியின் வரலாறு அடங்கிய 5 சுலோகங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் பகளா முகியின் விசேஷாம்சங்களைச் சுருக்கமாய்த் தெரிந்து கொள்ளலாம். இந்தப் பிரம்மாஸ்திரம்கூட சத்ருக்களுடைய திவ்யாஸ்திரங்களைத் தடுத்து நிறுத்தவும், அவசியமானால் சத்ரு ஸம்ஹாரம் செய்யவும் உதவும்.

## 9. ஸ்ரீ ராஜமாதங்கீ

ஸ்ரீ ராஜமாதங்கீ வித்யை வச்யத்திற்கு மிகவும் உகந்ததாகும். ஸங்கீதம், ஸாஹித்யம் இவற்றில் வல்லமை பெற இந்த வித்யோபாஸனம் அவசியமாகும். இந்த ராஜமாதங்கீ ஸ்ரீ மந்த்ரிண்யம்பாவின் ஆவிர்ப்பாவம் என்றும் மதுரையில் அரசாட்சி புரிந்த ஸ்ரீ மீனாட்சியும் இவளே என்றும், திருவானைக்காவில் கோயில் கொண்டருளும் ஸ்ரீ அகிலாண்டேச்வரீ தேவி தண்டநாதா என்றும் பெரியோர்கள் கூறுவர். இவள் பெருமையை விளக்கவே மஹா கவிகளுக்குள் சிறந்தவனும் ஸ்ரீ ஸரஸ்வதீ தேவியின் புருஷாவதாரமாக பேசப்படுபவனுமாகிய ஸ்ரீ காளிதாஸ மஹாகவி "சியாமளா தண்டகம்" என்ற நூலை எழுதியுள்ளார். இவளை உபாஸிப்பதால், ஒன்று சேராத வித்யையும், தனமும் ஒன்று சேரும் என காளிதாஸன் குறிப்பிட்டுள்ளார். இவள் அனைத்து மந்த்ர யந்த்ர தந்த்ர பீடங்களாய் இருப்பவள் என்பது மஹா கவியின் ஸித்தாந்தம்.

இங்கு இவள் ஆவிர்ப்பாவ சரிதம் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இவளே சுவேதாரண்யம் என்ற பிரஸித்தமான திருவெண்காடு என்ற க்ஷேத்ரத்தில் பிரம்ஹவித்யா ஸ்வரூபிணியாய் அமர்ந்தருளுகின்றாள். இவளே இந்த்ரனுக்கு உபதேசித்த கேனோபநிஷத் கூறும் சக்தி. இதில் இவளே உச்சிஷ்-சண்டாளினீ என்று பேசப்படும் லகு சியாமா. இவள் மந்த்ரஜப விதானமும் கூறப்பட்டுள்ளது.

## 10. கமலாத்மிகா

ஸ்ரீ மஹா விஷ்ணுவின் மார்பில் உறையும் ஸாக்ஷாத் லக்ஷ்மீ தேவியே கமலா. துர்கா ஸூக்தத்தில் கூறப்பட்டுள்ள ஹ்ரீங்கார பீஜத்திற்கு உரியவளான துர்கை எனப் பேசப்படும் ஸ்ரீ மஹா லக்ஷ்மீயினின்றும் தனித்துக் காட்டவே கமலாத்மிகா என்று பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது எனத் தோன்றுகின்றது. இவள் விஷ்ணுவின் ஸாத்விகீ சக்தியாவாள். இவளே அகில உலகங்களுக்கும் ஐச்வர்யம் அளித்து அஷ்ட லக்ஷ்மியாய் காட்சி கொடுப்பவள். ஸ்ரீ ஸூக்தம் போற்றிப் புகழும் உத்தமமான சக்தி. இவளை உபாஸிப்பவர்களுக்கு செல்வம் கொழிக்கும். இந்த கமலா பற்றிய செய்திகள் எல்லாம் இங்கு சுருக்கமாய்க் கூறப்பட்டுள்ளன.

இந்நூல் அச்சிட்டு வெளிவர, "கோபுரதர்சனம் கோடி, புண்ணியம்" என்ற ஆன்மீகப் பத்திரிகையின் ஆசிரியரும் உரிமையாளருமான ஸ்ரீமான் R.S. மணி அவர்கள் மிகவும் உதவியுள்ளார்கள். மிகவும் விரைவில் சுத்தமாகவும் தெளிவாகவும் அச்சுப் பிழையின்றியும் நல்ல கட்டுரையுடனும் வடமொழி தமிழ் இரண்டையும் அச்சிட்டுள்ளகற்கு ஸ்ரீ ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்தாவதூத ஸ்வாமிகள் அருளாசிகள் வழங்கியுள்ளதையும் தெரிவித்துக் கொண்டு என்னுடை நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலை எழுத அருளாசி கூறி, உறுதுணையாக நிற்கும் ப்ரத்யக்ஷ புவனேச்வரீயாய்க் காட்சி கொடுக்கும் ஸ்ரீ ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்தாவதூத ஸ்வாமி அவர்களின் கர கமலங்களில் பணிவுடன் இந்நூலை ஸமர்ப்பணம் செய்கிறேன். ஆஸ்திகர்களின் ஹ்ருதய கமலங்களில் இந்நூலின் கருத்துக்கள் இடம் பெறுமானால் நான் பேறு பெற்றவனாவேன்.

திருச்சி
10.02.1997

தங்கள் அன்பன்
கவி நியாய-மீமாம்ஸா சிரோமணி
திருவெண்காடு T.K. முத்துஸ்வாமி சாஸ்திரி.

உ

## ஸ்ரீ மஹாகணபதயே நம:

## ஸ்ரீ தசமஹாவித்யா



यद्भार्ये सिद्धिबुद्ध्याख्ये लक्षलाभौ च यत्सुतौ ।
संतोषिणी च यत्पुत्री तं वन्दे कुंजराननम् ॥

யத்பார்யே ஸித்திபுத்யாக்யே லக்ஷலாபௌ ச யத்ஸுதௌ।
ஸந்தோஷிணீ ச யத்புத்ரீ தம் வந்தே குஞ்ஜரானனம் ॥

ஸ்ரீ ஸித்திபுத்திகளை மனைவியராகவும், லக்ஷலாபர்களை புத்திரர்களாகவும், ஸந்தோஷிணீயை புத்ரியாகவும் கொண்ட ஸ்ரீ மஹாகணபதியை வணங்குகிறேன்.

★ श्री महागणपतये नमः ★

ஸ்ரீமஹாகணபதயே நம:

# ॥ श्रीगणपतिस्तुतिः ॥

# ஸ்ரீ கணபதி ஸ்துதி:

गजमुख दानव छिन्न बुधस्तुति हृष्टमहेश्वर शैलसुता-
नयनसमीक्षित तारसमुद्गत नागयुगोदित दिव्यतनो ।
श्रुतिशिखरस्तुत विघ्ननिवारक कुंभमुनिस्तुत विश्वतनो
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते ॥ १ ॥

கஜமுக தானவ கின்ன புதஸ்துதி ஹ்ருஷ்டமஹேச்வர சைலஸுதா
நயனஸமீக்ஷித தாரஸமுத்கத நாகயுகோதித திவ்யதனோ।
ச்ருதிசிகரஸ்துதவிக்னநிவாரக கும்பமுனிஸ்துத விச்வதனோ
கணபகணேச்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே॥

கஜமுகன் என்ற அவுணனால் கஷ்டமடைந்த தேவர்களுடைய ஸ்துதியினால் மகிழ்ந்த பார்வதீ பரமேச்வரர்களுடைய கண்களால் பார்க்கப்பட்ட பிரணவத்தினின்றும் வெளிவந்த (ஆண் பெண்) யானைகளிடமிருந்து தோன்றி திவ்ய சரீரங் கொண்டவரும், உபநிஷத்துக்களால் (அதர்வசிர்ஷம் முதலியவற்றால்) துதிக்கப் பட்டவரும். விக்னங்களைப் போக்குபவரும், அகத்திய முனிவரால் போற்றப்பட்டவரும், உலகையே சரீரமாய்க் கொண்டவரும், கணாதிபர்களுக்கெல்லாம் தலைவராயுள்ளவரும் அனைவருக்கும் அன்பருமான ஸ்ரீஸித்திபுத்தீ ஸமேத ஸ்ரீமஹாகணபதியே வெற்றியுடன் விளங்குவீராக.

जलनिधिपान समर्थघटोद्भव हस्तकमण्डलुसक्तनदी
हरणकृते धृत निर्भयवायस विप्रवदूत्तम रूप विभो ।
नृपतिवरेण्य कवेरसुताजल वर्धित दक्षिणदेश निधे
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते ॥ २ ॥

ஜலநிதிபான ஸமர்த்தகடோத்பவ ஹஸ்தகமண்டலு ஸக்தநதீ
ஹரணக்ருதே த்ருத நிர்பயவாயஸ விப்ரவடுத்தமரூப விபோ ।
ந்ருபதிவரேண்ய கவேரஸுதாஜல வர்த்தித தக்ஷிணதேச நிதே
கணபகணேச்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே ॥

கடலைக் குடித்த அகத்திய முனிவரின் கையிலிருக்கும் கமண்டலத்திலுள்ள காவேரி நதியை (சீர்காழிக்குக்) கொண்டு வருவதாற்காக பயமற்ற காக்கை - பிரம்மசாரி இவர்களின் உருவத்தைக் கொண்டவரும், கவேர மன்னனின் பெண்ணாகிய காவேரியின் ஜலத்தால் தென்னாட்டின் செல்வத்தைச் செழிக்கச் செய்தவருமான ஸ்ரீ ஸித்தி புத்தி ஸமேத மஹா கணபதே வெற்றியுடன் விளங்குவீராக.

कलिमलनाशन गोश्रुतिनामक पुण्यफलप्रद भूमितले
दशवदनार्पित पूज्यमहेश्वर लिङ्गनिधान सुलब्ध यशः ।
पुरहर लिङ्गसमुद्धरणक्षत रावणदर्शन हृष्टमते
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते ॥ ३ ॥

கலிமலநாசன கோச்ருதிநாமக புண்ய பலப்ரத பூமிதலே
தசவதனார்பித பூஜ்யமஹேச்வர லிங்கநிதான ஸுலப்த யச:
புரஹர லிங்கஸமுத்தரணக்ஷத ராவணதர்சன ஹ்ருஷ்டமதே
கணபகணேச்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே

கலிதோஷம் போக்கும் கோகர்ணம் என்ற புண்ணியம் நல்கும் பூமியில் ராவணனால் கொடுக்க பட்ட பூஜிக்கத் தகுந்த சிவலிங்கத்தை (கோகர்ணத்திலே) பிரதிஷ்டை செய்ததால் புகழ் பெற்றவரும், சிவலிங்கத்தை மீண்டும் பெயர்த்தெடுப்பதில் தோல்வியுற்ற ராவணனைக் கண்டு மகிழ்ச்சி யுள்ளவருமான ஸ்ரீ ஸித்திபுத்தி ஸமேத மஹாகணபதே வெற்றியுடன் விளங்கு வீராக.

मनुजव पुस्थित हृद्यचतुर्दल पद्मगतालय रक्ततनो
गुडकदलीफल मोदकलड्डुक भक्ष्यवरादन जातरुचे ।
पृथुतम मूषकवाहन भारतलेखन दक्षिण सूक्ष्ममते
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते ॥ ४ ॥



மனுஜவபுஸ்ஸ்தித ஹ்ருத்யசதுர்தள பத்மகதாலய ரக்ததனோ
குடகதளீபல மோதகலட்டுக பக்ஷ்யவராதன ஜாதருசே ।
ப்ருதுதம மூஷக வாஹன பாரதலேகன தக்ஷிண ஸூக்ஷ்மமதே
கணப கணேச்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே ॥

மனுஷ்ய சரீரத்திலுள்ள அழகிய நான்கு இதழ்கள் கொண்ட தாமரை மலரை (மூலாதாரத்தை) இருப்பிடமாகக் கொண்டவரும் சிவந்த மேனியரும், வெல்லம், வாழைப்பழம் மோதகம், இட்லி முதலிய உயர்ந்த பக்ஷணங்களை சாப்பிடுவதில் ஆசையுடையரும், மிகப்பெரிய மூஞ்சூரை வாஹனமாகக் கொண்டவரும், மஹாபாரதம் எழுதுவதில் வல்லுனரும் நுண்ணிய அறிவுடையவருமாகிய ஸ்ரீ ஸித்தி புத்தி ஸமேத மஹாகணபதே வெற்றியுடன் விளங்குவீராக.

अरुणसरोरुह मध्यतलस्थित वल्लभयाश्रित दिव्यतनो
शरसृणिपाशशरास विभूषित पाणिचतुष्टय शोभितनो ।
पुरहरविष्णुविधीन्द्रसमर्चित पादपयोरुह देहि शुभं
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते ॥ ५ ॥

அருண ஸரோருஹ மத்யதல ஸ்திதவல்லபயாச்ரித திவ்யதனோ
சரஸ்ருணிபாசசராஸ விபூஷித பாணிசதுஷ்டல சோபிதனே ।
புரஹரவிஷ்ணு விதீந்த்ர ஸமர்ச்சித பாதபயோருஹ தேஹி சுபம்
கணபகணேச்வர ஸர்வ ஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே ॥

செந்தமாரைப் பூவின் நடுவில் வீற்றிருப்பவரும், ஸ்ரீ வல்லபா தேவியால் அணைத்துக் கொள்ளப் பட்ட திவ்ய தேஹ முடையவரும், அம்பு அங்குசம் பாசம் வில் இவைகளால் அலங்கரிக்கபட்ட நான்கு கரங்களுடையவரும், சிவன், விஷ்ணு, ப்ரம்மா இந்திரன் இவர்களால் பூஜிக்கப் பெற்றவருமான ஸ்ரீ ஸித்திபுத்தி ஸமேத மஹா கணபதே எனக்கு மங்களம் அருளி, வெற்றியுடன் விளங்குவீராக.

दुष्कामं विकटो विनाशयतु मे क्रोधं च लम्बोदरो
लोभं मत्तगजाननो मदममन्दं चैकदन्तो महान् ।
मोहं मान्यमहोदरोपि ममतामिष्टार्थदो विघ्नराट्
मात्सर्यं शुभवक्रतुण्डगणपोऽहन्तां च धूम्रप्रभः ॥ ६ ॥

துஷ்காமம் விகடோ வநாசயது மே க்ரோதம் ச லம்போதரோ
லோபம் மத்தகஜானனோ மதமமந்தம் சைகதந்தோ மஹான்।
மோஹம் மான்ய மஹோதரோபி மமதா மிஷ்டார்த்ததோ விக்னராட்
மாத்ஸர்யம் சுபவக்கர துண்ட கணபோஹந்தாம் ச தூம்ரப்ரப:॥

ஸ்ரீ விகடவிநாயகர் காமத்தையும், லம்போதரர் க்ரோதத்தையும், கஜானனர் லோபத்தையும், ஏகதந்தர் மதத்தையும் மஹோதரர் மோஹத்தையும் விக்னராஜர் மமதையையும் வக்ர துண்டர் மாத்ஸர்யத்தையும், தூம்ரவர்ணர் அகந்தையையும் எனக்கு போக்கியருளட்டும்.

शुण्डादण्डसमुज्वला तव विभो रम्या गजास्याकृतिः
त्वामोंकारमनन्तमक्षरमहो ब्रूते हि निस्संशयम् ।
हस्ताः पञ्चमहागणेश सकलाभीष्टप्रदास्ते नृणां
ताराङ्गानि शुभप्रदानि कलये पंचाक्षराणि स्फुटम् ॥ ७ ॥

சுண்டாதண்டஸமுஜ்வலா தவ விபோ ரம்யா கஜாஸ்யாக்ருதி:
த்வாமோங்காரமனந்தமக்ஷரமஹோ ப்ரூதே ஹி நிஸ்ஸம்சம்।
ஹஸ்தா: பஞ்ச மஹாகணேச ஸகலாபீஷ்டப்ரதாஸ்தே ந்ருணாம்
தாராங்கானி சுபப்ரதானி கலயே பஞ்சாக்ஷராணி ஸ்புடம்॥

விபோ! துதிக்கையுடன் கூடிய அழகிய தங்களுடைய யானை முக உருவம் தங்களை அழிவற்ற ஓங்காராக்ஷர மாகவே ஸந்தேஹ மின்றிக் கூறிகின்றது. ஸ்ரீ மஹாகணபதே ! ஜனங்களுக்கு எல்லா விருப்பங்களை நல்கும் தங்களுடைய ஐந்து கரங்களையும், மங்களமருளும் ஓங்காரத்தின் அவயவங்களான பஞ்சாக்ஷரங்களாகவே நான் கருதுகின்றேன். (பிரணவத்தில் அ.உ.ம் நாதம் பிந்து என்ற ஐந்து அக்ஷரங்கள் இருக்கின்றன).

सिद्धिः स्वर्णसमा हिता च गृहिणी, ख्याता हि बुद्धिः परा
कुन्देन्दुस्फटिकाकृतिः तव सुतौ श्रीलक्ष-लाभाभिधौ ।
संतोषिण्यभिधा सुता प्रभजतां संतोषदा सर्वदा
स्वानन्दाख्यापुरे स्थितिस्तव विभो गार्हस्थ्यमन्यादृशम् ॥ ८ ॥



ஸித்தி: ஸ்வர்ணஸமா ஹிதாச க்ருஹிணீ க்யாதா ஹி புத்தி: பரா
குந்தேந்துஸ்படிகாக்ருதி ஸ்தவஸுதௌ ஸ்ரீ லக்ஷலாபாபிதௌ।
ஸந்தோஷிண்யபிதா ஸுதா ப்ரபஜதாம் ஸந்தோஷதா ஸர்வதா
ஸ்வானந்தாக்ய புரே ஸ்திதிஸ்தவ விபோ கார்ஹஸ்த்தியமன்யாத்ருசம்॥

விபோ கணபதே ! தங்களுக்கு இரு மனைவியர். ஒருவள் பொன்னிற முடையவள், மற்றவள் குந்தமலர் சந்திரன் ஸ்படிகம் போன்ற வெண்ணிற முடையவள். தங்கள் இரு புதல்வர்கள், லக்ஷனும் லாபனும். தன்னை வழிபடுபவர்க்கு மகிழ்ச்சி யளிப்பவள் தங்கள் பெண் சந்தோஷிணி என்ற பெயரினள் தங்கள் வாசம் நிரந்தரமாக ஸ்வானந்த புவனம் என்ற பட்டினத்தில். ஆக்வே தங்களுடைய கிருஹஸ்தாசிரமம் தனித் தன்மை வாய்ந்ததாகும்.

ब्रह्मा लोकं सृजति हरति त्र्यम्बकः पाति विष्णुः
भाभिर्भानुर्भुवनमखिलं भासयत्यम्बिका च ।
धर्मार्थादीन्वितरति सदा यत्कृपालेशलाभात्
वन्दे नित्यं विबुधविनुतं ब्रह्मणां प्रेरकं तम् ॥ ९ ॥

ப்ரம்ஹா லோகம் ஸ்ருஜதி ஹரதி ரியம்பக: பாதி விஷ்ணு:।
பாபிர்பானுர் புவனமகிலம் பாஸயத்யம்பிகா ச॥
தர்மார்த்ததாதீன் விதரதி ஸதா, யத்க்ருபாலேசலாபாத்
வந்தே நித்யம் விபுத வினுதம் ப்ரம்ஹணாம் ப்ரேரகம் தம்॥

எவருடைய கிருபையின் காரணமாக பிரம்மன் உலக சிருஷ்டியையும் ருத்ரன் ஸம்ஹாரத்தையும், விஷ்ணு ஸம்ரக்ஷணத்தையும் செய்கின்றாரோ, சூரியனும் அகில உலகங்களையும் தன் ஒளியினால் பிரகாசப் படுத்துகின்றானோ, அம்பிகையும் தர்மம் அர்த்தம் முதலியவற்றை அளிக்கின்றாளோ, அந்த தேவர் வணங்கும், பிரம்மாக்களை தங்கள் தங்கள் புணிபுரியத் தூண்டும் கணேச்வரரை வணங்குகின்றேன்.

# श्रीभुवनेश्वरीस्तुतिः

## ஸ்ரீ புவனேச்வரீ ஸ்துதி:

हरिहररूपिणि शक्तिविवर्धिनि दुर्गति नाशिनि भक्तहिते
हरिहर पङ्कज मुख्य सुरार्चित पादयुगे कविलोकनुते ।
अभयवरांकुश पाशविभूषित पाणितले नवसालगते
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ १० ॥

ஹரி ஹரரூபிணி சக்திவிவர்த்தினி துர்கதிநாசினி பக்தஹிதே
ஹரிஹர பத்மஜ முக்ய ஸுரார்சித பாதயுகே கவிலோகநுதே।
அபய வராங்குச பாசவிபூஷித பாணிதலே நவஸாலகதே
ஜய ஜய ஹே புவனேச்வரி சின்மயி சிந்திததாயினி வேத நுதே॥

விஷ்ணு, சிவன் இவ்விருவரின் ஒன்றுபட்ட உருவினளும், சக்தியை வளரச் செய்பவளும், கஷ்டத்தைப் போக்குபவளும், பக்தர்களுக்கு நன்மை புரிபவளும், விஷ்ணு, சிவன், பிரம்மா, முதலிய தேவர்களால் அர்ச்சிக்கப் பட்ட திருவடி கொண்டவளும், கவி உலகத்தால் போற்றப் பட்டவளும், அபயம் வரம் பாசம் அங்குசம் இவைகளால் அலங்கரிக்கப் பட்ட கரங்கள் கொண்டவளும், வேதங்களால் போற்றப் பட்டவளும், விரும்பிய அனைத்தையும் அளிப்பவளும், புதுக்கோட்டையில் அமர்ந்திருப்பவளும் ஞான ஸ்வரூபிணியுமான ஸ்ரீ புவனேச்வரீ தேவி! ஜய ஜய.

अमृतमहार्णव वीचि नवद्वय सालसुवेष्टित रम्यतले
सुरतरुसंवृत चिन्तितदायक दीप्रमणिद्युति कान्तगृहे ।
अज हरि शंकर पूज्यमहेश्वररुप खुरोज्वल पीठभवे
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ ॥ ११ ॥

அம்ருதமஹார்ணவவீசி நவத்வய ஸாலஸுவேஷ்டித ரம்யதலே
ஸுரதருஸம்வ்ருத சிந்திததாயக தீப்ரமணித்யுதி காந்தக்ருஹே।
அஜ ஹரி சங்கர பூஜ்யமஹேச்வர ரூப குரோஜ்வல பீடபவே -
ஜய ஜய ஹே புவனேச்வரி சின்மயி சிந்திததாயினி வேதநுதே॥



அமிர்தப் பெருங்கடலின் அலைகளாலும் பதினெட்டுப் பிராகாரங்களினாலும் குழப்பட்ட அழகிய இடத்தில், தேவ விருக்ஷங்களால் சூழப் பெற்றதும் விரும்பிய வற்றைக் கொடுக்கக் கூடியதும் பிரகாசிக்கின்றது மாகிய சிந்தா மணிகளின் காந்தியால் அழகிய கிருஹத்தில், ப்ரமன், விஷ்ணு, ருத்ரன், மஹோசுவரன் இவர்களைக் கால்களாகக் கொண்டு விளங்குகின்ற பீடத்தில் அமர்ந்திருப்பவளுமாகிய ஸ்ரீ புவனேச்வரீ தேவீ! ஜய ஜய.

महिषमहासुर मर्दनदक्षिण शूलवरोज्वल पाणितले
मनुहरदुर्गम दैत्यविदारण तुष्ट सुरस्तुतकीर्तिभरे ।
हरि हर नाम विघट्टित वेदज मन्त्रजपोद्यत कल्पलते
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ १२

மஹிஷமஹாஸுர மர்த்னதக்ஷிண சூலவரோஜ்வல பாணிதலே
மனுஹரதுர்கம தைத்ய விதாரண துஷ்டஸுரஸ்துகீர்த்திபரே।
ஹிரி ஹர நாமவிகட்டித வேதஜ மந்த்ரஜபோத்யத கல்பதே
ஜய ஜய ஹே புவனேச்வரி சின்மயி சிந்தித தாயினி வேதநுதே॥

மஹிஷன் என்ற பெரும் அசுரனைக் கொல்லும் சக்தி கொண்ட சூலத்துடன் திகழும் கரத்தினளும், மந்தரங்களை அபஹரித்த துர்கமன் என்ற அசுரனைக் கொன்றதால் மகிழ்ந்த தேவர்களால் துதிக்கப்பட்ட, கீர்த்தியுடையவளும், ஹரி ஹரன் இவர்களுடைய பெயரோடு சேர்ந்ததும் வேதத்தினின்றும் பிறந்ததுமாகிய (ஹ்ரீம்) மந்திரத்தை ஜபம் செய்யும் பக்தர்களுக்கு கல்பலதை போன்றவளும் ஆகிய புவனேச்வ ஜய ஜய.

सुरगणमारक तारकनाशन दक्षगुहार्पित शक्तिचये
कुसुमशरैक्षवचापमहांकुश पाशसमुज्वल हस्ततले ।
अतिभयद भ्रमराकृति हिंसित घोरतरारुण दैत्यवरे
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ ॥ १

ஸுரகணமாரகதாரக நாசன தக்ஷகுஹார்பித சக்திசயே
குஸும சரைக்ஷவசாபமஹாங்குச பாசஸமுஜ்வல ஹஸ்ததலே।
அதிபயத ப்ரமராக்ருதி ஹிம்ஸித கோரதராருண தைத்யவரே
ஜய ஜய ஹே புவனேச்வரி சின்மயி சிந்திததாயினி வேதநுதே॥

தேவர்களை அழிக்கும் தாரகனை நாசம் செய்யும் திறனுடைய சக்தியை குஹனிடம் அளித்தவளும், புஷ்பபாணம் கரும்புவில் அங்குசம் பாசம் இவைகளால் விளங்குகின்ற கரங்களுடையவளும், மிகவும் பயத்தை உண்டாக்கும் வண்டுகளின் உருவங் கொண்டு க்ரூரனான அருணன் என்ற அரக்கனை அழித்தவளுமான ஹே புவனேச்வரீ ஜய ஜய.

नतनिखिलाण्डप कोटिकिरीटग रत्नविचित्रित पादयुगे
हरि हर पङ्कजदारगणेप्सित सर्व वरप्रद दृष्टिलवे ।
मतिधृति तुष्टिदयास्मृति कान्तिमुखाखिल शक्तिसमूहतनो
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ १५ ॥

நதநிகிலாண்டப கோடிகிரீடக ரத்னவிசித்ரித பாதயுகே
ஹரிஹர பங்கஜதார கணேப்ஸித ஸர்வவரப்ரத த்ருஷ்டிலவே ।
மதித்ருதி துஷ்டிதயா ஸ்ம்ருதி காந்திமுகாகில சக்தி ஸமூஹதனோ
ஜய ஜய ஹே புவனேச்வரி சின்மயி சிந்திததாயினி வேதநுதே ॥

(தன்) திருவடிகளில் வணங்கும் கோடிக் கணக்கான அண்டாதிபர்களுடைய கிரீடங்களிலுள்ள மணிகளால் அலங்கரிக்கப் பட்ட திருவடிகள் கொண்டவளும், ஹரி, ஹரன் பிரமன் இவர்களின் மனைவியராகிய லக்ஷ்மீ, பார்வதி, ஸரஸ்வதி இவர்களுக்கு வேண்டிய வரமளிக்கும் பார்வையுடன் கூடியவளும் புத்தி, உறுதி, சந்தோஷம், தயை, நினைப்பு, அழகு முதலிய சக்திகளைத் தன்னுருவாகக் கொண்டவளுமான ஹே புவனேச்வரி தேவீ! ஜய ஜய.

वटतरुपत्रग बालक चेष्टित विष्णु विनोदन गीतरते
भुजगसमाकृति पीततडिन्निभ जीवशरीरग कुण्डलिनि ।



सकलशरीरि शरीरशिवंकर मांससुशोणित चर्मभवे
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ १६

வடதருபத்ரக பாலகசேஷ்டித விஷ்ணு விநோதன கீதரதே
புஜகஸமாக்ருதி பீததடிந்நிப ஜீவசரீரக குண்டலினி ।
ஸகலசரீரிசரீர சிவங்கர மாம்ஸஸுசோணித சர்ம பவே
ஜய ஜய ஹே புவனேச்வரி சிந்மயி சிந்திததாயினி வேதநுதே ॥

ஆலிலையில் படுத்துக்கொண்டு குழந்தை விளையாட்டுடன் கூடிய விஷ்ணுவுக்கு மகிழ்ச்சியுண்டாக்கும் பாட்டுப் பாடுவதில் ஈடுபட்டவளும், பாம்பு போன்றதும், மஞ்சள் நிறமுள்ளதும், மின்னல் போன்றதும், ஒவ்வொருவர் சரீரத்திலும் வீற்றிருக்கின்றதுமான குண்டலினீ என்ற சக்தியாய் இருப்பவளும், எல்லா ஜீவர்களுடைய சரீரத்திற்கும் நன்மை விளைவிக்கின்ற மாம்ஸம், ரத்த தோல் இவைகளில் அமைந்திருப்பவளுமான ஸ்ரீ புவனேச்வரீ தேவீ! ஜய ஜய.

शुकवर पुस्तक पङ्कजधारिणि सन्मतिदायिनि वागधिपे
गजयुगभूषित पार्श्वयुगे शुभपङ्कगतेऽरुण मूर्तिधरे ।
अरिजननाशिनि नीलमणिद्युतिकाशिनि कालि नमो गिरिजे
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ १७

சுகவர புஸ்தக பங்கஜதாரிணி ஸன்மதிதாயினி வாகதிபே
கஜயுகபூஷித பார்ச்வயுகே சுபபத்மகதேऽருண மூர்த்திதரே ।
அரிஜனநாசினி நீலமணித்யுதிகாசினி காளி நமோ கிரிஜே
ஜய ஜய ஹே புவனேச்வரி சிந்மயி சிந்திததாயினி வேதநுதே ॥

கிளி வரம் புஸ்தகம் தாமரை இவைகளை தாங்கி நன்மதி கொடுக்கும் ஸரஸ்வதியாகவும், இரண்டு யானைகளால் சூழப்பட்ட பக்கமுள்ளவளாய் அழகிய தாமரை மலரில் சிவந்த திருமேனியடையவளாய் வீற்றிருக்கும் மஹாலக்ஷ்மியாகவும், சத்ருக்களை அழித்து நீலமணியின் ஒளிபோன்று கருத்து மலையிடம் தோன்றிய காளியாகவும் விளங்குகின்ற ஹே புவனேச்வரீ தேவீ ! ஜய ஜய.

शुभमतिमीश्वरि पुत्रसुहृज्जन दारसमृद्धिममन्दधनं
गुरुचरणांबुजभक्तिमपीहित सिद्धिमजाड्यमनन्तसुखम् ।
मधुमयनिर्मलवाचमयोज्वलकीर्तिभरं मम देहि शुभे
जय जय हे भुवनेश्वरि चिन्मयि चिन्तितदायिनि वेदनुते ॥ १८

சுபமதி மீச்வரி புத்ரஸுஹ்ருஜ்ஜன தாரஸம்ருத்திமமந்ததனம்
குருசரணாம்புஜ பக்திமபீஹிதஸித்திமஜாட்ய மனந்தசுகம் ।
மதுமய நிர்மலவாசம தோஜ்வல கீர்த்திபரம் மம தேஹி சுபே
ஜய ஜய ஹே புவனேச்வரி சின்மயி சிந்திததாயினி வேதநுதே ॥

எனக்கு நல்ல புத்தியையும், புத்திரன் சிநேகிதர் மனைவி இவர்களின் வளர்ச்சியையும், அளவற்ற தனத்தையும், குருவின் திருவடித் தாமரைகளில் பக்தியையும், விரும்பிய சித்தியையும், புத்தி கூர்மையையும் அளவற்ற சுகத்தையும், தேன் போன்று இனிக்கும் ..யதான சொல்லையும், பிரகாசமான கீர்த்தியையும் நன்மை புரியும் ஹே புவனேச்வரீ தேவியே அளிப்பாயாக.



# श्री भुवनेश्वरीस्तुतिः

## ஸ்ரீ புவனேச்வரீ ஸ்துதி:

या केनोपनिषद्वचोभिरमला शक्तिप्रदा गीयते
गायत्र्यर्थतया द्विजन्मभिरलं सन्ध्येति योपास्यते ।
यद्ध्यानान्मुनिभिस्तु गौतममुखैः प्राप्ता प्रतिष्ठा परा
तां वन्दे भुवनेश्वरीं श्रुतिनुतां शक्तिं जगन्मातरम् ॥ १ ॥

யா கேனோபநிஷத்வசோபிரமலா சக்திப்ரதா கீயதே
காயத்ரியர்த்ததயா த்விஜன்மபி ரலம் ஸந்த்யேதி யோபாஸ்யதே
யத்த்யானாந் முனிபிஸ்து கௌதமமுகை: ப்ராப்தா பிரதிஷ்டா பரா
தாம் வந்தே புவனேச்வரீம் ச்ருதிநுதாம் சக்திம் ஜகன்மாதரம் ॥

அனைவருக்கும் சக்தியளிப்பவளாய் கேனோபநிஷத்தினால் கூறப்பட்டவளும், காயத்திரியின் பொருளாய் இருப்பதால் அந்தணர்களால் ஸந்தியா வந்தனத்தில் உபாஸிக்கப் படுகின்றவளும் தன்னை தியானித்த கௌதமர் முதலிய மஹர்ஷிகளுக்குப் பேரும் புகழ் அளித்தவளும், மறைகளால் போற்றப் படுபவளும், சக்தி என்று கூறப்படுபவளுமான ஜகன்மாதா ஸ்ரீ புவனேச்வரியை வணங்குகின்றேன்.

नवसालपुरावासां श्रीमत्सिहासनेश्वरीम् ।
अनेककोटिब्रह्माण्ड जननीं सर्वसंस्तुताम् ॥ २ ॥

நவஸாலபுராவாஸாம் ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேச்வரீம் ।
அநேக கோடிப்ரம்ஹாண்ட ஜனனீம் ஸர்வஸம்ஸ்துதாம் ॥

युवतीभावविभ्राजद्ब्रह्मविष्णुशिवार्चिताम् ।
सुधासागरमध्यस्थचिन्तामणिगृहोज्वलाम् ॥ ३ ॥

யுவதீ பாவவிப்ராஜத் ப்ரம்ஹவிஷ்ணு சிவார்ச்சிதாம் ।
ஸுதாஸாகரமத்ய்ஸ்த சிந்தாமணி க்ருஹோஜ்வலாம் ॥

मायां ह्रींकार हृल्लेखा कुण्डलीशब्दबोधिताम् ।
गायत्रीमनुगम्यार्थां देवीं श्रीभुवनेश्वरीम् ॥ ४ ॥

மாயா ஹ்ரீங்கார ஹ்ருல்லேகா குண்டலீ சப்தபோதிதாம் ।
காயத்ரீமனுகம்யார்த்தாம் தேவீம் ஸ்ரீ புவனேச்வரீம் ॥

शान्तानन्दावधूतैन्द्रैः भक्तिपूर्वं प्रतिष्ठिताम् ।
इच्छां परात्मनः श्रेष्ठां वन्दे सर्वेष्टदायिनीम् ॥ ५ ॥

சாந்தானந்தாவதூதேந்த்ரை: பக்திபூர்வம் ப்ரதிஷ்டிதாம் ।
இச்சாம் பராத்மன: ச்ரேஷ்டாம் வந்தே ஸர்வேஷ்டதாயினீம் ॥

நவஸாலபுரியில் வசிப்பவளும், ஸிம்மாஸனத்தில் அமர்ந்திருப்பவளும், அநேக கோடி பிரம்மாண்டங்களை அளித்தவளும், அனைவராலும், புகழ்ப்பட்டவளும், யுவதிகளின் உருவம் பெற்ற பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களால் அர்ச்சிக்கப் பட்டவளும், ஹ்ரீம் மாயா ஹ்ருல்லேகா குண்டலினீ முதலிய பெயர்களால் அழைக்கப் படுகின்றவளும், காயத்ரீ மந்த்ரத்தின் பொருளாயுள்ளவளும், பக்தியுடன் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டவளும், பகவானின் இச்சாரூபியும், இஷ்டங்கள் அனைத்தையும் அளிப்பவளுமாகிய ஸ்ரீ புவனேச்வரீ தேவியை வணங்குகின்றேன்.

दुर्गासूक्ते दुर्गतिध्वंसशक्ते मन्त्रश्रेष्ठे यन्मनुर्गूढमास्ते ।
ह्रींकाराख्यः तां जगद्वन्द्यापादां संविद्रूपामादिविद्यां भजेऽहम् ॥

துர்காஸூக்தே துர்கதித்வம்ஸ சக்தே
மந்த்ர ச்ரேஷ்டே யன்மனுர்கூடமாஸ்தே ।
ஹ்ரீங்காராக்ய ஸ்தாம் ஸ்ஜகத்வந்த்ய பாதாம்
ஸம்வித்ரூபாம் ஆதிவித்யாம் பஜேऽஹம் ॥

கஷ்டங்களைக் போக்கவல்ல துர்க்கா ஸூக்தத்திலுள்ள சிறந்த மந்த்ரத்தில் எந்த சக்தியினுடைய ஹ்ரீங்கார மந்த்ரம் மறைந்திருக்கின்றதோ அந்த ஞானமயமான உலகம் வணங்கும் பாதத்தினையடய பிரணவ ரூபியான ஸ்ரீ புவனேச்வரிதேவியை பஜிக்கின்றேன். (வழிபடுகின்றேன்.)



श्रीसप्तशत्याः प्रथमे तु पद्ये यस्यास्तु मन्त्रः स्फुरति प्रसिद्धः ।
तां सर्वशक्तिप्रथमाभिधेयां ह्रींकाररूपां जननीं स्मरामि ॥ ७ ॥

ஸ்ரீஸப்தசத்யா ப்ரதமே து பத்யே
யஸ்யாஸ்து மந்த்ர: ஸ்புரதி ப்ரஸித்த: ।
தாம் ஸர்வசக்தி ப்ரதமாபிதேயாம்
ஹ்ரீங்காரரூபாம் ஜனனீம் ஸ்மராமி ॥

ஸப்தசதியின் முதல் ச்லோகத்தில் எந்த தேவியின் பிரஸித்தமான மந்த்ரம் கிடைக்கப் பெறுகின்றதோ, ஸர்வ சக்திகளுக்கும் முன்மொழியத் தகுந்த ஹ்ரீங்கார ரூபிணியான அந்த ஜகன்மாதாவை தியானிக்கிறேன்.

(सावर्णिः सूर्यतनयः यो मनुः कथ्यतेऽष्टमः ।
निशामय तदुत्पत्तिं विस्तराद्गदतो मम ॥

ஸாவர்ணி: ஸூர்யதனய: யோமனு: கத்யதேஷ்டம: ।
நிசாமய ததுத்பத்திம் விஸ்தராத் கததோ மம ॥

என்ற ச்லோகத்தில் மாயாபீஜமான ஹ்ரீங்காரமும் உள்ளுரையாகக் கிடைக்கின்றது என்பர் உரைகாரர்).

या रात्रिसूक्ते किल कालरात्रीत्याख्यायते सर्वजगद्विनाशे ।
जातेपि या तिष्ठति नाशहीना तां भावये लोककृतां जनित्रीम् ॥

யா ராத்ரிஸூக்தே கில காளராத்ரீ
த்யாக்யாயதே ஸர்வஜகத்வினாசே ।
ஜாதேபி யா திஷ்டதி நாசஹீனா
தாம் பாவயே லோகக்ருதாம் ஜனித்ரீம் ॥

எவள் ராத்ரி ஸூக்தத்தில் காளராத்ரீ என்று கூறப்படுகின்றாளோ, எவள் உலகங்கள் எல்லாம் அழிந்தபின்னும் தான் அழிவற்றவளாய் இருக்கின்றாளோ, அந்த பிரம்மாதி தேவர்களுக்கும் தாயான புவனேச்வரீதேவியை தியானிக்கிறேன். (இது ராத்ரி ஸூக்தத்தின் கருப்பொருளாகும்).

हरिहररूपामतिमृदुदेहां श्रीमत्सदाशिवाङ्कस्थाम् ।
संविद्रूपां परमां आद्यां विद्यां नमाम्यहं देवीम् ॥ ९ ॥

ஹரிஹரரூபாமதிம்ருது தேஹாம் ஸ்ரீமத் ஸதாசிவாங்கஸ்த்தாம் ।
ஸம்வித்ரூபாம் பரமாம் ஆத்யாம் வித்யாம் நமாம்யஹம் தேவீம் ॥

ஹரிஹரன் இவர்களின் ஒன்றிய உருவமானவளும், மிக மென்மையான தேஹமுடையவளும், ஸ்ரீ ஸதாசிவனுடைய மடியில் வீற்றிருப்பவளும், ஞானஸ்வரூபிணியும், பிரணவ ஸ்வரூபிணியுமாகிய ஸ்ரீ புவனேச்வரீ தேவியை வணங்குகிறேன்.

वराभीति पाशाङ्कुशोद्भासिहस्ता
ज्वलच्चक्रराजाख्यताटङ्ककान्ता ।
विषण्णा महेशस्य वामाङ्कमध्ये
मणिद्वीपवासातु माता पुरस्तात् ॥ १० ॥

வராபீதி பாசாங்குசோத்பாஸி ஹஸ்தா
ஜ்வலச்சக்ரராஜாக்ய தாடங்ககாந்தா ।
நிஷண்ணா மஹேசஸ்ய வாமாங்கமத்யே
மணித்வீபவாஸாஸ்து மாதா புரஸ்தாத் ॥ 10

வரம், அபயம், பாசம், அங்குசம் இவைகளால் விளங்கும் கரத்தினளும், ஜ்வலிக்கின்ற ஸ்ரீ சக்ரமாகிய தோடுகளால் அழகியவளும், புவனேச்வரருடைய இடது மடியில் அமர்ந்திருப்பவளும் மணித்வீபத்திலே வாஸம் செய்பவளுமாகிய (ஜகன்) மதா முன்னே காட்சி கொடுக்கட்டும்.

त्रयीसारभूतं प्रपञ्चस्य मूलं
विभिद्योद्गतं कण्ठमूलं विरिञ्चेः ।
त्रिवर्णप्रक्लृप्तं तु ताराभिधानं
शुभं देवि ते नाम भूयाच्छ्रियै नः ॥ ११ ॥

த்ரயீஸாரபூதம் ப்ரபஞ்சஸ்ய மூலம்
விபித்யோத்கதம் கண்டமூலம் விரிஞ்சே: ।
த்ரிவர்ணப்ரக்லுப்தம் து தாராபிதானம்
சுபம் தேவி தே நாம பூயாத் ஸ்ரீயை ந: ॥



வேதங்களின் ஸாரமானதும், உலகத்தின் வித்தானதும் பிரம்மதேவனின் கழுத்தைப் பிளந்து கொண்டு முதன் முதலாக வெளி வந்ததும், மூன்று வர்ணங்களால் பிணைக்கப் பெற்றதும், "தாரம்" என்று பெயர் கொண்டதுமான உன் மங்களப் பெயர் (ஓம்) எங்களுக்கு ஐச்வர்யத்தைக் வழங்கட்டும்.

अकारो ह्युकारो मकारश्च शृङ्गा
ण्यरं वै तदग्रं तु तच्चार्धमात्रा ।
त्वमेवार्धमात्रास्वरूपेति देवी
प्रगीतासि शृङ्गारपूर्वा कलेति ॥ १२ ॥

அகாரோ ஹ்யுகாரோ மகாரச்ச ச்ருங்காண்
யரம் வை ததக்ரம் து தச்சார்தமாத்ரா ।
த்வமேவார்தமாத்ரா ஸ்வரூபேதி தேவி
ப்ரகீதாஸி ச்ருங்காரபூர்வா கலேதி ॥

(ஓங்காரத்தில்) அகாரம் உகாரம் மகாரம் இவை ச்ருங்கங்கள் (கொம்புகள்) அரம் என்பது அதன் முனை. அதுவே அர்த்தமாத்திரை (என்று கூறப்படுகிறது). ஹே தேவீ ! நீயே அந்த அர்தமாத்ரா ஸ்வரூபிணியாய் இருக்கின்றாய் அதனால் "சிருங்காரகலை" என்று நீ புகழ்ப்படுகின்றாய்.

विधिः पद्मनाभो हरश्चान्तकाले
लयं याति शक्तौ पराशक्तिरेव ।
प्रपञ्चस्य हेतुः जनित्रीति सर्वैः
ततो वर्ण्यसे देवि वेदान्तवाक्यैः ॥ १३ ॥

விதி: பத்மநாபோ ஹரச்சாந்தகாலே
லயம் யாதி சக்தௌ பராசக்திரேவ ।
ப்ரபஞ்சஸ்ய ஹேது: ஜநித்ரீதி ஸர்வை:
ததோ வர்ண்யஸே தேவி வேதாந்தவாக்யை: ॥

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்கள் ப்ரளயகாலத்தில் சக்தியில் லயமடைகின்றனர். ஆகவே பராசக்திதான் உலகம் உண்டாகக் காரணம் என்றும், ஜகன்மாதா என்றும் வேதாந்த வாக்யங்களால் ஹே தேவீ ! நீயே வர்ணிக்கப் படுகின்றாய்.

मनोर्देवि गायत्र्यभिख्यस्य यस्मात्
पुरस्तात्परस्ताच्च देवि ति मन्वोः ।
स्तुता तेन गायत्र्यभिध्येयभूता
त्वमेवेति विद्वद्वराः कीर्तयन्ति ॥ १४ ॥

மநோர்தேவி காயத்ரியபிக்யஸ்ய யஸ்மாத்
புரஸ்தாத்பரஸ்தாச்ச தேவீ தி மந்வோ: ।
ஸ்துதா தேந காயத்ரியபித்யேய பூதா
த்வமேவேதி வித்வத்வரா கீர்தயந்தி ॥

ஹே தேவீ ! காயத்ரீ மந்த்ரத்தின் முன்னும் பின்னும் உள்ள மந்த்ரங்களில் தேவீ என்று புகழ்ந்து பேசப்படுவதால் நீயே காயத்ரீ மந்த்ரத்தினால் தியானிக்கப்படுகின்றவள் என்று சிறந்த வித்வான்கள் கூறுகின்றனர்.

विधिर्लोकसृष्टिं हरिर्लोकरक्षां
प्रपञ्चस्य नाशं हरश्चापि कर्तुम् ।
समर्था न वाण्यादिशक्तिप्रमुक्ताः
ततो देव्यसि त्वं प्रधाना जगत्याम् ॥ १५ ॥

விதிர்லோகஸ்ருஷ்டிம் ஹரிர் லோகரக்ஷாம்
ப்ரபஞ்சஸ்ய நாசம் ஹரச்சாபி கர்தும் ।
ஸமர்த்தா ந வாண்யாதி சக்திப்ரமுக்தா:
ததோ தேவ்யஸி த்வம் ப்ரதாநா ஜகத்யாம் ॥

ஸரஸ்வதி, லக்ஷ்மீ, கௌரீ என்ற சக்திகளுடன் சேர்ந்திருக்க வில்லையானால் பிரம்மா லோக ஸிருஷ்டியையும், விஷ்ணு லோக ரக்ஷையையும், ருத்ரன் லோக ஸம்ஹாரத்தையும் செய்ய சக்தியுடையவர் ஆகார். ஆகவே தேவியே ! நீதான் உலகத்தில் சிறந்தவள்.



हरो वा हरिर्वा भवान्याः श्रियो वा
विना प्रेरणां नैव कुर्युः प्रसादम् ।
अनन्यास्तु ये चिन्तयन्तो भजन्ते
प्रियाणां च तेषां स्वभक्ताग्रगाणाम् ॥ १६ ॥

ஹரோ வா ஹரிர்வா பவாந்யா: ச்ரியோ வா
விநா ப்ரேரணாம் வைந குர்யு: ப்ரஸாதம் ।
அநந்யாஸ்து யே சிந்தயந்தோ பஜந்தே
ப்ரியாணாம் ச தேஷாம் ஸ்வபக்தாக்ரகாணாம் ॥

வேறொன்றையும் விரும்பாது தன்னையே பஜிக்கும் தன் பிரியமான பக்தோத்தமர்களுக்குக் கூட பார்வதி, லக்ஷ்மீ இவர்களின் ப்ரேரணையின்றி ஹரனோ, ஹரியோ அருள் வழங்க மாட்டார்கள்.

नरं शक्तिहीनं त्वशक्तं वदन्ति
न वै विष्णुहीनं नरुद्रेण हीनम् ।
न च ब्रह्महीनं न चेन्द्रेण हीनं
प्रकृष्टासि तस्मात् जगच्छक्तिदे त्वम् ॥ १७ ॥

நரம் சக்திஹீனம் த்வசக்தம் வதந்தி
ந வை விஷ்ணுஹீனம் ந ருத்ரேண ஹீனம் ।
நச ப்ரஹ்மஹீனம் நசேந்த்ரேண ஹீனம்
ப்ரக்ருஷ்டாஸி தஸ்மாத் ஜகச்சக்திதே த்வம் ॥

ஜனங்கள் திறனற்றவனை சக்தியற்றவன் என்றே கூறுகின்றனர். ருத்ரனில்லாதவனென்றோ, விஷ்ணுவில்லாதவன் என்றோ, ப்ரம்மனில்லாதவ னென்றோ, இந்த்ரனில்லாதவனென்றோ கூறுவது கிடையாது. ஆகவே அகில உலகத்திற்கும் சக்தி அளிப்பவளாகிய நீயே சிறந்தவளாய் இருக்கின்றாய்.

महेश्वर्यवाची ''श'' कारस्तथा ''क्तिः''
ह्यसाधारणं विक्रमं चाभिधत्ते ।

तयोः सम्प्रदात्री च तद्रूपिणी त्वं
पराशक्तिनाम्ना प्रसिद्धासि लोके ॥ १८ ॥

மஹைச்வர்யவாசீ "ச" காரஸ் ததா "க்தி"
ஹ்யஸாதாரணம் விக்ரமம் சாபிதத்தே
தயோ: ஸம்ப்ரதாத்ரீ ச தத்ரூபிணீ த்வம்
பராசக்திநாம்நா ப்ரஸித்தாஸி லோகே ॥

"ச" என்பது பெருஞ்செல்வத்தையும் "க்தி" என்பது ஒப்பற்ற பராக்ரமத்தையும் குறிக்கின்றது. அவை இரண்டையும் அளிப்பவளாயும், அவைகளாகவும் நீயே இருப்பதால் "பராசக்தி" என்று உலகில் நீ புகழப்படுகின்றாய்.

षडाधारचक्राण्यटन्ती क्रमात्वं
भजन्ती च नामान्यनेकानि तत्र ।
भुजङ्गाकृतिः पीतवर्णाऽतितन्वी
विचिन्त्याऽसि सिद्धैस्तु कुण्डल्यभिख्या ॥ १९ ॥

ஷடாதாரசக்ராண்யடந்தீ க்ரமாத் த்வம்
பஜந்தீ ச நாமான்யநேகாநி தத்ர ।
புஜங்காக்ருதி: பீதவர்ணாऽதிதன்வீ
விசிந்த்யாஸி ஸித்தைஸ்து குண்டல்யபிக்யா ॥

பாம்பு போன்ற உருவினளாய், மஞ்சள் நிறத்தினளாய், சிறிய உருவமுடையவளாய், குண்டலினீ என்ற பெயர் கொண்ட நீ, ஆறு ஆதாரசக்ரங்களிலும் ஸஞ்சரிப்பவளாய், ஆங்காங்கே பலவிதமான பெயர்களைப் பெற்றவளாய், ஸித்தர்களால் தியானிக்கப் படுகின்றாய்.

समस्तेषु देहेषु मासं च रक्तं
त्वचं चापि विज्ञास्त्वदशं वदन्ति ।
विना तत्रयं कोपि देही महेशि
प्रपञ्चे न काञ्चित् क्रियां कर्तुमीष्टे ॥ २० ॥



ஸமஸ்தேஷு தேஹேஷு மாம்ஸம் ச ரக்தம்
த்வசம் சாபி விஞாஸ்த்வதம்சம் வதந்தி
விநா தத் த்ரயம் கோபி தேஹீ மஹேசி
ப்ரபஞ்சே ந காஞ்சித் க்ரியாம் கர்துமீஷ்டே ॥

சரீரங்கள் அனைத்திலும் மாம்ஸம், ரத்தம், தோல் இவைகளே உன் அம்சம் என்று அறிஞர் கூறுகின்றனர். அம்மூன்றுமில்லாமல் ஹே மஹேசீ ! இப்பிரபஞ்சத்தில் சரீரமுள்ள எவனும் ஒரு செயலும் செய்யமுடியாத வனாகிறான்.

महेशैकभक्तस्तु भृङ्गी महर्षिः
त्वदंशप्रमुक्तः तवैव प्रकोपात् ।
महेशस्य पार्श्वे विभात्यस्थिशेषः
त्रिपादः प्रभावं तव द्योतयन्नः ॥ ॥ २१ ॥

மஹேசைகபக்தஸ்து ப்ருங்கீ மஹர்ஷி: ।
த்வதம்சப்ரமுக்த: தவைவ ப்ரகோபாத் ।
மஹேசஸ்ய பார்ச்வே விபாத்யஸ்திசேஷ:
த்ரிபாத: ப்ரபாவம் தவ த்யோதயந்ந :॥

சிவ பக்தசிகாமணியான ப்ருங்கி என்ற மஹர்ஷி உன்னுடைய கோபத்தினால் உன் அம்சத்தை இழந்து (சிவன் அருளால்) மூன்று கால்கள் பெற்றவராய் எலும்பு மட்டும் உள்ளவராய், உன் பெருமையை எங்களுக்கு விளக்கிக் கொண்டு மஹேசனின் பக்தத்தில் இன்றும் விளங்கிக் கொண்டிருக்கிறார்.

त्रयाणां गुणानां समष्टिस्त्वमेव
द्विशक्त्युज्वला भासि मायाभिधाना ।
प्रभिन्नासि वाणी रमा पार्वतीति
त्रिमूर्त्याश्रिता लोकसृष्ट्यादिकर्त्री ॥ २२ ॥

த்ரயாணாம் குணாநாம் ஸமஷ்டி ஸ்த்வமேவ
த்விசக்த்யுஜ்வலா பாஸி மாயாபிதாநா ।

ப்ரபிந்நாஸி வாணீ ரமா பார்வதீதி
த்ரிமூர்த்யாச்ரயா லோகஸ்ருஷ்ட்யாதிகர்த்ரீ॥

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் கூட்டான மாயை என்ற பெயர்கொண்டவளாய் ஆவரணம், விக்ஷேபம் என்ற இரண்டு சக்திகளாகவும் விளங்குகின்றாய். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளைச் செய்யும்போது ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களை ஆச்ரயித்து ஸரஸ்வதி, லக்ஷ்மீ, பார்வதி என்ற பல பெயர், கொண்டவளாகவும் இருக்கின்றாய்.

विरक्तैरुपास्यासि मोक्षैकहेतुः
सकामैश्च कामप्रदा बन्धहेतुः ।
पदाम्भोजभाजां प्रदाने हि दक्षे
विमुक्तेश्च भोगस्य ते पादपद्मे ॥ २३ ॥

விரக்தைருபாஸ்யாஸி மோக்ஷைகஹேது:
ஸகாமைச்ச காமப்ரதா பந்தஹேது:।
பதாம்போஜபாஜாம் ப்ரதாநே ஹி தக்ஷே
விமுக்தேச்ச போகஸ்ய தே பாதபத்மே

மோக்ஷமளிக்கும் நீ, விரக்தர்களால் உபாஸிக்கப் படுகின்றாய், பந்தத்தையும் அளிக்கும் நீ விரும்பும் பொருளை அளிப்பவளாய் ஆசையுடையவர்களால் உபாஸிக்கப் படுகின்றாய். உன் திருவடித் தாமரைகள். உன் பாதாரவிந்தங்களை அடைந்தவர்களுக்கு மோக்ஷத்தையும் போகத்தையும் அளிக்க வல்லமை உடையனவாய் இருக்கின்றன.

प्रसूर्दुःखनाशे वपुःपोषणे च
प्रगल्भेति पुत्रस्य लोकप्रतीतिः ।
त्वमेका हि तापत्रयस्यापि हन्त्री
ततो लोकमातेति पूज्यासि सर्वैः ॥ २४ ॥

ப்ரஸூர் துக்கநாசே வபு: போஷணே ச
ப்ரகல்பேதி புத்ரஸ்ய, லோகப்ரதீதி:।



த்வமேகா ஹி தாபத்ரயஸ்யாபி ஹந்த்ரீ
ததோ லோகமாதேதி பூஜ்யாஸி ஸர்வை:॥

தாய் பிள்ளையின் துக்கத்தைப் போக்குவதிலும், சரீரத்தைப் போஷிப்பதிலும் திறமையுடையவள் என்பது உலக எண்ணம். நீ ஒருவள்தான் தாபங்கள் மூன்றையும் (ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம்) போக்குபவள். ஆகையால் நீ "லோகமாதா" என்று எல்லோராலும் போற்றப் படுகின்றாய். (அதனால் தான் श्रीमाता ஸ்ரீ மாதா என்று லலிதா ஸஹஸ்ரநாமா தொடங்குகின்றது).

हरिं यो हरं चापि गर्भे निधत्ते
मनुर्ह्रीमिति ख्याति माप्तस्स तारः ।
यतो वाचको देवि ते शास्त्रक्लृप्तः
तयोश्चापि मूलं त्वमेवेति सिद्धम् ॥ ॥ २५ ॥

ஹரிம் யோ ஹரம் சாபி கர்பே நிதத்தே
மனுர்ஹ்ரீமிதி க்யாதி மாப்தஸ்ஸ தார:।
யதோ வாசகோ தேவி தே சாஸ்த்ரக்லுப்த:
தயோச்சாபி மூலம் த்வமேவேதி ஸித்தம்॥

ஹரியையும், ஹரனையும் தன்னகத்தே தாங்கும், "தாரம்" என்று புகழ்பெற்ற "ஹரீம்" என்ற மந்த்ரம், உன் வாசகம் என்று சாஸ்திரம் நிர்ணயித்திருப்பதால் ஹரிக்கும், ஹரனுக்கும் நீ தான் மூலம் என்பதும் முடிவாகின்றது.

श्रुता याऽशरीरिण्यमोघा मया गीः
इतीन्द्रादि देवैः हरीशादिभिश्च ।
पुराणादिवाक्यैः स्तुता साऽशरीरि-
ण्यजाते त्वमेवासि माये पुराणि॥ ॥ २६ ॥

ச்ருதா யாऽசரீரிண்யமோகா மயா கீ:
இதீந்த்ராதி தேவை: ஹரீசாதிபிச்ச।
புராணாதிவாக்யை: ஸ்துதா ஸாசரீரி
ண்யஜாதே த்வமேவாஸி மாயே புராணி॥

பிறப்பற்ற மாயையாகிய என்றும் உள்ளவளான ஹே தேவி ! நீயே இந்திராதி தேவர்களாலும் ஹரி ஈசன் முதலியவர்களாலும் "என்னால் ஒரு அசரீரி கேட்கப்பட்டது" என்று புராணாதி வாக்யங்களில் பிரஸ்தாபிக்கப் படுகின்ற 'அசரீரி வாக்காய்" இருப்பவள்.

सती कालरात्रीति वेदोपपाद्या
शिवा चर्चिका चण्डिका भ्रामरीति ।
विपन्नाशिनी तन्त्रजालेषु दुर्गे
प्रसिद्धासि नानाभिधानान्यवाप्ता ॥ ॥ २७ ॥

ஸதீ காலராத்ரீதி வேதோபபாத்யா
சிவா சர்சிகா சண்டிகா ப்ராமரீதி ।
விபந்நாசிநீ தந்த்ரஜாலேஷு துர்கே
ப்ரஸித்தாஸி நாநாபிதாநாந்யவாப்தா ॥

துக்கங்களை அழிக்கும் ஹே துர்கே ! நீ வேதத்தினால் கூறப்படும் ஸதீ, காளராத்ரீ என்ற பெயர் கொண்டவளாய், தந்த்ர சாஸ்த்ரங்களில் சிவா, சண்டிகா, சர்சிகா, ப்ராமரீ என்று பலவிதப் பெயர் கொண்டவளாகவும் பிரஸித்தி பெற்றிருக்கிறாய்.

उपास्या दशख्यातविद्याभिरार्ये
त्वमेवासि मन्त्रस्वरूपा स्वतन्त्रे ।
मतिस्त्वं धृतिस्त्वं बलं त्वं तवेदं
विभूत्यैव सौभाग्ययुक्तं समस्तम् ॥ ॥ २८ ॥

உபாஸ்யா தசக்யாதவித்யாபிரார்யே
த்வமேவாஸி மந்த்ரஸ்வரூபா ஸ்வதந்த்ரே ।
மதிஸ்த்வம் த்ருதிஸ்த்வம் பலம் த்வம் தவேதம்
விபூத்யைவ ஸௌபாக்யயுக்தம் ஸமஸ்தம் ॥

ஸ்வதந்திரையாக உள்ள தேவியே ! மந்த்ரஸ்வரூபிணியாகவும், பத்துவிதமான மஹாவித்யைகளால் உபாஸிக்கத் தகுந்தவளாயும் நீயே இருக்கின்றாய். எண்ணம் நீ, தைர்யம் நீ, பலம் நீ, உன் விபூதியினால் நான் எல்லாம் நல்ல பாக்யம் பெற்று இருக்கின்றன. பத்து



மஹாவித்யைகளாவன காளீ, தாரா, ஷோடசீ (த்ரிபுரஸுந்தரீ), புவனேச்வரீ, பைரவீ, சின்னமஸ்தா, தூமாவதீ, மாதங்கீ, கமலா, பகளாமுகீ என்பனவாம்.

पुरा ये भवत्याः पदाम्भोजयुग्मं
सुगन्धैर्वरैः पत्रपुष्पैर्हि भक्त्या ।
अकार्षुः परामर्चनां ते तु धन्याः
भवन्त्यद्य सत्पुत्रदाराद्युपेताः ॥ २९ ॥

புரா யே பவத்யா: பதாம்போஜயுக்மம்
ஸுகந்ததைர்வரை: பத்ரபுஷ்பைர்ஹி பக்த்யா ।
அகார்ஷு: பராமர்சநாம் தே து தந்யா
பவந்த்யத்ய ஸத்புத்ரதாராத்யுபேதா: ॥

முன்பு எவர் உன்னுடைய திருவடித் தாமரைகளை வாசனையுள்ள நல்ல பத்ர புஷ்பங்களால் அர்ச்சனை செய்தனரோ, அந்த பாக்யசாலிகளே இன்று நல்ல பிள்ளை, நல்ல மனைவி முதலியவற்றுடன் வாழ்கின்றனர்.

सितारण्यमध्ये स्थिता ब्रह्मविद्या
कदम्बाटीमध्यगा मीननेत्री ।
मतङ्गाश्रमे देवि मातङ्गकन्या
त्वमेवासि काश्यां विशालाक्ष्यभिख्या ॥ ॥ ३० ॥

ஸிதாரண்யமத்யே ஸ்திதா ப்ரம்ஹவித்யா
கதம்பாடவீமத்யகா மீநநேத்ரீ ।
மத்காச்ரமே தேவீ மாதங்ககந்யா
த்வமேவாஸி காச்யாம் விசாலாக்ஷ்யபிக்யா ॥

திருவெண் காட்டில் பிரம்ம வித்யாம்பிகையாகவும், மதுரையில் மீனாக்ஷி யாகவும், திருநாங்கூரில் மாதாங்கியாகவும் விளங்கும் நீயே காசியில் விசாலாக்ஷீ என்ற பெயருடன் விளங்குகின்றாய்.

त्वदीयं चरित्रं पुरा पद्मनाभात्
विधिः प्राप तस्माच्च वीणामहर्षिः।
ततः प्राप पाराशरिर्देवि सर्वं
ततो व्यासतः प्राप सौतिः शुकश्च ॥ ॥ ३१ ॥

த்வதீயம் சரித்ரம் புரா பத்மநாபாத்
விதி: ப்ராப தஸ்மாச்ச வீணாமஹர்ஷி ।
தத: ப்ராப பாராசரிர் தேவி ஸர்வம்
ததோ வ்யாஸத: ப்ராப ஸௌதி: சுகச்ச ॥

தேவீ ! முன்பு உன்னுடைய சரித்திரத்தை விஷ்ணுவிடமிருந்து பிரமனும், பிரமனிடமிருந்து நாரதரும் அவரிடம் இருந்து வ்யாஸாசாரியாரும், வ்யாஸரிடமிருந்து முழுமையாக சுகாசாரியாரும் லோமஹர்ஷண மஹரிஷியும் பெற்றனர். (ஆகவே இது வேதாந்த வித்தைக்கு ஸமம்).

शिवाकारसिंहासने ब्रह्मविष्णु
त्रिनेत्रेश्वरैः पादभूतैर्धृते त्वम् ।
निषण्णा मणिद्वीपगेहोत्तमान्तः
महराज्ञि संरक्ष मं विश्वमातः ॥ ॥ ३२ ॥

சிவாகாரஸிம்ஹாஸனே ப்ரஹ்மவிஷ்ணு
த்ரிநேத்ரேச்வரை: பாதபூதைர் த்ருதே த்வம் ।
நிஷண்ணா மணித்வீபகேஹோத்தமாந்த:
மஹாராஜ்ஞி ஸம்ரக்ஷ மாம் விச்வமாத: ॥

மணித்வீபத்திலுள்ள மிகச்சிறந்த பவனத்தின் நடுவில், கால்களாய் விளங்குகன்ற பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன் என்பவர்களால் தாங்கப்பட்ட ஸதாசிவமயமான ஸிம்ஹாஸனத்தின் அமர்ந்திருக்கும் மஹாராஞ்ஞீயான ஹே ஜகன்மாதா! நீ என்னைக் காப்பாயாக.

विभान्ती स्वयं भक्तहृत्पद्ममध्ये
मणिद्वीपगेहे शिवाङ्के हिमाद्रौ ।



महामेरुशृङ्गे महाचक्रराजे
वसन्ती गिरौ मे परां देहि कीर्तिम् ॥ ॥ ३३ ॥

விபாந்தீ ஸ்வயம் பக்தஹ்ருத்பத்மமத்யே
மணித்வீபகேஹே சிவாங்கே ஹிமாத்ரௌ ।
மஹாமேருச்ருங்கே மஹாசக்ரராஜே
வஸந்தீ கிரௌ மே பராம் தேஹி கீர்த்திம் ॥

பக்தர்களின் ஹ்ருதயத்திலும், மணித்வீப பவனத்திலும், ஸதாசிவன் மடியிலும், ஹிமாலயத்திலும், மஹாமேருசிகரத்திலும், ஸ்ரீ சக்ரத்திலும் வீற்றிருக்கும் நீ என வாக்கிலும் தங்கி எனக்குப் பெரும் புகழ் அளித்தருள்.

ஸ்ரீ மஹாகணபயே நம:

ஸ்ரீ புவனேச்வர்யை நம:

★ ह्रींकारमनुगर्भित श्री भुवनेश्वरीसुप्रभातं ★

ஹ்ரீகார மந்த்ரம் சேர்ந்த ஸ்ரீ புவனேச்வரீ ஸுப்ரபாதம்

ह्रीङ्कार कमलोद्भूत कमले भुवनेश्वरि
उत्तिष्ठोत्तिष्ठ जगतामादिभूते चिदात्मिके ॥ १

ஹ்ரீங்கார கமலோத்பூத கமலே புவனேச்வரி ।
உத்திஷ்டோத்திஷ்ட ஜகதா மாதிபூதே சிதாத்மிகே ॥

ஹ்ரீங்காரம் என்ற தாமரை மலரில் உதித்த மஹாலக்ஷ்மியே, உலகங்களுக்கு மூலமாய் உள்ளவளே ஞானஸ்வரூபிணியே ஹே புவனேச்வரி எழுந்தருளாய்.

कटाक्षनिर्मितानेक कोटिब्रह्माण्डमण्डले ।
ह्रीङ्कार दीर्घिकाहंसि नमस्ते भुवनेश्वरि ॥ २

கடாக்ஷநிர்மிதானேக கோடிப்ரம்ஹாண்ட மண்டலே ।
ஹ்ரீங்கார தீர்திகா ஹம்ஸி நமஸ்தே புவனேச்வரி ॥

கடைக் கண்பார்வையால் அநேக கோடி பிரம்மாண்டங்களை அருளியவளே, ஹ்ரீங்கார மென்ற ஓடையில் வாழும் ஹம்ஸமே ஹேபுவனேஸ்வரீ உனக்கு நமஸ்காரம்.

ह्रीङ्कारशुक्तिसंजात मौक्तिके भुवनेश्वरि ।
दुर्गादि पंचशक्तीनां मातर्मे मङ्गलं कुरु ॥ ३

ஹ்ரீங்கார சுத்தி ஸஞ்ஜாத மௌக்திகே புவனேச்வரி ।
துர்காதி பஞ்சசக்தீனாம் மாதர்மே மங்களம் குரு ॥

ஹ்ரீங்காரமாகிய கிளிஞ்ஜலிலிருந்து உத்தித்த முத்தே. துர்கை ராதை, லக்ஷ்மி, ஸரஸ்வதி, ஸாவித்திரி முதலானவர்களின் தாயே ஹே புவனேச்வரீ எனக்கு மங்களம் அருளுவாயாக.



कृपातरंगितापाङ्गे ह्रींकार गृहदीपिके ।
भुवनेशांकनिलये मयि दासे कृपां कुरु ॥ ४

க்ருபாதரங்கிதா பாங்கே ஹ்ரீங்கார க்ருஹ தீபிகே ।
புவனேசாங்க நிலயே மயி தாஸே க்ருபாம் குரு ॥

கருணை அலை மோதும் கடைக்கண் பார்வையுடையவளே, ஹ்ரீங்கார மாகிய வீட்டின் ஒளி விளக்கே, புவனேச்வரரின் இடது மடியில் அமர்தருளுபவளே, தாஸனாகிய என் மீது கருணை காட்டுவாயாக.

ह्रींह्रीमिति श्रुतिसुखं भ्रमराः प्रभाते
कूजन्ति पक्षिनिवहास्तव देवि नाम ।
ह्रीङ्कारशब्दमधुरः किल वाति वायुः
उत्तिष्ठ तेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ।

ஹ்ரீம்ஹ்ரீமிதி ச்ருதிஸுகம் ப்ரமரா: ப்ரபாதே
கூஜந்தி பக்ஷிநிவாஹாஸ்தவ தேவி நாம ।
ஹ்ரீங்காரசப்த மதுர: கில வாதி வாயு:
உத்திஷ்ட தேஸ்து புவனேச்வரி ஸுப்ர பாதம் ॥

விடியற் காலையில் காதுக்கு இனிமையாய் அமையுமாறு வண்டுகளும் பக்ஷிகளின் கூட்டமும் தேவி உன்நாமாவையே கூறி சப்தமிடுகின்றன. காற்றும் ஹ்ரீங்கார. ஒலியுடன் இனிமையாய் இருக்கும்படி வீசுகின்றது. ஹே புவனேச்வரி எழுந்தருளுவாயாக உனக்கு ஸுப்ரபாதமாய் (நல்ல விடிகாலையாய்) இருக்கட்டும்.

ह्रीङ्कारपंजर लसच्छुकि विश्वमातः
ब्रह्माण्डकोटि परिरक्षण दक्षनेत्रि
वांछाधिकेप्सित फल प्रदकल्पवल्लि
ते सर्वदास्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ ॥ ६ ॥

ஹ்ரீங்கார பஞ்ஜர லஸச்சுகி விச்வமாத:
ப்ரம்ஹாண்டகோடி பரிரக்ஷண தக்ஷ நேத்ரி ।

வாஞ்சாதிகேப்ஸித பலப்ரத கல்ப வல்லி
தே ஸர்வதேऽஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரமாகிய கூட்டின் கிளியே, உலகங்களின் அன்னையே பலகோடி ப்ரம்மாண்டங்களை காக்கும் திறனுள்ள கண்ணுடையாளே, விரும்பியதற்கு மேலாக இஷ்டமான பலன்களைத் தரவல்ல கற்பகக் கொடியே ஹே புவனேச்வரீ உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

ह्रींमन्त्रगे विधिहरीश महेशपादे
मंचे सदाशिवमये भुवनेश्वरांके ।
प्रेम्णा स्थिते सकलभूषण भूषिते ते
सौभाग्यदेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥

ஹ்ரீம்மந்த்ரகே விதிஹரீசமஹேசபாதே
மஞ்சே ஸதாசிவமயே புவனேச்வராங்கே ।
ப்ரேம்ணா ஸ்திதே ஸகல பூஷண பூஷிதே தே
ஸௌபாக்யதேஸ்து புவனேச்வரி ஸுப்ர பாதம் ॥

ஹ்ரீங்கார மந்த்ரத்தில் உறைபவளே பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன் இவர்களை கால்களாகக் கொண்ட ஸதா சிவமயமான மஞ்சத்தில் புவனேச்வரர் மடியில் பிரியத்துடன் வீற்றிருப்பவளே அனைத்து அணிகளாலும் அலங்கரிக்கப்பட்டவளே ஸௌபாக்யம் அளிப்பவளே ஹே புவனேச்வரீ உனக்கு சுப்ரபாதமாய் இருக்கட்டும்.

वेदाः षडंगसहिताः प्रथितेहासाः
श्रेष्ठाः पुराणनिवहाः महितागमाश्च ।
कुर्वन्ति रम्यतनवःस्तुति मुत्तमां ते
ह्रीमात्मिकेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ ८

வேதா: ஷடங்கஸஹிதா: ப்ரதிதேதிஹாஸா:
ச்ரேஷ்டா: புராண நிவஹா: மஹிதாகமாச்ச ।
குர்வந்தி ரம்யதனவஸ் ஸ்துதி முக்தமாம் தே
ஹ்ரீமாத்மிகேऽஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥



ஆறு அங்கங்களுடன் வேதங்களும் மிகவும் பிரஸித்தமான (5) இதிஹாஸங்களும் உயர்ந்த புராணங்களும் சிறந்த ஆகமங்களும் உன்னை சிறப்பாகத் துதிக்கின்றன. ஹ்ரீங்காரத்தை ஆத்மாவாக உடைய ஹே புவனேச்வரீ உனக்கு ஸுப்ரபாதமாக ஆகட்டும்.

ह्रींकाररूपिणि शिवे तव मन्त्रसंगात्
उद्दीपितो हि सकलोपि मनुः प्रसूते ।
शीघ्रंफलं त्विति बुधाः कथयन्ति देवि
ते शक्तिदेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥

ஹ்ரீங்கார ரூபிணி சிவே தவ மந்த்ர ஸங்காத்
உத்தீபிதோ ஹி ஸகலோபி மனு: ப்ரஸூதே ।
சீக்ரம் பலந்த்விதி புதா: கதயந்தி தேவி
தே சக்திதேஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரத்தை உருவமாக கொண்டவளே மங்களமளிப்பவளே மந்திரமனைத்தும் உன் மந்திரத்தின் (ஹ்ரீமின்) சேர்கையால் தூண்டி விடப்பட்டு சீக்ரம் பலனளிக்கின்றன என மந்த்ர சாஸ்திர மறிந்த ஞானியர் கூறுகின்றனர். சக்தியளிக்கும் ஹே புவனேச்வரீ தேவி உனக்கு ஸுப்ரபாதமாய் இருக்கட்டும்.

ह्रींकारमन्त्रजपसक्त विधीशविष्णु
दिक्पाल देव मुनि योगीगणाः समेताः
देवस्त्रियश्च महितास्तव दर्शनार्थं
ते श्रीप्रदेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥

ஹ்ரீங்காரமந்த்ர ஜப ஸக்த விதீச விஷ்ணு
திக்பால தேவ முனி யோகிணா: ஸமேதா: ।
தேவஸ்த்ரியச்ச மஹிதாஸ்தவ தர்சனார்த்தம்
தே ஸ்ரீ ப்ரதேஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்கார மந்த்ர ஜபத்தில் திளைத்த பிரம்மா விஷ்ணு ருத்ரர் திக்பதிகள் தேவர் முனிவர் யோகிகளும் மதிப்பிற்குரிய தேவஸ்த்ரிகளும் உன் தர்சனத்திற்காகக் குழுமியிருக்கின்றனர். (அஷ்ட) லக்ஷ்மிக்களை யளிக்கும் ஹே புவனேச்வரீ உனக்கு ஸுப்ர பாதமாக இருக்கட்டும்.

ह्रींकारमध्य निलये तव मन्त्रराजे
लोकाश्चतुर्दशमिता स्सहरिर्हरश्च ।
अन्तर्गता इतिहि मन्त्रविदो वदन्ति
ते सिद्धिदेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ ११

ஹ்ரீங்கார மத்யநிலயே தவ மந்த்ர ராஜே
லோகாச்சதுர்த்தச மிதாஸ் ஸஹரிர் ஹரச்ச ।
அந்தர் கதா இதிஹி மந்த்ர விதோ வதந்தி
தே ஸித்திதேऽஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரத்தின் நடுவில் அமர்ந்திருப்பவளே உன் மஹா மந்த்ரமாகிய ஹ்ரீங்காரத்தில் பதினான்கு உலகங்களும் ஹரியும் ஹரனும் அடங்கியிருக்கின்றனர் என மந்த்ரமறிந்தோர் கூறிகின்றனர். ஐசுவர்யமளிக்கும் ஹே புவனேச்வரீ, உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

ह्रींकारमन्त्रगगनोत्थसुधांशुरूपे
साक्षाद्धतो नहि कदाचन कोपि देवि ।
मातः कृपार्द्रहृदये सहिते च भर्त्रा
ते शक्तिदेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ १२

ஹ்ரீங்காரமந்த்ர ககனோத்த ஸுதாம்சுரூபே
ஸாக்ஷாத் ஹதோ நஹி கதாசன கோபி தேவி ।
மாத: க்ருபார்த்ர ஹ்ருதயே ஸஹிதே ச பர்த்ரா
தே சாந்திதேஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்கார மந்த்ரமாகிய ஆகாயத்தில் சந்திரனாய் விளங்குபவளே தேவி நேரிடையாக எந்தஸமயத்திலும் யாரும் உன்னால் கொல்லப் படவில்லை. கருணை நிறைந்த இதயத்தினளே பதியுடன் கூடியவளே, சாந்தியளிப்பவளே ஹே புவனேச்வரீ உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

ह्रींकारतोयदगणोद्गत नाशहीन
विद्युल्लते निगमशीर्ष निवेद्यमाने ।



श्रीचक्ररूप विलसच्छ्रुतिभूषणे ते
शक्त्यादिमेऽस्तु भवनेश्वरि सुप्रभातम् ॥ १३

ஹ்ரீங்கார தோயதகணோத்கத நாச ஹீன
வித்யுல்லதே நிகமசீர்ஷநிவேத்யமானே ।
ஸ்ரீ சக்ர ரூப விலஸத்சுருதி பூஷணே தே
சக்த்யாதிமேऽஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரமாகிய மேகக் கூட்டங்களுக் கிடையில் வெளிவந்த அழிவற்ற மின்னல் கொடியே வேதங்களினால் அறிவிக்கப் படுகின்றவளே ஸ்ரீ சக்ர ரூபமாய் பிரகாசிக்கும் தோடுடையவளே சக்திகளுக்கு முதல்வியே ஹே புவனேச்வரி உனக்கு ஸுப்ரபாதமாய் இருக்கட்டும்.

ह्रींकार दर्पणतलोदर बिम्बिताङ्गि
शब्दार्थरूपजगदुद्भव मूलभूते ।
मायाभिधे च परमात्मसधर्मिणि त्वं
ते मोक्षदेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ १४

ஹ்ரீங்கார தர்பண தலோதர பிம்பி தாங்கி
சப்தார்த்த ரூப ஜகதுத்பவ மூலபூதே ।
மாயாபிதே ச பரமாத்ம ஸதர்மிணி த்வம்
தே மோக்ஷதேஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரமாகிய கண்ணாடியின் நடுவில் பிம்பித்தவளே சப்த அர்த்தரூபமான உலகத்தின் உதயத்திற்கு மூலமாய் இருப்பவளே மாயை எனப் பெயர் கொண்டவளே நீ பரப்ரம்ஹத்தின் துணைவி மோக்ஷமளிப்பவளே ஹே புவனேச்வரி உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

ह्रींकारतुङ्ग हिमवद्गिरि जात गंगे
ह्रींकार भास्कररुचेऽरुण दिव्यदेहे ।

हींकार पीठनिलये त्रिगुणे त्रिनेत्रे
माये तवास्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ १५

ஹ்ரீங்கார துங்க ஹிமவத்கிரிஜாத கங்கே
ஹ்ரீங்கார பாஸ்கரருசேऽருண திவ்யதேஹே ।
ஹ்ரீங்கார பீடநிலயே த்ரிகுணே த்ரி நேத்ரே
மாயே தவாஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரமாகிய ஹிமயமலையினின்றும் உதித்த கங்கையே ஹ்ரீங்கார மாகிய சூரியனின் ஒளியே சிவந்த திருமேனியளே ஹ்ரீங்கார பீடத்தில் அமர்ந்திருப்பவளே முக்குணங்கள் கொண்டவளே முக்கண்ணியே மாயாதேவியே ஹே பவனேச்வரி உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

हींङ्काररंग वरनर्तकि कुण्डलीति
ख्याते चतुर्दल समंचितमूलपद्मे ।
सूक्ष्माकृते फण समुज्वलसर्परूपे
ते सर्वगेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ १६

ஹ்ரீங்காரரங்க வரநர்தகி குண்டலீதி
க்யாதே சதுர்தள ஸமஞ்சித மூலபத்மே ।
ஸூக்ஷ்மாக்ருதே பண ஸமுஜ்வல ஸர்பரூபே
தே ஸர்வகேऽஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம் ॥

ஹ்ரீங்காரமாகிய ரங்கத்தில் நடன மிடும் நர்தகியே குண்டலீ என்று பிரஸித்தி பெற்றவளே நான்கு இதழ்கள் கொண்ட மூலாதார கமலத்தில் ஸூக்ஷ்ம உருவத்துடன் இருப்பவளே படமுடைய பாம்பின் உருவமுடையவளே எங்கும் நிறைந்தவளே ஹே புவனேச்வரி உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

हींकारमन्त्रजपसक्तभनास्तुशान्ता
नन्दामिधान यति राडपि तिष्ठतीह ।
आनन्दबाष्प विलसन्नयनः पुरस्तात्
आगच्छ तेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ १७



ஹ்ரீங்கார மந்த்ரஜப ஸக்த மனாஸ்து சாந்தா
னந்தாபிதான யதிராடபி திஷ்டதீஹ ।
ஆனந்த பாஷ்பவிலஸன்நயன: புரஸ்தாத்
ஆகச்ச தேऽஸ்து புவனேச்வரி ஸுப்ர பாதம் ॥

ஹ்ரீங்கார மந்த்ர ஜபத்தில் ஈடுபட்ட மனத்தினரான ஸ்ரீ சாந்தானந்த யதீச்வரரும் ஆனந்தபாஷ்பம் தோன்றும் கண்ணுடன் உன் முன்நின்று கொண்டிருக்கின்றார். வருவாயாக. ஹே புவனேச்வரி உனக்கு ஸுப்ரபாதமாய் இருக்கட்டும்.

हींकारमन्त्र जपलग्नमतिः प्रसादात्
ते प्राप्नुयात् सुरवराधिपतित्वभाग्यं
वागीऽश्वरीच कमलास्य वंशवदा स्यात्
सर्वेशितेऽस्तु भुवनेश्वरि सुप्रभातम् ॥ १८

ஹ்ரீங்காரமந்த்ரஜபலக்னமதி, ப்ரஸாதாத்
தே ப்ராப்னுயாத் ஸுவராதி பதித்வ பாக்யம்
வாகீச்வரீச கமலாஸ்ய வசம்வதா ஸ்யாத்
ஸர்வேசி தேऽஸ்து புவனேச்வரி ஸுப்ரபாதம்

ஹ்ரீங்காரமந்த்ர ஜபத்தில் மூழ்கிய எண்ண முள்ளவன் உன் அருளால் தேவசிரேஷ்டர்களுக்கு அதிபதியாய் இருக்கும் பாக்யம் பெறுகிறான். அவனுக்கு ஸரஸ்வதியும் மஹாலக்ஷ்மீ தேவியும் உதவி புரிகின்றனர். அனைவருக்கும் ஈச்வரியான ஹே புவனேச்வரீ உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

मातर्मणिद्वीपतले विभासि
पुण्ये पुरे श्री नवसालसंज्ञे ।
हींकार जापोद्यत हृत्पयोजे
सर्वत्र भूयात्तव सुप्रभातम् ॥ १९

மாதர் மணித்வீப தலே விபாஸி
புண்யே புரே ஸ்ரீ நவஸாலஸம்ஞே ।
ஹ்ரீங்கார ஜாபோத்யத ஹ்ருத்பயோஜே
ஸர்வத்ர பூயாத் தவ ஸுப்ரபாதம் ॥

அம்மா மணித்வீபத்திலும், புண்ணியபுரமான புதுக்கோட்டையிலும் ஹ்ரீங்கார ஜபத்தில் முனைந்தவரின் இதயகமலத்திலும் எங்கும் விளங்குகின்றாய் அனைத்திடத்திலும் உனக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

भुवनेश्वर वाम भागवासे
दश दिक्पाल शिरोधृतांघ्रिपद्मे।
भुवनाधिपनायिके मनोज्ञे
शरणं त्वच्चरणांबुजे प्रपद्ये ॥ २०

புவனேச்வர வாமபாக வாஸே
தசதிக்பால சிரோத்ருதாங்க்ரிபத்மே ।
புவனாதிபநாயிகே மனோஞ்ஞே
சரணம் த்வச் சரணாம் புஜே ப்ரத்யே ॥

புவனேச்வரரின் இடது பக்கத்தில் வீற்றுப்பவளே பத்து திக்பதிகளின் சிரங்களாலும் தாங்கப்படும் திருவடித் தாமரை யுடையவளே மனத்திற்கு பிடித்தவளே புவனேச்வரரின் மனைவியே உன் திருவடித் தாமரையை சரண மடைகிறேன்.

राधा च दुर्गाऽखिल शक्तिरूपा
वाणी महा लक्ष्म्यभिधा त्वमेव ।
सावित्र्याभिख्याऽखिलभाग्य दात्री
त्वां ह्रीं निवेद्यां शरणं प्रपद्ये ॥ २१

ராதாச துர்காऽகில சக்திரூபா
வாணீ மஹாலக்ஷ்மியபிதா த்வமேவ !
ஸாவித்ரியபிக்யாऽகிலபாக்ய தாத்ரீ
த்வாம் ஹ்ரீம் நிவேத்யாம் சரணம் ப்ரபத்யே ॥

நீயே ராதா அகில சக்தி ரூபிணியான துர்கா ஸரஸ்வதி லக்ஷ்மீ அகிலபாக்யமும் நல்கும் ஸாவித்ரீயாய் இருக்கின்றாய். ஹ்ரீங்காரம் அறிவிக்கும் உன்னை சரண மடைகிறேன்.



### மங்களம்

मायावीजमहा मन्त्र वर बोधित वैभवा।
मंगलं लोकजननी ददातु भुवनेश्वरी ॥

மாயாபீஜ மஹாமந்த்ரவர போதிதவைபவா ।
மங்களம் லோக ஜனனீ ததாது புவனேச்வரீ ॥

மாயா பீஜ மஹாமந்த்ரத்தால் தெரிவிக்கப்பட்ட பெருமையுடய லோக ஜனனீயாகிய புவனேச்வரீ மங்களமளிக்கட்டும்.

ब्रह्मविष्णु महेशेभ्यो वाणी लक्ष्मी महेश्वरीः
या ददौ मंगलं सा मे ददातु भुवनेश्वरी २३

ப்ரம்ஹ விஷ்ணு மஹேசேப்யோ வாணீ லக்ஷ்மீ - மஹேச்வரீ:।
யா ததௌ மங்களம் ஸாமே ததாது புவனேசவரீ॥

பிரம்மா, விஷ்ணு, மஹேச்வரர்களுக்கு ஸரஸ்வதி லக்ஷ்மி மஹேச்வரிக்ளை அளித்தருளிய புவனேச்வரீ எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

यस्याः सिंहासने ब्रह्म हरिरुद्रेश्वराः खुराः ।
मंगलं सा महाराज्ञी ददातु भुवनेश्वरी ॥ २४

யஸ்யா: ஸிம்ஹாஸனே ப்ரம்ஹ ஹரிருத்ரேச்வரா: குரா: ।
மங்களம் ஸா மஹாராஞ்ஞீ ததாது புவனேச்வரீ ॥

எவளுடைய ஸிம்ஹாஸனத்திற்கு பிர்மா, விஷ்ணு, ருத்ரர் மஹேச்வரர் கால்களோ, அந்த மஹாராஞ்ஞீயான ஸ்ரீ புவனேச்வரீ எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

सदाशिव मये पीठे भुवनेशांक माश्रिता ।
मंगलं करुणामूर्तिः ददातु भुवनेश्वरी ॥ २५

ஸதாசிவமயே பீடே புவனேசாங்க மாச்ரிதா ।
மங்களம் கருணாமூர்த்தி: ததாது புவனேச்வரீ ॥

ஸதாசிவ மயமான பலகையில் புவனேச்வரருடைய மடியில் வீற்றிருக்கும் கருணாமூர்த்தியான ஸ்ரீ புவனேச்வரீ எனக்கு மங்களம் அருளட்டும்.

पाशांकुशोज्वल महामनुमूर्तिश्चतुर्भुजा ।
मंगलं कुंकुमारक्ता ददातु भुवनेश्वरी ॥ २६

பாசாங்குசோஜ்வல மஹாமனு மூர்த்திச் சதுர்புஜா ।
மங்களம் குங்குமாரக்தா ததாது புவனேச்வரீ ॥

பாசம் அங்குசம் இவற்றால் பிரகாசிக்கும் மஹா மந்திரமூர்த்தியும் (ஆம் ஹ்ரீம் க்ரோம் ஸ்ரீ புவனேச்வர்யை நம:) நான்கு கரங்களுடையவளும் குங்குமம் போன்று சிவந்தவளுமான ஸ்ரீ புவனேச்வரீ தேவீ எனக்கு மங்களம் அருளட்டும்.

मणिद्वीपकृतावासा दत्तपादा घटार्गले ।
मंगलं कुण्डलीशक्तिः ददातु भुवनेश्वरी ॥ २७

மணித்வீப க்ருதாவாஸா தத்தபாதா கடார்களே ।
மங்களம் குண்டலீ சக்தி: ததாது புவனேச்வரீ ॥

மணி த்வீபத்தில் வஸிப்பவளும் கடார்களயந்த்ரத்தில் வைத்த திருவடி யுடையவளும் குண்டலீ சக்தியாயும் உள்ள ஸ்ரீ புவனேச்வரி எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

सृष्टि स्थित्युपसंहारान् त्रिमूर्तीना मुपादिशत् ।
या देवी मंगलं सामे ददातु भुवनेश्वरी ॥ २९

ஸ்ருஷ்டி ஸ்த்தித்யுபஸம்ஹாரான் த்ரிமூர்த்தினாமுபாதிசத் ।
யா தேவீ மங்களம் ஸாமே ததாது புவனேச்வரீ ॥

ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் இவற்றை பிரம்மா, விஷ்ணு, ருத்ரர் என்ற மூவருக்கும் உபதேசித்த ஸ்ரீ புவனேச்வரீ தேவீ எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

शपाहीनो मनुर्यस्याः साक्षाद्वेदात्समुद्धृतः ।
मंगलं शक्ति पूर्णा सा ददातु भुवनेश्वरी ॥ ३०



சாபஹீனோ மனுர்யஸ்யா: ஸாக்ஷாத் வேதாத் ஸமுத்ருத: ।
மங்களம் சக்தி பூர்ணா ஸா ததாது புவனேச்வரீ ॥

எவளுடைய மந்த்ரம் சாபமற்றதோ, நேரிடையாகவே வேதத்தினின்றும் எடுக்கப்பட்டதோ அந்த பூர்ணசக்தி படைத்த ஸ்ரீ புவனேச்வரீ தேவீ எனக்கு மங்களம் அருளட்டும்.

हरि र्हरश्च यन्मन्त्रे वर्तेतेऽन्तः शिवात्मकौ ।
मंगलं सा जगत्पूज्या ददातु भुवनेश्वरी ॥ ३१

ஹரிர் ஹரச்ச யன்மந்த்ரே வர்தேதேऽந்த: சிவா த்மகௌ ।
மங்களம் ஸா ஜகத்பூஜ்யா ததாது புவனேச்வரீ ॥

எவளுடைய மந்திரத்திற்குள் ஹரனும் ஹரியும் சக்திரூபமாகவே அமர்ந்திருக்கின்றனரோ அந்த உலகம் போற்றும் ஸ்ரீ புவனேச்வரீ தேவீ எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

भुवनेशीसुप्रभातं ह्रींकार मनु गार्भितं ।
श्रीशान्तानन्द योगीशस्याज्ञया तु समंगलं ॥
कविः श्वेताटवीजातो मुत्तुस्वामिशिरोमणिः ।
समर्पयति भक्त्यैतत् भुवनेशी पदाब्जयोः

புவனே சீ ஸுப்ரபாதம் ஹ்ரீங்கார மனுகர்பிதம் ।
ஸ்ரீ சாந்தானந்தயோகீசஸ்யாஞ்ஞயா து ஸமங்களம்
கவி: ச்வேதாடவீவாஸீ முத்துஸ்வாமி சிரோமணி:
ஸமர்பயதி பக்தியைதத் புவனேசீ பதாப்ஜயோ: ॥

ஸ்ரீ சாந்தானந்த யோகீச்வரருடைய ஆஞ்ஞையால் திருவெண்காடு கவி சிரோமணி முத்துஸ்வாமி சாஸ்த்ரி. ஹ்ரீங்கார மந்த்ரங்கள் நிறைந்த மங்களத்துடன் கூடிய ஸ்ரீ புவனேசீ ஸுப்ரபாதத்தை ஸ்ரீ புவனேச்வரி தேவியின் திருவடிகளில் பக்தியுடன் ஸமர்பித்திருக்கின்றார்.

## ॥ अवधूतपरंपरागतज्ञानदीपः ॥
## அவதூத பரம்பரை அளித்த ஞான விளக்கு

योगिश्रेष्ठान्कुण्डलीयोगसक्तान्
  दुर्गास्कन्दा राधनालीन चित्तान् ।
ह्रीं मन्त्रेशी ध्यान पूतान्तरङ्गान्
  वन्दे शान्ता नन्दनाम्नो यतीन्द्रान् ॥

யோகிச்ரேஷ்டான் குண்டலியோக ஸக்தான்
  துர்கா ஸ்கந்தா ராதனா லீன சித்தான் ।
ஹ்ரீம் மந்த்ரேசீ த்யான பூ தாந்தரங்கான்
  வந்தே சாந்தானந்த நாம்னோ யதீந்த்ரான் ॥

யோகிகளில் சிறந்தவரும் குண்டலியோகத்தில் ஈடபட்டவரும், ஸ்ரீ துர்கா ஸ்ரீ முருகப் பெருமான் இவர்களுடைய வழிபாட்டிலும், ஹ்ரீம் மந்திரத்தின் பொருளான ஸ்ரீ புவனேச்வரீ த்யானத்திலும் ஈடுபட்ட தூயமனமுடையவருமான ஸ்ரீ சாந்தானந்தயதி (ஸன்யாஸி) சிரேஷ்டர்களை வணங்குகின்றேன்.

தெய்வீகக் கோட்டையாய்ப் பொலிவுறும் புதுக்கோட்டையில் இடைவிடாது இருபத்தைந்து ஆண்டுகளாய், வேதம் வகுந்த வழியில், வேள்விகள் பல, சான்றோர் வியக்கக் சிறப்புடன் செய்து வருகின்றார்கள் ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த் ஸ்வாமி அவர்கள். தெய்வ நம்பிக்கை முகத்திலே ஜ்வலிக்க பக்தியுடனும் வினயத்துடனும், ஸ்ரீ ஜகன்மாதா புவனேச்வரியின் அமுத நாமாக்களை உள்ளன்புடன் உரக்கக் கூறிக் கொண்டு கூட்டம் கூட்டமாக வரும் ஆஸ்திக அன்பர்களைக் கண்டு பேருவகை கொள்ளும் பாக்யம் இருபத்தைந்து ஆண்டுகளாக, பாரத தேசத்திலேயே புதுக்கோட்டை நகருக்கு மட்டும் தான் கிடைத்திருக்கின்றது என்பது பெருமைக் குரிய செய்தியாகும்.

பாரத தேசத்தின் பல பாகங்களினின்றும் தேர்ந்தெடுக்கபட்ட உபாஸகர்கள், வேத வித்துக்கள், பக்திப் பெரு வெள்ளத்திலே



ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களின் பரமகுரு புதுக்கோட்டையில் அதிஷ்டானமாகி இருக்கும் ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள்

திளைக்கும் பேரருளாளர்கள், சொல்லால் உலகாளும் மன்னர்கள் பல்கலைவல்ல புலவர்கள் பலரைக் கூட்டி புதுக்கோட்டையில் க்ருதயுகமும் த்ரேதாயுகமும் துவாபரயுகமும் களிநடம் புரியச் செய்கின்றனர் ஸ்வாமிகள். இங்கு ஸ்வாமிகள் வேள்வி நடத்தும் ஒருமாத காலத்தில் கலி தன் தலையைக் காட்டுவதே யில்லை. தன் அறுபது ஆண்டுகளை அறப்பணியிலே அனவரதமும் ஈடுபடுத்திய ஸ்வாமிகள் இன்னும் பல நூற்றாண்டுகள் வாழ, ஆஸ்திகர்களின் ஏகோபித்த குரல் கொண்டு, ஸ்ரீ அன்னை புவனேச்வரியை பாரதம் பெருமிதத்தோடு பிரார்த்திக்கின்றது.

விஷ்ணுவின் அம்சாவதாரமான தத்தாத்ரேயர் அவதூத குலத்தின் ஆதிபுருஷராவார். அந்தப் பரம்பரையில் வந்தவர்களே ஞானக் குன்றாய் திகழ்ந்த ஜட்ஜ் ஸ்வாமிகள் என்ற ஸதாசிவ ப்ரம்மேந்திரரும், அருட்குன்றாய் நின்று பிரகாசித்த ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளும் ஆவர். இவ்விருவரும் ஏற்றிவைத்த ஞான தீபமே ஸ்ரீ சாந்தனந்த ஸ்வாமிகள் என்ற பெயர் கொண்டு புதுக்கோட்டையில் அமர்ந்து, பக்தர்களின் உள்ளத்திலே ஞான ஒளிபரப்பி பிரகாசிக்கச் செய்கின்றது.

ஸ்வயம்பிரகாசர் என்ற ஞான விருக்ஷம் சாந்தானவந்தர் என்ற அருட்கனியைத் தந்திருக்கின்றது. பாரததேசம் பல மஹான்களைப் பெற்று நமக்குத் தந்திருக்கின்றது. அதில் சத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் நாம் செய்த புண்ணியத்தின் பயனாக நம்மிடையே வாழ்ந்தருளுகின்றர்கள். ஏகாக்ஷரீ புவனேச்வரீ மஹா மந்த்ரத்தை அறுபது ஆண்டுகளாக உபாஸித்து வெற்றி பெற்ற சித்த புருஷர் ஸ்வாமிகள். அறப்பணிகள் பல செய்த காரணத்தாலும் இடைவிடாத உபாஸனையினாலும், வியன்பெரு வேள்விகள் பல முறைப்படி செய்ததாலும் புவனேச்வரி தேவியின் பூர்ணமாக திருவருளுக்குப் பாத்திரமாய்த் திகழ்கின்றனர்.

தூக்கிக் கட்டிய பெரும் ஜடாமகுடமும், குங்குமத்துடன் விபூதியணிந்த விசால நெற்றியும் அருள் நிறைந்த கண்களும் பொன்னிறத் திருமேனியும் அவரிடமுள்ள தெய்வீகத் தன்மைக்கு சாக்ஷியமளிக்கின்றன. கபடமற்ற குழந்தையுள்ளமும் அமைதி நிறைந்த அன்புச் சொற்களும் ஸந்நியாசிகளிடையே அவருக்கு ஒரு தனித் தன்மையைத் தந்திருக்கின்றது.

புவனேச்வரி ஸந்நிதானத்திலே வேள்வி நடக்கும்போது த்ரிகரண சுத்தியுடன் புவனேச்வரீ த்யானத்தில் அமர்ந்தருளும் ஸ்வாமிகளைக் கண்டவர்கள், ஸ்வாமிகளை ஸ்ரீ புவனேச்வரி தேவியாகவே காண்கின்றனர்.

பல்வாண்டுகளாக குண்டலினீ யோகத்தில் ஈடுபாடு கொண்ட ஸித்தரான ஸ்வாமிகள் பல செயற்கரிய காரியங்கள் செய்திருக்கின்றனர். அதை ஸ்வானுபவத்திலே கண்டவர் பலர். ஆயினும் ஸ்வாமிகள் இவைபற்றி பறை சாற்றிக் கொள்வதில்லை. அது மகாத்மாக்களின் குணம்.

ஆதித்தய தீர்த்தநில் அஸித தேவளர் என்ற ஒரு தபஸ்வீ கிருஹஸ்தாசிரமத்தின் நெறி தவறாது வாழ்ந்து வந்தார். அவருடைய கிருஹத்திற்கு ஜைகீஷவ்யர் என்ற ஒரு யோகி அடிக்கடி பிக்ஷைபெற வருவதுண்டு. பல நாட்கள். அங்கு வராதிருந்த அந்தயோகி மீண்டும் ஒரு நாள் வந்தார். பிக்ஷை பெற்றார். பேசவில்லை.

தேவளருக்கு இவரைப் பற்றித் தெரிந்துக்கொள்ள வேண்டும் என்ற ஓர் அவா எழுந்தது. பின்னர் தேவளர் ஸ்னர்னம் செய்ய ஸமுத்திரம் சென்றார். தனக்கு முன்னமே ஜைகீஷவ்யர் ஸ்நானம் செய்து, ஜபம் செய்து கொண்டிருப்பதைக் கண்டு ஆசிரமம் வந்தார். தனக்கு முன்வந்து ஜைகீஷ்யர் அமர்ந்திருப்பதைக் கண்டு வியப்பு மேலிட்டு ஆகாச மார்க்கமாகச் சென்றார். அங்கு ஸித்தர்களை க் கண்டார். அவர்களிடையே ஜைகீஷவ்யரும் பூஜிக்கப்படுவதைக் கண்டார். பின் பித்ருலோகம், அக்னிஹோத்ரிகளின் லோகம், வசு ருத்ரர் ஆதித்யர் இவர்களின் லோகங்கள், கோலோகம் முதலியவற்றுக்குத் தன் தபோபலத்தால் சென்றார். ஆங்காங்கே ஜைகீஷவ்யர் இருப்பதைக் கண்டார். அதன் பின்னும் மேலே சென்றார். அங்கு ஜைகீஷவ்யரைக் காணாது சித்தர்களை நோக்கி, ''ஜைகீஷவ்யர் எங்கே'' என்று கேட்டார். அவர்கள் ''அவர் சாச்வதமான ப்ரம்ஹலோகம் சென்றார். அங்கு நீங்கள் செல்ல முடியாது'' என்று பதிலுரைத்தனர். தேவளர் வீடுவந்தார். அங்கு எப்போதும்போல் ஜைகீஷவ்யர் அமைதியாய் அமர்ந்திருப்பதைக் கண்டு பெரும் வியப்புற்றார். தேவளர் அவரை வணங்கி அவர்பால் ஞானோபதேசம் பெற்றார். இப்படி ஒரு நிகழ்ச்சியை நாரதரிடம்



''தவத்தைவிடச் சிறந்தது யோகம்'' என்று கூறி புகழ்ந்தனர் தேவர். இப்படி சித்தர்களைப் பாராட்டிப் பேசுகின்றது பெருமைமிக்க பாரதம்.

அவ்வாறான தத்தாத்ரேயர் முதலிய யோகிகளின் வரிசையைக் கண்டிருக்கிறது நம் நாடு. அந்தப் பரம்பரையில் வந்தவர் ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள். இந்த ஞானவிளக்கு பல்லாண்டு பிரகாசித்து நற்பணிகள் பல புரிய அன்னை பராசக்தி ஸ்ரீ புவனேச்வரி ஜகன்மாதாவைப் பிரார்த்திப்போம்.

## ॥ श्री सद्गुरुस्तुतिः ॥
## ஸ்ரீ ஸத்குரு ஸ்துதி

आचक्षते यं विद्वांसः प्रत्यक्षभुवनेश्वरीम् ।
तं शान्तानन्दयोगीन्द्रं वन्देऽहं यतिनां वरम् ॥ ॥ १ ॥

ஆசக்ஷதே யம் வித்வாம்ஸ: ப்ரத்யக்ஷபுவனேச்வரீம் ।
தம் சாந்தானனந்தயோகீந்த்ரம் வந்தே^ஹம் யதினாம் வரம் ॥

அறிஞர்கள் எவரை கண்கண்ட புவனேச்வரியாகக் கூறுகின்றனரோ அந்த சந்யாஸிகளுக்குள் சிறந்த ஸ்ரீ சாந்தானந்த யோகீஸ்வரரை வணங்குகின்றேன்.

ईशस्येच्छा कुण्डली ह्रीं स्वरूपा
सर्वान्तथा चिन्त्यते यैः सदैव ।
लोकोद्धारासक्तचित्तान्गुरूंस्तान्
वन्दे शान्तानन्दनाम्नो यतीन्द्रान् ॥ ॥ २ ॥

ஈசஸ்யேச்சா குண்டலீ ஹ்ரீம்ஸ்வரூபா
ஸர்வாந்தஸ்தா சிந்த்யதே யை: ஸதைவ ।
லோகோத்தாரா ஸக்தசித்தான் குரூம்ஸ்தான்
வந்தே சாந்தானந்தநாம்னோ யதீன்த்ரான் ॥

ஈசனின் இச்சாரூபிணியும் குண்டலீ ரூபிணியும், ஹ்ரீங்கார ரூபிணியும், எல்லாப் பொருள்களிலும் உள்ளே விளங்குகின்றனவளுமாகிய ஸ்ரீ புவனேச்வரியை எப்போதும் சிந்திப்பவரும் உலகத்தை நல்வழிப்படுத்த ஆசை கொண்டவரும் ஸந்யாசிகளில் சிறந்தவருமாகிய ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

वाणी वाचि पदाब्जयोः सुरसरित् विज्ञानशक्ति र्दृशोः
बुद्धौ वाक्पतिरर्यमा च महसि प्रत्ना श्रुतिः श्रोत्रयोः



ஸ்ரீ சாந்தானந்தஸ்வாமிகள் அவர்களின்
ஸத்குரு சேந்தமங்கலம் ஸ்ரீ அவதூத மஹாபுருஷர்

सर्वेशो हृदये करान्जयुगले लक्ष्मीः वपुष्यंबिका
शान्तानन्दयतीश्वरस्य लसति क्षेमंकरस्याश्रिते ॥ ॥ ३ ॥

வாணீ வாசி பதாப்ஜயோ: ஸுரஸரித் விஞ்ஞானசக்திர் த்ருசோ:
புத்தௌ வாக்பதிரர்யமாச மஹஸி ப்ரத்னா: ச்ருதி: ச்ரோத்ரயோ:।
ஸர்வேசோ ஹ்ருதயே கராப்ஜயுகளே லக்ஷ்மீ: வபுஷ்யம்பிகா
சாந்தானந்த யதீச்வரஸ்ய லஸதி க்ஷேமங்கரஸ்யாச்ரிதே ॥

அடைந்தோருக்கு நன்மைபுரியும் சாந்தானந்த தன்னை ஸ்வாமிகளுடைய வாக்கில் ஸரஸ்வதியும், திருவடிகளில் கங்கையும் கண்களில் ஞான சக்தியும், புத்தியில் பிருஹஸ் பதியும் ஒளியில் சூரியனும், காதுகளில் வேதமும் ஹ்ருதயத்தில் ஸர்வேச்வரனும் கைகளில் லக்ஷ்மீயும் சரீரத்தில் தேவியும் வளங்குகின்றனர்.

यस्मिन्ग्रामे पुरे वा यतिकुलतिलकस्यांघ्रिपद्मे स्पृशेतां
तत्राऽधर्मो बिभीयात् कलिरपि गमनायोद्यतस्स्यात्कुवादः ।
अस्तं यायाज्जनानां झटिति च जडता प्रद्रवेत्पापमूला
वृद्धिं धर्मोपि गच्छेत् सहबुधनिकरैः सत्यशौचादियुक्तैः ॥

யஸ்மின்க்ராமே புரே வா யதிகுலதிலகஸ்யாங்க்ரிபத்மே ஸ்ப்ருசேதாம்
தத்ராऽதர்மோ பிபீயாத் கலிரபி கமனாயோத்யதஸ் ஸ்யாத் குவாத:।
அஸ்தம் யாயாஜ்ஜனானாம் ஜடிதி ச ஜடதா ப்ராத்ரவேத் பாபமூலா
வ்ருத்திம் தர்மோபி கச்சேத் ஸஹ புதநிகரை:
ஸத்யசௌசாதியுக்தை: ॥

சன்யாசிகுல திலகமான ஸ்ரீ ஸ்வாமிகளுடைய திருவடிகள் கிராமத்திலோ நகரத்திலோ எங்கு படுகின்றனவோ, அங்கு அதர்மம் பயப்படும். கலி ஓட முயற்சிக்கும், தீய பேச்சு மறையும், பாபத்தினால் ஏற்பட்ட புத்தி மாந்தியம் சீக்கிரமாகத் தொலையும். ஸத்யம் தூய்மை இந்த குணங்களுடன் கூடிய வித்வான்களுடன் கூட தர்மம் வளரும்.

तप्तस्वर्णसमुज्ज्वला पृथुजटाभरोद्वहा सस्मिता
देव्यराधनपूतकुङ्कमलसत्फाला कषायावृता ।

यज्ञस्थापितहेमकुम्भविगलत्तोयाभिषेकार्द्रिता
शान्तानन्दयतीश्वरस्य विमला बाभाति सौम्याकृतिः ॥ ॥ ५ ॥

தப்த ஸ்வர்ண ஸமுஜ்வலா ப்ருது ஜடாபாரோத்வஹா ஸஸ்மிதா
தேவ்யாராதன பூதகுங்கும லஸத்பாலா கக்ஷாயாவ்ருதா ।
யக்ஞஸ்தாபித ஹேமகும்ப விகளத்தோயாபிஷேகார்த்ரிதா
சாந்தானந்த யதீச்வரஸ்ய விமலா பாபாதி ஸௌம்யாக்ருதி: ॥

ஸ்ரீ ஸத்ருகு சாந்தானந்த ஸ்வாமிகள் மனதைக் கவரும் உடல் வளம் உடையவர். உருக்கிவிட்ட பொன் போன்று பிரகாசிக்கின்றது அவர் திருமேனி. சிரத்தின்மீது உயரத் தூக்கிக் கட்டிய ஜடாபாரம் அழகை அதிகமாக்கும். புன்சிரிப்புத் தவழும் களங்கமற்ற முகம். அன்னை பராசக்தி ஸ்ரீ புவனேச்வரி தேவியின் திருவடித் தாமரைகளில் அன்றாடம் அர்சனை செய்த பவித்ரமான குங்குமம் அவரது அகன்ற நெற்றியில் சுடர்விட்டுப் ப்ரகாசிக்கும். காவித் துணியைச் சுற்றிக் கொண்ட திவ்ய தேஹம் அகத்தூய்மையை அழகாய் கட்டிக் காட்டும். ஆண்டு தோறும் வேத வல்லுனர்களாலும் மந்திர சாஸ்திரம் தேர்ந்த பெரியோர்களாலும் வேத மந்தரங்கள் ஓதி தங்கக் குடங்களில் ஸ்தாபிக்கப் பெற்றதும் 51 ஓஷதிகள் நிறைந்ததும் பல புண்யநதி களினின்றும் கொண்டுவரப் பெற்றதுமான புண்ணியத் தீர்த்தங்களால் வேதியர் வேத கோஷத்துடன் நீராட்டப் பெற்ற பெரும்பேறு பெற்றவர். இவ்வாறான ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களுடைய அருள் திருமேனி அன்பர்கள் உள்ளங்களில் என்றும் எப்போதும் ப்ராகாசித்துக் கொண்டிருக்கிறது.

यज्जिह्वा मधुरं ब्रवीति ललिते प्रत्यङ्गिरे ह्रीं शिवे
श्रीमातर्भुवनेश्वरीति सततं यत्नं विना श्वासवत् ।
यन्नेत्रे विमले प्रपञ्चमखिलं देवीमयं पश्यतः
शान्तानन्दयतीश्वरो विजयते सोऽयं सतामग्रणीः ॥ ६ ॥

யஜ்ஜிஹ்வா மதுரம் ப்ரவீதி லலிதே ப்ரத்யங்கிரே ஹ்ரீம் சிவே
ஸ்ரீ மாதர்புவனேச்வரீதி ஸததம் யத்னம் விநா ச்வாஸவத் ।
யந்நேத்ரே விமலே ப்ரபஞ்சமகிலம் தேவீமயம் பச்யத:
சாந்தானந்ததீச்வரோ விஜயதே ஸோऽயம் ஸதாமக்ரணீ: ॥



ஸாதுக்களின் முன் வரிசையில் நிற்பவர் ஸத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள். அவர்களுடைய புண்ணியம் செய்த நாக்கு, மூச்சு விடுவதுபோல் முயற்சியின்றியே எப்போதும் லலிதே! ப்ரத்யங்கிரே! ஹ்ரீம்! சிவே! ஸ்ரீ மாதா புவனேச்வரி என்று தெளிவாகக் கூறிக் கொண்டிருக்கிறது. நாக்கு படைத்தவர் பெறும் பயன் இதைவிடச் சிறந்ததுண்டோ! ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களின் ஒளிமிக்க ஞானக் கண்கள் காணும் இடமெல்லாம் உலகின் இயற்கை யழகைப் பார்க்காது, அவை எங்கும் அகில உலகையும் ஈன்றெடுத்த பராசக்தி ஸ்ரீ புவனேச்வரி மாதாவின் அழகிய கோலத்தையே காண்கின்றன. தாம் வழிபடும் தெய்வமாகவே உலகிலுள்ள பொருள்கள் அனைத்தையும் காண்பதுவே பக்தியின் முதிர்ச்சி என்பர் பெரியோர்.

धन्यं यस्य मनः सदा परशिवस्यांके निषण्णां शिवां
ध्यायत्याश्रितवत्सलां शुभतमौ हस्तौ परांबार्चने ।
उद्युक्तौ भवतस्सुगन्धिकुसुमैः सोऽयं वरो योगिनां
शान्तानन्दयतीश्वरो विजयते षड्भिर्विमुक्तोऽरिभिः ॥ ७ ॥

தன்யம் யஸ்ய மந: ஸதா பரசிவஸ்யாங்கே நிஷண்ணாம் சிவாம்
த்யாயத்யாச்ரிதவத்ஸலாம் சுபதமௌ ஹஸ்தௌ பராம்பார்சனே ।
உத்யுக்தௌ பவதஸ் ஸுகந்திகுஸுமை: ஸோऽயம் வரோ யோகிநாம்
சாந்தானந்தயதீச்வரோ விஜயதே ஷட்பிர் விமுக்தோऽரிபி: ॥

ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமி அவர்கள் க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் இவைகளினின்றும் விலகியவர். அவருடைய மனம் மிகவும் பாக்யம் செய்ததாகும். ஏனென்றால் அது என்றும் எப்போதும் ஸ்ரீமத் ஸிம்ஸாஹனத்தில் ஸ்ரீ புவனேச்வரருடைய இடது மடியில் இனிதமர்ந்தருளும் ஸ்ரீ புவனேச்வரி ஜகன்மாதவையே சிந்தித்துக் கொண்டிருக்கிறது அவருடைய திருக்கரங்கள் வாசனை நிறைந்த மலர்களால் எப்போதும் பராசக்தியை முறைப்படி அர்ச்சனை செய்வதிலேயே ஈடுபட்டிருக்கின்றன. இவ்வாறான மஹான் ஸ்த்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் உலகத்தவரிடையே மிகவும் சிறந்து விளங்குகின்றனர்.

श्रीमत्स्कन्दगिरौ भवद्विरचितः स्कन्दाश्रमः शोभनः
शैलाख्येन गरे तथैव नवसालाख्ये पुरे विश्रुतम् ।
रम्यं श्रीभुवनेश्वरीसुखनिवासार्थं कृतं मन्दिरं
श्रीकैङ्कर्ययशोनिवेदनजयस्तम्भौ विभातोऽक्षयौ ॥ ८ ॥

ஸ்ரீமத்ஸ்கந்தகிரௌ பவத்விரசித: ஸ்கந்தாச்ரம: சோபந:
சேலாக்யே நகரே ததைவ நவஸாலாக்யே புரே விச்ருதம் ।
ரம்யம் ஸ்ரீ புவனேச்வரீ ஸுகநிவாஸார்தம் க்ருதம் மந்திரம்
ஸ்ரீ கைங்கர்ய யசோநிவேதந ஜய ஸ்தம்பௌ விபாதோக்ஷயௌ ॥

ஸ்ரீ ஸத்குரு சாந்தானனந்த ஸ்வாமிகள் மிகவும பாக்யம் செய்த பெரியவர். அவர் புதுக்கோட்டையில் ஸ்ரீ புவனேச்வரீ ஜகன்மாதா மணித்வீபத்தையும் மறந்து மகிழ்ந்திருக்கும் வகையில் மிகவும் அழகாக ஒரு வாஸஸ்தலம் அமைத்திருக்கின்றனர். அவ்வாறே சேலம் உடையாப்பட்டியில் ஸ்கந்தகிரி ஸ்கந்தாச்ரமத்தில் பிரணவப் பொருளுரைத்த திருமுருகனுக்கும் ஸ்ரீ துர்க்கா தேவிக்கும் மிகவும் அழகிய வாசஸ்தலம் அமைத்துத் தந்திருக்கின்றனர். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் செய்த, செய்து கொண்டு இருக்கின்ற திருப்பணிகளுக்கு இவ்விரண்டிடங்களும் அழியாத ஜயஸ்தம்பங்களாய விளங்குகின்றன.

श्री-चण्डी-भुवनेश्वरी-रिपुहरप्रत्यङ्गिरा-शूलिनी-
दत्तात्रेय-सुदर्शने-श-शरभ-स्कन्दग्रहाणां कृताः ।
विघ्नेशस्य च तृप्तये तनुभृतां यज्ञा हि सौख्यप्रदाः
यैस्तेषां सदृशोऽस्ति किं क्षितितले धन्योऽवधूतोत्तमः ॥ ९ ॥

ஸ்ரீ-சண்டீ-புவனேச்வரீ-ரிபுஹரப்ரத்யங்கிரா-சூலிநீ
தத்தாத்ரேய-ஸுதர்சநே-ச-சரப-ஸ்கந்த-க்ரஹாணும் க்ருதா: ।
விக்நேசஸ்ய ச த்ருப்தயே தநுப்ருதாம் யக்ஞா ஹி ஸௌக்யப்ரதா:
யைஸ்தேஷாம் ஸத்ருசோऽஸ்தி கிம் க்ஷிதிதலே தந்யோऽவ
தூதோத்தம: ॥



ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் மனித ஸமுதாயம் வளங்கள் அனைத்தும் பெற்று வாழ்வதற்காக, ஆண்டுகள் தோறும் மிகவும் சிறப்பாக பெருமனத்துடன் வேதவிதி வழுவாது சித்திரஷித்தி பெற்றவர்களைக் கொண்டு ஸ்ரீ கணபதி ஸ்கந்தர் நவக்கிரஹங்கள் லக்ஷ்மீ துர்கா புவனேச்வரி, சத்ருபாதை போக்கும் பிரத்தியங்கிரா சூலினீ, தத்தாத்ரேயர், சுதர்சனம், ருத்ரன், சரபர் முதலிய பெருந் தெய்வங்கள் எல்லாம் மிக்வும் மகிழ்ச்சியுற்று பேரருள் வழங்க பல வேள்விக்ளைச் செய்து வருகின்றனர். இவ்வாறு லோக க்ஷேமத்திற்காக வேள்விகள் பல செய்துவரும் ஸ்வாமிகளுக்கு ஈடாக மானிலத்தில் வேறு அவதூதர் உண்டோ! என்ற வியப்பு எல்லோர் மனதிலும் உண்டாகிறது. ஆண்டுகள் தோறும் புதுக்கோட்டை வேள்வி நேரத்தில் தெய்வக் கோட்டமாக மிளிர்வதை ஆயிரக் கணக்கான பக்தர்கள் கண்டு பரவச மெய்துகின்றனர்.

जायन्ते मरणं च यान्ति मनुजाः कीटादिवद्भूतले
तेष्वेकः सुकृती विवेकसहितः सञ्जायते भाग्यतः ।
तत्राम्बाचरणाब्जलीनहृदयः श्रीसद्गुरो योगवित्
संन्यासिष्ववधूतवर्गमहितो यज्ञे रतो दुर्लभः ॥ १० ॥

ஜாயந்தே மரணம் ச யாந்தி மநுஜா: கீடாதிவத்-பூதலே
தேஷ்வேக: ஸுக்ருதீ விவேகஸஹித: ஸஞ்ஜாயதே பாக்யத: ।
தத்ராம்பா சரணாப்ஜலீநஹ்ருதய: ஸ்ரீ ஸத்குரோ! யோகவித்
ஸந்யாஸிஷ்வவதூதவர்க்மஹிதோ யக்ஞேரதோ துர்லப: ॥

ஸ்ரீ ஸத்குரு ஸ்வாமிகள் அவர்களே! இவ்வுலகில் பூச்சி, புழுக்கள் போல், மனிதர் பிறக்கின்றனர். சின்னாட்கள் வாழ்ந்து மரிக்கின்றனர். இது அன்றாடச் செய்தி, மனித சமூகத்தில் ஒரு சிலரே பாக்யசாலியாய் விவேக ஞானம் மிக்கவராய் பிறக்கிறார்கள். அதில் கூட பராசக்தியின் சரணார விந்தங்களில் ஈடுபாடுடையவராய் யோகத்தில் ஈடுபட்டவராய், ஸந்நியாசியாய், அதிலும் உயர்ந்த அவதூதராய், அதிலும் வேதங்களில், நம்பிக்கையுடன் வேத வேள்விகளில் ஈடுபாடுடையவராய் தோன்றுவது (தங்களைப்போல்) மிகவும் துர்லபமன்றோ!. தாங்கள் கிடைத்தது இந்த நாடும், நாட்டு மக்களும் செய்த பாக்யமே !

शान्तानन्दयतीश्वरं बुधजनाः पुम्भावमाप्तां भुवं
प्राप्तां श्रीभुवनेश्वरीं त्रिजगताममबां समामन्वते ।
ये पश्यन्ति जनास्तु तं सुकृतिनः तेनापि दृष्टाश्च ये
ते धन्यास्सततं भवन्ति भुवने तेषां यशः सम्पदः ॥ ११ ॥

சாந்தானந்தயதீச்வரம் புதஜநா: பும்பாவ்மாப்தாம் புவம்
ப்ராப்தாம் ஸ்ரீ புவனேச்வரீம் த்ரிஜகதாமம்பாம் ஸமாமந்வதே ।
யே பச்யந்தி ஜநாஸ்து தம் ஸுக்ருதிந: தேநாபி த்ருஷ்டாச்ச யே
தே தந்யாஸ் ஸததம் பவந்தி புவநே தேஷாம் யச: ஸம்பத: ॥

ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் புருஷ உருவம் பெற்று, பூவுலகும் வந்தடைந்த ஜகன்மாதா புவனேச்வரீ தேவீ என்றே கூறுகின்றனர். அவ்வாறான தெய்வீகத் தன்மை பெற்றவர் அவர். அம்மஹானை எந்தப் புண்ணியசாலிகள் தரிசிக்கின்றனரோ அவர்களே இவ்வுலகில் பேறு பெற்றவர் ஆவர். அவர்களே புகழ்பெற்று தனதான்யங்கள் நிறையப் பெற்று பெருவாழ்வு வாழ்கின்றனர்.

मूलाधारगतां प्रवोध्य विधिवत् पद्मे सहस्रारके
देवीं कुण्डलिनीं शिवेन मुदितां सम्योज्य योगेन यः ।
आनन्दार्णवसप्लुतः प्रतिदिनं प्राप्नोति देवीकृपां
शान्तानन्दयतीश्वरं तु तमहं वन्दे नृणां भद्रदम् ॥ १२ ॥

மூலாதாரகதாம் ப்ரபோத்ய விதிவத் பத்மே ஸஹஸ்ராரகே
தேவீம் குண்டலினீம் சிவேன முதிதாம் ஸம்யோஜ்ய யோகேந ய:
ஆனந்தார்ணவஸம்ப்லுத: ப்ரதிதினம் ப்ராப்நோதி தேவீக்ருபாம்
சாந்தானந்தயதிச்வரம்து தமஹம் வந்தே ந்ருணாம் பத்ரதம் ॥

ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் பெரிய யோகி, சித்தபுருஷர். ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் மூலாதாரத்தில் முடங்கிக் கிடக்கும் குண்டலினீ சக்தியை தன் யோக மஹிமையால் எழுப்பி, மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணி பூரகம், அனாஹதம், விசுத்தி ஆக்ஞாசக்ரம் என்ற ஆறு ஆதார சக்ரங்களையும் மூன்று கிரந்திகளையும் கடக்கச் செய்து, அப்பரமானந்தப் பெருங்கடலில் தானும் மூழ்கியவராய்



பிரதி தினமும் பராசக்தியின் அவ்யாஜமான கருணைக்குப் பாத்திரமாகின்றனர். இவ்வாறாக யோகத்தில் ஈடுபட்டு மக்களுக்கு நன்மைகள் பல செய்து வருகின்றனர். ஸ்ரீ ஸ்வாமிகள். அந்தக் கருணாமூர்த்தியான ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளை நான் வணங்குகிறேன்.

वेदेष्वेव सुरक्षितेषु भविता धर्मोऽपि संरक्षितः
तेनेदं निखिलं जगत्किल भवेत् संरक्षितं सर्वथा ।
मत्वेत्थं परिपालयन्ति सततं ये पाठशाले स्वयं
तान्वेदावनदक्षिणान्यतिवरान् वन्दामहे सादरम् ॥ १३ ॥

வேதஷ்வேவ ஸுரக்ஷிதேஷு பவிதா தர்மோऽபி ஸம்ரக்ஷித:
தேநேதம் நிகிலம் ஜகத் கில பவேத் ஸம்ரக்ஷிதம் ஸர்வதா ।
மத்வேத்தம் பரிபாலயந்தி ஸததம் யே பாடசாலே ஸ்வயம்
தாந் வேதாவநதக்ஷிணாந் யதிவரான் வந்தாமஹே ஸாதரம் ॥

இவ்வுலகங்கள் அனைத்தும் வளமான வாழ்வைப் பெறவேண்டுமானால், இந்நாட்டில் தர்மம் தழைக்க வேண்டும். நாம் தர்மத்தைக் காக்க வேண்டும். தர்மத்தைக் காப்பாற்ற வேண்டு மானால், அந்த தர்மம் முழுமையாக வேதத்தினாலேயே அறியத் தகுந்ததாய் இருக்கின்றது. ஆகவே வேதங்களை நாம் ரக்ஷிக்க வேண்டும். வேதங்களை ரக்ஷித்துவிட்டால் உலகத்தையே ரக்ஷித்த புண்யம் உண்டு. வேத ரக்ஷணம் செய்ய வேண்டியது மனிதனின் முக்கியமான கடமை. அதைக் கருத்தில் கொண்டே ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் புதுக்கோட்டயிலும் ஸ்கந்தாச்ரமத்திலும் இரண்டு பாடசாலைகளை நிறுவி தகுந்த ஆசிரியர்களையும் நற்குலம் நற்பண்பு நிறைந்த மாணவ மணிகளையும் ஆதரித்து மிகச் சிறப்பாய் பரிபாலித்து வருகின்றனர். இவ்வாறாக வேதங்களை ரக்ஷிப்பதில் ஈடுபாடு கொண்ட ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களை வணங்குகின்றேன்.

श्रीमाता भुवनेश्वरी विजयतां ह्रींकारमन्त्रोज्वला
श्रीस्कन्दाश्रमनित्यवासरसिकः स्कन्दश्च दुर्गाम्बिका ।
यज्ञान् लोकहिपंकरांश्च सततं कुर्वन्कृपावारिधिः
शान्तानन्दयतीश्वरो विजयतां देवीप्रसादच्चिरम् ॥ १४ ॥

ஸ்ரீ மாதா புவனேச்வரீ விஜயதாம் ஹ்ரீங்காரமந்த்ரோஜ்வலா
ஸ்ரீஸ்கந்தாச்ரம நித்யவாஸரஸிக: ஸ்கந்தச்ச துர்காம்பிகா ।
யக்ஞாந் லோகஹிதம்கராம்ஸ்ச ஸததம் குர்வந் க்ருபாவாரிதி:
சாந்தானந்தயதீச்வரோ விஜயதாம் தேவவீப்ரஸாதாச்சிரம் ॥

புதுக்கோட்டையில் அதிஷ்டானத்தில் இனிதமர்ந்து மக்களைக் காக்கும் ஹ்ரீங்கார மந்திரத்தின் ஒளியான ஸ்ரீ புவனேச்வரீ ஜகன்மாதா வாழ்க! சேலம் ஸ்கந்தகிரி ஸ்கந்தாச்ரமத்தில் உள்ள முருகப் பெருமானும் ஸ்ரீ ஜகன்மா துர்கா தேவியும் வாழ்க, உலகம் வளம் பெற்றுவாழ எப்போதும் யஞ்ஞங்களைச் செய்தருளும் கருணாமூர்த்தி ஸ்ரீஸத் குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அன்னை பராசக்தி ஸ்ரீ புவனேச்வரீ தேவியின் திருவருளால் பல்லாண்டு வாழ்க.



## ॥ श्री नवसालपुर्यां श्री भुवनेश्वरी प्रतिष्ठा ॥
## புதுக்கோட்டையில்
## ஸ்ரீ புவனேச்வரி ப்ரதிஷ்டை

पुण्ये द्राविडभूभागे बहुदेवालयोज्वले ।
पत्तनं नवसालख्यमस्ति दक्षिणभारते ॥ १ ॥

[1]सदाशिवाख्यब्रह्मेन्द्रपादधूलिपवित्रितम् ।
उत्तमं पत्तनं ह्येतत् भाति सज्जन संवृतम् ॥ २ ॥

புண்யே த்ராவிடபூபாகே பஹு-தேவாலயோஜ்வலே
பத்னம் நவஸாலாக்யம் அஸ்தி தக்ஷிணபார்தே ॥

ஸதாசிவாக்ய ப்ரம்மேந்த்ர பாததூளி பவித்ரிதம் ।
உத்தமம் பத்தனம் ஹ்யேதத் பாதி ஸஜ்ஜன ஸம்வ்ருதம் ॥

தென் பாரதத்தில் பல தோவாலயங்கள் திகழும் புண்ணியத் தமிழ் நாட்டில் புதுக்கோட்டை என்ற பட்டினமிருக்கின்றது. ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரர்களின் பாததூளிபட்டு பரிசுத்தமான இந்த சிறந்த பட்டினம் நல்லோர் நிறைந்த விளங்குகின்றது.

यस्य वीथीततिश्शुद्धा तत्पुर स्थजनावलेः ।
चित्तवृत्तिरिवाभाति सदा कौटिल्यवर्जिता ॥ ३ ॥

யஸ்ய வீதிததிச்சுத்தா தத்புரஸ்தஜனாவளே: ।
சித்த வ்ருத்திரிவாபாதி ஸதா கௌடில்ய வர்ஜிதா ॥

இப்பட்டினத்திலுள்ள மக்களின் எண்ணம் போன்று இப்பட்டிணத்தின் வீதிகள் எப்போதும் சுத்தமாகவும் கோணலின்றியும் விளங்குகின்றன.

1. இந்த ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்த்ரர் ஸ்ரீபரமசிவேந்திரர்களின் சிஷ்யராவார். இம்மஹானுடைய ஸமாதி கரூரின் அருகிலுள்ள நெரூரில் இருக்கின்றது. ஸ்ரீபரம சிவேந்த்ரானின் ஸமாதி திருவெண்காட்டில் உள்ளது.

श्रूयते सततं यत्र वेदघोषो द्विजेरितः ।
दिव्यं च भागवन्नामकीर्तनं कलिनाशनम् ॥

ச்ரூயதே ஸததம் யத்ர வேதகோஷோ த்விஜேரித: ।
திவ்யம் ச பகவன்னாம கீர்த்தனம் கலிநாசனம் ॥

இங்கு மறைவாணர் ஓதும் வேத ஒலியும் கலியை விறட்டும் திவ்ய பகவன்னாம கிர்த்தனமும் எப்போதும் கேட்டுக் கொண்டிருக்கும்.

यत्र स्वयंप्रकाशारव्ययतिराजेन्द्रसद्गुरोः ।
[2]सदाशिवयतीन्द्रस्य समाधिः शोभते शुभा ॥ ५ ॥

யத்ர ஸ்வயம் ப்ரகாசாக்ய யதிராஜேந்த்ர ஸத்குரோ: ।
ஸதாசிவ யதீந்ந்ரஸ்ய ஸமாதி: சோபதே சுபா ॥

இங்கு ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாசர் என்ற யதிராஜரின் குருவாகிய ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திரர் அவர்களின் தூய ஸமாதியும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

स्वयंप्रकाशब्रह्मेन्द्राः ज्ञानिनः करुणार्णवाः ।
यत्रैव दृष्ट्वा तुतुषुः समाधिं स्वगुरोः शुभाम् ॥ ६ ॥

ஸ்வயம் ப்ரகாச ப்ரம்மேந்த்ரா: ஞானின: கருணார்ணவா: ।
யத்ரைவ த்ருஷ்ட்வா துதுஷு: ஸமாதிம் ஸ்வகுரோ: சுபாம் ॥

ஞானிகளும் கருணைக் கடலுமாகிய ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ப்ரம்மேந்திரர் அவர்கள் இங்கு தன் குருவின் (ஜட்ஜ் ஸ்வாமிகள் என்றழைக்கப்படுகின்ற ஸதாசிவ ப்ரம்மேந்திரர்கள்) ஸமாதியைக் கண்டு களித்தார்கள்.

2. இந்த ஸதாசிவ ப்ரம்மேந்திரர் ஜட்ஜ் ஸ்வாமிகள் என்று அழைக்கப்படுகின்றவர். இவர் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகளின் குருவரராவார். இவர் ஸமாதி புதுக்கோட்டையிலுள்ளது. இவர் நெரூரில் ஸமாதிபெற்ற ஸதாசிவப்ரம்மேந்திரர் அல்ல.



स्वयंप्रकाशगुरुराडुपदेशाप्तसिद्धयः ।
तत्र संप्रति राजन्ते शान्तानन्दाख्ययोगिनः ॥ ७ ॥

ஸ்வயம்ப்ரகாச குருராடுபதேசாப்த ஸித்தய: ।
தத்ர ஸம்ப்ரதி ராஜந்தே சாந்தானந்தாக்ய யோகின: ॥

இங்கு, குரு ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளின் உபதேசத்தால் மந்த்ர ஸித்தி பெற்றுள்ள ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் இப்போது பிரகாசித்துக் கொண்டிருக்கின்றனர்.

## ॥ श्रीशान्तानन्दस्वामिनां नवसालपुरीप्राप्तिः ॥

## ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் புதுக்கோட்டை வந்தார்

अवधूताश्रमस्थानां भुवनेशीकृपाजुषाम् ।
योगासक्तधियां देवीध्याननिर्धूतपाप्मनाम् ॥ ८ ॥

कारितानेकयज्ञानां जटामण्डलधारिणाम् ।
बुधश्रेष्ठार्च्यपादानां कलिकल्पषहारिणाम् ॥ ९ ॥

स्वयंप्रकाशब्रह्मेन्द्रशिष्याणां विदितात्मनाम् ।
ह्रींकारजपनिष्ठानां शाक्तसंघाग्रवर्तिनाम् ॥ १० ॥

शान्तानन्दयतीन्द्राणां लोककल्याणमिच्छताम् ।
चरितं विस्तृतं पुण्यं पठनान्मङ्गलप्रदम् ।
संग्रहेण प्रवक्ष्यामि सज्जनेभ्यः श्रुतं मुहुः ॥ ११ ॥

அவதூதாச்ரமஸ்தானாம் புவனேசீ க்ருபாஜுஷாம் ।
யோகாஸக்தியாம் தேவீத்யான நிர்தூத பாப்மனாம் ॥

காரிதானேக யஞ்ஞானாம் ஜடாமண்டல தாரிணாம் ।
புதச்ரேஷ்டார்ச்ய பாதானாம் கலிகல்மஷ ஹாரிணாம் ॥

ஸ்வயம் ப்ரகாச ப்ரம்ஹேந்த்ர சிஷ்யாணாம் விதிதாத்மனாம் ।
ஹ்ரீங்கார ஜபநிஷ்டானாம் சாக்தஸங்காக்ரவர்த்தினாம் ॥

சாந்தானந்த யதீந்த்ராணாம் லோக கல்யாணமிச்சதாம் ।
சரிதம் விஸ்த்ருதம் புண்யம் படனான் மங்கள ப்ரதம் ।
ஸங்க்ர ஹேண ப்ரவக்ஷ்யாமி ஸஜ்ஜனேப்ய: ச்ருதம் முஹு: ॥

அவதூத ஆசிரமிகளும், புவனேசியின் கிருபை பெற்றவரும், யோகத்தில் லயித்த மனத்தினரும், தேவி தியானித்தினால்



ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்

டாபமற்றவரும், வேள்விகள் பல செய்து வைத்தவரும், ஜட... தரிப்பவரும், பெரிய வித்வான்களால் பூஜிக்கத் தக்கவரும், கலி... தோஷத்தைப் போக்குபவரும், எப்போதும் ஹ்ரீங்கார ஜ... செய்பவரும், சாக்தர்களுக்குள் முதல் வரும் ஸ்வயம்ப்ர... ப்ரஹ்மேந்த்ர ஸ்வாமிகள் சிஷ்யரும், ஆத்ம ஞானியும், ... ...மையை விரும்புபவருமாகிய ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் வ..ஸ்தாரமான, புண்ணியமான, படித்தால் நன்மை பயக்கும் சரித்தை அடிக்கடி பெரியோர்கள் மூலமாய் கேட்டபடி இங்கு சுருக்கிக் கூறுகிறேன்.

## श्रीदत्तात्रेयः

### ஸ்ரீ தத்தாத்ரேயர்

श्रीमन्नारायणस्यांशो दत्तात्रेय इति श्रुतः ।
योगिनानवधूतानां बभूव किल देशिकः ॥ १२ ॥

त्रिदोषरहितस्यात्रेः यः पुत्रत्वमगान्मुनेः ।
अनसूयाभिधायां तु युक्तायां सद्गुणैः वरैः ॥ १३ ॥

अनसूया हि यन्माता माण्डव्यस्याभिशापतः ।
ररक्ष कौशिकं विप्रं शपथैः पतिदेवा ॥ १४ ॥

कौशिकद्विजपत्न्यास्तु शापादस्तंगतं रविं
उदितं या चकाराशु ब्रह्माद्यैः प्रार्थिता सती ॥ १५ ॥

अनावृष्ट्या तु लोकेषु प्रदग्धेषु समन्ततः ।
या मूलफलपत्राणि ससर्ज तपसा स्वयम् ॥ १६ ॥

जाह्नवीं चाह्वयामास जीवनाय च जन्मिनाम् ।
दशरात्रं कृता रात्रिरेका यस्यास्तपोबलात् ॥ १७ ॥

आदिदेश सती धर्मान् या सीतायै पुरातनान् ।
वैदेह्यै या ददौ तृप्ता वस्त्रालङ्कराणाणि च ॥ १८ ॥

या च सीतामुखादेव स्वयंवरकथां शुभाम् ।
सीतायाः रघुनाथस्य वृत्तां शुश्राव भाग्यतः ॥ १९ ॥

ஸ்ரீமந்நாராயணஸ்யாம்சோ தத்தாத்ரேய இதி ச்ருத: ।
யோகினாமவதூதானாம் பபூவ கில தேசிக: ॥



த்ரிதோஷரஹிதஸ்யாத்ரே: ய: புத்ரத்வமகான்முனே: ।
அனஸூயாபிதாயாம் து யுக்தாயாம் ஸத்குணைர்வரை: ॥

அனஸூயா ஹி யன்மாதா மாண்டவ்யஸ்யாபிசாபத: ।
ரரக்ஷ கௌசிகம் விப்ரம் சபதை: பதிதேவதா ॥

கௌசிக த்விஜபத்ந்யாஸ்து சாபாதஸ்தம்கதம் ரவிம் ।
உதிதம் யா சகாராசு ப்ரம்ஹாத்யை: ப்ரார்த்திதா ஸதீ ॥

அனாவ்ருஷ்ட்யா து லோகேஷு ப்ரதக்தேஷு ஸமந்தத: ।
யா மூலபல பத்ராணி ஸஸர்ஜ தபஸா ஸ்வயம் ॥

ஜான்ஹவீம் சாஹ்வயாமாஸ ஜீவனாய ச ஜன்மினாம் ।
தசராத்ரம் க்ருதா ராத்ரிரேகா யஸ்யாஸ் தபோபலாத் ॥

ஆதிதேச ஸதீதர்மான் யா ஸீதாயை புராதனான் ।
வைதேஹ்யை யா ததௌ த்ருப்தா வஸ்த்ரா லங்கரணானி ச ॥

யா ச ஸீதாமுகாதேவ ஸ்வயம்வர கதாம் சுபாம் ।
ஸீதாயா: ரகுநாதஸ்ய வ்ருத்தாம் சுச்ராவ பாக்யத: ॥

ஸ்ரீமந் நாராயணருடைய அம்சமான தத்தாத்ரேயர் என்பவர் அவதூத யோகிகளுக்கு ஆசான் ஆவார். அவர் நற்குணங்கள் நிறைந்த ஆனசூயா தேவியிடம், மூன்று தோஷங்களும் இல்லாத அத்திரி முனிவருக்குப் புத்திரராய் தோன்றியவர். இவருடைய மாதாவான அனஸூயாதேவீ என்ற மஹாபதிவ்ரதை பல சபதங்கள் செய்து மாண்டவ்யர் என்ற மஹர்ஷியின் சாபத்தினின்றும் கௌசிகன் என்ற அந்தணனைக் காப்பாற்றினாள். பிரம்மாதி தேவர்களின் பிரார்த்தனைக் கிணங்கி, கௌசிகன் என்ற அந்தணனின் மனைவி கொடுத்த சாபத்தால் அஸ்தமித்துப்போன சூரியனை மீண்டும் உதிக்கும்படிச் செய்தாள் தவத்தினால் கிழங்கு பழம், இலை இவைகளை சிருஷ்டித்தாள், உயிரினம் வாழ கங்கையையும் அழைத்தாள். தன் தபோ பலத்தால் பத்து இரவை ஓரிரவாய் தோன்றும்படிச் செய்தாள். ஸீதைக்குப் பழைமையான பதிவ்ரதா தர்மங்களை உபதேசித்தாள் சீதைக்கு வஸ்திரம் "அலங்காரம்" முதலியவற்றையும் அளித்தாள். சீதையின் வாயிலாகவே ஸீதைக்கும் ராமருக்கும் நடந்த அழகிய சுயம்வரத்தையும் கேட்கும் பாக்யம் பெற்றாள்.

कार्तवीर्जुनो लेभे यस्मात्प्राप्तवरः पुरा ।
परानुस्मरणज्ञानं अप्रतिद्वन्द्वतां युधि ॥ ॥ २ ॥

आकाशांबुधिशैलेषु गतिमप्रहतां सदा ।
सहस्रबाहुमत्वं चाप्युत्तमात्स्वपराभवम् ॥ ॥ २० ॥

अनष्टद्रव्यतां राष्ट्रे सदा धर्माभिसक्तताम् ।
धनधान्यसमृद्धिं तामरोगदृढ़ात्रताम् ॥ २२ ॥

கார்தவீர்யார்ஜுனோ லேபே யஸ்மாத் ப்ராப்தவர: புரா ।
பரானுஸ்மரணஞானம் அப்ரதித்வந்த்வதாம் யுதி ॥

ஆகாசாம்புதிசைலேஷு கதிமப்ரஹதாம் ஸதா ।
ஸஹஸ்ரபாஹுமத்வம் சாப்யுத்தமாத் ஸ்வபராபவம் ॥

அனஷ்டத்ரவ்யதாம் ராஷ்ட்ரே ஸதா தர்மாபிஸக்ததாம் ।
தனதான்யஸம்ருத்திம் தாம் அரோக த்ருடகாத்ரதாம் ॥

முன்பு இந்த தத்தாத்ரேயரிடமிருந்து வரம்பெற்று கார்த்தவீர்யார்ஜுனன், பிறர் நினைப்பதைத் தெரிந்து கொள்ளுவது, யுத்தத்தில் தனக்கு ஈடு இல்லாமல் இருப்பது, ஆகாசம், கடல், மலை இவைகளில் தடையின்றிச் செல்வது, ஆயிரம் கைகள் பெற்றிருப்பது, உத்தமனிடமிருந்து தோல்வி பெறுவது, தன் ராஜ்யத்தில் பொருள் திருட்டுப் போகாமல் இருப்பது, எப்போதும் தர்மத்தில் ஈடுபாடு கொள்வது, தன தான்யங்களின் விருத்தி, ரோகமின்மை, உடல்நலம் இவைகளைப் பெற்றான்.

तस्याद्भुतप्रभावस्य विचित्राचरितस्य च ।
बभुवु र्बहवो लोके विनेया विदुषां वराः ॥ २३ ॥

தஸ்யாத்புதப்ரபாவஸ்ய விசித்ராசரிதஸ்ய ச ।
பபூவுர் பஹவோ லோகே வினேயா: விதுஷாம் வரா: ॥

அத்புத மஹிமை கொண்ட விசித்திர லீலைகள் புரியும் இந்த தத்தாத்ரேயருக்கு பல ஞானிகள் சிஷ்யராயினர்.



प्रायो विनेयास्तस्यासन् अवधूतकुलाग्रगाः ।
सर्वेऽधिगत वेदान्ता स्सर्वे जितमनोभवाः ॥ २४ ॥

ப்ராயோ வினேயாஸ் தஸ்யாஸன் அவதூதகுலாக்ரகா: ।
ஸர்வேऽதிகதவேதாந்தா: ஸர்வே ஜிதமனோபவா: ॥

அன்னாரின் சிஷ்யர்கள் அனைவரும் அவதூத சிரேஷ்டர்களாகவும், வேதாந்தம் அறிந்தவர்களாகவும், காமம் அற்றவர்களாகவும் இருந்தனர்.

दत्तात्रेयगुरोरेवं शिष्यवर्गपरम्परा ।
न्याग्रोधवृक्षश्रेणीव भारते वितताऽभवत् ॥ २५ ॥

தத்தாத்ரேயகுரோரேவம் சிஷ்யவர்கபரம்பரா ।
ந்யக்ரோத வ்ருக்ஷச்ரேணீவ பாரதே விததாऽபவத் ॥

இவ்வாறு தத்தாத்ரேய குருவின் சிஷ்ய பரம்பரை ஆலமரக் கூட்டம் போல் பாரத தேசத்தில் பரவியிருந்தது.

तस्यां परम्परायां तु जातवैराग्यसम्पदः ।
त्यक्तन्यायाधिपपदाः त्रैलिङ्गकुलशेखराः ॥ २६ ॥

आसन्सदाशिवाभिख्य यतीन्द्राः ज्ञानिनां वराः ।
ब्रह्मानन्दाब्धिनिर्मग्नाः त्यक्तमायाविचेष्टिताः ।

अगस्त्याधिष्ठितं पुण्यं मलयं नगमाश्रिताः ।
त्यक्तलोककथास्ते तु तपस्तेपु र्जितेन्द्रियाः ॥ २८ ॥

தஸ்யாம் பரம்பராயாம் து ஜாதவைராக்யஸம்பத: ।
த்யக்த நியாயாதிபபதா: த்ரைலிங்ககுலசேகரா: ॥

ஆஸன் ஸதாசிவாபிக்ய யதீந்த்ரா: ஞானினாம் வரா: ।
ப்ரம்ஹானந்தாப்தி நிர்மக்னா: த்யக்த மாயாவிசேஷ்டிதா: ॥

அகஸ்த்யாதிஷ்டிதம் புண்யம் மலயம் நகமாச்ரிதா: ।
த்யக்தலோக கதாஸ்தே து தபஸ் தேபுர் ஜிதேந்த்ரியா: ॥

அந்த தத்தாத்ரேயர் பரம்பரையில் வைராக்ய ஸம்பத்து நிறைந்தவர்களாய், ஜட்ஜ் பதவியை விட்டவர்களாய், தெலுங்கர் குலத்தின் அணியாய், ஞானிகளில் சிறந்தவராய் உள்ள ஸதாசிவர் என்ற பெயர் கொண்ட சிறந்த ஸந்யாசிகள் இருந்தனர். அவர் மாயையின் செயல்களினின்றும் விடுபட்டவராய் பிரம்மானந்தக் கடலில் ஆழ்ந்தவராய், தெற்கிலுள்ள பவித்ரமான ''மலயம்'' என்ற மலையை அடைந்து ஜிதேந்திரியாய் உலக வ்யவஹாரங்களை மறந்து தவம் இயற்றினர்.

ततोऽगस्त्यगिरिं त्यक्त्वा ''श्रीमानामधुरा भिधम् ।
ग्राममाश्रित्य तस्थुस्ते कञ्चित्कालं मुदा युताः ॥ २९ ॥

स्वयंप्रकाशब्रह्मेन्द्राः तदा तान्समुपाश्रिताः ।
ययाचिरे गुरूत्तंसान् आत्मविद्यां महीयसीम् ॥ ३० ॥

ततश्च तत्कृपालब्ध ब्रह्मविद्या भुवि श्रुताः ।
स्वयंप्रकाशब्रह्मेन्द्राः तदन्तेवासिनोऽभवत् ॥ ३१ ॥

ब्रह्मानुभवसंतुष्टाः प्रापु र्ब्रह्मविदां वराः ।
भूत्वाऽवधूतास्ते शेन्तमङ्गलग्राममुत्तमम् ॥ ३२ ॥

ததோSகஸ்தியகிரிம் த்யக்த்வா ஸ்ரீ ''மானாமதுரா'' பிதம் ।
க்ராமமாச்ரித்ய தஸ்துஸ்தே கஞ்சித்காலம் முதா யுதா: ॥

ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ரா: ததா தான் ஸமுபாச்ரிதா: ।
யயாசிரே குருத்தம் ஸான் ஆதத்மவித்யாம் மஹீயஸீம் ॥

ததச்ச தத்க்ருபாலப்த ப்ரம்ஹவித்யா: புவி ச்ருதா: ।
ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ரா: ததந்தேவாஸிநோSபவன் ॥

ப்ரம்ஹானுபவஸந்துஷ்டா: ப்ராபு: பிரம்ஹவிதாம் வரா: ।
பூத்வாSவதூதாஸ்தே சேந்தமங்கலக்ராமமுத்தமம் ॥



பின்பு அவர்கள் அகத்தியர் தங்கும் மலயத்தை விட்டுவிட்டு மானாமதுரை என்ற கிராமத்திற்கு வந்து மகிழ்வுடன் சில காலம் தங்கினார்கள். அப்போது ஸ்வயம் ப்ரகாச ப்ரம்மேந்திரர் அவர்கள் அந்த ஸதாசிவ ப்ரம்மேந்திர குருவை அணுகி, உயர்ந்த ஆத்ம வித்யையை உபதேசிக்கும்படி வேண்டினார். பின் அவர்கிருபையால் பிரம்ம வித்யையைப் பெற்று உலகத்தில் புகழ்பெற்ற ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்திரர், அவர்களுடைய சிஷ்யரானார். பிரம்ம வித்துக்களுக்குள்ளே சிறந்த, பிரம்மானுபவத்தில் மகிழ்ந்த அந்த ஸ்வயம்ப்ரகாச அவதூத ஸ்வாமிகள் உத்தமமான சேந்தமங்கல கிராமத்திற்கு வந்தனர்.

एतेषां बहवो ह्यासन् शिष्या योगिकुलोत्तमाः ।
यैः परित्रीकृता सद्भिः शुभैषा भरतावनिः ॥ ३३ ॥

स्वयंप्रकाशसुगुरोः तस्य शिष्येषु विश्रुताः ।
लब्धज्ञानाः कृपापूर्णाः शान्त्यादिगुणभूषिताः ॥ ३४ ॥

अवधूता जटाभरमाण्डिताः शातचेतसः ।
शान्तानन्दाभिधास्तावत् राजन्तेऽद्य महीतले ॥ ३५ ॥

ஏதேஷாம் பஹவோ ஹ்யாஸன் சிஷ்யா யோகிகுலோத்தமா: ।
யை: பவித்ரீக்ருதா ஸத்பி: சுபை'ஷா பரதாவனி: ॥

ஸ்வயம்ப்ரகாசஸுகுரோ: தஸ்ய சிஷ்யேஷு விச்ருதா: ।
லப்தஞானா: க்ருபாபூர்ணா: சாந்த்யாதிகுணபூஷிதா: ॥

அவதூதா ஜடாபாரமண்டிதா: சாந்தசேதஸ: ।
சாந்தானந்தாபிதாஸ்தாவத் ராஜந்தேSத்ய மஹீதலே ॥

இந்த சிறந்த பாரத பூமியை பரிசுத்தமாக்கும் திறனுள்ள யோகிகள் குலத்தில் சிறந்த பல சாதுக்கள் அன்னாருக்கு சிஷ்யர்களாயிருந்தனர். அந்த ஸ்வயம்ப்ரகாச குருவின் சிஷ்யர்களில் பிரஸித்தரும், ஞானம் பெற்றவரும், கிருபை நிறைந்தவரும் சாந்தி முதலிய குணங்கள் நிறைந்தவரும், அவதூதரும், சடை முடியினரும், தெளிந்த சிந்தையினருமாகிய ''சாந்தானந்த ஸ்வாமிகள்'' என்பவர் இப்போது பூமியில் பிரகாசித்துக் கொண்டு இருக்கின்றனர்.

बाल्ये वयस्येव विरक्तियुक्ताः
भुजङ्गमर्क्षाश्रित काननेषु ।
ब्रह्मैव सर्वं जगदीक्षमाणः
तपो महच्चक्रुरिमे यतीन्द्राः ॥ ३६ ॥

பால்யே வயஸ்யேவ விரக்தியுக்தா:।
புஜங்கமர்க்ஷாச்ரித கானனேஷு
ப்ரம்ஹைவ ஸர்வம் ஜகதீக்ஷமாணா:
தபோ மஹச்சக்ருரிமே யதீந்த்ரா: ॥

சிறுவயதிலேயே விரக்தி கொண்டவர்களும், உலகத்தை பிரம்மமயமாய் காண்பவர்களுமான இந்த ஸ்வாமிகள் பாம்பு, கரடி முதலியன வாசம் செய்யும் காடுகளில் இருந்து கொண்டு பெருந்தவம் செய்தனர்.

देवीसमाराधन लब्ध देवी-
मन्त्राः सदा तज्जपलग्नचित्ताः ।
प्रारब्धलब्धाशनतुष्टचित्ताः
वर्षान्बहून्निन्युरिमे जिताशाः ॥ ३७ ॥

தேவீ ஸமாராதன லப்த தேவீ
மந்த்ரா: ஸதா தஜ்ஜபலக்ன சித்தா:
ப்ராரப்த லப்தாசன துஷ்டசித்தா:
வர்ஷான் பஹூந் நின்யுரிமே ஜிதாசா: ॥

தேவியை ஆராதித்து, அதனால் தேவியின் மந்திரம் பெற்றவர்களாய் எப்போதும் தேவி மந்த்ர ஜபத்தில் ஈடுபட்ட மனத்தினர்களாய், ஆசையற்றவர்களாய், பிராரப்த வசத்தால் கிடைத்ததை உண்டு மகிழ்ந்த மனத்தினராய் இருந்து கொண்டு இந்த ஸ்வாமிகள் பல ஆண்டுகளைக் கழித்தனர்.

ततः कदाचिद् भुवनेश्वरि कृपा-
कटाक्षसंचोदित चित्तवृत्तयः ।



पुरोत्तमं श्रीनवसालसंज्ञकं
गुर्वाज्ञयैते यतयः समागताः ॥ ३८ ॥

தத: கதாசித் புவனேச்வரீக்ருபா
கடாக்ஷ ஸஞ்சோதித சித்த வ்ருத்தய:।
புரோத்தமம் ஸ்ரீ நவஸாவ ஸம்ஞ்ஞகம்
குர்வாஞ்ஞயைதே யதய: ஸமாகதா: ॥

பின்னொரு ஸமயம் புவனேச்வரீ தேவியின் கிருபா கடாக்ஷத்தினால் தூண்டப்பட்ட மனத்தினராய் இந்த ஸ்வாமிகள் குருவின் உத்தரவுப்படி புதுக்கோட்டை வந்தடைந்தனர்.

मन्त्रस्य सिद्धेः तपसः प्रकर्षात्
जनैस्समस्तैर्महिता बभूवुः ।
तस्मिन्पुरे श्रीनवसालसंज्ञे
हृष्टाश्च तस्थुः करपात्रभिक्षाः ॥ ३९ ॥

மந்த்ரஸ்ய ஸித்தே: தபஸ: ப்ரகர்ஷாத்
ஜனை: ஸமஸ்தைர் மஹிதா பபூவு:।
தஸ்மின் புரே ஸ்ரீ நவஸாலஸம்ஞ்ஞே
ஹ்ருஷ்டாச்ச தஸ்து: கரபாத்ரபிக்ஷா: ॥

மந்திர ஸித்தியாலும், தவத்தின் மேன்மையாலும் இவரை ஜனங்கள் கௌரவித்தனர். கையையே பாத்திரமாக் கொண்டு பிக்ஷை ஏற்று அப்புதுக் கோட்டையில் மகிழ்வுடன் தங்கினார்.

सदाशिवाख्यस्य यतेस्समाधौ
स्वयंप्रकाशाख्यगुरो र्निदेशात् ।
भक्तैरधिष्ठानमतीव रम्यं
प्रकल्पितं तत्र बभूव सद्भिः ॥ ॥ ४० ॥

ஸதாசிவாக்யஸ்ய யதேஸ் ஸமாதௌ
ஸ்வயம்ப்ரகாசாக்ய குரோர் நிதேசாத்।
பக்தைரதிஷ்டான மதீவ ரம்யம்
ப்ரகல்பிதம் தத்ர பபூவ ஸத்பி: ॥

புதுக்கோட்டையில் ஸதாசிவ ப்ரம்மேந்திரரின் ஸமாதியில் குரு ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளுடைய ஆணையினால் ஸாதுக்களான பக்தர்களால் மிக அழகிய அதிஷ்டானம் ஒன்று அங்கு ஏற்படுத்தப் பட்டிருருந்தது.

स्वयंप्रकाशाख्यगुरुत्तमानां
आज्ञावशाल्लोकहितार्थमेते ।
चक्रुः प्रतिष्ठां विधिवच्च दत्ता-
त्रेयस्य योगीन्द्रकुलेश्वरस्य ॥ ॥ ४१ ॥

ஸ்வயம்ப்ரகாசாக்யகுருத்தமானாம்
ஆஞ்ஞாவசாத் லோகஹிதார்த்தமேதே ।
சக்ரு: ப்ரதிஷ்டாம் விதிவச்ச தத்தா
த்ரேயஸ்ய யோகீந்த்ரகுலேச்வரஸ்ய ॥

இந்த சாந்தானந்த ஸ்வாமிகள் ஸ்வயம்ப்ரகாச குருவரர்களின் ஆணையினால் உலக க்ஷேமத்தைக் கருதி யோகி சிரேஷ்டர்களின் ஈசுவரனாகிய தத்தாத்ரேயரை பிரதிஷ்டை செய்தனர்.

उषुश्च तत्रैव चिरं महान्तः
तन्मूर्तिसेवा मुदितान्तरङ्गाः ।
सुविग्रहं श्रीभुवनाधिपायाः
सर्वोत्तमं कर्तुमिमे तदेषुः ॥ ४२ ॥

ஊஷுச்ச தத்ரைவ சிரம் மஹாந்த:
தன்மூர்த்திஸேவா முதிதாந்தரங்கா: ।
ஸுவிக்ரஹம் ஸ்ரீ புவனாதிபாயா:
ஸர்வோத்தமம் கர்த்துமிமே ததேஷு: ॥

தத்தாத்ரேய மூர்த்திக்குச் செய்யும் சேவையால் மகிழ்ந்த ஸ்வாமிகள் வெகுகாலம் அங்கேயே வஸித்தனர். அப்போது ஸ்ரீ புவனேச்வரீ தேவியின் மிக அழகிய விக்ரஹத்தைச் செய்யவும் ஸ்ரீ ஸ்வாமிகள் விரும்பினர்.



एतैस्ततो दत्तगृहस्य पार्श्वे
वेश्मातिहृद्यं जगदम्बिकायाः ।
सुशिल्पिनां भक्तततेश्च साह्यात् ।
विनिर्मितं स्वीयतपोबलाच्च ॥ ४३ ॥

ஏதைஸ்ததோ தத்தக்ருஹஸ்ய பார்ச்வே
வேச்மாதிஹ்ருதயம் ஜகதம்பிகாயா: ।
ஸுசில்பினாம் பக்தததேச்ச ஸாஹ்யாத்
வினிர்மிதம் ஸ்வீயதபோபலாச்ச ॥

பின் இந்த தத்தாத்ரேயரின் இருக்கைக்குப் பக்கத்திலே நல்ல சிற்பிகள் பக்தர்கள் இவர்களுடைய உதவியினாலும் தன்னுடைய தவ வலிமையினாலும் ஸ்வாமிகளால் ஸ்ரீ புவனேச்வரீ ஜகன்மாதாவுக்கு ஒரு மனத்திற்கினிய இருக்கை அமைக்கப் பெற்றது.

तन्मन्दिरं गोपुरमण्डपोज्वलं
माता मणिद्वीपनिवासिनी स्वयम् ।
उपेत्य भूलोकनिवासिनां सदा
दातुं वरान्जातकृपाऽधितिष्ठति ॥ ४४ ॥

தன்மந்திரம் கோபுரமண்டபோஜ்வலம்
மாதா மணித்வீப நிவாஸினீ ஸ்வயம் ।
உபேத்ய பூலோக நிவாஸினாம் ஸதா
தாதும் வரான் ஜாதக்ருபாऽதிதிஷ்டதி ॥

கோபுர மண்டபங்களுடன் திகழும் அந்த வாஸஸ் தலத்திற்கு மணித்வீபத்தில் நித்ய வாசம் செய்யும் ஸ்ரீ புவனேச்வரி தேவீ, தானகவே வந்து, பூலோக வாஸிகளுக்கு வரமருள க்ருபை கொண்டு எப்போதும் இங்கே தங்கியிருக்கின்றாள்.

पद्मे निषण्णा वरदाऽभयाभ्यां
पाशांकुशाभ्यं च लसत्कराब्जा ।
स्मितोल्लसत्सौम्यमुखी त्रिनेत्रा ।
विराजते सा वरदा सदैव ॥ ४५ ॥

பத்மே நிஷண்ணா வரதாऽபயாப்யாம்
பாசாங்குசாப்யாம் ச லஸத் கராப்ஜா ।
ஸ்மிதோல்லஸத் ஸௌம்யமுகீ த்ரிநேத்ரா
விராஜதே ஸா வரதா ஸதைவ ॥

வரம், அபயம், பாசம், அங்குசம் இவை திகழும் கரத்தாமரைகளுடனும், புன் சிரிப்புத் திகழும் அழகிய முகத்துடனும், மூன்று கண்களுடையவளாய் தாமரை மலர்மீது நித்தம் வரமருளிக் கொண்டிருக்கின்றாள்.

एवं प्रभावां भुवनेश्वरीं तां
प्रतिष्ठितां चक्रुरथादरेण ।
कुम्भाभिषेकं विधिवच्च कृत्वा
स्वयं कृतार्थाश्च बभूवुरेते ॥ ४६ ॥

ஏவம் ப்ரபாவாம் புவனேச்வரீம் தாம்
ப்ரதிஷ்டிதாம் சக்ருரதாதரேண ।
கும்பாபிஷேகம் விதிவச்ச க்ருத்வா
ஸ்வயம் க்ருதார்த்தாச்ச பபூவுரேதே ॥

பின் இவ்வாறான மஹிமையுடைய அந்த புவனேச்வரியை ஆதரவுடன் ப்ரதிஷ்டை செய்தனர். முறைப்படி கும்பாபிஷேகம் செய்து ஸ்ரீ ஸ்வாமிகள் தான் செய்யவேண்டியதைச் செய்தவராயினார்.

अव्याजकरुणापूर्णाः शान्तानन्द यतीश्वराः
साधूनां पूर्वपुण्यौघैः नूनं जाताः कलौ युगे ॥ ४७ ॥

அவ்யாஜகருணாபூர்ணா சாந்தானந்த யதீச்வரா: ।
ஸாதூனாம் பூர்வ புண்யௌகை: நூனம் ஜாதா: கலௌ யுகே ॥

கருணை நிறைந்த ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் நல்லோர் செய்த பூர்வ புண்ணியத்தாலே இக்கலியில் தோன்றி உள்ளனர்.



# बहुविधयज्ञाद्यनुष्ठानम्
## வேள்விகள் பல புரிந்தது

दत्तात्रेयं प्रतिष्ठाप्य तत्पुरस्ताद्यतीश्वराः ।
दत्तात्रेयमहामन्त्रैः तक्रुहोमं द्विजावृताः ॥ १ ॥

தத்தாத்ரேயம் ப்ரதிஷ்டாப்ய: தத்புரஸ்தாத் யதீச்வரா: ।
தத்தாத்ரேய மஹாமந்த்ரை: சக்ருர் ஹோமம் த்விஜாவ்ருதா: ॥

ஸ்வாமிகள் அந்தனர்களுடன் கூட ஸ்ரீ தத்தாத்ரேயரைப் பிரதிஷ்டை செய்து, அந்த தத்தாத்ரேயருக்கு எதிரில் தத்தாத்ரேய மஹாமந்த்ரங்களால் ஹோமமும் செய்தனர்.

श्रीमन्महागणपतेः प्रीतिकरं लक्षहोममथ चक्रुः ।
सर्वार्थसिद्धिजनकं लोकक्षेमाय षोडशद्रव्यैः ॥ २ ॥

ஸ்ரீமந்மஹாகணபதே: ப்ரீதிகரம் லக்ஷஹோமமத சக்ரு: ।
ஸர்வார்த்த ஸித்திஜனகம் லோகக்ஷேமாய ஷோடசத்ரைவ்யை: ॥

பின்னர் லோகக்ஷேமத்தை முன்னிட்டு பயன்கள் அனைத்தையும் அளிக்கக் கூடியதும், மஹாகணபதிக்குத் திருப்தி அளிக்கக் கூடியதுமான "மஹாகணபதி லக்ஷ ஹோமத்தை" பதினாறு திரவியங்களைக் கொண்டு செய்தனர்.

पापापहं सर्वसमृद्धिहेतुं
होमं महारुद्रमिति प्रसिद्धम् ।
सर्वस्य लोकस्य हिताय चक्रुः
सह द्विजैः वेदविदां वरिष्ठैः ॥ ३ ॥

**பாபாஹம் ஸர்வஸம்ருத்திஹேதும்
ஹோமம் மஹாருத்ரமிதி ப்ரஸித்தம் ।

★ 15-8-57ல் இந்த ஹோமம் செய்யப்பட்டது
★★ 20-5-58ல் இந்த யஞ்யம் நடத்தப்பட்டது.

ஸர்வஸ்ய லோகஸ்ய ஹிதாய சக்ரு:
ஸஹ த்விஜை: வேதவிதாம் வரிஷ்டை: ॥

ஸ்ரீ ஸ்வாமிகள், பாபம் போக்கக் கூடியதும், எல்லா வளங்களையும் அளிக்கக் கூடியதுமான "மஹாருத்ரம்" என்ற பிரஸித்தமான ஹோமத்தை உலக நன்மையைக் கருதி வேத வல்லுனர்களான அந்தணர்களுடன் கூடிச் செய்தனர்.

ग्रहजनितदोषमखिलं दूरिकर्तुं समुद्यता एते ।
लक्षनवग्रहहोमं चक्रु विधिवद्विचक्षणैस्सहिताः ॥ ४ ॥

★ க்ரஹஜனித தோஷமகிலம் தூரீகர்த்தும் ஸமுத்யதா ஏதே ।
லக்ஷ நவக்ரஹஹோமம் சக்ருர் விதிவத் விசக்ஷணைஸ் ஸஹிதா: ॥

க்ரஹங்களால் உண்டான தோஷங்கள் அனைத்தையும் போக்கடிப்பதற்கு ஊக்கம் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள், வித்வான்களுடன் கூட லக்ஷ நவக்ரஹ ஹோமத்தை" யும் முறைப்படிச் செய்தனர்.

तदनु च गणपतिहोमं विघ्नहरं चार्थसाधकं नृणाम् ।
रुद्रैकादशनीमपि चक्रुः श्रीसूक्तहोममपि शुभदम् ॥ ॥ ८ ॥

★ ★ததனு ச கணபதிஹோமம் விக்னஹரம் சார்த்த ஸாதகம் ந்ருணும்।
ருத்ரைகாதசினீமபி சக்ரு: ஸ்ரீ ஸூக்தஹோமமபி சுபதம் ॥

பின்னர் விக்னங்களைப் போக்கி, விரும்பியதைக் கொடுக்கும் கணபதி ஹோமத்தையும், ருத்ரைகாதசினீ ஹோமத்தையும், மங்களத்தை நல்கும் ஸ்ரீஸூக்த ஹோமத்தையும் செய்தனர்.

भुवनेश्वरीप्रतिष्ठा दिनमारभ्याथ नित्यचण्ड्याख्यम् ।
कृत्वा होममकार्षुः शतचण्ड्याख्यं मखं च सन्तुष्टाः ॥ ६ ॥

★★★புவனேச்வரீப்ரதிஷ்டாதின மாரப்யாத நித்யசண்ட்யாக்யம் ।
க்ருத்வா ஹோமமகார்ஷு: சதசண்ட்யாக்யம் மகம் ச ஸந்துஷ்டா: ॥

★ 10 - 5 - 1959ல் இந்த வேள்வி நடத்தப்பட்டது.
★★ இவை 1960 - 1961ம் ஆண்டுகளில் நடத்தப் பெற்றன.
★★★ 6 - 6 - ஐல் இவை நடத்தப்பெற்றன.



பின் புவனேச்வரீ ப்ரதிஷ்ட செய்த தினம் முதற் கொண்டு (ஒரு மண்டலம்) நித்ய சண்டீ ஹோமம் செய்து, பின் சத சண்டீயக்ஞத்தையும் மகிழ்வுன் நடத்தினர்.

एते पुनर्लोहितैक सक्ताः
सहस्रचण्डीप्रमुखांस्तु यज्ञान् ।
ऋत्विग्भिरत्युन्नत शीलविद्यैः
वित्तैरियत्तारहितै रकार्षुः ॥ ७ ॥

★ ஏதே புனர்லோகஹிதைக ஸக்தா:
ஸஹஸ்ரசண்டீ ப்ரமுகாம்ஸ்து யஞ்ஞான்।
ருத்விக்பி ரத்யுன்னத சீலவித்யை:
வித்தைரியத்தாரஹிதை ரகார்ஷு: ॥

மீண்டும் உலக நன்மையில் ஈடுபாடு கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் உயர்ந்த ஒழுக்கம் கல்வி இவைகள் நிறைந்த ரித்துவிக்குகளுடன் (ஹோமம் செய்யும் உதவியாளர்) எல்லையற்ற திரவியங்களைக் கொண்டு ஸஹஸ்ரசண்டீ" முதலிய யக்ஞங்களைச் செய்தனர்.

दृष्ट्वा सहस्रचण्डी यज्ञमसाध्यं च राजभिश्चापि ।
शान्तानन्दयतीशैः कृतमवनौ श्लाघते स्म सर्वोपि ॥

த்ருஷ்ட்வா ஸஹஸ்ரசண்டீ யஞ்ய மஸாத்யம் ச ராஜபிஸ்ச்சாபி।
சாந்தானந்தயதீசை: க்ருதமவனௌ ச்லாகதேஸ்ம ஸர்வோபி ॥

ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளால் செய்யப்பட்ட, அரசர்களாலும் கூட நடத்தமுடியாத "ஸஹஸ்ர சண்டீ யஞ்ஞத்" தைக் கண்டு அனைவரும் கொண்டாடினர்.

श्रीसूक्तमन्त्रघटितैः गणपतिमन्त्रैश्च लक्षहोमं तम् ।
कृत्वा लक्ष्मीगणपं तृप्तं चक्रुश्च विघ्नशान्त्यर्थम् ॥ ॥ ९ ॥

★ ★ ஸ்ரீ ஸூக்தமந்த்ரகடிதை: கணபதி மந்த்ரைச்ச லக்ஷஹோமம் தம்।
க்ருத்வா லக்ஷ்மீகணபம் த்ருப்தம் சக்ருச்ச விக்னசாந்த்யர்த்தம் ॥

★ 25-5-63ல் இவ்வேள்வி நடத்தப்பட்டது.
★★ 22 - 5 - 64ல் இந்த ஹோமம் நடந்தது.

இடையூறின்றி இருப்பதற்காக, ஸ்ரீ ஸூக்தமந்த்ர ஸம்படிதமான கணபதி மந்த்ரங்களால் லக்ஷஹோமம் செய்து ஸ்ரீ லக்ஷ்மீ கணபதியையும் திருப்பட்டைச் செய்தனர்.

श्रीभुवनेशीमातुः कृपाया संचोदितास्ततोऽतन्वन् ।
मुदिताश्च कोटिमनुभिः भुवनेश्वर्याः शुभं महायज्ञम् ॥ १० ॥

★ஸ்ரீ புவனேசீமாது: க்ருபயா ஸஞ்சோதிதாஸ் ததோऽதன்வன்
முதிதாச்ச கோடிமனுபி: புவனேச்வர்யா: சுபம் மஹாயஞ்ஞம் ॥

பின்பு புவனேச்வரீமாதாவின் க்ருபையால் தூண்டப் பெற்றவர்களாய் "ஸ்ரீ புவனேச்வரீ கோடி மந்த்ர மஹாயஞ்ஞத்" தையும் மகிழ்வுடன் விஸ்தாரமாகச் செய்தனர்.

श्रीमत्पूर्णमहामेरु श्रीचक्रं तु प्रतिष्ठितम् ।
विधाय शतचण्डयाख्यं अकुर्वन्महितं मखम् ॥ २२ ॥

★★ ஸ்ரீமத் பூர்ண மஹாமேரு ஸ்ரீசக்ரம்து பிரதிஷ்டிதம்।
விதாய சதசண்ட்யாக்யம் அகுர்வன் மஹிதம் மகம் ॥

ஸ்ரீ பூர்ணமஹாமேரு ஸ்ரீ சக்ரத்தை பிரதிஷ்டை செய்து சிறந்த சதண்டீ யஞ்ஞத்தை" யும் செய்தனர்.

कोटयर्चनापर्यवसानकाले
मखोत्तमं श्रीजगदम्बिकायाः ।
अनन्यसाध्यं स्वतपोबलेन
विधाय चैते मुदिता बभूवुः ॥ १२ ॥

★★★ கோட்யர்சனா பர்யவஸானகாலே
மகோத்தமம் ஸ்ரீ ஜகதம்பிகாயா:।
அனன்யஸாத்யம் ஸ்வதபோபலேன
விதாய சைதே முதிதா பபூவு: ॥

★ 5 - 6 - 65 முதல் 8 - 5 - 65 வரை இவ்வேள்வி நடந்தது.
★★ 30 - 5 - 66ல் இது நடத்தப்பட்டது.
★★★ 24 - 2 - 67 முதல் 3 - 6 - 67 வரை இந்த ஹோமம் நடத்தப்பட்டது.



ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ புவனேச்வரி கோடி அர்ச்சனை முடியும் தருவாயில் ஸ்ரீ ஜகன்மாதாவுக்கு மற்றவர்களால் சாதிக்க முடியாத ஒரு சிறந்த வேள்வியை (புவனேச்வரி கோடியர்ச்சனை ஹோமத்தை) தன் தபோ பலத்தால் செய்து முடித்தனர்.

परमन्त्र-यन्त्रकृत्या रोगघ्नं चक्ररूपधरविष्णोः ।
प्रतिकरं च सुदर्शनहोमं कर्तुं मतिर्बभूवैषाम् ॥

பரமந்த்ர யந்த்ர க்ருத்யா ரோகக்னம் சக்ரரூபதரவிஷ்ணோ
ப்ரீதிகரம் ச ஸுதர்சன ஹோமம் கர்த்தும் மதிர் பபூவைஷாம்

(உரை) பிறரால் ஏவப்பட்ட மந்த்ரம், யந்திரம், ஏவல், ரோகம் இவைகளை அழிக்க கூடியதும், சக்ர ரூபமான மஹா விஷ்ணுவுக்குத் திருப்தியளிக்கக் கூடியதுமான ஸுதர்சன ஹோமத்தையும் செய்யும் எண்ணம் இவர்களுக்கு உதித்தது.

भुवनेश्वर्याः पुरतो भक्तजनानां हिताय यतिवर्याः ।
क्षामक्षोभभयापह होमं चक्रुः सुदर्शमाभिख्यम् ॥ १४ ॥

★புவனேச்வர்யா: புரதோ பக்தஜனனாம் ஹிதாய யதிவர்யா:।
க்ஷாமக்ஷோப பயாபஹ ஹோமம் சக்ரு: ஸுதர்சனாபிக்யம் ॥

புவனேச்வரீ தேவிக்கு முன்பு பக்தர்களின் நன்மையைக் கருதி இந்த ஸ்வாமிகள் துர்பிக்ஷம், கலகம், இவைகளைப் போக்கும் "ஸுதர்சன ஹோமத்தை" நடத்தினர்.

लक्षसुदर्शनमन्त्रैः होमं विष्णोः प्रियंकरं कृत्वा ।
इच्छोदभूदमीषां कर्तु तत्रैव शूलिनी होमम् ॥ १५ ॥

லக்ஷஸுதர்சன மந்த்ரை: ஹோமம் விஷ்ணோ: ப்ரியங்கரம் க்ருத்வா।
இச்சோதபூதமீஷாம் கர்த்தும் தத்ரைவ சூலினீ ஹோமம் ॥

விஷ்ணுவுக்கு ப்ரீதியை உண்டாக்கும் சுதர்சன லக்ஷஹோமத்தை முறைப்படி முடித்தவுடன் இவர்களுக்கு அவ்விடத்திலேயே சூலினீ ஹோமத்தையும் செய்ய அவா உண்டாயிற்று.

★4 - 6 - 68 முதல் 6 - 6 - 68 முடிய இந்த ஸுதர்சன ஹோமம் நடந்தது.

त्रिपुराणां तु संहारे या महेशस्य पार्श्वतः ।
अतिष्ठच्छूलमादाय साह्यं कर्तुं समुद्यता ॥ १६ ॥

यस्याः सहायतः शीघ्रं विजित्य त्रिपुरासुरान् ।
पुरारिरिति लोकेषु पप्रथे परमेश्वरः ॥ १७ ॥

तस्यास्तु शूलिनी देव्याः सन्तोषजनकः शुभः ॥
रक्षाकरश्च सर्वेषां सर्वदुःखनिवारकः ॥ २८ ॥

शूलिनीमनुभिः शान्तिदुर्गा मनुपुटीकृतैः ।
विहितः शूलिनीयज्ञः लक्षाहुतिभिरुज्वलः ॥ १९ ॥

पुरतो भुवनेश्वर्याः मन्त्रविज्जनसंवृतैः ।
यथाशास्त्रं च योगीन्द्रैः एतैर्देवीप्रसादतः ॥ ॥ २० ॥

*த்ரிபுராணாம் து ஸம்ஹாரே யா மஹேசஸ்ய பார்ச்வத:।
அதிஷ்டச்சூலமாதாய ஸாஹ்யம் கர்த்தும் ஸமுத்யதா॥

யஸ்யா: ஸஹாயத: சீக்ரம் விஜித்ய த்ரிபுராஸுரான்।
புராரிரிதி லோகேஷு பப்ரதே பரமேச்வர:॥

தஸ்யாஸ்து சூலினீதேவ்யா: சந்தோஷஜனக: சுப:।
ரக்ஷாகரச்ச ஸர்வேஷாம் ஸர்வதுக்கநிவாரக:॥

சூலினிமனுபி: சாந்திதுர்கா மனுபுடீக்ருதை:।
விஹித: சூலினீயஞ்ஞ: லக்ஷாஹுதிபிருஜ்வல:॥

புரதோ புவனேச்வர்யா: மந்த்ரவிஜ்ஜன ஸம்வ்ருதை:।
யதாசாஸ்த்ரம் ச யோகீந்த்ரை: ஏதைர் தேவீப்ரஸாதத:॥

த்ரிபுரஸம்ஹார காலத்தில் எவள் மஹேச்சவரனுடைய பக்கத்தில் சூலமேந்தி உதவும் முயற்சியுடன் நின்றாளோ, எவளுடைய உதவியால் விரைவில் த்ரிபுரர்களை வென்று மஹேசன் உலகில் புராரி என்று

*-5-69ல் இந்த சூலினீ யக்ஞம் நடத்தப்பட்டது.



புகழ்பெற்றாரோ, அந்த சூலினீ தேவிக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணக் கூடியதும், சிறந்ததும் எல்லோருக்கும் காப்பு அளிக்கக் கூடியதும், அனைத்து துக்கங்களையும் போக்கக் கூடியதும், லக்ஷாஹுதிகளாலும் சாந்தி துர்கா மந்த்ரத்தால் ஸம்புடீகரணம் செய்யப்பட்ட சூலினீ மந்த்ரங்களாலும் பிரகாசிக்கின்றதுமான "சூலினீ யக்ஞம்" புவனேச்வரி தேவிக்கு முன்பாக, மந்திரம் அறிந்தவர்களுடன் இந்த ஸ்வாமிகளால் சாஸ்திர முறைப்படி தேவியின் திருவருளால் நடத்தப்பட்டது.

यस्याः कटाक्षपातात् अकिचनः सार्वभौमतां याति ।
लभते कीर्तिं महितां लोकेड्यत्वं मतिप्रकर्षं च ॥ २१ ॥

अपराधिनोऽपि भक्तान् अनुगृह्णाति स्वयं कृपामूर्तिः ।
या श्रीस्तस्या स्तृप्त्यै लक्ष्मीहोमं च चक्रिरे विधिवत् ॥ २२

शास्त्रप्रोक्त द्रव्यैः लक्षाहुतिभिः प्रशोभमानं तम् ।
दृष्ट्वा यज्ञं सर्वे प्रशशंसुः योगिवर्य मतिहृष्टाः ॥ २३ ॥

யஸ்யா: கடாக்ஷபாதாத் அகிம்சன: ஸார்வபௌமதாம் யாதி।
லபதே கீர்த்திம் மஹிதாம் லோகேட்யத்வம் மதிப்ரகர்ஷம் ச॥

★அபராதினோபி பக்தான் அனுக்ருண்ஹாதி ஸ்வயம் க்ருபாமூர்த்தி:
யா ஸ்ரீ: தஸ்யாஸ்த்ருப்த்யை லக்ஷ்மீஹோமம் ச சக்ரிரே விதிவத்॥

சாஸ்த்ர ப்ரோக்தைர் த்ரவ்யை: லக்ஷாஹுதிபி: ப்ரசோபமானம் தம்।
த்ருஷ்ட்வா யஞ்ஞம் ஸர்வே ப்ரசசம்ஸுர் யோகி
வர்யமதிஹ்ருஷ்டா:॥

எவளுடைய கடாக்ஷத்தால் ஏழை சக்ரவர்த்தி ஆகின்றானோ, சிறந்த கீர்த்தியையும், உலகின் போற்றுதலையும், மேதாவிலாஸத்தையும் பெறுகிறானோ; க்ருபாமூர்த்தியான எவள் தவறிழைத்தவர்களாயினும் அந்த பக்தர்களை அனுக்ரஹிக்கின்றாளோ, அந்த லக்ஷ்மீயின் திருப்தியை விரும்பி முறைப்படி "லக்ஷ்மீ ஹோமமும்" செய்தனர். சாஸ்திரத்தில்

★17-5-1970 முதல் இந்த ஹோமம் நடத்தப்பட்டது. இந்த ஸமயத்தில் ஸ்ரீ முத்துஸ்வாமி சாஸ்திரிகளால் (இந்நூலாசிரியர்) "லக்ஷ்மீ" என்ற ஒரு நூலும் வெளியிடப்பட்டது.

கூறப்பட்ட திரவியங்களினாலும், லக்ஷம் ஆஹுதிகளாலும் பிரகாசிக்கின்ற அந்த யஞ்ஞத்தைக் கண்டு அனைவரும் மகிழ்ந்தவர்களாய் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளைப் புகழ்ந்தனர்.

### "மஹா லக்ஷ்மீ"

அனந்தகோடி பிரம்மாண்டங்களை ஈன்றெடுத்தவள் ஸ்ரீ புவனேசுவரீஜகன் மாதா. இவளைப் பராசக்தி என்றும், மஹா மாயா என்றும், பிரக்ருதி என்றும் தேவீ பாகவதம் அழைக்கும். ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் கூட்டமாய் திகழும் மஹா மாயா புவனேச்வரீ தேவியே உலகை ஆக்கும் போது ரஜோ குணங்கொண்டவளாய் ஸரஸ்வதி என்ற பெயர் கொண்டு ப்ரம்மதேவனின் சக்தியாய் திகழுகின்றாள். உலகைக் காக்கும்போது ஸத்துவ குணங்கொண்டவளாய் லக்ஷ்மீ என்று பெயர் பெற்று விஷ்ணுவின் சக்தியாய் விளங்குகின்றாள். உலகை அழிக்கும் போது தாமஸ குணத்துடன் கூடியவளாய் பார்வதீ என்ற பெயர் தாங்கி ஈசுவரனின் சக்தியாய் அமைகிறாள். ஆதிசங்கர பகவத்பாதர் அவர்கள்.

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागविदः
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयां ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीम महिमा
महामाये विश्वं भ्रमयसि परब्रह्ममहिषि ॥

என்பதால் இதை நன்கு விளக்கியுள்ளார்கள்.

### ஹ்ரீங்காரம் கூறும் ஆதிசக்தி

இந்த ஸத்வகுணமுள்ள விஷ்ணுவின் சக்தியான மஹாலக்ஷ்மியே

सर्वस्याद्या महालक्ष्मीः वरेण्या शक्तिरुत्तमा

முப்பெருஞ் சக்திகளில் முதன்மையான சக்தியாய் கருதப் படுகின்ற. இந்த மஹாலக்ஷ்மியே மஹிஷாஸுரனைக் கொல்வதற்காக, தேவர்களின் ப்ரார்த்தனைக் கிணக்க, சிவன் முதலான முப்பத்து முக்கோடி



தேவர்களின் தேஜஸ்களினின்றும் உதயமானாள். பல்வேறு ஆயுதங்களும் 18 கரங்களும் கொண்டு சிம்ம வாஹனமேறி மஹிஷனைக் கொன்று உலகங்களுக்கு மகிழ்ச்சியளித்தாள். இவளே ஹ்ரீம் என்ற மஹாமந்த்ரத்தின் பொருளாய் கூறப்பட்டிருக்கிறாள் - இவளுடைய பெருமையை தேவீ பாகவதமும் ஸப்தசதீயும் மிகச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன. இந்த மஹாலக்ஷ்மியே பல பிரம்மாண்டங்களிலுள்ள லக்ஷ்மீதேவிகளுக் கெல்லாம் ஸமஷ்டியாய் விளங்குகின்றாள். மந்த்ர சாஸ்திரங்களில் தசமஹாவித்யைகளில் இடம் பெற்றவளாய் உள்ளவளும் இந்த மஹாலக்ஷ்மியே. ஆகவே இந்த மஹாலக்ஷ்மீயின் அம்சமானவர்களே ஒவ்வொரு பிரம்மாண்டத்திலுமுள்ள விஷ்ணு சக்தியான லக்ஷ்மீக்கள் என்று தெரிகின்றது.

### லக்ஷ்மீ கடாக்ஷம்.

உலகைக் காக்கும் தெய்வமான விஷ்ணுவின் மார்பில் உறையும் லக்ஷ்மீ உலக மக்களுக்கு ஸந்தானம், வாஹனம், தனம், தான்யம், ராஜ்யம், ஸௌபாக்யம், வெற்றி இவைகளை தன் திவ்ய கடாக்ஷத்தினால் அளிக்கின்றாள். அவளருளால் தனம் கிடைக்கும். தனம் உள்ளவன் தானும் வாழ்ந்து பிறரும்வாழ உதவுகிறான். தன முள்ளவனுக்கு புகழ், மக்களிடையே மரியாதை, மனத்திற்குகந்த வாழ்வு, அறிவுபெற வசதி, உடலிலே வனப்பு இவை எல்லாம் கிடைக்கின்றன. தர்மம் செய்து புண்ணியம் சம்பாதிப்பதற்கும் இல்லறத்தில் இன்பம் காண்பதற்கும் நியாயமாய் தேடிய பணமே உதவிபுரிகின்றது. குறைகள் பல இருப்பினும் தனம் அவைகளை மறைத்து குணங்காட்டும் சக்தியாய் இருக்கிறது. கற்றோரும் மற்றோரும் தனமுள்ளவனைச் சார்ந்தே வாழ வேண்டியிருக்கின்றது.

यस्यार्थाः तस्य मित्राणि यस्यार्थाः तस्य बान्धवाः
सर्वे गुणाः कांचनमाश्रयन्ति

என்ற பழமொழிகள் இதற்குச் சான்றாகும்.

பொருளில்லார்க்கு, இவ்வுலகில் இன்பமில்லை, மறுபிறவியில் இன்பமளிக்கும், புண்ணியும் சேர்வதில்லை. தேவையான கீர்த்தியில்லை. மனித குலத்தின் நடுவில் புகழில்லை. நினைத்த

காரியத்தை முடிக்கவும் சக்தியில்லை. நல்லகதி பெறுவதற்கான வழியுமில்லை.

"பொருளில்லார்க் கின்பமில்லை புண்ணியமில்லை என்றும்

மறுவுறு கீர்தியில்லை மாந்தருட் பெருமையில்லை.

கருதிய கருமமில்லை கதிபெறுவழியுமில்லை

பெறுநிலத்திடை நடக்கும் பிணமெனப் படுவரன்றே" என்கிறார் ஒரு கவி.

இந்த லக்ஷ்மீ கடாக்ஷத்தால் பெறும் பேறுகளை வேங்கடாத்வரீ என்ற பெரும் புலவர் லக்ஷ்மீ ஸஹஸ்ரம் என்ற நூலில்.

शुचौ वंशे जन्म श्रुतिनयमतिर्मातरतुला
विकंपासंपत्तिः विशदमविगीता च कविता ।
प्रसक्तिर्दैत्यारौ हितपरमरमपत्यं शुभयशः
विवर्ताः सप्तामी ध्रुवमसदृशां तावकदृशा ॥

* அம்மா! நற்குடிப் பிறப்பும், வேதங்களிலும் தர்க்க சாஸ்திரத்திலும் நுண்ணறிவும், அழியாத ஸம்பத்தும், குற்றமற்ற கவிதையும், விஷ்ணுவினிடத்தில் ஈடுபாடும், அன்மிக்க தனயனும், நற்கீர்த்தியும் உன் இணையற்ற திருநோக்கின் விளைவுகளே" என்று குறிப்பிட்டிருக்கின்றார்.

அதே கவி "கடாக்ஷ ஸ்தபகம்" என்ற மற்றொரு பகுதியில்

क्षमाकुमारि क्षणमीक्षणं ते यदृच्छया न्यस्यसि यत्र जन्तौ ।
स ईक्षणानां त्रयमष्टकं वा सहस्रकं वा सहसादधाति ॥

वीक्षितानि तव वारिधिकन्ये यत्र पालितजगन्ति लगन्ति ।
चित्रमत्र स परत्र देही देही शब्दमपहाय चकास्ति ॥

அம்மா ! எதிர்பாராதவிதமாக உன் பார்வை எவன்மீது விழுகின்றதோ, அவன் முக்கண்ணனாகவோ, எண் கண்ணனாகவோ,



ஆயிரம் கண்கள் உடையவனாகவோ, ஆகிவிடுகின்றான். (அதாவது ருத்ரனாகவோ பிரம்மதேவனாகவோ இந்திரனாகவோ இருக்கும் பாக்யம் பெற்றுவிடுகிறான்). அம்மா ! உலகைக் காக்கும் உன் திருநோக்கு எவன் மீது விழுகின்றதோ அவன் இம்மையிலும் மறுமையிலும் "தேஹி" என்ற சொல்லுக்கு ஆளாகாமல் விளங்குகின்றான். (தேஹி = என்றால் கொடு என்றும். சரீர முடையவன் என்றும் பொருள். உன் திருவருள் பெற்றவருக்கு பிறரிடம் யாசகம் கேட்காதவாறு செல்வமளித்து விடுகிறாய். அவ்வாறே மறுபிறவி எடுக்காவாறு முக்தியும் கொடுத்து விடுகின்றாய் என்பது கருத்து).

## அஷ்ட லக்ஷ்மீக்கள்

இந்த லக்ஷ்மீ ஆதிலக்ஷ்மீ, ஸந்தான லக்ஷ்மீ, கஜ லக்ஷ்மீ, தன லக்ஷ்மீ, தான்ய லக்ஷ்மீ, ராஜ்ய லக்ஷ்மீ, ஸௌபாக்ய லக்ஷ்மீ, வீரலக்ஷ்மீ என்று எட்டு விதமான உருவங்கள் கொண்டு உலகுக்கு அருளுகின்றாள். இவளுடைய திவ்ய மூர்த்தி பேதங்களை இங்கு காண்போம்.

**1. ஆதிலக்ஷ்மீ**

वराभयालंकृत पाणिपद्मां पद्मे स्थितां कण्ठधृताब्जमालां ।
पार्श्वद्वये भासुरदीप शक्तिद्वयांचितां नौम्यहमादिलक्ष्मीम् ॥

வரம் அபயம் தாங்கும் திருக்ரத்தினளாய், தாமரை மலர் மாலை அணிந்த கழுத்தினளாய், இரு பக்கங்களிலும் இரு தீபசக்திகளால் அலங்கரிக்கப் பட்டவளாய் தாமரை மலரில் வீற்றிருப்பாள் ஆதிலக்ஷ்மீ.

**2. ஸந்தான லக்ஷ்மீ**

सन्तानलक्ष्मीं जलपूर्णकुंभखड्ग तथभीति शिशू कराब्जैः ।
मुदा वहन्तीं धृतदीपशक्ति द्वन्द्वोपजुष्टां प्रभजेऽब्जनिष्ठाम् ॥

ஜலம் நிறைந்த குடம், கத்தி, அபயம் சிசு இவைகளை நான்கு கரங்களால் தரித்தவளும், இரண்டு தீப சக்திகளால் அலங்கரிக்கப் பட்டவளும், தாமரை மலரில் வீற்றிருப்பவளும் ஸந்தானலக்ஷ்மீ எனப்படுகின்றாள்.

3. கஜ லக்ஷ்மீ

गजश्रियं नौमि करैस्सरोजे वराभये चापि सदा वहन्ती ।
गजोत्तमाभ्यां जलपूर्णहेमकुंभद्वयेनाप्यभिषिच्यमानाम् ॥

இரண்டு கைகளில் இரு தாமரை மலர்களையும், இரண்டு கைகளில் வராபயங்களையும் தாங்கிக் கொண்டிருப்பவளும், ஜலம் நிறைந்த இரண்டு ஸ்வர்ண கலசங்களால் இரண்டு யானைகளால் அபிஷேகம் செய்விக்கப் படுகின்றவளும் கஜலக்ஷ்மி எனப்படுவாள். மஹாலக்ஷ்மியின் இருபுறங்களிலுமுள்ள இரண்டு வெள்ளை யானைகளும் அஹங்கார மமகாரங்களாகும். அதன் துதிக்கையில் உள்ள குடங்கள் ப்ரீதி, ஆசை என்பனவாகும் என்று ஸ்ரீ சூக்தத்திற்கு உரைகண்ட வித்யாரண்ய ஸ்வாமிகள் விளக்கம் தந்திருக்கின்றார்கள்.

4. தனலக்ஷ்மி

शंखं च चक्रं घट पद्मचाप शारान्करण्डं च तथाऽभयं च ।
समुज्वलैः पाणितलैर्दधानां सेवे सुवर्णां धनदां च लक्ष्मीम् ॥

சங்கம் சக்ரம் குடம் தாமரை மலர் வில் அம்பு கூடை அபயம் இவற்றைத் தாங்கும் எண் கரத்தினளும் தங்கம் போன்ற திருமேனியுடையவளும் தனலக்ஷ்மீ என்றழைக்கப் படுகின்றாள்.

5. தான்யலக்ஷ்மீ

वराभये पंकजमिक्षुदण्डं करैश्चतुर्भिर्दधतीमुपासे ।
शाल्यादिसस्यैः कदलीद्रुमैश्च वृतां शुभैर्धान्यकरीं श्रियं च ॥

வரம் அபயம் தாமரை மலர் கரும்பு இவைகளைத் தரிக்கும் நான்கு திருக்கரமுடையவளும், சம்பாப்பயிர், வாழை மரங்கள் முதலியவற்றால் சூழப் பட்டவளாயும், தான்யச் செல்வத்தை அளிப்பவளாயும் இருப்பவள் தான்யலக்ஷ்மீ யாவாள்.

6. ராஜ்ய லக்ஷ்மீ

चक्रं च शंख वरदाभये च पाशंकुशौ चाप्यसि खेटके च ।
हस्तैदधानां नृपरुपरम्यां सिंहासनस्थां विजयां स्मरामि ॥



சக்ரம், சங்கம், வரம், அபயம், பாசம், அங்குசம், கத்தி, கேடயம் இவற்றை எட்டுக் கரங்களால் தரிகின்றவளும் ராஜ சின்னம் உடையவளும், சிம்மாஸனத்தில் வீற்றிருப்பவளும், விஜயா என்று பெயர் கொண்டவளும் ராஜ்ய லக்ஷ்மீ என்று அழைக்கப் படுகின்றாள்.

7. ஸௌபாக்யலக்ஷ்மீ

अंभोजयुग्मं वरदाभये च हस्तैर्वहन्तीं गजयुग्मपूज्यां ।
तां शुक्लवस्त्रां कमलासनस्थां सौभाग्यलक्ष्मीं सततं स्मरामि ॥

இரண்டு தாமரை மலர்களையும் வர அபயங்களையும், தாங்குகின்ற நாற்கரத்தினளாய், இரண்டு யானைகளால் பூஜிக்கப் படுகின்றவளாய், வெண்ணிற பட்டாடை தரித்துக் கொண்டிருப்பவளாய், தாமரை மலரில் வீற்றிருப்பவளே ஸௌபாக்ய லக்ஷ்மீயாகும்.

8. வீரலக்ஷ்மீ

वराभये चापशरौ च शंखचक्रे तथा शूलकपालके च ।
हस्तैर्दधानां कनकोज्वलांगीं तां वीरलक्ष्मीं हृदि भावयामि ॥

வரம், அபயம், வில், அம்பு, சங்கம், சூலம் காபலம் இவற்றைத் தரித்திருப்பவளும், பொன் திகழும் திருமேனியுடையவளும் வீரலக்ஷ்மீ எனப்படுகின்றாள்.

மேற்கூறிய இந்த அஷ்டலக்ஷ்மீக்களும் குழந்தைப் பேறு, யானை, குதிரை முதலிய வாஹனம். தனம், தான்யம் ராஜ்யம், மங்களம், வெள்ளி இவைகளைத் தன்னை வழிப்படும் பக்தர்களுக்கு அருளுவார்கள்.

ஸ்ரீ

இந்த மஹாலக்ஷ்மியை ஸ்ரீ என்று அழைக்கின்றோம். எல்லோரும் இவளை வந்தடைகின்றனர் என்பதனாலேயே இவளுக்கு ஸ்ரீ என்று பெயர் வந்தது. ஸ்ரீ என்ற இந்த சொல் மங்களத்தைப் குறிக்கின்றது. அதனால் மஹா கவிகள் சிலர் தம் நூல்களில் முதல் சுலோகங்களை மங்கள சுலோகங்களை இந்த ஸ்ரீயை முதலில் வைத்து தொடங்கியிருக்கின்றனர். பாரவி என்ற மஹாகவி "श्रियः कुरुणां मधिपस्य

पालिनी'' என்றே தொடங்கி யிருக்கிறார். இப்படி பல உதாரணங்களைக் காணலாம். மதிப்பு மிக்க தேவர்களுக்கும் மனிதருக்கும் அவரவர் பெயருக்கு.முன் ஸ்ரீயைச் சேர்த்தே சொல்வது நம் பழக்கமா இருப்பதிலிருந்தும் இந்த ஸ்ரீ என்ற சொல்லின் பெருமையை அறியலாம்.

गरुडध्वजवल्लभे शुभे गणवर्णादिजदोषशान्तये ।
वरदे तव वाचकं पदं कवयः काव्यमुखे प्रयुंजते ॥

ஹே லக்ஷ்மியே ! கணம் வர்ணம் இவைகளால் நேரிடும் தோஷங்கள் போவதற்கு வரமளிக்கும் அன்னையே ! உன் வாசகமான ஸ்ரீ என்ற சொல்லை கவிகள் காவியத்தின் முதலில் உபயோகின்றனர் என்று லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில் சிறப்பித்துரைத்திருக்கின்றார்.

## ஸ்ரீ ஸூக்தம்

இப்பெருமைமிக்க ஸ்ரீயுடன் கூடியதாய் லக்ஷ்மீயின் பெருமையை உணர்த்தும் வேதப் பகுதி ஸ்ரீ ஸூக்தம் எனப்படும். ஸ்ரீ ஸூக்தம் என்பது வேதம் என்ற உத்யானத்தில் பாரிஜாத தரு போன்றது. வாக்குகளுக்கு அப்பாற்பட்ட லக்ஷ்மீயின் பெருமைகளை உணர ஸாதுக்களுக்கு ஸ்ரீ ஸூக்தம் கண்களாய் அமைந்திருக்கின்றது என்கிறார் வேங்கடாத்வரீ என்ற மஹா கவி

वेदोद्याने पारिजातायमानं श्रीसूक्तं तत् जायतां श्रेयसे नः ।
पारे वाचां भासुरे त्वत्प्रभावे चक्षुष्मन्तो देवि येनैव सन्तः ॥

என்ற ச்லோகத்தால்

இந்த ஸ்ரீ ஸூக்தத்தில் லக்ஷ்மீ தன்னைவிட்டு அகலாது எப்போதும் இருக்க வேண்டும் என்று பிரார்த்திக்க படுகின்றது. இந்த லக்ஷ்மியை உபாஸிப்பதற்கான வழியும் அதில் காட்டப்பட்டிருக்கிறது. அக்னியில் த்ரவியங்களைக் கொண்டு அதற்கான லக்ஷ்மீ மந்த்ரங்களால் ஸ்ரீ தேவியைக் குறித்து வேள்வி செய்வதே அவளை அடையச் சிறந்த வழி என்பதை

हिरण्यवर्णां हरिणीं सुवर्ण रजतस्रजां ।
चन्द्रां हिरण्मयीं लक्ष्मी जातवेदो म आवह ॥



''ஹே அக்னி பகவானே ! பொன் போன்ற மேனியுடையவளும், பாபங்களை அழிப்பவளும், பொன் வெள்ளியாலான ஆபரணங்களை அணிந்து கொண்டிருப்பவளமான லக்ஷ்மீயை எனக்கு அருள் வழங்கும்படி இங்கே அழைத்தருளுவீராக'' என்பதனால் அறிந்து கொள்ளுகிறோம்.

இந்த லக்ஷ்மீ பொன், பசுக்கள், குதிரைகள், உற்றார் இவர்களை அளிப்பவள், ரதங்கள், குதிரைகள், யானைகள் புடைசூழ வருபவள், தான் த்ருப்தியுடைவளாய் இருந்து கொண்டு பிறரை திருப்தி செய்விப்பவள். கீர்த்தியுள்ளவள், தேவர்களால் சேவிக்கப் படுகின்றவள். உதாரகுண முள்ளவள், வில்வ விருக்ஷத்தைத் தவத்தினால் உண்டாக்கியவள், நல்லன செய்பவள். ஸர்வேசுவரீ, இவள் கர்த்தமரின் பெண், சிக்லீதர் என்பவர் இவள் பிள்ளை. இவள் கருணை மிக்கவள். இந்த ஜகன்மாதா மஹாலலக்ஷ்மீ கீர்த்தியையும் செழிப்பையும் அளித்து, பசி, தாகம், தாரித்திரியம் இவைகளைத் தொலைத்து அருள் வழங்க வேண்டும் என்ற விபரங்கள் இந்த ஸ்ரீ ஸூக்தத்தினின்றும் விளங்குகின்றன.

## ஸௌபாக்யலக்ஷ்மீ உபநிஷத்

இந்த மஹாலக்ஷ்மியின் பெருமையை ஸௌபாக்ய லக்ஷ்மீ உபநிஷத் என்ற ஒரு உபநிஷத் அழகாக எடுத்துரைக்கின்றது. இந்த உபநிஷத்தில் ஓமென்ற பிரணவத்தை முன்னும் இடையில் லக்ஷ்மீ நாமாவையும் கடைசியில் நம: என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறி 32 மந்த்ரங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

*1. ஸ்ரீ:*

1. லக்ஷ்மீ
2. வரதா
3. விஷ்ணுபத்னீ
4. வஸுப்ரதா
5. ஹிரண்யரூபா
6. ஸ்வர்ணமாலினி
7. ரஜதஸ்ரஜா
8. ஸ்வர்ணப்ரபா
9. ஸ்வர்ணப்ராகாரா
10. பத்மவாஸிநீ
11. பத்மஹஸ்தா
12. பத்மப்ரியா
13. முக்தாலங்காரா
14. சந்த்ரா
15. சூர்யா
16. பில்வப்ரியா
17. ஈச்வரீ
18. புக்தி:

19. முக்தி:
20. விபூதி:
21. ருத்தி:
22. ஸம்ருத்தி
23. க்ருஷ்டி:
24. புஷ்டி:
25. தனதா
26. தனேச்வரீ
27. ச்ரத்தா
28. போகினீ
29. போகதா
30. தாத்ரீ
31. விதாத்ரீ
32. ஸ்ரீ:

இவைகளை ஓம் ஸ்ரீயை நம: ஓம் லக்ஷ்ம்யை நம: என்றவாறு சொல்லிக்கொள்ள வேண்டும்.

## லக்ஷ்மீ நிலைத்திருக்க

இந்த மஹாலக்ஷ்மி நிலைத்திருக்க ஸ்ரீ ஸூக்தத்தை எப்போதும் ஜபிக்கவேண்டும். உண்மையையே கூற வேண்டும். கிழக்கு முகமாய் உட்கார்ந்து சாப்பிடவேண்டும். முன்பாகவும் பிரியமாகவும் பேசவேண்டும். வஸ்திரமில்லாமல் ஜலத்தில் இறங்கக் கூடாது. எண்ணெய் தேய்த்துக்கொண்டு உணவருந்தக்கூடாது. பூமியை வீணாகக் கீறக்கூடாது. பில்வம், தும்பை பூ, தாமரைப் பூ இவைகளைத் தலையில் அணியக்கூடாது. தாண்டவும் கூடாது. தனியாக உப்பு எண்ணை இவைகளைச் சாப்பிடக் கூடாது. அழுக்குடன் இருக்கக் கூடாது. அழுக்கடைந்த உணவை சாப்பிடவும் கூடாது.

श्रियो मन्त्रं जपेन्मन्त्री श्रीसूक्तानपि संजपेत् ।
भूयसीं श्रियमाकांक्षनू सत्यवादी भवेत्सदा ॥
प्रत्यगाशामुखेऽश्नीयानू स्थितः पूर्वंप्रियं वदेत् ।
नग्नो नावतरेदंभः तैलाभ्यक्तो न भक्षयेत्
नवृथा विलिखेद्भूमिं न बिल्वं द्रोणमंवुजं ।
धारयेन्मूर्धि नैवाद्यात् लोणं तैलं च केवलं ।
मलिनो न भवेज्जतु कुत्सितान्नं न भक्षयेत् ॥
द्रोणपंकज बिलवानि पद्म्यां जातु न लंघयेत् ॥



இத்துடன் செந்தமிழ் எழுதிய ஏடு, வெற்றிலைப்பாக்கு, திருநீறு, பல்லக்கு, பொன்னாரம், ஆடை, கன்னி இவ்வெழுவரையும் தன்னை வந்தடைந்தபோது இரு கரங்களாலும் ஏற்க வேண்டும். இது லக்ஷ்மீ தங்க வழியாகும்.

செந்தமிழடைகாய் நீறு சிவிகை பொன்னர மாடை
சுந்தரமான தோகை துலங்குமிவ் வகைகளேழும்
வந்தபோதிருகை ஏந்தி வாங்க லக்குமியுஞ்சேர்வாள்
அந்த நாளாகாவென்றால் அவனைவிட் டகலுவாளே.

காலையும் மாலையும் உறங்கக் கூடாது. இரவில் தயிர் சோறு சாப்பிடக்கூடாது. கூடத்தகாதவரோடு கூடக்கூடாது. இஞ்சி, நெல்லிக்காய், கீரை, பாவற்காய், கஞ்சி இவைகளையும் இரவில் சாப்பிடக்கூடாது.

காலை மாலை யுறங்குபவர், காரிகை
கோல மேனி குலைந்தபின் கூடுவர்
சாலி ராத்தயிர் சாதமொ டுண்பர்
மாலை நேரினும் மாது பிரிவளே.
(மாலை நேரினும் = விஷ்ணுவுக்கு ஒப்பவராயிருப்பினும்)
இஞ்சி நெல்லி இலைக்கறி பாவற்காய்
கஞ்சி வெண்டயிர் கங்கு லருந்திடில்
பொஞ்சு பூமகள் போயுடன் மூத்தவள்
கொஞ்சிக் கொஞ்சி குலாவி நடப்பளே.

## இவர்களை லக்ஷ்மீ வந்தடைவாள்

நல்ல வீரம் நிறைந்தவர். சோம்பலற்றவர், தவமுடையவர், பயமற்றவர், ஈகையுடையோர், செல்வத்தை நன்கு அனுபவிப்பவர் இவர்களை நான் அடைகிறேன். என்கிறாள் லக்ஷ்மீ.

विर्यवन्तं त्वनलसं तपस्विन मकातरं ।
दातारं चापि भोवतारं युवत्या सेवामि तं नरं

## தலை எழுத்தும் துஷ்டக்ரஹங்களும் என் செய்யும்?

இந்த லக்ஷ்மியின் தியானங்கள் மந்த்ர மஹார்ணவம், சாரதா திலகம பிரபஞ்சசாரம், பிரபஞ்ச ஸாரஸங்க்ரஹம் முதலிய மந்த்ர சாஸ்திர நூல்களில் நிறையைக் கூறப்பட்டிருக்கின்றன. அதற்கான லக்ஷ்மீ மந்த்ரங்கள், பூஜா விதானங்கள் இவைகளும் விஸ்தாரமாய் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வாறான லக்ஷ்மீயை உபாஸித்து அவள் திருநோக்குப் பாத்திரர்களாக நாம் ஆனால் பிரம்மாவின் தலை எழுத்தும் துஷ்ட கிரஹங்களின் போக்கும் நம்மை ஒன்றும் செய்துவிட முடியாது - லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில்

तिष्ठन्त्वष्टम एव भूसुतशनि प्रख्याश्च दुष्टग्रहाः
भाले कामपि लेलिखीतु जगतः स्रष्टा पि कष्टां दशां ।
ते किं कुर्यरपांगतो मयि सकृत् देवि त्वयांगीकृते
नीहारो न करस्थमवरमणेः लीलांबुजं बाधते ॥

ஹே மஹாலக்ஷ்மி! உன் கடாக்ஷத்திற்கு நான் பாத்திரமாகி விட்டால் செவ்வாய் சனி முதலிய துஷ்ட க்ரஹங்கள் அஷ்டமத்தில் இருப்பதாலோ, சிருஷ்டி கர்த்தாவான பிரம்மதேவன் கஷ்ட தசையை நெற்றியில் எழுதியதாலோ எனக்கு என்ன நேர்ந்துவிடும்? சூரியனின் திருக்கரத்தில் விளங்கும் தாமரைப் பூவை பனியால் அழிக்க முடியுமா? என்ன! என்கிறார் மஹாகவி. திருஷ்டாந்தத்தோடு கூறும் உறுதியான வார்த்தை.

### கனகதாராஸ்தவம்

ஆதிசங்கர பகவத் பாதாள் ஸ்ரீ லக்ஷ்மீயை ஸ்தோத்ரம் செய்து ஏழையின் வீட்டில் பொன்னெல்லிக்கனிகளை மழையாக கொட்டச் செய்ததும் இங்கு நினைத்ததற்குறியது. சங்கராசாரியாள் குழந்தைப் பருவத்தில் பிக்ஷா சரணம செய்கிறார். ஒரு ஏழையின் வீட்டில் பிக்ஷை கேட்கின்றார். வீட்டுக்காரியான அம்மாள், தம்மில்லாமை நினைத்து வருந்துகின்றாள்.



विधिना खलु वचिता वयं वितरीतुं वटवे न शनुमः

தெய்வம் நமக்குப் பொருளை அருளவில்லை! இந்த பிரம்மசாரிக்கு பிக்ஷையிடமுடியாத தௌர்பாக்யம் நேர்ந்துவிட்டதே என் செய்வது என்ற கண்ணீர் வடிக்கின்றாள். மனமிருப்பவரிடம் பொருளில்லை. பொருளுள்ளவரிடம் மனமில்லை. இது உலகின் இயற்கை மனம் நொந்து பரிதவிக்கும் அந்த ஸ்திரீயைக் கண்டு கருணை கொள்கிறார். முன் ஜன்மாவில் பிறருக்கு தானம் செய்யாதவருக்கும் புண்ணியமில்லாவர்க்கும் இந்த ஜன்மாவில் தனமளிக்கமாட்டாள் லக்ஷ்மீ. ஆகவே சங்கரர் ஒரு முடிவுக்கு வருகிறார். அம்மா இருப்பதைப் போடுங்கள் என்றார். அவளும் ஒரு நெல்லிக்கனியை ஆச்சார்யாளின் பாத்திரத்தில் இடுகின்றாள்.

इति तद्वचनं स शुश्रुवानू
निजगादांब मयीद मर्पितं
फलमंब ददस्व तत्फलं
दयनीयो यदि ते ह्मंबिके

ஸ்ரீ மஹாலக்ஷ்மீயை நோக்கி, ஜகன்மாதா! இவள் எனக்கு பிக்ஷையிட்டிருக்கின்றாள். இந்தப் புண்ணியத்திற்கு இப்போது பலனாக நீ இவளுக்குப் பொருள் அளிக்க வேண்டும் எனப் பிரார்த்தித்துக்கொண்டு மனமுருகப்பாடுகின்றார்.

अंगं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृंगांगनेन वकुलाभरणं तमालं ।
अंगीकृताखिलविभूतिरपांगलीला
मांगल्यदास्तु मम मंगलदेवतायाः ॥

என்று உடன் பொன் மயமான நெல்லிக்கனிகளாய் அன்னை பொழிந்த காரணத்தால் ஆசாரியாள் இயற்றிய அந்த ஸ்தோத்திரத்திற்க்கு கனக தாராஸ்தவம் என்ற பெயர் ஏற்பட்டது. இந்த நிகழ்ச்சி ஸந்நியாஸிகளுக்கு சிறிது பொருள் அளித்தாலும் அளித்வர்களுக்கு எவ்வளவு புண்ணியத்தைக் கொடுக்கின்றது என்பதற்கு எடுத்துக்காட்டு.

ஆகவே பிரமன் தலையில் எழுதியதைப் பற்றிக் கவலைப்படவேண்டாம் லக்ஷ்மீ தன்னைப் பிரார்த்திப்பவர்களுக்கு நிச்சயம் அருளுவாள். ''ஸ்ரீ க்ஷய'' என்று பிரமன் தலையில் எழுதியிருந்தாலும் லக்ஷ்மீ கடாக்ஷம் அதை ''யக்ஷ ஸ்ரீ''யாக மாற்றிவிடுமே!

(ஸ்ரீ க்ஷய: என்றால் ஐசுவரிய நாசம் என்ற பொருள். அதையே திருப்பி படித்தால் யக்ஷ ஸ்ரீ என்று ஆகும். யக்ஷ ஸ்ரீ என்றால் குபேர ஸம்பத் என்று பொருள். இவ்வாறு லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது).

## ''அமுதக் கடலிடை அமர்ந்த லக்ஷ்மீ''

இந்த மஹாலக்ஷ்மீ அமிர்தக் கடலின் நடுவில் தேவ விருக்ஷங்களாகிய கல்பதரு. பாரிஜாதம் முதலிய விருக்ஷங்களின் நடுவில் மிக அழகிய மணிமயமான மண்டபத்தில் சிறப்பு மிக்க ரத்ன ஸிம்மாஸனத்தில் தாமரை மலரின் மீது அமர்ந்திருப்பாள். அன்னையைச் சுற்றிலும் தேவலோகத்து அழகிகள் சேவித்து நிற்பர்.

இவள் உலகங்களை அளித்த அன்னை. இவளே வெற்றி தருபவள் என்கிறது லக்ஷ்மீ ஸஹஸ்ரம்.

सुधोदधिसमुल्लसत्सुरतरु छटान्तर्गते
मनोजमणिमण्डपे महति रत्नसिंहासने ।
स्थितां मणि सरोरुहे त्रिदशसुन्दरी सेवितां
जयाय भवतीमहं जननि संततं चिन्तये ॥

இந்த ஜகன்மாதாவின் தியானத்தைப் பலவிதமாகக் கூறும் மந்த்ர சாஸ்த்ரங்கள். சௌபாக்ய லக்ஷ்மீ உபநிஷத்துக் காட்டும்கோல மேனியை இங்கு காண்போம்.

भूयाद्भूयो द्विपद्माऽभवयरकरा तप्तकार्तस्वराभा
शुभ्राभाभेभ युग्यद्वयकरधृतकुंभाभ्दिरासिच्यमाना ।
रत्नौधाबद्धमौलिः विमलतरदुकूलार्तवालेपनाढ्या
पद्माक्षी पद्मनाभोरसि कृतवसतिः पद्मगा श्रीः श्रियैनः ॥



இரண்டு தாமரை மலர்களையும் அபயவர முத்திரைகளையும் தாங்கும் நான்கு திருக்கரங்கள் கொண்டவளும், உருக்கிய பொன் போன்ற நிறமுள்ளவளும், வெளுத்த இரு யானைகளுடைய துதிக்கையிலுள்ள குடங்களால் அபிஷேகம் செய்விக்கப்படுகின்றவளும், ரத்னங்கள் பதித்த, கிரீடமுள்ளவளும், தூய பட்டாடை தரித்தவளும், சென்னிற பூச்சுடையவளும், தாமரை மலரில் வீற்றிருப்பவளும், தாமரை மலர் போன்ற கண்கள் உள்ளவளும், மகாவிஷ்ணுவின் மார்பில் உறைபவளுமாகிய மஹாலக்ஷ்மீ நமக்கு ஐசுவர்யத்தை அளிக்கட்டும்.''

## லக்ஷ்மீ ஸ்வயம்வரம்

विष्णोः सामर्थ्यरुपत्वात् विष्णुशक्ति; प्रगीयते என்று இந்த மஹாலக்ஷ்மீ விஷ்ணு சக்தியாகப் போற்றப்படுகின்றாள். இந்த லக்ஷ்மீயின் திருவருள் கிடைத்தால் தான் விஷ்ணுவின திருவருள் நமக்குக் கிடைக்கும். இந்த லக்ஷ்மீயை புருஷகாரம் என்று உரைப்போர் பெரியோர்.

लक्ष्म्या सह हृषीकेशः देव्या कारणरुपया ।
रक्षकः सर्वसिद्धान्ते वेदान्तेषु च गीयते ॥

என்றபடி பக்தனுக்கு அருள்புரியும்படி பகவானை இவளே தூண்டுகின்றாள்.

முன்னொரு ஸமயம் விஷ்ணுவும், சிவனும் ஹாலாஹலர் என்ற அஸுரர்களைக் கொன்றுவிட்டு தம்மிருப்பிடம் வந்தனர். லக்ஷ்மீயிடமும் பார்வதியிடமும் அகந்தையோடும் பேசினர். லக்ஷ்மியும், பார்வதியும் இதைக்கேட்டு குறும்பாகச் சிரித்தனர். அதனால் கோபமடைந்த இருவரும் இரு சக்திகளையும் அலக்ஷியமாய் பேசினர். இதனால் கோபமடைந்த லக்ஷ்மீயும் பார்வதியும் இருவரையும் விட்டுச் சென்றுவிட்டனர். அதனால் இருவரும் சக்தியிழந்தனர்.

निस्तेजस्कौ च निश्शक्ती विक्षिप्तौ च विचेतनौ ।
अवमाना त्तयोः शक्तयोः जातौ हरि हरौ तदा ॥

அதனால் தத்தம் வேலைகளைச் சரியாய்செய்யமுடியாது சக்தியற்றிருந்தனர்.

இதனால் அசுரர் பலம் பெற்றனர். தேவர்கள் ராஜ்யமிழந்து துயருற்றனர். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி மஹாலக்ஷ்மி மீண்டும் திருப்பாற்கடலில் தோன்றி விஷ்ணுவை பர்த்தாவாய் ஏற்றருளுகிறேன் என்று அருளினாள். அதன் காரணமாக விஷ்ணுவின் யோசனைப்படி தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடி மந்தர மலையை மத்தாக்கி, வாசுகியை கடைகயிராக்கி, திருப்பாற்கடல் கடைந்தனர்.

திருப்பாற்கடல் கடையும் போது ஜகன்மாதா ஸ்ரீ மஹாலக்ஷ்மி தேவர்களைக்காக்கத் திருவுள்ளங்கொண்டு திருப்பாற்கடலினின்றும் தோன்றினாள். ஸகல குணங்களும் நிறைந்தவரும், அழகின் திருவுருவமானவரும் வேத வேத்யனாயும் உள்ள பரமபுருஷனாம் புருஷோத்தமனாகிய ஸ்ரீமந் நாராயணனைத் தன் பதியாக வரித்து அனைவருக்கும் முன்னிலையில் அவர் கழுத்தில் மலர் மாலையை அணிவித்து திருவருள் புரிந்தாள்.

निशाकरश्च सा देवी भ्रातरौ द्वौ पयोनिधेः ।
उत्पन्न मात्रौ तावास्तां शिवकेशवसंश्रितौ ॥ (லக்ஷ்மீ ஹஸஸ்ர நாமம்)

பின்னர் விஷ்ணு லக்ஷ்மீகடாக்ஷம் பெற்ற காரணத்தால் சக்தி பெற்று விளங்கினார். ஜகன்மாதா லக்ஷ்மியின் கடாக்ஷம் தேவர்களுக்கும் கிட்டியது. அதனால் தேவர்களுக்கு அமிர்தம் கிடைத்தது. அசுரரோடு யுத்தத்தில்வெற்றியும் கிடைத்தது. மூவுலக ராஜ்யமும் கிடைத்தது. லக்ஷ்மீ கடாக்ஷம் பெற்றவருக்குக் கிடைக்காததும் உண்டோ!

शालुवशरभमहेश्वर तोषकरं लक्षमन्त्रहुतयज्ञम् ।
अष्टाविंशति दिवसान् चक्रुर्विधिवत् विशिष्य वैरिघ्नम् ॥ २४ ॥

சாலுவ சரபமஹேச்வர தோஷகரம் லக்ஷமந்த்ரஹுதயஞ்ஞம் ।
அஷ்டாவிம்சதி திவஸான் சக்ருர் விதிவத் விசிஷ்ய வைரிக்னம் ॥

(உரை) சாலுவசரபமஹேச்வரனுக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதும், குறிப்பாக சத்ருவை அழிக்கக்கூடியதும். லக்ஷ மந்த்ரங்களால் ஹோமம் செய்யப்படுவதுமாகிய ஒரு வேள்வியை (சரப லக்ஷ மந்த்ர ஹோமத்தை) இருபத்தெட்டு நாட்கள் முறைப்படிச் செய்தனர்.

★4-6-1971ல் இந்த ஹோமம் நடத்தப்பட்டது.



नृणां परस्पर द्वेषमुन्मुलयितु मुत्सुकाः ।
प्रत्यङ्गिरा लक्षहोमं कर्तुं चापि मतिं दधुः ॥ २५ ॥

उग्रप्रत्यङ्गिरानाम्नी शक्तिः शरभशक्तिदा ।
अयुतास्या महा क्रूरा भद्रकाली सुखप्रदा ॥ २६ ॥

आथर्वण श्रुतिवचो गम्या शत्रु विनाशिनी ।
तस्याः प्रीतिकरं यज्ञं अकुर्वन्श्रद्धया युताः ॥ २७ ॥

स्वयं विद्वेषरहिताः यतयः शान्तचेतसः ।
अन्तर्वैरिविनाशार्थं लोकवैरिवधाय च ॥ २८ ॥

अव्याजकरुणापूर्णाः शान्तान्द यतीश्वराः ।
साधूनां पूर्वपुण्यौघैः नूनं जाताः कलौ युगे ॥ २९ ॥

ந்ருணாம் பரஸ்பர த்வேஷமுன்மூலயிது முத்ஸுகா: ।
ப்ரத்யங்கிரா லக்ஷஹோமம் கர்த்தும் சாபி மதிம் தது: ॥ 25

உக்ர ப்ரத்யங்கிரா நாம்னீ சக்தி: சரபசக்திதா ।
அயுதாஸ்யா மஹாக்ரூரா பத்ரகாளீ ஸுகப்ரதா ॥ ॥ 26

ஆதர்வண ச்ருதிவாசோ கம்யா சத்ருவினாசினீ ।
தஸ்யா: ப்ரீதிகரம் யஞ்ஞம் அகுர்வன் ச்ரத்தயா யுதா: ॥ 27

ஸ்வயம் வித்வேஷரஹிதா: யதய: சாந்சேதஸ: ।
அந்தர்வைரிவினாசார்த்தம் லோகவைரிவதாய ச ॥ 28

அவ்யாஜ கருணாபூர்ணா: சாந்தனந்த யதீச்வரா: ।
ஸாதூனாம் பூர்வபுண்யௌகை: நூனம் ஜாதா: கலௌ யுகே ॥ 29

மனிதர்களுக்குள் பரஸ்பரம் நேரும் த்வேஷத்தைப் போக்க ஆசை கொண்ட ஸ்வாமிகள் "உக்ரப்ரத்யங்கிரா" ஹோமத்தையும் செய்ய

★ இவ்வேள்வி 26-4-72 முதல் 23-5-72 வரை நடத்தப்பட்டது.
இவ்வேள்வியின் போது "அதர்வணபத்ரகாளி" என்ற நூல் திருவெண்காடு முத்துஸ்வாமி சாஸ்திரிகளால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டது.

எண்ணம் கொண்டனர். உக்ரப்ரத்யங்கிரா என்பவள் சரபசக்தி பயங்கரமானவள். சுகமும் அளிப்பவள். பத்ரகாளீ எனப்படுபவள் அதர்வண வேதத்தால் அறியத்தகுந்தவள். சத்ருவை அழிப்பவள் அவளுக்குப் ப்ரீதியைச் செய்யும் லக்ஷஹோம யஞ்ஞத்தையும் சிரத்தையுடன் செய்தனர். த்வேஷமற்ற மனமடக்கிய ஸ்வாமிகள் இதைச் செய்தது உள்ளே காமக்ரோதிகளை அழிப்பதற்கும் உலக விரோதிகளைத் தொலைப்பதற்குமேயாகும்.

## அதர்வண பத்ரகாளி
### (உத்ரப்ரதியங்கிரா)

சரபமூர்த்தி நரசிம்மரை அடக்க உதவ வந்தவள் இந்த பத்ரகாளி. இவளை ப்ரத்யங்கிரா என்றும் உக்ரப் ப்ரத்யங்கிரா என்றும் மந்த்ர சாஸ்த்ரங்கள் கூறும். பயங்கரமான தோற்றம் கொண்டதால் உக்ரா என்று அழைக்கப்படுகிறாள். இவளுடைய மந்த்ரத்தைக் கண்டுபிடித்தவர்கள் அங்கிரஸ், ப்ரத்யங்கிரஸ் என்ற இரண்டு மஹரிஷிகள். ஆகவே இவளை ப்ரத்யங்கிரா என்றே கூறுகின்றனர். ப்ரத்யங்கிரா என்ற



சொல்லில் அங்கிரஸ் ப்ரத்யங்கிரஸ் என்ற இருவர் பெயரும் அடங்கியிருக்கின்றது. இவளை சரபசக்தி என்றும் கூறுவர். இம்மந்த்ரத்தை சாதகம் செய்யும் பக்தனிடம் துவேஷம் கொள்ளக்கூடாது என்பது "ப்ரத்யங்கிரா த்யானசீலே ந குர்யாத் த்வேஷமாத்மனி" என்ற பழமொழியால் தெரிகின்றது. இவள் பெருமை பேசும் ரிக் மந்த்ரங்கள் 9 வர்க்கங்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. 20 அக்ஷரங்கள் கொண்ட மூலமந்த்ரமும், மாலாமந்த்ரமும் ப்ரபஞ்சாரசங்க்ரஹத்தினின்றும் கிடைக்கின்றது. முன்னொரு ஸமயம் ஹிரண்யனைக் கொல்ல நரஸிம்மா தோன்றினார். எங்குமிருப்பார் எம்பெருமான் என்ற உறுதியைக் காக்க தூணிலிருந்து புறப்பட்டார். அவர் ஹிரண்யனைக் கொன்று உலகத்திற்கு அபயமளித்தார். பிரஹ்லாதனும் தேவர்களும் ரிஷிகளும் அவரைத் துதித்தனர். ஹிரண்யனின் ரத்தத்தை தீண்டிய காரணத்தால் மிகவும் பிரம்மாண்டமான உருவங்கொண்டு பூமி நடுங்க, கடல் கொந்தளிக்க, ஜீவர்கள் மூர்ச்சை கொள்ள பயங்கரமாய் கர்ஜித்துக்கொண்டு அட்டஹாஸம் செய்தார் ந்ருஸிம்ஹர்.

## ★ उग्रप्रत्यगिरा मन्त्रः ★

कृष्णवर्णि बृहद्वपि बृहत्कणिठ महद्भयि ॥  
देवि देवि महादेवि मम शत्रून् विनाशय ॥  
मम शत्रून् निनाशयों नमः ॥  
ओ क्षं भक्ष ज्वाला जिह्वे करालष्ट्रे प्रत्यङ्गिरे  
क्षं ह्रीं हुं फट् ॥  
खट् फट् जहि महा कृत्ये विधूसाग्निसमप्रमे ।  
देवि देवि महादेवि मम शत्रून् विनाशय ॥  
मम शत्रून् विनाशयों नमः ॥  
औं उत्तिष्ठ पुरीषि कि स्वपिषि  
भयं मे समुपस्थितं  
यदिश क्यमशक्यं वा  
तन्मे भगवति शमय स्वाहा

ஓம் கருஷ்ணவர்ணி ப்ருஹத்ரூபி  
ப்ருஹத் கண்டி மஹத் பயி ।  
தேவி தேவி மஹாதேவி  
மம சத்ரூந் விநாசய ॥  
மம சத்ரூந் விநாசயோம் நம: ।  
ஓம் க்ஷம் பக்ஷ ஜ்வாலா ஜிஹ்வே கராள தம்ஷ்ட்ரே  
ப்ரத்யங்கிரே க்ஷம் ஹ்ரீம் ஹும் பட்  
கட் பட் ஜஹி மஹாக்ருத்யே  
விதூமாக்னி ஸமப்ரபே ।  
தேவி தேவி மஹாதேவி  
மம சத்ரூந் விநாசய ॥  
மம சத்ரூந் விநாசயோம் நம: ।  
ஓம் உத்திஷ்ட புருஷி கிம் ஸ்வபிஷி  
பயம் மே ஸமுபஸ்திதிம் யதி சக்யமசக்யம் வா  
தந்மே பகவதி சமய ஸ்வாஹா ॥

தேவர்கள் சிவனைச் சரணடைய காலகாலன் சரபம் என்ற பக்ஷியாய்த் தோன்றினார். சந்திரன், சூரியன், அக்னி இவர்கள் அவர் கண்கள், மிகக் கூரிய நகங்கள், காளி, துர்கை இருவரும் இரண்டு இறக்கைகள் கூர்மையான நீண்ட அலகு மேல் நோக்கிய முகம் நான்கு கரங்கள் பாதி உம்பு பக்ஷி பாதி உடல் ஸிம்ஹம் உக்ரமான நீண்ட நாக்கு விண்தொடும் வால், எட்டு கால்கள் இவ்வாறான உருவம் கொண்ட சரப ருத்ரன் நரஸிம்ஹரின் திறனை அடக்கினார்.

ஆயினும் நரஸிம்ஹரின் உடலிலிருந்து ''கண்டபேருண்டம்'' என்ற ஒருவித விசித்ரமான பக்ஷி மீண்டும் வெளிவந்தது. மீண்டுமது யுத்தம் செய்தது. கண்ட பேருண்டம் என்ற பக்ஷி சரபப் ப்க்ஷிக்கு வைரி என்று தெரிகின்றது. அப்போது சரபருத்ரனுக்கு கோபம் அதிகமாயிற்று. அவர் நெற்றியிலுள்ள நெருப்புக் கண்ணினின்றும் உக்ரபிரத்யங்கிரா என்ற பத்ரகாளி உதித்தாள். இவளேயே அதர்வண பத்ரகாளி என்பர். இவள் வெளிவந்து உக்ரமாகச் சண்டைசெய்யும் கண்ட பேருண்ட ருபங்கொண்ட நரஸிம்ஹத்தை விழுங்கிவிட்டாள். நரஸிம்ஹரின் சக்தி அடங்கியது சரபருத்ரனும் தேவர்களும் மகிழ்ந்தனர் எல்லோரும் அவரைத் துதித்தனர்.

இவ்வரலாற்றைப் பதிமூன்றும் நூற்றாண்டிலே தில்லையிலே வாழ்ந்த சிவபக்த சிகாமணியான ''உமாபதிசிவம்'' அவர்கள் குஞ்சிதாங்கிரி ஸ்தவத்தில் மிக அழகாக வெளியிட்டிருக்கின்றார்கள்.

யுத்தே பக்னோருகாயம் நரஹரிவபுஷம்
  கண்ட பேருண்டருபீ
பூத்வா கர்ஜந்தமக்ரே சரப ககபதி:
  யஸ்ய பாலாக்னி குண்டாத் ।
உக்ர ப்ரத்யங்கிராக்யாம் தச சதவனதனாம்
  காளிகாம் ஆசு ஸ்ருஷ்ட்வா
தஸ்யா ஜிஹ்வாக்ர வன்ஹிம் ஸுசருவத் அனயத்
  குஞ்சிதாங்கிரிம் பஜேஹம் ॥

என்ற சலோகத்தினால்.

இவளுக்கு ஆயிரம் முகங்கள். இந்த முகங்கள் எல்லாம் ஸிம்ஹத்தின் முகம் போன்றிருக்கும், இரண்டாயிரம் கைகள், கைகளிலே சூலம், கபாலம், பாசம், டமருகம் இவைகள் இருக்கும். சிவப்பேறிய மூன்று



கண்கள். சிரத்தில் சந்திர கலை தரித்திருப்பாள். கரிய நிறம், மிகப்பருத்த சரீரம், பெருங் கழுத்து, நீலநிற ஆடை, இவளை உபாஸித்தால் சத்ருபயம நாட்டுக்கோ, நாட்டுமக்களுக்கோ ஏற்படாது என்று

க்ருஷ்ணவர்ணி ப்ருஹத்ரூபி
  ப்ருஹத் கண்டி மஹத்பயி ।
தேவி தேவி மஹாதேவி
  மம சத்ருன் வினாசய ॥

இம் மந்திரத்தால் தெளிவாகத் தெரிகின்றது. நம்மீது ஏவி விடப்பட்ட தீய சக்திகள் இவள் திருவருளால் ஏவியவர்களையே சென்றழிக்கும். இவள் தியானத்தை இவ்வாறு மந்த்ரசாஸ்திரம் கூறுகின்றது.

सिंहीं सिह मुखीं सखीं भगवतः श्रीभैरवस्योल्लसत्
  शूलस्थूलकपाल पाशडमरुव्यग्रोग्र हस्तां बुजां
दंष्ट्राकोटि विशंकटास्यं कुहरां आरक्त नेत्र त्रयीं
  वालेन्दुद्युति मौलिकां भगवतीं प्रत्यं गिरां भावये

ஸிம்ஹீம் ஸிம்ஹமுகீம் ஸகீம் பகவத:
  ஸ்ரீ பைரவஸ்யோல்லஸத்-
சூல ஸ்தூலகபால பாச டமரு
  வ்யக்ரோக்ர ஹஸ்தாம்புஜாம் ।
தம்ஷ்ட்ராகோடி விசங்கடாஸ்ய குஹராம்
  ஆரக்த நேத்ரத்ரயீம்
பாலேந்து த்யுதிமௌளிகாம் பகவதீம்
  ப்ரத்யங்கிராம் பாவயே ॥

ऋत्विग्भिर्बहुभिर्युक्ताः द्रव्यैश्शास्त्रसमीरितैः ।
त्रिलक्षाहुतिभिर्दीप्तं नृसिंहप्रीतिवर्धनम् ॥ ३० ॥

विजयश्रीप्रदं नृणां शत्रुवर्गविनाशकम् ।
लक्ष्मीनृसिंहहोपं च चक्रिरे विधिवत्ततः ॥ ३१ ॥

---

*13-5-1973 முதல் 9-6-1973 வரை இந்த யக்ஞம் நடத்தப்பட்டது.*

तेनाऽकण्ठं नराकारं घोरकण्ठीरवाननम् ।
प्रह्लादतोषजनकं हिरण्यवधकारिणम् ॥ ३२ ॥

आद्य श्रीशङ्कराचार्य सूक्तिसंस्तुतवैभवम् ।
लक्ष्मीश्लिष्टार्धवपुषं नित्यसंहृष्टमानसम् ॥ ३३ ॥

शंखचक्राब्जभृद्बाहुकमलं वांछितप्रदम् ।
अतोषयन्यतिश्रेष्ठाः नृसिंहमतुलद्युतिम् ॥ ३४ ॥

ருத்விக்பிர் பஹுபிர்யுக்தா: த்ரவ்யைஸ்சாஸ்த்ரஸமீரிதை: ।
த்ரிலக்ஷாஹுதிபிர்தீப்தம் ந்ருஸிம்ஹ ப்ரீதிவர்த்தனம் ॥ 30

★விஜய ஸ்ரீப்ரதம் ந்ரூணாம் சத்ருவர்கவினாசகம் ।
லக்ஷ்மீந்ருஸிம்ஹ ஹோமம் ச சக்ரிரே விதிவத்தத: ॥ 31

தேனாகண்டம் நராகாரம் கோரகண்டீரவானனம் ।
ப்ரஹ்லாத தோஷ ஜனகம் ஹிரண்யவதகாரிணம் ॥ 32

ஆத்ய ஸ்ரீ சங்கராசார்ய ஸூக்தி வர்ணிதவைபவம் ।
லக்ஷ்மீ ச்லிஷ்டார்தவபுஷம் நித்ய ஸம்ஹ்ருஷ்டமானஸம் ॥ 33

சங்கசக்ராப்ஜப்ருத்பாஹுகமலம் வாஞ்சித ப்ரதம் ।
அதோஷயன் யதிச்ரேஷ்டா: ந்ருஸிம்ஹ மதுலத்யுதிம் ॥ 34

(உரை) பல ருத்விக்குகளுடன் சாஸ்த்ரத்தில் கூறிய பல திரவியங்களைக் கொண்டு, மூன்று லக்ஷம் ஆஹுதிகளுடன் விளங்குகின்றதும், ந்ருஸிம்ஹருக்கு ப்ரீதியை அதிகரிக்கச் செய்கின்றதம், விஜயம் ஐச்வர்யம் இவற்றை மனிதர்க்கு அளிக்கின்றதும் சத்ருக்களை அழிக்கின்றதுமாகிய லக்ஷ்மீந்ருஸம்ஹ ஹோமத்தையும் ஸ்வாமிகள் முறைப்படிச் செய்தனர். அதனால் கழுத்து வரை மனித உருவமுடையவரும் கோரமான ஸிம்ஹமுகமுடைய வரும், ப்ரஹ்லாதனுக்கு மகிழ்ச்சியளிப்பவரும் ஹிரண்யகசிபுவைக்

★ இந்த வேள்வி *4-5-74* முதல் *31-5-74* வரை நடந்தது.



கொன்றவரும், ஆதி சங்கர பகவத்பாதர் அவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுடையவரும், லக்ஷ்மீயினால் ஆலிங்கனம் செய்து கொள்ளப்பட்ட பாதி சரீரமுடையவரும், என்றும் மன மகிழ்ச்சியுடைவரும், சங்கம் சக்ரம் தாமரை மலர் இவை தாங்கும் கரகமலத்தினரும், விரும்பியதை அளிப்பவரும், ஒப்பற்ற ஒளியுடையவருமாகிய ந்ருஸிம்ஹரையும் ஸ்வாமிகள் மகிழ்வித்தனர்.

आथर्वण महाकाली मन्त्रसंपुटितेन च ।
वाराहीमनुना चक्रु र्लक्षहोमं यथाविधि ॥ ३६ ॥

★ ஆதர்வண மஹாகாளீ மந்த்ரஸம்புடி தேன ச ।
வாராஹீமனுனா சக்ரு: லக்ஷஹோமம் யதாவிதி ॥

*(உரை) அதர்வண பத்ரகாளீ மந்த்ர ஸம்புடிதமான ஸ்ரீ மஹா வாராஹீ மந்த்ரத்தினால் முறைப்படி லக்ஷஹோமம் செய்தனர்.*

இந்த வேள்வி *4.5.74* முதல் *31.5.74* வரை நடந்தது.

श्री अथर्वण ऋक् संपुटित

# श्री महावाराही होम महामन्त्राः

அதர்வண ருக் ஸம்புடித

## ஸ்ரீ மஹா வாராஹீ ஹோம மஹா மந்த்ரம்

ओं ये नो रयिं दुश्चरितासो अग्ने जह्नुमर्तासो अनृतं वदन्तः ।
तेषां वपूंष्यर्चिषा जातवेदः शुष्कन्न वृक्षमभिसन्दहस्व ॥
ऐं ग्लौं ऐं नमो भगवति वार्तालि वार्तालि वाराहि वाराहि
वराहमुखि वराहमुखि अन्धे अन्धिनि नमः रुन्धे रुन्धिनि नमः
जम्भे जंभिनि नमः मोहे मोहिनि नमः स्तंभे स्तंभिनि नमः
सर्व दुष्ट प्रदुष्टानां सर्वेषां सर्वं वाक्चित्त चक्षुर्मुख गतिजिह्वास्तंभनं
कुरु कुरु शीघ्रं वश्यं ऐं ग्लौं ऐं ठः ठः ठः ठः हुं अस्त्राय फट् ।
ओं ये नो रयिं दुश्चरितासो अग्ने जह्नुमर्तासो अनृतं वदन्तः ।
तेषां वपूंष्यर्चिषा जातवेदः शुष्कन्न वृक्षमभिसन्दहस्व स्वाहा ॥

ஓம் யே நோ ரயிம் துச்சரிதாஸோ அக்நே ஜஹ்ருந்மர்த்தாஸோ அந்ருதம் வதந்த: ।
தேஷாம் வபூம்ஷ்யர்ச்சிஷா ஜாதவேத: சுஷ்கந்ந வ்ருக்ஷம் அபிஸந்தஹஸ்வ ।
ஐம் க்லௌம் ஐம் நமோ பகவதி வார்த்தாளி வார்த்தாளி வாராஹி வாராஹி
வராஹமுகி வராஹமுகி அந்தே அந்தினி நம: ருந்தே ருந்தினி நம ।
ஜம்பே ஜம்பினி நம: மோஹே மோஹினி நம:
ஸர்வ துஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம் ஸர்வ வாக்சித்த சக்ஷுர் முக கதி ஜிஹ்வாஸ்தம்பனம்
குரு குரு சீக்ரம் வச்யம் ஐம் க்லௌம் ஐம் ட: ட: ட: ட: ஹூம் அஸ்த்ராய பட் ।



ஓம் யே நோ ரயிம் துஸ்சரிதாஸோ அக்நே ஜஹ்ருந்மர்த்ஸோ அந்ருதம் வதந்த: ।
தேஷாம் வபூம்ஷ்யர்சிஷா ஜாதவேத: சுஷ்கந்ந வ்ருக்ஷம் அபிஸந்தஹஸ்வ ஸ்வாஹா ॥

### மஹாவாராஹீ மஹிமை

ஸ்ரீ லலிதா பராபட்டாரிக்காவுக்கு ஸேனாநாயிகைகள் நால்வர். அவர் ஸம்பத்கரீ, அச்வாரூடா, மந்த்ரிண்யம்பா தண்டநாதா என்பவராவார்.

1. ஸம்பத்கரீ என்பவள் ஸ்ரீ லலிதா தேவியின் அங்குசம் என்ற ஆயுதத்தினின்றும் ஆவிர்பவித்தவள். யானைப்படைக்குத் தலைவி.

2. அச்வாரூடா என்பவள் பாசத்தினின்றும் உதித்தவள். குதிரைப்படைக்கு லலிதா தேவியினால் தலைவியாக நியமிக்கப்பட்டவள்.

3. மந்த்ரிண்யம்பா என்பவள் ஸ்ரீ லலிதாதேவியின் அமைச்சியர் தலைவி. லலிதைக்கு உறுதுணையாய் நிற்பவள்.

4. தண்டநாதா என்பவள் சக்திஸேனை அனைத்துக்கும் தலைவி ஸேனாநாயிகா. இவளைத்தான் வாராஹீ எனக்கூறுகின்றோம். இவளுடைய ரதத்திற்கு கிரிசக்ரரம் என்றுபெயர். கிரிசக்ரரதாரூட தண்டனாதா புரஸ்க்ருதா என லலிதா ஸஹஸ்ர நாமம் கூறும். இவள் வாஹனமாகிய ஸிம்ஹத்திற்கு வஜ்ர கோஷம் என்றுபெயர். இது மூன்று யோசனை தூரம் உயரம் கொண்டது.

இந்த தண்டநாதாவுக்கு 12 பெயர்கள் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. அவை பஞ்சமீ தண்டநாதா ஸங்கேதா ஸமயே ச்வரீ ஸமயஸங்கேதா வாராஹபோத்ரிணி சிவா வார்த்தாளீ மஹாஸேனா ஆஜ்ஞாசக்ரேச்வரீ அரிக்னா என்பனவாகும். இவளது இந்த 12 நாமாக்களையும் சொல்லுபவர் ஸங்கடம், துக்கம் இவற்றை என்றும் அனுபவிக்கமாட்டார்.

இவள் பண்டாசுரனுடைய வலது கையினின்றும் தோன்றிய விசுக்ரன் என்பவனைக் கொன்று உலகிற்கு உதவினாள்.

★★ 11-5-1976 முதல் 9-6-1976 வரை நடந்தது.

இவள் லளிதாதேவியின் வாஸபூமியான ஸ்ரீநகரத்தில் 16வது பிராகாரத்தில் வஸிக்கின்றாள். இந்த 16வது பிராகாரம் மரகதமயமானது. மஹாபத்மாடவீதியில் இருந்துகொண்டு இவள் லளிதாபரமேச்வரிக்கு அருந்தொண்டாற்றுவாள்.

இவள் நூறு ஸ்தம்பங்கள் கொண்ட மண்டபத்தில் பொன் தாமரையில் வீற்றிருப்பாள். உருக்கிய பொன் போன்ற மேனியள், செந்நிற ஆடை அணிந்து ஸர்வாபரணங்களையும் அணிந்து அழகுடன் தோன்றுவாள்.

இவள் 8 கைகளிலும் சங்கம் சக்ரம் அபயம் வரம் கலப்பை உலக்கை பாசம் அங்குசம் என்ற ஆயுதங்களைத் தரித்துக்கொண்டிருப்பாள். சந்திரகலையை சூட்டிக்கொண்டு வராஹமுகத்துடன் காக்ஷியளிப்பாள்.

இவளுக்கு உன்மத்தபைரவி ஸ்வப்னேசி திரஸ்க்ருதி கிரிபதா தேவி என்பவர் பரிவாரங்களாவர்.

இந்த வாராஹி தன்னை உபாஸிப்பவர்களுக்கு சத்ருபாதையைப் போக்குவாள். இவள் மாத்ருகா கணத்தில் ஒருவளாய் கணக்கிடப்பட்டிருக்கின்றாள். மாதாக்கள் ப்ராம்ஹீ மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, இந்த்ராணீ சாமுண்டா என்பவர். மஹாலக்ஷ்மியையும் சேர்த்து எட்டு எனக் கணக்கிடுவர். இவர் அனைவரும் உலகம் மங்களம் பெற பாடுபடுவர்.

இந்த வாராஹீ மாதா தாருகாஸுரன் சண்டையில் காளிக்கு உதவியாகவும் சம்பாஸுரன் சண்டையில் சண்டிகாதேவிக்கு உதவியாகவும் பண்டாஸுரவதத்தில் லளிதாதேவிக்கு உதவியாகவும் இருந்து பல தொண்டுகள் புரிந்திருக்கின்றாள். இவள் ப்ரேததாஸனத்தில் அமர்ந்திருப்பாள். யஞ்ஞவராஹமூர்த்தியின் உருவத்துடன் இருப்பாள். இவளுடைய த்யானங்கள் மந்த்ர சாஸ்த்ரங்களில் பலவாறாகக் கூறப்பெற்றிருக்கின்றன.

இவள் ஸ்வப்னவாராஹீ, தூம்ரவாராஹீ, ப்ருஹத்வாராஹீ. அஸ்த்ரவாராஹீ என்று பல மூர்த்திகள் பெற்றிருப்பாள். இவள் மந்த்ரஜபம் யமபயத்தையும் போக்கும். இவ்வாறான ஸ்ரீ வாராஹீ ஹோமத்தையும் உலகம் உய்ய ஸ்ரீ ஸ்வாமிகள் நடத்தினர்.



மந்த்ரமஹார்ணவம் கூறும் த்யானம் இது -

ரக்தாம்போருஹ கர்ணிகோபரிகதே
 சாவாஸநே ஸம்ஸ்திதாம்
முண்டஸ்ரக் பரிராஜமான ஹ்ருதயாம்
 நீலாச்ம ஸத்ரோசிஷம் ।
ஹஸ்தாப்ஜைர் முஸலம் ஹலாபய வரான்
 ஸம்பிப்ரதீம் ஸத்குசாம்
வார்தாளீம் அருணாம்பராம் திரிணயனாம்
 வந்தே வராஹானனாம் ॥

## வனதுர்கா

பராசக்திக்கு மஹிஷாசுரனை ஸம்ஹாரம் செய்த காரணத்தினால் மஹிஷாஸுரமர்தினீ என்றும், துர்கமாசுரனை வதைத்ததால் துர்கா என்றும் பெயர் ஏற்பட்டது. துக்கங்களினின்றும் தாரித்திரியத்தின்றும் பயத்தினின்றும் காப்பவள் துர்கை. இவள் அந்தக்கரணத்திற்கு அதிஷ்டாத்ரீ தேவதை. இவள் த்ரிகுணாத்மிகை. ஸர்தேவதாஸ்வரூபிணீ, ஸர்வமந்த்ர யந்த்ர ஸ்வரூபிணீ என்று மந்த்ரசாஸ்திரம் கூறுகிறது. இந்த துர்கை சூலினீ துர்கை, வன துர்கை, சாந்தி துர்கை, சாபரீதுர்கை, ஜாதவேதோ துர்கை, தீப துர்கை, ஜ்வாலா துர்கை, ஆஸுரீ துர்கை, லவணதுர்கை என ஒன்பது ரூபங்கள் கொண்டு உலகை உய்விக்கச் செய்கின்றாள்.

இதில் வனதுர்கை என்பவள் தேவர் வேண்டுகோளுக்கு இணங்கி விந்தியமலையை அமுக்க அகஸ்தியர் வடக்கிலிருந்து புறப்பட்டு வரும் போது காட்டிலே (வனத்திலே) இந்த துர்கையை உபாஸித்து விந்தியத்தை அமுக்கும் திறன் பெற்றார். அகஸ்தியர் வனத்திலே வழிபட்டதால் இவளுக்கு வனதுர்கை என்றே பெயர் ஏற்பட்டது.

த்யானம்

हेमप्रख्यां इन्दु खण्डात्तमौलिं
शंखारिष्टा भीति हस्तां त्रिनेत्रां ।
हेमाब्जस्थां पीत वस्त्रां प्रसन्नां
देवीं दुर्गां दिव्य रूपां नमामि ॥

## ஸ்ரீ புவனேச்வர்யை நம:
## ஸ்ரீ ஸ்வர்ணாகர்ஷண பைரவ ஹோமம்

देव्याज्ञया चक्रुरिमे यतीशाः
हेम्नः समृद्धिं तु सतां गृहेषु ।
दिदृक्षवः स्वर्णभर प्रदातृ-
श्रीभैरवाराधनकारि होमम् ॥

தேவ்யாஞ்ஞயா சக்ருரிமே யதீசா:
ஹேம்ன: ஸம்ருத்திம் து ஸதாம் க்ருஹேஷு
தித்ருக்ஷவ: ஸ்வர்ணபர ப்ரதாத்ரு-
ஸ்ரீ பைரவாராதன காரி ஹோமம் ॥

ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் தேவியின் ஆணைப்படி நல்லோரின் மனைகளில் பொன் செழித்திருப்பதைக் காண விரும்பி, பொற்குவியலளிக்கும் ஸ்ரீ பைரவரை ஆராதிக்கும் ஹோமத்தைச் செய்தனர்.

ओं ह्रीं नमः शिवाय - ओं ऐं ह्रीं श्रीं ऐं श्रीं आपदुद्धारणाय ह्रां ह्रीं ह्रीं ह्रूं अजामलवद्धाय लोकेश्वराय स्वर्णाकर्षण भैरवाय मम दारिद्र्यविद्वेषणाय महा भैरवाय नमः श्री ह्रीं ऐं ओं ह्रीं नमः शिवाय

ஓம் ஹ்ரீம் நம: சிவாய - ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் ஸ்ரீம் ஆபதுத்தாரணாய ஹ்ராம் ஹ்ரீம் ஹ்ரூம் அஜாமல பத்தாய லோகேச்வராய ஸ்வர்ணாகர் ஷணபைரவாய மம தாரித்திரிய வித்வேஷணாய மஹா பைரவாய நம: ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் ஓம் ஹ்ரீம் நம: சிவாய । என்ற ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷரீ மந்த்ரஸம்புடித ஸ்ரீஸ்வர்ணகர்ஷண பைரவ மூலமந்த்ர ஹோமம் ஸ்ரீபுவனேச்வரீ ஸந்நிதியில் 13-6-1989ல் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

ओं भैरवाय विद्महे हरिहरब्रह्मात्मकाय धीमहि ।
तन्नः स्वर्णाकर्षणभैरवः प्रचोदयात् ॥



ஓம் பைரவாய வித்மஹே ஹரிஹரப்ரம்ஹாத்மகாய தீ மஹி
தன்ன: ஸ்வர்ணா கர்ஷணபைரவ: ப்ரசோதயாத் ॥

என்பது ஸ்ரீ ஸ்வர்ணாகர்ஷண பைரவ காயத்ரீயாகும்.

भरणात् जगतो महेश्वरो रमणात्संहृतिलीलया तथा ।
वमनात् पुनरेव कीर्त्यते भगवान् भैरव इत्ययं जनैः ॥

பரணாத் ஜகதோ மஹேச்வரரோ ரமணாத் ஸம்ஹ்ருதி லீலயா ததா ।
வமனாத் புனரேவ கீர்த்யதே பகவான் பைரவ இத்யயம் ஜனை: ॥

உலகத்தை காப்பதாலும் ஸம்ஹாரம் என்ற லீலையால் விளையாடுவதாலும் மீண்டும் உண்டு பண்ணுவதாலும் பகவான் பரமேச்வரரே பைரவர் என அழைக்கப் படுகின்றார். பரணம் என்பதிலிருந்து பாவையும், ரமணம் என்பதிலிருந்து ரேபத்தையும், வமனம் என்பதிலிருந்து வாவையும் இணைத்து 'பைரவ:' என்ற சொல் விளங்குகின்றது என்பர் பைரவ மதத்தைச் சார்ந்தோர்.

मदमत्त सुरादि शिक्षणं किल कर्तुं भगवान्महेश्वरः ।
अभजत्भुवि भैरवात्मतां नहि भेदोऽस्ति तयोर्महात्मनोः ॥

மதமத்த ஸுராதிசிக்ஷணம்
கில கர்த்தும் பகவான் மஹேச்வர: ।
அபஜத் புவி பைவாத்மதாம்
நஹி பேதோऽஸ்தி தயோர் மஹாத்மனோ: ॥

மதங்கொண்ட தேவர் முதலானவர்களை சிக்ஷிப்பதற்காக பகவான் பரமேச்வரர் உலகில் பைரவஸ்வரூபத்தை ஏற்றார் மஹாத்மாக்களான பரமேச்வரனுக்கும் பைரவருக்கும் பேதம் கிடையாது (பிரம்மா ஒரு ஸமயம் மதங் கொண்டு சிவநிந்தை செய்ய பகவான் பைரவராகி அவர் சிரத்தை அறுத்தார் என புராணம் கூறும்)

श्री भैरवं शंकरपूर्णरूपं सर्वेश्वरस्य स्मरणात् प्रजातं ।
विमोहिताः शंकरमाययैव मूढा न जनन्ति शिवादभिन्नम् ॥

ஸ்ரீ பைரவம் சங்கர பூர்ணரூபம்
ஸர்வேச்வரஸ்ய ஸ் மரணாத் ப்ரஜாதம் ।
விமோஹிதா: சங்கரமாயயைவ
மூடா ந ஜானந்தி சிவாதபின்னம் ॥

ஸர்வேசனாகிய பரமேச்வரனுடைய ஸ்மரண மாத்திரத்தினால் உதித்த, சங்கரருடைய பூர்ணரூபமான ஸ்ரீ பைரவரை சங்கரரின் மாயையால் மோஹமடைந்த மூடர்கள் சிவனை விட வேறில்லாதவராக (சிவனாகவே) அறிவதில்லை. (வீரபத்திரர் பைரவர் ஸ்கந்தர் முதலானோர் சிவஸ்வரூபிகளே என்பதை ஸ்காந்த புராணத்தின் மூலமாய் அறியலாம்).

श्री भैरवेणाप्यसितांग भैरवा-
यनेकरूपाणि धृतानि लीलया ।
हिताय लोकस्य विशिष्य तेषुच
स्वर्णप्रदः सर्वजनैः प्रपूज्यते ॥

ஸ்ரீ பைரவேணாப் யஸிதாங்கபைரவா
த்யனேகரூபாணி த்ருதானி லீலயா ।
ஹிதாய லோகஸ்ய விசிஷ்ய தேஷுச
ஸ்வர்ணப்ரத: ஸர்வஜனை: ப்ரபூஜ்யதே ॥

ஸ்ரீபைரவரால் விளையாட்டாகவே அஸிதாங்க பைரவர் முதலிய அநேக பைரவ ரூபங்கள் ஏற்கப்பட்டன. அவற்றுள் குறிப்பாக ஸ்வர்ணாகர்ஷண பைரவர்தான் ஸகல ஜனங்களாலும் சிறப்பாக பூஜிக்கப்பட்டுகின்றார். (பைரவர்கள்:- அஸி தாங்க பைரவர் ருருபைரவர், சண்ட பைரவர், க்ரோத பைரவர், உன்மத்த பைரவர் கபால பைரவர், பீஷண பைரவர் ஸம்ஹாரபைரவர் என்பவர் எண்மராவார் மற்றும் கால பைரவ: வடுக பைர்வர் என்றும் பலர் உள்ளனர்).

अस्य प्रसादेन कुबेरतुल्यो
भक्तः सुखी स्वर्ण समृद्धगेहः ।
दुःखानभिज्ञश्च तथाष्टलक्ष्मी-
प्रसाद पात्रं च भवेज्जगत्याम् ॥



அஸ்ய ப்ரஸாதேன குபேரதுல்யோ
பக்த: ஸுகீ ஸ்வர்ணஸம்ருத்தத கேஹ: ।
துக்கான பிஞ்ஞச்ச ததாஷ்டலக்ஷ்மீ
ப்ரஸாத பாத்ரம்ச பவே ஜ்ஜகத்யாம் ॥

இந்த ஸ்வர்ணாகர்ஷண பைரவரின் அருளால் உபாஸிக்கும் பக்தன், உலகில் சுகியாய், வீடு நிறைந்த பொன்னுடைய வனாய், துக்கத்தையே காணாதவனாய், அஷ்ட லக்ஷ்மீக்களின் அருளுக்கும் பாத்திரமாகின்றான்.

(மூலமந்த்ரத்திலுள்ள ஆபதுத்தாரண அஜாமலபத்தன, லோகேச்வர, ஸ்வர்ணாகர்ஷண பைரவ, தாரித்ரிய வித்வேஷண என்ற சொற்கள் கீழுள்ள ச்லோகங்களில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.) ''ஆபணஸ்தாய'' என்ற பதமும் மூலமந்த்ரங்களில் காணப்படுகின்றது.

हर्ताऽपदां स्वर्णसमानदेहः
दारिद्र्य विद्वेषणकृच शक्तः ।
आकर्षणे स्वर्णचयस्य सर्व-
लोकेश्वरोऽजामलवन्धनश्च ॥

पात्रंच हैमं डमरू त्रिशूलं
पाशं दधानः सहितश्च देव्या ।
त्रिमूर्तिरूपः श्रुतिसारमेय-
वाहस्त्रिनेत्रश्च सदापणस्थः ॥

सिंहासनस्थः शुभपारिजात-
मूले विराजन्मणिमण्डपान्तः ।
विभूषितांगः कनकांबरो मे
श्री भैरवः स्वर्णचय प्रदोस्तु ॥

ஹர்த்தாபதாம் ஸ்ர்ணஸமானதேஹ:
தாரித்ரியவித்வேஷணக்ருச்ச சக்த: ।
ஆகர்ஷணே ஸ்வர்ணசயஸ்ய ஸர்வ
லோகேச்வரரோऽஜாமல பந்தனச்ச ॥

பாத்ரம்ச ஹைமம் டமரும் த்ரிசூலம்
பாசம் ததான: ஸஹிதச்ச தேவ்யா ।
த்ரிமூர்த்திரூப: ச்ருதிஸாரமேய
வாஹஸ் த்ரிநேத்ரச்ச ஸதாபனஸ்த: ॥

ஸிம்ஹாஸனஸ்த: சுப பாரி ஜாத
மூலே விராஜன்மணி மண்டபாந்த: ।
விபூஷிதாங்க: கனகாம்பரோ மே
ஸ்ரீ பைரவ: ஸ்வர்ணசம் ப்ரதோऽஸ்து ॥

இந்த பைரவர் ஆபத்தைப் போக்குபவர், பொன்னிறத்தினர், வறுமையைப் போக்குபவர், பொற்குவியலை கொண்டு வந்து தருபவர் எல்லா உலகங்களுக்கும் ஈச்வரர் மாயா மலத்தைப் போக்குபவர் பொற்பாத்திரம் டமருகம் (உடுக்கு) மூச்சூலம் பாசம் இவை ஏற்றவர் (கரத்தினர்) தேவியுடன் இருப்பவர். பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் என்ற மூர்த்திகளின் ஸ்வரூபமானவர்.

நாயுருவம் கொண்ட வேதத்தை வாஹனமாகக் கொண்டவர். முக்கண்ணர் கடைகளிலும் அமர்ந்தருளுபவர். பாரிஜாத விருக்ஷத்தின் அடியில் மணிமண்டபத்தில் ஸிம்மாஸனத்தில் பொன்னாடை தரித்து அலங்கிருதராய் அமர்ந்தருளும் ஸ்ரீ ஸ்வர்ணாகர்ஷண பைரவர் எனக்கு பொற்குவியல் அளிக்கட்டும்.

यः पूजयेद्वादश नामभिस्तु
स्वर्ण प्रदाद्यैः किल भक्तियुक्तः ।
श्री भैरवः स्वर्णचयं प्रतुष्टः
तस्मै प्रदद्यादिति चाहु रार्याः ॥

ய: பூஜயேத் த்வாதச நாமபிஸ்து
"ஸ்வர்ணப்ரதா" த்யை: கில பக்தி யுக்த: ।
ஸ்ரீபைரவ: ஸ்வர்ணசயம் ப்ரதுஷ்ட:
தஸ்மை ப்ரதத்யாதிதி சாஹு ரார்யா: ॥

எவன் பக்தியுடன் "स्वर्णप्रदः ஸ்வர்ணப்ரத என்று தொடங்கும் பன்னிரண்டு நாமாக்களால் பூஜிக்கின்றானோ அவனுக்கு ஸ்ரீபைரவர் பொற்குவியலை அருள்வார் என்று சாஸ்திரமறிந்த பெரியோர் கூறுவர். அந்த பன்னிரண்டு நாமக்கள்



| | |
|---|---|
| स्वर्णप्रदः | सिद्धिदः |
| स्वर्णवर्षी | करूणामूर्तिः |
| स्वर्णाकर्षणभैरवः | भक्ताभीष्टप्रपूरकः |
| भक्तप्रियः | निधिसिद्धिप्रदः |
| भक्तवश्यः | स्वर्णसिद्धिदः |
| भक्ताभीष्टफलप्रदः | रससिद्धिदः |

ஸ்வர்ணப்தர் ஸ்வர்ணவர்ஷீ ஸ்வர்ணாகர்ஷண பைரவர் பக்தப்ரியர் பக்த வச்யர் பக்தா பீஷ்ட பலப்ரத: ஸித்திதர் கருணாமூர்த்தி: பக்தாபிஷ்ட ப்ரபூரகர் நிதிஸித்திப்ரதர் ஸித்திதர் என்பனவாகும். இதைப் பயன்படுத்தும் முறையை மந்த்ர சாஸ்திர மறிந்தவர் மூலமாய் தெரிந்து கொள்ளவும்.

सप्तशत्या सदा होमं नित्यं सप्तशतीजपम् ।
कारयन्ति बुधैरेते भक्तानामिष्टसिद्धये ॥
कदाचिच्छूलिनीहोमः दुर्गायाः प्रीतिवर्धनः ।
भक्तप्रार्थनया तद्वत् क्रियते शक्तिसन्निधौ ॥ ४३ ॥

ஸப்த சத்யா ஸதா ஹோமம் நித்யம்ஸப்சதீ ஜபம் ।
காரயந்தி புதைரேதே பக்தானாமிஷ்ட ஸித்தயே ॥
கதாசித் சூலினீஹோம: துர்காயா: ப்ரீதிவர்தன: ।
பக்த ப்ரார்தனயா தத்வத் க்ரியதே சக்தி ஸந்நிதௌ ॥

ஸ்வாமிகள் பக்தர்களின் இஷ்டஸித்தியைக் கருதி ஸப்தசதி ஹோமம், ஸப்தசதி ஜபம் இவைகளை வித்வான்களைக் கொண்டு செய்விக்கின்றனர். அவ்வாறே பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி துர்கைக்கு மகிழ்வளிக்கும் சூலினீ ஹோமமும் செய்யப்படுகின்றது.

क्रियते नित्यं विधिवत् गणपतिहोमस्ततो महन्यासः
रुद्रजपश्चावरणैर्नवभिर्मेरौ सहैव देव्यर्चा ॥ ४५ ॥

க்ரியதே நித்யம் விதிவத் கணபதிஹோமஸ் ததோ மஹன்யாஸ: ।
ருத்ரஜபச்சாவரணைர் நவபிர் மேரௌ ஸஹைவ தேவ்யர்சா ॥

இங்கு நித்தம் முறைப்படி கணபதி ஹோமம் அதன் பின் ருத்ர ஜபமும் மஹன்யாஸமும் மேருவில் நவாவரணத்துடன் கூடிய தேவிக்கு அர்ச்சனையும் செய்யப்படுகின்றது.

नित्यं भुवनेश्वर्याः ललितारुपेण भाव्यमानायाः ।
ललितासहस्रनामभिरर्चा क्रियते मुदार्चकश्रेष्ठैः ॥ ५५ ॥

நித்யம் புவனேச்வர்யா: லலிதாரூபேண பாவ்யமானாயா: ।
லலிதா ஸஹஸ்ரநாமபிரார்சா க்ரியதே முதார்ச்சக ச்ரேஷ்டை: ॥

இங்கு லலிதாவாக பாவிக்கப்பட்டு ஸ்ரீபுவனேச்வரீ தேவிக்கு லலிதா ஸஹஸ்ரநாமாக்களால் அர்ச்சகர்களினால் அர்ச்னையும் செய்யப்பட்டுகின்றது.

स्कान्दं देवीचरितं रामकथां भारतं च बहवोऽत्र ।
विद्वांसः पटुवचनाः कथयन्तो नित्यमेव शोभन्ते ॥ ५६ ॥

ஸ்காந்தம் தேவீசரிதம் ராமகதாம் பாரதம் சபஹவோऽத்ர ।
வித்வாம்ஸ: படுவசனா: கதயந்தோ நித்யமேவ சோபந்தே ॥

இங்கு நித்தம் ஸ்கந்த புராணம், தேவிபாகவம், ஸ்ரீமத் ராமாயணம், பாரதம் முதலியவற்றை அழகிய சொல்லுடைய பல வித்வான்கள் சொல்லிக் கொடிருக்கின்றனர்.

गायकाश्चकवयः कलाविदो नामकीर्तनपराश्च ये बुधाः ।
योगिवर्यकरुणाविलेक्षणैः मानिताश्च मुदिताः प्रयान्ति ते ॥ ४३ ॥

காயகாச்ச கவய: கலாவிதோ நாமகீர்தனபராச்ச யே புதா: ।
யோகிவர்சய கருணாவிலேக்ஷணை: மானிதாச்ச முதிதா: ப்ரயாந்தி தே ॥

(உரை) இங்கு பாடகர்கள் கலிகள், கலைஞர்கள் நாம ஸங்கீர்த்தனம் செய்பவர்கள், வித்வான்கள் இவர்கள் எல்லாம் ஸ்ரீ சந்தானந்த ஸ்வாமிகளுடைய கருணை நிறைந்த பார்வையால் வெகுமானிக்கப்பட்டு மகிழ்ச்சியுடன் சொல்லுகின்றனர்.

पुरतो भुवनेवर्याः पाठशालापि शोभने ।
यतीश्वराणां वेदेषु श्रद्धां विद्योतयन्त्यहो ॥ ५७ ॥



कुलाचार सुसंपन्नाः विनीता ब्रह्मचारिणः
सात्विकाहार पुष्टांगाः समिदाधानकारिणः ॥ ५८ ॥
विख्यातैर्वेदविद्वद्भिरुपाध्यायैः सुशिक्षिताः ।
नियमाध्ययनोयुक्ताः वटवोऽत्र वसन्ति च ॥ ५९ ॥

புரதோ புவனேச்வர்யா: பாடசாலா விராஜதே ।
யதீச்வராணாம் வேதேஷு ச்ரத்தாம் வித்யோதயந்த்யஹோ ॥
குலாசாரஸுஸம்பன்னா: விநீதா ப்ரம்ஹசாரிண: ।
ஸாத்விகாஹார புஷ்டாங்கா: ஸமிதாதானகாரிண: ॥
விக்யாதைர் வேதவித்வர்யைருபாத்யாயை: ஸுசிக்ஷிதா: ।
நியமாத்யயனோத் யுக்தா: வடவோऽத்ர வஸந்தி ச ॥

(உரை) புவனேச்வரீ தேவியின் முன், சாந்தானந்த ஸ்வாமிகளுக்குள்ள வேத நம்பிக்கையைப் பிரகாசப்படுத்திக்கொண்டு ஒரு வேத பாடசாலையும் விளங்கிக்கொண்டு இருக்கிறது. குலாசாரம் உடையவர்களும், வணக்கமுடையவர்களும் ஸாத்விக ஆஹாரம் உண்டு பலத்துடன் இருப்பவர்களும் "ஸமிதாதானம்" செய்பவர்களும் சிறந்த புகழ் பெற்ற வேதமறிந்த உபாத்யாயர்களால் கற்பிக்கப்படுகின்றவர்களுமான பிரம்மச்சாரிகள் இங்கு முறையுடன் கூடிய வேதத்தை பயிலும் முயற்சியுடன் வஸித்து வருகின்றனர்.

# श्रीस्कन्दगिरौ बहुदेवताप्रतिष्ठा

## ஸ்ரீ ஸ்கந்தகிரியில் பல தெய்வங்களின் பிரதிஷ்டை

श्रीस्कन्दशैलोपरि पूज्यशान्ता-
नन्दाख्य सन्यासिवरेण क्लृप्तः ।
स्कन्दाश्रमो द्राविडभूमिभागे
श्रीस्कन्ददुर्गानिलयो विभाति ॥ १॥

ஸ்ரீஸ்கந்தசைலோபரி பூஜ்யசாந்தா
னந்தாக்ய ஸன்யாஸிவரேண க்லுப்த: ।
ஸ்காந்தாச்ரமோ த்ராவிடபூமிபாகே
ஸ்ரீஸ்கந்த துர்காநிலயோ வீபாதி ॥

உரை: தமிழ் நாட்டில் ஸ்கந்தகிரியின் மீது மதிப்பிற்குரிய ஸ்ரீசாந்தானந்த ஸ்வாமிகளால் அமைக்கப்பட்ட "ஸ்கந்தாச்ரமம்" ஸ்ரீ முருகப்பெருமான் ஸ்ரீ துர்கை இவர்கள் வீற்றிருக்கும் இடமாகத் திகழ்கிறது.

अस्ति द्राविडभूभागे पूर्णा धान्यधनादिभिः ।
शेलाभिधाना नगरी शीलवद्भिर्जनैर्वृता ॥ २ ॥

அஸ்தி த்ராவிடபூபாகே பூர்ணா தான்யதனாதிபி: ।
சேலாபிதானா நகரீ சீலவத்பிர் ஜனைர் வ்ருதா ॥

உரை: தமிழ நாட்டில் தனதான்யங்கள் நிறைந்ததும் நல்லொழுக்கமுடைய ஜனங்கள் நிறைந்ததுமான சேலம் என்று ஒரு பட்டினம் இருக்கின்றது.

तस्या नगर्याः सविधे मनुष्यैरुत्तमैर्वृतः ।
उडयापट्टि नामास्ति ग्रामः शान्तिप्रदो नृणाम् ॥ ३ ॥
तत्र स्कन्दगिरिर्नामा प्रथितः पर्वतोत्तमः ।
श्रीशान्तानन्दयोगीन्द्राधिष्ठितः संप्रकाशते ॥ ४ ॥



தஸ்யா நகர்யா: ஸவிதே மனுஷ்யைருத்தமைர் வ்ருத: ।
"உரையாட்பட்டி" நாமாஸ்தி க்ராம: சாந்திப்ரதோ ந்ருணாம் ॥

தத்ர ஸ்கந்தகிரிர்நாமா ப்ரதித: பர்வதோத்தம: ।
ஸ்ரீசாந்தானந்த யோகீந்த்ராதிஷ்டித: ஸம்ப்ரகாசதே ॥

உரை: அந்த சேலத்திற்கு பக்கத்தில் உத்தம மனிதர்களால் சூழப்பெற்றதும் மக்களுக்கு மனச்சாந்தி அளிக்ககூடியதுமான "உடையாப்பட்டி" என்றொரு கிராமம் இருக்கின்றது. அங்கு ஸ்ரீ சாந்தானந்த யோகிகள் தங்கியிருக்கும் ஸ்கந்தகிரி என்ற பிரஸித்தமான மலையொன்று விளங்கிக்கொண்டிருக்கின்றது.

उत्तरस्यां प्रतीच्यां च प्राच्यां दिशि महोच्छितैः ।
पर्वतैः शाद्वलश्यामैः संवृतो यो विराजते ॥ ५ ॥

नालिकेरैः कदम्बैश्च वन्यैरन्यैर्महीरुहैः ।
नृणां मनांसि चक्षूंसि यस्तर्पयति सन्ततम् ॥ ६ ॥

शालिक्षेत्राणि रम्याणि सस्यशोभीनि सन्ततम् ।
कम्बलान्यास्तृतानीव भ्राजन्ते यद्गिरेस्तटे ॥ ७ ॥

पार्श्वत्रये गिरिश्रेष्ठैः वृतः स्कन्दगिरिः शुभः ।
त्रिमूर्तिभिः परिवृतः सेनानीरिव शोभते ॥ ७ ॥

உத்தரஸ்யாம் ப்ரதீச்யாம் ச ப்ராச்யாம் திசி மஹோச்ரிதை: ।
பர்வதை: சாத்வலச்யாமை: ஸம்வ்ருதோ யோ விராஜதே ॥

நாளிகேரை: கதம்பைச்ச வன்யை ரன்யைர் மஹீருஹை: ।
ந்ருணாம் மனாம்ஸி சக்ஷும்ஷி யஸ் தர்பயதி ஸந்ததம் ॥

சாலிக்ஷேத்ராணி ரம்யாணி ஸஸ்ய சோபீனி ஸந்ததம் ।
கம்பளான்யாஸ்த்ருதானீவ ப்ராஜந்தே யத்கிரேஸ்தடே ॥

பார்ச்வத்ரயே கிரிச்ரேஷ்டை: வ்ருத: ஸ்கந்தகிரி: சுப: ।
த்ரிமூர்த்திபி: பரிவ்ருத: ஸேனாநீரிவ சோபதே ॥

உரை: வடக்கு, மேற்கு, கிழக்கு திசைகளில் மிகவும் உயர்ந்திருக்கும், புற்களால் பசுமையான மலைகளால் சூழப்பட்டிருக்கின்றது. தென்னை கடம்பு மற்றும்முள்ள காட்டு மரங்களால் ஜனங்களின் மனதையும் கண்களையும் அது மகிழ்விக்கின்றது. இம்மலையின் தாழ்வரையில் உள்ள அழகிய பயிர்களால் திகழும் சம்பா நெல் விளையும் நிலங்கள் எப்போதும் கம்பளம் விரிக்கப்பட்டிருப்பது போன்று தோன்றுகின்றன. மூன்று பக்கங்களிலும் பெரும் மலைகளால் சூழப்பட்டிருக்கும் இந்த அழகிய ஸ்கந்தகிரி மும்மூர்த்திகளால் சூழப்பெற்ற ஸேனாதிபதியாகிய திருமுருகன் போன்று விளங்குகின்றது.

यत्र कन्यानदी शीतपूतवातो मनोहरः ।
आगतानां नृणां दोषानशेषान्क्षिपति क्षणात् ॥ ९ ॥

यस्यामुत्तरवाहिन्यां कन्यानद्यां गिरेस्तटे ।
स्नातानां कन्यकानां तु कल्याणमचिराद्भवेत् ॥ १० ॥

कन्यानद्याः शुभे तीरे कन्यादेवी विराजते ।
कन्याभिर्भर्तृकामाभिः या नित्यं समुपास्यते ॥ ११ ॥

யத்ர கன்யா நதீ சீதபூதவாதோ மனோ ஹர: ।
ஆகதானாம் ந்ருணாம் தோஷானசேஷான்க்ஷிபதி க்ஷணாத் ॥

யஸ்யாமுத்தர வாஹின்யாம் கன்யா நத்யாம் கிரே ஸ்தடே ।
ஸ்னாதானாம் கன்யகானாம் து கல்யாணமசிராத் பவேத் ॥

கன்யாநத்யா: சுபே தீரே கன்யாதேவீ விராஜதே ।
கன்யாபிர் பர்த்ருகாமாபி: யா நித்யம் ஸமுபாஸ்யதே ॥

உரை: இங்கு "கன்னிமார் நதியின்" குளிர்ந்த தூயதான மனதிற்குந்த காற்று அங்கு வருகின்ற மனிதர்களின் எல்லா விதமான குறைகளையும் கண நேரத்தில் போக்குகின்றது. மலையின் தாழ்வரையில் வடக்கு முகமாக ஓடும் கன்னிமார் நதியில் ஸ்னானம் செய்த கன்னிப் பெண்களுக்கு சீக்கிரம் கல்யாணம் ஆகும். புருஷனை விரும்பும் கன்னிப் பெண்களால் பூஜிக்கப்படுகின்ற "கன்யாதேவீ" அந்தக் கன்னிமார் நதியின் கரையில் விளங்குகின்றாள்.



अस्मिन्स्कन्दगिरौ पुण्ये रम्ये स्कन्दाश्रमाभिधे ।
शान्तानन्दाख्य योगीन्द्रैः दण्डपाणिः प्रतिष्ठितः ॥ १२ ॥

ललाटपट्टविभ्राजत्तिलकेनातिसुन्दरः ।
रत्नकुण्डलसंशोभि गण्डद्वयमनोहरः ॥ १३ ॥

अव्याजकरुणापूर्ण विशालायतलोचनः ।
यज्ञोपवीतविलसत्पृथुवक्षाः किरीटभृत् ॥ १४ ॥

अवाङ्मनसनिर्वर्ण्यसौन्दर्यलहरीमयः ।
मुखाब्जप्रसरन्मन्द स्मित सं रक्षिताश्रितः ॥ १५ ॥

कट्याहितकराब्जेन रमणीयतराकृतिः ।
कटिसन्नद्धकौपीनपट्टवस्त्रसमुज्ज्वलः ॥ १६ ॥

विभूत्यालिप्तसर्वाङ्गः सुमनो मालयान्वितः ।
स्वपादयोः प्रणमतां भक्तानां शुद्धचेतसाम् ॥ १७ ॥

भोगं मोक्षं च सततं सर्वेषां वितरन्निव ।
यः प्रागभिमुखस्तिष्ठन् दण्डाङ्कितकराम्बुजः ॥ १८ ॥

रक्ताम्भोजयुगस्पर्धि पादद्वयसमुज्ज्वलः ।
वीक्षमाणो लोचनाभ्यां अनुगृण्हाति मानवान् ॥ १९ ॥

அஸ்மின் ஸ்கந்தகிரௌ புண்யே ரம்யே ஸ்கந்தாச்ரமாபிதே ।
சாந்தானந்தாக்ய யோகீந்த்ரை: தண்டபாணி: பிரதிஷ்டித: ॥ (12)

லலாடபட்டவிப்ராஜத் திலகேனாதிசுந்தர: ।
ரத்னகுண்டல ஸம்சோபி கண்டத்வய மனோஹர: ॥ (13)

அவ்யாஜகருணாபூர்ண விசாலாயத லோசன: ।
முகாப்ஜ ப்ரஸரன்மந்த ஸ்மிதஸம்ரக்ஷிதாச்ரித: ॥ (14)

அவாங்மனஸ நிர்வர்ண்ய ஸௌந்தர்ய லஹரீ மய: ।
யஞ்ஞோபவீத விலஸத் ப்ருதுவக்ஷா: கிரீடப்ருத் ॥ (15)

கட்யாஹிதகராப்ஜேன ரமணீய தராக்ருதி: ।
கடிஸன்னத்த கௌபீன பட்டவஸ்த்ர ஸமுஜ்வல: ॥ (16)

விபூத்யா லிப்த ஸர்வாங்க: ஸுமனோ மாலயான்வித: ।
ஸ்வபாதயோ: ப்ரணமதாம் பக்தானாம் சுத்தசேதஸாம் ॥ (17)

போகம் மோக்ஷம் ச ஸததம் ஸர்வேஷாம் விதரன்னிவ ।
ய: ப்ராகபிமுக: திஷ்டன் தண்டாங்கித கராம்புஜ: ॥ ॥ (18)

ரக்தாம்போஜ யுகஸ்பர்த்தி பாதத்வய ஸமுஜ்வல: ।
வீக்ஷமாணோ லோசனாப்யாம் அநுக்ருண்ஹாதி மானவான் ॥ (19)

*உரை:* இந்த ஸ்கந்தகிரியில் உள்ள புண்யமான அழகிய ஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீ சாந்தனந்த ஸ்வாமிகள் அவர்களால் ஸ்ரீ தண்டபாணி பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றார். இந்த தண்டபாணி அகன்ற நெற்றியில் ஒளிரும் திலகத்தினால் அழகியவராய், ரத்ன குண்டலங்கள் விளங்கும் இரு கன்னங்களால் மனதைக் கவருகின்றவராய், இயற்கையாகவே கருணை நிறைந்த அகன்ற நீண்ட கண்ணுள்ளவராய் முகாரவிந்தத்தினின்றும் வெளிவரும் புன்முறுவலால் தன்னை அடைந்தோரைக் காப்பாற்றுகின்றவராய், மனதாலும் சொல்லாலும் வர்ணிக்க இயலாத ஸௌந்தர்ய பிரவாஹமாய், பூணூல் திகழும் மார்பினராய், கிரீடம் தரித்தவராய், இடுப்பில் வைத்திருக்கும் கரத்தினால் மிக அழகிய உருவமுள்ளவராய், இடையில் தரித்திருக்கும் கோவணத்தினராய் விபூதி பூசிய மேனியராய், பூமாலை அணிந்தவராய், தன்னடி பணியும் தூய பக்தர்களுக்கு எப்போதும் போகத்தையும், மோக்ஷத்தையும் அருளுவான்போல இரண்டு கண்களால் நோக்குபவராய், தண்டம் தரித்த கையினராய், செந்தாமரை போன்ற இரண்டு திருவடிகளுடன் கிழக்கு முகமாய் நின்றிருந்து எல்லோருக்கும் அருள் வழங்குகின்றார்.

स्कन्दाश्रमे दण्डपाणिः कदाचिद् भूतिभूषितः ।
प्रसिद्धस्य शिवगिरेः स्मृतिं जनयति प्रभुः ॥ २० ॥

किरीटालंकृतः शक्तिपाणि; सुमविभूषितः ।
गन्ध शैलं स्मारयति कदाचिद्भक्तमानसम् ॥ २१ ॥



भूषितो विविधैर्वस्त्रैः भूषणैश्चापि चन्दनैः ।
सत्याचलं स्वामिगिरिं तथा श्रीपूर्णपर्वतम् ॥ २२ ॥

अन्यानपि स्कन्दलीला पात्रभूतान्महीधरान् ।
दृशोः पात्रीकरोत्यत्र भगवान्पार्वतीसुतः ॥ २३ ॥

दर्शनाच्छ्रीस्कन्दगिरेः स्कन्दावासमहीभृताम् ।
दर्शनोत्था महाप्रीतिः दृढं समुपजायते ॥ २४ ॥

ஸ்கந்தாச்ரமே தண்டபாணி: கதாசித் பூதிபூஷித: ।
ப்ரஸித்தஸ்ய சிவகிரே: ஸ்ம்ருதிம் ஜனயதி ப்ரபு: ॥ (20)

கிரீடாலங்க்ருத: சத்தி பணி: ஸுமவிபூஷித: ।
கந்தசைலம் ஸ்மாரயதி கதாசித் பக்தமானஸம் ॥ (21)

பூஷிதோ விவிதைர் வஸ்த்ரை: பூஷணைச்சாபி சந்தணை: ।
ஸத்யாசலம் ஸ்வாமிகிரிம் ததா ஸ்ரீபூர்ணபர்வதம் ॥ (22)

அன்யானபி ஸ்கந்தலீலா பாத்ரபூதான் மஹீதரான் ।
த்ருசோ: பாத்ரீ கரோத்யத்ர பகவான் பார்வதீஸுத: ॥ (23)

தர்சனாத் ஸ்ரீஸ்கந்தகிரே: ஸ்கந்தாவாஸ மஹீப்ருதாம் ।
தர்சனோத்தா மஹாப்ரீதி: த்ருடம் ஸமுபஜாயதே ॥ (24)

*உரை:* ஸ்கந்தாசிரமத்தில் ஒரு ஸமயம் விபூதி அலங்காரம் செய்யப்பட்ட தண்டபாணி, புகழ் பெற்ற சிவகிரியின் (பழநியின்) ஞாபகத்தை உண்டுபண்ணுகிறார். ஒரு ஸமயம் சக்திபாணியான முருகன் கிரீடத்தினாலும், பூக்களாலும் அலங்கரிக்கப்பட்டவனாய் இருந்து கொண்டு பக்தர்களின் மனதிற்கு திருச்செந்தூரை நினைவுபடுத்துகின்றார். அவ்வாறே பார்வதி நந்தனனாகிய முருகன் பலவித வஸ்திரங்களாலும், ஆபரணங்களாலும், சந்தனத்தினாலும் அலங்கரிக்கப்பட்டவராய் இருந்துகொண்டு திருப்பரங்குன்றம், சுவாமிமலை, திருத்தணி மற்றும் திருமுருகன் திருவிளையாடல் புரியும் மற்ற மலைகளையும் நம்முன் காட்டுகின்றார். ஸ்கந்தகிரியை பார்ப்பதால் முருகன் வீற்றிருக்கும் பல மலைகளைக் காணும் ஒரு மன நிறைவு ஏற்படுகின்றது.

मूलाधारं परगिरिः स्वाधिष्ठानं जवन्तिका ।
गिरिः शिवाचलाभिख्यो मणिपूरकसंज्ञितः ॥ २४ ॥

अनाहतं तु कावेरीतीरस्थस्वमिपर्वतः ।
फलपूर्णगिरिः ख्यातः विशुद्धिः शुद्धिकृन्नृणाम् ॥ २५ ॥

आज्ञाचक्रं स्कन्दलीला पात्रभूता महीधराः ।
हेमकूटो द्वदाशान्तः इति योगविदो विदुः ॥ २७ ॥

மூலாதாரம் பரகிரி: ஸ்வாதிஷ்டானம் ஜவந்திகா ।
கிரி: சிவாசலபிப்க்யோ மணிபூரக ஸம்ஞ்ஞித: ॥ (25)

அனாஹதம் து காவேரீதீரஸ்த ஸ்வாமி பர்வத: ।
பல்பூர்ணகிரி: க்யாத: விசுத்தி: சுத்திக்ருத் ந்ருணாம் ॥ (26)

ஆஞ்ஞாசக்ரம் ஸ்கந்தலீலா பாத்ரபூதா மஹீதரா: ।
ஹேமகூடோ த்வாதசாந்த: இதி யோகவிதோ விது: ॥ (27)

உரை:- திருப்பரங்குன்றம் மூலாதாரம், திருச்செந்தூர் ஸ்வாதிஷ்டானம், பழநிமலை மணிபூரகம், காவேரீ நதிக்கரையில் உள்ள ஸ்வாமிமலை அனாஹதம், மனிதர்களுக்குத் தூய்மை அளிக்கும் பழமுதிர்சோலை விசுத்தி. ஸ்கந்தன் திருவிளையாடல் புரியும் மற்றைய பர்வதங்கள் ஆஞ்ஞாசக்ரம். ஹேமகூடம் (கதிர்காமம்) த்வாதசாந்தம் என யோகமறிந்தோர் கூறுகின்றனர்.

वर्तते यः सुविदिते शिवगिर्याख्य पर्वते ।
दण्डपाणिः स एवेह भाति स्कन्दाश्रमे सुखम् ॥ २८ ॥

வர்த்ததே ய: ஸுவிதிதே சிவகிர்யாக்ய பர்வதே ।
தண்டபாணி: ஸ ஏவேஹ பாதி ஸ்கந்தாச்ரமே ஸுகம் ॥ (28)

உரை: பிரஸித்தமான பழநிமலையில் (சிவகிரியில்) வசிக்கும் அதே தண்டபாணி தெய்வமே இந்த ஸ்கந்தாச்ரமத்தில் சுகமாய் விளங்கிக்கொண்டிருக்கின்றார்.



### ஸ்கந்த வழிபாட்டால் ஏற்படும் பயன்

दण्डपाणिः प्रणमतां पश्यतां स्मरतां तथा ।
गृणतां पुण्यनामानि परिचर्यारतात्मनाम् ॥ २९ ॥

नानवाप्तव्यमस्त्यत्र स्कन्दपादार्पितात्मनाम् ।
पापाः सर्वे प्रणश्यन्ति स्कन्दार्चनकृतामपि ॥ ३० ॥

தண்டபாணிம் ப்ரணமதாம் பச்யதாம் ஸ்மரதாமபி ।
க்ருணதாம் புண்யநாமானி பரிசர்யா ரதாத்மனாம் ॥ (29)

நானவாப்தவ்யமஸ்த்யத்ர ஸ்கந்த பாதார்பிதாத்மனாம் ।
பாபா: ஸர்வே ப்ரணச்யந்தி ஸ்கந்தார்சன க்ருதாமபி ॥ (30)

உரை: தண்டபாணியை நமஸ்காரம் செய்பவர்களுக்கும், தரிசனம் செய்பவர்களுக்கும் நினைப்பவர்களுக்கும், புண்ணிய நாமாக்களை கூறுபவர்களுக்கும், தொண்டு செய்வதில் ஈடுபட்டவர்களுக்கும், ஸ்கந்தனுடைய பாதாரவிந்தங்களில் தன்னை அர்பணித்துக் கொண்டவர்களுக்கும், ஸ்கந்தனுக்கு அர்சனை செய்பவர்களுக்கும் அடைய முடியாதது என்பதே கிடையாது. அவனுடைய எல்லாப் பாபங்களும் நசித்துவிடுகின்றன.

तिलकस्वामिनः पूजां कुर्वन्सिद्धिमवाप्नुयात् ।
याज्ञयवल्क्यमहर्षेस्तु स्मृतेरेवं प्रतीयते ॥ ३१ ॥

स्कन्दाप्रजाभिवृद्धिं च लौगाक्षिस्मृतिराह हि ।
अङ्गारकग्रहकृता पीडा नैव भवेन्नृणाम् ॥ ३२ ॥

भौमवारे कार्तिकेयं भक्त्या पूजयतां तथा ।
कार्त्तिके कृतिकायोगे कृत्तिकापुत्रदर्शिनाम् ॥ ३३ ॥

ब्रह्मवित्तमताप्राप्तिः भवेदिति च कीर्त्यते ।
भक्तश्च यः कार्तिकेये काकुस्थ भुवि मानवः ॥ ३४ ॥

आयुष्मान्पुत्रपौत्रैश्च स्कन्दसालोक्यमाप्नुयात् ।
विश्वामित्रमुखेनैवं वक्ति वल्मीकजो मुनिः ॥ ३५ ॥

திலக ஸ்வாமின: பூஜாம் குர்வன் ஸித்திமவாப்னுயாத் ।
யாஞ்யவல்க்ய மஹர்ஷேஸ்து ஸ்ம்ருதேரேவம் ப்ரதீயதே ॥(31)

ஸ்கந்த்தாத் ப்ரஜாபிவ்ருத்திம் ச லௌகாக்ஷி ஸ்ம்ருதிராஹ ஹி ।
அங்காரகக்ஹ க்ருதா பீடா நைவ பவேன் ந்ருணாம் ॥ (32)

பௌமவாரே கார்த்திகேயம் பக்த்யா பூஜயதாம் ததா ।
கார்த்திகே க்ருத்திகாயோகே க்ருத்திகா புத்ர தர்சினாம் ॥ (33)

ப்ரம்ஹ வித்தமதாப்ராப்தி: பவேதிதி ச கீர்த்யதே ।
பக்தச்ச ய: கார்த்திகேயே காகுஸ்த புவி மானவ: ॥ (34)

ஆயுஷ்மான் புத்ரபௌத்ரைச்ச ஸ்கந்த ஸாலோக்ய மாப்னுயாத் ।
விச்வாமித்ர முகேநைவம் வக்தி வல்மீகஜோ முனி: ॥ (35)

உரை: திலக ஸ்வாமி என்று கூறப்படுகின்ற ஸ்கந்தனுக்கு பூஜை செய்பவன் கார்யஸித்தி பெருகிறான் என்று யாஞ்யவல்க்ய மஹர்ஷியின் ஸ்மிருதியிலிருந்து தெரிகின்றது. லௌகாக்ஷி ஸ்ம்ருதியோ ஸ்கந்தோபாஸனையினால் பிரஜை அபிவிருத்தியாகும் என்று கூறுகின்றது. செவ்வாய்க் கிழமையில் பக்தியுடன் பூஜிக்கும் மனிதருக்கு அங்காரக க்ரஹத்தினால் ஏற்படும் பீடை நேராது. கார்த்திகை மாதத்தில் கிருத்திகை நக்ஷத்ரத்தில் கார்த்திகேயனை தர்சனம் செய்பவர்களுக்கு சிறந்த பிரம்மஞானியாம் தன்மை கிடைக்கும் என்று கூறப்பட்டிருக்கின்றது. ராமாயணத்தில் பால காண்டத்தில் 'ராமா உலகில் கார்த்திகேயனிடம் பக்தியுள்ள மனிதன் ஆயுள் நிறைந்தவனாய் புத்திரன் பேரன் இவர்களுடன் கூடியவனாய், கடைசியில் ஸ்கந்தனிக்ருக்கும் லோகத்தை அடைகிறான்' என்று விசவாமித்திரர் முகமாக வால்மீகி மஹர்ஷி கூறுகின்றார்.

षष्ठ्यां तु शुक्लपक्षस्य ये च तं भौमवासरे ।
कृत्तिकास्वर्चयन्तीह यथालाभं पृथक् पृथक् ॥ ३६ ॥

न तेषां दुर्लभं किंचित् भविष्यति महीतले ।
द्वियोगे द्विगुणं तेषां फलं तावद्भविष्यति ॥ ३७ ॥



विष्णुधर्मोत्तरे चैवं व्यसाचार्येण कीर्त्यते ।
कृतिकायां भौमवारे स्कन्दस्य यजनान्नृणाम् ।
दीपघण्टादिदानाद्वा वाक्सिद्धिरचिराद्भवेत् ॥ ३८ ॥

कार्तिके शुक्लषष्ठ्यां तु सम्पूज्य विधिवद्गुहम् ।
प्राप्नुयादखिलां सिद्धिं मनोभीष्टां तु मानवः ॥ ३९ ॥

क्षणात्सर्वे विनश्यन्ति सन्निपातमुखाः ज्वराः ।
स्कन्दमर्चयतां नृणां क्षयाद्याश्च महागदाः ॥ ४० ॥

ஷஷ்ட்யாந்து சுக்லபக்ஷஸ்ய யே ச தம் பௌமவாஸரே ।
க்ருத்திகாஸ்வர்ச்சயந்தீஹ யதாலாபம் ப்ருதக் ப்ருதக் ॥ (36)

ந தேஷாம் துர்பலம் கிஞ்சித் பவிஷ்யதி மஹீதலே ।
த்வியோகே த்விகுணம தேஷாம் பலம் தாவத் பவிஷ்யதி ॥ (37)

விஷ்ணுதர்மோத்தரே சைவம் வ்யாஸாசார்யேண கீர்த்யதே ।
க்ருத்திகாயாம் பௌமவாரே ஸ்கந்தஸ்ய யஜனான் ந்ருணாம் ।
தீப கண்டாதி தானாத்வா வாக்ஸித்திர் சிராத் பவேத் ॥ (38)

கார்த்திகே சுக்லஷ்ட்யாம்து ஸம்பூஜ்ய விதிவத் குஹம் ।
ப்ராப்னுயாதகிலாம் ஸித்திம் மனோ பீஷ்டாம்
ஹி மானவ: ॥ (39)

க்ஷணாத் ஸர்வே வினச்யந்தி ஸந்நிபாத முகா ஜ்வரா: ।
ஸ்கந்த மர்சயதாம் நிருணாம் க்ஷயாத்யாச்ச மஹாகதா: ॥ (40)

உரை: சுக்லஷஷ்டியில் செவ்வாய்க் கிழமையில் கிருத்திகா நக்ஷத்திரத்தில், நேர்ந்த வரையிலோ, தனித்தனியான ஸமயத்திலோ ஸ்கந்தனை உபாஸிப்பவருக்கு பூமியில் கிடைப்பதற்கரியதாக எதுவும் இருக்காது. இதில் இரண்டு சேர்ந்தால் பயனும் இரண்டு மடங்கு உண்டாகும் என்று வியாஸாசாரியாரால் விஷ்ணு தர்மோத்தர புராணத்தில் கூறப்பட்டிருக்கின்றது. கிருத்திகையிலும் செவ்வாய் கிழமையிலும் ஸ்கந்தனை ஆராதிப்பதாலும் தீபம் மணி இவைகளை அளிப்பதாலும் வாக்ஸித்தி ஏற்படும். மனிதன் கார்த்திகை மாதத்தில்

சுக்ல ஷஷ்டியில் முறைப்படி குகனை பூஜித்து இஷ்டமான எல்லா ஸித்திகளையும் பெறுகிறான். ஸ்கந்தனை அர்ச்சிப்பவருக்கு ஸந்நிபாதம் க்ஷயம் முதலிய பெரும் ரோகங்களும் கணத்தில் அழிகின்றன.

सेनापतेस्तु नैवेद्यं भोज्यं चैव जयार्थिभिः ।
इत्याह कारणाख्यस्तु प्रथितो ह्यागमो भुवि ॥ ४२ ॥
प्रदक्षिणत्रयं कृत्वा नमस्कारांश्च पंच च ।
पुनः प्रदक्षिणं कृत्वा जनिमुक्तो भवेन्नरः ॥ ४२ ॥
श्रीमन्तः शङ्कराचार्याः तथारुणगिरिः कविः ।
वभूवुर्व्याधिनिर्मुक्ताः कन्दोपासनया पुरा ॥ ४३ ॥

ஸேனாபதேஸ்து நைவேத்யம் போஜ்யம் சைவ ஜயார்த்திபி: ।
இத்யாஹ காரணாக்யஸ்து ப்ரதிதோ ஹ்யாகமோ புவி ॥ (41)

ப்ரதக்ஷிணத்ரயம் க்ருத்வா நமஸ்காராம்ச்ச பஞ்ச ச ।
புன: ப்ரதக்ஷிணம் க்ருத்வா ஜனிமுக்தோ பவேன் நர: ॥ (42)

ஸ்ரீமந்த: சங்கராசார்யா: ததா ருணகிரி: கவி: ।
பபூவ: வ்யாதி நிர்முக்தா: ஸ்கந்தோபாஸனயா புரா ॥ (43)

உரை: ஸேனாதிபதிக்கு நிவேதனம் செய்வதை ஜயம் பெற விரும்புவோர் சாப்பிடவேண்டும் என்று பிரஸித்தமான காரணாகமம் கூறுகின்றது. முருகனுக்கு மூன்று ப்ரதக்ஷிணங்களும் ஐந்து நமஸ்காரங்களும் செய்து மீண்டும் ஒருமுறை பிரதக்ஷணம் செய்பவன் முக்தி பெறுகிறான். ஸ்ரீ சக்கராச்சார்ய ஸ்வாமிகளும் அருணகிரியாரும் முன்பு ஸ்கந்தனை வழிபட்டு வியாதியினின்றும் விடுபட்டனர்.

बहवोत्र समागम्य लब्धकामा व्रजन्ति हि ।
व्याधिर्निवर्ततेऽसह्या कुडुंबकलहस्तथा ॥ ४४ ॥

பஹவோத்ர ஸமாகம்ய லப்தகாமா வ்ரஜந்தி ஹி ।
வ்யாதிர் நிவர்த்த தேऽஸஹ்யா குடும்பகலஹஸ் ததா ॥ (44)

உரை: பலர் இங்குவந்து (சுவாமி தர்சனம் செய்து) பயன் அடைந்து செல்லுகின்றனர். கொடும் வியாதி நிவர்த்தியாகின்றது. குடும்பச் சண்டையும் விலகுகின்றது.



# श्रीदण्डपाणिदशकम्

## ஸ்ரீ தண்டபாணி தசகம்

श्री स्कन्दपर्वतशिरोविलसद्विशाल
स्कन्दाश्रमोज्वल-मपारकृपाम्बुराशिम् ।
कटयाहितैककर माश्रित कल्पवृक्षं
दण्डायुधांचितकरं शिवसूनुमीडे ॥ १ ॥

ஸ்ரீஸ்கந்த பர்வதசிரோவிலஸத்விசால
ஸ்கந்தாச்ரமோஜ்வலமபாரக்ருபாம்புராசிம் ।
கட்யாஹிதைககர மாச்ரித கல்பவ்ருக்ஷம்
தண்டாயுதாஞ்சிதகரம் சிவஸூனுமீடே ॥ (1)

ஸ்ரீஸ்கந்த பர்வதத்தின்மேல் விளங்கும் விசாலமான ஸ்கந்தாச்ரமத்தில் பிரகாசிக்கின்றவரும், கரையற்ற கருணைக் கடலும், பக்தர்களுக்கு கல்பதரு போன்றவரும், இடுப்பில் வைக்கப்பட்ட ஒரு கையும், தண்டத்துடன் கூடிய ஒரு கையும் உடையவரான சிவகுமாரராகிய தண்டபாணியைத் துதிக்கிறேன்.

स्कन्दाश्रमे जनिमतामवनाय शान्ता-
नन्दाख्ययोगिवर हस्तकृत प्रतिष्ठः ।
शूरादिदैत्यकुल शिक्षण दक्षिणो मे
श्रीदण्डपाणिरनिशं शिवमातनोतु ॥ २ ॥

ஸ்கந்தாச்ரமே ஜனிமதாமவனாய சாந்தா-
னந்தாக்யயோகிவர ஹஸ்தக்ருத ப்ரதிஷ்ட: ।
சூராதிதைத்யகுல சிக்ஷண தக்ஷிணோமே
ஸ்ரீதண்டபாணிரநிசம் சிவமாதனோது ॥ (2)

மக்களைக் காக்கும் பொருட்டு ஸ்கந்தாச்மத்தில் ஸ்ரீ சாந்தானந்தர் என்ற பெயர் கொண்ட யோகி சிரேஷ்டரின் திருக்கரங்களால் பிரதிஷ்டை

செய்யப்பட்டவரும், சூரன் முதலிய அசுர குலத்தை சிக்ஷிப்பதில் திறமை உள்ளவருமாகிய ஸ்ரீ தண்டபாணி எனக்கு எப்போதும் மங்களத்தை அளிக்கட்டும்.

उज्वलत्तिलकातिसुन्दरफालमम्बुजमालिनं
पार्वतीकरपद्मलालितमज्जुलालकलांछितम् ।
हेमसूत्रलसत्कटिं धृतयज्ञसूत्रमभीष्टदं
दण्डपाणिमुपास्महे कलिकल्मषघ्नमहर्निशम् ॥

உஜ்வலத் திலகாதி ஸுந்தர பால மம்புஜமாலிநம்
பார்வதீ கரபத்மலாளித மஞ்சுளாளக லாஞ்சிதம் ।
ஹேமஸூத்ர லஸத்கடிம் த்ருத யஞ்யஸூத்ரமபீஷ்டதம்
தண்டபாணிமுபாஸ்மஹே கலிகல்மஷக்ன மஹர்நிசம் ॥

பிரகாசிக்கின்ற திலகத்தினால் மிக அழகிய நெற்றியுடையவரும் பார்வதியின் தாமரைக் கரங்களால் கோதிவிடப்பட்ட அழகிய அளகங்களுடன் கூடியவரும், பொன்னரை ஞாண் மின்னும் இடை உடையவரும், பூணூல் அணிந்தவரும், இஷ்டங்களை அளிப்பவருமாகிய ஸ்ரீ தண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கிறோம்.

रत्नगर्भितहेमकुण्डलशोभिकर्णयुगोज्वलं
दिव्यगन्धिकदम्बकाननसंविहारसमुत्सकम् ।
तप्तकांचनतुल्यदेहमनङ्गकोटिसमद्युतिं
दण्डपाणिमुपास्मे कलिकल्मषघ्न महर्निशम् ॥

ரத்னகர்பித ஹேமகுண்டல சோபி கர்ணயுகோஜ்வலம்
திவ்யகந்தி கதம்பகானன ஸம்விஹார ஸமுத்ஸுகம் ।
தப்தகாஞ்சனதுல்யதேஹ மனங்கோடி ஸமத்யுதிம்
தண்டபாணிமுபாஸ்மஹே கலிகல்மஷக்ன மஹர்நிசம் ॥

ரத்னங்களிழைத்த பொற் குண்டலங்கள் திகழும் காதுகள் உள்ளவரும், நல்ல மணமுள்ள கடம்பவனத்தில் சஞ்சரிப்பதில் ஆசையுடையவரும், உருக்கிய பொன்போன்ற தேஹமுடையவரும்



தோஷங்களைப் போக்குகின்றவருமான ஸ்ரீ தண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கிறோம்.

कुम्भसम्भवसंप्रचोदितदैत्यवर्यसमाहृत
प्रत्नशैवगिरीन्द्रसुन्दरतुङ्गभृङ्गनिकेतनम् ।
भोगनामकसिद्धसेवितचारुपादपयोरुहं
दण्डपाणिमुपास्महे कलिकल्मघ्नमहर्निशम् ॥ ५ ॥ ॥

கும்பஸம்பவ ஸம்ப்ரசோதித தைத்யவர்ய ஸமாஹ்ருத
ப்ரத்ன சைவ கிரீந்த்ர ஸுந்தரதுங்க ச்ருங்க நிகேதனம் ।
போகநாமக ஸித்தஸேவித சாருபாத பயோருஹம்
தண்டபாணிமுபாஸ்மஹே கலிகல்மஷக்ன மஹர்நிசம் ॥ (4)

அகஸ்திய மஹரிஷியால் ஏவப்பட்ட அசுரத் தலைவனால் (ஹிடிம்பனால்) கொண்டுவரப்பட்ட பழைமையான சிவகிரியின் உயர்ந்த முடியில் இருப்பவரும், "போகர்" என்ற ஸித்தரினால் பூஜிக்கப்பட்ட அழகிய திருவடித்தாமரையுடன் கூடியவரும், கலியின் தோஷங்களைப் போக்குகின்றவருமான ஸ்ரீ தண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கிறோம்.

स्कन्दपर्वतवासतोषितमानसं शुभवाक्प्रदं
दुष्टदैत्यहिडिम्बदोर्द्वयचण्डविक्रमभंजनम् ।
भावपूतहिडिम्बिकास्तुतिदत्ततत्पतिजीवितं
दण्डपाणिमुपास्महे कलिकल्पषघ्नमहर्निशम् ॥ ६ ॥

ஸ்கந்தபர்வதவாஸதோஷிதமாநஸம் சுபவாக்ப்ரதம்
துஷ்டதைத்யஹிடிம்பதோர்த்வயசண்டவிக்ரமபம்ஜநம் ।
பாவபூதஹிடிம்பிகாஸ்துதிதத்ததத்பதிஜீவிதம்
தண்டபாணிமுபாஸ்மஹே கலிகல்பஷக்நமஹர்நிசம் ॥ (7)

ஸ்கந்த பர்வதத்தில் வாசம் செய்வதில் மகிழ்ச்சியுடையவரும், மங்கள வாக்கை நல்குபவரும், துஷ்டனாகிய ஹிடிம்பாஸுரனுடைய கைகளின் பெரும்வலியை அழித்தவரும், உள்ளன்பு கொண்ட ஹிடிம்பியின் துதியினால் அவள் கணவன் உயிரை அளித்தவரும்,

கலியின் தோஷங்களை போக்குகின்றவருமான ஸ்ரீ தண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கிறோம்.

पद्मसम्भवपङ्कजेक्षणशङ्कराः किल बुध्नकाः
स्कन्धपत्रसुमानि भास्करदेतवराजमुखाः सुराः ।
पुत्र ! तत्र फलं भवानिति शैलजास्तुतिमानितं
दण्डपारिमुपास्महे कलिकल्मषघ्नमहर्निशम् ॥ ७ ॥

பத்மஸம்பவபங்க ஜேக்ஷணசங்கரா: கில புத்னகா:
ஸ்கந்தபத்ரஸுமானி பாஸ்கரதேவாராஜமுகா: ஸுரா: ।
புத்ர! தத்ர பலம் பவாநிதி சைலஜாஸ்துதிமானிதம்
தண்டபாணிமுபாஸ்மஹே கலிகல்மஷக்ன மஹர்நிசம் ॥ (7)

''பிரம்மா விஷ்ணு சிவன் இவர்கள், வேர்கள், கிளை, இலை, பூக்கள் இவை சூரியன் இந்திரன் முதலிய தேவர்கள், குழந்தாய்! அதில் நீ பழம்''. என்று பார்வதியின் புகழுரைகளால் கௌரவிக்கப்பட்டவரும், கலியின் தோஷங்களை போக்குகின்றவருமான ஸ்ரீ தண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கிறோம்.

शर्करामधुगव्य सत्कदलीफलार्पकसौख्यदं
वीवधावहभक्तघोषितनामसंश्रवणोत्सुकम् ।
रोगदुर्ग्रहशत्रुतापभयापनोदकवीक्षणं
दण्डपाणिमुपास्महे कलिकल्मषघ्नमहर्निशम् ॥ ८ ॥ ॥

சர்கரா மதுகவ்ய ஸத்கதளீ பலார்பக ஸௌக்யதம்
வீவதாவஹ பக்த கோஷித நாம ஸம்ச்ரவணோத்ஸுகம் ।
ரோகதுர்க்ரஹ சத்ருதாப பயாபநோதக வீக்ஷணம்
தண்டபாணி முபாஸ்மஹே கலி கல்மஷக்ன மஹர்நிசம் ॥ (8)

சர்க்கரை, தேன், பால், நெய், நல்ல வாழைப்பழம் (பஞ்சாமிர்தம்) இவைகளை அளிப்பவர்களுக்கு சுகமளிப்பவரும், காவடி கொண்டுவரும் பக்தர்களால் கோஷிக்கப்படுகின்ற நாமாக்களைக் கேட்பதில் ருசியுள்ளவரும், ரோகம் கெட்டக்ரஹங்கள் சத்ரு தாபம் பயம் இவைகளைப் போக்கும் பார்வையுடையவரும், கலியின் தோஷங்களைப்



போக்குகின்றவருமான ஸ்ரீ தண்டபாணியை இரவும், பகலும் உபாஸிக்கிறோம்.

व्याधवेषविभूषितं सितभस्मभासुरविग्रहं
राजवेषभरोज्वलं धृतयोगिवेषमनोहरम् ।
दुग्धदिग्धतनुं सदा हरिचन्दनाद्यभिमण्डितं
दण्डपाणिमुपास्महे कलिकल्मषघ्नमहर्निशम् ॥ ९ ॥ ॥

வயாதவேஷவிபூஷிதம் ஸித பஸ்ம பாஸுரவிக்ரஹம்
ராஜவேஷபரோஜ்வலம் த்ருதயோகி வேஷமனோஹரம் ।
துக்த திக்த தனும் ஸதா ஹரிசந்தனாத்யபி மண்டிதம்
தண்டபாணி முபாஸ்மஹே கல கல்மஷக்ன மஹர்நிசம் ॥ (9).

வேடனாக அலங்கரிக்கப்பட்டவரும், வெண்மையான திருநீறால் விளங்கும் மேனியுடையவரும், ராஜ வேஷத்தில் பிரகாசிக்கின்றவரும், யோகி வேஷம் தாங்குவதால் அழகியவரும், பாலால் அபிஷேகம் செய்யப்பட்ட திருமேனியுடையவரும் செஞ்சந்தனம் முதலிவற்றால் அணி செய்யப்பட்டவரும், கலியின் தோஷங்களைப் போக்குகின்றவருமான ஸ்ரீதண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கின்றோம்.

द्राविडाक्षरविग्रहं घटजन्मतापसदेशिकं
कुक्कुटध्वजधारिणं वरकेकिवाहसमुज्वलम् ।
वीरवर्गनिषेवितं सुरसैन्यरक्षणदक्षिणं
दण्डपाणिमुपास्महे कलिकल्मषघ्नमहर्निशम् ॥ १० ॥ ॥

த்ராவிடாக்ஷர விக்ரஹம் கடஜன்ம தாபஸ தேசிகம்
குக்குடத்வஜதாரிணம் வரகேகிவாஹ ஸமுஜ்வலம் ।
வீரவர்க்க நிஷேவிதம் ஸுரஸைன்ய ரக்ஷண தக்ஷிணம்
தண்டபாணிமுபாஸ்மஹே கலகல்மஷக்ன மஹர்நிசம் ॥ (10)

தமிழ் எழுத்துக்களின் உருவமானவரும், அகத்திய முனிவரின் ஆசிரியரும், சேவல் கொடியுடையவரும், சிறந்த மயில் வாஹனத்தில் விளங்குபவரும். (நவ) வீரர்களால் வணங்கப்பெற்றவரும், தேவ சேனைகளைக் காப்பதில் திறமையுள்ளவரும் கலியின் தோஷங்களை

போக்குகின்றவரும் ஆகிய ஸ்ரீ தண்டபாணியை இரவும் பகலும் உபாஸிக்கிறோம்.

पुत्रमित्रकलत्रबान्धव सङ्गतिर्विजयो यशो
दीर्घमायुररोगता बुधसङ्गतिर्जनमान्यता ।
इष्टसिद्धिरनल्पधान्य धानागमश्च भवेद् ध्रुवं
दण्डपाणिकृपासमीक्षणपात्रभूतमहात्मनाम् ॥ ११ ॥ ॥

புத்ரமித்ர களத்ர பாந்தவ ஸங்கதிர் விஜயோ யசோ
தீர்க்கமாயு ரரோகதா புதஸங்கதிர் ஜன மான்யதா ।
இஷ்ஸித்தி ரனல்ப தான்ய தனாகம்ஸ்ச பவேத் த்ருவம்
தண்டபாணி க்ருபா ஸமீக்ஷண பாத்ரபூத மஹாத்மனாம் ॥ (11)

புத்ரர் நண்பர் மனைவி பந்துக்கள் இவர்களுடன் சேர்க்கையும் வெற்றி புகழ் நீண்ட ஆயுள் ரோகமின்மை ஞானியரின் கூட்டு ஜனங்களின் பஹுமானம் இஷ்டஸித்தி அதிகமான தனம் தான்யம் இவைகளின் வரவு இவை எல்லாம் ஸ்ரீ தண்டபாணி தெய்வத்தின் க்ருபை நிறைந்த பார்வைக்கு பாத்திரரான மஹான்களுக்கு நிச்சயமாய் கிடைக்கும்.

देवरक्षक दैत्यशिक्षक देवषण्मुख पाहि मां
स्कन्दपर्वतभृङ्गशेखर कृत्तिकासुत रक्ष माम् ।
पुण्यदिव्यसरित्समुद्भव देवनायक पाहि मां
श्रीप्रदेक्षण शङ्करात्मज शक्तिधारक रक्ष माम् ॥ १२ ॥ ॥

தேவரக்ஷக தைத்ய சிக்ஷக தேவ ஷண்முக பாஹி மாம்
ஸ்கந்தபர்வத ச்ருங்கசேகர க்ருத்திகாஸுத ரக்ஷமாம் ।
புண்யதிவ்ய ஸரித்ஸமுத்பவ தேவநாயக பாஹி மாம்
ஸ்ரீப்ரதேக்ஷண சங்கராத்மஜ சக்திதாரக ரக்ஷ மாம் ॥ (12)



# श्रीस्कन्दमङ्गलाष्टकम्

## ஸ்கந்த மங்களாஷ்டகம்

मयूरावाहनारूढः कुक्कुटध्वजभूषितः ।
सेनावल्लीकराश्लिष्टः स्कन्दो दिशतु मङ्गलम् ॥ १ ॥ ॥

மயூரவாஹனாரூட: குக்குடத்வஜ பூஷித: ।
ஸேனாவல்லீகராச்லிஷ்ட: ஸ்கந்தோதிசது மங்களம் ॥ (1)

மயூரத்தின் மீது அமர்ந்திருப்பவரும், சேவல் கொடியுடையவரும், தேவஸேனாவல்லீ இவர்களுடைய கரங்களால் அணைத்துக் கொள்ளப்பட்ட வருமான ஸ்கந்தர் மங்களம் நல்கட்டும்.

सिंहव्याघ्रगणोल्लासि विजित्वर रथस्थितः ।
भक्तेष्टदायी भगवान् स्कन्दो दिशंतु मङ्गलम् ॥ २ ॥ ॥

ஸிம்ஹ வ்யாக்ர கணோல்லாஸி விஜித்வர ரதஸ்தித: ।
பக்தேஷ்டதாயீ பகவான் ஸ்கந்தோதிசது மங்களம் ॥ (2)

ஸிம்ஹம், புலி இவைகளால் விளங்கும் ''விஜித்வரம்'' என்ற ரதத்தில் அமர்ந்திருப்பவரும், பக்தர்களின் இஷ்டத்தை நிறைவேற்றுகின்றவருமான பகவான் ஸ்கந்தர் மங்களம் நல்கட்டும்.

शूरसिंहासुरध्वान्तविध्वंसन दिवाकरः ।
तारक क्रौंचदैत्यघ्नः स्कन्दो दिशतु मङ्गलम् ॥ ३ ॥ ॥

சூரஸிம்ஹாஸுரத்வாந்த வித்மம்ஸன திவாகர: ।
தாரக் க்ரௌஞ்ச தைத்யக்ன: ஸ்கந்தோ திசது மங்களம் ॥ (3)

சூரன், ஸிம்ஹன் முதலிய அசுரராகிய இருளைப் போக்கும் சூரியனும், தாரகன் க்ரௌஞ்சன் என்ற அவுணரை அழித்தவருமாகிய ஸ்கந்தர் மங்களம் நல்கட்டும்.

प्रचण्डविक्रमोदारनववीरवरार्चितः
सुरसेनाग्रणपतिः स्कन्दो दिशतु मङ्गलम् ॥ ४ ॥

ப்ரசண்ட விக்ரமோதார நவவீரவரார்ச்சித: ।
ஸுரஸேனாகணபதி: ஸ்கந்தோ திசது மங்களம் ॥ (4).

சிறந்த வீரம் நிறைந்த நவவீரர்களால் பூஜிக்கப்பட்டவரும், தேவசேனையின் நாயகருமாகிய ஸ்கந்தமர் மங்களம் நல்கட்டும்.

द्वादशायुधविभ्राज द्भुजद्वादशमण्डितः ।
ज्ञानात्तिधरः स्वामी स्कन्दो दिशतु मङ्गलम् ॥ ५ ॥ ॥

த்வாதசாயுத விப்ராஜத் புஜ த்வாதச மண்டித: ।
ஞான சக்தி தர: ஸ்வாமீ ஸ்கந்தோ திசது மங்களம் ॥ (5)

பன்னிரண்டு ஆயுதங்களுடன் விளங்கும் பன்னிரண்டு கைகள் கொண்டவரும், ஞான சக்தியைத் தரித்திருப்பவருமான ஸ்கந்த ஸ்வாமீ மங்களம் நல்கட்டும்.

अगस्त्यवामदेवादि विनेयवरदेशिकः
तप्तादियोगिषट्केड्यः स्कन्दो दिशतु मङ्गलम् ॥ ६ ॥ ॥

அகஸ்த்யவாமதேவாதி வினேயவர தேசிக: ।
தப்தாதி யோகிஷட்கேட்ய: ஸ்கந்தோ திசது மங்களம் ॥ (6)

அகஸ்தியர் வாமதேவர் முதலிய நல்ல சிஷ்யர்களுக்கு குருவும் தப்தர் முதலிய ஆறு யோகிகளால் துதிக்கத் தகுந்தவருமான ஸ்கந்தர் மங்களம் நல்கட்டும்.

पराचलादिषट्शैल संविहार समुत्सुकः ।
स्कन्दाश्रमसुखावासी स्कन्दो दिशतु मङ्गलम् ॥ ७ ॥ ॥

பராசலாதி ஷட்சைல ஸம்விஹார ஸமுத்ஸுக: ।
ஸ்கந்தாச்ரம ஸுகாவாஸீ ஸ்கந்தோ திசது மங்களம் ॥ (7)

திரப்பரங்குன்றம் முதலிய ஆறு மலைகளில் திருவிளையாடல் புரிவதில் ஆசையுள்ளவரு;ம், ஸ்கந்தாச்ரமத்தில் சுகமாக இருப்பவருமான ஸ்கந்தர் மங்களம் நல்கட்டும்.



शान्तानन्द महायोगिवर बाहुप्रतिष्ठतः ।
श्रीस्कन्दगिरिसंवासी स्कन्दो दिशतु मङ्गलम् ॥ ८ ॥ ॥

சாந்தானந்த மஹாயோகிவர பாஹுப்ரதிஷ்டித: ।
ஸ்ரீஸ்கந்தகிரி ஸம்வாஸீ ஸ்கந்தோ திசது மங்களம் ॥ (8)

சாந்தானந்த யோகிஸ்வரருடைய கரங்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டவரும், ஸ்ரீஸ்கந்தகரியில் வீற்றிருப்பவருமான ஸ்கந்தர் மங்களம் நல்கட்டும்.

# श्रीदण्डपाणिचरितम्

# ஸ்ரீ தண்டபாணி சரிதம்

## हिडिंबानुग्रहः ஹிடிம்பனுக்கு அருளுதல்

दण्डोल्लसद्दक्षकरं विशाले
स्कन्दाश्रमे नित्य विहारशीलम् ।
मनोज्ञकट्याहित वामबाहुं
श्री दण्डपाणिं सततं स्मारामि ॥ १ ॥ ॥

தண்டோல்லஸத் தக்ஷகரம் விசாலே
ஸ்கந்தாச்ரமே நித்ய விஹாரசீலம் ।
மனோக்ஞகட்யாஹித வாமபாஹும்
ஸ்ரீ தண்டபாணிம் ஸததம் ஸ்மராமி ॥ (1)

தண்டத்துடன் கூடிய வலது கரமும், அழகிய இடுப்பில் வைக்கப்பட்ட இடது கரமும் உடையவரும், விசாலமான ஸ்கந்தாச்ரமத்தில் நித்தம் திருவிளையாடல் புரிகின்றவருமான ஸ்ரீ தண்டபாணியை எப்போதும் நினைக்கிறேன்.

कैलासशैलस्थित माशुतोषं
दयासमुद्रं गिरिजासमेतम् ।
कदाचिदभ्येत्य शशाङ्कचूडं
धन्यो ववन्दे भगवानगस्त्यः ॥ २ ॥ ॥

கைலாஸ சைலஸ்தித மாசுதோஷம்
தயாஸமுத்திரம் கிரிஜாஸமேதம் ।
கதாசிதப்யேத்ய சசாங்கசூடம்
தன்யோ வவந்தே பகவானகஸ்த்ய: ॥ (2)

ஒரு ஸமயம் கைலயங்கிரியில் வீற்றிருப்பவரும் விரைவில் மகிழ்பவரும், தயைக்கடலும், பார்வதியுடன் கூடிவருமாகிய சந்திரசேகரனை புண்ணியசாலியான பகவான் அகஸ்தியர் வணங்கினார்.



सर्वं जगच्छक्ति शिवस्वरूपं
तथापि देवेश समं भवान्या ।
विशिष्य कुत्रासि निवेशितात्मे-
त्यपृच्छदव्यग्रमना महेशम् ॥ ३ ॥ ॥

ஸர்வம் ஜகத் சக்தி சிவஸ்வரூபம்
ததாபி தேவேச ஸமம் பவான்யா ।
விசிஷ்ய குத்ராஸி நிவேசிதாத்மே
த்யப்ருச்சதவ்யக்ரமனா மஹேசம் ॥ (3)

உலகம் எல்லாம் சிவசக்தி மயம். ஆயினும் தேவர் தலைவனே! பார்வதியுடன் கூட குறிப்பாக எங்கு குடிகொண்டிருக்கின்றீர் என்று சிவனை ஒன்றிய மனமுள்ள அகஸ்தியர் கேட்டார்.

मेरौ स्थिते स्कन्दगिरौ प्रसिध्दे
शृङ्गे विभातः शिवशक्ति रूपे ।
तयो र्भवान्या सम माहितात्मा
वसामि नित्यं गुहसङ्गतृप्तः ॥ ४ ॥

गत्वा मुने तत्र मम स्वरूपं
शृङ्गद्वयं शक्ति शिवाभिधानम् ।
संपूज्य कामांस्त्वमवाप्नुहीति
प्रहृष्ट चेतास्तु भवो वभाण ॥ ५ ॥ ॥

மேரௌ ஸ்திதே ஸ்கந்தகிரௌ ப்ரஸித்தே
ச்ருங்கே விபாத: சிவசக்தி ரூபே ।
தயோர் பவாந்யா ஸம மாஹிதாத்மா
வஸாமி நித்யம் குஹஸங்கத்ருப்த: ॥ ॥ (4)

கத்வா முனே தத்ர மம ஸ்வரூபம்
ச்ருங்கத்வயம் சக்தி சிவாபிதானம் ।
ஸம்பூஜ்ய காமாம்ஸ்த்வ மவாப்னுஹீதி
ப்ரஹ்ருஷ்ட சே தாஸ்து பவோ பபாண ॥ (5)

கேனுபி கார்யேண ததோ மஹார்ஷி:
தத்ரைவ ச்ருங்கே ப்ரவிஹாய தூர்ணம் ।
மந்தானிலகாயதனம் மனோஞம்
யயௌ மஹாத்ரிம் மலயாபிதானம் ॥ (10)

பின் அகஸ்தியர் ஏதோ ஒரு காரியத்தை உத்தேசித்து அங்கேயே அந்தக் கொடுமுடிகளை விட்டுவிட்டு சீக்கிரமாய் மெல்லிய காற்றிற்கு இருப்பிடமும் மனதிற்கு உகந்ததுமான மலையம் என்ற பெயர்கொண்ட பெரும் மலையை அடைந்தார்.

ततः कदाचिन्मलयं विवेश
स्वभार्यया वीरहिडिम्ब नामा ।
विज्ञाय शूरादि वधं प्रतप्तः
पद्भ्यां चरन् पर्वत सन्निकाशः ॥ ११ ॥

தத: கதாசின் மலயம் விவேச
ஸ்வபார்யயா வீரஹிடிம்பநாமா ।
விஞ்ஞாய சூராதிவதம் ப்ரதப்த:
பத்ப்யாம் சரன் பர்வத ஸன்னிகாச: ॥ (11)

பின்பு ஒரு சமயம் வீரஹிடிம்பன் என்பவன் சூராதிகள் கொல்லப்பட்டனர் என அறிந்து துக்கமடைந்தவனாய் தன் மனைவியுடன் நடந்துவரும் பர்வதம் போன்றவனாய் மலையைத்தை அடைந்தான்.

शूरादि दैतेय धनुः प्रशिक्षा-
लब्धोरुकीर्तिः घटजं महर्षिम् ।
तत्राश्रमान्तः समुपस्थितं तं
विलोक्य तत्पादयुगं नामाम ॥ १२ ॥

சூராதி தைதேய தனு: ப்ரசிக்ஷா-
லப்தோருகீர்த்தி: கடஜம் மஹார்ஷிம் ।
தத்ராச்ரமாந்த: ஸமுபஸ்திதம் தம்
விலோக்ய தத்பாதயுகம் நமாம ॥ (12)



சூரன் முதலான அஸுரர்களுக்கு தனுர்வித்தை சொல்லிக் கொடுத்ததால் புகழ்பெற்ற அந்த ஹிடிம்பன் அங்குள்ள ஆசிரமத்தின் இடையில் இருக்கும் அகஸ்திய மஹார்ஷியை பார்த்து அவர் திருவடிகளை வணங்கினான்.

धन्योस्म्यहं ब्रह्मविदां वरिष्ट
त्वत्सेवया जन्मफलं मयाप्तं ।
इमं जनं भृत्यजनेषु चैकं
कृत्वा नुगृण्हीष्व दयार्द्र दृष्ट्या ॥ २३ ॥

इति ब्रुवाणं दितिजं निरीक्ष्य
त्वं गच्छ गङ्गातटिनीं च तत्र ।
मत्स्थापिते भृङ्गवरे गृहीत्वा
भूयः समागच्छ मदीय पार्श्वम् ॥ १४ ॥ ॥

தன்யோஸ்ம்யஹம் ப்ரம்ஹவிதாம் வரிஷ்ட
த்வத்ஸேவயா ஜன்மபலம் மயாப்தம் ।
இமம் ஜனம் ப்ருத்யஜனேஷு சைகம்
க்ருத்வா னுக்ருண்ஹீஷ்வ தயார்த்ர த்ருஷ்ட்யா ॥ (13)

இதி ப்ருவாணம் திதிஜம் நிரீக்ஷ்ய
த்வம் கச்ச கங்காதடினீம் ச தத்ர ।
மத் ஸ்தாபிதே ச்ருங்கவரே க்ருஹீத்வா
பூய: ஸமாகச்ச மதீய பார்ச்வம் ॥ (14)

பிரும்மத்தை அறிந்தவர்களுள் சிறந்தவரே! நான் பாக்கியசாலி. தங்களை வணங்கியதால் என் ஜன்மா பயன் பெற்றது இவனையும் வேலையாட்களில் ஒருவனாய் கருணா கடாக்ஷத்தால் ஏற்றுக்கொண்டு அருள வேண்டும், என்று கூறுகின்ற அசுரனைப் பார்த்து "நீ கங்கைக்குச் செல். அங்கு என்னால் வைக்கப்பட்ட இரண்டு கொடுமுடிகளை எடுத்துக்கொண்டு மீண்டும் என் பக்கம் வா.

सहायतां भृङ्ग समुद्धृतौ ते
यास्यन्ति पाताल गताश्च सर्पाः

विधेश्च दण्डं तव वीवधीय-
दण्डात्मतां यास्यति मत्प्रसादात् ॥ १५ ॥

इतीरितः कुम्भभवेन दैत्यो
गङ्गानदीतीर मवाप्य पत्न्या ।
पाशात्मकान् सर्पवरान्विलोक्य
वैधं च दण्डं नितरां जहर्ष ॥ १६ ॥

ஸஹாயதாம் ச்ருங்க ஸமுத்ருதௌ தே
யாஸ்யந்தி பாதாள கதாச்ச ஸர்பா: ।
விதேச்ச தண்டம் தவ வீவதீய-
தண்டாத்மதாம் யாஸ்யதி மத்ப்ரஸாதாத் ॥ (15)

இதீரித: கும்பபவேன தைத்யோ
கங்காநதீதீர மவாப்ய பத்ன்யா ।
பாசாத்மகான் ஸர்பவரான் விலோக்ய
வைதம் ச தண்டம் நிதராம் ஜஹர்ஷ ॥ (16)

கொடுமுடிகளைத் தூக்கிக் கொண்டுவர உனக்கு பாதாளத்தில் உள்ள ஸர்பங்கள் உதவி செய்யும். என அருளால் பிரும்ம தேவனுடைய தண்டமும் உன் காவடிக்குத் தடியாய் ஆகப் போகின்றது, என்று அகஸ்தியரால் சொல்லப்பட்ட அந்த ஹிடிம்பன் மனைவியுடன் கங்கைக்கரை அடைந்து கயிறுகளாய் இருக்கும் பாம்புகளையும், பிரம்மனின் தண்டத்தையும் கண்டு மிகவும் மகிழ்ந்தான்.

शृङ्गे वहन् वीवध मध्यलग्ने
मुनेः प्रसादादहतप्रचारः ।
वृद्धाचलं प्राप्य स विस्मृतस्व-
मार्गो मुमोहाऽसुरवंश वीरः ॥ १७ ॥

ச்ருங்கே வஹன் வீவத மத்யலக்னே
முனே: ப்ரஸாதாதஹதப்ரசார: ।
வ்ருத்தாசலம் ப்ராப்ய ஸ விஸ்ம்ருதஸ்வ
மார்கோ முமோஹாऽஸுரவம்ச வீர: ॥ (17)



காவடியின் இடையில் தொங்கும் இரண்டு கொடிமுடிகளையும் தூக்கிக் கொண்டு முனிவரின் அருளால் தடையின்றிவரும் அந்த அசுர வம்ச வீரனாகிய ஹிடிம்பன் விருத்தாசலம் வந்து வழி மறந்தவனாய் திகைத்தான்.

मार्गागतं कंचन चापहस्तं
मनोजधिक्कारि मनोज्ञरूपम् ।
युवान मालोक्य स दक्षिणाशा-
गमं सुमार्गं विनयादपृच्छत् ॥ १८ ॥

மார்காகதம் கஞ்சன சாபஹஸ்தம்
மனோஜதிக்காரி மனோக்ஞரூபம் ।
யுவான மலோக்ய ஸதக்ஷிணாசா-
கமம் ஸுமார்கம் வினயாதப்ருச்சத் ॥ (18)

வழியில் வந்தவனும் வில்லேந்தியவனும் மன்மதனைக் காட்டிலும் அதிகமான அழகு பொருந்தியவனுமாகிய ஒரு இளைஞனைப் பார்த்து தென்திசை செல்லும் நல்வழியைக்க கூறுமாறு வினயத்துடன் கேட்டான்.

तस्मिन्वराहाख्य गिरेस्तु मार्गं
प्रदर्श्य याते तमुपेत्य शैलम् ।
निधाय शृङ्गेऽतिभरेण खिन्नो
विश्रान्ति सौख्यं स्वयमन्वभूत्सः ॥ १९ ॥

தஸ்மின் வராஹாக்ய கிரேஸ்து மார்கம்
ப்ரதர்ச்ய யாதே தமுபேத்ய சைலம் ।
நிதாய ச்ருங்கேऽதிபரேண கின்னோ
விச்ராந்தி ஸௌக்யம் ஸ்வய மன்வபூத்ஸ: ॥ (19)

அந்த இளைஞன் வராஹ மலைக்குச் செல்லும் மார்க்கத்தைக் காட்டி சென்றபின் அம்மலையை அடைந்து அதிக பாரத்தினால் கஷ்டமடைந்த ஹிடிம்பன் இரண்டு கொடுமுடிகளையும் வைத்துவிட்டு தான் இளைப்பாறினான்.

भुक्त्वा सुखं ते शिवशक्ति शृङ्गे ।
ततो निनीषु र्मलयाद्रि सानुम् ।
शशाक नोद्धर्तु ममेय शक्तिः
कृत प्रयत्नोऽपि गुहेच्छया सः ॥ २० ॥

புக்த்வா ஸுகம் தே சிவசக்தி ச்ருங்கே
ததோ நிநீஷுர் மலயாத்ரி ஸானும் ।
சசாக நோத்தர்து மமேய சக்தி:
க்ருத ப்ரயத்நோऽபி குஹேச்சயா ஸ: ॥ (20)

சௌக்கியமாய் சாப்பிட்டுவிட்டு அவ்விடத்தினின்றும் அந்த சிவசக்தி கொடுமுடிகளை மலையமலையின் தாழ்வரைக்கு எடுத்துச் செல்வ விரும்பிய அளவற்ற சக்தி கொண்டவனான அந்த ஹிடிம்பன் முயன்று திருமுருகன் திருவுள்ளப்படி தூக்குவதற்குச் சக்தியற்றவனானான்.

अज्ञातहेतुः दितिजः प्रसार्य
दृष्टिं समन्तादवलोकमानः
शृङ्गाग्रभागं सहसाऽरूरोह
त्यक्तश्रमः सिंहं इवातिधृष्टः ॥ २१ ॥

அஞ்ஞாதஹேதுர் திதிஜ: ப்ரஸார்ய
த்ருஷ்டிம் ஸமந்தாதவலோகமான: ।
ச்ருங்காக்ரபாகம் ஸஹஸாऽருரோஹ
த்யக்தச்ரம: ஸிம்ஹ 'இவாதி த்ருஷ்ட: ॥ (21)

காரணம் தெரியாத ஹிடிம்பன் நாற்புறமும் கண்களைச் செலுத்திப் பார்ப்பவனாய் சிரமமின்றி ஸிம்ஹம்போல் தீரனாய் விரைவில் மலையின் மேற்பகுதிக்கு ஏறினான்.

स्कन्धचुम्बि कुटिलायतकेशं
चन्द्रकान्त वदनं शुभ दृष्टिं ।
यज्ञसूत्रविलसत्पृथु वक्षो-
भागलक्ष्य विविधाभरणाढ्यम् ॥ २२ ॥



मन्दहास मधुरं वरदण्डो-
द्भासि बाहु कमलं कृतखेलम् ।
शुभ्रदीर्घमलमल्लक राजत्-
हेमसूत्र दृढ बद्धसुमध्यम् ॥ २३ ॥

तप्त कांचन समान शरीरं
बालकं कमपि वीक्ष्य नगाग्रे ।
विस्मितोऽपि गतभीः स सुरारिः
तत्समीप मगमत् धृतदण्डः ॥ २४ ॥

ஸ்கந்தசும்பி குடிலாயதகேசம்
சந்த்ரகாந்த வதனம் சுப த்ருஷ்டிம் ।
யக்ஞஸூத்ர விலஸத் ப்ருது வக்ஷோ-
பாகலக்ஷ்ய விவிதாபரணாட்யம் ॥ (22)

மந்தஹாஸ மதுரம் வரதண்டோ-
த்பாஸி பாஹு கமலம் க்ருதக்கேலம் ।
சுப்ர தீர்க மலமல்லக ராஜத்
ஹேமஸூத்ர த்ருட பத்த ஸுமத்யம் ॥ (23)

தப்த காஞ்சன ஸமான சரீரம்
பாலகம் கமபி வீக்ஷ்ய நகாக்ரே ।
விஸ்மிதோऽபி கதபீ: ஸ ஸுராரி:
தத்ஸமீப மகமத் த்ருததண்ட: ॥ (24)

தோளைத்தொடும் சுருண்ட நீண்ட கேசமுள்ளதும், சந்திரன் போன்ற அழகிய முகமுள்ளதும், மங்களகரமான பார்வையுள்ளதும், பூணூல் மின்னும் பெரும் மார்பில் காணப்படும் பல ஆபரணங்களை அணிந்துகொண்டிருப்பதும், புன்முறுவலால் அழகியதும், அழகிய தடியினால் விளங்கும் கரமுடையதும், விளையாடுகின்றதும், வெளுத்த நீண்ட கோவணத்தினாலும் பொன் அரைஞாண் கயிற்றாலும் இணைக்கப்பட்ட இடையுடையதும், உருக்கிய தங்கம் போன்ற திருவுருடையதுமாகிய ஒரு குழந்தையை மலையின் உச்சியில் பார்த்து

ஆச்சரியமடைந்தவனாயினும் பயமின்றி கையில் ஏந்திய தடியுடன் அந்த ஹிடிம்பன் அக் குழந்தையின் அருகில் சென்றான்.

न प्राकृतोऽयं तु कुमार वेषभृत्
तृणेन तुल्यं जगदीक्षते बली ।
दृष्ट्वापि मे नैव बिभेत्यमानुषं
रूपं हि देवासुर लोकभीकरम् ॥ २५ ॥

நப்ராக்ருதோऽயம் து குமார வேஷப்ருத்
த்ருணேன துல்யம் ஜகதீக்ஷதே பலீ ।
த்ருஷ்ட்வாபி மே நைவ பிபேத்யமானுஷம்
ரூபம் ஹி தேவாஸுரலோகபீகரம் ॥ (25)

குழந்தை வேஷத்தில் உள்ள இவன் சாதாரணமானவனல்லன். பலம் நிறைந்த இவன் உலகத்தை புல்லுக்கு ஸமமாகப் பார்க்கிறான். தேவர், அசுரர் இவர்களுக்கும் பயமளிக்கும் என்னுடைய அமானுஷமான உருவத்தைக் கண்டும் இவன் பயம் கொள்ளவில்லை.

नायं शिशु र्यक्ष सुरासुरेषु
गन्धर्वविद्याधर पन्नगेषु ।
जातोऽथवा मन्त्रविदां वरिष्ठो
मायाविनां स्यादयमग्रयायी ॥ २६ ॥

நாயம் சிசுர் யக்ஷ ஸுராஸுரேஷு
கந்தர்வவித்யாதர பன்கேஷு ।
ஜாதோऽதவா மந்த்ரவிதாம் வரிஷ்டோ
மாயாவினாம் ஸ்யாதய மக்ரயாயீ ॥ (26)

இவன் குழந்தையல்ல, யக்ஷர், தேவர், கந்தர்வர், வித்யாதாரர் ஸர்ப்பம் இவர்களில் பிறந்தவனோ! மந்திரம் அறிந்தவர்களில் சிறந்தவனோ! மாயாவிகளுள்ளே முன்னிற்பவனோ!

शृङ्गाहृतौ या मम शक्ति रासीत्
स्वभावसिद्धा मुनिना च दत्ता ।



शक्तिर्हृता सा शिशुनात्वनेने-
त्यमन्यत क्रोधसुरक्त नेत्रः ॥ २६ ॥

ச்ருங்காஹ்ருதௌ யா மம சக்தி ராஸீத்
ஸ்வபாவஸித்தா முனினா ச தத்தா ।
சக்த்திர் ஹ்ருதா ஸா சிசுனாத்வனேனே
த்யமன்யத க்ரோத ஸுரக்த நேத்ர: ॥ (27)

கோபத்தால் சிவந்த கண்ணினனான ஹிடிம்பன் இயற்கையாக அமைந்ததும், அகஸ்தியரால் அளிக்கப்பட்டதுமான, இக் கொடு முடிகொண்டுவரும் என்னுடைய திறன் இந்த குழந்தையினால் அபகரிக்கப்பட்டு விட்டது என்று எண்ணினான்.

एवं विचिन्त्याशु कुमार मूचे
कस्यासि पुत्रोऽथ करोषि किं वा ।
मार्गभ्रमाद्वात्र समागतोऽसि
ब्रूहीति सर्वं स्पृहणीयरूप ॥ २७ ॥

ஏவம் விசிந்த்யாசு குமாரமூசே
கஸ்யாஸி புத்ரோऽத கரோஷி கிம் வா
மார்கப்ரமாத்வாத்ர ஸமாகதோ ஸி
ப்ருஹீதி ஸர்வம் ஸ்ப்ருஹணீயரூப ॥ (28)

இவ்வாறு யோசித்து, விரும்பத்தகுந்த உருவமுடையவனே 'நீ யார் புத்திரன்? என்ன செய்கின்றாய்? வழிதவறி வந்துவிட்டாயா! என்பதைக் கூறு என்று குழந்தையைப் பார்த்துக் கேட்டான்.

हिडिम्बमित्थं बहु भाषमाणं
दैतेय शृङ्गं निलयं ममेदम् ।
शक्तोऽसि चेत् शृङ्गसमुद्धृतौ त्वं
स्वीकृत्य गच्छेति गुहो जगाद ॥ २९ ॥

ஹிடிம்பமித்தம் பஹு பாஷமாணாம்
தைதேய ச்ருங்கம் நிலயம் மமேதம் ।

சக்தோஸி சேத் ச்ருங்கஸமுத்த்ருதௌ த்வம்
ஸ்வீக்ருத்ய சச்சேதி" குஹோ ஜகாத ॥ (29)

இவ்வாறு கூறும் ஹிடிம்பனை நோக்கி, "அரக்கனே! இந்தக் கொடுமுடி என் வீடு. இக் கொடுமுடியைத் தூக்க நீ சக்தியுள்ளவனாய் இருந்தால் எடுத்துச் செல்" என்று குகன் கூறினார்.

श्रुत्वा तदीयं वचनं हिडिम्बः
जानासि मां बालतया नहि त्वम् ।
अहं सहस्राण्डकुलेश शूर-
सिंहादि विद्यागुरुरस्मि पूज्यः ॥ ३० ॥

यस्येच्छया चक्रधरो महर्षेः
लिङ्गाकृतिः संकुचिताङ्गकोऽभूत् ।
अवेहि मां तत्पदपद्मयुग्मे
भक्तं हिडिम्बं दितिवंश सिंहम् ॥ ३१ ॥

इत्येव मुक्त्वा स्मित शोभिवक्त्रं
गुहं प्रहर्तुं स चकार यत्नम् ।
तस्मिन्क्षणे भूमितले हिडिम्बः
पापत वज्राहत पर्वताभः ॥ ३२ ॥

ச்ருத்வா ததீயம் வசனம் ஹிடிம்ப:
ஜானாஸி மாம் பாலதயா நஹி த்வம் ।
அஹம் ஸஹஸ்ராண்டகுலேச சூர
ஹிம்ஹாதி வித்யாகுருரஸ்மி பூஜ்ய: ॥ (30)

யஸ்யேசச்யா சக்ரதரோ மஹர்ஷே:
லிங்காக்ருதி: ஸங்குசிதாங்ககோऽபூத் ।
அவேஹி மாம் தத்பதபத்மயுக்மே
பக்தம் ஹிடிம்பம் திதிவம்ச ஸிம்ஹம் ॥ (31)



இத்யேவ முக்த்வா ஸ்மித சோபிவக்த்ரம்
குஹம் ப்ரஹர்த்தும் ஸ சகார யத்னம் ।
தஸ்மின் க்ஷணே பூமிதலே ஹிடிம்ப:
பபாத வஜ்ராஹத பர்வதாப: ॥ (32)

ஹிடிம்பன் அக்குழந்தையின் வார்த்தையை கேட்டு "நீ குழந்தையாய் இருப்பதால் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை. நான் 1000 அண்டங்களுக்கு அதிபனாகிய சூரன், ஸிம்ஹன் முதலானவர்களுக்கு ஆசிரியன், மதிப்பிற்குரியவன். எந்த மகர்ஷியினுடைய விருப்பதற்திற்கிணங்கி விஷ்ணு அங்கங்களை சுருக்கிக் கொண்டு லிங்கத்தின் உருவைப் பெற்றாரோ, அந்த மஹர்ஷியினுடைய பாதங்களுக்கு பக்தனும் அசுர வம்சத்தின் ஸிம்மமாகவும் உள்ள ஹிடிம்பன் என்றுகூறி புன்முறுவல் பூக்கும் முகத்தினனான குஹனை அடிப்பதற்கு முயன்றான் ஹிடிம்பன். அந்த நேரத்தில் வஜ்ரத்தினால் அடிக்கப்பட்ட மலைபோல் பூமியில் வீழ்ந்தான்.

स्कन्दस्य दण्डेन हतोऽथवाऽयं
शक्त्या महत्या किमु घोरदृष्ट्या ।
सङ्कल्पमात्रेण मृदुस्मितेन
कोपेन वा केऽपि न जानते स्म ॥ ३३ ॥

ஸ்கந்தஸ்ய தண்டேன ஹதோऽதவாऽயம்
சக்த்யா மஹத்யா கிமு, கோருத்ரஷ்ட்யா ।
ஸங்கல்பமாத்ரேண ம்ருதுஸ்மிதேன
கோபேன வா கேऽபி ந ஜானதே ஸ்ம ॥ (33)

இந்த ஹிடிம்பன் முருகனின் தடியால் அடிக்கப்பட்டானா? அல்லது பெரிய சக்தி ஆயுதத்தாலா, அல்லது க்ரூரமான பார்வையாலா, அல்லது ஸங்கல்பத்தினால் மட்டுமா, அல்லது அழகிய அப்புன்முறுவலாலா அல்லது கோபத்தாலா என்று எவரும் அறியமுடியவில்லை.

रसातलं जग्मुरथाशु सर्पाः
दण्डं च हस्तं चतुराननस्य ।
स्थातुं पुरः कस्य भवेद्धि शक्तिः
क्रुद्धे गुहे देवगणाधिनाथे ॥ ३४ ॥

ரஸாதலம் ஜக்முரதாக ஸர்பா:
தண்டம் ச ஹஸ்தம் சதுராநனஸ்ய ।
ஸ்தாதும் புர: கஸ்ய பவேத்தி சக்தி:
க்ருத்தே குஹே தேவகணாதினாதே ॥ (34)

பின் பெரும் பாம்புகள் (கயிறாயிருந்தவை) பாதாளத்திற்கும் தண்டம் பிரும்மதேவன் கைக்கும் சென்றன. தேவர்களுக்கு நாயகனாகிய குகன் கோபமுற்றிருப்பதனால் அவர் முன் நிற்க எவருக்கு சக்தியுண்டு?

स्कन्दाहतं वीक्ष्य हिडिम्बदैत्यं
देवा ववर्षु र्गगनात्सुमानि ।
हिडिम्ब मुक्तार्तरवांस्तु घोरान्
श्रुत्वाऽजगामाथ हिडिम्बभार्या ॥ ३५ ॥

ஸ்கந்தாஹதம் வீக்ஷ்ய ஹிடிம்பதைத்யம்
தேவா வவர்ஷுர் ககனாத் ஸுமானி ।
ஹிடிம்ப முக்தார்த ரவாம்ஸ்து கோரான்
ச்ருத்வாऽஜகாமாத ஹிடிம்பபார்யா ॥ (35)

முருகனால் அடித்து வீழ்த்தப்பட்ட ஹிடிம்பாஸுரனைப் பார்த்து தேவர்கள் ஆகாயத்தினின்றும் புஷ்பங்களை வர்ஷித்தனர். பின் ஹிடிம்பனினன் கோரமான அவலக்குரலைக் கேட்டு ஹிடிம்பனின் மனைவி வந்தாள்.

संस्तूयमानं शरजं सुरेन्द्रैः
भूमौ विसंज्ञं स्वपतिं च दृष्ट्वा ।
शोकाकुला सा दितिजस्य भार्या
चक्रन्द गांगेयपदौ प्रगृह्य ॥ ३६ ॥

ஸம்ஸ்தூயமானம் சரஜம்-ஸுரேந்த்ரை:
பூமௌ விஸம்ஞம் ஸ்வபதிம் ச த்ருஷ்ட்வா ।
சோகாகுலா ஸா திதிஜஸ்ய பார்யா
சக்ரந்த காங்கேயபதௌ ப்ரக்ருஹ்ய ॥ (36)



சிறந்த தேவர்களால் போற்றப்படுகின்ற முருகனையும் பூமியில் பிரஜ்ஞையற்றுக் கிடக்கும் தன் பார்த்தாவையும் கண்டு மிகச் சோகம் நிறைந்த அந்த ஹிடிம்பனின் மனைவி முருகனின் பாதங்களைப் பற்றிக் கொண்டு அழுதாள்.

दासीं त्वदीयां तव पादसक्तां
माङ्गल्यसूत्रावृतकन्धरां माम् ।
उज्जीव्य भर्तारमिमं कृपार्द्र-
दृष्ट्याऽमरेन्द्रार्च्य विभो विधेहि ॥ ३७ ॥

தாஸீம் த்வதீயாம் தவ பாதஸக்தாம்
மாங்கல்யஸூத்ராவ்ருத கந்தராம் மாம் ।
உஜ்ஜீவ்ய பர்தாரமிமம் க்ருபார்த்ர
த்ருஷ்ட்யாऽமரேந்த்ரார்ச்ய விபோ விதேஹி ॥ (37)

தேவேந்திரனால் பூஜிஜிக்கப்பட்ட விபோ! இந்த பர்த்தாவை கருணா திருஷ்டியினால் பிழைக்க வைத்து உன் பாதத்தில் பற்றுக் கொண்ட இவ்வடிமையாகிய என்னை கழுத்தில் மாங்கல்யக் கயிறு உள்ளவளாய் செய்யுங்கள்.

शूरस्य संहर्तु रशेष देव-
सेनापतेः क्रौंचविभेदकस्य ।
शक्तयस्त्र संशोभिकरस्य तुल्यः
तवास्ति को वीरवरेषु लोके ॥ ३८ ॥

சூரஸ்ய ஸம்ஹர்து ரசேஷ தேவ
ஸேனாபதே: க்ரௌஞ்சவிபேதகஸ்ய ।
சக்த்யஸ்த்ர ஸம்சோபிகரஸ்ய துல்ய:
தவாஸ்தி கோ வீரவரேஷு லோகே ॥ (38)

உலகில் சூரஸம்ஹாரம் செய்தவரும், தேர்க்கு ஸேனாதிபதியும், க்ரௌஞ்ச மலையைப் பிளந்தவரும், சக்தி திகழும் கரத்தினருமாகிய தங்களுக்கு சமமானவர் சிறந்த வீரர்களில் யார் இருக்கின்றனர்?

## श्रीस्कन्द प्रसादनम्

### முருகனை மகிழ்வித்தல்

पुरा कदाचित् त्रिजगद्विहारी
पुरारि संचिन्तन पूत चित्तः ।
सुभप्रदो यत्कलहः प्रसिध्दः
स नारदः पद्मभुवं प्रपेदे ॥ १ ॥

புரா கதாசித் த்ரிஜகத்விஹாரீ
புராரி ஸம்சிந்தன பூத சித்த: ।
சுபப்ரதோ யத்கலஹ: ப்ரஸித்த:
ஸ நாரத: பத்மபுவம் ப்ரபேதே ॥ (1)

முன் ஒரு ஸமயம் மூவுலகிலும் சஞ்சரிப்பவரும், சிவனைச் சிந்திப்பதால் தூய்மையான மனமுள்ளவரும், நன்மையளிக்கக்கூடிய கலகத்தை விளைவிப்பவர் என்று புகழ் பெற்றவருமாகிய நாரதர் பிரம்ம தேவனை அடைந்தார்.

गायत्रसाम्ना मधुरेण वीणा-
स्वानुषक्तेन च वेदवाग्भिः ।
सन्तुष्टचित्तात्तु विधेः सकाशात्
तत् दाडिमी नाम फलं स लेभे ॥ २ ॥

காயத்ரஸாம்னா மதுரேண வீணா
ஸ்வானுஷக்தேன ச வேதவாக்பி: ।
ஸம்துஷ்ட சித்தாத்து விதே: ஸகாசாத்
தத் தாடிமீ நாம பலம் ஸ லேபே ॥ (2)

அவர் வீணையுடன் இசைக்கப்படுகின்ற இனிமையான காயத்ரஸாமாவினாலும் வேத வாக்கியங்களாலும் மகிழ்ந்த மனத்தினரான பிரம்மனிடமிருந்து ''தாடிமீ'' என்ற பழத்தைப் பெற்றார். (தாடிமீ = மாதுளம் பழம்) (மாம்பழமென்றும் கூறுவர்)



एतत्फलं देव महेशहस्ते
दास्याम्यहं देहि तवाभ्यनुज्ञाम् ।
इत्यर्थयित्वा विधि माप्तकामः
पुरारि पुण्यायतनं जगाम ॥ ३ ॥

ஏதத் பலம் தேவ மஹேசஹஸ்தே
தாஸ்யாம்யஹம் தேஹி தவாப்யனுஞ்யாம் ।
இத்யர்தயித்வா விதி மாப்தகாம:
புராரி புண்யாயதனம் ஜகாம ॥ (3)

''ஐயனே! இப்பழத்தை மஹேசனின் கரத்தில் கொடுக்கப்போகிறேன் அதற்கு அனுமதி தாருங்கள்'' என்று பிரம்மாவை வேண்டிக்கொண்டு ஆசை நிறைவேறியவராய் நாரதர் சிவனின் பவித்திரமான வாசஸ்தானத்தை (கைலையங்கிரியை) அடைந்தார்.

कैलासशृङ्गे परमं भवान्या
समं स्थितं स्कन्दगणाधिपाभ्याम् ।
प्रणम्य साष्टाङ्ग ममोघ वाग्भिः
स्तुवन् ददौ तत्करयोः फलं तत् ॥ ४ ॥

கைலாஸச்ருங்கே பரமம் பவான்யா
ஸமம் ஸ்திம் ஸ்கந்தகணாதி பாப்யாம் ।
ப்ரணம்ய ஸாஷ்டாங்க மமோக வாக்பி:
ஸ்துவன் ததௌ தத்கரயோ: பலம் தத் ॥ (4)

கைலாச சிகரத்தில் பார்வதியுடனும் ஸ்கந்தர் கணபதி இவர்களுடனும் வீற்றிருக்கும் பரமனை ஸாஷ்டாங்கமாகப் பணிந்து வேதவாக்குகளால் துதித்து அவர் கரங்களில் பழத்தைக் கொடுத்தார்.

शुभं फलं तच्छिवहस्तलग्नं
निरीक्ष्य गांगेय गजाननौ तौ ।

குஷ்டரோகத்தினால் மிகவும் கஷ்டப்பட்டார். அவருடைய மனைவி மஹாபதிவ்ரதை. அவள் இவருக்கு இடைவிடாது வெறுப்பின்றி பதிபக்தியில் திளைத்தவளாய் பணிவிடைகள் செய்து வந்தாள். ஆயினும் அகந்தை கொண்டு கௌசிகன் அவள் மீது அடிக்கடி காரணமின்றியே கோபித்துக் கொள்வான். அவளோ மலர்ந்த முகத்துடன் எதையும் ஏற்று அன்பையே சொரிந்து வந்தாள்.

அக்கௌசிகன் ஒரு நாள் ராஜமார்க்கத்தில் செல்லும் ஒரு விலைமாதைப் பார்த்து ஆசை கொண்டான். காமத்திற்குக் கண் இல்லை என்பர். மனைவியிடம் இதைத் தெரிவித்து அவளிருப்பிடம் என்னை அழைத்துச் செல்ல வேண்டும். இல்லையானால் உயிர் விடுவேன் என்றான். அவளும் பதியின் மீதுள்ள பாசத்தினாலும் பக்தியினாலும் நிறையப் பொருள் எடுத்துக்கொண்டு, தன் தோளில் அவரை சுமந்து கொண்டு இரவில் அவள் வீடு நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். வழியிலே சூலத்திலே ஏற்பட்டிருந்தார் மாண்டவ்யர் என்ற மஹரிஷி. அவர் தவறு ஏதும் செய்யாதவர். தியானத்திலே லயித்துக்கிடந்தார். அவரைத் திருடன் என்ற தவறான எண்ணத்தினால், சேவகர் வார்த்தையை நம்பி, மன்னன் அவரை சூலத்திலே ஏற்றிவிட்டான். அப்படியும் அவர் பிராணன் போகாமல் உயிருடன் இருந்தார்.

இருட்டிலே செல்லும் கௌசிகன் மனைவி, அவர் இருப்பது தெரியாமல் தன் பர்தாவை அவர் மீது இடிக்கும்படி தூக்கிச் சென்றாள். இதனால் வேதனையுற்ற மாண்டவ்யர் கோபித்து, "சூரியன் உதயமானதும் உன் புருஷன் உயிர் இழப்பானாக" என சாபமிட்டார். இது கேட்ட கௌசிகன் மனைவியோ, "சூரியனே உதிக்காமல் இருக்கட்டும்" என பிரதிசாபம் இட்டாள். இதனால் சூர்யோதயம் ஆகாமல் இரவு பகல் இல்லாமல் போக, நித்ய கர்மாக்களும் இன்றி உலகம் துக்கத்தில் ஆழ்ந்து கிடந்தது. தேவர் பிரம்மாவிடம் முறையிட அவர் சொன்னார்.

### அனசூயையின் மஹிமை

பதிவ்ரதையின் சாபத்தை மற்றவர் மாற்றுதல் முடியாத காரியம். ஆயினும் பதிவ்ரதையின் சாபத்தை மற்றொரு பதிவ்ரதையால் மாற்ற முடியும். ஆகவே பதிவ்ரதையான அத்ரி மஹரிஷியின் மனைவி அனசூயையிடம் சென்று "சூரியனை உதிக்குமாறு செய்துதர வேண்டும்" என்று பிரார்த்தியுங்கள் அவள் நிச்சயம் உங்களுக்கு உதவுவாள் என்றார்.



தேவர்கள் அனசூயையிடம் வந்தனர். விபரத்தைக் கூறி, உதவி செய்யுமாறு வேண்டினர். அனசூயை உடன் கௌசிகன் வீட்டிற்கு வந்தாள். அங்கு வந்து கௌசிகன் மனைவியிடம் பாதிவ்ரத்யத்தின் பெருமையைப் பற்றி புகழ்ந்தாள். அதற்கு கௌசிகன் மனைவி நான் செய்த பாக்யத்தின் பயனாக தாங்கள் இங்கு எழுந்தருளியுள்ளீர். நான் ஏதேனும் தொண்டு செய்ய வேண்டுமானால் கட்டளையிடுங்கள் எனக் கூறிப் பணிந்தாள்.

அனசூயையோ, அம்மா! உலகம் சுபிக்ஷமாய் வாழ நீ உன் வாக்கால் சூரியனை உதிக்குமாறு அழைக்க வேண்டும் என்றாள். இது கேட்ட கௌசிகன் மனைவி அன்னையே! என் பர்த்தாவுக்கு உயிர் போகுமே என் செய்வேன் என்றாள். அனசூயை சொன்னாள். சூரியன் உதிக்கட்டும் என்று நீ அனுமதி கொடுத்து விடும்போது நான் உன் பர்த்தாவை உயிர் பிழைக்க வைத்துவிடுகிறேன் என்றாள். அவளும் சூரியன் உதிக்கட்டும் என்று கூற சூரியன் வெளிவர கௌசிகன் உயிர் நீத்தான்.

இது கண்ட அனசூயா அங்கு சில பிரதிஜ்ஞைகளைச் செய்தாள்.

ரூபம், சீலம், புத்தி, இனியவாக்கு இவைகளால் உயர்ந்தவராக என் பர்த்தாவுக்கு ஸமமாக எனக்கு வேறொருவர் இல்லை என்பது ஸத்யமானால் இந்த கௌசிகன் உயிர் பிழைக்கட்டும். மனம், வாக்கு, செயல்கள் இவற்றை என் பர்தாவின் ப்ரீதிக்காகவே நான் ஈடுபடுத்தியிருப்பது ஸத்யமானால் இந்த கௌசிகன் பிழைக்கட்டும் என ஸத்யப்ரதிஜ்ஞை செய்தாள். உடன் பிழைத்தெழுந்தான் கௌசிகன், மனைவி பேரானந்தமடைந்து அனசூயையை வணங்கினாள். மகிழ்ந்த தேவர் அனுசூயாவிடம் வரந்தருகின்றோம் கேள் என்றனர்.

### அனசூயை பெற்ற வரம்

அப்போது அனசூயை நீங்கள் என் மீது அன்பு காட்டினால் பிரம்மா, விஷ்ணு, ருத்ரர் என்ற முப்பெருந் தெய்வங்களும் எனக்குக் குழந்தைகளாய்ப் பிறக்கட்டும் என வரம் கேட்டாள். தேவர்களும் மகிழ்ந்தளித்தனர்.

### பிரம்மாவின் அவதாரம்

உடன் ஆசிரமம் வந்த அனசூயை பர்த்தாவுடன் பிரம்ம தேவரை பிரார்த்தித்தாள். தாங்கள் எனக்குக் குமாரனாய் பிறந்தருள வேண்டும்

என்று. பிரம்மாவும் வரம் தர அதன் காரணமாய் பிரம்மா சந்திரன் என்ற பெயருடன் அனசூயையின் புதல்வராய் பிறந்தார். ஆகவே சந்திரன் பிரம்மாவின் அம்சம் இந்த சந்திரன் அனைத்து தத்துவங்களுக்கும் ஆயுளுக்கும் ஆதா்ரமாய் இருப்பவன்.

**ருத்ரன் துர்வாசரானார்**

ஒரு ஸமயம் அனசூயா ருத்ரனும் தனக்குப் புத்திரனாய்ப் பிறக்க வேண்டும் எனத் தவமியற்றினாள். அதனால் மகிழ்ந்த சிவன் பதிவ்ரதையாகிய அனசூயா தேவியே! என்னை கர்ப்பத்திலே வாசம் செய்யுமாறு வேண்டாதே அது துர்வாசம் (வசிப்பதற்கு ஏற்ற இடமல்ல) துர்வாச என்று கூறிக்கொண்டோ ஜடாதாரியாய். அக்கமாலை மிளிரும் திருமேனியராய் புனித நீற்றொளிதிகழும் நெற்றியினராய் தாபஸவேடத்துடன் "நான் உங்கள் மைந்தன்" என்று கூறிக் கொண்டு அவவெதிரில் நின்றார். "துர்வாசம்" என்று அவர் கூறிக் கொண்டு அவர் அனசூயையின் எதிரில் வந்ததால் அவருக்கு துர்வாஸர் எனப் பெயர் வழங்கலாயிற்று. இந்த வரலாறு ஸனத்குமார ஸம்ஹிதையில் குறிப்பிடப்படுகின்றது. ஆகவே துர்வாசர் ஸாக்ஷாத் சிவனேயாவார். இவருக்குப் பிறரை சபிப்பதனால் தவம் குறையாது. அதற்கு மாறாக வளருமாம். இவ்வாறு பெரியோர் கூறுவர்.

मुने र्दुवाससोऽन्यत्र तपो नश्यति शापतः
दुर्वाससस्तु तपसो वृद्धिरित्याहु रास्तिकाः ॥

முனேர் துர்வாஸஸோன்யத்ர தபோ நச்யதி சாபத: ।
துர்வாஸஸஸ்து தபஸோ வ்ருத்தி ரித்யாஹு ராஸ்திகா: ॥

ஆகவே இவரைக் கண்டாலே நடுங்குவர் அவைரும். ஆயினும் இவர் சாபம் லோகத்திற்கு க்ஷேமத்தையே கொடுக்கும். இவர் பெரிய பராசக்தி பக்தர். ஆகவே இவரை "க்ரோத பட்டாரகர்" என்றும் காளிதாஸமஹாகவியை "லகுபட்டாரகர்" என்றும் பேசுவர்.

**விஷ்ணுவே தத்தாத்ரேயர்**

அனசூயாதேவி மிகவும் பதிவ்ரதா தர்மத்தாலே சக்தி பெற்று விளங்கினாள். ஒரு சமயம் மழையின்மையால் உலகங்கள் தவித்துக் கொண்டிருக்கும்போது தன் தவ மகிமையால் இவள் கிழங்கு, பழம்,



இலை முதலியவற்றை சிருஷ்டித்து அருளினாள். அவ்வாறே கங்காதேவியையும் அழைத்து உலகத்திற்கு நீரளித்தாள். அவ்வாறு பத்து இரவுகளையும் மக்களுக்கு ஓரிரவாய் தோன்றும்படிச் செய்தாள்.

இத்துடன் இவள் பெருமையை ஸ்ரீ மத் ராமாயணமும் விளக்குகின்றது. ஸ்ரீ ராமர் ஸீதையுடனும், இலக்குவனுடனும் தண்டகாரண்யம் வந்தபோது அத்திரியின் ஆசிரமத்திற்கும் வந்தார். அப்போது அத்திகிரி, ராமரிடம் அனசூயையை "ஸ்ரீ ராமா இவள் உனக்குத் தாய் போன்றவள்" என்று அறிமுகம் செய்துவைத்தார். அனசூயை சீதைக்கு பழமையான பதிவ்ரதா தர்மங்களை எடுத்துக் கூறினாள். தன் தவம் முற்றுப் பெற்றபின் மகிழ்ந்த இந்திரனால் அளிக்கப்பட்ட வஸ்திரம் அலங்காரம் முதலியவற்றை இவள் சீதாதேவிக்கு அணிவித்து ஆனந்தம் அடைந்தவள். சீதையின் மூலமாகவே சீதா சுயம்வர சரிதத்தைக் கேட்கும் பாக்யம் பெற்ற மகா உத்தமி. இவள் தனக்கு மஹாவிஷ்ணுவும் புத்திரனாகப் பிறக்க வேண்டும் என விரும்பினாள். அதனால் ஸத்வகுண ப்ரதானராக அந்தணனாய் விஷ்ணு தத்தாத்ரேயர் என்ற பெயருடன் பிறந்து அனசூயையின் பாலை அருந்தி மகிழ்ந்தார். இவர் விஷ்ணுவின் அம்சம் என்பதை பாகவதமும் வலியுறுத்திப் பேசும். இதை இந்த சுலோகத்தால் அறியலாம்.

सोमो ब्रह्मा भवत् विष्णुः
दत्तात्रेयोऽम्यजायत ।
दुर्वासाः शंकरो जज्ञे
वरदानाद्धिवैकसां ॥

ஸோமோ ப்ரம்ஹா பவத் விஷ்ணு:
தத்தாத்ரேயோப்ய ஜாதய ।
துர்வாஸா: சங்கரோ ஜஞ்யே
வரதானாத் திவௌகஸாம் ॥ (மார்கண்டேய புராணம்)

**யோகி சிரேஷ்டர்**

இந்த தத்தாத்ரேயர் யோகிகளில் சிரேஷ்டர். முருகன் வீரபாஹுவுக்கு விசுவரூப தரிசனம் அளித்தார். அப்போது வீரபாஹுவுக்குத் தன் பெருமைகளை எடுத்து விளக்கிக் கூறினார். அங்கு- நான்

யோகிகளுக்குள்ளே தத்தாத்ரேயராய் இருக்கிறேன்' என்று கூறினார். பிரஸித்தமான அவதூத கிதை தத்தாத்ரேயரால் உபதேசிக்கப்பட்டதாகும் என்ற விபரமும் அனைவரும் அறிந்ததே. கார்த்தவீர்யாசுனனால் ஜமதக்னி மஹர்ஷியும், ரேணுகாதேவியும் கொல்லப்பட்டனர். இது தெரிந்து பரசுராமர் வந்தார். உடன் தத்தாத்ரேயரை நினைத்தார். அவர் வந்து அவருடைய உபதேசப்படி பரசுராமர் மாதாப்பிதாக்களுக்கான காரியங்களைச் செய்தார். அதன் காரணமாக ஜமதக்னியும் ரேணுகாதேவியும் நற்கதி பெற்றனர் எனக் கூறும் முத்கல புராணம் இத்துடன் இந்த தத்தாத்ரேயர் கணபதியை உபாஸிப்பவர் என்றும் முத்கலர் மூலமாய்த் தெரிகின்றது.

## பற்றற்ற யோகி தத்தாத்ரேயர்

விஷ்ணுவின் அம்சமான இந்த தத்தாத்ரேயர் மிகப் பெரிய யோகி சிரேஷ்டராய் திகழ்ந்தார். இவருடைய மஹிமை தபோபலம் வலிமை இவற்றைக் கண்டு அனைத்தையும் இவரிடமிருந்து பெற இவரை ஸதா ஸர்வ காலமும் முனிகுமாரர் கூட்டம் தொடர ஆரம்பித்தது. தத்தாத்ரேயர் ஸங்கத்தை விரும்பவில்லை. கூட்டத்தைக் கண்டாலே ஸாதுக்கள் பயங்கொள்வர். ஏகாந்த வாஸத்தையே விரும்பினார். ஆகவே முனிகுமாரர்களை விரட்ட ஒரு வழி கண்டார். முனிகுமாரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஒரு பெரிய ஸரஸ்ஸில் மூழ்கினார். இவ்வாறு 100 ஆண்டுகள் ஜலத்திற்குள்ளேயே இருந்தார். முனிகுமாரர்கள் அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் ஸரஸ்ஸின் கரையிலேயே 100 ஆண்டுகள் காத்திருந்தனர்.

தத்தாத்ரேயர் 100 ஆண்டுகள் கழித்து மீண்டும் வெளிவந்த போது கூட்டம் அப்படியே இருந்ததைக் கண்டு வியந்தார். வேறு ஒரு உபாயத்தைச் செய்தார். தன் யோக சக்தியினால் நல்ல ரூபம் வயது அலங்காரம் இவை தரித்த ஒரு அழகிய மங்கையை தூக்கிக் கொண்டு ஜலத்தினின்றும் வெளி வந்தார். ஸ்த்ரீயுடன் தொடர்பு கொண்ட துறவி என்று தன்னை வெறுத்து முனிகுமாரர்கள் தன்னை விட்டுப் பிரிந்து போவார்கள் என நினைத்தார். அப்படியும் அவர்கள் இது ஏமாற்றும் வித்தை உண்மையில்லை என்று நினைத்து இவரை விட்டு அகலவில்லை. அதன் பின் யோகி வேறொரு வழி செய்தார். அவளுடன் கூட மத்யபானம் செய்வது போல் காட்சி கொடுத்தார். முனிகுமாரர்கள் அறியாமையினால் இதைத் தவறாக நினைத்து ஒவ்வொருவராக பிரிந்து



சென்றனர். யோகி ஸ்த்ரீயைத் தீண்டுவாரா! மத்யபானம் தான் செய்வாரா! எல்லாம் மாயை என்பதை அறியும் திறமை முனிகுமாரர்களுக்கு ஏற்படாதது கண்டு ஸங்கத்தை விரும்பாத யோகி மகிழ்ந்தார்.

## கார்த்தவீர்யனும் தத்தாத்ரேயரும்

க்ருதவீர்ய மன்னன் ஸர்வர்கம் எய்தியவுடன் மந்திரிகள் அவன் குமாரனாகிய கார்த்தவீர்யார்சுனனை அரச பீடம் அமர்ந்து இருக்குமாறு வேண்டினர். அவன் மறுத்தான். அதற்கு காரணம் தான் ஒரு நல்ல சக்தி படைத்த யோகியாய் இருந்தால்தான் நல்ல ஆட்சி நடத்தும் மன்னனாக இருக்க முடியும் என்று நினைத்தான். தவறு இழைக்காத மன்னனன்றோ பாபத்தில் பங்கு கொள்ளாதிருக்க முடியும்! சரியான ஆட்சி புரியவில்லையானால் பிரஜைகள் செய்யும் பாபங்கள் மன்னனையல்லவா சேரும்.

இவ்வாறான கார்த்தவீர்யார்சுனனின் முடிவை கர்க மஹரிஷி ஆமோதித்தார். அவனைக் கூப்பிட்டு தத்தாத்ரேயரைச் சரண் அடையச் சொன்னார். அவனும் அவ்வாறே அவரைச் சரண் அடைந்து அவருக்கு இடைவிடாது பணிவிடை செய்து வந்தான்.

தத்தாத்ரேயர் மன்னனை நோக்கி, அர்சுனா! என் பக்கத்திலேயே வீற்றிருக்கும் இப் பெண்ணைப் பார்த்தாயா! நான் வழி தவறியவன் எனக்கு வரமளிக்கும் சக்தி எங்கிருந்து வரும்! வேறு ஒருவரை நீ சரணடை என்று சொல்லிப்பார்த்தார்.

கார்த்வீர்யார்சுனன் சொன்னான். ஐயனே! தாங்கள் புரான புருஷர். தங்கள் பக்கத்திலே அமர்ந்திருக்கும் பெண் எல்லாவற்றிற்கும் மூலகாரணமானவள் இவள் மாயா ஸ்வரூபிணி. தாங்கள் சிறிது கூட பாப ஸம்பந்தமில்லாத உத்தமர் என்பதை நான் உணர்கிறேன். என்னை ஏமாற்றாதீர்கள். நான் தங்கள் திவ்ய சரணாரவிந்தங்களை விட மாட்டேன் என்று தீவிரமாய் தொண்டாற்றினான்.

தத்தாத்ரேயர் மகிழ்ந்தார். வரமளிக்க முன்வந்தார். ஞானிகள் சங்கமற்றவர். அவர்கள் கூட்டத்தை விட்டகல தவறு புரிபவர் போல் தோற்றமளிப்பர். ஜடர் போலவும் பைத்தியம் போலவும் காட்சி கொடுப்பர். அதைக் கண்டு ஏமாந்து விடக் கூடாது. ஸங்கத்தைத் தவிர்க்க அவர் செய்யும் மாயை இவை. இதை அறிந்தவரே யோகிகளின்

அருளுக்கும் அன்புக்கும் பாத்திரமாவார். யோகிகளின் வெளித் தோற்றம் கண்டு ஏமாறக் கூடாது. இவ்வாறான யோகியிடம் மன்னன் வரங்கள் கேட்டான்.

1. நான் நன்றாக ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டும்.
2. என்னிடம் அதர்மம் இடம் பெறக்கூடாது.
3. பிறர் நினைப்பதெல்லாம் எனக்கு தெரியவேண்டும்.
4. யுத்தத்தில் எனக்கு சமமாக வேறொருவர் இருக்கக்கூடாது.
5. எனக்கு ஆயிரம் கைகள் வேண்டும்.
6. மலை, ஆகாசம், ஜலம், பூமி, பாதாளம் எங்கும் தங்கு தடையின்றிச் செல்லும் சக்தி எனக்கு தாங்கள் அருள வேண்டும்.
7. என்னை விட உயர்ந்த மஹிமை உடையவரால் எனக்கு வதம் நேர வேண்டும்.
8. நான் தவறு செய்யும்போது என்னைத் தடுத்து நிறுத்தும் ஆசார்சயர்கள் எனக்குக் கிடைக்க வேண்டும்.
9. என்னைத் தேடி நித்தம் நிறைய அதிதிகள் வரவேண்டும்.
10. குறையாத வற்றாத செல்வமும் எனக்கு வேண்டும்.
11. என் ஆட்சியில் திருட்டு நேரக்கூடாது. அப்படி நஷ்டமானாலும் அப்பொருளும் என்னை நினைத்தமாத்திரத்தில் மீண்டும் கிடைத்துவிட வேண்டும்.
12. தங்களிடம் அசையாத பக்தி வேண்டும்.

என்று பன்னிரெண்டு வரங்கள் பெற்றான் கார்த்தவீர்யார்சுனன்.

மும்மூர்த்தி ஸ்வரூபி தத்தாத்ரேயர்

தத்தாத்ரேயரை முன்பு நாராயணருடைய அம்சமாய்க் குறிப்பிட்டோம். அவர் நாராயணாம்சராயினும் மும்மூர்த்தி ஸ்வரூபமாகவும் உள்ளார் என வேறு வரலாறு கூறுகின்றது. அதையும் இங்கு காண்போம்.

அத்திரி மஹரிஷியும் அனசூயா தேவியும் தனக்கு ஈடுயிணையற்ற ஓர் புத்திரன் பிறக்க வேண்டும் என்று கடுந்தவமியற்றினர்.

இவர்களுடைய. தவம் பலிக்க வேண்டிய காலம் நெருங்கியது போலும். தேவரிஷியான நாரதர் இரும்பால் ஆன கடலைகளை எடுத்துக் கொண்டு தன் மனதில் நல்லதொரு முடிவுடன் முப்பெரும் சக்திகளிடம்



சென்றார். மூவரையும் கண்டு இந்த இரும்புக் கடலையை வறுத்துக் கொடுங்கள் என வேண்டினார். மூவரும் முடியாதென்று விட்டனர். நாரதரோ திட்டமிட்டபடி அத்திரியின் ஆசிரமம் வந்து அனஸூயையிடம் வறுத்துத் தருமாறு வேண்டினார். பதிவ்ரதையால் ஆகாததும் உண்டோ! மூவரும் மற்றய தேவரும் முனிவரும் சாதிக்க முடியாததை தன் பதிபக்தியின் காரணமாக் சாதித்துக் கொடுப்பாரன்றோ பதிவிரதைகள். அனஸூயை அனாயாஸமாக அதைச் செய்து முடித்தாள். வெந்த இரும்புக் கடலையைக் கைக் கொண்டு முப்பெருந்தேவிகளிடம் சென்று கடலையைக் காட்டி பதிவ்ரதையின் பெருமை பேசி மகிழ்ந்தார் நாரதர். அவர் நோக்கம் கை கூடியது.

முப்பெரும் சக்திகளும் அனஸூயையின் கற்பை அறிய விரும்பினர். தன் பர்த்தாக்களை அவளிடம் அனுப்பினர். மூவரும் மாற்றுருக் கொண்டு சென்று ஆடையின்றி தாயே நீ பிக்ஷையிட வேண்டும் என வேண்டினர். அனஸூயை அதிதி ஸத்காரத்தின் மேன்மையையும் அதை அளிப்பதிலே உள்ள கஷ்டத்தையும் உணர்ந்தாள். பதியை ஸ்மரித்து பிக்ஷையிட வந்தாள்.

அவளுடைய களங்கமற்ற வீக்ஷணத்தினாலே மூவரும் குழந்தைகளாயினர். மகிழ்ந்து குழந்தைகளுக்கு பாலூட்டினாள். அவள் அன்புப் பிணிப்பிலே மூன்று குழந்தைகளும், மூன்று தலைகளும், ஆறு கரங்களும், இரண்டு கால்களும் கொண்ட ஒரு குழந்தையாக மாறினர்.

அத்திரியம், அனசூயையும் தங்கள் தவம் பலித்ததை நினைத்து மகிழ்ந்தனர். இதை நாரதர் மூலம் அறிந்த முப்பெரும் சக்திகளும் அனசூயையிடம் வந்து பதிகளை மீண்டும் தந்தருளுமாறு வேண்டினர். அவளும் இசைய மும்மூர்த்திகளும் வெளிவந்து அத்திரியையும், அனசூயையும் வாழ்த்தி எங்கள் மூவரின் அம்சம் இக் குழந்தை தந்தாத்ரேயர் என இக் குழந்தை உலகில் புகழ்பெறும் என்று கூறி மறைந்தனர்.

உ

# पंचमुख आञ्जनेयः

## பஞ்சமுக ஆஞ்ஜநேயர்

ஸ்வர்ணாகர்ஷண பைரவர் இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றார். பத்னியுடன் கூடிய இந்த விக்ரஹம் மிக அழகாய் காக்ஷியளிக்கின்றது. இவர் பற்றிய விபரம் முன்னரே கொடுக்கப்பட்டிருக்கின்றது. அங்கே காண்க.

आञ्जनेयः पञ्चमुखः शिल्पिप्रवरनिर्मितः ।
स्कन्दाश्रमस्य पुरतः दृश्यते सुन्दराकृतिः ॥ (१)

श्रीरामभद्रदूतोऽयं शान्तानन्दप्रतिष्ठितः ।
असाध्यसाधको भक्तजनाभीष्टफलप्रदः ॥ (२)

ஆஞ்ஜநேய: பஞ்சமுக: சில்பிப்ரவர நிர்மித: ।
ஸ்கந்தாச்ரமஸ்ய புரத: த்ருச்யதே ஸுந்தராக்ருதி: ॥ (1)

ஸ்ரீ ராமபத்ரதூதோயம் சாந்தானந்த ப்ரதிஷ்டித: ।
அஸாத்யஸாதகோ பக்த ஜனாபீஷ்ட பலப்ரத: ॥ (2)

நல்ல சிற்பியினால் நிர்மாணிக்கப் பட்டவரும், அழகிய உருவம் உடையவருமான பஞ்சமுக ஆஞ்ஜநேயர் ஸ்கந்தாச்ரமத்தின் முன்பு காணப்படுகின்றார். ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட இந்த ஸ்ரீ ராமதூத ஹனுமான், பிறரால் ஸாதிக்க முடியாததையும் ஸாதிக்கும் திறனுள்ளவர் பக்தர்களுக்கு அபீஷ்ட பலன்களையும் அளிப்பவர்.

वीणागानविशारदेन मुनिना श्रीनारदेनोज्वल
त्कीर्तिव्याप्त दिगन्तरैर्यतिवरैः श्रीराघवेन्द्रैरपि ।
नित्यं संयगुपास्यमानममलैः स्तोत्रैः प्रमोदप्रदैः
वन्दे पंचमुखांजनेयमखिलाभिष्ट प्रदानोद्यतम् ॥ (३)

வீணாகான விசாரதேன முனினா ஸ்ரீ நாரதேனோஜ்வலத்-
கீர்த்திவ் யாப்த திகந்தரைர் யதி வரை: ஸ்ரீ ராகவேந்த்ரை ரபி ।



நித்யம் ஸம்ய குபாஸ்ய மான மமலை: ஸ்தோத்ரை: ப்ரமோதப் ரதை:
வந்தே பஞ்சமுகாஞ்சநேயம் அகிலா பீஷ்ட ப்ரதானோத் யதம் ॥ (3)

(பொ. உ) வீணா கானம் செய்வதில் வல்லவரான ஸ்ரீ நாரத மஹர்ஷியாலும் திக்கெங்கிலும் பரவிய பிரகாசமான கீர்த்தியுடைய ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளாலும் தினந்தோறும் மகிழ்ச்சியளிக்கும் சிறந்த ஸ்தோத்ரத்தினால் உபாஸிக்கப்படுகின்ற அனைத்து இஷ்டங்களையும் வழங்க முற்பட்டிருக்கும் ஸ்ரீ பஞ்சமுக ஆஞ்ஜநேயரை வணங்குகின்றேன்.

हत्वा पञ्चमयूररावणखलस्यासून् महापेटिका-
गुप्तान् धातृवरेण षट्पदतनूः संबिभ्रतो भीकरान् ।
संयुक्तोऽश्व-वराह-वानर-गरुत्मत्-सिंहरुपाननैः
चक्रे यो रघुपुङ्गवौ प्रमुदितौ तं वायुसूनुं भजे ॥ (४)

ஹத்வா பஞ்சமயூர ராவண கலஸ்யாஸூன் மஹாபேடிகா-
குப்தான் தாத்ருவரேண ஷட்பததனூ: ஸம்பிப்ரதோ பீகரான் ।
ஸம்யுக்தோऽச்வ-வராஹ - வானர-கருத்மத்- ஸிம்ஹரூபானனை:
சக்ரே யோ ரகுபுங்கவௌ ப்ரமுதிதௌ தம் வாயுஸூனும்
பஜே ॥ (4)

பிரம்மாவின் வரத்தால் ஆறு வண்டுகளின் உருவங்களையுடைய பயங்கரமான, பெரிய பெட்டியினுள் மறைத்து வைக்கப்பட்ட, அயோக்கியனான மயில் ராவணனுடைய ஐந்து பிராணன்களையும், குதிரை, பன்றி, வானரம், கருடன், ஸிம்ஹம் இவற்றின் முகங்கள் உடையவராய் அழித்து, எவர் ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களை மகிழ்ச்சி அடையச் செய்தாரோ அந்த வாயு குமாரனாகிய ஆஞ்ஜநேயரை பூஜிக்கிறேன்.

खड्गं-शूल-महीरुहा-चल-महापाशांकुशान् बाहुभिः
चिन्मुद्रां पृथुभिण्डिपालमपि खट्वांगं तथा कुण्डिकाम् ।
बिभ्राणं प्रणतार्तिनाशनपटुं रम्यं मुखैः पञ्चभिः
श्रीस्कन्दाश्रमनित्यवासरसिकं वीराञ्जनेयं भजे ॥ (२)

கட்கம் சூலமமஹீருஹாசல மஹாபாசாங்குசான் பாஹுபி:
சின்முத்ராம் ப்ருதுபிண்டிபாலமபி கட்வாங்கம் ததா குண்டிகாம் ।

அருளுக்கும் அன்புக்கும் பாத்திரமாவார். யோகிகளின் வெளித் தோற்றம் கண்டு ஏமாறக் கூடாது. இவ்வாறான யோகியிடம் மன்னன் வரங்கள் கேட்டான்.

1. நான் நன்றாக ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டும்.
2. என்னிடம் அதர்மம் இடம் பெறக்கூடாது.
3. பிறர் நினைப்பதெல்லாம் எனக்கு தெரியவேண்டும்.
4. யுத்தத்தில் எனக்கு சமமாக வேறொருவர் இருக்கக்கூடாது.
5. எனக்கு ஆயிரம் கைகள் வேண்டும்.
6. மலை, ஆகாசம், ஜலம், பூமி, பாதாளம் எங்கும் தங்கு தடையின்றிச் செல்லும் சக்தி எனக்கு தாங்கள் அருள வேண்டும்.
7. என்னை விட உயர்ந்த மஹிமை உடையவரால் எனக்கு வதம் நேர வேண்டும்.
8. நான் தவறு செய்யும்போது என்னைத் தடுத்து நிறுத்தும் ஆசார்ர்சயர்கள் எனக்குக் கிடைக்க வேண்டும்.
9. என்னைத் தேடி நித்தம் நிறைய அதிதிகள் வரவேண்டும்.
10. குறையாத வற்றாத செல்வமும் எனக்கு வேண்டும்.
11. என் ஆட்சியில் திருட்டு நேரக்கூடாது. அப்படி நஷ்டமானாலும் அப்பொருளும் என்னை நினைத்தமாத்திரத்தில் மீண்டும் கிடைத்துவிட வேண்டும்.
12. தங்களிடம் அசையாத பக்தி வேண்டும்.

என்று பன்னிரெண்டு வரங்கள் பெற்றான் கார்த்தவீர்யார்சுனன்.

### மும்மூர்த்தி ஸ்வரூபி தத்தாத்ரேயர்

தத்தாத்ரேயரை முன்பு நாராயணருடைய அம்சமாய்க் குறிப்பிட்டோம். அவர் நாராயணாம்சராயினும் மும்மூர்த்தி ஸ்வரூபமாகவும் உள்ளார் என வேறு வரலாறு கூறுகின்றது. அதையும் இங்கு காண்போம்.

அத்திரி மஹரிஷியும் அனசூயா தேவியும் தனக்கு ஈடுயிணையற்ற ஓர் புத்திரன் பிறக்க வேண்டும் என்று கடுந்தவமியற்றினர்.

இவர்களுடைய தவம் பலிக்க வேண்டிய காலம் நெருங்கியது போலும். தேவரிஷியான நாரதர் இரும்பால் ஆன கடலைகளை எடுத்துக் கொண்டு தன் மனதில் நல்லதொரு முடிவுடன் முப்பெரும் சக்திகளிடம் சென்றார். மூவரையும் கண்டு இந்த இரும்புக் கடலையை வறுத்துக் கொடுங்கள் என வேண்டினார். மூவரும் முடியாதென்று விட்டனர். நாரதரோ திட்டமிட்டபடி அத்திரியின் ஆசிரமம் வந்து அனஸூயையிடம் வறுத்துத் தருமாறு வேண்டினார். பதிவ்ரதையால் ஆகாததும் உண்டோ! மூவரும் மற்றய தேவரும் முனிவரும் சாதிக்க முடியாததை தன் பதிபக்தியின் காரணமாக் சாதித்துக் கொடுப்பாரன்றோ பதிவிரதைகள். அனஸூயை அனாயாஸமாக அதைச் செய்து முடித்தாள். வெந்த இரும்புக் கடலையைக் கைக் கொண்டு முப்பெருந்தேவிகளிடம் சென்று கடலையைக் காட்டி பதிவ்ரதையின் பெருமை பேசி மகிழ்ந்தார் நாரதர். அவர் நோக்கம் கை கூடியது.



முப்பெரும் சக்திகளும் அனஸூயையின் கற்பை அறிய விரும்பினர். தன் பர்த்தாக்களை அவளிடம் அனுப்பினர். மூவரும் மாற்றுருக் கொண்டு சென்று ஆடையின்றி தாயே நீ பிக்ஷையிட வேண்டும் என வேண்டினர். அனஸூயை அதிதி ஸத்காரத்தின் மேன்மையையும் அதை அளிப்பதிலே உள்ள கஷ்டத்தையும் உணர்ந்தாள். பதியை ஸ்மரித்து பிக்ஷையிட வந்தாள்.

அவளுடைய களங்கமற்ற வீக்ஷணத்தினாலே மூவரும் குழந்தைகளாயினர். மகிழ்ந்து குழந்தைகளுக்கு பாலூட்டினாள். அவள் அன்புப் பிணிப்பிலே மூன்று குழந்தைகளும், மூன்று தலைகளும், ஆறு கரங்களும், இரண்டு கால்களும் கொண்ட ஒரு குழந்தையாக மாறினர்.

அத்திரியம், அனசூயையும் தங்கள் தவம் பலித்ததை நினைத்து மகிழ்ந்தனர். இதை நாரதர் மூலம் அறிந்த முப்பெரும் சக்திகளும் அனசூயையிடம் வந்து பதிகளை மீண்டும் தந்தருளுமாறு வேண்டினர். அவளும் இசைய மும்மூர்த்திகளும் வெளிவந்து அத்திரியையும், அனசூயையும் வாழ்த்தி எங்கள் மூவரின் அம்சம் இக் குழந்தை தந்தாத்ரேயர் என இக் குழந்தை உலகில் புகழ்பெறும் என்று கூறி மறைந்தனர்.

உ

# पंचमुख आञ्जनेयः

## பஞ்சமுக ஆஞ்ஜநேயர்

ஸ்வர்ணாகர்ஷண பைரவர் இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றார். பத்னியுடன் கூடிய இந்த விக்ரஹம் மிக அழகாய் காக்ஷியளிக்கின்றது. இவர் பற்றிய விபரம் முன்னரே கொடுக்கப்பட்டிருக்கின்றது. அங்கே காண்க.

आञ्जनेयः पञ्चमुखः शिल्पिप्रवरनिर्मितः ।
स्कन्दांश्रमस्य पुरतः दृश्यते सुन्दराकृतिः ॥ (१)

श्रीरामभद्रदूतोऽयं शान्तानन्दप्रतिष्ठितः ।
असाध्यसाधको भक्तजनाभीष्टफलप्रदः ॥ (२)

ஆஞ்ஜநேய: பஞ்சமுக: சில்பிப்ரவர நிர்மித: ।
ஸ்கந்தாச்ரமஸ்ய புரத: த்ருச்யதே ஸுந்தராக்ருதி: ॥ (1)

ஸ்ரீ ராமபத்ரதூதோயம் சாந்தானந்த ப்ரதிஷ்டித: ।
அஸாத்யஸாதகோ பக்த ஜனாபீஷ்ட பலப்ரத: ॥ (2)

நல்ல சிற்பியினால் நிர்மாணிக்கப் பட்டவரும், அழகிய உருவம் உடையவருமான பஞ்சமுக ஆஞ்ஜநேயர் ஸ்கந்தாச்ரமத்தின் முன்பு காணப்படுகின்றார். ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட இந்த ஸ்ரீ ராமதூத ஹனுமான், பிறரால் ஸாதிக்க முடியாததையும் ஸாதிக்கும் திறனுள்ளவர் பக்தர்களுக்கு அபீஷ்ட பலன்களையும் அளிப்பவர்.

वीणागानविशारदेन मुनिना श्रीनारदेनोज्वल
त्कीर्तिव्याप्त दिगन्तरैर्यतिवरैः श्रीराघवेन्द्रैरपि ।
नित्यं संयगुपास्यमानममलै स्तोत्रैः प्रमोदप्रदैः
वन्दे पंचमुखांजनेयमखिलाभिष्ट प्रदानोयतम् ॥ (३)

வீணாகான விசாரதேன முனினா ஸ்ரீ நாரதேனோஜ்வலத்-
கீர்த்திவ் யாப்த திகந்தரைர் யதி வரை: ஸ்ரீ ராகவேந்த்ரை ரபி ।



நித்யம் ஸம்ய குபாஸ்ய மான மமலை: ஸ்தோத்ரை: ப்ரமோதப் ரதை:
வந்தே பஞ்சமுகாஞ்சநேயம் அகிலா பீஷ்ட ப்ரதானோத் யதம் ॥ (3)

(பொ. உ) வீணா கானம் செய்வதில் வல்லவரான ஸ்ரீ நாரத மஹர்ஷியாலும் திக்கெங்கிலும் பரவிய பிரகாசமான கீர்த்தியுடைய ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளாலும் தினந்தோறும் மகிழ்ச்சியளிக்கும் சிறந்த ஸ்தோத்ரத்தினால் உபாஸிக்கப்படுகின்ற அனைத்து இஷ்டங்களையும் வழங்க முற்பட்டிருக்கும் ஸ்ரீ பஞ்சமுக ஆஞ்ஜநேயரை வணங்குகின்றேன்.

हत्वा पञ्चमयूररावणखलस्यासून् महापेटिका-
गुप्तान् धातृवरेण षट्पदतनूः संबिभ्रतो भीकरान् ।
संयुक्तोऽश्व-वराह-वानर-गरुत्मत्-सिंहरुपाननैः
चक्रे यो रघुपुङ्गवौ प्रमुदितौ तं वायुसूनुं भजे ॥ (४)

ஹத்வா பஞ்சமயூர ராவண கலஸ்யாஸூன் மஹாபேடிகா-
குப்தான் தாத்ருவரேண ஷட்பததனூ: ஸம்பிப்ரதோ பீகரான் ।
ஸம்யுக்தோऽச்வ-வராஹ - வானர-கருத்மத்- ஸிம்ஹரூபானனை:
சக்ரே யோ ரகுபுங்கவௌ ப்ரமுதிதௌ தம் வாயுஸூனும்
பஜே ॥ (4)

பிரம்மாவின் வரத்தால் ஆறு வண்டுகளின் உருவங்களையுடைய பயங்கரமான, பெரிய பெட்டியினுள் மறைத்து வைக்கப்பட்ட, அயோக்கியனான மயில் ராவணனுடைய ஐந்து பிராணன்களையும், குதிரை, பன்றி, வானரம், கருடன், ஸிம்ஹம் இவற்றின் முகங்கள் உடையவராய் அழித்து, எவர் ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களை மகிழ்ச்சி அடையச் செய்தாரோ அந்த வாயு குமாரனாகிய ஆஞ்ஜநேயரை பூஜிக்கிறேன்.

खड्गं-शूल-महीरुहा-चल-महापाशांकुशान् बाहुभिः
चिन्मुद्रां पृथुभिण्डिपालमपि खट्वांगं तथा कुण्डिकाम् ।
बिभ्राणं प्रणतार्तिनाशनपटुं रम्यं मुखैः पञ्चभिः
श्रीस्कन्दाश्रमनित्यवासरसिकं वीराञ्जनेयं भजे ॥ (२)

கட்கம் சூலமமஹீருஹாசல மஹாபாசாங்குசான் பாஹுபி:
சின்முத்ராம் ப்ருதுபிண்டிபாலமபி கட்வாங்கம் ததா குண்டிகாம் ।

பிப்ராணம் பிரணதார்திநாசனபடும் ரம்யம் முகை: பஞ்சபி:
ஸ்ரீ ஸ்கந்தாச்ரமநித்யவாஸரஸிகம் வீராஞ்ஜநேயம் பஜே ॥ (2)

சக்தி, சூலம், மரம், மலை, பாசம், அங்குசம், சின்முத்ரை, பிண்டிபாலம், கட்வாங்கம், குண்டிகை இவைகளை பத்து கரங்களால் தரித்திருப்பவரும். தன்னை வணங்கியவரின் கஷ்டத்தை போக்குவதில் வல்லவரும், ஐந்து முகங்களால் அழகியவரும் ஸ்ரீஸ்கந்தகிரி ஸ்கந்தாச்ரமத்தில் நித்யவாசம் செய்வதில் விருப்பம் உள்ளவருமான வீர ஆஞ்ஜநேயரை பூஜிக்கிறேன்.

विद्वांसः कथयन्ति चाश्ववदनं विद्यानिधिं मारुतेः
तद्भक्तार्तिहरं स्मृतं स्मरणतो यन्नारसिंहाननम् ।
यद्वै वानरवक्त्रमार्य तदहो मेधा प्रकर्षोज्वलं
यत्ते गारुडमाननं श्रुतिविदस्तद्वेदरूपं विदुः ॥ (३)

वाराहं यदपि प्रभो तदपि पातालाख्यसिद्धिप्रदं
प्राहुस्ते वदनं द्विषद्भयकरैः पञ्चाननैस्तैः शुभैः ।
श्रीपञ्चाननरुद्र इत्यभिनुत त्वत्पादपद्मानतान्
रक्षास्मानिह पञ्चकृत्यचतुर श्रीरामदूतोत्तम ॥ (४)

வித்வாம்ஸ: கதயந்தி சாச்வவதனம் வித்யாநிதிம் மாருதே:
தத்பக்தார் திஹரம் ஸ்ம்ருதம் ஸ்மரணதோ யந்நாரஸிம்ஹானனம் ।
யத்வை வானரவக்த்ரமார்ய ததஹோ மேதா ப்ரகர்ஷோஜ்வலம்
யத்தே காருடமானனம் ச்ருதிவிதஸ் தத்வேதரூபம் விது: ॥ (3)

வாராஹம் யதபி ப்ரபோ ததபி பாதாளாக்ய ஸித்திப்ரதம்
ப்ராஹுஸ்தே வதனம் த்விஷத்பயகரை: பஞ்சானனை ஸ்தை: சுபை:
ஸ்ரீ பஞ்சானனருத்ர இத்யபிநுத த்வத்பாத பத்மாநதான்
ரக்ஷாஸ்மானிஹ பஞ்சக்ருத்யசதுர ஸ்ரீ ராமதூதோத்தம ॥ (4)

உரை: வேதமறிந்த அறிஞர்கள், ப்ரபோ ஆஞ்ஜநேயா? குதிரை முகத்தை வித்தைகளுக்கு இருப்பிடமாகவும், நரஸிம்ஹ முகத்தை நினைத்த மாத்திரத்தில் பக்தர்களின் துக்கத்தை போக்கக் கூடியதாகவும், வானர முகத்தை சிறந்த மேதாவிலாஸத்தால் பிரகாசிக்கின்றதாயும், கருட முகத்தை வேத ரூபமாகவும் அறிகின்றனர். வராஹ முகத்தை



பாதாள ஸித்தி அளிப்பதாகவும் கூறுகின்றனர். இவ்வாறு அழகிய சத்ருக்களுக்கு பயமளிக்கும் ஐந்து முகங்களால் "பஞ்சானன ருத்ரன்" என்று போற்றப்படுகின்றவரும் பஞ்சக்ருத்யங்களைச் செய்கின்றவருமான ஸ்ரீ ராமதூத ஆஞ்ஜநேயரே! தங்கள் திருவடிகளில் வணங்கிய எங்களை காப்பாற்றுங்கள்.

பஞ்சமுக ஆஞ்சநேயரின் வரலாற்றை இவ்வாறு கூறுவர் பெரியோர்.

बुद्धिर्बलं यशो धैर्यं निर्भयत्वमरोगता ।
अजाड्यं वाक्पटुत्वं च हनुमत्स्मरणाद्भवेत् ॥

புத்திர்பலம் யசோ தைர்யம் நிர்பயத்வம் அரோகதா ।
அஜாட்யம் வாக்படுத்வம் ச ஹமனூமத்
ஸ்மரணாத்பவேத் ॥

(பெரியோர் வாக்கு)

உரை: புத்தி, பலம், புகழ், மனக்கலக்கமின்மை, சுறுசுறுப்பு, வாக்குவன்மை இவை எல்லாம் ஹனுமானை நினைக்க உண்டாகும் என்று இந்த ச்லோகத்தால் நாம் அறியலாம்.

தன்னை வேண்டுபவருக்கு வரமளிக்கும் ஆஞ்ஜநேயர் ராமாயணம் என்ற மாலையில் ரத்னமாகக் காட்சியளிக்கின்றார். இவர் எங்கெல்லாம் ஸ்ரீ ராமநாமா ஒலிக்கின்றதோ, அங்கெல்லாம் கை கூப்பிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொறிய அமர்ந்திருப்பார். ஆஞ்சநேயர் இருக்கும் இடத்தில் ஆபத்தே வராது என்பர் பெரியோர். மஹாபாரத யுத்தத்தின் போது பார்த்தன் ஆபத்தில்லாமல் தப்பியதற்குக் காரணம் அவன் ரதத்தில் ஆஞ்சநேயர் அமர்ந்தருளியதேயாகும் என்றும் கூறுவர். இவருடைய பெருமையை ஸ்ரீமத் ராமாயணமும் மஹாபாரதமும் எடுத்துரைக்கின்றன.

இவர் கேஸரியின் க்ஷேத்ரமான அஞ்சனாதேவியிடம் வாயு பகவானின் திருவருளால் தோன்றியவர். சிரஞ்ஜீவி, நைஷ்டிக ப்ரம்மசாரி. ஸ்ரீ ராமரின் திருவருளால் அடுத்த ப்ரம்மதேவனாய் பட்டத்திற்கு வரப்போகின்றவர்.

ராமாயணத்தில் இவர் ஸ்ரீ ராமருக்குச் செய்த உதவிகளையும் இவரை ஸ்ரீ ராமரும் - ஸீதையும், சுக்ரீவனும் பாராட்டியதையும் விரிவாகக் காண முடிகிறது. ஆபத்துக் காலத்தில் ஸஞ்ஜீவி பர்வதத்தைக் கொண்டு வந்து ராமலக்ஷ்மணர்களை உயிர்பெறச் செய்து, செயற்கரிய பல பராக்ரமங்களைச்

செய்தவர் இவர். இவரை ருத்ராவதாரம் என்றும் பேசும் புராணங்கள். இவருக்கு இவ்வாறான மஹிமைகள் ஏற்பட்டதற்குக் காரணம் இவர் செய்த ஸ்ரீ ராம நாமஸ்மரணமே என்று கூறுவர் தத்துவம் உணர்த்த பெரியோர்.

ராமாயண இதிஹாஸத்தில் கூறாத சில சரிதங்கள் வேறு புராணங்களில் கூறப்பட்டிருக்கின்றன. ஸ்ரீராமருக்கு ஆஞ்ஜநேயர் செய்த பேருதவி பற்றி ஒரு அழகான அற்புதமான வரலாறு உண்டு. அதை இங்கு காண்போம்.

பயங்கரமான ராம-ராவண யுத்தத்தில் இடைவிடாத தோல்விகளைக் கண்ட ராவன்ன், பாதாள லோகத்தில் அரசுபுரியும் மயில் ராவணனை நினைத்தான். நினைத்த மாத்திரத்தில் தன்னிடம் வந்த மயில் ராவணனிடம் தன் நிலைமையை எடுத்துரைத்து வருந்தினான். "ராவணா! நீ ஒன்றும் கவலைப்படாதே. நாளை இரவு நான்ராமலக்ஷ்மணர்களைத் தூக்கிச் சென்று பாதாள லோகத்திலுள்ள காளிதேவிக்குப் பலி கொடுத்துவிடுகிறேன் என்ற கூறிச் சென்றுவிட்டான் மயில் ராவணன்.

இதை ஒற்றர்கள் மூலமாக அறிந்த விபீஷணன், சுக்ரீவனிடம் கூற, அவன் அனுமனிடம் தெரிவிக்க, அனுமன் ராமலக்ஷ்மணர்களை உள்ளே வைத்து தன் வாலால் அவர்களைச் சுற்றிக் கோட்டை அமைந்து, அதன் மீது வீற்றிருந்து கண்ணும் கருத்துமாய் காத்திருந்தார்.

மாயாவியான மயில் ராவணன் விபீஷணனின் வேடம் தரித்து ராமலக்ஷ்மணர்களைக் கண்காணிக்கிறேன் என ஆஞ்ஜநேயரிடம் கூறி அவர் அனுமதிபெற்று உள்ளே சென்ற, அவ்விருவர்களையும் மாயா சக்தியால் இரு பொம்மைகளாகச் செய்து மறைத்து எடுத்துக் கொண்டு வெளியில் வந்து, "ஆஞ்ஜநேயா! என்னுடைய உருவத்திலே இங்கு மயில் ராவணன் வந்தாலும் வரலாம். எதற்கும் கவனமாய் இரு" என்று கூறி ஆஞ்ஜநேயரை ஏமாற்றிப் பாதாளம் சென்று ராமலக்ஷ்மணர்களை மாயா சக்தியால் சுயரூபம் பெறச் செய்து, அவர்களை சிறையிட்டுவிட்டான். சிறிது நேரம் சென்ற பின் உண்மையான விபீஷணன் ராமலக்ஷ்மணர்களைக் காண வர, ஆஞ்ஜநேயர் சிற விபீஷணன் வருந்தி ஆஞ்ஜனேயர் ஏமாந்ததை எடுத்துரைக்க, வால் கோட்டையை அகற்றிப் பார்த்தபோது இருவரும் அங்கில்லாததைக் கண்டு இருவரும் செய்வதறியாது திகைத்திருந்தனர்.

பின் ஒருவாறு தேறிய ஆஞ்சநேயர் விபீஷணன் கூறிய யோசனைப்படி பாதாளம் சென்றார். மயில் ராவணன் ராம லக்ஷ்மணர்களைப் பலி



கொடுக்கப்போகும் காளி கோயிலுக்குச் சென்று அங்கு காளியின் பின் மறைந்திருந்தார்.

இரவு நேரத்தில் ராம லக்ஷ்மணர்கள் அங்கு கொண்டுவரப்பட்டனர். அக்கோயிலில், காளியை அஹிராவணனும் மயில் ராவணனும் தான் உள்ளே சென்று வழிபடுவது வழக்கம். ஆகவே அஹிராவணன் உள்ளே சென்றான் அனுமான் கதவைத் தாழ்பாள் இட்டுக் கொண்டு உள்ளிருந்து காளி கூறுவது போல் மயில் ராவணா! மஹிராவணன் இங்கிருக்கட்டும். நீ ராமலக்ஷ்மணர்களை உள்ளே அனுப்பு: அவனே பலிகொடுக்கட்டும்" என்று ஒரு அசரீரி எழச் செய்தார். இதனால் மிகவும் மகிழ்ந்த மயில் ராவ்ணன் அவ்வாறே செய்ய, முன்பு உள்ளே சென்ற அஹிராவணனை ஹனுமார் அடித்துக் கொன்றார். உடன் ராம லக்ஷ்மணர்களுக்கு தான் கொண்டுவந்த அம்பரா தூணியையும் ஆயுதங்களையும் விற்களையும் கொடுத்தார். அவர்கள் யுத்தத்திற்கு தயாராய் இருந்தனர்.

உள்ளே சென்ற மஹிராவணன் வெகு நேரமாகியும் வெளிவராதிருக்க, மயில் ராவணன் கதவைத் தட்ட, ராம லக்ஷ்மணர்களும் ஆஞ்சநேயரும் வெளிவந்தனர். ஆஞ்சநேயர் பேருருவம் கொண்டு ராம லக்ஷ்மணர்களைத் தோளில் தூக்கிக் கொண்டார். ராம லக்ஷ்மணர்களுக்கும் மயில் ராவணனுக்கும் பெரும் போர் நிகழ்ந்தது.

இதனிடையில் ஆஞ்சநேயர் அவ்விருவரையும் கீழே இறக்கிவிட்டு, "நீங்கள் இவனுடன் சண்டையிட்டுக் கொண்டிருங்கள். நான் இவனை அழிக்க முயற்சி செய்கிறேன்" என்று கூறிச் சென்றுவிட, ஆச்சர்யமுற்ற ராமலக்ஷ்மணர்கள் மயில் ராவணனுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர்.

ஆஞ்சநேயர் முந்தியே விபீஷணன் கூறியபடி மயில் ராவணன் உயிர்நிலை இருக்கும் இடம் தெரிந்தவராதலால் மிகவும் வேகமாக ஏழு கடல்களையும் தாண்டி கடைக்கடலின் நடுவே அக்னி மயமான தாமரை மலரின் உள்ளே அதன் தண்டின் வழியாக சூக்ஷ்ம சரீரம் எடுத்து உள்ளே சென்று ஒரு குகையை அடைந்தார். அங்கு காவலிருந்த பல அரக்கர்களை அழித்து, அங்குள்ள பெட்டியை எடுத்துக்கொண்டு வெளியே வந்தார்.

பெட்டியினுள்ளே பயங்கரமான உயிரை, மாய்க்கவல்ல, மஹா விஷத்தைக் கக்கும் ஐந்து வண்டுகள் இருப்பதையும் அவைகளை ஒரே சமயத்தில் கொல்லவேண்டுமென்பதையும், அப்படியில்லையெனில் கொல்லச் சென்றவனே உயிரிழக்க நேரிடும் என்பதையும் இவ்வாறு

பிரம்மாவினால் மயில் ராவணனுக்கு அளிக்கப்பட்ட வரம் என்பதனையும் அசரீரியினால் அறிந்து கொண்டு, உடன் வானரம், நரஸிம்ஹம், கருடன், வராஹம், குதிரை இவைகளுடைய முகங்களைப் பெற்று, விசித்திரமான பயங்கரமான பத்துக் கரங்கள் கொண்ட ஒரு பேருருவம் எடுத்துக்கொண்டு கண நேரத்தில் மயில் ராவணனுடன் சண்டையிட்டுக் கொண்டிருக்கும் ராம லக்ஷ்மணர்கள் பக்கம் வந்தார்.

அனுமனிடம் தன் உயிர் பெட்டி இருப்பதைக் கண்டு மயில் ராவணன் கலங்கினான். அனுமன் அவனைப் பார்த்து "மயில் ராவணா! இனி உன் பராக்கிரம்ம் செல்லாது. இதோ பார். உன் உயிர்நிலைப் பெட்டி. இதில் உள்ள உன் உயிராகிய ஐந்து வண்டுகளைக் கொன்றுவிடுகிறேன். நீயும் அழிந்துபோவாய்" எனக் கூறி பெட்டியைத் திறந்து ஒரே சமயத்தில் வெளிவந்த ஐந்து வண்டுகளையும் ஐந்து முகங்களால் ஒரே சமயத்தில் கடித்து துப்பினார். வண்டுகள் இறக்கவே மயில் ராவணன் துடிதுடித்து உயிர் இழந்தான். தேவதுந்துபி முழங்கிற்று. ராம லக்ஷ்மணர்களைத் தூக்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் அனுமார் இலங்கை வந்தார். பின் ராம ராவண யுத்தம் நடந்தது. அதில் ராவணனை அழித்து ராமர் வெற்றி பெற்றார். உலகம் மகிழ்வெய்தியது.

இந்த பஞ்சமுக ஆஞ்சநேயரின் மாபெரும் உருவத்தையே இங்கு ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் மிகவும் அழகான சிலையாக வடித்து விதிப்படி மந்திரத்துடன் பிரதிஷ்டை செய்திருக்கின்றனர்.

இந்த ஆஞ்சநேயருருக்கு கிழக்கு நோக்கி வானர முகமும், தெற்கே நரஸிம்ம முகமும், மேற்கே கருட முகமும், வடக்கே வராஹ முகமும், மேல்நோக்கி குதிரை முகமும் விளங்குன்றன. ஆஞ்சநேயர் நரஸிம்ஹர் கருடன் சுவேதவராஹர் ஹயக்ரீவர் என்ற ஐந்து மாபெருந் தெய்வங்களின் ஒருகூட்டாகவே இம் மூர்த்தி அமைந்திருப்பது இந்த ஆஞ்சநேயருடைய ஒப்பற்ற வீரத்தை எடுத்துக் காட்டுகின்றது.

பிராணன்கள் வாயு ரூபமானதால், பறக்கும் திறனுடைய வண்டுகளாகச் செய்து கொண்டான் மயில் ராவணன். அவை பறந்தோடிவிடாமல் பிடிக்கவே பாய்ந்து, பிடிக்கும் தன்மை கொண்ட ஐந்து முகங்களை ஏற்றார் அனுமார். ஆகாயம் பூமி பாதாளம் இவ்விடங்களுக்குச் சென்றாலும் அங்கும் சென்று பாய்ந்து பிடிப்பதற்கு ஏற்றவாறு வானரம் கருடன் (ஆகாயம்) நரஸிம்ஹம் குதிரை (பூமி) வராஹம் (பாதாளம்) இவைகளின் முகங்களை பெற்றுக் கொண்டார்.



இத்துடன் இவரது குதிரை முகம் (ஹயக்ரீவ முகம்) இவர் வித்யாநிதி என்பதையும், நரஸிம்ம முகம், பக்தர்களை விரைவில் காப்பவர் என்பதனையும், ஆஞ்ஜநேய முகம் மேதாவிதலாஸத்தையும் கருட முகம் இவர் வேதமூர்த்தி என்பதனையும், வராஹ முகம் பாதாள ஸித்தியளிப்பவர் என்பதனையும் குறிப்பதாகவும் பெரியோர் குறிப்பிடுகின்றனர்.

இந்த சரித்திர வரலாறுகளையும், மூர்த்தி த்யானத்தையும் குறித்து, மனதிலே த்யானம் செய்வதற்கு உகந்ததாய் நான்கு சுலோகங்கள் எழுதியுள்ளேன். இவ்வாறு நான் பணி செய்ய வேண்டுமென்பதும் ஸ்ரீ ஸ்வாமிகளின் 'ஆணை. அந்த நான்கு சுலோகங்களும் முன்னே கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை படித்துப் பயன்பெற வேண்டுகிறேன்.

यस्य स्मररमात्रेण यशो-धैर्य-वलं मतिः ।
आरोग्यं सत्वशुद्धिश्च जायते प्रत्यहं नृणाम् ॥
यदावासस्थलं सर्वं सर्वदा सुस्थिरं भवेत् ।
पञ्चाननाञ्जनेयोऽयं दर्शनीयो महाकृतिः ॥
दशाहस्तमितोच्छ्रायः भक्तानामिष्टसिद्धिदः ।
स्कन्दाश्रमस्य पुरतो भाति लोकहिताय सः ॥

யஸ்ய ஸ்மரண மாத்ரேண யசோ தைர்யம் பலம் மதி: ।
ஆரோக்யம் ஸத்வசுத்திச்ச ஜாயதே ப்ரத்யஹம் ந்ருணாம் ॥
யதாவாஸஸ்தலம் ஸர்வம் ஸர்வதா ஸுஸ்திரம் பவேத் ।
பஞ்சானனாஞ்ஜநேயோऽயம் தர்சநீயோ மஹாக்ருதி: ॥
தசஹஸ்தமிதோச்ராய: பக்தானாம் இஷ்டஸித்தித: ।
ஸ்கந்தாச்ரமஸ்ய புரதோ பாதி லோகஹிதாயஸ: ॥

எவரை நினைத்த மாத்திரத்தில் மனிதர்களுக்கு கீர்த்தி, தைர்யம், பலம், புத்தி, ஆரோக்யம், நன்மனம் இவை ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்றனவோ, எவர் வாசம் செய்யும் இடம் எப்பொழுதும் ஸ்திரமாக (அழிவின்றி) இருக்குமோ, அவ்வாறான காணத்தகுந்த, பெரும் உருவமுடைய (15 அடி உயரம்) பக்தர்களுக்கு இஷ்டங்களைத் தரும் ஐந்துமுக ஆஞ்ஜயநேயர் ஸ்கந்தாச்ரமத்தின் முன்புறத்தில் லோக ஹிதத்திற்காக விளங்கிக் கொண்டு இருக்கின்றார்.

"அவருடைய மந்த்ரங்கள்"

ओं हरिमर्कट मर्कटाय स्वाहा

2. ओं नमो भगवते पंचवदनाय पूर्वकपिमुखाय
सकलशत्रुसंहरणाय स्वाहा

3. ओं नमो भगवते पंचवदनाय दक्षिणमुखाय
करालवदनाय नरसिंहाय सकलभूतमथनाय स्वाहा

4. ओं नमो भगवते पंचवदनाय पश्चिममुखाय
गरुडाननाय सकलविष हराय स्वाहा

5. ओं नमो भगवते पंचवदनाय उत्तरमुखाय
आदिवराहाय सकलसंपत्कराय स्वाहा

6. ओं नमो भगवते पंचवदनायोर्ध्वमुखाय
हयग्रीवाय सकलजन वशंकराय स्वाहा

1. ஓம் ஹ மர்கடாய ஸ்வாஹா
2. ஓம் நமோ பகவதே பஞ்ச வதனாய பூர்வக
முகாய ஸகல சத்ருஸ்ம் ஹரணாய ஸ்வாஹா
3. ஓம் நமோ பகவதே பஞ்சவதனாய த ண முகாய
கராள வதனாய நர ம்ஹாய ஸகலபூத மதனாய ஸ்வாஹா
4 ஓம் நமோபகவதே பஞ்சவதனாய பச் மமுகாய
கருடானனாய ஸகல ஷஹராய ஸ்வாஹா.
5. ஓம் நமோ பகவதே பஞ்சவதனாய உத்தரமுகாய
ஆ வராஹாய ஸகல ஸம்பத்கராய ஸ்வாஹா.
6. ஓம் நமோ பகவதே பஞ்சவதனாய ஊர்த்துவ முகாய
ஹயக் வாய ஸகலஜன வசங்கராய ஸ்வாஹா.



श्रीस्कन्दाश्रमे
प्रतिष्ठिताः देवताः

ஸ்ரீ ஸ்கந்தாசிரமத்தில் பிரதிஷ்டை
செய்யப்பட்ட தேவதைகள்

परितो बहुपर्वतै रुपेतः
फलवृक्षैरपि मण्डितो मनोज्ञः ।
सुपरिष्कृत भूमिभागशुद्धः
शुशुभे स्कन्दगिरिः सुभक्तसंघैः ॥

பரிதோ பஹு பர்வதைருபேத:
பலவ்ருக்ஷைரபி மண்டிதோ மனோஞ்ய: ।
ஸுபரிஷ்க்ருத பூமி பாக சுத்த:
சுசுபே ஸ்கந்தகிரி: ஸுபக்தஸங்கை: ॥

(பொ.\ உ) நாற்புறங்களிலும் பல மலைகள் சூழ்ந்ததும் பல பலனளிக்கும் மரங்கள் நிறைந்ததும் மனதிற்குப் பிடித்ததும் நன்கு திருத்தம் செய்யப்பட்ட பூதலத்தால் சுத்தமானதும் ஆகிய ஸ்கந்தகிரி நல்ல பக்தர் நிறைந்து விளங்கியது.

भाति सप्तकलशातिमनोज्ञं
राजगोपुरमनन्तसुचित्रं ।
शिल्पि लोक कर कौशल साक्षि
भ्राजते गुहगिरेः पुरतस्तत् ॥

பாதி ஸப்த கலசாதி மனோஞ்யம்
ராஜகோபுர மனந்தஸுசித்ரம் ।
சில்பிலோக கரகௌசல ஸாக்ஷி
ப்ராஜதே குஹகிரே: புரதஸ்தத் ॥

(பொ. உ) ஸ்கந்தகிரியின் முகப்பில் ஏழு கலசங்களால் அழகியதும் பல நல்ல சித்திரம் கொண்டதும் சில்பிகளின் கைத் திறனுக்கு ஸாக்ஷியாய் இருப்பதும் ஆகிய ராஜகோபுரம் மிகவும் ப்ரகாசிக்கின்றது.

जातु नैव भविता किल विघ्नः
स्कन्द पर्वतगतस्य जनस्य ।
इत्यमत्र गणपोऽद्भुतमूर्तिः
संदिशन्प्रथमतः प्रविभाति ॥

ஜாதுநைவ பவிதா கில விக்ன:
ஸ்கந்த பர்வத கதஸ்ய ஜனஸ்ய ।
இத்தமத்ர கணபோ த்புதமூர்த்தி:
ஸந்திசன் ப்ரதமத: ப்ரவிபாதி ॥

ஸ்கந்த பர்வதத்தை அடைந்தோர்க்கு இனி இடையூறுவரப் போவதில்லை எனக் குறிப்பிடுவார் போல் வியக்கத்தக்க உருவமுடைய மஹாகணபதி விளங்கிக் கொண்டிருக்கின்றார்.

तत्पार्श्वतो दैत्यवरो हिडिबः
बृहत्तनुः षण्मुखभृत्य मुख्यः ।
संदर्शनार्थं समुपागतानां
संरक्षणे तिष्ठति जागरुकः ॥

தத்பார்ச்வதோ ஂதையவரோ ஹிடிம்ப:
ப்ருஹத்தனு: ஷண்முகப்ருத்ய முக்ய: ।
ஸந்தர்சனார்த்தம் ஸமுபாகதானாம்
ஸம்ரக்ஷணே திஷ்டதி ஜாகரூக: ॥

அந்த கணபதிக்கு ஸமீபத்தில் பெரிய உருவமுடையவனும் திருமுருகன் பக்தர்களில் மிக முக்கியமானவனும் ஆகிய ஹிடிம்பாஸுரன் ஸ்கநதகிரிதர்சனத்திற்கு வருவோரைக் காக்க மிக கவனத்துடன் நின்றிருக்கின்றான்.

ஸ்ரீ சிவானந்த ப்ரம்ஹேந்த்ர
அவதூத ஸ்வாமிகள்

## श्री शिवानन्द ब्रह्मेन्द्रावधूत स्वामिनः

तत्पुरस्तात् शिवानन्द ब्रह्मेन्द्राणां प्रकाशते ।
समाधि मण्डपो नूत्नः चित्तनेत्र प्रसादकृत् ॥



தத்புரஸ்தாத் சிவானந்த ப்ரம்ஹேந்த்ராணாம் ப்ரகாசதே ।
ஸமாதி மண்டபோ நுத்ன: சித்த நேத்ரப்ரஸாதக்ருத் ॥

அவருக்கு முன் ஸ்ரீ சிவானந்த ப்ரம்ஹேந்த்ரர்களின் சித்தத்திற்கும் கண்களுக்கும் தெளிவு அளிக்கும் புதிய ஸமாதி மண்டபம் விளங்குகின்றது.

सिद्धिं गतः प्राक्तन पुण्यभारैः
महान्शिवानन्द इति प्रसिद्धः ।
श्री सद्गुरोः शिष्यवरेषु मुख्यो
लिंगात्मना भाति विमुक्त बन्धः ॥

श्रीरंगनाम्नि प्रथिते पुराणे
क्षेत्रोत्तमे कोमलवल्लिकयाः
कस्तूरि रंगस्य च विष्णु भक्त
वरस्य जातः प्रथमस्तनूजः ।

शेषाद्रिनामा प्रथितो विनीतो
संप्राप्तविद्यः किल राजकीयं
अवाप्य चोद्योग मनिन्द्यशीलः
संमानितोभूत् सकलोपसेव्यः ॥

ஸித்திம் கத: ப்ராக்தன புண்யபாரை:
மஹான் சிவானந்த இதி ப்ரஸித்த: ।
ஸ்ரீ ஸத்குரோ: சிஷ்யவரேஷு முக்யோ
லிங்காத்மனா பாதி விமுக்த பந்த: ॥

(பொ. உ) ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்தஸ்வாமிகளுடைய சிஷ்யர்களில் முக்கியரும் சிவானந்தர் எனப் பிரஸித்தரும் ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபட்டவருமாகிய மஹான், முன் செய்த புண்ணியங்களினால் ஸித்தி பெற்று இங்கு லிங்க ரூபியாய் விளங்குகின்றார்.

ஸ்ரீ ரங்கநாம்னி ப்ரதிதோ புராணே
க்ஷேத்ரோத்தமே கோமளவல்லிகாயா:

கஸ்தூரி ரங்கஸ்யச விஷ்ணுபக்த
வரஸ்யஜாத: ப்ரதமஸ்தனூஜ: ॥ 7

(பொ. உ) இந்த சேஷாத்ரி என்பவர். ப்ரஸித்தமான புராணமான ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் கோமளவல்லி என்பாளுக்கும். விஷ்ணுபக்தரான ஸ்ரீ கஸ்தூரிரங்கருக்கும் மூத்த பிள்ளையாய் பிறந்தவராவார்.

சேஷாத்ரிநாமா ப்ரதிதோ வினீத:
ஸம்ப்ரதாப்வித்ய: கில ராஜகீயம்
அவாப்யசோத்யோக மனிந்த்யசீல:
ஸம்மானி தோநூத் ஸக லோப ஸேவ்ய: ॥

(பொ. உ) இந்த சேஷாத்ரி என்பவர் மிகவும் வினயமுடையவா படித்து அரசாங்க உத்யோகம் பெற்று நற்பழக்கமுடையவராய் அனைவராலும் ஏற்கத் தக்கவராய் மதிக்கப் பெற்றிருந்தார்.

அவர் மனைவி

आसीत् शंकरशास्त्रीति श्रीविद्योपासकः कृती
ललिता चरणांभोज द्वन्द्व संसक्त मानसः
गृहस्थानांतु विहितान् धर्मान्सर्वान्यथाविधि ।
अनुतिष्ठन्सभार्योसौ गृहिणामग्रणीरभूत् ॥
अर्थार्थी नाभवज्जातु पुण्यार्जन कृतादरः ।
गृहस्थाश्रममेवासौ मेने श्रेयःप्रदं नृणां
ललिताम्बार्चनासक्त मानसस्य महात्मनः ।
सदाचाररतस्यास्य ययौ कालः सुखावहः ॥
यत्राकृतिस्तत्र गुणा भवन्तीति कवेर्वचः ।
तथ्यमासीद्द्विजे तस्मिन् श्रीमच्छंकरशास्त्रिणि ॥
शान्तानन्दे यतिश्रेष्ठे भक्तिमन्यादृशीं दधौ ।
नवावरण पूजां च चक्रे यज्ञेष्वसौ कृती ॥

ஆஸீத் சங்கர சாஸ்த்ரீதி ஸ்ரீ வித்யோபாஸக: க்ருதீ ।
லளிதா சரணாம் போஜ த்வந்த்வ ஸம்ஸக்த மானஸ: ॥



க்ருஹஸ்தானாம் துவிஹிதான் தர்மான் ஸர்வான் யதாவிதி: ।
அனுதிஷ்டன் ஸபார்யோஸள க்ருஹிணாமக்கணீரூத்: ॥
அர்த்தார்தீ நாபவஜ்ஜாது புண்யார்ஜன க்ருதச்ரம: ।
க்ருஹ ஸ்தாச்ரம மேவாஸௌ மேனேச்ரேய ப்ரதம் நிருணாம் ॥
லளிதாம் பார்சனா ஸக்த மானஸஸ்ய மஹாத்மன: ।
ஸதாசாரரதஸ்யாஸ்ய யயௌ கால: ஸுகாவஹ: ॥
யத்ராக்ருதிஸ் தத்ரகுணா பவந்தீ தி கவேர்வச: ।
தத்யமாஸீத் த்விஜே தஸ்மின் ஸ்ரீ மச்சங்கர சாஸ்திரிணி ॥
சாந்தானந்தே யதிச் ரேஷ்ட பக்திமன்யாத்ருசீம் ததௌ ।
நவாவரண பூஜாம்ச சக்ரேயஞ்யேஷ்வயம் க்ருதீ ॥

ஸ்ரீ லளிதா சரண கமலங்களில் ஈடுபட்ட மனத்தினரும் ஸ்ரீ வித்யோபாஸகருமாகிய சங்கர சாஸ்திரிகள் என்ற ஒரு பாக்யசாலி இருந்தார். கிருஹஸ்தர்களுக்கு விதிக்கப்பட்ட அனைத்து தர்மங்களையும் மனைவியுடன் முறைப்படி அனுஷ்டிக்கும் அவர் க்ருஹஸ்தாசிரமிகளுள் முதல்வராய் திகழ்ந்தார்.

அவர் என்றும் பணத்தை விரும்பாதவராய் புண்ணியம் ஈட்டுவதிலேயே நாட்டங் கொண்டவராய் மனிதனுக்கு க்ருஹஸ்தாசிரமமே பேறளிக்கும் என நினைத்தார். இவ்வாறு ஸ்ரீ லளிதார்சனையில் ஈடுபட்ட மனத்தினரான ஸதாசாரமுடைய அந்த மஹாத்மாவுக்கு காலமெல்லாம் சுகமாகவே கழிந்தது. 'உருவத்திற்குத் தகுந்தே குணமிருக்கும்' என்ற மஹாகவியின் வாக்கு ஸ்ரீ சங்கர சாஸ்திரிகளிடம் உண்மையாகவே இருந்தது. அவர் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளிடம் ஒரு தனியான பக்தி கொண்டிருந்தார். பாக்யவானாகிய அவர் சில யஞ்யஞ்களிலும் நவாவரண பூஜை செய்தார்.

श्री देव्यास्तु प्रसादेन सुता जातास्य शोभना ।
ललितेति च नामास्या श्चक्रे शाक्तकुलोचितम् ॥
ततः सा ललिता भेजे पतिं शेषाद्रिनामकं ।
कुलविद्या गुणोत्कृष्टं स्वसमानं गुणोज्वला ॥
वार्धक्ये ललितायुक्तः शेषाद्यार्यः शुभव्रतः
स्कन्दाश्रमं समासाद्य गुरुशुश्रूषणं व्यधात्

ஸ்ரீ தேவ்யாஸ்து ப்ரஸாதேன ஸுதா ஜாதாஸ்ய சோபனா ।
லளிதேதிச நாமாஸ்யா: சக்ரே சாக்த குலோசிதம் ॥
தத: ஸா லளிதா பேஜே பதிம் சேஷாத்ரி நாமகம் ।
குலவித்யா குணோத்க்ருஷ்டம் ஸ்வ ஸமானம் குணோ ஜ்வலா ॥
வார்தக்யே லளிதா யுக்த: சேஷாத்ரியார்ய: சுபவ்ரத: ।
ஸ்கந்தா சிரமம் ஸமாஸாத்ய குருசுச்ருஷணம் வ்யதாத் ॥

(பொ. உ) அவருக்கு ஸ்ரீ தேவியின் திருவருளால் அழகிய ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு சக்தி உபாஸனே செய்யும் குலத்திற்கு ஒத்த லளிதை என்ற பெயரை சூட்டினார்.

பின் குணங்களால் பிரகாசிக்கும் லளிதை குலம் வித்தை குணம் இவற்றால் தனக்குச் சமமான சேஷாத்ரி என்ற கணவனே அடைந்தாள். வயதின் முதுமையில் நற்செயலுடைய அந்த சேஷாத்ரி அய்யர் லளிதையுடன் ஸ்கந்தாசிரமம் வந்து தங்கி ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளுக்கு குரு சிச்ருஷை செய்து வந்தார்.

शान्त स्वभावा ललितामिधाना
सद्भिः प्रपूज्याच सतीषु धन्या ।
साकं स्वभर्त्रा किल सद्गुरुणां
शुश्रूषणं भक्तियुता प्रचक्रे ॥ (१७)

भिक्षाप्रदाने किल सद्गुरुणां
कालतिपातं न कदापि चक्रे ।
ररक्ष मातेव च भर्तृ युक्ता
सेवा परा भाग्य वशाद्यतीन्द्रम् ॥ (१८)

சாந்த ஸ்வபாவா லளிதாபிதானா
ஸத்பி: ப்ரபூஜ்யாச ஸதீஷு தன்யா ।
ஸாகம் ஸ்வபர்த்ரா கில ஸத்குருணாம்
சுச்ருஷணம் பக்தியுதப்ரசக்ரே (17)

பிக்ஷாப்ரதானே கிலஸத்குருணும்
காலாதிபாதம் ந கதாபி சக்ரே ॥



ரரக்ஷ மாதேவச பர்த்ருயுக்தா
ஸேவா பரா பாக்ய வசாத் யதீந்தரம் ॥ (18)

(பொ. உ) சாந்த ஸ்வபாவமுள்ளவளாய் ஸாதுக்களால் மதிக்கத்தக்கவளாய் பதிவ்ரதைகளில் கொடுதது வைத்தவளாய் உள்ள லளிதா தன் பர்த்தாவுடன் கூட பக்தியுடன் ஸத்குரு ஸ்வாமிகளுக்கு பணிவிடை செய்து வந்தாள். ஸ்ரீ ஸத்குரு ஸ்வாமிகளுக்கு பிக்ஷையளிப்பதில் ஒரு போதும் காலம் தாழ்த்தியதில்லே. பர்த்தாவுடன் கூட ஸேவை புரியவளாய் ஒரு தாய் போல ஸ்வாமிகளே பாக்யத்தின் காரணமாக ரக்ஷித்து வந்தாள்.

शुश्रुषया सद्गुरु पादभक्त्या
सत्यास्तु तस्याः किल भाग्ययोगात् ।
शेषाद्रिनामा सुगुणस्तु भर्ता
प्राप्तोऽन्तकाले यति भावभाग्यम् ॥ (१९)

सेवा गुरुणा मथ देवतानां
अनन्य लभ्यं हि फलं प्रसूते ।
सन्यास लाभो बहुजन्म पुण्य-
लभ्यः क्वचित्कस्यचिदेव लोके ॥ (२०)

சுச்ருஷயா ஸத்குருபாத பக்த்யா
ஸத்யாஸ்து தஸ்யா: கில பாக்ய யோகாத் ।

சேஷாத்ரிநாமா ஸுகுணஸ்து பர்த்தா
ப்ராப்தோந்தகாலே யதி பாவ பாக்யம் ॥ (19)

ஸேவாகுருணாமத தேவதானாம்
அனன்ய லப்யம் ஹி பலம் ப்ரஸூதே ।

ஸன்யாஸலாபோ பஹுஜன்மபுண்ய
லப்ய: க்வசித் கஸ்யசி தேவ லோகே ॥ (20)

ஸத்குரு சரணாரவிந்தங்களில் பக்தியினாலும் அவருக்குச் செய்த சுச்ருஷையினாலும் அந்த பதிவ்ரதையின் பாக்யத்தின் வசத்தாலும்

நற்குணம் கொண்ட சேஷாத்ரி என்பவர் கடைசிக் காலத்தில் ஸன்யாஸியாகும் பாக்யம் பெற்றார் (ஆபத் ஸன்யாஸம் பெற்றார்) குருஸேவையும் தேவதைகளுக்குச் செய்யும் சேவையும் கிடைத்தற்கரிய பயனை அளிக்கும். உலகில் ஸந்யாஸ ப்ராப்தி என்பது பல ஜன்மங்களில் செய்த புண்ணியத்தின் காரணத்தால் ஒரு சில இடங்களில் ஒரு சிலருக்கே கிடைக்கும்.

ஸன்யாஸபலன் :

सन्यस्तवा नापदि वा कथंचित्
योवा पुमान् तस्य महात्मनस्तु
भार्या हि धन्या जननी च धन्यः
पिता च भुत्रो भुवि बन्धुवर्गः ॥ (२१)

ஸன்யஸ்தவானாபதிவா கதஞ்சித்
யோவா புமான் தஸ்ய மஹாத்மனஸ்து ।
பார்யா ஹிதன்யா ஜனனீச, தன்ய:
பிதாச பூத்ரோ புவி பந்துவர்க: ॥ (21)

वेदानधीते दशजन्मभिः पुमान्
वेदार्थ वित्स्याच्च शतेन जन्मनां।
करोति यज्ञं च सहस्रजन्मभिः
प्राप्नोति सन्यासमनन्त जन्मभिः॥ (२२)

வேதானதீதே தச ஜன்மபி: புமான்
வேதார்தவித்ஸ்யாச்ச சதேன ஜன்மானாம் ।
க்ரோதி யஞ்யாம் ச ஸஹஸ்ர ஜன்மபி:
ப்ராப்னோதி ஸன்யாஸமனந்த ஜன்மபி: ॥ (22)

*(பொ. உ)* ஆபத்காலத்தில் எப்படியாவது எவன் ஸன்யாஸம் பெறுகிறானோ அந்த மஹானுடைய மனைவி தாய் பிதா புத்திரன் பந்துக்கள் அனைவருமே உலகில் பாக்யம் செய்தவராவார்.

ஒருவன் பத்து ஜன்மாக்களால் (செய்த புண்ணியத்தால்) வேதாத்தியயனம் செய்கிறான். நூறு ஜன்மங்கள் எடுத்து



வேதார்த்தத்தைத் தெரிந்து கொள்கிறான். ஆயிரம் ஜன்மாக்கள் எடுத்து வேள்வி செய்யும் பேறு பெறுகின்றான். எல்லையில்லா ஜன்மமெடுத்தே ஸன்யாஸம் பெறுகின்றான்.

श्रेष्ठो यतिर्वेदविदां वरेण्यात्
शतक्रतोः सोमकृतो द्विजेन्द्रात् ।
न तस्य तुल्यो जगतां त्रये चे
त्येवंस्मृतिर्वक्ति महर्षिणोक्ता ॥ (२३)

एकरात्र मुपलभ्य यतित्वं
जीवतो हि कथितं सुकृतं यत् ।
तन्न शक्य मधिगन्तु मनेकैः
सन्मखैरपि गृहाश्रमभाजा ॥ (२४)

सेवा फलं सर्वजनस्य लोके
प्रदर्शयन्भाति च लिंगरुपी ।
श्रीमानशिवान्दयति विंनीतः
समाधिभाक् गोपुर पार्श्व भागे ॥ (२५)

ச்ரேஷ்டோயதிர் வேதவிதாம் வரேண்யாத்
சதக்ரதோர் ஸோமக்ருதோ த்விஜேந்ராத் ।
நதஸ்யதுல்யோ ஜகதாம் த்ரயேச
த்யேவம் ஸ்ம்ருதிர் வக்தி மஹர்ஷிணோக்தா ॥ (23)

ஏகராத்ர முபலப்ய யதித்வம்
ஜீவதோ ஹி கதிதம் ஸுக்ருதம் யத் ।
தன்ன சக்யமதிகந்து மனேகை:
ஸந்மகைரகபி க்ருஹாச்ரமபாஜா॥ (24)

ஸேவாபலம் ஸர்வஜனஸ்ய லோகே
ப்ரதர்சயன் பாதி ச லிங்கரூபி ।
ஸ்ரீ மான் சிவாநத்தயதிர் வினீத:
ஸ்மாதிபாக் கோபுர பார்ச்வ பாகே ॥ (25)

(பொ. உ) ஒரு யதி சிறந்த வேத வித்தைவிட, சோமயாகம் நூறு செய்தவனை விட உயர்ந்தவர். மூவுலகிலும் யதிக்கு (ஸன்யாஸிக்கு) ஸமமானவர் கிடையாது என மஹர்ஷிகள் இயற்றிய ஸ்மிருதி கூறும்.

ஒருநாள் இரவேனும் ஸன்யாஸம் வாங்கிக் கொண்டு ஜீவித்திருக்கும் ஸன்யாஸிக்கு ஏற்படும் புண்ணியத்தை அநேகம் நல்வேள்விகளைச் செய்தும் ஒரு க்ருஹஸ்தனால் ஈட்ட முடியாது.

உலகில் சேவையால் ஏற்படும் பலனை அனைவருக்கும் எடுத்துக் காட்டிக் கொண்டு, வினயம் பொருந்திய ஸ்ரீ சிவாநந்தயதி அவர்கள் ஸமாதி பெற்று கோபுர வ்ாயிலின் ஸமீபத்தில் லிங்க ரூபியாய் காக்ஷி கொடுத்துக் கொண்டிருக்கிறார்.



உ

# ஸ்ரீ குரு குலப் ப்ரார்த்தனா மண்டபம்
# श्री गुरुकुल प्रार्थना मण्डपः

स्कन्दाश्रमस्य मध्ये तु विस्तृतो मण्डपो महान् ।
श्रीशान्तानन्दयोगीन्द्रैः निर्मितोऽतिमनोहरः ॥ (१)

ख्यातोऽयं श्रीगुरुकुल प्रार्थना मण्डपाभिधः ।
विद्योतते विमानाढ्यो दुर्गास्कन्दोभयाश्रयः ॥ (२)

ஸ்கந்தாச்ரமஸ்ய மத்யேது விஸ்த்ருதோ மண்டபோ மஹான் ।
ஸ்ரீ சாந்தானந்த யோகீந்த்ரை: நிர்மிதோऽதிமனோ ஹர: ।

க்யாதோயம் ஸ்ரீ குருகுல ப்ரார்த்தனாமண்டபாபித: ।
வித்யோததே விமானாட்யோ துர்கா ஸ்கந்தோப யாச்ரயா: ।

(பொ. உ) ஸ்ரீ ஸ்கந்தாசிரமத்தின் மத்தியில் விஸ்தாரமான அழகிய பெரிய ஒரு மண்டபம் ஸ்ரீ சாந்தானந்த யோகீஸ்வரரால் அமைக்கப்பட்டுள்ளது குருகுலப் ப்ரார்த்தனா மண்டபம் என்ற பெயருடைய இம்மண்டபம் புகழ்பெற்று பல விமானங்கள் கொண்டதாய் துக்கை ஸ்கந்தர் இருவரும் இருக்கும் இடமாய் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது.

यात्वष्टादश वाहु दण्ड मधुरा याक्षस्रगाद्यायुधैः
युक्ताष्टादशभिश्च या महिष संहत्रीः सरोज स्थिता ।
ह्रींकारोत्तम मन्त्रगम्यविभवा याच प्रवाल प्रभा
सा दुर्गाऽत्र विभाति लोकविनुता सद्रूपिणी भाग्यदा ॥ (3)

யாத்வஷ்டாதச பாஹு தண்டமதுரா யாக்ஷ ஸ்ரகாத்யா – யுதை:
யுக்தாஷ்டா தசபிச்ச யா மஹிஷ ஸம்ஹார்த்ரீ ஸரோஜஸ்திதா ।
ஹ்ரீங்காரோத்தம மந்த்ர கம் யவிபவா யாச ப்ரவாள ப்ரபா
ஸாதுர்காऽத்ர விபாதி லோக வினுதா ஸத்ரூபிணீ பாக்யதா ।

(பொ. உ) 18 கரங்களால் அழகியவளும் அக்ஷமாலை முதலிய பதினெட்டு ஆயுதங்களுடன் கூடியவளும், மஹிஷாசுரனை ஸம்ஹரித்தவளும் தாமரை மலரில் வீற்றிருப்பவளும் ஹ்ரீங்காரம் என்ற சிறந்த மந்த்ரத்தால் அறியத்தகுந்த மஹிமையடையவளும் பவளம் போன்று சிவந்தமேனியுடையவளும் ஸத்ரூபிணியும் பாக்ய

மருளுபவலுமான உலகம் போற்றும் ஸ்ரீ துர்கா தேவீ இங்கே விளங்கிக் கொண்டிருக்கிறாள்.

श्री दुर्गा भवन द्वारं पार्श्वयोः लोकपूजितौ
सूत्रभाष्य कृतौ भातो व्यास शंकरदेशिकौ ॥ (4)
वन्दे व्यासं सरस्वत्यावासं नीलांबुदप्रभं ।
अष्टादश पुराणानां कर्तारं सूत्रकृद्वरम् ॥ (5)
सर्व श्रुतिशिरस्सार भूताद्वैत प्रकाशकान् ।
आद्यान्श्रीशंकराचार्यान् वन्दे शंकररुपिणः ॥ (6)

ஸ்ரீ துர்கா பவனத்வார பார்ச்வயோர் லோக பூஜி தௌ ।
ஸுத்ரபாஷ்யக்ருதௌ பாதோ வ்யாஸசங்கரதேசிகௌ ॥
வந்தே வ்யாஸம் ஸாஸ்வத்யாவாஸம் நீலாம் புதப்ரபதம் ।
அஷ்டாதச புராணானாம் கர்த்தாரம் ஸூத்ரக்ருத்வரம் ॥
ஸர்வச்ருதி சிரஸ் ஸார பூதாத் வைத ப்ரகாசகான் ।
ஆத்யான் ஸ்ரீ சங்கராசார்யான் வந்தே சங்கரரூபிண: ॥

(பொ. உ) ஸ்ரீ துர்காதேவியின் வாயிற்படியின் இருபுறங்களிலும் ஸூத்ரம் பாஷ்யம் இயற்றிய ஸ்ரீ வ்யாசாசார்யாரும் ஸ்ரீ சங்கராசார்யாரும் பிரகாசிக்கின்றனர்.

ஸ்ரஸ்வதியின் தங்குமிடமும் காலமேக ச்யாமளரும் பதினெட்டு புராணங்களை அருளியவரும் ஸூத்ரகாரரில் சிறந்தவருமான ஸ்ரீ வ்யாஸரை வணங்குகின்றேன். அனைத்து உபநிஷத்துக்களின் ஸாரபூதமான அத்வைத ஸித்தாந்தத்தை பிரகாசப்படுத்துகின்ற வருமான ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர் அவர்களை வணங்குகின்றேன்.

दुर्गा देवी वामदक्षराजन्मण्डपयोः स्थिताः ।
स्वयं प्रकाश ब्रह्मेन्द्राः ह्यवधूत कुलोत्तमाः ॥ (7)
सदाशिवाख्यन्ब्रह्मेन्द्राः ज्ञानिलोकाभिपूजिताः ।
दुर्गा देवी प्रसादेन त्यक्त संसार बन्धनाः ॥ (8)

துர்காதேவீ வாமதக்ஷ ராஜன் மண்டபயோ: ஸ்திதா: ।
ஸ்வயம் ப்ரகாசப்ரம் ஹேந்த்ரா: ஹ்யவதூதகுலோத்தமா: ॥
ஸதாசிவாக்ய ப்ரம்ஹேந்த்ரா: ஞானிலோகாபிபூஜிதா: ।
துர்க்கா தேவீ ப்ரஸாதேன த்யக்த ஸம்ஸார பந்தனா: ॥



(பொ. உ) துர்கா தேவியின் இடது வலது பக்கம் பிரகாசிக்கும் இரண்டு மண்டபங்களிலும் துர்காதேவியின் அருளால் ஸம்ஸார பந்தத்தினின்றும் நீங்கியவர்களும், அவதூத குலச்ரேஷ்டர்களுமான ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாசப் பிரம்ஹேந்ர ஸ்வாமிகளும் ஞானியரால் பூஜிக்கப்படும் ஸ்ரீ ஸதா சிவப்ரம்ஹேந்திர ஸ்வாமிகளும் உள்ளனர்.

स्वयं प्रकाशमिध तत्यनाम्ना
प्रकाश मानं विदितात्म तत्वं
चिन्मुद्रयांचतस्वकरारविन्दं
योगिन्द्र मीडे भव बन्धमुक्त्यै ॥ (9)
स्वयं प्रकाशा श्रित पादपद्मं
श्रीव्यासपुत्रेण शुकेन तुल्यं
सदाशिवाख्यं यति लोकवन्द्यं
सदाऽवधूतोत्तम माश्रयेऽहम् ॥ (10)

ஸ்வயம்ப்ரகாசாபித தத்ய நாம்னா
ப்ரகாச மானம் விதிதாத்மதத்வம் ।
சின்னமுத்ர யாஞ்சத் ஸ்வகரார விந்தம்
ஸதாவதூ தோத்தமமாச்ரயேऽஹம் ॥
ஸ்வயம் ப்ரகாசாச்ரித பாதபத்மம்
ஸ்ரீவ்யாஸபுத்ரேண சுகேன துல்யம் ॥
ஸதா சிவாக்யம் யதிலோக வந்த்யம்
ஸதாவதூ தோத்தம மாச்ரயேऽஹம் ॥

(பொ. உ) ஸ்வயம்ப்ரகாசர் என்ற உண்மையான பெயரால் பிரகாசிப்பவரும் ஆத்மதத்துவம் அறிந்தவரும் சின் முத்ரையுடன் கூடிய கரகமலமுடையவரும் ஆகிய ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச யோகீந்த்ரரை ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுபட துதிக்கிறேன்.

ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளால் வணங்கப்பெற்ற திருவடித் தாமரையுடைய வரும், ஸ்ரீ வ்யாஸபுத்திரரான சுகாசார்யாருக்கு ஸமமானவரும் ஸந்யாஸிகளால் வணங்கத்தக்கவரும் அவதூத சிரேஷ்டருமான ஸ்ரீ ஸதாசிவப்ரம்ஹேந்திரரை நான் சரணடைகிறேன்.

सदा शिवाऽवधूतेन्द्र मण्डप द्वारि वर्तते ।
ऋग्वेदश्च यजुर्वेदः मूर्तिमान्वामदक्षयोः ॥ (11)

स्वयं प्रकाशब्रह्मेन्द्र मण्डपो मय पार्श्वयोः ।
सामाथर्वणवेदौ च भातो लोकाभिपूजितौ ॥ (12)

ஸதாசிவாவதுதேந்த்ர மண்டபத்வாரி வர்த்ததே ।
ருக்வேதச்ச யஜுர்வேத: மூர்த்திமான் வாம தக்ஷயோ: ॥
ஸ்வயம்ப்ரகாசப்ரம் ஹேந்த்ர மண்டபோபய பார்ச்வயோ:
ஸாமாதர்வண வேதௌச பாதோ லோகா பிபூஜிதௌ ॥

(உரை) ஸ்ரீ ஸதாசிவப்ரம்ஹேந்திரரின் மண்டபவாயிலில் இடது, வலது பக்கத்தில் ருக்வேதமும் யஜுர் வேதமும் உருவங் கொண்டு விளங்குகின்றனர்.

ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரம்ஹேந்திரரின் மண்டபத்தின் இரண்டு பக்கங்களிலும் உலகம் போற்றும் ஸாமவேதமும் அதர்வண வேதமும் விள்ங்குகின்றன.

ருக்வேதம் :-

ऋग्वेदमाद्यं द्विभुजं सिताभं
श्रीगर्दभास्यं सरसीरुहाक्षं
व्याख्यान सक्तं विधृताक्षमालं
वन्दे मयूरापति मिष्टसिद्ध्यै ॥ (13)

ருக்வேதமாத்யம் த்விபுஜம் ஸிதாபம்
ஸ்ரீ கர்தபாஸ்யம் ஸரஸிருஹாக்ஷம்
வ்யாக்யானஸக்தம் வித்ருதாக்ஷமாலம்
வந்தே மயூராபதி மிஷ்டஸித்யை ॥

(பொ. உ) இரண்டு கையினரும் வெண்ணிறத்தினரும், அழகிய கழுதை முகத்தினரும் தாமரை மலர் போன்ற கண்ணினரும் வ்யாக்யானம் செய்பவரும் (உரை நிகழ்த்துபவரும்) அக்ஷ மாலையுடன் கூடியவரும் (ஒருகையில் சின்முத்ரையும் ஒருகையில் அக்ஷ மாலையும் கொண்டவர்) மயூரா என்பவளின் பர்த்தாவுமாகிய முதல் வேதமான ருக்வேத புருஷரை இஷ்டஸித்தி பெற வேண்டி வணங்குகின்றேன்.

யஜுர்வேதம்

पीतं त्वजास्यं शुभ कातराक्षं
दक्षेऽक्षसूत्रं कुलिशं च वामे ।
करे दधानं तु शृगालया च
युतं यजुर्वेदमहं प्रपद्ये ॥ (14)



பீதம் த்வஜாஸ்யம் சுபகாதராக்ஷம்
தக்ஷேऽக்ஷஸூத்ரம் குலிசம் ச வாமே ।
கரே ததானம் து ச்ருகாலயாச
யுதம் யஜுர்வேத மஹம் ப்ரபத்யே ॥

(பொ. உ) மஞ்சள் நிறத்தினரும் ஆட்டு முகத்தினரும் அழகிய பயந்த கண்ணினரும் வலது கரத்தில் அக்ஷ மாலையும் இடது கரத்தில் வஜ்ராயுதமும் கொண்டவரும் ச்ருகாளா என்ற மனைவியுடன் கூடியவருமான யஜுர் வேதமூர்த்தியை நான் சரணடைகிறேன்.

ஸாமவேதம்

नीलं हयास्यं शुभपीतनेत्रं
तं सामिधेनी पति मिष्ट सिद्ध्यै ।
दक्षेऽक्षमालां कलशं च वामे
श्रीसामवेदं दधतं नमामः ॥ (15)

நீலம் ஹயாஸ்யம் சுப பீதநேத்ரம்
தம் ஸாமிதேனீபதி மிஷ்டஸித்தியை ।
தக்ஷேக்ஷமாலாம் கலசம் ச வாமே
ஸ்ரீ ஸாமவேதம் தததம் நமாம: ॥

(பொ. உ) நீல நிறத்தினரும் குதிரை முகத்தினரும் அழகிய மஞ்சள் நிறக் கண்ணினரும் ஸாமி தேனீ என்பவளின் பர்த்தாவும் வலது கரத்தினால் அக்ஷமாலையையும் இடது கரத்தில் கலசத்தையும் வைத்திருப்பவருமான ஸ்ரீஸாம வேத மூர்த்தியை வணங்குகிறோம்.

அதர்வ வேதம்

अथर्व वेद धवलं कराग्रे
वामेऽक्षमालां कलशं च दक्षे ।
संबिभ्रतं फुल्लबृहत्सुनेत्रं
समित्पतिं नौमि च वानरास्यम् ॥ (16)

அதர்வவேதம் தவளம் கராக்ரே
வாமேக்ஷமாலாம் கலசம்ச தக்ஷே
ஸம்பிப்ரதம் புல்ல பிருஹத் ஸுநேத்ரம்
ஸமித்பதிம் நௌமி ச வானராஸ்யம் ॥

(பொ. உ) வெண்ணிறத்தினரும் இடது கரத்தில் அக்ஷ மாலையையும் வலது கரத்தில் கலசத்தையும் வைத்திருப்பவரும் மலர்ந்த பெரும் அழகிய கண்ணினரும் ஸமித் என்பவளின் பதியுமாகிய அதர்வவேத புருஷரை இஷ்டம் ஸித்தியாக வணங்குகிறேன்.

# दण्डपाणिः

## தண்டபாணி

एतस्याः पुरतो भाति दण्डपाणिः शुभाकृतिः ।
दुर्गाम्बादर्शनात्तुष्ट मानसोऽभीष्ट पूरकः ॥ (17)
दण्डपाणिः परिवृतः सपत्नीकै र्नवग्रहैः ।
इहैवाभाति भक्तानां ग्रहबाधा निवर्त्तकः ॥ (18)
स्कन्दाश्रमे नित्यनिवासतृप्तं
दक्षेण हस्तेन धृतोरुदण्डम् ।
कटीतटस्थापित वाम हस्तं
श्री दण्डपाणिं शुभदं नमामः ॥ (19)

ஏதஸ்யா: புரதோ பாதி தண்டபாணி: சுபாக்ருதி: ।
துர்காம்பாதர்சனாத் துஷ்டமானஸோ பீஷ்டபூரக: ॥
தண்டபாணி: பரிவ்ருத ஸத்பத்னீகைர் நவக்ரஹை: ।
இஹைவாபாதி பக்தானம் க்ரஹபீடா நிவர்த்தக: ॥
ஸ்கந்தாச்ரமே நித்ய விவாஸ த்ருப்தம்
தக்ஷேண ஹஸ்தேன த்ருதோருதண்டம் ।
கடீதடஸ்தாபித வாமஹஸ்தம்
ஸ்ரீ தண்டபாணிம் சுபதம் நமாம: ॥

(பொ. உ) இந்த துர்காதேவியின் முன்புறத்திலே அழகிய உருவமுடையவரும் ஸ்ரீ துர்கா மாதாவை தர்சனம் செய்வதால் மகிழ்ந்த மனமுடையவரும் இஷ்டங்களை பூர்த்தி செய்பவருமாகிய தண்டபாணி விளங்குகின்றார். மனைவியருடன் கூடிய நவக்கிரஹங்கள் சூழ்ந்து பக்தர்களுக்கு க்ரஹபீடையைப் போக்கும் தண்டபாணி இங்கு மட்டும் பிரகாசிக்கின்றார்.

---

இவ்வாறு பத்னிகளுடன் நவக்கிரஹங்களுடன் கூடிய ஸ்ககந்தரை இங்கு மட்டும் தான் காணமுடியும். ''நாளென் செய்யும்'' என்ற அருணகிரியாரின் பாடலைக் கருத்தில் கொண்டால் இதன் உண்மை புலனாகும்.



ஸ்ரீ ஸ்கந்த குருநாதன்

दण्डपाणेर्दक्षपार्श्वे मण्डपेऽतिमनोहरे ।
श्रीवल्लभागण पतिः भाति भक्तेष्टदायकः ॥ (20)
ब्रह्मादि देव वर वन्दित पाद पद्मः
पाशं धनु श्शर सृणीच करै र्दधानः ।
आरक्त पद्म निलयः प्रियया समेतः
श्रीवल्लभागणपतिः श्रियमातनोतु ॥ (21)

தண்டபாணேர்தக்ஷ பார்ச்சவே மண்டபேऽதி மனோஹரே ।
ஸ்ரீ வல்லபாக்கணபதி: பாதி பக்தேஷ்டதாயக: ॥ (20)
ப்ரம்ஹாதி தேவ வர வந்தித பாத பத்ம:
பாசம் தனு: சரஸ்ஸணீச கரைர் ததான: ।
ஆரக்தபத்மநிலய: ப்ரியயா ஸமேத:
ஸ்ரீ வல்லபாகணபதி: ஸ்ரீயமாதனோது ॥ (21)

*(பொ. உ) தண்டபாணியின் வலது: புறத்தில் அழகிய மண்டபத்தில் பக்தர்களின் இஷ்டத்தை அளிக்கும் வல்பலா கணபதி அமர்ந்துள்ளார்.*

பிரம்மா முதலிய தேவ சிரேஷ்டர்களால் வணங்கத்தகுந்த சரண கமலமுடையவரும் பாசம் வில் அம்பு அங்குசம் இவற்றைக் கரங்களால் தரித்திருப்பவரும், சிவந்த தாமரை மலரில் வீற்றிருப்பவரும் மனைவியுடன் சேர்ந்தவருமான ஸ்ரீ வல்லபாகணபதி ஐச்வர்யம் அருளட்டும்.

दण्डपाणे र्वामभागे मण्डपेऽलकृते शुभे ।
मणिकण्ठ महाशास्ता भति लोकशुभप्रदः ॥ (22)
करं दक्षिणं ज्ञान मुद्राभिरामं
वरं वाम हस्तं च जानूपरिस्थं ।
वहन्तं सदा योगपट्टाभिरामं
भजे शंभुविष्णवो स्सुतं भूतनाथम् ॥ (23)

தண்டபாணேர் வாமபார்ச்வ மண்டபே லங்க்ருதே சுபே
மணிகண்ட மஹாசாஸ்தா பாதி லோக சுபப்ரத:
கரம்தக்ஷிணம் ஞான முத்ராபிராமம்
வரம் வாமஹஸ்தம் ச ஜானூபரிஸ்தம்
வஹந்தம் சதா யோகபட்டாபிராம்
பஜே சம்புவிஷ்ண்வோ ஸ்ஸுதம் பூதநாதம் ॥ (23)

*(உரை) தண்டபாணியின் இடது புறத்திலுள்ள அழகிய அலங்காரம் செய்யப்பட்ட மண்டபத்தில் உலகத்திற்கு நலம் பயக்கும் ஸ்ரீ மணிகண்ட மஹாசாஸ்தா விளங்குகின்றார்.*

*ஞானமுத்ரையினால் அழகிய வலது கரத்தையும் முழங்காலில் வைத்திருக்கும் இடது கரத்தையும் தாங்கும் யோக பட்டத்தால் அழகிய சங்கரருக்கும் விஷ்ணுவுக்கும் புத்திரராகிய மஹா சாஸ்தாவை பஜிக்கிறேன்.*

*இந்த சுலோகம் இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட "மஹாசாஸ்தாவும் மணிகண்டரும்" என்ற நூலில் உள்ளதாகும்.*

अत्रैव बाणलिंगं च शिवकामाख्य सुन्दरी ।
आनन्द ताण्डव पटुः नट राजश्च शोभते ॥
भुवनेशी समायुक्तः भुवनेशोऽतिशोभनः ।
भक्ता भीष्टप्रदः शान्तानन्दयोगिप्रतिष्ठितः ॥ (25)

அத்ரைவ பாணலிங்கம் ச சிவகாமாக்யஸுந்தரீ ।
புவனேசீஸமாயுக்த: புவனேசோऽதிசோபன: ।
பக்தா பீஷ்டப்ரத: சாந்தானந்த யோகிப்ரதிஷ்டித: ॥

*(பொ. உ) இங்குதான் பாணலிங்கம், சிவகாமஸுந்தரீ ஆனந்த தாண்டவ நடராஜர் பக்தர்களுக்கு இஷ்டமளிக்கும் ஸ்ரீ புவனேஸ்வரியுடன் கூடிய புவனேச்வரர் இவர்கள் ஸ்ரீ சாந்தானந்தயோகி அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர்.*

यद्यन्त्र जातं निखिलं मन्त्र शास्त्रेषु कीर्तितं ।
तदस्मिन्मण्डपे भाति सर्व मूर्ध्वतलोदरे ॥
दृष्टिचित्ताप हारीणि लिखितानि सु शिल्पिभिः ।
नानावर्णानि यन्त्राणि बाभान्ति भाग्यदान्यहो ॥ (27)

யத்யந்த்ரஜாதம் நிகிலம் மந்த்ர சாஸ்த்ரேஷு கீர்த்திதம்
ததஸ்மின் மண்டபே பாதி ஸர்வ மூர்த்வதலோதரே ॥
த்ருஷ்டிசித் தாபஹாரீணி லிகிதானி ஸுசில்பி: ।
நானாவர்ணாநி யந்த்ராணி பாபாந்தி பாக்யதான்ய ஹோ ॥

*(பொ. உ) மந்திரசாஸ்திரங்களில் கூறப்பட்ட அனைத்து யந்த்ரங்களும் இந்த மண்டபத்தில் மேல் விளங்குகின்றன. கண்ணையும் மனதையும் பறிக்கும் பல வித வர்ணங்கள் கொண்ட பாக்யமளிக்கும் யந்த்ரங்கள் மிகவும் வனப்புடன் இங்கு உள்ளன இது ஆச்சர்யம் அளிக்கும்!*



உ

## ஸ்ரீ ஞான ஸபா
## श्री ज्ञान सभा

एतन्मण्डपबाह्ये तु बहुयन्त्र समंचिता ।
स्वयं प्रकाश नाम्न्यन्या भाति ज्ञान सभा वरा ॥ (1)
शान्तानन्दावधूतेन्द्रैः भक्तानामुद्धिधीर्षया ।
महान्तो बहवो ह्यत्र शिलारुपाः प्रतिष्ठिताः ॥ (2)
केचित्ख्याता मताचार्याः केचित्भागवतोत्तमाः ।
महान्तो ज्ञानिनः केचित् विमुक्ता भवबन्धनात् ॥ (3)
गायकाश्च कवीशाश्च केचित्पूज्या महाजनैः ।
कृतावतारा भूलोके धर्म मार्ग प्रवर्तकाः ॥ (4)

ஏதன் மண்டப பாஹ்யே து பஹுயந்த்ரஸமஞ்சிதா ।
ஸ்வயம்ப்ரகாசநாம்ன்யன்யா பாதி ஞானஸபா வரா ॥
சாந்தானந்தா வதூதேந்ரை: பக்தானும் உத்திதீர்ஷயா ।
மஹாந்தோ பஹவோ ஹ்யத்ர சிலாரூபா: ப்ரதிஷ்டிதா: ॥
கேசித் க்யாதா மதாசார்யா: கேசித் பாகவ தோத்தமா: ।
மஹாந்தோஞானின: கேசித் விமுக்தா பவபந்தனுத் ।
காயகாச்ச கவீசாச்ச கேசித் பூஜ்யா மஹாஜனை: ।
க்ருதாவதாரா பூலோகே தர்மமார்க ப்ரவர்த்தகா: ॥

*(பொ. உ) இந்த மண்டபத்தின் (குருகுலப்ரார்த்தனா மண்டபத்தின்) வெளியில் பலயந்த்ரங்கள் நிறைந்த ஸ்வயம் ப்ரகாசஞானஸபா என்றொரு ஸபா உள்ளது. இங்கு பல மஹான்கள் சிலாரூபமாய் ஸ்ரீ சந்தானந்த ஸ்வாமிகளால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனர். இதில் சிலர் மதாசார்யர்கள். சிலர் சிறந்த பகவத்பக்தர்கள். சிலர் ஸம்ஸார பந்தத்தை விட்டு வெளிவந்த மஹா ஞானிகள். சிலர் ஸங்கீத நிபுணர்கள். சிலர் மஹாகவிகள் சிலர் மஹா ஜனங்களால் பஹுமானிக்கத்தக்கவர். அனைவரும் தர்மமார்க்கத்தை அளிக்க பூலோகத்தில் அவதாரம் செய்தவர் ஆவார். (இதில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள மஹான்கள் 26 பேர்கள். அவர்களின் சுருக்கமான குறிப்பான வரலாற்று நிகழ்ச்சியைக் காட்டும் இந்த சுலோகங்கள்):*

पद्मावतीं पाण्ड्यराज महिषीं प्रमदोत्तमां ।
शैवमार्गतरां वन्दे ज्ञानसंबन्ध संस्तुताम् ॥ (5)

பத்மாவதீம் பாண்டிய ராஜ மஹிஷீம் ப்ரமதோத்தமாம் ।
சைவமார்க ரதாம் வந்தே ஞான ஸம்பந்த ஸம்ஸ்துதாம் ॥

*(பொ. உ) பாண்டிய மன்னனின் பட்ட மஹிஷியும் பெண் வர்க்கத்தில் சிறந்தவளும் சைவ மார்க்கத்தில் ஈடுபாடுடையவளும் திருஞான ஸம்பந்த ஸ்வாமிகளால் துதிக்கப்பட்டவளுமான பத்மாவதியை (மங்கையர்க்கரசியை) வணங்குகிறேன்.*

*(5) மங்கையர்க்கரசிக்கு "பத்மாவதி" என்று பெயர் என அகஸ்திய சிவபக்த விலாஸம் என்னும் நூல் கூறும்.*

सौभाग्यभास्कर व्याख्या प्रणेतारं बुधोत्तमं ।
वन्दे भास्कररायं तं शाक्त मार्ग प्रवर्तकम् ॥ (6)

ஸௌபாக்ய பாஸ்கர வ்யாக்யா ப்ரணேதாரம் புதோத்தமம் ।
வந்தே பாஸ்கரராயம் தம் சாக்தமார்க ப்ரவர்தகம் ॥

*"ஸௌபாக்ய பாஸ்கரம்" என்ற ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமா வியாக்யான நூலை எழுதியவரும் மஹாவித்வானும் சாக்த மார்கத்தைக் காட்டுபவருமாகிய ஸ்ரீ பாஸ்கர ராயர் அவர்களை வணங்குகின்றேன்.*

भजे वल्लीगिरिस्वामि नामानं यति पुंगवं ।
श्री कीर्त्य भिध गंगेय स्तुति प्रोद्धरणोद्यतं ॥ (7)

பஜே வள்ளீ கிரிஸ்வாமி நாமானம் யதிபுங்கவம் ।
ஸ்ரீ கீர்த்யபித காங்கேய ஸ்துதி ப்ரோத்தரணோத்யதம் ॥

*சிறந்த ஸந்யாஸியும் "ஸ்ரீ கீர்த்தி" என்ற முருகன் துதியை (திருப்புகழை) வெளிக் கொண்டு வரும் முயற்சியுடையவருமான ஸ்ரீ வள்ளி மலை ஸ்வாமி அவர்களை பூஜிக்கிறேன்.*

देशान्तरेषु चाद्वैत मत प्रख्यापने पटुं ।
विवेकानन्दनामानं वन्दे वाग्मि कुलोत्तमम् ॥ (8)



தேசாந்தரேஷு சாத்வைத மதப்ரக்யாபனே படும் ।
விவேகாநந்த நாமானம் வந்தே வாக்மி குலோத்தமம் ॥

தேசாந்தரங்களிலும் அத்வைத வேதாந்த மதத்தைப் பரப்புவதில் சாமர்த்தியமுடையவரும் பேச்சாளிகளுள் சிறந்தவருமான ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

श्री भाष्यस्य प्रणेतृंस्तान् वन्दे लोकहितंकरान् ।
श्री मद्रामानुजाचार्यन् विशिष्टाद्वैतबोधकान् ॥ (9)

ஸ்ரீ பாஷ்யஸ்ய ப்ரணேத்ரும்ஸ்தான் வந்தே லோகஹிதங்கரான் ।
ஸ்ரீமத் ராமானுஜாசார்யான் விசிஷ்டாத்வைத போதகான் ॥

*உலகிற்கு ஹிதம் செய்பவரும் விசிஷ்டாத்வைதத்தை போதிக்கின்றவரும் ஸ்ரீ பாஷ்யம் செய்தவருமான ஸ்ரீ ராமானுஜசார்யார் அவர்களை வணங்குகின்றேன்.*

स्वयं प्रकाशाश्रित पादपद्मं
श्रीव्यास पुत्रेण शुकेन तुल्यं ।
सदाशिवाख्यं यतिलोकवन्द्यं
सदाऽवधूतोत्तममाश्रयेऽहम् ॥ (10)

ஸ்வயம் ப்ரகாசாச்ரித பாத பத்மம்
ஸ்ரீ வ்யாஸபுத்ரேண சுகேன துல்யம் ।
ஸதாசிவாக்கம் யதிலோக வந்த்யம்
ஸதா வதூ தோத்தம மாச்ரயே ஹம் ॥

*ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரம்ஹேந்திரரால் வணங்கப்பெற்ற சரணாரவிந்தமுடைவரும் ஸ்ரீ வ்யாஸபுத்திரரான ஸ்ரீ சுகாசார்யாருக்கு ஒப்பானவரும் ஸன்யாசிகளால் பூஜிக்கத்தக்கவரும் ஆகிய ஸதாசிவப்ரம்ஹேந்த்ராவதூத ஸ்வாமிகளை சரணடைகின்றேன்.*

स्वयं प्रकाशामिध तथ्य नाम्ना
प्रकाशमानं विदितात्मतत्वं ।

चिन्मुद्रयां चत्स्व करार विन्दं
योगीन्द्रमीडे भवबन्ध मुक्त्यै ॥ (11)

ஸ்வயம் பர்கா சாபித தத்ய நாம்னா
ப்ரகாசமானம் விதிதாத்மதத்வம் ।
சின் முத்ர யாஞ்சத் ஸ்வ காராரவிந்தம்
யேகீந்ரமீடே பவபந்த முக்த்யை ॥

ஆத்மதத்துவம் உணர்ந்தவரும் சின்முத்திரை விளங்கும் கரகமலமுடையவரும் ஸ்வயம் பிரகாசர் என்ற உண்மையான பெயரால் விளங்குபவருமான யோகீஸ்வரரை ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுபட துதிக்கிறேன்.

मध्वाचार्यानहं वन्दे द्वैतसिद्धान्त बोधकान् ।
अंगुलीयुगलेनापि स्वसिद्धान्त प्रदर्शकान् ॥ (12)

மத்வா சார்யான் அஹம் வந்தே த்வைத ஸித்தாந்த போதகான்:
அங்குளீயுகளேனாபி ஸ்வஸித்தாந்த ப்ரதர்சகான்:

த்வைத ஸித்தாந்த போதகரும் இரண்டு விரல்களாலும் கூட தம்ஸித்தாந்தத்தை குறிப்பிடுபவருமாகிய ஸ்ரீ மத்வாசார்யரை வணங்குகின்றேன்.

श्री कांची कामा कोटयाख्य पीठाधिपति शेखरान् ।
वन्दे जगद्गुरुन् चन्द्र शेखरेन्द्र यतिश्वरान् ॥ (13)

ஸ்ரீ காஞ்சீ காமகோட்யாக்ய பீடாதிபதி சேகரான் ।
வந்தே ஜகத்குரூன் சந்த்ரசேகரேந்த்ர யதீஸ்வரான் ॥

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளுக்கு அணியாய் இருக்கும் ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

नृसिंहभारती तीर्थान् शारदा पीठ शेखरान् ।
सरस्वत्यवतारांस्तान् वन्दे षड्दर्शनीविदः ॥ (14)

ந்ருஸிம்ஹ பாரதீ தீர்த்தான் சாரதா பீடசேகரான் ।
ஸரஸ்வத்யவ தாரான் ஸ்தான் வந்தே ஷட்தர்சனீ வித: ॥



ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளுள் சிறந்தவரும் ஸ்ரீ ஸரஸ்வதீதேவியின் அவதாரமாய் உள்ளவர்களும் ஆறு சாஸ்திரங்களுமறிந்தருமாகிய ஸ்ரீ ந்ருஸிம்ஹ பாரதிஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

श्री शृङ्ग गिरि विभ्राजच्छारदापीठ शेखरान् ।
वन्दे जगद्गुरुन् चन्द्र शेखराख्यान् यतीश्वरान् ॥ (15)

ஸ்ரீ சிருங்ககிரி விப்ராஜத் சாரதா பீட சேகரான் ।
வந்தே ஜகத்குரூன் சந்த்ரசேகராக்யான் யதீஸ்வரான் ॥

ஸ்ரீ சிருங்ககிரியில் விளங்கும் ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளுள் சிறந்த ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகர பாரதிஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

शेषाद्रिस्वमिनो वन्दे सर्वलोकहितं करान् ।
ऊछलूर् पावनक्षेत्रे समाधिस्थान्यतीश्वरान् ॥ (16)

சேஷாத்ரி ஸ்வாமினோ வந்தே ஸர்வ லோக ஹிதம் கரான் ।
ஊஞ்சலூர் பாவனக்ஷேத்ரே ஸமாதிஸ்தான் யதீச்வரான் ॥

உலகத்திற்கு நன்மை புரிபவரும் ஊஞ்சலூர் புண்ய க்ஷேத்ரத்தில் ஸமாதியில் அமர்ந்தருளுபவருமான ஸ்ரீ சேக்ஷாத்ரி ஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

वन्दे श्री वैष्णवाचार्यान् सर्व शास्त्रेषु पारगान् ।
वेदान्त वेशिकाभिख्यान् बहुग्रव्यकृतो यतीन् ॥ (17)

வந்தே ஸ்ரீ வைஷ்ணவாசார்யான் ஸர்வ சாஸ்த்ரேஷு பாரகான்।
வேதாந்த தேசிகாபிக்யான் பஹுக்ரந்தக்ருதோ யதீன் ॥

ஸர்வ சாஸ்த்ர பாரங்கதரும் பல நூல்களை எழுதியவரும் ஆகிய ஸ்ரீ வைஷ்ணவாசார்யார் ஸ்ரீ வேதாந்த தேசிகர் அவர்களை வணங்குகிறேன்.

श्रीनन्द नन्दना सक्त हृदयां कवि शेखरां।
आण्डाल् इति श्रुतां वन्दे गोदां गोविन्दवल्लभां (18)

ஸ்ரீ நந்த நந்தனா ஸக்தஹ்ருதயாம் கவி சேகராம்।
ஆண்டாள் இதி ச்ருதாம் வந்தே கோதாம் கோவிந்த வல்லபாம்॥

ஸ்ரீ நந்தகுமாரர் கிருஷ்ணனிடம் ஈடுபட்ட மனத்தினளும் கவிகளில் சிறந்தவளும் (திருப்பாவை பாடியவரும்) பகவான் கிருஷ்ணருக்கு மிகப் பிடித்தவளுமான ஆண்டாள் என்ற புகழ் மிக்க கோதையை வணங்குகின்றேன்.

श्वेतारण्या मिधान् श्रेष्टिश्रेष्टान् कविवराग्रगान्।
वन्दे वैराग्य जनकानेकस्तुतिकृतो यतीन्॥ (19)

ச்வேதாரண் யாபிதான் ச்ரேஷ்டி ச்ரேஷ்டான் கவீச்வரான்।
வந்தே வைராக்யஜன காநேக ஸ்துதிக்ருதோ யதீன்॥

கவிகளில் சிறந்தவரும் வைராக்யம் விளைவிக்கும் பல ஸ்துதிகளை இயற்றியவரும் வணிகர்களில் சிறந்தவரும் ஸன்யாசியுமாகிய "திருவெண்காடர்" எனப் பெயர் கொண்ட (பட்டினத்தடிகளை) வணங்குகின்றேன்.

शिवभक्त चरित्राणां कर्तारं च महाकविं।
शेक्किला रभिधं वन्दे शिवभक्त शिखामणिम्॥ (20)

சிவபக்த சரித்ராணாம் கர்த்தாரம் ச மஹாகவிம்।
சேக்கிழார் அபிதம் வந்தே சிவபக்த சிகாமணிம்॥

சிவ பக்தர்களின் (நாயன்மார்களின்) சரித்திரங்களை இயற்றிவரும் மஹா கவியும் திருத் தொண்டர் புராணம் இயற்றியவர்) சிவபக்த சிகாமணியுமாகிய ஸ்ரீ சேக்கிழார் ஸ்வாமிகளை வணங்குகிறேன்.

यत्पद्यानि स्वहस्तेन विलिलेख नटेश्वरः।
तं शिवाप्त महा मन्त्रं वन्दे माणिक्यवाचकं॥ (21)

யத்பத்யானி ஸ்வஹஸ்தேன விலிலேக நடேச்வர।
தம் சிவாப்த மஹாமந்த்ரம் வந்தே மாணிக்க வாசகம்॥

எவருடைய கவிதைகளை தன் கரத்தினாலேயே சிதம்பர நடராஜர் எழுதினாரோ, அந்தச் சிவனிடம் இருந்து பஞ்சாக்ஷர மந்த்ரோபதேசம் பெற்ற ஸ்ரீ மாணிக்க வாசக ஸ்வாமிகளை வணங்குகின்றேன்.



श्रीमन्तं ज्ञान सम्बन्धं पीतोमास्तन्यमद्भुतं।
श्रीकाष पुरसंजातं वन्दे स्कन्दांश संभवम्॥ (22)

ஸ்ரீ மந்தம் ஞான ஸம்பந்தம் பீதோமா ஸ்தன்யமத் புதம்।
ஸ்ரீ காஷபுரஸஞ்ஜாதம் வந்தே ஸ்கந்தாம்ச ஸம்பவம்॥

அன்னை உமா தேவியின் பால் (ஞானம்) அருந்தியவரும் அற்புதமானவரும் திருமுகனின் அம்சமானவரும் சீர்காழியில் பிறந்தருளியவருமான ஸ்ரீ ஞான ஸம்பந்தப் பிள்ளையாரை வணங்குகிறேன்.

वन्दे शिवसखं श्रीमत्सुन्दरं सुन्दराकृतिं।
यद्वाग्वश्यो भवो दूतो ययौ सागरिकागृहान्॥ (23)

வந்தே சிவஸகம் ஸ்ரீமத் ஸுந்தரம் ஸுந்தர க்ருதிம்।
யத்வாக் வச்யோ பவோ தூதோ யயௌ ஸாகரிகா க்ருஹாந்॥

எவருடைய வாக்கிற்கு வச்யமாய் பகவான் சிவபெருமான் பரவையார் வீட்டிற்குத் தூது சென்றாரோ, அந்த அழகிய உருவம் உடைய தம்பிரான் தோழரான ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரை வணங்குகிறேன்.

शिवभक्त प्रभावं यश्चाविश्चक्रे महीतले।
तं वागीशं कवीन्द्रेशं वन्दे कैंकर्यतत्परम्॥ (24)

சிவ பக்த ப்ரபாவம் யச்சாவிச் சக்ரே மஹீதலே।
தம் வாகீசம் கவீந்த்ரேசம் வந்தே கைங்கர்ய தத்பரம்॥

உலகில் சிவ பக்தனுக்கு எவ்வளவு பெருமை உண்டு என்பதை வெளிப்படுத்திய கைங்கர்யத்தில் (உழவாரத் திருப்பணி) ஈடுபாடுடைய கவி ச்ரேஷ்டரான வாகீசப் பெருமானை (அப்பர் ஸ்வாமிகளை திருநாவுக்கரசு நாயனாரை வணங்குகிறேன்).

श्रीकाल्युपासकान्वन्दे विवेकानन्दपूजितान्।
श्रीराम कृष्ण परम हंसान् सन्मार्ग दर्शकान्॥ (25)

ஸ்ரீகாள்யுபாஸகான் வந்தே விவேகானந்த பூஜிதான்।
ஸ்ரீ ராமக்ருஷ்ண பரமஹம்ஸான் ஸன் மார்கதர்சகான்॥

ஸ்ரீ காளி உபாஸகரும் ஸ்ரீ விவேகாநந்தரால் பூஜிக்கப்பட்டவரும் நல்வழி காட்டுபவருமான ஸ்ரீராம க்ருஷ்ண பரம ஹம்ஸரை வணங்குகின்றேன்.

योगमार्गरतं वेदशीर्षसारार्थ वेदिनं।
महर्षिं नौमि रमण मरुणाचलवासिनम्॥ (26)

யோகமார்கரதம் வேத சீர்ஷ ஸ்ரார்த்தவேதினம்।
மஹர்ஷிம் நௌமி ரமணம் அருணாசலவாஸினம்॥

யோக மார்கத்தில் ஈடுபட்டவரும் வேதாந்தத்தின் கருப் பொருள் அறிந்தவரும் திருவண்ணாமலையில் இருப்பவருமாகிய ஸ்ரீ ரமண மஹர்ஷியை வணங்குகிறேன்.

श्रीपुरन्दर दासाख्यं गानविद्या विशारदं।
विट्ठलेश स्तवासक्त मानसं सततं भजे॥ (27)

ஸ்ரீ புரந்தர தாஸாக்யம் கான வித்யா விசாரதம்।
விட்டலேச ஸ்தவாஸக்த மானஸம் ஸததம் பஜே॥

கானம் செய்வதில் வல்லுநரும் விட்டலேச ஸ்துதியில் ஈடுபட்ட மனத்தினரும் ஆகிய ஸ்ரீ புரந்தரதாஸ ஸ்வாமிகளை எப்போதும் பூஜிக்கிறேன்.

रामलिंगाभिधकविं ध्यातस्कन्द पदांबुजं।
सदाचार रतं वन्दे सन्मार्गैकप्रकाशकम्॥ (28)

ராமலிங்காபித கவிம் த்யாத ஸ்கந்த பதாம் புஜம்।
ஸதாசாரரதம் வந்தே ஸன்மார்கைகப்ரகாசகம்॥

ஸ்கந்த சரணாரவிந்த த்யானத்தில் ஈடுபட்டவரும் நல்லொழுக்கமுடையவரும் ஸன்மார்க்கத்தைப் பிரகாசப்படுத்துபவருமான ஸ்ரீ ராமலிங்க கவியை (வள்ளலாரை) வணங்குகிறேன்.



स्कन्दक्षेत्राटनं कुर्वन् यो जगौ स्कन्दवैभवं।
वन्देऽरुणगिरिं रम्य स्कन्द स्तुतिकृतां वरं॥ (29)

ஸ்கந்த க்ஷேத்ராடனம் குர்வன் யோ ஜகௌ ஸ்கந்த வைபவம்।
வந்தே(அ)ருணகிரிம் ரம்யஸ்கந்த ஸ்துதிக்ருதாம் வரம்॥

முருகன் வாழும் க்ஷேத்திரங்கள் தோறும் சென்று, முருகன் பெருமை பாடியவரும் அழகிய முருகன் ஸ்துதிகளை இயற்றியவரும் சிறந்தவருமாகிய ஸ்ரீ அருணகிரி ஸ்வாமிகளை வணங்குகிறேன்.

समर्थरामदासं श्री रामस्मरण निर्वृतं।
वन्दे छत्रपति श्रीमत् शिवाजीपूज्य देशिकम्॥ (30)

ஸமர்த்த ராமதாஸம் ஸ்ரீ ராம ஸ்மரண நிர்வ்ருதம்।
வந்தே சத்ரபதி ஸ்ரீமத் சிவாஜீ பூஜ்ய தேசிகம்॥

ஸ்ரீ ராம ஸ்மரணத்தில் திளைத்தவரும் சத்ரபதி ஸ்ரீ சிவாஜியின் பூஜ்ய குருவுமாகிய ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகளை வணங்குகின்றேன்.

नूत्नैर्विमानैर्बहुभिः शोभमानस्य सर्वशः।
नूत्न प्राकारविलसत्श्रीमत्स्कन्दाश्रमस्य हि॥ (31)

நூத்னைர் விமானைர் பஹுபி சோபமானஸ்ய ஸர்வச।
நூத்ன ப்ராகார விலஸத் ஸ்ரீம த் ஸ்கந்தாச்ரமஸ்ய ஹி॥

श्रीशान्तानन्द योगीन्द्राः श्री कैंकर्य परायणाः।
पुनः कुंभाभिषेकाय सर्वं चक्रुर्यथाविधि॥ (32)

ஸ்ரீ சாந்தானந்த யோகீந்த்ராঃ ஸ்ரீ கைங்கர்ய பராயணா।
புனঃ கும்பாபிஷேகாய ஸர்வம் சக்ருர் யதாவிதி॥

பல நூதனமான விமானங்களால் எங்கும் பிரகாசிக்கும் புதிய ப்ராகாரத்துடன் கூடிய ஸ்ரீ ஸ்கந்தாச்ரமத்திற்குத் திருப்பணியில் ஈடுபாடுடைய ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் மீண்டும் முறைப்படி கும்பாபிஷேகம் செய்ய அனைத்தையும் செய்தனர்.

# श्री कुंभाभिषेकः

## ★ ஸ்ரீ கும்பாபிஷேகம் ★

वर्षे प्रमोदूत शुभाभिधाने
भानौ प्रयाते मिथुनं च शुक्ले।
पक्षे तिथौ सागरसंमितायां
शुक्राख्यवारेऽमृत योगदीप्ते॥ (1)

வர்ஷே ப்ரமோதூத சுபாபி தானே
பானௌ ப்ரயாதே மிதுனம் ச சுக்லே।
பக்ஷே திதௌ ஸாகர ஸம்மிதாயாம்
சுக்ராக்ய வாரே ம்ருதயோக தீப்தே॥

अतिप्रशस्तोत्तर फल्गुने भे
सिंहे सुलग्ने विमलासु दिक्षु।
कुंभाभिषेकं स्वकरेण शान्ता
नन्दाभिधानो यतिराडकार्षीत्॥ (2)

அதிப்ர சஸ்தோத்ர பல்குனீபே .
ஸிம்ஹே ஸுலக்னே விமலாஸுதிக்ஷு।
கும்பாபிஷேகம் ஸ்வகரேண சாந்தா
னந்தா பிதானோ யதிராடகார்ஷீத்॥

ஸ்ரீ ப்ரமோதுத வர்ஷத்தில், ஆனி மாதத்தில், சுக்ல பக்ஷ ஸப்தமீ திதியில் சுக்ர வாரத்தில் (வெள்ளிக் கிழமையில்) அம்ருத யோகத்தில் உத்திர நக்ஷத்ரத்தில் சிம்ஹ லக்னத்தில் திசை எல்லாம் பிரகாசமாய் இருக்கும் ஸமயத்தில் ஸ்ரீ சாந்தானந்த யதீச்வரர்கள் தன் திருக் கரத்தினால் கும்பாபிஷேகம் நடத்தினார்கள்.

शुभकुंभ महाभिषेचनं
अवधूतेन्द्र कराब्जकारितं।
बहुलक्ष शिरोविभूषितः
किमभूत्स्कन्द गिरिर्दिदृक्षया॥ (3)



சுபகும்ப மஹாபிஷேசனம்
அவதூதேந்த்ரகராப்ஜ காரிதம்।
பஹுலக்ஷ சிரோவிபூஷித:
கிமபூத் ஸ்கந்தகிரிர் திதிருக்ஷயா॥

इति विस्मित मानसोऽ भवत्
सकलोप्यत्र समागतो जनः।
अभवन्मिलिता स्तथाजनाः
गिरिशृंगेषु महातरुष्वपि॥ (4)

இதி விஸ்மிதமானஸோ பவத்
ஸகலோப் யத்ர ஸமாகதோ ஜன:।
அபவன் மிளிதா ஸ்ததாஜனா
கிரிச்ருங்கேஷு மஹாதருஷ்வபி॥

ஸ்ரீ அவதூத ஸ்வாமிகள் கர கமலத்தால் செய்விக்கப்பட்ட மஹா கும்பாபிஷேகத்தைப் பார்க்க ஆசை கொண்டு ஸ்கந்த கிரி லக்ஷக் கணக்கான சிரங்கள் கொண்டுள்ளதோ என வந்திருந்த அவ்வளவு ஜனங்களும் மனத்தில் ஆச்சரியம் கொண்டனர். மலையின் சிகரங்களிலும் பெரும் மரங்களிலும் ஜனங்கள் அவ்வாறு குழுமி இருந்தனர்.

श्री दण्डपाणे जय लोकमातः
दुर्गे जयाष्टदश दीर्घ हस्ते।
यतीश योगीश्वर सद्गुरो त्वं
जयेति चाश्रूयत पुण्य घोषः॥ (5)

ஸ்ரீ தண்டபாணே ஜய லோகமாத:
துர்கே ஜயாஷ்டாதச தீர்கஹஸ்தே।
யதீச யோகீச்வர ஸத்குரோ த்வம்
ஜயேதி சாச்ருயத புண்ய கோஷ:॥

ஸ்ரீ தண்டபாணே ஜய ஜய, ஜகஜ்ஜனனி துர்கே ஜய ஜய, அஷ்டாதசதீர்க புஜே ஜய ஜய, யதீச்வர யோகீச்வர ஸத்குரோ ஜய ஜய என்று புண்ணிய கோஷம் அப்போது எழுந்தது.

भुज्यतां षड्रसोपेतं तिन्त्रिणी दधिमिश्रितं
व्यंजना लंकृतं स्वादु कोष्णमन्नं यथारुचि ॥ (6)

புஜ்யதாம் ஷட்ரஸோபேதம் திந்த்ரிணீ ததிமிச்ரிதம்।
வ்யஞ்ஜனாலங்க்ருதம் ஸ்வாது கோஷ்ண மன்னம் யதாருசி॥

पायसं शर्करान्नंच त्रिफला पूपमेदुरं।
शरत्सुधाकर स्पर्धि पर्पट प्रवरान्वितं ॥ (7)

பாயஸம் சர்கரான்னம்ச த்ரிபலாபூப மேதுரம்।
சரத்ஸுதாகர ஸ்பர்தி பர்பட ப்ரவரான் விதம்॥

रवान्नं शर्कराज्याढयं लड्डुकं पृथुलाकृति।
उपसेचनसंपृष्टं तैल धाराभि वर्षितं ॥ (8)

ரவான்னம் சர்கராஜ்யாட்யம் லட்டுகம் ப்ருதுலாகிருதி।
உபஸேசன ஸம்யுக்தம் தைலதாராபி வர்ஷிதம்॥

पीयतां च पयः काफी चाया चापि मुहुर्मुहुः।
पानीयं च लवंगैला चूर्णाधै रुप रंजितम् ॥ (9)

பீயதாம்ச பயః காபீ சாயா சாபி முஹுர்முஹு:।
பானீயம் ச லவங்கைலா சூர்ணா த்யை ருப ரஞ்ஜிதம்॥

सर्वत्र ब्रुवतामेवं पाचकानां प्रियारवः।
उपचारोपसंपन्नश्चासीत् श्रोत्रसुखा वहः ॥ (10)

ஸர்வத்ர ப்ருவதாமேவம் பாசகானாம் ப்ரியாரவ:।
உபசாரோபஸம்பன்னச் சாஸீத் ச்ரோத்ர ஸுகாவஹ:॥

*(பொ. உ) அறுசுவையுடன் கூடியதும் புளி, தயிர் இவற்றுடன் கூடியதும் கறி, கூட்டு முதலியவற்றுடன் கூடியதும் ருசி உள்ளதும் சூடாயும் உள்ள அன்னத்தை இஷ்டப்படி சாப்பிடுங்கள். பாயஸம், சர்க்கரைப் பொங்கல், முப்பழம், வடை, சரத்கால சந்திரன் போன்ற பெரிய அப்பளம், சர்க்கரை நெய் மிதக்கும் ரவா கேஸரி, சட்னியுடன்*



*கூடிய எண்ணை நிறைய ஊற்றப்பட்ட பெரிய இட்லி இவற்றையும் சாப்பிடுங்கள்.*

*காபி, டீ, ஏலம், லவங்கம் முதலிய பொடி கலந்த ஜலம் இவற்றையும் அருந்துங்கள் என உபசாரம் நிறைந்த அன்னம் அளிப்பவர்களின் அன்பு நிறைந்த வார்த்தைகள் காதுகளுக்குச் சுகம் அளித்தன.*

ऋग्यजुस्साम वेदज्ञाः कुलशीलसमन्विताः।
वेदपारायणं चक्रुः सश्रद्धं च यथाविधि ॥ (11)

ருக்யஜுஸ்ஸாம வேதஞ்ஞாः குல சீல ஸமன்விதா:।
வேதபாராயணம் சக்ரு: ஸச்ரத்தம்ச யதாவிதி॥

बहुश्रुताश्च मन्त्रज्ञाः ऋत्विजश्च शताधिकाः।
होमं चक्रुश्च विधिवत्रम्य पीतांबरावृताः ॥ (12)

பஹுச்ருத்தாச்ச மந்த்ரக்ஞா: ருத்விஜச்ச சதாதிகா:।
ஹோமம் சக்ருச்ச விதிவத் ரம்ய பீதாம் பராவ்ருதா:॥

देवीसूक्तं सप्तशतीं देवीभागवतं तथा।
स्कान्दं च पण्डिता केचित् अपठन्मधुरस्वरैः ॥ (13)

தேவீஸூக்தம் ஸப்தசதீம் தேவீபாகவதம் ததா।
ஸ்காந்தம் ச பண்டிதா கேசித் அபடன் மதுரஸ்வரை:॥

गायकाश्च जगत्ख्याताः तत्रतत्र जगुः कलं।
वाग्मिनश्चैव तत्वार्थान् जनेभ्यः समुपादिशन् ॥ (14)

காயகாச்ச ஜகத்க்யாதா: தத்ரதத்ர ஜகு: கலம்।
வாக்மினச்சைவ தத்வார்தான் ஜனேப்ய: ஸமுபாதிசன்॥

उपासका भक्तिमन्तः धार्मिकाश्च धनप्रदाः।
मिलिता बहवस्तत्र होमदर्शनलालसाः ॥ (15)

உபாஸகா பக்திமந்தஃ தார்மிகாச்ச தனப்ரதாஃ।
மிலிதா பஹவஸ்தத்ர ஹோமதர்சனலாலஸாஃ॥

ऋत्विजः पण्डितान् सर्वान् वाग्मिनश्च यतीश्वराः।
ततः सभाजयामासुः स्वर्ण वस्त्र प्रदानतः॥ (16)

க்ருத்விஜஃ பண்டிதாந் ஸர்வான் வாக்மிநச்ச யதீச்வராஃ।
ததஃ ஸபாஜயாமாஸுஃ ஸ்வர்ணம் வஸ்த்ர ப்ரதாநதஃ॥

संतुष्टान्सकलान्कर्तुं कोवा शक्नोति भूतले।
शान्तानन्द महायोगिवरात् अन्यो महात्मनः॥ (17)

ஸந்துஷ்டான்ஸகலான்கர்தும் கோவா சக்னோதிபூதலே।
சாந்தானந்த மஹாயோகி வராதன்யோ மஹாத்மனஃ॥

குலம், சீலம் அமைந்த ருக் யஜுஸ் ஸாம வேதம் அறிந்தோர் சிரத்தையுடனும் முறைப்படியும் வேத பாராயணம் செய்தனர். பல கற்ற மந்த்ரம் அறிந்த நூற்றுக்கும் மேற்பட்ட ருத்துவிக்குள் பீதாம்பரம் (மஞ்சள் ஆடை) அணிந்து முறைப்படி ஹோமம் செய்தனர். தேவி ஸூக்தங்கள் ஸப்தசதி தேவீ பாகவதம் ஸ்காந்தம் முதலியவற்றைப் பண்டிதர்கள் இனிமையான குரலுடன் பாடினர். பேச்சாளர்களும் ஜனங்களுக்கு தத்வார்த்தங்களை எடுத்து உபதேசித்தனர். உபாஸகர்கள், பக்திமான்கள், தனம் அளித்த தார்மிகர்கள் அனைவரும் ஹோமத்தைக் காண ஆவலுடன் குழுமி இருந்தனர். பின்னர், ஸ்வாமிகள் ருத்விக்குகள் பண்டிதர்கள் பேச்சாளர்கள் அனைவருக்கும் பொன்னாடை அளித்து பஹுமானம் செய்தனர்.

உலகில் அனைவரையும் திருப்திப்படுத்த மஹாத்மா ஸ்ரீ சாந்தானந்த மஹா யோகிகளைத் தவிர வேறு யார் இருக்கின்றனர்.



# स्कन्द ज्योति दर्शनं
## ஸ்கந்த ஜோதி தர்சனம்

कार्तिक्यां पूर्णिमायां तु प्रतिसंवत्सरं गिरौ।
ज्योतिर्दर्शन नामानं मुत्सवं चापि कुर्वते॥

கார்திக்யாம் பூர்ணிமாயாம் து ப்ரதிஸம்வத்ஸரம் கிரௌ।
ஜ்யோதிர்தர்சன நாமானம் உத்ஸவம் சாபி குர்வதே॥

ஸ்ரீ ஸ்வாமிகள் ஒவ்வொரு வருஷமும் கார்த்திகை மாதம் பௌர்ணமியில் ஸ்கந்த கிரியில் 'ஸ்கந்த ஜோதி தர்சனம்' என்ற விழாவையும் நடத்துகின்றனர்.

भान्ति यत्तेजसा सूर्यचन्द्रनक्षत्रविद्युतः।
तन्महत्तेजसां कूटं स्कन्दज्योतिरुपास्महे॥

महाऽज्ञानतमोनाशदक्षं संविन्मयात्मकम्।
शिवनेत्राग्निसम्भूतं स्कन्दज्योतिरुपास्महे॥

दर्शनाज्ज्योतिषस्तस्य नष्टमोहाः जितेन्द्रियाः।
संप्राप्ताखिलकामाश्च भवन्ति मनुजा भुवि॥

பாந்தி யத்தேஜஸா ஸூர்யசந்த்ர நக்ஷத்ரவித்யுதஃ।
தன்மஹத்தேஜஸாம் கூடம் ஸ்கந்த ஜ்யோதிருபாஸ்மஹே॥

மஹா(அ)க்ஞான தமோநாசதக்ஷம் ஸம்வின்மயாத்மகம்।
சிவநேத்ராக்னி ஸம்பூதம் ஸ்கந்த ஜ்யோதிருபாஸ்மஹே॥

தர்சனாஜ்ஜோதிக்ஷஸ்தஸ்ய நஷ்டமோஹாஃ ஜிதேந்த்ரியாஃ।
ஸம்ப்ராப்தாகில காமாச்ச பவந்தி மனுஜா புவி॥

உரை: எதன் ஒளியால் சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், மின்னல் இவைகள் ப்ரகாசிக்கின்றனவோ, அப்பெரும் ஒளிக் கூட்டமான ஸ்கந்தன் என்ற ஜோதிஸ்ஸை வழிபடுகின்றோம். பெரும் அஞ்ஞான

இருளை ஓட்ட வல்லதும் ஞான மயமானதும் சிவ நேத்ராக்னியில் இருந்து வெளி வந்ததுமான ஸ்கந்தன் என்ற ஜோதியை உபாஸிக்கின்றோம். அந்தஜோதியின் தர்சனத்தினால் உலகில் மனிதர்கள் அனைவரும் மோஹம் அற்றவர்களாய், இந்த்ரியங்களை வெற்றி கொண்டவர்களாய் விரும்பிய அனைத்தையும் பெறுகின்றனர்.

त्वया पराम्बमधिकृत्य कश्चित्
कार्यो निबन्धस्त्विति मातुराज्ञा।
इत्याहुरेते किल दर्शनार्थं
समागतं मामवलोक्य हृष्टाः॥

த்வயா பராம்பா மதிக்ருத்ய கச்சித்
கார்யோ நிபந்தஸ்த்விதி மாதுராஞ்ஞா।
இத்யாஹுரேதே கில தர்சனார்த்தம்
ஸமாகதம் மாமவலோக்ய ஹ்ருஷ்டாঃ॥

(ஒரு ஸமயம்) தர்சனத்திற்காகச் சென்றிருந்த என்னைக் கண்டு மகிழ்ந்த ஸ்வாமிகள், "நீ புவனேச்வரீயைக் குறித்து ஒரு நூல் எழுத வேண்டும். இது புவனேச்வரீயின் ஆக்ஞை" என்று (என்னிடம்) கூறினார்கள்.

आज्ञां तदीयं शिरसा गृहीत्वा
शाक्तप्रबन्धांश्च बहून्पठित्वा।
अयं प्रबन्धः किल साधकानां
कृतः प्रहर्षाय च विस्तरेण॥

ஆஞ்ஞாம் ததீயாம் சிரஸா க்ருஹீத்வா
சாக்தப்ரபந்தாம்ச்ச பஹூன் படித்வா।
அயம் ப்ரபந்தঃகில ஸாத கானாம்
க்ருதঃப்ரஹர்ஷாய ச விஸ்தரேண॥

உரை: அவர்களுடைய ஆணையை சிரமேல் கொண்டு சக்தியைப் பற்றிக் கூறும் பல நூல்களைப் படித்து உபாஸகர்களின் மகிழ்ச்சிக்காக இந்த நூல் விஸ்தாரமாகச் செய்யப்பட்டிருக்கின்றது.



मन्त्र-यन्त्र-स्तुति-कथा-पूजाख्याभिः समुज्वलाः।
प्रकाशः पंच सन्त्यत्र साधकानां प्रहर्षदाः॥

மந்த்ர யந்த்ர ஸ்துதி கதா பூஜாக்யாபி ஸமுஜ்வலாঃ।
ப்ரகாசাঃ பஞ்ச ஸன்த்யத்ர ஸாதகானாம் ப்ரஹர்ஷதাঃ॥

உரை: உபாஸகர்களுக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடிய மந்த்ர ப்ரகாசம், யந்த்ர ப்ரகாசம், ஸ்துதி ப்ரகாசம், கதா ப்ரகாசம், பூஜா ப்ரகாசம் என்ற ஐந்து ப்ரகாசங்கள் இந்த நூலில் அமைக்கப் பெற்றிருக்கின்றன.

श्रीभुवनेशीतत्व-प्रकाशनाम्नी कृतिर्मया रचिता।
श्रीभुवनेशीकृपया यतिवर्याणामनुग्रहाच्चेयम्॥

ஸ்ரீ புவனேசீதத்வ ப்ரகாச நாம்னீ க்ருதிர்மயா ரசிதா।
ஸ்ரீ புவனேசீ க்ருபயா யதிவர்யாணாம் அனுக்ரஹாச்சேயம்॥

உரை: ஸ்ரீ புவனேச்வரியின் அருளாலும், ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் அனுக்ரஹத்தினாலும், "புவனேசி தத்வ ப்ரகாசம்" என்ற நூல் என்னால் இயற்றப்பட்டது.

# ग्रन्थकर्तुः परिचयः

## ஆசிரியரின் அறிமுகம்

त्रिशिरः पत्तनावासी ख्यातकौशिकगोत्रजः ।
श्री नागलक्ष्मी श्रीकृष्णशास्त्रिवर्यतनूभवः ॥

मुत्तुस्वाम्यभिधः शास्त्री स्कान्दादिषु कृतश्रमः ।
अकरोन्न्याय-मीमांसा शिरोमणिरिमां कृतिम् ॥

येनैव रचितः श्रीमत्कार्तिकेयकथार्णवः ।
श्लोकानां सप्तशत्या च स्कान्दसारार्थबोधकः ॥

श्रीस्कन्दगिरिमाहात्म्यं महाशास्तृकथा वरा ।
ललितः शङ्करोदन्तः सेतुमाहात्म्यसंग्रहः ॥

आंजनेयचरित्रं च सहस्रश्लोकसम्मितम् ।
आंजनेयानुग्रहेण रचितं भक्तिवर्धकम् ॥

द्विसहस्राधिकैः पद्यैः दशाध्यायैश्च सम्मिता ।
श्रीगणेशकथा हृद्या निरमायि सतां मुदे ॥

अघोरवेंकटेशादि देवता प्रीतिवर्धनाः ।
स्तुतयो रचिता येन सज्जनप्रीतिवर्धकाः ॥

येन भारतसाम्राज्य साहाय्येन विनिर्मिता ।
कृतिः स्कन्दविमर्शख्या स्कान्दतत्वप्रबोधिनी ॥

यः प्रवक्ता च विदुषां विधेयो विनयास्पदम् ।
यज्जन्मभूः सितारण्यं रामायणपुरस्कृतम् ॥



कृति र्जीयादियं तस्य मुत्तुस्वामि शिरोमणेः ।
भुवनेशीपदाम्भोजयुगले सादरार्पिता ॥

த்ரிசிரப்பத்தனாவாஸீ க்யாத கௌசிக கோத்ரஜ:।
ஸ்ரீ நாகலக்ஷ்மீ ஸ்ரீ க்ருஷ்ண சாஸ்திரிவர்யதனூபவ:॥

முத்துஸ்வாம்யபித சாஸ்திரீ ஸ்காந்தாதிஷு க்ருதச்ரம:।
அகரோந் நியாயமீமாம்ஸா சிரோமணிரிமாம் க்ருதிம்॥

யேனைவ ரசித: ஸ்ரீ மத்கார்த்திகேய கதார்ணவ:।
ச்லோகானாம் ஸப்தசத்யா ச ஸ்காந்த ஸாரார்த்த போதக:॥

ஸ்ரீ ஸ்கந்தகிரி மாஹாத்ம்யம் மஹாசாஸ்த்ருகதா வரா।
லளித: சங்கரோதந்த: ஸேதுமாஹாத்ம்ய ஸங்க்ரஹ:॥

ஆஞ்சநேய சரித்ரம் ச ஸஹஸ்ர ச்லோக ஸம்மிதம்।
ஆஞ்சநேயானுக்ரஹேண ரசிதம் பக்திவர்த்தகம்:॥

த்விஸஹஸ்ராதிகை: பத்யைர் தசாத்யாயைச்ச ஸம்மிதா।
ஸ்ரீ கணேசகதா ஹ்ருத்யா நிரமாயி ஸதாம் முதே॥

அகோரவேங்கடேசாதி தேவதா ப்ரீதி வர்த்தநா:।
ஸ்துதயோ ரசிதா யேன ஸஜ்ஜன ப்ரீதி வர்த்தகா:॥

யேன பாரத ஸாம்ராஜ்ய ஸாஹாய்யேன விநிர்மிதா।
க்ருதி: ஸ்கந்தவிமர்சாக்யா ஸ்காந்த.தத்வப்ரபோதினீ॥

ய ப்ரவக்தா ச விதுஷாம் விதயோ வினயாஸ்பதம்।
யஜ்ஜன்மபூ: ஸிதாரண்யம் ராமாயண புரஸ்க்ரும்॥

க்ருதிர்ஜீயாதியம் தஸ்ய முத்துஸ்வாமி சிரோமணே:।
புவனேசீ பதாம்போஜ யுகளே ஸாதரார்பிதா॥

*உரை: திருச்சிராப்பள்ளியில் வசிக்கும் கௌசிக கோத்திரத்தினரும், ஸ்கந்த புராணாதிகளில் பெரும் பாடுபட்டவரும், நியாய மீமாம்ஸா சிரோமணியும், ஸ்ரீ நாகலக்ஷ்மி - ஸ்ரீ கிருஷ்ணசாஸ்திரிகளுடைய புதல்வருமான முத்துஸ்வாமி சாஸ்திரி இந்நூலை இயற்றினார்.*

இவர் எழுநூறு சுலோகங்களால் ஸ்காந்த ஸாரத்தையுணர்த்தும் "ஸ்ரீ கார்த்திகேய சுதார்ணவம்" என்ற நூலையும் ஸ்ரீ ஸ்கந்தகிரி மாஹாத்மியத்தையும் (இது சேலம் உடையாப்பட்டி ஸ்கந்தகிரியைப் பற்றியது) மஹா சாஸ்தா கதையையும் (மஹா சாஸ்தாவும் மணிகன்டரும் என்பது நூலின் பெயர்) எளிய நடையுடைய சங்கரோ தந்தத்தையும் (ஸ்ரீ குரு சங்கரோ தந்தம் என்பது இதன் பெயர்) ஸேது மாஹாத்மியச் சுருக்கத்தையும் (சிறப்புமிக்க சேதுஸ்தலம் என்பது இதன் பெயர்) இயற்றியுள்ளார். பக்தியூட்டும் 1,000 (ஆயிரம்) சுலோகங்கள் கொண்ட ஆஞ்சநேய சரித்திரத்தையும் ஆஞ்சநேயர் அருளால் இயற்றியுள்ளார். இரண்டாயிரத்துக்கும் அதிகமான சுலோகங்களும் 10 (பத்து) அத்தியாயங்களும் கொண்ட ஸ்ரீ கணேச கதை, அகோர வெங்கடேசாதி ஸ்துதிகள், பாரத ஸர்க்காரின் உதவியுடன் ஸ்காந்த தத்துவத்தை உணர்த்தும் ஸ்காந்த விமர்சம் என்ற வடமொழி நூலும் (The Evaluation of the conception of Skanda in Sanskrit Literature) எழுதியுள்ளார். பேச்சாளரும் வித்வான்களிடம் பரிவும் பணிவும் உள்ளவருமான இவர் ஜன்மபூமி திருவெண்காடு, ஸ்ரீ புவனேச்வரியின் திருவடித் தாமரைகளில் அன்புடன் அர்பணிக்கப்பட்ட முத்துஸ்வாமி சிரோமணியின் இந்நூல் வெற்றியுடன் விளங்கட்டும்.



உ

ஸ்ரீ மஹா கணபதி துணை

## சேந்தமங்கலம்

சீலம் மிக்க சேலம் மாவட்டத்திற்குப் பெருமை சேர்க்கும் நாமக்கல்லின் பக்கத்திலே உள்ளது "சேந்தமங்கலம்" என்ற ஊர். அதிலே ஞானக் குன்றாய் பிரகாசிக்கின்றது தத்தகிரி. ஸ்ரீ ஸத்குரு ஸ்வயம்ப்ரகாச அவதூத ஸ்வாமிகள் கர கமலங்களினால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ தத்தாத்ரேய மூர்த்தி இங்கு கோயில் கொண்டிருப்பதால் இதற்கு "தத்தகிரி" எனப் பெயர் வழங்கலாயிற்று. இது முன்பு சந்நியாசிக் கரடு எனப் பெயர் கொண்டிருந்தது என்பர் பெரியோர். ஸ்வயம்ப்ரகாச அவதூத ஸ்வாமிகள் இங்கு அமைத்த ஸ்ரீ தத்தாத்ரேயர் கோயிலே தமிழ்நாட்டில் முதன்முதலாக அமைத்த கோயில் என்றும் கூறுகின்றனர். இங்கே ஸத்குருநாதர் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச அவதூத ஸ்வாமிகளின் அதிஷ்டானமும் விளங்கிக் கொண்டிருக்கின்றது.

இப்போது தத்தகிரி தத்தாத்ரேயர் கோயிலிலேயே ப்ரணவப் பொருளும், ப்ரணவப் பொருள் உரைத்தவனும், முப்பத்து முக்கோடி தேவர்களின் சேனாதிபதியும், அறுபத்தாறு கோடி அவுணர்களை அழித்து ஒழித்து அமரர் அகங்களை மகிழச் செய்தவனும், வள்ளி தேவ ஸேனாதிபதியுமாகிய பகவான் திருமுருகன் இங்கு தண்டபாணி தெய்வமாய்க் காட்சி கொடுத்துக் கொண்டு திருவருள் பாலிக்கின்றான். இந்தத் தத்தகிரி பகவான் தத்தாத்ரேயர், தண்டபாணி இவர்கள் கோயில் கொண்டிருப்பதாலும், ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் பல அற்புதமான திவ்யத் திருப்பணிகளைச் செய்து கொண்டிருப்பதாலும் புதுப் பொலிவோடு, தனிப் பெருமையோடு மக்களின் கவனத்தைக் கவர்ந்து கொண்டிருக்கின்றது.

இந்தத் தத்தகிரியிலே ஸ்கந்தனை ப்ரதிஷ்டை செய்ததல்லாமல் கலியுகத்தில் கண்கண்ட தெய்வமான ஐயப்ப ஸ்வாமி, பக்தர்களின் பிரார்த்தனைகளை நிறைவேற்றி வைக்கும் பஞ்சமுக ஆஞ்சநேயர், தேவரிலே புகழ் மிக்க பஞ்சமுக (ஹேரம்ப) விநாயகர், சிரமங்கள் போக்கும் சனி பகவான், கருப்பண்ண ஸ்வாமி, கலி கல்மஷங்கள் நீக்கும் கங்கா தேவி, வன துர்க்கை, தக்ஷிணா மூர்த்தி," இடிம்பன்

முதலியவர்களுடைய விக்ரஹங்களை (மிக மிகப் பெரிய சிலையாக வடிக்கப் பெற்றவை) ப்ரதிஷ்டை செய்து, மஹா கும்பாபிஷேகமும் செய்து, 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற உறுதியுடன் தெய்வத் தொண்டும், சமயத் தொண்டும் செய்து வரும் ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்தாவதூத ஸ்வாமிகள் அவர்கள் அரும்பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அவர் அருள் நோக்குப்பட்ட இடம் வனமானாலும் வளப்பமிகு சோலையாகும். காடும் கரடுகளும் கலை கொழிக்கும் கலைக் கூடங்களாய் கோயில்களாய்த் திகழும். இதற்கெல்லாம் சேலம், உடையாப்பட்டி, ஸ்கந்தகிரி ஸ்கந்தாஸ்ரமமும், புதுக்கோட்டை புவனேச்வரீ அமர்ந்தருளும் அதிஷ்டானமும் சான்று கூறிக் கொண்டு, ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் திருப்பணித் திறனுக்கு ஜயஸ்தம்பங்களாய் விளங்குகின்றன. ஸ்ரீ ஸ்வாமிகளின் கர கமலங்களால் திருப்பணி தொடங்கி விட்டால் அது மேன்மேலும் வளரும். இது ஸ்வாமிகளின் கை ராசி.

**சேந்தமங்கலம்**

(இது ஸ்ரீ ராமர் சேர்ந்த மங்கலம் என்று பேசுகின்றது புராணம்)

இந்தச் சேர்ந்த மங்கலம் என்ற சிற்றூர் புராணங்கள் போற்றிப் புகழும் பெருமையை உடையதாகும். இதன் ஈசானத் திக்கிலே ஸ்ரீ சௌந்தர்ய நாயகி ஸமேதனாய்க் கோயில் கொண்டு அமர்ந்தருள்கின்றார் பகவான் ஸ்ரீ ஸோமேச்வரர். இங்குதான் "புண்ணாக்கு ஸித்தர்" என்ற மஹான் ஸமாதி அடைந்திருக்கின்றார் என்று கூறுவர் முதியோர்.

**பழைய பெயர் ஸோமபுரி**

இதற்குப் புராணம் கண்ட பெயர் ஸோமபுரி. இந்த ஸோமபுரியிலே உள்ள தீர்த்தத்திற்குப் பெயர் "அனாமயம்" என்பதாகும். முன்பொரு சமயம் குரு பகவானின் சாபத்தால் பெண் உருவம் பெற்ற ஸோமன் (சந்திரன்) இங்கு அந்தச் சாபம் நீங்கக் கடுந் தவம் இயற்றினான். இவன் தவத்திற்கு மனம் இரங்கி ஸ்ரீ வரதராஜப் பெருமாள், சந்திரனின் பெண் உருவை நீக்கி, ஆண் உருவம் பெறுமாறு வரம் அருளினார். மகிழ்ந்த சந்திரன் தன்னுடைய லோகத்திற்குச் செல்லும்போது தன்னுடைய பெயரால் இங்கொரு பட்டினத்தை நிர்மாணம் செய்து விட்டுச்



சென்றான். ஆகவே ஸோமனால் (சந்திரனால்) நிர்மாணம் செய்யப்பட்டதால் இவ்வூர் "ஸோமபுரி" எனப் பெயர் பெற்றது.

இந்த ஸோமபுரி ஜீவ வர்க்கத்திற்குத் தீவினைகளைப் போக்கி அருள் புரிந்த தலமாகும். இந்த ஸோமபுரியில் ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணர் என்ற திருநாமம் தாங்கி ஸ்ரீ பெருந்தேவீ (மஹாலக்ஷ்மீ) என்ற பிராட்டியாருடன் கோயில் கொண்டிருக்கின்றார். இதுவே பின் "சேந்தமங்கலம்" (ஸங்கமக்ராமம்) என்ற பெயர் பெற்றது. இதற்குப் புராணம் கூறும் வரலாற்றை இங்கே காண்போம்.

**சேர்ந்தமங்கலமே சேந்தமங்கலமாயிற்று**

முன்பொரு சமயம் ஸ்ரீ ராமர் பித்ரு வாக்ய பரிபாலனம் செய்வதற்காக, இளவல் இலக்குமணனுடனும் சீதாப் பிராட்டியாருடனும் தண்டகாரண்யத்தில் வசித்து வந்தார். அவ்வாறு ஸ்ரீ ராமர் தண்டகாரண்யத்தில், பஞ்சவடியிலே (ஐந்து ஆலமரங்கள் உள்ள இடம்) தங்கி இருக்கும்போது, ராவணன் ஸீதா பிராட்டியை அபஹரித்துச் சென்றான். ஸ்ரீ ராமர் ஸீதையைத் தேடிக் கொண்டு வரும்போது இங்குள்ள ஸ்ரீ வரதராஜப் பெருமாளை வணங்கி வழிபட்டார். அவருடைய திருவருளால் கிடைத்தற்கு அரிய பல திவ்ய ஆயுதங்களைப் பெற்றார். பெருமாளின் திருவாக்கின்படி ருச்யமுக பர்வதத்தில் இருக்கும் சுக்ரீவனை சினேகம் செய்து கொண்டார். பின் கோடிக் கணக்கான வானர வீரர்கள் புடைசூழ ராமேச்வரம் சென்று கடலில் அணை அமைத்து, வானர சேனையுடன் இலங்கை சென்று ராவணனை வதைத்து, சீதையை மீட்டுக் கொண்டு மீண்டும் அயோத்திக்குத் திரும்பச் செல்லும் வழியிலே இங்கு வந்து வரதராஜப் பெருமாளைச் சேவித்தார். அன்று முதல் ஸ்ரீ ராமர் திரும்ப வந்து சேர்ந்த இடமான இந்த ஸோமபுரி ஸ்ரீ ராமர் சேர்ந்த மங்கலம் ஆயிற்று. ஸ்ரீ ராமர் இங்கு வந்து சேர்ந்ததால் சேர்ந்தபுரி என்பது மருவி, சேந்தபுரியாகி இப்போது சேந்தமங்கலம் ஆகி விட்டது.

**நயினார் மலை**

இந்த சேந்தமங்கலத்திற்கு எல்லைகளாக, கொல்லி மலையும் நாமகிரியும், நயினார் மலையும், ஸ்ரீ ஸஞ்ஜீவிப் பெருமாள் கோயிலும்

உள்ளன. இங்கு முன்பு ஸ்ரீ ராமர், வரதராஜப் பெருமாளை வழிபட்டார் எனக் கூறினோம். அந்த வரதராஜப் பெருமாள் கோயில் கொண்ட இடமே நயினார் மலையாகும். இது சேந்தமங்கலத்திற்குப் பக்கத்தில் இருக்கின்றது. இதனையும் உள்ளடக்கிக் கொண்டதே சேந்தமங்கலம். நயினார் மலை மஹாமேரு பர்வதத்தின் சிகரமாகும். இது தெய்வத் தன்மை கொண்டது. இதற்கு ஒரு ஐதிஹ்யம் பேசுகின்றது புராணம்.

த்ரேதா யுகத்தில் ப்ரஹ்ம சபையில் முப்பத்து முக்கோடி தேவரும் ஒன்றுகூடி அமர்ந்திருந்த போது, தேவரில் யார் பலம் மிக்கவர் என்ற சர்ச்சை ஏற்பட்டது. பலர் வாயுவைப் புகழ்ந்தனர். வேறு சிலர் ஆதிசேஷனைப் பாராட்டினர். ஆயினும் ஆயிரம் சிரங்களிலே ஒரு சிரத்தால் இப் பூமண்டலத்தைப் பூப் போலத் தாங்கும் ஆதிசேஷனே பலம் மிக்கவன் என்ற தீர்ப்பைக் கூறினார் ப்ரஹ்ம தேவர். இதனால் கோபம் அடைந்த வாயு பகவான் ''நான் மஹா மேருவின் சிகரங்களை எடுத்து வீசுகிறேன். ஆதிசேஷன் அந்தச் சிகரங்களைத் தன் உடலால் சுற்றி வளைத்து தடுத்து நிறுத்தி விட்டால் தாங்கள் கூறிய தீர்ப்பை ஏற்றுக் கொள்கிறேன்'' என்று சவால் விட்டான்.

உடன் தேவர்கள் முன்னிலையில் ஆதிசேஷன் மஹா மேரு மலையின் பல சிகரங்களைத் தன்னுடலால் பற்றி இறுக்கிக் கொள்ள, வாயு எவ்வளவு பலமாக இழுத்தும் சிகரங்களை அப்புறப்படுத்த முடியாமல் போய்விட்டது. இதனால் கோபம் அடைந்த வாயு உக்கிரமடைய கடல்கள் வற்றின. பல ஜீவராசிகள் மரணம் எய்தின. இது கண்டு பயந்த தேவர்கள், ப்ரஹ்மாவிடம் முறையிட, ப்ரஹ்மா ஆதிசேஷனிடம் வந்து சிகரங்கள் சிலவற்றைத் தளர்த்திடுமாறு கேட்டுக் கொண்டார்.

ஆதிசேஷனும் அவ்வாறே செய்ய, வாயு அதில் ஐந்து சிகரங்களை வாரி எறிந்தான். அதிலே இந்த நயினாசலமும் ஒன்று. மற்றொன்று வேங்கடாசலம். மற்றைய மூன்று சிகரங்களே த்ரிகூடாசலம் என்ற பெயருடன் இலங்கையில் விழுந்தன. ஆகவே மேரு மலையின் சிகரங்களானதால் நயினார்மலை தெய்வத் தன்மை உடையதாகும். இம் மலைக்கு இந்திராசலம், நயினாசலம், பத்மாசலம், யாதவாசலம் முதலிய பல பெயர்களும் விளங்குகின்றன. கலியுகத்தில் நேத்ரபாதன் என்ற மன்னன் பூஜித்து முக்தி பெற்றதால் நயினாசலம் என்ற பெயர் பெற்றது.



**கொல்லி மலை**

இக் கொல்லி மலையே ஸ்ரீமத் ராமாயணத்தில் சுக்ரீவன் மறைந்து வாழ்ந்த ருச்யமுக பர்வதம் என்று கூறுகின்றது புராணம். இக் கொல்லி மலையிலே வானரர் அரசனும், சுக்ரீவன் தமையனுமான வாலி பஞ்ச லிங்கங்களை ஸ்தாபித்து வழிபட்டான் என்று பிரம்மாண்ட புராணம் பகருகின்றது.

இம் மலையின் முன்பு இறந்தோரை மீண்டும் பிழைக்க வைக்கும் ஸஞ்ஜீவி ஓஷதிகள் நிறைந்திருந்தனவாம். கலியுகத்தில் அந்த ஓஷதியை அனைவரும் பயன்படுத்தக் கூடாது என்று எண்ணிய தேவர்கள், இம் மலையைத் தலைகீழாய்க் கவிழ்த்து விட்டனர். ஆகவே முன்பு அமிர்தம் உள்ள இடத்தில் இப்போது விஷம் (விஷமுள்ள ஓஷதிகள்) இருப்பதால் இதைக் கொல்லி மலை என்று கூறுகின்றனர்.

இக் கொல்லி மலையில் கரிகால் சோழன் ஒரு சமயம் ஒளிந்து வாழ்ந்தான். அவனைக் காப்பாற்ற அங்கிருந்த யோகிகளும் சித்தர்களும் ஒரு பெண்ணுருக் கொண்ட இயந்திரப் பதுமையைச் செய்தனர். அதைப் பார்த்தால் உண்மையான பெண்ணாகவே தோன்றும். அதைத் தொட்டால் போதும். அதன் வயிற்றில் இருந்து ஒரு கூரிய கத்தி வெளிப்பட்டு, தொட்டவரைக் குத்திக் கொலை செய்து விடும். இதனால் கரிகால் சோழனின் சத்ருக்களின் பல ஒற்றர்கள் அழிந்தனர். ஆகவே அப்பதுமைக்குக் கொல்லியம் பாவை என்ற பெயர் ஏற்பட்டது. கொல்லியம்பாவை இருந்த மலையும் கொல்லி மலை எனப் பெயர் பெற்றது (செய்தி கல்கியின் மோஹினித் தீவு). இந்தக் கொல்லி மலையும் சேந்தமங்கலத்தைச் சேர்ந்த பகுதி என்பதால் அதன் வரலாறு இங்குக் கொடுக்கப்பட்டது.

**நாமகிரி**

இச் சேந்தமங்கலத்திற்குப் பக்கத்தில் உள்ளது நாமகிரி. இந்த நாமாசலத்தில் ஸ்ரீ நரஸிம்ஹப் பெருமாளையும், ஸ்ரீ நாமகிரிப் பிராட்டியையும் கண்டு, வானளாவிய விசுவரூபத்துடன் காட்சி கொடுக்கும் ஸ்ரீமத் ஆஞ்சநேயரையும் வழிபடும் பாக்கியம் இங்கு வரும் பக்தர்களுக்குக் கிடைக்கின்றது.

# அவதூதர் பரம்பரை

### ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர ஸ்வாமிகள்

இந்த ஸ்ரீ தத்தாத்ரேய பகவானை தத்தகிரியிலே ப்ரதிஷ்டை செய்த மஹான் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர அவதூத ஸ்வாமிகள் ஆவார். இம் மஹான் அனைத்துக் குணங்களாலும் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர அவதூத ஸ்வாமிகளுக்கு ஸமமானவர். தென்னாடு பெற்ற ஞானியர்களின் குலத் திலகம். யோக சாஸ்திரங்களின் மர்மங்களைக் கண்ட மாமேதை. அலை அடிக்காத ஞானக் கடல். ஞானக் குன்று. எளிமையான தோற்றமும், பொன்னையும் பொருளையும் துச்சமாக மதிக்கும் எண்ணமும் கொண்ட யதி சிரேஷ்டர். இவர் வரலாறு முழுவதையும் ஏடுகளின் எழுத்துக்களின் வடிக்க இயலாது. குறிப்பு மட்டும் காண்போம்.

பெண்ணை நதியின் பக்கத்திலே உள்ள கல்பட்டிலே ஸ்ரீவத்ஸ கோத்திரத்தினராகிய ஸ்ரீ ராம ஸ்வாமி சாஸ்திரிகளுக்கும், ஸ்ரீமதி ஜானகி அம்மாளுக்கும் புத்திரராக அவதரித்தவர். கீதாசாரியனின் பெயரைத் தாங்கித் திகழ்ந்தவர். இவரைக் கிருஷ்ண மூர்த்தி என்றே அனைவரும் அழைத்தனர். இவர் சோழ வள நாட்டில் கும்பகோணத்தில் மாபெரும் மேதையும், நவீன காளிதாஸ் என்று புகழ் பெற்றவருமான பட்ட ஸ்ரீ நாராயண சாஸ்திரிகளிடம் ஸம்ஸ்க்ருதம் பயின்ற பாக்யசாலி. ஆங்கிலமும் கற்றவர். ஆசிரியராகவும், அரசாங்க வேலை பெற்றவராயும் வாழ்ந்தவர்.

ஆத்மாராமராக இருக்க எண்ணம் கொண்ட இவர், மானா மதுரையிலே அவதூத குலத்தின் மணிவிளக்கான ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளைக் கண்டார். அவரிடம் உபதேசம் பெற்று அவருக்கு அடிமை ஆனார். அவருடன் பொதிகை மலை சென்று தங்கி, சில ஆண்டுகள் சென்ற பின்னர் சேந்தமங்கலம் வந்தடைந்தார். அங்கு குஹாலயம் அமைத்து தியான ஸமாதியிலேயே லயித்திருந்தார். இன்றும் சேந்தமங்கலம் தத்தகிரியில் இந்த குஹாலயத்தைக் காண்கிறோம்.

இவர் குகையில் பூட்டப்பட்டு ஸமாதியிலே இருந்த போது இவரை வெளியிலும் உள்ளேயும் கண்டு அதிசயம் அடைந்திருக்கின்றனர் பலர். இது ஒருவிதமான ஞானிகளின் சித் விளையாட்டு.



இம் மஹான் சேது முதற்கொண்டு ஹிமாசலம் வரையில் பிரயாணம் செய்து தம் பாத தூளியினாலேயே பாரத தேசத்தைப் பவித்ரம் ஆக்கியவர். மீண்டும் வந்து சேந்தமங்கலத்தில் தத்தகிரியில் ஸ்ரீ தத்தாத்ரேய பகவானை ப்ரதிஷ்டை செய்தார்கள். இவருக்குப் பல பாக்யசாலிகள் சிஷ்யர்களாய் அமைந்தனர். அவர்களுக்குள்ளே கிடைத்த மாணிக்கம் நமது ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் ஆவார்.

ஒரு ஸமயம் புதுக்கோட்டை வாசிகள் சேந்தமங்கலம் சென்று, புதுக்கோட்டையில் ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் (ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள்) ஸமாதியான இடம் எங்கே இருக்கின்றது என்று அறிந்து கொள்ள இவரிடம் விண்ணப்பித்தனர். ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகள், ஸ்ரீ சங்கரானந்த ஸ்வாமிகள் அவர்களின் மூலமாக இதைக் குறித்துக் காட்டி அருளினார்கள். உடன் இங்கு ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் அவர்களின் அதிஷ்டானத்தில் லிங்க ப்ரதிஷ்டை செய்து 31.5.1936ல் கும்பாபிஷேகம் நடந்தபோது ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகள் அங்கு வருகை தந்து, அனைவருக்கும் அருள் வழங்கினார்கள். பின் சேந்தமங்கலம் வந்தமர்ந்திருந்தனர்.

இந்த ஜட்ஜ் ஸ்வாமிகளின் அதிஷ்டானம் பாரத தேசத்தில் சிறப்புற்று விளங்க அன்னை ஸ்ரீ புவனேச்வரீயின் திருவருள் நமக்கு எல்லாம் கிடைக்க தன் சிடர்களுக்குள் சிறந்த ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமி அவர்களை புதுக்கோட்டைக்கு அனுப்பி அருளினார்கள். இந்த ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகள் 29.12.1948ல் மஹா சமாதி அடைந்து தத்தகிரியிலேயே இன்று ஜ்யோதிர்மயமாய் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

உ

# ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி

மஹா மேரு மலை பொன்மயமானது. அதற்குப் பல சிகரங்கள் உண்டு. அன்னைப் பராசக்தியும் மற்றுமுள்ள தேவர்களும் வாஸம் செய்யும் பெருமையும் அம் மலைக்கு உண்டு. அம் மஹா மேரு மலையின் வட திசையில் ஞானமயமாய்ப் பிரகாசிக்கின்றது கைலாயம் என்னும் ஒரு வெள்ளி மலை. இம் மலையில் இடைவிடாது ருக், யஜுஸ், ஸாம, அதர்வம் என்ற வேதங்களும் கந்தர்வர், நாரதர், தும்புரு முதலியவர்களும் இசைக்கும் இன்னிசையும் ஒலிப்பதால் இதற்குக் கைலாஸம் என்ற பெயர் ஏற்பட்டது.

இவ்வாறான ஞானமயமான கைலாஸத்திலே மிகப் பெரிய ஓர் ஆல மரம் வளர்ந்து பரந்து விளங்குகின்றது. இம் மரத்தின் அடியில் மோக்ஷத்தை விரும்பும் மஹாத்மாக்கள் பலர் வாஸம் செய்கின்றனர். இந்த ஆல மரம் நூறு யோஜனை உயரமும் நூற்று ஐம்பது யோஜனை அகலமும் கொண்ட நிர்மலமான நிழலைக் கொடுத்துக் கொண்டு காட்சி அளிக்கின்றது. இந்த ஆலமரத்தை கல்லாலமரம் என்று பேசுகின்றனர் பெரியோர். "கல்லாலின் புடையமர்ந்து" என்ற பாடலிலே இவ்வாலமரம் கல்லால் என்று குறிப்பிடப்படுகின்றது. ஆல மரங்கள் பெரும்பாலும் விழுதுகள் நிறைந்தவையாகவே இருக்கும். சில ஆல மரங்களில் விழுதுகள் இருக்காது. அவ்வாறு விழுதுகள் இல்லாத ஆல மரமே கல்லால் என வர்ணிக்கப்படுகின்றது. இக் கயிலையில் உள்ள ஆலமரம் விழுதுகள் இல்லாதது எனத் தெரிகின்றது. மரங்களிலே ஆல மரத்திற்கு ஒரு பெருமை உண்டு. இதன் அடியிலே அமர்ந்து பகவான் கண்ணுதற் கடவுள் ஞானோபதேசம் செய்கின்றார். இவ்வாறே பகவான் மஹா விஷ்ணுவும் பிரளய காலத்தில் இதன் இலையிலே பள்ளி கொண்டு அருளினார். ஆகவே சிவன் விஷ்ணு இவர்களுக்கு இடம் அளித்த மஹிமை இதற்குக் கிடைத்திருக்கின்றது.

இந்தக் கல்லால மரத்தின் அடியில்தான் பகவான் பரமேச்வரர் தக்ஷிணா மூர்த்தியாய் குருவாய் ஆசார்யனாய் அமர்ந்து ஸனகாதியருக்கு ஞானோபதேசம் அருளினார். ஆகவே ஆல மரத்தடியில் அமர்ந்து ஞானோபதேசம் செய்ததால் பகவான் பரமேச்வரனுக்கு, ஆலமர் கடவுள் என்ற பெயரும் ஏற்பட்டது.



பகவான் பரமேச்வரனுடைய மூர்த்திகள் இருபத்தைந்து என ஆகமங்கள் பேசும். அவைகள் பின்வருமாறு.

1. லிங்கோத்பவ மூர்த்தி
2. ஸுகாஸன மூர்த்தி
3. உமாமஹேச்வர மூர்த்தி
4. கல்யாணஸுந்தர மூர்த்தி
5. அர்த்தநாரீச்வர மூர்த்தி
6. ஸோமாஸ்கந்த மூர்த்தி
7. சக்ரப்ரத மூர்த்தி
8. த்ரிமூர்த்தி
9. சங்கர நாராயண மூர்த்தி
10. தக்ஷிணா மூர்த்தி
11. பிக்ஷாடன மூர்த்தி
12. கங்காள மூர்த்தி
13. காமஸம்ஹார மூர்த்தி
14. காலஸம்ஹார மூர்த்தி
15. ஜலந்தரஸம்ஹார மூர்த்தி
16. த்ரிபுரஸம்ஹார மூர்த்தி
17. சரப மூர்த்தி
18. காலகூடபக்ஷண மூர்த்தி (நீலகண்டர்)
19. த்ரிபாத மூர்த்தி
20. அஜைகபாத மூர்த்தி
21. பைரவ மூர்த்தி
22. வ்ருஷபாரூட மூர்த்தி
23. சந்த்ரசேகர மூர்த்தி
24. ஆனந்தத் தாண்டவ மூர்த்தி
25. கங்காதர மூர்த்தி

என்பன என்று ஸ்கந்த புராணம் கூறும். இதில் பத்தாவது மூர்த்தியாகக் கூறப்பட்டதே தக்ஷிணா மூர்த்தியாகும்.

தக்ஷிணா மூர்த்தியின் ஸ்வரூபத்தை ஸ்காந்தம் வர்ணித்திருக்கின்றது. இவர் தென்திசை நோக்கி அமர்ந்திருப்பார். அதனால்தான் தக்ஷிணா மூர்த்தி என்ற பெயரே ஏற்பட்டது. இவர் புலித்தோல் விரிக்கப்பட்ட அழகிய ஆசனத்திலே அஞ்ஞானத்தின்மீது வலது காலை ஊன்றி மிதித்துக் கொண்டும், வலது கால் மீது இடது காலை மடக்கி வைத்துக் கொண்டும் (அதாவது கால்மேல் கால் போட்டுக் கொண்டு) அமர்ந்திருப்பார். இதற்கு வீராஸனம் என்று பெயர். சுத்தமான பளிங்கு நிறம் கொண்ட தேஹம். சந்திர கலை தரித்த சடைமுடி. மூன்று கண்கள், நான்கு கரங்கள் கொண்டு பிரகாசிப்பார்.

இவர் சர்யா க்ரியா யோகம் இவற்றில் தேர்ந்தவர்களான ஸனக, ஸனந்தன, ஸனத்குமார, ஸனத்ஸுஜாதீயர் முதலியவர்களுக்கு வேத ஸாரமான உபநிஷத்துக்களின் தத்வமான ப்ரஹ்ம வித்யையை, மௌனியாய், அதாவது உரை நிகழ்த்தாமல், முக மண்டலத்தில் இள நகை தோன்ற சின்முத்ரையினால் உணர்த்தி அருளுவார். பசுபதிபாச விளக்கமும் தந்தருளுவார் என்பர் சைவர். சிஷ்யர்கள் அனைவரும் ஐயம் அற்றவராய் ஞானம் வரப் பெறுவர். ஐயன் கடாக்ஷ வீக்ஷணம் பெற்றவர்க்கு அஞ்ஞானம் சூரியனைக் கண்ட பனி போல அழியும். இந்த அழகிய பாடல் இதனை சுட்டிக் காட்டுகின்றது.

கல்லாலின் புடையமர்ந்து
நான்மறை முகற்கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும்
வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லா மாயல்லது மாய்
இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி
சொல்லாமல் சொன்னவரை
நினையாமல் நினைத்து பவத் தொடக்கை வெல்வாம்

*தக்ஷிணா மூர்த்தி ஸ்வரூபங்கள்*

ஞான தக்ஷிணா மூர்த்தி, ஸம்ஹார தக்ஷிணா மூர்த்தி, லகுட தக்ஷிணா மூர்த்தி, யோக தக்ஷிணா மூர்த்தி, மேதா தக்ஷிணா மூர்த்தி, ஸாம்ப தக்ஷிணா மூர்த்தி என பலவிதத் தக்ஷிணா மூர்த்திகளின் ஸ்வரூபங்களை வர்ணிக்கின்றன மந்த்ர சாஸ்த்ரங்கள்.

1. *ஞான தக்ஷிணா மூர்த்தி:* ஞான முத்ரை, பரசு, மான் இவற்றை மூன்று கைகளில் கொண்டு, ஒரு கரத்தை முழங்காலின் மீது வைத்திருப்பார். இடுப்பிலே பாம்பை அணிந்திருப்பார். சந்திரசேகரர், சடைமுடி, வெள்ளை நிறம், முக்கண், சுகாதி முனிகள் சூழ ஆல மரத்தடியில் வீற்றிருப்பார்.

2. *ஸம்ஹார தக்ஷிணா மூர்த்தி:* புஸ்தகம், அக்ஷமாலை, அக்னி வ்யாக்யான முத்ரை இவைகளைத் தாங்கும் கரத்தினராய் அனைத்துத் தேவர்களுக்கும் ஆசிரியனாய்க் காட்சி கொடுப்பார்.

3. *லகுட (ஹம்ஸ) தக்ஷிணா மூர்த்தி:* இடது கையில் தண்டம், வலது கையில் ஞான முத்ரை (அல்லது புஸ்தகம்), பொன்னிற மேனி, சடை, சந்திர பூஷணம், ஸர்வாபரணம், புலித் தோலாடை இவைகளைக் கொண்டு சுகாதி முனிவர் சூழ ஹம்ஸர் எனப் பெயர் கொண்டு வீராஸனத்தில் வீற்றிருப்பார்.

4. *மேதா தக்ஷிணா மூர்த்தி:* வெண்ணிறத்தினர், சந்திரசேகரர், ஞானமுத்ரை, அக்ஷமாலை, வீணை, புத்தகம் விளங்கும் கரத்தினர், யோக பட்டம் அணிந்தவர், பாம்பும், யானைத் தோலும் உடையவர், முனிவர் புடைசூழ வீற்றிருப்பார்.



5. *ஸாம்ப தக்ஷிணா மூர்த்தி:* இடது மடியில் கௌரீ தேவி அமர்ந்திருப்பாள், புஸ்தகம், சுதாகும்பம், ஞானமுத்ரை, அக்ஷ மாலை (முத்து மயம்) இவைகளைத் தரிக்கும் கரகமலமுடையவர். லக்ஷ்மீ (சக்தி), தக்ஷிணா மூர்த்தி, விரத தக்ஷிணா மூர்த்தி, கான தக்ஷிணா மூர்த்தி, ஞான தக்ஷிணா மூர்த்தி, யோக தக்ஷிணா மூர்த்தி என இன்னும் பல மூர்த்திகளும் உண்டு விரிவை மந்தி சாஸ்திர நூல்களின் மூலம் அறிந்து கொள்க.

குரு மூர்த்தி

இந்தத் தக்ஷிணா மூர்த்தி வேதாந்த ரஹஸ்யத்தை உபதேசிப்பதால் இவரைக் குருமூர்த்தி என்று அழைக்கின்றனர். பகவான் பரமசிவனே ஆதிகுரு, அமர மூர்த்தி, ஆசார்யனாய்த் திகழ்ந்து அஞ்ஞானத்தை ஓட்டி ஞான ஒளி வழங்கியவர். உள்ளிருள் அஞ்ஞானத்தைப் போக்கும் திறன் ஆசார்யனுக்கு மட்டுமே உண்டு. ஆயிரம் சூர்யர்களும் பதினாயிரம் சந்திரர்களும் ஒருமிக்க உதித்தாலும் உள்ளிருள் போகாது. தாய் தந்தையர் பஞ்ச பூத மயமான சரீரத்தைக் கொடுக்கின்றனர். ஆசார்யன் ஞான மயமாய் செய்து விடுகின்றான். அதனால்தான் தாய், தந்தை, ஆசார்யன் இவர்களைத் தெய்வமாகக் கொள். மாத்ருதேவோ பவ, பித்ருதேவோ பவ, ஆசார்யதேவோ பவ என்று கட்டளை இடுகின்றன வேத வாக்யங்கள்.

ஆசார்யனுக்கு உள்ள பெருமை வேறு யார்க்கும் கிடையாது என்றே கூறலாம். ஆசார்யன் ஈடற்றவர். தனக்கு உவமை காட்ட முடியாத பெருமை படைத்தவர். ஆசார்யனுக்கு ஆசார்யன்தான் ஸமம். ஞானியான ஆசார்யன் தன்னை வந்தடைந்த சிஷ்யனுக்கு உபதேசம் செய்து அவனையும் தன்னைப் போன்ற ஞானியாகவே ஆக்கி விடுகின்றான். இப் பெருமை வேறு இடத்தில் இல்லை. ஆதி சங்கர பகவத் பாதர் அவர்கள் தன்னுடைய சுதசுலோகி என்ற நூலில் குருவின் பெருமையை மிக அழகாக எடுத்து உரைக்கின்றார்கள். அதில் ஆசார்யனுக்கு வேறொன்றை உவமையாகக் காட்ட முடியாது என்று அழுத்தமாக உணர்த்தி இருக்கின்றார்கள்.

ஸ்பர்ச மணி என்று ஒன்று உண்டு. தன் பக்கத்திலே சேரும் இரும்பைத் தங்கமாக ஆக்கும் சக்தி படைத்தது. அந்த ஸ்பர்ச மணி போல் ஆசிரியன் தன் உபதேசத்தினாலே அஞ்ஞானம் படைத்தவர்களையும் ஞானிகளாய் ஆக்கி விடுகின்றார். ஆகவே

ஆசார்யனுக்கு ஸ்பர்ச மணியை த்ருஷ்டாந்தமாக் கொள்ளலாமே என்று தோன்றுகிறதல்லவா! இது பொருத்தமற்றது.

ஸ்பர்ச மணியின் சம்பந்தத்தால் இரும்பு தங்கமாகும். அந்தத் தங்கத்தின் (முன் இரும்பாய் இருந்ததன்) ஸம்பந்தத்தால் மற்றொரு இரும்பு தங்கமாகாது. அதற்கு அந்த சக்தி கிடையாது. ஆனால் ஆசிரியன் தன் மாணவனைத் தன்னைப் போன்ற ஞானி ஆக்குகின்றான். ஞானியான அம்மாணவனும் தன்னை அடைந்தவனை ஞானியாக ஆக்குகின்றான். ஆகவே ஆசார்யன் ஒப்பற்றவன் எனக் கூறி இருக்கின்றார்.

பகவான் தக்ஷிணா மூர்த்தி குரு மூர்த்தியாக கல்லால மரத்தின் அடியில் அமர்ந்து ஸகன, ஸனந்தன, ஸனத்குமார, ஸனத்ஸுஜாதியர்களுக்கு உபநிஷத் தத்வமான ஜீவ ப்ரஹ்ம ஐக்யத்தை உபதேசிக்கின்றார் என்பர் அத்வைதிகள்.

அங்குஷ்ட தர்ஜனீயோக முத்ராவ்யாஜேன தேஹினாம்।
ச்ருத்யர்தம் ப்ரஹ்ம ஜீவைக்யம் தர்சன்னோவதாத் சிவ:॥

என்பது தக்ஷிணா மூர்த்தி ஸ்தோத்ரம்.

இவர் தென்திசை நோக்கி அமர்ந்திருப்பது ஞானிகளுக்கு யம பயம் கிடையாது என்பதைக் குறிக்கின்றது. புஸ்தகம், ப்ரபஞ்சம் அனித்யம், ப்ரஹ்ம ஸத்யம் என்பதை உணர்த்துகின்றது. ருத்ராக்ஷ மாலை ப்ரபஞ்சம் அனித்யம் என்பதை ப்ரத்யக்ஷமாய்க் காட்டுகின்றது. த்ரிகுணாத்மகமான மாயையில் இருந்து விலகிய ஜீவன் ப்ரஹ்ம பாவத்தை அடைகிறான் என்பதை நீட்டிய மூன்று விரல்களும், சின்முத்ரையும் சுட்டிக் காட்டுகிறது. அமிர்தக் கலசம் ஞானிகளுக்கு அமரத்துவத்தைத் தெரிவிக்கிறது.

த்யானம்

வடவிடபிஸமீபே பூமிபாகே நிஷண்ணம்
ஸகல முனிஜனானாம் ஞானதாதாரம் ஆராத்।
த்ரிபுவன குருமீசம் தக்ஷிணாமூர்த்தி தேவம்
ஜனன மரண துக்கச்சேத தக்ஷம் நமாமி॥

இவரை வழிபட்ட ஞானம் பெற்றுய்வோமாக.

இங்கு (தத்தகிரியில்) பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள தக்ஷிணா மூர்த்தி சிலையின் உயரம் $7^1/_2$ அடிகள்.



# சிரமங்கள் போக்கும் சனி பகவான்

காகத்வஜாய வித்மஹே கட்க ஹஸ்தாய தீமஹி
தன்னோ மந்தஃப்ரசோதயாத் (காயத்ரீ)

த்யானம்

க்ருஷ்ணாம்பரதரம் தேவம் த்விபுஜம் க்ரத்ர ஸம்ஸ்திதம்
ஸர்வபீடாஹரம் ந்ருணாம் த்யாயேத் க்ரஹகணோத்தமம்

கருநிற ஆடையும் இரு கரங்களும் கொண்டு கழுகு வாகனத்தில் அமர்ந்து, மனிதர்களின் கஷ்டங்கள் அனைத்தையும் போக்குபவராக கிரஹங்களில் சிறந்த சனி பகவானைத் தியானிக்க வேண்டும்.

ஜீவர்களுடைய சுக, துக்கானுபவத்திற்கு மூல காரணமாக இருப்பவர்கள் நவ க்ரஹங்களாவர். சுக, துக்கானுபவத்திற்கு நம்மை அவர்கள் அழைத்துச் செல்வதால் அவர்களுக்கு க்ரஹங்கள் எனப் பெயர் வந்தது. ஆகவே க்ரஹங்கள் நன்மையும் செய்வர். தீமையும் புரிவர். அவரவர்களின் புண்ய பாபத்திற்கு ஏற்றவாறு என்பர் பெரியோர்.

இந்த க்ரஹங்களில் சூரிய பகவானுக்கும், சாயா தேவிக்கும் புத்ரனாய்ப் பிறந்த சனைச்வரர் மிகவும் சக்தி வாய்ந்தவர். சனைச்வர பகவானுக்குப் பிறப்பிடம் ஸௌராஷ்ட்ர தேசம். நீல நிறத்தினை உடையவர். காச்யப கோத்ரம். மேற்கு நோக்கிய முகத்தினராய் விளங்குவார். வில், அம்பு, சூலம், கதை முதலியவை இவருடைய ஆயுதங்கள். இவர் காகக் கொடியினர். கழுகு இவர் வாஹனம். கிரீடம், கேயூரம், ஹாரம் முதலிய அணிகளால் அலங்கரிக்கப்பட்டவர். இவர் பன்னிரெண்டு, எட்டு, ஜன்ம ஸ்தானங்களில் வந்தால் சிரமம் அளிப்பார் என்பர் தைவஞ்ஞர்.

யமன், வைவஸ்வதமனு, யமுனா, ஸாவர்ணி மனு, பத்ரா முதலியவர்கள் இவருடைய ஸஹோதரர்கள் ஆவர். இவருக்கு அதி தேவதை யமன், ப்ரத்யதி தேவதை ப்ரஹ்மா, இவர் மனைவி நீலா, மந்தா என்ற இரு மனைவியர் இவருக்கு உண்டு என்று கூறுவாறும் உள்ளனர். சனைச்வரனின் புதல்வன் குளிகன். குளிக காலத்தில் சுப காரியம் செய்தால் வ்ருத்தி அடையும். அசுப காரியம் செய்யக் கூடாது என்பது பழக்கத்தில் இருக்கின்றது.

சனி பகவான் விச்வகர்மாவின் மகளை மணந்து கொண்டார். அவளை சரியாக நடத்தாத காரணத்தினால் அவள் "நீ பார்க்கும் பொருள் கருகிப் போகட்டும்" என்று சபித்து விட்டாள். சனி அவளிடம் சாப மோக்ஷம் வேண்ட அவள், "நீ சிவபூஜை செய்ய சாபம் நீங்கும்" என்றாள். சனி பகவான் சிவ பூஜை செய்து சாப மோக்ஷம் பெற்றான். அதனால் சனி ப்ரதோஷம் சிறப்புடையது என்பர்.

இவர் ஒரு ராசியில் இருந்து மற்றொரு ராசிக்குச் செல்ல இரண்டரை ஆண்டுகள் ஆவதால் இவரை சனைச்சரன் என்று அழைக்கின்றனர். "சனைச்சரர்" என்றால் மெதுவாகச் செல்கின்றவர் என்பது பொருள். இவர் தன்னை வழிபடுபவர்களுக்கு நன்மை அளிப்பார். நல்ல ஸ்தானங்களில் இவர் அமைந்திருந்தால் ராஜ்ய லாபமே கிடைக்கும்.

### இவரால் நேரும் பீடைகள்

இவரால் பீடை உண்டாகாமல் இருக்க புராணங்களில் சில வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. ஒன்று நள மஹாராஜாவின் சரிதத்தைக் கேட்பது. நள சரிதம் கேட்போருக்கு சனி பீடை ஏற்படாது. அவ்வாறே ஸ்ரீ ஆஞ்சநேயரை பக்தியுடன் வழிபடுவோருக்கும் சனி பீடை ஏற்படாது என்பர். அவ்வாறே தசரத சக்ரவர்த்தி செய்த சனைச்சர ஸ்தோத்திரத்தைப் பக்தியுடன் பாராயணம் செய்வோருக்கு சனைச்வரர் தொல்லைகள் கொடுக்க மாட்டார். நன்மையே புரிவார்.

### தசரதரும் அவர் செய்த துதியும்

தசரதர் சனி பகவானைத் துதித்ததற்கான காரணத்தை கைலயங்கிரி அமர்ந்த கண்ணுதற் கடவுள் அன்னை பார்வதீ தேவிக்குக் கூற, அதை சூத புராணிகள் உலகிற்கு அறிவித்தார். அந்த வரலாறு இது.

புகழ் பெற்ற ரகு வம்சத்திலே உதித்த தசரத சக்ரவர்த்தியை அறியாதார் இல்லை. ஸத்யஸந்தனும் தர்மாத்மாவுமான ஸ்ரீ ராமரைப் பெற்ற பாக்யசாலியாயிற்றே அவர். தசரதர் ஏழு த்வீபங்களுக்கும் அதிபதி. நல்ல பராக்ரமசாலி.

ஒரு சமயம் கிருத்திகையை விட்டு, சனி பகவான் ரோஹிணீ சகடம் பேதித்துச் செல்ல வேண்டிய தருணம் வந்தது. இவ்வாறு நேர்ந்தால் தேவருக்கும் அசுரருக்கும் கூட பயம் உண்டாகும். பன்னிரெண்டு வருஷங்கள் உலகினை துர்பிக்ஷம் வாட்டும். க்ராமம், நகர், தேசம் இவை அனைத்துமே இது தெரிந்து பயத்தில் ஆழ்ந்து கிடக்கின்றன.



இவ்வாறான ஆபத்து வரப் போவதைப் பற்றி ஜோதிடர்கள் தசரத சக்ரவர்த்திக்குத் தெரிவித்தனர். தசரதரும் மந்திரிகளுடன் கூட வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகளை வணங்கி, அவர்களிடம் இவ்வாறு துர்பிக்ஷம் ஏற்படாதவாறு தடுக்க ஏதாவது வழி இருக்கின்றதா? என வினவினர்.

வஸிஷ்டாதியர் கூறினர். "மன்னா! சனி பகவான் ரோஹிணீ சகடம் செல்வதை இந்திர ப்ரஹ்மாதிகள் கூடத் தடுத்து நிறுத்த முடியாது. சனி ரோஹணீ சகடம் பேதனம் செய்து புறப்பட்டால் உலகில் நிச்சயமாக ஜீவராசிகளே இருக்க மாட்டார்கள் என்று கூறினர்.

### தசரதரின் பராக்ரமம்

மன்னன் சிந்தித்தான். ஒரு முடிவிற்கு வந்தான். உடன் திவ்ய தனுஸ்ஸையும் திவ்ய ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு திவ்ய ரதத்தில் ஏறினான். சூரிய மண்டலத்திற்கு மேல் ஒண்ணே கால் லக்ஷம் யோஜனை உயரத்தில் உள்ள நக்ஷத்ர மண்டலத்தை அடைந்தான். சூரியனுக்கு மேல் சந்திரன் ஒரு லக்ஷம் யோஜனை உயரத்தில் இருக்கிறான். சுக்ரன் சூரியனுக்கு மேல் இரண்டு லக்ஷம் யோஜனை உயரத்திலும் புதன் சுக்ரனுக்கு மேல் லக்ஷம் யோஜனை உயரத்திலும் அங்காரகன் புதனுக்கு மேல் இரண்டு லக்ஷம் யோஜனை உயரத்திலும் குரு அங்காரகனுக்கு மேல் இரண்டு லக்ஷம் யோஜனை உயரத்திலும் சனி குருவிற்கு மேல் லக்ஷம் யோஜனை உயரத்திலும் இருப்பதாக தேவீ பாகவதம் பேசும். பெரிய கொடியுடன் வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பட்ட ரதத்தில் செல்லும் தசரத சக்ரவர்த்தி இரண்டாவது சூரியன் போல் பிரகாசித்தான். ரோஹிணீ நக்ஷத்ரத்தின் முன் பக்கம் நின்று கொண்டு சனி பகவானை நோக்கி ஸம்ஹாராஸ்திரத்தைப் பூட்டினான். ரோஹிணி நக்ஷத்ரத்தை அடைய முயலும் சனி பகவான் தசரதரைக் கண்டு கோபம் கொண்டான். புருவங்கள் நெறிந்தன. ஆயினும் தசரதரைக் கண்டு சனி பயந்தான்.

ஆயினும் சனி சிரித்துக் கொண்டே, "ராஜேந்திரா! தேவர் அசுரர் மனிதர் ஸித்தர் வித்யாதரர் உரகர் அனைவரும் என் பார்வை பட்டாலே போதும். தீனர்களாவர். செயல் அற்றுப் போவர். தேவரும் அசுரரும் கண்டு நடுங்கும் உன் பராக்ரமம் கண்டு மகிழ்ந்தேன். நீ வேண்டிய வரத்தினைக் கேள்" என்றான்.

தசரதர், "பகவன்! தாங்கள் ரோஹிணீ சகடத்தைப் பேதனம் செய்து கொண்டு, நதிகளும், கடல்களும், சந்திரனும், சூரியனும் உள்ளளவும்

போகக் கூடாது. இவ் வரத்தைத் தாங்கள் அளிக்க வேண்டும். வேறு வரம் வேண்டாம்'' என்றார்.

மகிழ்ந்த சனி அவ்வாறே வரம் அளித்தார். உன் புகழ் மூன்று உலகங்களிலும் பரவும் என்றும் கூறினார். மகிழ்ந்த மன்னன் அம்பு, வில் முதலியவற்றை ரதத்தில் போட்டு விட்டு கை கூப்பிக் கொண்டு, ஸரஸ்வதியையும் விநாயகரையும் தியானம் செய்து கொண்டு இந்த ஸ்தோத்திரத்தினாலே சனி பகவானைத் துதித்தார்.

*தசரதர் சொன்ன சனி ஸ்தோத்ரம்*

நம: க்ருஷ்ணாய நீலாய சிதிகண்ட நிபாய ச।
நமோ நீல முகாப்ஜாய நீலோத்பல நிபாய ச॥

நமோ நிர்மாம்ஸதேஹாய தீர்க ச்மச்ரு ஜடாய ச।
நமோ விசால நேத்ராய சுஷ்கோதர பயானக॥

நம: பருஷநேத்ராய ஸ்தூல ரோம்ணே நமோ நம:।
நமோ நித்யக்ஷுதார்தாய அத்ருப்தாய நமோ நம:॥

நமோ தீர்காய சுஷ்காய காலதம்ஷ்ட்ராயதே நம:।
நமஸ்தே கோரரூபாய துர்நிரீக்ஷ்யாயதே நம:॥

நமோ கோராய ரௌத்ராய பீஷணாய கராளினே।
நமஸ்தே ஸர்வபக்ஷாய வலீமுக நமோஸ்து தே॥

ஸூர்ய புத்ர நமஸ்தேஸ்து பாஸ்கரா பயதாயினே।
அதோத்ருஷ்டே நமஸ்தேஸ்து ஸம்வர்த்தக நமோ நம:॥

நமோ மந்தகதே துப்யம் நிஸ்த்ரிம்சாய நமோ நம:।
நமோதுஸ்ஸஹ தேஹாய நித்யயோக ரதாய ச॥

ஞானத்ருஷ்டே நமஸ்தேஸ்து கச்யபாத்மஜ ஸூநவே।
துஷ்டோ ததாஸி த்வம் ராஜ்யம் க்ருத்தோ ஹரஸி தத்க்ஷணாத்॥

தேவாஸுர மனுஷ்யாச்ச ஸித்த வித்யாதரோரகா:।
த்வயாவலோகிதா ஸர்வே தைன்யமாசு வ்ரஜந்தி தே॥

ப்ரம்மா சக்ராதயச்சைவ ரிஷய: ஸப்தஸாகரா।
ராஜ்ய ப்ரஷ்டா பவந்தீஹ தவ த்ருஷ்ட்யாவலோகிதா:॥



தேசாச்ச நகர க்ராமா த்வீபாச்ச கிரயஸ்ததா।
ஸரித: ஸாகரா ஸர்வே நாசம் யாந்தி ஸமூலத:॥

ப்ரஸாத் குரு மே ஸௌரே வரதோஸி மஹாபல।
ஏவ முக்த ஸ்ததா ஸௌரி: க்ரஹராஜோ மஹாபல:॥
அப்ரவீச்ச சனிர்வாக்யம் ஹ்ருஷ்டரோமா ஸபாஸ்கரி:॥

இந்தத் துதியினால் மகிழ்ந்த சனி பகவான், தசரதருக்கு மீண்டும் வரம் கொடுத்தான். நீ செய்த இந்த ஸ்துதியை சுத்தர்களாய்ப் பக்தியுடன் படிப்பவர்களுக்கு மாரக ஜன்ம வ்ரய ஸ்தானங்களில் நான் இருந்தால்கூட சிரமம் அளிக்க மாட்டேன். அவ்வாறே என் பிரதிமையைச் செய்து வன்னிப பத்திரங்களால் அர்ச்சித்து, எள் கலந்த உளுந்து அன்னம் நிவேதனம் செய்து, கருப்பு கோவையும் வஸ்திரத்தையும் சனிக் கிழமையில் தானம் அளித்து இந்தத் துதியைப் படிப்பவருக்கு நான் பீடை அளிக்க மாட்டேன் என்றும் வரம் அளித்தார்.

வரம் பெற்ற தசரதர் சனி பகவானிடம் விடை பெற்றுக் கொண்டு தன் தேசம் திரும்பினான்.

*வாழ்வுவளிக்கும் சனி பகவானின் 12 நாமாக்கள்:*

கோணச்சனைச்சரோ மந்த ச்சாயாஹ்ருதய நந்தன:।
மார்த்தாண்டஜஸ் ததாஸௌரிப் பாதங்கிர் க்ருஹநாயக:॥
ப்ரம்ஹண்ய: க்ரூரகர்மாச நீலவஸ்த்ரோஞ்ஜனத்யுதி:॥

என்ற இந்தப் பன்னிரெண்டு பெயர்களையும் தினந்தினம் கூறுபவருக்குப் பீடை ஏற்படாது. சனி பகவான் தன் பக்தர்களிடம் அன்பு செலுத்துபவர்களுக்கு அவர் அருளால் எல்லாப் பேறும் பெற்று வாழ்வோமாக.

*16 வயது நிரம்பாத சிறுவர்களுக்குத் தீங்கு செய்யான்*

யாக்ஞவல்க்யர் மிகவும் தபஸ்வி. ப்ரஹ்ம ஞானி. இவர் தங்கைக்கு ஓர் புத்ரன் இருந்தான். அவனுக்குப் பிப்பலாதன் என்று பெயர். இவன் தாய், தந்தை, பந்துக்கள் அனைவராலும் கை விடப்பட்டு சொல்லொணாக் கஷ்டங்களை அனுபவித்தான். இதற்கெல்லாம் மூல காரணம் சனைச்வரர் என்பதை அறிந்து அவரைச் சபிக்க முயன்றான். அவர் தபோ பலம் கண்ட சனி அவருக்கு வரம் தருவதாகக் கூறினான். அப்போது, பிப்பலாதர், 16 வயதுக்குட்பட்ட பாலகர்களை நீ எந்தத்

தொல்லைகளுக்கும் ஆளாக்கக் கூடாது என்ற வரத்தைக் கேட்டார். சனியும் ஏற்றார். ஆகவே அவரது வரத்தால் சனி பகவான் 16 வயதிற்குட்பட்ட குழந்தைகளை ஒன்றும் செய்ய மாட்டான்.

### காசியில் உள்ள சனைச்சர லிங்கம்

காசீ கண்டத்திலே ஒரு இதிஹாஸம் உள்ளது. சூரியன் த்வஷ்டாவின் புத்ரியான ஸம்ஞாவை மணந்து கொண்டான். அவளுக்கு சூரியனிடம் இருந்து வைவஸ்வத மனு, யமன், யமீ என்ற குழந்தைகள் பிறந்தனர். ஸம்ஜ்ஞையால் சூரியனுடைய வெப்பம் நிறைந்த சரீர ஸ்பர்சத்தைத் தாங்க முடியவில்லை. அதனால் அவள் சாயா என்பவளை சிருஷ்டித்து, ''நீ என்னைப் போல் சூரியனின் மனைவியாக இரு. நான் சென்றதை யாரிடமும் கூறாதே. என் குழந்தைகள்ளயும் நன்றாகக் கவனித்துக் கொள்'' என்று கூறி விட்டுத் தன் தந்தை வீடு சென்றாள். தந்தை பதியை விட்டு வந்த குற்றத்திற்காக அவளை ஏற்கவில்லை. அவள் பெண் குதிரை உருவம் கொண்டு தவம் செய்து கொண்டிருந்தாள்.

இந் நிலையில் சாயாவிற்கு சூரியனிடம் இருந்து ஸாவர்ணீமனு, சனி, பத்ரை என்று மூன்று குழந்தைகள் பிறந்தனர். சாயா தன் மூத்தாள் குழந்தைகளிடம் அன்பு பாராட்டவில்லை. அதனால் கோபம் அடைந்த யமன் தாயை மிகவும் கண்டித்தான். தந்தை சூரியனிடம் புகார் செய்தான். சூரியன் சாயாவை விசாரிக்க அவள் உண்மையைச் சொன்னாள். சூரியன் த்வஷ்டாவிடம் சென்று தன் ஒளியை முடிந்த அளவு சாணைக் கல்லில் சிதைத்துக் கொண்டான். இதில் சிதறிய கதிர்களைக் கொண்டு முருகனின் வேலுக்கு மெருகேற்றினார் த்வஷ்டா என்கிறது புராணம். பின் தவம் செய்யும் பெண் குதிரை வடிவுடன் இருக்கும் ஸம்ஞையை மனைவியாக ஏற்றான். அந்தச் சந்தர்ப்பத்தில் சூரியனுக்குப் பிறந்த குமாரர்களே அச்வினி தேவர்கள் ஆவர்.

பின்பு சாயா புத்ரனாகிய சனி தந்தையிடம் அனுமதி பெற்று காசி சென்று தன் பெயரால் ''சனைச்சரேச்வர லிங்கம்'' என்ற பெயர் கொண்ட லிங்கத்தை ஸ்தாபித்து கடுந்தவம் புரிந்தான். பகவான் பக்தவத்ஸலன் சங்கரரும் அவன் தவத்திற்கு மகிழ்ந்து வாழ்வதற்கு சனி மண்டலத்தையும், நவக்ரஹங்களில் ஒருனாய் இருக்கும் தன்மையையும் அளித்தார். இங்குக் காசியில் சனைச்சரேச்வர லிங்கத்தைத் தர்சனம் செய்து சனிக் கிழமையில் சனைச்சரேச்வர லிங்கத்தை அர்ச்சித்து ஆராதிப்பவருக்குச் சனி பீடை ஏற்படாது என்று ஸ்காந்தம் பேசுகின்றது.



# ஆஞ்ஜநேய பக்தரை சனி பகவான் அணுகார்

### வானர வீரன் நளன் கட்டிய அணை

ஸ்ரீ ராமர் ராவண ஸம்ஹாரம் செய்ய இலங்கைக்குச் செல்ல கடலிலே அணை கட்ட வேண்டியதாயிற்று. விச்வகர்மாவின் பிள்ளை நளன், ராமர் உத்தரவின்படி அணை கட்டத் தொடங்கினான். நளன் கையால் ஜலத்திலே போடப்பட்ட பொருள் அனைத்தும் மிதக்கும். ஜலத்திலே அமிழாது. இது நளனுக்கு ரிஷி சாபத்தால் ஏற்பட்ட நன்மை.

நளன் அணை கட்டத் தொடங்கினான். சுக்ரீவன், அங்கதன், அனுமன், ஜாம்பவான், நீலன் முதலியவர்கள் மரங்களையும் பாறைகளையும் மலைகளையும் கொண்டு வந்து குவித்தனர். அவற்றை நளன் அனாயாஸமாக வாங்கிக் கடலில் அமுக்கினான். அதில் வானர வீரர்கள் அதிசயமுற்றனர்.

### ராமநாமா பிணைத்தது

இதனால் நளன் கர்வம் அடைந்தான். பலத்திலும் கலையிலும் தனக்கு வேறொருர் ஈடில்லை எனப் பெருமிதம் கொண்டான். நளன் வாங்கிப் போட்ட பாறைகளும் மலைகளும் மிதந்ததே தவிர ஒன்றோடு ஒன்று இணையவில்லை. வருத்தமுற்ற நளன் ஸ்ரீ ராமரிடம் விபரம் கூறி வணங்கினான். ஸ்வாமி ஒரு பாறையில் ''ரா'' என்று குறித்து மற்றொரு பாறையில் ''ம'' என்று குறித்து சேர். இணைந்து விடும் என்றார். அவ்வாறே செய்து வியந்தான் நளன். இது ஆனந்த ராமாயணம் கூறும் கதை (இதன் பின்னுள்ள சரித்திரம் ஹரி கதை சொல்வோரிடம் இருந்து கேட்டவை. இச் சரிதத்தை நான் எழுதிய ''ஆஞ்சநேய கதா''வில் சுலோகங்களாய் எழுதியுள்ளேன்).

### சனி பகவானின் தர்சனம்

ஆஞ்சநேயர் மலைகளைத் தூக்கி வந்து கொடுத்துக் கொண்டிருதார். அப்படி ஆஞ்சநேயர் ஒரு மலையைப் பெயர்க்கும் போது அங்கு கரிய நிறம் கொண்டவனும், நீல நிறப் பட்டும் நீல வர்ணப் பூமாலையும்

அணிந்தவனும், அமானுஷமான ஆக்ருதியுடன் கூடியவனுமான ஒரு புருஷனைக் கண்டார். அதிசயமுற்ற அனுமான் ''நீ யார்? எங்கு வந்தீர்? தேவரா அல்லது மனிதரா? தங்கள் உடல் அமைப்பு தாங்கள் சிறந்த குலத்தில் உதித்தவர் என்பதைக் குறிக்கின்றது. நீங்கள் யார் என்பதைக் கூறுங்கள்'' என்று கேட்டார்.

சனி பகவான், ''ஆஞ்சநேயா! நான் சூர்ய குமாரன். யம ஸஹோதரன். சனைச்சரன் என்பது என் பெயர். நான் நவக்ரஹங்களில் ஒருவன். நான் அனைத்து ஜீவ ராசிகளுக்கும், ஏன் தேவர்கள முதலியவர்களுக்கும்கூட அவரவர் செய்த கர்மாக்களுக்கு ஏற்றவாறு புண்ணிய பாபங்களுக்கு ஒத்தவாறு சுகத்தையும் துக்கத்தையும் அளிக்கின்றேன். நான் உன்னை அறிவேன். நல்ல குணங்களும் நற் செய்கைகளும் உடைய உன்னிடமும் தங்க வேண்டியிருப்பதை உன்னிடம் முன்பே கூறி, உன் அனுமதி பெற்று உன்னிடம் 7½ வருஷங்கள் தங்கப் போகிறேன்'' என்றார். தன் பார்வைக்கு ஆளான தேவர், மாமன்னர், மகரிஷிகள், மனிதர் முதலியவர்களைப் பற்றியும் கூறினார்.

சனியின் பார்வையால் சிரமம் அடைந்தவர்களையும், அவர்கள் அடைந்த சிரமத்தைத் தொகுத்துக் கொடுத்து சனி பகவானை வேண்டி பதினோரு பாக்கள் எழுதி இருக்கின்றார் ஒரு தமிழ்ப் புலவர்.

தஞ்சமென உனைப் பணிந்தேன் எனைத் தொடாதே
தண்டனிட்டேன் எந்நாளும் எனைத் தொடாதே
தப்பிலாதுனைத் தொழுதேன் எனைத் தொடாதே

என்றெல்லாம் வேண்டி,

சாலவுனை நான் தொழுதேன் எனைத் தொடாதே
சனியனே காகமேறும் தம்பிரானே

என்றெல்லாம் குறிப்பிட்டிருக்கின்றார்.

### மாருதியும் ஏற்றார்

இதைக் கேட்ட மாருதி, ''உம்மை நான் ஏற்கிறேன். ஆனால் 7½ வருஷங்கள் என்பது ஏற்க முடியாததாகும். இத்துடன் இதுபற்றி பேசவோ, சிந்திக்கவோ எனக்கு அவகாசம் கிடையாது. பின்னர்



சந்திப்போம். இப்போது நீர் வந்த வழியே திரும்பிப் போங்கள்'' என்றார்.

உடன் சனி சமாதானமாகப் பேசினார். ''ஆஞ்சநேயா! நான் யாரையும் பிடிப்பதும், பார்ப்பதும் எனக்காக அல்ல. இது பரமனின் ஆணை. அதைச் செய்ய நீ அனுமதிக்க வேண்டும்'' என்றார்.

மாருதியும், 'இவர் நமது ஆசாரியனாகிய சூரியனின் குமாரர். அத்துடன் ஈசனாணை என்றும் கூறுகிறார்' என நினைத்து, ''பகவான்! உமக்காக நான் ஒத்துக் கொள்கிறேன். 7½ வருஷமோ, 7½ மாதமோ, 7½ நாட்களோ முடியாது. 7½ நாழிகை வேண்டுமானால் நீர் என்னிடம் தங்கலாம். அந்த 7½ நாழிகைக்குள் எந்தக் காரணத்தைக் கொண்டும் நான் உங்களை விட்டு விலக மாட்டேன் என்று நீர் பிரதிக்ஞை செய்து தர வேண்டும். அதற்கு ஒப்புவீரானால் நான் தாங்கள் என்னிடம் தங்க அனுமதிக்கிறேன்'' என்றார்.

சனி பகவானும் அவ்வாறே ஒப்புக் கொண்டு சரீரத்தில் யோக சக்தியால் புகுந்து தலையில் தங்கினார்.

### சனி பகவான் பட்ட அவஸ்தை

மாருதிக்கு அவசரம். நளன் அணை கட்டக் காத்திருப்பான். 100 யோஜனை தூரம் அணை கட்டியாக வேண்டுமே. நளன் மலைகளைச் சீக்கிரம் கொண்டு வருமாறு கத்துகிறான். இதனால் மாருதி பெரிய பெரிய மலைகளைப் பெயர்த்து எடுத்தார். தோளிலும் கைகளிலும் ஏந்தினார். மிகப் பெரிய மலையைத் தூக்கித் தலையிலேயே வைத்துக் கொண்டார். சனி மலையைத் தலையில் வைக்க எத்தனித்த போது நடுங்கினான். தலையில் வைத்த பிறகோ, அந்தப் பாரத்தைத் தாங்க முடியாமல் தவித்தான். இது போதாது என்று நினைத்த மாருதி, மீண்டும் ஒரு பெரிய மலையைப் பெயர்த்து தலைமீது வைக்க முயற்சித்தார். சனி பதறினான். ''ஆஞ்சநேயா! என்னை விட்டு விடு. தெரியாமல் உன்னைப் பற்றிக் கொண்டு விட்டேன்'' என்று கெஞ்சினார். மாருதி முன் சனி செய்த பிரதிக்ஞையை ஞாபகபடுத்தினார். ''நான் 7½ நாழிகை வரை உங்களை விட மாட்டேன்'' என்றார்.

சனி பகவான் பயந்தார். ''அப்பனே! எப்படியும் என்னால் 7½ நாழிகை வரை உன்னிடம் தங்க முடியாது. நான் அப்படித் தங்கினால்

என் உடல் கூழாகி விடும். நான் வெளியில் செல்ல அனுமதி கொடு'' என வேண்டவே மாருதியும் அவ்வாறே செய்தார்.

பிழைத்து வெளியில் வந்த சனி பகவான், ''மாருதே! இன்று முதல் இனி யார் உன் பெயரைக் கூறுகின்றனரோ அவர்கள் பக்கமே நான் போக மாட்டேன். ராம நாமாவின் சக்தி எனக்குத் தெரியாது. ஆகவே ராம நாம ஜபம் செய்பவர்களிடமும் நான் போக மாட்டேன்'' என்று கூறி மாருதியிடம் விடைபெற்றுச் சென்று விட்டார்.

பின் 100 யோஜனை தூரம் அணையைக் கட்டி முடித்தான் நளன். அந்த அணையில் (சேதுவில்) சென்று ராவணனுடன் போர் புரிந்து, ராவண ஸம்ஹாரம் செய்து, ஸீதையுடன் அயோத்திக்கு வந்து, பட்டாபிஷேகம் செய்து கொண்டு 11000 வருஷங்கள் மக்களுக்கு மகிழ்வளித்தார் ஸ்ரீ ராமர்.

இவ்வாறு ஆஞ்சநேயரை வழிபட்டால் எல்லா மங்களங்களும் நேரும் என்ற காரணத்தினுல் சனி பகவானையும் பிரதிஷ்டை செய்து பக்கத்திலேயே பஞ்சமுக அனுமனையும் பிரதிஷ்டை செய்திருக்கின்றனர். கருணாமூர்த்தியான ஸத்குருசாந்தானந்த ஸ்வாமிகள் இங்கு (தத்தகிரியில்) பிரதிஷ்டை செய்துள்ள சனி பகவானின் உயரம் எட்டு அடிகளாகும்.



உ

சுவாமியே சரணம் ஐயப்பா

# கலியில் கண்கண்ட தெய்வம்
# ஐயப்ப ஸ்வாமி

ஞூம் தக்ஷிணம் ஞான முத்ராபிராமம்
  வரம் வாமஹஸ்தம் ச ஜானூபரிஸ்தம்
வஹந்தம் ஸதா யோக பட்டாபிராமம்
  பஜே சம்பு விஷ்ணுவோஸ் ஸுதம் பூதனாதம்

(மணிகண்டரும் மஹா சாஸ்தாவும் - 83ம் பக்கம்)

ஞானமுத்ரையுடன் கூடிய வலது கரத்துடனும், இடது தொடை மீது வைத்திருக்கும் வர முத்ரை தாங்கிய இடது கரத்துடனும், மார்பில் மின்னும் யோக பட்டத்துடனும் விளங்கும் பூதனாதனும் ஹரிஹர புத்ரனுமான ஸ்ரீ ஐயப்ப ஸ்வாமியைப் பூஜிக்கிறேன்.

**மெய்யன்பர்களே!**

இன்று இந்தப் பாரத தேசத்தில் அனைவரும் ஐயப்ப ஸ்வாமியின் வழிபாட்டிலே மிகவும் நாட்டம் கொண்டிருக்கின்றனர். ஆஸ்திகர்கள், அரசியல்வாதிகள், நடிகப் பெரு மக்கள், வியாபாரிகள், உத்யோகத்தில் உள்ளவர்கள், பொது மக்கள் அனைவரையும் இன்று தன்பால் ஈர்க்கும் ஒரு மாபெரும் அதிசயத் தெய்வம் ஐயப்ப ஸ்வாமி ஆஸ்திகம் வளர்க்கும் அருமைத் தெய்வம் ஐயப்ப ஸ்வாமி. வழிபாட்டினாலே விரும்பிய பயனைப் பெற்ற அனுபவ சாலிகள் போற்றும் அற்புதத் தெய்வம் ஐயப்ப ஸ்வாமி. இன்று நம் நாட்டிலே ஐயப்ப பக்தர்கள் கோடிக் கணக்கில் பெருகி இருக்கின்றனர்.

**ஆஸ்திகம் பலம் பெறுகிறது**

தெய்வ நாமாவைப் பயமின்றி, தயக்கம் இன்றி, கூச்சம் இன்றி, மண்ணதிர, விண்ணதிர ''ஸ்வாமியே சரணம் ஐயப்பா'' என்று நா தழுதழுக்க பக்தியுடன் சொல்லும் ஐயப்ப பக்தர்கள் மூலம் இந்த நாட்டிலேயே மீண்டும் தெய்வ பக்தி வேறூன்றி வ்ளர்ந்து தழைத்து இருப்பதை நாம் இன்று காண்கின்றோம்.

பல ஆண்டுகளுக்கு முன்பு கேரள நாட்டிலே பிரபலமான ஐயப்ப ஸ்வாமி வழிபாடு, அவர் திருவளாலே இன்று நாடெங்கிலும் பரவி மக்கள் மனத்திலே நல்லதொரு தெய்வ நம்பிக்கையை உருவாக்கி இருப்பது நமக்கு ஆச்சர்யம் விளைவிக்கின்றது. இம் முறை இன்னும் பெருகினால் பக்தி மார்க்கம் உலகத்திலே எங்கும் பீடு நடை போடும் என்பது நிச்சயம்.

இந்த வழிபாடு மக்களிடையே உயர்வு, தாழ்வு மனப்பான்மையை மாற்றி, சமத்துவம், சகிப்புத் தன்மை, பொறி அடக்கம், கட்டுப்பாடு, எளிமை முதலிய நல்ல பழக்கங்களை உண்டாக்கி இருக்கின்றது. இது நிச்சயம் பாரத தேசத்தின் ஒருமைப்பாட்டை ஊக்குவிக்கும்.

இவ்வாறான ஐயப்ப ஸ்வாமியின் அற்புதமான விக்ரஹத்தை அண்மையில் சேலம், நாமக்கல், சேந்தமங்கலம், தத்தகிரி, தத்தாத்ரேயர் கோயிலின் முன் அமைந்திருக்கும் மண்டபம் இவற்றில் பிரதிஷ்டை செய்திருக்கின்றனர் ஸத்குரு சாந்தானந்த அவதூத ஸ்வாமி அவர்கள்.

இந்த ஐயப்ப ஸ்வாமியின் சரிதத்தை 1971ஆம் ஆண்டு "மணிகண்டரும் மஹா சாஸ்தாவும்" என்ற பெயரில் ஆராய்ந்து ஒரு நூல் எழுதி வெளியிட்டேன். அது இப்போது செலவாகி விட்டது. அதன் பின்னர் சில ஆண்டுகள் கழித்து இந்நூலைச் சுருக்கி, தருமை யாதீனம் வெளியிடும் "ஞான ஸம்பந்தம்" என்ற பத்திரிகையில் என் அனுமதி பெற்று சுருக்கமாய் வெளியிடப் பெற்றது. அதுவும் இப்போது கிடைப்பது அரிது. ஆகவே சாந்தானந்த ஸ்வாமி அவர்கள் ஆணையைச் சிரமேல் கொண்டு அந்தச் சரிதத்தை இங்கு ஆஸ்திகர்களுக்குப் பயன்படுமாறு மீண்டும் மிகச் சுருக்கி அளிக்கிறேன்.

## மோஹினியின் தோற்றம்

மெய்யன்பர்களே!

தேவரும் அவுணரும் அமிர்தம் கடைந்தனர். பாற்கடலில் இருந்து அமிர்தம் வந்தது. அந்த அமிர்தத்தை அவுணர்களின் தலைவன் பறித்துக் கொண்டான், தேவர்கள் செயலற்றுத் தவித்தனர்.

அப்போது திருமால் தன்னைக் கண்டு யாவரும் மோஹிக்குமாறு அழகிய பெண்ணுருவம் கொண்டு (மோஹினியாகி) அவ்விருவர்களுக்கும் இடையிலே தோன்றினார். அவுணர்கள் அந்தப் பெண்ணுருவைக் கண்டு விருப்பம் மிக்கவராய் மோஹினியைச் சூழ்ந்து



கொண்டனர். திருமாலின் மாயை அறியாது தேவரும்கூட பெண்மையல் கொண்டனர். மண்ணாசை, பொருளாசை நீங்கிய பெரியோர்களுக்கும் பெண்ணாசை நீங்குவது எளிதாமோ.

இப்படிச் சூழ்ந்து நிற்கும் தேவரையும், அவுணரையும் நோக்கிய மோஹினி, "நான் இருக்கிறேன். அமிர்தம் இருக்கிறது. இதில் அவரவர் வேண்டியதை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்றாள். அவுணர்கள், "அமிர்தத்தைவிடச் சிறந்த நீயே எங்களுக்கு வேண்டும்" என்று கூறி, மோஹினியை வந்தடைந்தனர். அப்போது மோஹினி, அவுணர்கள் கூட்டத்தை நோக்கி, "என்னைத் தழுவ வல்ல வீரன் ஒருவன் உளனேல் அவன் என்னை ஏற்கட்டும்" என்றாள். அங்குள்ள அவுணர்கள் ஒவ்வொருவரும், "நானே வீரன், நானே வல்லவன்" என்று கூறிக் கொண்டு மாறுபட்ட கருத்தினராய் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு மாய்ந்தனர். இவ்வாறு அசுரர்களை அழித்துத் தேவர்களுக்கு அமிர்தம் வழங்கி மாதுருவம் பெற்ற மாதவன் திருப்பாற்கடலின் பக்கத்திலே அமர்ந்திருந்தார். இவ்வாறு அழகிய திருமேனி கொண்ட மோஹினியை அடையும் விருப்பத்தோடு ஸர்வ அலங்கார பூஷிதராய் சிவன் அங்கே எழுந்தருளினார்.

### மஹா சாஸ்தாவின் உதயம்

பகவான் மஹாவிஷ்ணு பல சந்தர்ப்பங்களில் பல அவதாரங்கள் எடுத்திருக்கிறார். அவற்றில் முக்யமானவை பத்து அவதாரங்கள். இந்த அவதாரங்கள் உலக க்ஷேமத்திற்காக எடுக்கப்பட்டவை. அவ்வாறே தேவரைக் காக்கப் பகவான் இப்போது மோஹினி அவதாரம் எடுத்தார். மற்ற அவதாரங்கள் எடுக்க, பகவான் பிறரின் உதவியை எதிர்பார்க்கவில்லை. ஆனால் மோஹினி அவதாரம் எடுக்க பகவான் அழகின் உறைவிடமான சௌந்தர்ய ப்ரவாஹமான பராசக்தியை, பார்வதியைப் பிரார்த்தித்தார். ஸோஹம் பாவத்துடன் (பார்வதியாகவே தன்னைத் தியானித்துக் கொண்டு) பிரார்த்தித்தார். யோகி ச்ரேஷ்டரான பகவான் இவ்வாறு பார்வதியை பிரார்த்திக்க, அவள் அருளால் அப் பார்வதியின் ரூபத்திற்குச் சமமான ரூபமே பெற்றார். இல்லாவிட்டால் மோஹினிக்கு அவ்வளவு அழகு எங்கிருந்து வரும். இவ் விபரங்கள் சைவ மஹா புராணம் ஈசான ஸம்ஹிதையில் உள்ள ச்யுதபுர

மஹாத்மியம் 14வது அத்தியாயத்திலும், லலிதோபாக்யானத்திலும் குறிப்பாக உணர்த்தப்பட்டிருக்கின்றது.

மோஹினியைக் கண்ட பகவான் மோஹினியைப் பார்வதியாகவே கண்டார். ஆசை கொண்டது தவறில்லையே. மோஹினி என்ன சொல்லியும் அதை எல்லாம் பகவான் பரமன் ஏற்கவில்லை. எப்படியும் நீ என் சக்தியே எனக் கூறி மோஹினியுடன் சேர்ந்தார்.

இப்படி அரியும் அரனும் கூடியிருக்க கருங்கடல் போன்ற ச்யாமள வர்ணமும், செவ்வானம் போல் செக்கச் சிவந்த சிகையும், செண்டாயுதம் ஏந்திய திருக்கரங்களுடனும், போற்றுதற்குரிய வீரமும் கொண்டு ஞானிகள் வாழ்த்தும் நன்மை புரியும் தெய்வமாம் அய்யனார் என்னும் மஹா சாஸ்தா உலகம் உய்யத் திருவவதாரம் செய்தார்.

மைக்கருங்கடல்மேனியும் வானுலாம்
செக்கர் வேணியும் செண்டுறு கையுமாய்
உக்கிரத்துடன் ஓர்மகன் சேர்தலும்
முக்கணெந்தை முயக்கினை நீக்கினான்

இவ்வாறு இருவருக்கும் மிகச் சக்தி வாய்ந்த கருணா மூர்த்தியான மஹா சாஸ்தா அவதரித்ததும் தன் தந்தையாகிய பரமசிவனிடம் சென்று "நான் என்ன செய்ய வேண்டும்" என்று வினயத்துடன் கேட்டார். சிவன் "உலகங்கள் அனைத்தையும் நீ காத்தருள்" என்று கூறி, புவனேச்வரனாய் இருக்கும் பதவியை அளித்தார். சாஸ்தா என்றால் ஆட்சி புரிபவன் என்பது பொருள். ஹரிஹரன் இருவருக்கும் புதல்வனாய்ப் பிறந்ததால் இவருக்கு "ஹரிஹர புத்திரன்" என்ற பெயரும் உண்டு. இவரைச் சிவன் ருத்திரர்களுக்குள் ஒருவராய் இருக்கவும் அருளினார். பூத கணங்களுக்கும் நாயகன் ஆக்கினார். ஆதலால் "பூதநாதன்" என்றும் பெயர் கொண்டார்.

ஐயனும் புவனேச்வரனாகி பூத கணங்கள் புடைசூழ, எங்கும் நிறைந்து எல்லைக் காவலனாகவும் இருந்து கொண்டு இரவும் பகலும் அனைவரையும் காத்து திருவருள் புரிகின்றார்.

அங்கண்மேவி அரிகர புத்திரன்
சங்கையில் பெருஞ்சாரதர் தம்மொடு
எங்குமாகி இருந்தெவ் வுலகையும்
கங்குலும் பகல் எல்லையும் காப்பனால்



**மற்றொரு வரலாறு**

பஸ்மாசுரன் தவம் செய்து சிவனிடம் இருந்து, "எவன் தலையில் நான் கை வைத்தாலும் அவன் உடல் பஸ்மமாய் ஆக வேண்டும்" என்ற வரமும், அதற்கான மந்திரமும் பெற்றான். அவன் வரம் அளித்த சிவனிடமே தன் கை வரிசையைக் காட்ட முற்பட, பகவான் ஓடி மறைந்து விட்டார் (சிவலிங்கக் காய்க்குள் மறைந்து விட்டார் என்பர்). விஷ்ணு, சிவனைக் காக்க எண்ணி, மோஹினி அவதாரம் கொண்டு, "பஸ்மாசுரா! மந்திரம் கற்றால் போதாது. ரிஷி, சந்தஸ், நியாஸம் இவை உனக்குத் தெரியுமா" என்று கேட்க, தெரியும் என்று கூறி நியாஸம் செய்து காட்டும்போது "சிரஸே ஸ்வாஹா" என்று கூறி, சிரஸ்ஸில் கை வைத்துக் கொள்ள பஸ்மாசுரனே பஸ்மமானான். அப்போது பயம் தீர்ந்து, வெளி வந்த பகவான் மோஹினியை ஏற்க, அப்போது சாஸ்தா அவதரித்தார் என்று பாத்ம புராணம் கூறும். இதைக் கல்ப பேதத்தில் நடந்த வரலாறாகக் கொள்ள வேண்டும்.

**பல பெயர்கள்**

இந்த சாஸ்தா தேவோத்தமர் என்றும், மும்மூர்த்தி ஸ்வரூபம் எனவும், குருநாதர், ஆர்யர், நாதர் என்றும் பல பெயர்களால் புராணங்களில் பேசப்படுகின்றார் (விரிவான சாஸ்தா பற்றிய செய்திகளை "மணிகண்டரும் மஹா சாஸ்தாவும்" என்ற நான் எழுதிய நூலில் இருந்து அறிந்து கொள்க).

**புஷ்களைத் திருமணம்**

இந்தச் சாஸ்தா என்ற ஐயனாருக்கு இரண்டு சக்திகள். ஒருவள் புஷ்களா, மற்றவர் பூர்ணா. ஸ்காந்த புராணம் சங்கர ஸம்ஹிதையில் உபதேச காண்டத்தில் "பூர்ணா புஷ்களா" இருவரும் ஸத்ய பூர்ணர் என்ற மஹர்ஷியின் கண்களில் இருந்து தோன்றியவர் என்றும், அவ்விருவர்களும் கல்யாணம் என்ற ஒரு விரதம் இருந்து சாஸ்தாவைத் திருமணம் செய்து கொண்டனர் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. கர்னா கர்ணிகையாக (கர்ண பரம்பரைக் கதையாக) நேபாள மன்னின் புத்திரி புஷ்களையையும், வஞ்சி மாநகரத்தின் மன்னனின் புத்ரியான பூர்ணையையும் சாஸ்தா மணந்து கொண்டதாக வரலாறு தெரிகின்றது. ஆகவே விஷ்ணுவின் கண்களில் இருந்து பிறந்த அமிர்தவல்லி,

சுந்தரவல்லி இருவரும் முருகனைப் பார்த்தாவாய் அடையச் சரவணப் பொய்கையில் தவம் செய்து முருகனின் ஆணையால் வேடனிடத்திலும், இந்திரனிடத்திலும் வளர்ந்து முருகனை மணம் செய்து கொண்டது போல், ஸத்யபூர்ண மஹர்ஷியின் கண்ணில் இருந்து பிறந்த பூர்ணா புஷ்களைகள் நேபாள மன்னனிடமும், வஞ்சி மன்னனிடமும் புத்திரிகளாய் வளர்ந்து சாஸ்தாவை மணந்தனர் என்றே கொள்ள வேண்டும் எனத் தோன்றுகிறது.

கர்ணா கர்ணிகையாக வரும் பூர்ணா புஷ்களா விவாஹ சரிதத்தைக் காண்போம்.

பழம் பெரும் பெருமை மிக்க நாடு நேபாளம். அங்குப் பலிஞன் என்ற ஒரு மன்னன் இருந்தான். அவன் மந்த்ர தந்த்ரங்களில் தேர்ந்தவன். அவன் காளியைப் பூஜித்து அவள் அருள் பெற்று நிம்மதியாய் வாழ்ந்து வந்தான். அளவிறந்த அரசச் செல்வத்தில் திளைத்திருந்த அவனுக்கு ஒரு குறையும் இல்லை.

ஆயினும் அவனுக்கு மூப்பு வரத் தொடங்கியது. அது வாழ்வின் முடிவிற்கு முன் எச்சரிக்கை அல்லவா? மூப்பால் நலிந்த அவன் சிலரது துர் போதனையால் ஆசைக்குவசப்பட்டு காளிக்கு ஒரு கன்னிகையை அர்ப்பணித்து அவள் அருளால் மூப்பின்றி வாழலாம் என்ற தவறான எண்ணத்தில் ஒரு கன்னியைக் கொண்டு வந்தான். அக் கன்னி, பகவான் பரமேச்வரனிடத்தில் அதி பக்தி கொண்டவள். அவள் தன்னை மன்னன் காளிக்கு அர்ப்பணம் செய்யப் போகிறான் என்பதை அறிந்து, தன்னையும் தவறு புரியும் மன்னனையும் காத்தருள வேண்டுமாறு சிவனை வேண்டினாள்.

சிவபிரானும் சாஸ்தாவை அழைத்து அக் கன்னியைக் காக்குமாறு கட்டளை இட்டார். அது கேட்ட சாஸ்தா விரைந்து வந்து, அவளை கட்டுகளில் இருந்து விடுவித்தார். கட்டுகள் தானே விலகுவதைக் கண்டு மன்னனும் மந்திரவாதிகளும் வியப்பெய்தினர். அதைத் தவிர்க்கப் பல முயற்சிகள் செய்தும் ஒன்றும் பலிக்கவில்லை.

இந்த சமயத்தில் மன்னன் முன்பு சாஸ்தா தோன்றினார். ''மன்னா! செய்யத் துணிந்த இச் செய்கை பாதகம் விளைவிக்க வல்லது. அன்பு நெறியில் இருந்து விலகி, அன்னையை உபாஸிப்பது நெறியாகுமோ! தன்னுயிர் போல் பிறர் உயிரைக் காப்பதல்லவோ மன்னனின் முறையாகும். ஆபத்தில் இருந்து பிறரைக் காக்கும் பணி கொண்ட நீ, பிறருக்கு ஆபத்தை விளைவிக்கலாமோ? ஈசன் நியதியை யாரே வெல்லுவர்? மரணம் மனிதனுக்கு இயற்கை. உன்னைப் பாபத்தில் இருந்து காக்க, கண்ணுதற் கடவுள் கருத்து கொண்டார். நீ காளிக்கு அர்ப்பணிக்க நினைத்த அக் கன்னி, சிவபக்தியில் சிறந்தவள். அவளைக் காக்க அரனின் ஆணையினால் நாம் இங்கு வந்தோம்'' என்றார்.



இவ்வாறு கூறி, காட்சி கொடுத்த சாஸ்தாவைக் கண்ட காவலன், தான் செய்த தவற்றினை உணர்ந்தான். ஐயனின் திருவடிகளில் விழுந்து வணங்கி பிழை பொறுத்தருள வேண்டினான். அவர் அழகிலே சொக்கினான். பவள மேனியனுக்கும் மோஹினியான கார்வண்ணனுக்கும் தோன்றிய மோஹன மூர்த்தியின் பேரழகு அவன் மனத்தினைக் கொள்ளை கொண்டது.

''ஐயனே! உன் தர்சனம் வீணாகாது. எனக்கு ஒரு பெண் இருக்கிறாள். அவள் பெயர் புஷ்களை. அழகு, அறிவு, தயை, பொறுமை எல்லாம் நிறைந்தவள். தாங்கள் அவள் திருக்கரம் பற்றி என் மருமகனாகி என்னைக் காத்தருளும்'' என விண்ணப்பித்தான். சாஸ்தாவும் அவள் குண நலம் கண்டு அவளை மணக்க இசைந்தார்.

அவர் சம்மதம் அறிந்த மன்னன், பெரு மகிழ்ச்சி அடைந்து, அணிகலன்களால் அலங்கரிக்கப்பட்ட புஷ்களையை அழைத்து வந்து அரசருக்குரிய முறைப்படி திருமணம் செய்து வைத்தான். புஷ்களையை மனைவியாய் ஏற்று, புஷ்களாபதியாய் விளங்கினார் சாஸ்தா. சிவ பக்தையான கன்னியும் விடுதலை பெற்று மகிழ்ந்தாள்.

### பூர்ணா விவாஹம்

பக்தியும் விருந்தோம்பலும் வளர்ந்தோங்கும் வஞ்சி மாநகரில் ''பிஞ்சகன்'' என்றொரு வேந்தன் இருந்தான். அவன் ஒரு சமயம் காட்டில் வேட்டையாடச் சென்ற போது அவனைச் சேர்ந்த வீரர்கள் ஆங்காங்கே வேட்டையாடப் பிரிந்து சென்றனர். இரவு வர, மன்னனுக்குத் திக்குத் தெரியாமல் தவித்தான். இரவிலே இத்திப் பற்களும், செம்பட்டைச் சிகையும் கொண்ட பல பூதகணங்கள் கோபமுற்று, ''வெட்டு, குத்து'' என்று ஆர்ப்பரித்து மன்னனைச் சூழ்ந்து கொண்டன. வஞ்சி மன்னன் பூதநாயகன் தன்னைக் காப்பான் என்ற

உறுதியுடன் "ஐயனே சரணம்! செண்டுறு கையனே சரணம்! பூதாதிபதியே சரணம்" என்று உரக்கக் கூறிஅழைத்தான். சாஸ்தா மன்னனுக்குத் தர்சனம் தர, பூதகணங்கள் ஓடி மறைந்தன. ஐயனின் அழகு பிஞ்சகனையும் மயக்கியது. ராஜபவனம் அழைத்து வந்து, தம் மகள் பூர்ணையை சாஸ்தாவின் திருக் கரத்திலே அளித்து, "இவளை மனைவியாய் ஏற்று எங்களைக் காக்க வேண்டும்" என வேண்டினான். பக்தவத்ஸலன் வேண்டுகோளை ஏற்றார். பூர்ணையையும் மணந்தார். மன்னன் பவனத்திலே மகிழ்வுடன் பூர்ணையுடன் தங்கினார்.

### சாஸ்தாவின் திட்டம் வெற்றி பெற்றது

இவ்வாறு வஞ்சி மாநகரில் பூர்ணையுடன் நிம்மதியாய் இருக்கின்றார் ஐயனார் என்பது அறிந்த நேபாள மன்னன் பலிஞன் மிகவும் வேதனைப்பட்டான். பெண்ணின் சோகம் அவனைக் கோபம் அடையச் செய்தது. சாஸ்தாவை அழைத்து வரச் செய்து, "ஐயனே குற்றமற்ற என் பெண்ணை மறந்து, நீ பூர்ணாவுடனேயே வாழ்வது நீதியாகுமோ? ஆகவே நீ பூமியில் 12 வருஷங்கள் ப்ரஹ்மசாரியாய், மனிதனாய் வாழ்வாயாக" என்று சாபமிட்டான்.

இது கேட்ட சாஸ்தா, தான் செய்த திருவிளையாடல் பயன் பெற்றது என்பதை உள்ளுக்குள்ளேயே எண்ணி மகிழ்ந்தார். "பலிஞ்ஞா! தேவ காரியம் ஒன்று நடக்க வேண்டி இருக்கின்றது. அதற்காக நான் மானிடனாய் 12 ஆண்டுகள் பூமியில் வாழ வேண்டும். அதற்கு ஒரு நிமித்தமாய் அமைந்தது உன் சாபம். இதை நாம் ஏற்கின்றோம். அதன் காரணமாக நான் 12 வருஷங்கள் மானிடனாய் வாழ்வதற்கு உதவியாக நீயே கேரளத்தில் பந்தள தேசத்திலே மன்னனாகப் பிறந்து அரசு புரிவாய். அங்கு நாம் உனக்குப் பிள்ளையாக இருந்து உம்மிடம் பன்னிரெண்டு ஆண்டுகள் வாழ்வோம்" எனக் கூறி மறைந்தார்.

### சாஸ்தா மணிகண்டர் ஆனார்

கேரள நாட்டிலே பந்தளம் என்ற பகுதிக்கு பாண்டிய மன்னர் பரம்பரையில் வந்த ராஜசேகரன் என்பவன் மன்னனாய் இருந்தான். அந்த நாட்டின் அமைப்பு மலர்ந்த தாமரை மலர் போலக் காணப்பட்டதால் "பத்மதளம்" என்று பெயரிட்டனர். அதுவே மருவி பந்தளம் என்பர் பெரியோர்.



சிவ பக்த சிகாமணியாகத் திகழ்ந்த ராஜசேகரன் தன் பட்ட மஹிஷியுடன் குறைவின்றி வாழ்ந்தும் அவனுக்குப் புத்திரன் இல்லாதது பெரும் வேதனையை அளித்தது. தனக்கு ஒரு புதல்வனை அளிக்குமாறு ஸாம்ப பரமேச்வர மூர்த்தியை வழிபட்டான்.

ஒரு நாள் வன விலங்குகளை வேட்டையாடச் சென்ற ராஜசேகரன் மனித ஸஞ்சாரம் இல்லாத காட்டில் குழந்தையின் அழுகுரல் கேட்டு ஆச்சர்யம் அடைந்து அவ்விடம் சென்றான். அங்கே ஒரு குழவியைக் கண்டான்.

உதய சூரியனின் ஒளியும், சரத் காலத்திய சந்திரனின் தண்மையும், முறுவல் பூத்து அருளும் முக மண்டலமும், அருள் ஒழுகும் கண்களும், தாமரைக் குவியல் கை கால்கள் பெற்று எழுந்தது போன்ற உடல் வளமும் கொண்ட ஒரு பச்சிளங் குழந்தையைக் கண்டு வியந்தான். இக். குழந்தையின் தாய் தந்தையர் யார்? எப்படி இக் குழந்தை இங்கு வந்தது? சாம்ப பரமேச்வரர் ஒருக்கால் நம்மீது கருணை காட்டி இருக்கின்றாரோ! என்று சிந்திக்கும்போது சிவனே அந்தணரின் உருவில் வந்து, "மன்னா! இது உனக்காகத் தெய்வம் அளித்த பரிசு. நீ எடுத்துச் சென்று வளர்த்து வா. இக் குழந்தையின் பெருமையை சிறிது காலம் சென்ற பின்னர் நீ உணர்வாய்" என்று கூறி மறைந்தார்.

மன்னன் மகிழ்ந்து குழந்தையை மார்போடு அணைத்து மகிழ்ந்தான். குழந்தையின் கழுத்தில் இருந்த மணி மாலையைக் கண்ட மன்னன், அக் குழந்தைக்கு "மணிகண்டன்" என்று பெயரிட்டான். சாஸ்தா மணிகண்டர் ஆனதை மன்னன் அறிவானோ! அரண்மனை வந்து பட்ட மஹிஷியிடம் குழந்தையை அளித்தான். பந்தளம் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தது. பூதனாதன் கேரளத்தில் திருவிளையாடல் செய்யத் திருவுள்ளம் கொண்டான். இது மஹிஷீ வதத்திற்காக வந்த அவதாரம் என்பதை பின்னரே உணர்ந்தான் மன்னன். தேவ ரஹஸ்யம் மனித அறிவிற்கு எட்டும் திறமுடையதோ.

### குரு தக்ஷிணை

மன்னன், மணிகண்டனை குருகுலத்தில் சேர்த்தான். வித்யாப்யாசம் விதிப்படி முடிந்தது. மணிகண்டனிடம் பழகிய குரு, மனித உருவில் வந்த தெய்வம் இவன் என்று உணர்ந்தார். குருடனும், ஊமையுமாய்

இருக்கும் தன் மகனைக் குறைவற்றவனாகச் செய்து அருளுமாறு வேண்டினார். மணிகண்டனும் அவ்வாறே செய்து, அந்த ரஹஸ்யத்தைக் காக்குமாறு கேட்டுக் கொண்டார்.

### அறிவிழந்த அரசி

மணிகண்டர் வந்த வேளை நல்ல வேளை. பட்டமஹிஷியும் ஓர் ஆண் மகவைப் பெற்று அகம் மகிழ்ந்தாள். மணிகண்டர் ஸாந்நித்யம் உள்ள இடத்தில் ஸந்தானம், ஸம்பத்து, ஞானம், ஆரோக்யம் இவற்றிற்குக் குறை வருமோ?

மணிகண்டரின் அமானுஷமான, அற்புதமான அறிவைக் கண்டு மந்திரி பயந்தான். அப்படி அரச குமாரன் இருந்தால் மந்திரிக்கு மஹிமை ஏது? ஆகவே ரணியைக் கொண்டு மணிகண்டனை அப்புறப்படுத்தி முயற்சி செய்தான். அரசியிடம் சென்றான். ''தங்கள் பர்த்தா மன்னன், மணிகண்டனிடம் செலுத்தும் அன்பு அவனைப் பட்டத்து இளவரசன் ஆக்கி விடும் போல இருக்கிறது. தத்துப் பிள்ளைக்கு ராஜ்யம் போனால் சொந்தப் பிள்ளை பிச்சை எடுக்க வேண்டியதே'' என்பது போன்ற செய்திகளைக் கூறி, ராணியின் மனத்தில் விஷ விதைகளைத் தூவினான். தன் புத்திரன் அரச பரம்பரையில் இருந்து விலக நேர்ந்து விடுமோ என்று ஐயுற்ற ராணி, மந்திரியிடமே அதற்கான ஒரு யோசனையைக் கேட்டாள்.

மந்திரி கூறினான். ''அம்மா! தங்கள் மீதும் மன்னன் மீதும் அளவு கடந்த அன்பு கொண்டிருக்கிறான் மணிகண்டன். இதையே ஆயுதமாகப் பயன்படுத்தி அவனை அப்புறப்படுத்தி விடலாம். தாங்கள் தாங்கொணாத தலைவலியால் வருந்துவது போன்று நடிக்க வேண்டும். நான் வைத்தியரிடம் சொல்லி வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வருகிறேன். அவர் புலிப் பால் கொண்டு வந்தால் சரியாகும். இல்லையே ராணிக்கு ஆபத்து என்று ஏகோபித்துச் சொல்லி விடுவார்கள். மணிகண்டன் மனம் கலங்காது புலிப் பால் கொண்டு வரப் புறப்படுவான். இளங்கன்று பயம் அறியாது. போனவன் திரும்பி வரவே மாட்டான். இதுவே சிறந்த வழி'' என்றான்.

ராணி தலை வலியால் தவித்தாள். மன்னன் வேதனைப் பட்டுத் தவித்தான். வைத்தியர் ஏகோபித்து புலிப்பால் வேண்டும் என்றார்.



அன்னையின் துயர் தீர்க்கவும், மன்னம் மகிழவும், தான் வந்த காரியம் நிறைவேறவும் மணிகண்டன், ''நானே புலிப் பாலைக் கொண்டு வருவேன். இச் சிறு காரியம் ஸாதிக்கக் கலக்கம் ஏன்?'' என்று கூறி, வில்லும் அம்புகளும் கத்தியும் ஏந்தி கானகம் நோக்கி விரைந்து சென்றான். தேவர் தவம் பலித்தது.

### தேவர்கள் வரவேற்றனர்

ஐயனின் வரவை ஞான த்ருஷ்டியினால் கண்ட கொண்ட இந்த்ராதி தேவரும் முனிவரும் கானகத்திலேயே ஐயனை வரவேற்றனர். வேதங்களால் துதித்தனர். ஐயனை அழைத்துக் கொண்டு பொன்னம்பல மேடு சென்றனர். காந்த மலையில் பொன்னம்பலத்தில் அழகிய சிங்காதனத்தில் அமர்ந்தருள வேண்டினர். அமர்ந்த ஐயனிடம் தங்களுக்கு இதுவரை மஹிஷியால் நேர்ந்த துயரங்கள் அனைத்தையும் கூறி முறையிட்டனர். மஹிஷியை வதைத்து அபயம் அளிக்குமாறு பிரார்த்தித்தனர். ஐயனும் மஹிஷியை வதம் செய்வதாய் உறுதி அளித்தார். அதற்காகத்தானே மணிகண்ட அவதாரம் எடுத்து 12 ஆண்டுகள் அரண்மனையிலேயே தங்கியிருந்தார்.

### மஹிஷியின் வரலாறு

தனுவென்ற அரசனுக்கு ரம்பன், கரம்பன் என்று இரண்டு புத்திரர்கள் இருந்தனர். அதில் ரம்பனுடைய புத்திரனாகிய மஹிஷாசுரன் துர்கா தேவியினால் கொல்லப்பட்டபின்பு கரம்பனின் புதல்வியாகிய மஹிஷீ என்பவள் ப்ரஹ்ம தேவனைக் குறித்துத் தவம் செய்தாள். ப்ரஹ்மன் மகிழ்ந்து ''வரம் கேள்'' எனச் சொன்னார். அதற்கு ''ஹரி, ஹரன் இருவருக்கும் பிறந்த குழந்தை மனிதன் போல் பூலோகத்தில் 12 ஆண்டுகள் மனிதனுடன் வாழ்ந்து வருவானேயானால் அவனே என்னைக் கொல்லும் திறத்தினை உடையவன் ஆவான். மற்றவரால் எனக்கு மரணம் நேரக் கூடாது'' என்று வரம் பெற்றாள். அதன் காரணமாக அவள் தேவர்களை ஜயித்து, இந்த்ராதிகளை விரட்டி விட்டு, தேவ லோகத்தில் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தாள். ரிஷிகளும், தேவர்களும் அவளைக் கண்டு நடுங்கினர். அத்துடன் அவள் இறந்த பின் அவள் உடலின் மீது சூரிய ஒளி படுமானால் அவள் மீண்டும் வளரும்

வரத்தினையும் பெற்றிருந்தாள். ஆகவே ஐயனைத் தவிர மற்றவர்களால் அவரைக் கொல்ல முடியாது. தாங்கள்தான் அருள் புரிய வேண்டும் என்று வேண்டி நின்றனர்.

உடன் சாஸ்தா தேவர்களுடன் ஸ்வர்க்கம் சென்றார். மஹிஷியுடன் பெரும் போர் புரிந்து அவளைக் கொன்றார். பூமியில் விழுந்த அவள் உடலை தேவர்கள் கற்களைப் போட்டு மறைத்தனர். அளவற்ற ஆனந்தம் கொண்டு ஐயனைத் துதித்தனர்.

ஐயனும் இந்திரனை ஸ்வர்க லோகத்தின் அரியணையில் அமர்த்தி, அவர்களுடன் மீண்டும் காந்தமலை வந்தடைந்தார். தாய் புலிப் பால் கேட்டதை இந்திராதியரிடம் சொன்னார். இந்திரன் புலியாகி நின்றான். மணிகண்டர் அதன்மீது அமர்ந்தருளினார். இது கண்ட மற்றைய தேவர்கள் பெண் புலிகளாய் கூட வந்தனர்.

**தந்தையிடம் விடை பெற்றார்**

புலியின் மீதேறி புலிக் குழாம் புடைசூழவரும் மணிகண்டரைக் கண்டு பட்டினத்து ஜனங்கள் பயந்தோடினர். விபரம் அறிந்த அமைச்சன் மயக்கமுற்றான். அன்னை அடாது செய்தது நினைத்துத் துயரம் உற்றாள். தந்தையோ, மணிகண்டன் வரும் செய்தி அறிந்து ஓடோடி வந்தான். மைந்தனை வாரி அணைத்து உச்சி முகர்ந்தான். அவனுக்குப் புலிக் கூட்டம் பற்றிய நினைவே இல்லை. மைந்தன் மீது உள்ள பாசத்தால் அனைத்தையும் மறந்தான். மைந்தன் மீதுள்ள பாசம் மற்றதை மறக்கச் செய்தது.

மணிகண்டன் தந்தையின் பாசம் அறிந்து மகிழ்ந்தார். மந்திரியைத் தெளிய வைத்துத் தாயைத் தேற்றினார். "அன்னையே! ஆள ஆசை கொண்டு இங்கு நான் தங்கவில்லை. உலக க்ஷேமம் கருதி நின் அன்பு நிறைந்த அரவணைப்பில் மகிழ்வுடன் இருந்தேன். நான் வந்த காரியம் முற்றுப் பெற்றது. ராஜராஜன் உன் புதல்வன் இந் நாட்டில் நல்லாட்சி புரிவான். கானகம் செல்ல விடை அளியுங்கள்" என்று கூறி, தந்தை திருவடிகளை வணங்கி, "தந்தையே! நான் தேவ கார்யம் நிறைவேற்ற வந்தவன். தங்கள் அன்பிலே கட்டுண்டு கிடந்தேன். காந்தமலை செல்ல விடை கொடுங்கள். நான் சபரீ மலை மீதிருக்கும் ஒரு மரத்தில் ஒரு அம்பை நாட்டி வைப்பேன் அச்சரம் குத்தப் பெற்றிருக்கும் இடத்தில் எனக்கு ஆலயம் அமையுங்கள்" என்று கூறிப் பிரியாவிடை பெற்றுச்



சென்றார். தேவர்களும், ரிஷிகளும் புடைசூழ காந்தமலை சென்றார். அங்கு அமைக்கப்பட்ட சிங்காதனத்தில் அமர்ந்து தேவர் முதலியோரை அனுக்ரஹித்தார்.

**சபரீமலை சாஸ்தாவின் கோவில்**

மணிகண்டரின் பிரிவைத் தாங்காது ராஜசேகரன் மிகவும் வருந்தினான். அப்போது அங்கு கும்பமுனி அகஸ்தியர் வந்தார். "அரசே! தந்தை தாய் பிள்ளை பெண் பேரன் பேத்தி தாத்தா பாட்டி என்ற உறவினர்களின் சேர்க்கை தெய்வ வசத்தால் ஏற்பட்டது. அவரவர்களின் ப்ராரப்த கர்மா தீர்ந்தவுடன் அவரவர் இவ்வுலகத்தை விட்டுச் செல்கின்றனர். இதற்காக வருத்தப்படுவது உசிதமாகாது என்பன போன்ற உபதேசங்களைச் செய்து சோகத்தைப் போக்கினார். அகஸ்த்யரின் ஞானோபதேசம் மன்னனின் சோக மோஹத்தை நீக்கியது.

சில நாட்களுக்குப் பின்னர் ராஜ சேகரன் தன் படையுடன் கை தேர்ந்த சிற்பிகளுடன் புறப்பட்டு சபரீமலை நோக்கிச் சென்றான். அங்கு ஓர் இடத்தில் சரங்குத்திய மரத்தினைக் கண்டான். மணிகண்டனின் விருப்பப்படி அவ்விடத்தில் ஒரு கோயிலைக் கட்டத் தீர்மானித்தான். அந்தி வந்தது. படையுடன் படுத்து மணிகண்டரின் லீலைகளை நினைத்து நினைத்து மகிழ்ந்தவனாய் உறங்கினான். மற்றவர்களும் உறங்கினர்.

இந்த சமயம் மணிகண்டரின் ஆணையினால் ஒரு பூதம் யாரும் அறியாமல் ராஜசேகரனைத் தூக்கிச் சென்று காந்த மலையில் சாஸ்தாவின் சந்நிதியிலே விட்டது. அங்கு சென்றவுடன் நித்திரை தெளிந்த மன்னன் அங்குள்ள பொற்கோயிலில் தேவர்கள், முனிவர்கள் புடைசூழ அரியணையில் வீற்றிருக்கும் சாஸ்தாவைக் கண்டான். அவரும் தந்தையை வரவேற்று, உபசரித்து, சோகம் போக்கி, "தந்தையே இங்கே நான் இப்போது அமர்ந்திருக்கின்ற இக் கோலத்திலேயே எனக்குச் சிலை வடித்துப் பிரதிஷ்டை செய்யுங்கள். அதற்கு ஏதாவது இடையூறு தோன்றினால் அதைக் களைய இக் கத்தியைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்" என்று கூறி ஒரு கத்தியையும் கொடுத்து மகிழ்ந்தார். உடன் பூதம், மீண்டும் பழைய இடத்திற்கே மன்னனைக் கொண்டு வந்து விட்டது.

மன்னன் மகிழ்ந்து அவ்வாறே சிலை செய்தான். கிரீடம், மகர குண்டலம் முதலிய ஸர்வாபரண்ம் நிறைந்த மூர்த்தி, சின்முத்ரை தாங்கும் வலக்கரமும், முழங்காலின் மீது நீட்டிய இடது கரத்தலமும் கொண்டு யோக பட்டதாரியாய் இணைந்த திருவடிகளும் குந்தி அமர்ந்த திருக்கோலமும் கொண்டு காட்சி அளித்தது.

கரம் தக்ஷிணம் ஞான முத்ராபிராமம்
வரம் வாம ஹஸ்தம் ச ஜானுபரிஸ்தம்।
வஹுந்தம் ஸதாயோக பட்டாபிராமம்
பஜேசம்பு விஷ்ணவோஸ்ஸுதம் பூதநாதம்॥
(மணிகண்டரும் மஹா சாஸ்தாவும் பக்கம் 83)

தேவாலயம் கட்டச் சிறப்புற ஏற்பாடுகள் நடந்தன. இதை அறிந்த இந்த்ரன், "இம்மானிடனோ சாஸ்தாவிற்குக் கோயில் அமைப்பது. விச்வகர்மா நிர்மாணம் செய்ய வேண்டிய கோயிலை, சில நாட்களே வாழும் மானுடச் சிற்பியா கட்டுவது" என்று அகந்தை கொண்டு தேவருடன் வந்து திருப்பணியைத் தடுத்தான். இந்திரனுக்கும் அரசனுக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. இந்திரன் வஜ்ராயுதம் எடுத்தான். மன்னனோ மணிகண்டன் கொடுத்த வாளினை எடுத்து தேவேந்த்ரன் மீது வீசினான். வஜ்ரம் சக்தி அற்று நின்றது. வாளோ இந்த்ரனைத் துரத்திச் சென்றது. இந்திரன் உலகெங்கிலும் ஓடினான். சாஸ்தாவின் பக்கத்துத் தவறு இழைத்தவரைக் காப்பரோ பிறர். வழியின்றி மன்னனையே சரணடைந்தான் இந்திரன். மன்னனும் அபயம் அளித்தான்.

இந்திரன் பிரார்த்தனைக்கு இணங்க, தேவ சிற்பியின் கைத் திறனும் மனிதச் சிற்பியுடன் பங்கு பெற்றது. கோயில் தெய்வாம்சமும் மானிடாம்சமும் கொண்டு திகழ்ந்தது.

### பதினெட்டுப் படிகள்

பதினெட்டுப் படிகள் அமைத்து அதன்மீது சாஸ்தாவை அமர்த்தினர். பதினெட்டுப் படிகள் பல தத்வங்களை நமக்கு உணர்த்துகின்றன.

1. வித்யாஸ்தானங்கள் பதினெட்டு என்பர் சாஸ்த்ரம் அறிந்தோர். அந்த 18 வித்யாஸ்தானங்களினாலும் அடையத் தகுந்தவர் ஹரிஹரசுதனாம். மாபெரும் தெய்வம் சாஸ்தாவே என்பதை 18 படிகள் குறிப்பிடுகின்றன.



"கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்பார் தெய்வ மகாகவித் திருவள்ளுவர்.

2. மொத்தம் பதினெட்டுப் புராணங்கள். அப் புராணங்களால் அடையத் தகுந்தவன் ஹரிஹர ப்ரஹ்ம ஸ்வரூபியான தாரக ப்ரஹ்மமாம் சாஸ்தாவே என்பதும் இதனால் உணர்த்தப்படுகின்றது.

3. 18 பர்வாக்கள் கொண்ட மஹா பாரதத்தின் ஸாரமானதாகிய 18 அத்யாயங்கள் கொண்ட கீதையின் குறிக்கோளே, "என்னை சரணாகதி செய். அனைத்துப் பாபங்களில் இருந்தும் நான் உன்னை விடுவிக்கிறேன்" என்பதல்லவா. அதையும் இப்படிகள் குறிப்பிடுகின்றன போலும்.

4. மொத்தம் பரசுராமரின் வேண்கோளின்படி கேரளத்திலே 18 இடங்களில் தர்மசாஸ்தா பிரதிஷ்டை செய்யப்பட்டு இருக்கின்றார். அந்தப் பதினெட்டு இடங்களைத் தர்சனம் செய்த பலன் இப் பதினெட்டுப் படிகள் ஏறி தர்சனம் செய்தால் கிடைக்கும் என்ற குறிப்பையும் கொள்ளலாம்.

இவ்வாறான 18 படிகள் கொண்ட பீடத்தின் மீது சாஸ்தாவின் விக்ரஹத்தைப் பரசு ராமர், அகஸ்த்யர், தேவர், முனிவர், இவர்கள் சன்னதியில் தை மாதம், கிருஷ்ண பக்ஷம், பஞ்சமி திதி, உத்திர நக்ஷத்ரம் கூடிய சனிக் கிழமையில் ப்ரதிஷ்டை செய்து மகிழ்ந்தான் பந்தள மன்னன். இங்கு (தத்தகிரி) பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சிலாமூர்த்தியின் உயரம் 6½ அடியாகும்.

ஸ்வாமியே சரணம் ஐயப்பா.

# கருப்பண்ண ஸ்வாமி

**மஹாகாளன்**

மஹா காளன் என்ற கருப்பண்ண ஸ்வாமி, பூதநாதன் ஆகிய மஹா சாஸ்தாவின் அன்பிற்குப் பாத்திரனாகிய கணநாதன். பூதகணங்களுக்கு நாயகனாகிய சாஸ்தா இவர் மூலமாகவேதான் ஆணை இட்டருளுவார். மஹா சாஸ்தாவின் ஆணையை சிரமேற் கொண்டு அவர் எண்ணங்களைப் பூர்த்தி செய்யும் திறனுடையவர் கருப்பண்ண ஸ்வாமி.

**த்யானம்**

**த்விபுஜம் பீன க்ருஷ்ணாங்கம் பப்ருச்மச்ரு சிரோரு ஹம்।**
**கதாம் கட்கம்ச பிப்ராணம் மஹாகாலம் வயம் நும:॥**
**என்பது இவர் தியானம்**

(கதை, கத்தி ஏந்திய இரு கைகளுடன் கூடியவர். பருத்த கரிய திருமேனி உடையவர். மஞ்சள் நிற மீசை, கேசம் உடையவர். இவ்வாறான மஹா காளரை வணங்குவோம் என்பது இதன் பொருள்).

சூரபத்மாதியரால் விரட்டப்பட்ட இந்திரன் இந்திராணியுடன் சீர்காழியிலே மறைந்து வாழ்ந்தான். தேவர் அவனைக் கைலைப்பதி அழைத்துச் செல்ல முற்பட்டனர். அவன், இந்திராணியைத் தனிமையில் விட்டுச் செல்வது ஆபத்து என நினைத்து மஹா சாஸ்தாவை வேண்டினான். காவல் தெய்வமாயிற்றே ஐயப்பன். மஹாசாஸ்தா இந்திரன் முன் தோன்றி, "தேவர் தலைவ! நான் இந்திராணிக்குத் தீங்கு நேராது காப்பேன். அஞ்சேல் சென்று வருக" என விடை கொடுத்து அனுப்பினார்.

பின் தன் தானைத் தலைவனாகிய மஹா காளனை அழைத்து, "இவளை நீ காத்து நில்" என ஆணையிட்டார். சாஸ்தாவின் ஆணையை சிரமேற் கொண்டு மஹா காளன் இந்திராணியைக் காத்து வந்தார். இந்திராணியும் சீர்காழியில் உள்ள நந்தவனத்தில் தவம் புரிந்து வந்தாள்.

இப்படி இருக்கும்போது சூரபத்மாவின் தங்கையான அஜாமுகி தன் தோழி துன்முகியுடன் புறப்பட்டு வரும்போது எதிர்பாராத விதமாக



இந்திராணியை கண்டாள். உடனே அவளைத் தூக்கிக் கொண்டு வீரமாஹேந்திரம் சென்று சூரபத்மனுக்கு அளிக்க ஆசை கொண்டாள். இந்திராணியைப் பலாத்காரமாக இழுத்தாள். அவள் பயந்து நடுங்கி,

**பையரா அமளியானும் பரம்பொருள் முதலும் நல்கும்**
**ஐயனே ஒலம், விண்ணோர்க்காதியே யோலம் சொண்டார்**
**கையனே யோலம் எங்கள் கடவுளே யோலம் மெய்யார்**
**மெய்யனே யோலம் தொல்சீா வீரனே யோலம் ஒலம்**

என்றபடி ஹரியும் ஹரனும் தந்த ஐயனே! விண்ணோர்க்கு ஆதியே! செண்டுறு கையனே! மங்கையர் கற்பினைக் காக்கும் கடவுளே! சிறப்புற்ற வீரனே! என்னைக் காத்தருள்!" எனக் கதறினாள்.

இது கேட்ட சாஸ்தாவின் கணத் தலைவனாகிய கருப்பண்ண ஸ்வாமி (வீர மாகாளன்) விரைந்து ஓடி வந்து, அஜாமுகியைத் தடுத்தான். அவனைக் கண்ட அஜாமுகி, "நீ யார்?" என்று வினவ, அவன் "வெள்ளை வாரணத்தை வாஹனமாகக் கொண்டவனும், ஹரிக்கும் ஹரனுக்கும் பிறந்தவனும், இவ்வுலகங்கள் காக்கும் தெய்வமும் ஆகிய சாஸ்தாவின் அடிபணியும் ஏவலாளன் நான்" என்று தெரிவித்துக் கொண்டான்.

அது கேட்ட அஜாமுகி, கோபித்துத் தன் கையில் இருந்த சூலத்தை மஹாகாளன் மீது ஏவினாள். அதை அவன் தூளாக்கினான். மீண்டும் துன்முகியின் கையில் இக்கும் சூலத்தை வாங்கி, அவன் மீது வீசினாள். அதையும் அவன் துண்டித்து வீழ்த்தினான். அஜாமுகியோ ஒரு மலையை எடுத்து எறிந்து மஹாகாளன் கத்தியை வீணாக்கினான்.

இதனால் பெரிதும் கோபம் அடைந்த கருப்பண்ண ஸ்வாமி அஜாமுகியை பிடித்து இழுத்து, இந்திராணியைத் தொட்ட கையை வெட்டி வீழ்த்தினான். தன் தாளால் உதைத்து அவளைப் பூமியிலே உருட்டினான். சினந்த துன்முகியின் ஒரு கையையும் வெட்டினான். அவளும் சசி தேவியைத் தீண்டினாள் அல்லவா? இந்த மஹா காளனை சித்தங்காத்தான் என்ற பெயராலும் அழைப்பர். பீடாபஹாரி என்றும் இவரைப் புகழ்வர். இவர் கோயில் ஒன்று காவிரிப் பூம்பட்டிணத்திலே உள்ளது. இவர் சிவனுக்கு நந்திகேச்வரர் போன்று சாஸ்தாவிற்கு உறுதுணையாக பக்கத்திலே காத்திருப்பார். இங்கு (தத்தகிரி) பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சிலா விக்ரஹத்தின் உயரம் 7 அடியாகும்.

உ

# கலி தோஷம் நீக்கும் தத்தகங்கை

## தியானம்

या स्मृतोच्चारिता दृष्टा पीता पाप मुपार्जितं।
विनाशयति कल्याणी तां गंगां हृदि भावये॥

யா ஸ்ம்ருதோச்சாரிதா த்ருஷ்டா பீதா பாப முபார்ஜிதம்।
விநாசயதி கல்யாணீ தாம் கங்காம் ஹ்ருதி பாவயே॥

நினைத்தாலும், சொன்னாலும், கண்டாலும், அருந்தினாலும் எந்த மங்களம் அளிக்கும் கங்கை செய்த பாபங்களைப் போக்குகின்றதோ அந்தக் கங்கையை ஹ்ருதயத்தில் தியானிக்கிறேன்.

सित मकरनिषर्णां शुभ्रवर्णां त्रिनेत्रां
कर धृतकलशोद्यत् सोत्पला भीत्यभीष्टां।
विधि हरि हर रूपां सेन्दु कोटीरजुष्टां
कलित सित दुकूलां जान्हवीं तां नमामि॥

ஸிதமகர நிஷண்ணாம் சுப்ரவர்ணாம் த்ரிநேத்ராம்
கர த்ருத கலசோத்யத் ஸோத்பலா பீத்ய பீஷ்டாம்।
விதி ஹரிஹர ரூபாம் ஸேந்து கோடீர ஜுஷ்டாம்
கலித ஸிததுகூலாம் ஜான் ஹவீம் தாம் நமாமி॥

வெண்ணிற முதலை மீது அமர்ந்திருப்பவளும், வெண்ணிறம் உடையவளும், முக்கண்ணியும், தன் கரங்களில் கலசம், நீலோத்பல மலர், அபயம், வரம் இவைகளைத் தாங்குபவளும், ப்ரஹ்ம, விஷ்ணு, சிவ ஸ்வரூபிணியும், சந்திர கலையுடன் கூடிய கிரீடத்தினை உடையவளும், வெண் பட்டு அணிந்திருப்பவளுமாகிய கங்கா தேவியை வணங்குகிறேன்.

ஸ்ரீமத் ராமாயணத்திலே ஸீதா கல்யாணத்திற்காக ராம லக்ஷ்மணர்களை அழைத்துச் செல்லும் விச்வாமித்ர மஹர்ஷி கங்கா நதி தீரத்தில் ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களுக்குக் கங்கை நதியின் வரலாறு பற்றி கூறி அருளினார். அந்த வரலாற்றை இங்கே காண்போம்.



நம் நாட்டில் கங்கை, யமுனை, கோதாவரி, ஸரஸ்வதி, நர்மதா, ஸிந்து, காவேரி என ஏழு நதிகள் சிறப்பு மிக்க புண்ய நதிகளும் ஜீவ நதிகளுமாகும். இதில் மிகச் சிறந்த வரலாற்றுப் பெருமையுடைய நதி கங்கையாகும். இது தெய்வ நதி. இதை ஆகாயத்தினின்றும் பூமி வந்த கங்கை என்பர். தேவரும் ஸ்னானம் செய்யும் பெருமையினை உடையது இது. கங்கை என்று 100 யோஜனை தூரத்திற்கு அப்பாலிருந்து கூறினாலும் போதும். உடன் அவர்களுடைய அனைத்துப் பாபங்களில் இருந்தும் விடுபடுகின்றான். பெரும் பாக்யமும் பெறுகின்றான் என்கிறது புராணம்.

முன்பு அயோத்தியில் ஸகரன் என்றொரு மன்னன் இருந்தான். இவனுக்குக் கேசினி என்றும், ஸுமதி என்றும் இரு மனைவியர் இருந்தனர். அதில் ஸுமதி என்பவள் கருடனின் ஸஹோதரி.

ஸகரன் தனக்குப் புத்திரன் வேண்டி ஹிமாலயத்தில் நூறு ஆண்டுகள் தவம் இயற்றினான். பிருகு என்ற முனிவரின் அருளால் ஸுமதி என்பவள் அறுபதினாயிரம் புத்திர்களையும், கேசினி என்பவள் வம்சத்தை விருத்தி செய்யக் கூடிய ஒரு புதல்வனையும் பெற்றாள்.

அந்தக் கேசினியின் புதல்வன் பெயர் அஸமஞ்ஜன். இவன் நாட்டில் உள்ள குழந்தைகளை எடுத்து ஸரயூ நதியில் போட்டு ஹிம்ஸித்து மகிழ்ந்தான். அவ்வாறான க்ரூர குணம் படைத்த புத்ரனை ஸகரன் நாடு கடத்தி விட்டான்.

இந்த அஸமஞ்ஜனுக்கு அம்சுமான் என்ற ஒரு புதல்வன் இருந்தான். இவன் பல நற்குணங்கள் படைத்தவன். இவனிடம் ஸகர மஹாராஜா பெரும் பற்றுடன் வாழ்ந்து வந்தார்.

இவ்வாறான சமயத்தில் ஸகரன் அசுவமேத வேள்வி செய்யத் தொடங்கினான். அச்வமேதக் குதிரையைக் காத்து பின் சென்றான் சூரனாகிய அம்சுமான். இந்திரன் அரக்க வேடத்தில் வந்து குதிரையைப் பாதாளம் எடுத்துச் சென்று அங்குத் தவம் செய்யும் கபில மஹர்ஷியின் பக்கத்திலேயே நிறுத்திச் சென்று விட்டான். அம்சுமான் குதிரையைக் காணாது ஸகரனிடம் தெரிவித்தான். ஸகரன் தன் அறுபதினாயிரம் புத்திரர்களை அழைத்து குதிரையைத் தேடிக் கொண்டு வருமாறு கட்டளை இட்டான்.

பூமி முழுவதும் தேடியும் குதிரையைக் காணாததால், ரஸாதலம் வரை தோண்டிச் சென்றனர். அவர் கீழே பூமியைத் தாங்கி நிற்கும் அஷ்ட

திக் கஜங்களையும் கண்டனர். மஹாவிஷ்ணு ஸ்வரூபியான கபில மஹர்ஷியையும், அவர் பக்கத்திலேயே அச்வமேதக் குதிரையையும் கண்டனர். அவர்தான் குதிரையைத் திருடியிருப்பார் என்று தவறாக நினைத்து ஆத்திரம் அடைந்தனர். எனவே, ஸகர புத்ரர்கள் கபிலரைத் துன்புறுத்தத் தொடங்கினர். அதனால் கோபம் கொண்ட கபிலர், தன் விழிகளால் சினக்க, அறுபதினாயிரம் புதல்வர்களும் எரிந்து சாம்பலாயினர்.

சென்றவர்கள் திரும்பாததைக் கண்ட ஸகரன் தன் பேரன் அம்சுமானை அழைத்து, சென்றவர்களைத் தேடி வருமாறு பணித்தான். அவனும் ஆயுதபாணியாய்ப் புறப்பட்டு ரஸா தலத்திலே தன் பெரிய தந்தையர்களான அறுபதினாயிரம் பேரும் சாம்பலாய்க் கிடந்ததைக் கண்ட கதறினான். அவர்களுக்குத் தர்ப்பணம் செய்ய நினைத்தான்.

அந்தச் சமயத்தில் அங்கு வந்த கருடன், ''மன்னா! கபில கோபத்தால் உன் பெரிய தந்தையர்கள் அனைவரும் அழிந்தனர். இவர்களுக்கு மற்றவர்களுக்குப் போல் சாதாரண ஜலத்தில் தர்ப்பணம் செய்வது உசிதமாகாது. விசேஷமாக ஆகாய கங்கையைக் கொண்டு வர முயற்சி செய்'' எனக் கூறிச் சென்றான்.

அம்சுமான் ரஸாதலத்தில் இருந்து குதிரையைக் கொண்டு வந்து ஸகர மஹாராஜாவிடம் சேர்த்தான். 60,000 பேர்களுக்கும் நிகழ்ந்த விபத்தையும் தெரிவித்தான். ஸகரன் வருந்தி, அச்வமேதத்தைப் பூர்த்தி செய்து விட்டு அயோத்திக்குச் சென்று 30 ஆயிரம் வர்ஷங்கள் ஆட்சி புரிந்தான். ஆயினும் ஆகாய கங்கையைக் கொண்டு வர முடியாமலேயே ஸ்வர்க்கம் சென்று விட்டான்.

அதன் பின்னர் அம்சுமான் அரசாண்டான். அவன் தன் பிள்ளை திலீபனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்த விட்டு ஆகாய கங்கையைக் கொண்டுவர 32 ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்தும் முடியாமல் ஸ்வர்க்கம் அடைந்தான்.

திலீபனும் 30 ஆயிரம் ஆண்டுகள் அரசு செய்த பின்னர் வியாதியினால் பீடிக்கப்பட்டு ஸ்வர்க்கம் சென்றான்.

**பகீரதனின் பெருமுயற்சி**

இவன் பிள்ளை பகீரதன் உடன் புறப்பட்டு, கோகர்ண க்ஷேத்ரம் சென்றான். இரண்டு கைகளையும் உயரே தூக்கிக் கொண்டு மாதம் ஒருமுறை உண்டு ஜிதேந்த்ரியனாய் பஞ்சாக்னி மத்தியில் நின்று 1000 ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தான்.



அதனால் மகிழ்ந்த ப்ரஹ்மா, அவனிடம் வர, பகீரதன், ''ஐயனே! என் மூதாதையர்கள் கடைத்தேற ஆகாய கங்கையைத் தந்தருள வேண்டும். அந்த ஜலத்தால் என் பித்ருக்கள் திருப்தி அடைய வேண்டும்'' என்று வரம் கேட்டான்.

ப்ரஹ்மா சொன்னார், ''பகீரதா! ஆகாய கங்கை பூமிக்கு வந்தால் அவளுடைய வேகத்தைப் பூமியினால் தாங்க முடியாது. அதைத் தாங்க பகவான் பரமசிவன் ஒருவரால்தான் முடியும். ஆகவே அவரை அதற்காக வேண்டுவாயாக'' எனக் கூறினார். இதைக் கங்கையிடமும் கூறிச் சென்றார் ப்ரஹ்மா.

உடனே பகீரதன் கையை உயரே தூக்கிக் கொண்டு பிடிப்பு இல்லாமல் காற்றை மட்டும் உட்கொண்டு, கட்டை விரலை மட்டும் ஊன்றிக் கொண்டு, கட்டை போன்று இரவு பகலாய் ஒரு வருஷ காலம் சிவனைக் குறித்துக் கடுந்தவம் செய்தான். சிவன் நேரே வந்து, ''பகீரதா! நீ கவலையுறாதே. நான் கங்கையைத் தாங்குகிறேன்'' என்று அருளினார்.

இதை உணர்ந்த கங்கா தேவி, மிகவும் அகந்தை கொண்டாள். சிவனைப் பாதாளத்தில் வீழ்த்துகிறேன் என்று வேகமாக வந்து, சிவஜடா பாரத்தில் வீழ்ந்தாள். ஹிமாலயம் ஒத்த சிவ ஜடா பாரத்தில் பல வருஷங்கள் சுற்றிச் சுற்றி வந்தாள். அவர் சிரத்தை விட்டு வெளியே வர முடியவில்லை கங்கையால்.

இது கண்டு வருந்திய பகீரதன், மீண்டும் பூமியில் விடுமாறு சிவனைக் குறித்துக் கடுந்தவம் செய்தான். பகவான் தன் சிரத்தில் இருந்து கங்கையை பிந்து ஸரஸ்ஸிலே விட்டார். அங்கிருந்த கங்கை ஏழு நதிகளாய்ப் பிரிந்து ஓடத் தொடங்கினாள். சுசக்ஷு, ஸீதா, ஸிந்து என்று மூன்று நதிகளாக மேற்கே சென்றாள். அளகநந்தா எனப் பெயர் தாங்கிய நதியாய் பகீரதனுடன் சென்றாள்.

இவ்வாறு கங்கை பகவானின் சிரத்தில் இருந்து கீழே வீழ்ந்தவுடன் பரம பவித்ரமாக, மாசு அற்றவளாக விளங்கினாள். அங்கு குழுமிய தேவர்களும், முனிவர்களும், கந்தர்வர்களும், பூவுலகத்தோரும் அதில் மகிழ்வுடன் ஸ்னானம் செய்தனர். முன்பே தேவ நதி பவித்ரமானது. இப்போது பரம பவித்ரமான ஜடையின் ஸ்பர்சம் பெற்றிருக்கின்றதே கங்கை.

பகீரதன் ரதத்தில் செல்ல, அவனைப் பின்தொடர்ந்து வரும் வழியிலே வேள்வி செய்து கொண்டிருக்கும் ஜன்ஹு மஹர்ஷியின் வேள்விச் சாலையை ஜலத்தால் மூழ்கடித்தாள். அது கண்ட ஜன்ஹு மஹர்ஷி கோபித்து கங்கை ஜலம் முழுவதையும் அருந்தி விட்டார். பின் அனைவரின் வேண்டுகோளுக்கு இணங்கி, தன் காதுகளின் வழியாய் விட்டார் மஹர்ஷி. ஜன்ஹுவிடம் இருந்து மீண்டும் வந்ததால் ஜான்ஹவி என்று அழைக்கப்படுகின்றாள்.

பகீரதன் ரஸாதலம் செல்ல கங்கையும் அங்கு சென்றாள். தன் தூய ஜலத்தால் ஸகரர் புத்திரர்களின் சாம்பலைக் கரைத்தாள். அவர்கள் ஸ்வர்கம் சென்றனர். பின் கங்கை கடலில் சேர்ந்தாள்.

**பாகீரதி**

இதனால் மகிழ்ந்த ப்ரஹ்மா பகீரதனைப் பார்த்து, ''பகீரதா! கடல் நீர் எது வரை உள்ளதோ அதுவரை ஸகர புத்திரர் ஸ்வர்க வாஸம் செய்வர். நீ கொண்டு வந்ததால் இந்தக் கங்கை பூவுலகில் பாகீரதி என்று பெயர் பெறுவாள்'' என்று கூறி மறைந்தார்.

இந்தக் கங்கை ஆகாயத்தில் இருந்தும் பூவுலகை அடைந்தவரலாற்றைச் சொல்லுபவரின் பித்ருக்களும் தேவர்களும் திருப்தி அடைகின்றனர். இச் சரிதம் கேட்கப் பாக்யம் செய்திருக்க வேண்டும். இது ஆயுளை நல்கும். ஸ்வர்க வாஸ சுகத்தை அளிக்கும். புத்திர பேற்றையும் அளிக்கும். இதைக் கேட்பவர்கள் பாபத்தில் இருந்தும் விடுபடுவர். இந்தக் கங்கையின் கரையில் மூன்று நாள் இரவுகள் தங்கினாலே போதும். செய்த பாபங்கள் அனைத்தும் போகும். இந்தக் கங்கா ஸ்னானம் காசியில் மிகவும் விசேஷ பலனைக் கொடுக்கும். அங்கு போக முடியாதவர்கள் இங்கு கங்கையை வணங்கி, ''தத்த கங்கையில்'' ஸ்னானம் செய்தும் அந்தப் பயனைப் பெறுவாராக. இங்கு (தத்தகிரியில்) பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள தத்த கங்கா தேவியின் உயரம் 7½ அடிகளாகும்.

**தர்மாப்தி கூறும் கங்கை போக்கும் பாபங்கள்**

இந்தக் கங்கா ஸ்னானம் பத்துவிதப் பாவங்களைப் போக்கும்.

1. அனுமதியின்றியே பிறர் பொருளை எடுத்துக் கொள்ளுதல்; 2. ஜீவ ஹிம்ஸை; 3. பிறன் தாரம் கொள்ளல்; 4. பிறர் மனம் நோகப் பேசுதல்; 5. பொய் கூறுதல்; 6. கோள் சொல்லுதல்; 7. ஆபாசப் பேச்சு; 8. பிறர் பொருளைத் திருட எண்ணுவது; 9. மனத்தால் தவறு செய்ய நினைப்பது; 10. தேவையற்ற விஷயங்களில் மனத்தினை ஈடுபடுத்துவது என்பனவாகும்.



இவை கங்கா ஸ்னானத்தால் போகும் எனப் பேசுகிறது தர்மாப்தி என்ற நூல்.

இத்துடன் தனக்கு முந்திய 33 தலைமுறையினரை இதில் செய்யும் ஸ்னானம் கடைத்தேறச் செய்யும்.

**கங்கா மந்த்ரம்**

**ओं नमो भगवत्यै दशपापहरायै**
**गंगायै नारायण्यै रेवत्यै**
**शिवायै दक्षायै अमृतायै विश्वरूपिण्यै**
**नन्दिन्यै ते नमो नमः**

ஓம் நமோ பகவத்யை தசபாபஹராயை
கங்காயை நாராயண்யை ரேவத்யை
சிவாயை தக்ஷாயை அம்ருதாயை விச்வரூபிண்யை
நந்தின்யை தே நமோ நம:

## श्री दत्तगिरि स्कन्द सुप्रभातम्
### ஸ்ரீ தத்தகிரி முருகன் ஸுப்ரபாதம்

श्रीगणेशानुजोत्तिष्ठ गौरीशंकरनन्दन।
उत्तिष्ठ देवसेनेश दत्तशैल कृतालय॥

ஸ்ரீகணேசானுஜோத்திஷ்ட கௌரீசங்கரநந்தன।
உத்திஷ்ட தேவஸேனேச தத்தசைல க்ருதாலய॥

ஸ்ரீ மஹா கணபதியின் தம்பியும், கௌரீ சங்கரர்களின் தனயனும் தத்த கிரியில் அமர்ந்தருள்பவனுமாகிய தேவஸேனாபதே எழுந்தருளும்.

पार्वती सुप्रजाः स्कन्द भविष्यत्यरूणोदयः।
उत्तिष्ठ करुणामूर्ते कर्तव्यं लोकरक्षणम्॥

பார்வதீ ஸுப்ரஜா: ஸ்கந்த பவிஷ்யத்யருணோதய:।
உத்திஷ்ட கருணாமூர்தே கர்தவ்யம் லோகரக்ஷணம்॥

பார்வதி நற்குழந்தை பெற்றவள். ஸ்கந்தரே அருணோதயம் ஆகப் போகின்றது. கருணாமூர்த்தியாகிய தாங்கள் உலகைக் காக்க எழுந்தருள வேண்டும்.

उत्तिष्ठ कृत्तिकापुत्र गांगेय लवलीपते।
उत्तिष्ठ सर्वलोकेश मङ्गलं कुरू नः प्रभो॥

உத்திஷ்ட க்ருத்திகாபுத்ர காங்கேய லவலீபதே।
உத்திஷ்ட ஸர்வலோகேச மங்கலம் குரு ந: ப்ரபோ॥

க்ருத்திகை குமாரரும் கங்கையின் புதல்வரும் வள்ளியின் பதியும் ஸர்வ லோகங்களுக்கும் ஈசனுமாகிய தாங்கள் எழுந்திருங்கள். எழுந்திருங்கள். ப்ரபோ எங்களுக்கு மங்களம் செய்வீராக.

श्रीशेंदमङ्गलग्रामे दत्ताद्रि शिखरस्थित।
स्वयं प्रकाशयोगीड्य दर्शनं देहि नः प्रभो॥

ஸ்ரீசேந்தமங்கலக்ராமே தத்தாத்ரி சிகரஸ்தித।
ஸ்வயம் ப்ரகாசயோகீட்ய தர்சனம் தேஹி ந: ப்ரபோ॥



ஸ்ரீசேந்தமங்கல கிராமத்தில் தத்தகிரியின் மேல் வீற்றிருக்கும் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச யோகியினால் பூஜிக்கப்பட்ட முருகா! எனக்குத் தர்சனம் அருள்வாயாக.

त्वत्स्यन्दनध्वजगतोऽचलतुल्यदेहः
पक्षौ प्रसार्य परिनर्दति दीर्घकण्ठः।
आवेदयन्जनिमतां भुवि कुक्कुटेशः
त्वत्पादपंकजजुषां गुह सुप्रभातम्॥

த்வத்ஸ்யந்தன த்வஜ கதோ(அ)சல துல்ய தேஹ:
பக்ஷௌ ப்ரஸார்ய பரி நர்ததி தீர்க கண்ட:।
ஆவே தயன் ஜனிமதாம் புவி குக்குடேச:
த்வத் பாத பங்கஜஜுஷாம் குஹ ஸுப்ரபாதம்॥

முருகா! உன் ரதத்தின் கொடியில் உள்ள மலை போன்ற பெரிய சரீரம் உடைய சேவல், தன் இறகை விரித்து கழுத்தை நீட்டி, உலகில் உன் பாதாரவிந்தங்களை அடைந்த ஜீவர்களுக்கு ஸுப்ரபாதத்தை (சுபமான காலை நேரம்) தெரிவித்துக் கொண்டு உரக்கக் கூவுகின்றது.

मद्दर्शनं सकलभाग्यकरं भवे
दित्यावेदयन्निव षडानन वाहनं ते।
त्वन्मन्दिरस्य पुरतः प्रसृत स्वबर्हः।
केकी प्रनृत्यति विभो तव सुप्रभातम्॥

மத்தர்சனம் ஸகல பாக்யகரம் பவே
தித்யாவேத யன்னிவ ஷடானன வாஹனம் தே।
த்வன் மந்திரஸ்ய புரத: ப்ரஸ்ருத ஸ்வ பர்ஹ:
கேகீ ப்ரந்ருத்யதி விபோ தவ ஸுப்ரபாதம்॥

ஆறுமுக! என்னைப் பார்த்தால் அனைத்துப் பாக்யங்களும் உண்டாகும் என்று தெரிவிப்பது போன்று, தோகையை விரித்துக் கொண்டு உன் வாஹனமாகிய மயில் உன் கோயிலின் எதிரே நர்த்தனம் செய்கின்றது. முருகா! உமக்கு ஸுப்ரபாதம்.

त्रैपुण्ड्रकोद्भासिललाटपट्ट
संचुंबिनीलालक सुन्दरास्य।
भ्रूमध्य राजत्तिलका - ब्जहार
श्री दण्डपाणे तव सुप्रभातम्॥

த்ரை புண்டரகோத் பாஸி லலாட பட்ட
ஸம்சும்பி நீலாளக ஸுந்தராஸ்ய।
ப்ரூமத்ய ராஜத் திலகா - ப்ஜ ஹார
ஸ்ரீ தண்டபாணே தவ ஸுப்ரபாதம்॥

முப்பட்டையாக உள்ள விபூதியினால் மிளிரும் நெற்றியில் தொங்கும் கருத்த அளகங்களால் (சிறிய சிறிய கேசங்களால்) அழகிய முகத்தினை உடையவரும், புருவங்களுக்கு இடையில் பிரகாசிக்கின்ற திலகத்தினை உடையவரும், தாமரை மலர் மாலையை உடையவருமான ஸ்ரீ தண்டபாணி தெய்வமே உமக்கு ஸுப்ரபாதம்.

त्वदीयभासा किल भान्ति भास्वत्
सुधाकरादि ग्रह तारकाणि।
महेश फालेक्षण वन्हिजात
ज्येतिर्निधे ते गुह सुप्रभातम्॥

த்வதீயபாஸா கில பாந்தி பாஸ்வத்
ஸுதா கராதி க்ரஹ தாரகாணி।
மஹேச பாலேக்ஷண வன்ஹி ஜாத
ஜ்யோதிர் நிதே தே குஹ ஸுப்ரபாதம்॥

தங்களிடம் இருந்து பெற்ற ஒளியினாலேயே சூரியன், சந்திரன் முதலிய கிரஹங்களும், நக்ஷத்ரங்களும் பிரகாசிக்கின்றன. மஹேசன் நெற்றிக் கண்ணில் இருந்து தோன்றிய நெருப்பில் இருந்து பிறந்தவரும் ஜோதிகளுக்கு எல்லாம் இருப்பிடமாகியும் உள்ள குஹா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.



श्री शेंदमङ्गल विभूषण दत्तशैले
नानाविचित्र मणिरंजित मंचमध्ये।
वल्या महेन्द्रसुतया शयने शयानः
प्रोद्बोधितः श्रुतिगणैः कुरू सुप्रभातम्॥

ஸ்ரீ சேந்தமங்கல விபூஷண தத்தசைலே
நாநா விசித்ரமணி ரஞ்ஜித மஞ்சமத்யே।
வல்யா மஹேந்த்ர ஸுதயா சயனே சயானः
ப்ரோத்போதிதः ச்ருதிகணைः குரு ஸுப்ரபாதம்॥

சேந்தமங்கலத்திற்கு அணியாக உள்ளவரே தத்தகிரியில் அழகிய மணிகளால் அழகு பெற்ற மஞ்சத்தின் நடுவில் வள்ளி தேவ ஸேனையுடன் சயனத்தில் படுத்திருக்கும் தாங்கள் வேதங்களால் எழுப்பப்படுகின்றவராய் (எங்களுக்கு) ஸுப்ரபாதத்தை அருளுங்கள்.

श्रीस्कन्दपत्तनवरे वरमेरूशैल-
शृंगस्थिते विविध रत्नगण प्रक्लृप्ते।
हैमालये विविध पुष्प भराढयमंचे
विभ्राजमान भगवन्कुरू सुप्रभातम्॥

ஸ்ரீஸ்கந்த பத்தனவரே வரமேருசைல
ச்ருங்கஸ்திதே விவித ரத்ன கண ப்ரக்லுப்தே।
ஹைமாலயே விவித புஷ்ப பராட்ய மஞ்சே
விப்ராஜமான பகவன் குரு ஸுப்ரபாதம்॥

உயர்ந்த மேரு மலையின் சிகரத்தில் உள்ள ஸ்ரீ ஸ்கந்தனின் நகரத்தில் (ஸ்கந்த புரத்தில்) பல ரத்னங்களால் அமைக்கப் பெற்ற பொற் கோவிலில் பலவிதமான புஷ்பங்கள் மண்டிக் கிடக்கும் மஞ்சத்தில் பிரகாசிக்கும் பகவானாகிய முருகா! எங்களுக்கு ஸுப்ரபாதம் அருளுவாயாக.

पराचलात् स्कन्दिगिरेः शिवाद्रेः
श्रीस्वाम्यगात् श्रीपरिपूर्णशैलाज्।

दत्ताद्रिमौलिं समुपेत्य देव
सेनापते नः कुरू सुप्रभातम् ॥

பராசலாத் ஸ்கந்தகிரேః சிவாத்ரேः
ஸ்ரீ ஸ்வாம்யகாத் ஸ்ரீ பரிபூர்ணசைலாத்।
ஸ்கந்தா த்ரிமௌளிம் ஸமுபேத்ய தேவ
ஸேனாபதே னः குரு ஸுப்ரபாதம்॥

தேவ ஸேனாபதே! தாங்கள் திருப்பரங்குன்றம், ஸ்கந்தகிரி, பழனிமலை (சிவகிரி) திருவேரகம் திருத்தணி முதலிய மலைகளில் இருந்து தத்தகிரியின் சிகரம் வந்து எங்கள்ளுக்கு ஸுப்ரபாதம் அருளுவாயாக.

पूर्वा सन्ध्या प्रसरति विभो दत्तशैलाग्रवासिन्
विश्वामित्र प्रभृति मुनयः त्वत्प्रियास्त्वन्मनुज्ञाः।
स्नात्वा गङ्गासरिति करयोरात्त कल्हारमालाः
कांक्षन्ते त्वां गणपसहजोत्तिष्ठ भार्यासमेताः ॥

பூர்வா ஸந்த்யா ப்ரஸரதி விபோ தத்தசைலாக்ரவாஸின்
விச்வாமித்ரப்ரப்ருதி முனயः த்வத்ப்ரியா ஸ்த்வன்மனுஞாः।
ஸ்னாத்வா கங்காஸரிதி கரயோ ராத்த கல்ஹாரமாலாः
காங்க்ஷந்தே த்வாம் கண்ப ஸஹஜோத்திஷ்ட பார்யாஸமேதாः॥

கணபதியின் சகோதர விபோ, தத்தகிரியின் உயரே வஸிக்கும் முருகா! விடியற்காலை தொடங்குகின்றது. உனக்குப் பிரியமானவர்களும் உன் மந்த்ரம் அறிந்தவர்களுமான விச்வாமித்ரர் முதலிய முனிவர், கங்கா நதியில் ஸ்னானம் செய்து செங்கழுநீர்ப் பூக்களால் ஆன மாலைகளைக் கைகளில் ஏந்தி மனைவியருடன் கூட உன்னை எதிர்பார்க்கின்றனர் எழுந்தருள்வாயாக.

वीणामुनिर्विधिमहेन्द्र दिशाधिपाद्याः
देवा द्युलोक ललनाश्च तिलोत्तमाद्याः।
गायन्ति दिव्यचरितं तव दिव्यगेह
द्वारे तु दर्शनधिया तव सुप्रभातम् ॥



வீணாமுனிர் விதி மஹேந்த்ர திசாதிபாத்யாः
தேவா த்யுலோக லலனாச்ச திலோத்தமாத்யாः।
காயந்தி திவ்யசரிதம் தவ திவ்ய கேஹ
த்வாரேது தர்சனதியா தவ ஸுப்ரபாதம்॥

நாரதர், ப்ரஹ்மா, இந்திரன் முதலான திக்பதிகள் திலோத்தமை முதலிய தேவ லோகத்து அப்ஸர ஸ்த்ரீகள் முதலியோர் தங்களுடைய திவ்யமான மாளிகையின் வாயிலில் (நின்று கொண்டு) தங்களைக் காண வேண்டும் என்ற எண்ணத்தால் தங்களுடைய திவ்ய சரிதத்தைக் கானம் செய்கின்றனர். தங்களுக்கு ஸுப்ரபாதம்.

अत्रागताः सुरसरित्तटयोः कृतां तां
षट्कृत्तिकाः शुभकरीं तव बाललीलाम्।
कल्हारपुष्पसहिताः सततं स्मरन्त्यो
दत्ताद्रिनाथ भगवन् तव सुप्रभातम् ॥

அத்ராகதாः ஸுரஸரித்தடயோः க்ருதாம் தாம்
ஷட் க்ருத்திகாः சுபகரீம் தவ பாலலீலாம்।
கல்ஹாபுஷ்பஸஹிதாः ஸததம் ஸ்மரந்த்யோ
தத்தாத்ரிநாத பகவன் தவ ஸுப்ரபாதம்॥

கங்கை நதிக் கரையில் செய்த தங்களுடைய மகிழ்ச்சிகர்மான பால லீலைகளை எப்போதும் நினைத்துக் கொண்டு செங்கழுநீர் பூக்களைக் கைகளால் ஏந்தியவர்களாய் ஆறு கிருத்திகை தேவியரும் இங்கு வந்திருக்கின்றனர். தத்தகிரி முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

सावित्री, हिमशैलजा च, जगतां अष्टौ जनन्यः पराः
ब्राह्म्याद्याः सुरवाहिनी, शुभगुणाः सप्तर्षिपत्न्यो मुदा।
दिव्यस्वादु सुगन्धिपुष्पफलभक्ष्यांचत्कराः सुस्थिताः
स्मेरोल्लासि मुखेन्दुदर्शनकृते ते सुप्रभातं प्रभो ॥

ஸாவித்ரீ ஹிமசைலஜா ச ஜகதாம் அஷ்டௌ ஜனன்யः பராः
ப்ராம்ஹ்யாத்யாः ஸுரவாஹினீ சுபகுணாः ஸப்தர்ஷி பத்ன்யோ முதா।
திவ்யஸ்வாது ஸுகந்தி புஷ்ப பல பக்ஷ்யாஞ் சத்கராः ஸுஸ்திதாः
ஸ்மேரோல்லாஸி முகேந்து தர்சனக்ருதே தே ஸுப்ரபாதம் ப்ரபோ॥

ஸாவித்ரீ, பார்வதி, உயர்ந்த லோக மாதாக்களான ப்ராம்ஹீ முதலியவர் நற்குணம் படைத்த ஸப்தர்ஷிகளின் மனைவியர்கள் இவர்கள் எல்லோரும், திவ்யமான ருசியுள்ள நல்ல வாசனை உடைய புஷ்பம், பழம், பக்ஷணம் இவைகளைக் கைகளில் ஏந்தி முகங்களைக் காண அமைதியுடன் அமர்ந்திருக்கின்றனர். ப்ரபோ முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

तप्ताद्याः घटभूः पराशरसुताः नन्दीश्वरः पद्मभूः<br>
नत्कीरः कविराड् तथारूणगिरिः श्रीवामदेवो मुनिः ।<br>
त्वद्वक्त्रांबुजतस्त्ववाप्त निखिलश्रुत्यन्तगूढाशयाः<br>
द्रष्टुं त्वामुपयान्त्यमेय महिमन् ते सुप्रभातं गुरो ॥

தப்தாத்யாः கடபூः பராசரஸுதாः நந்தீச்வரः பத்மபூः<br>
நத்கீரः கவிராட்ததாருணகிரிः ஸ்ரீ வாமதேவோ முனிः ।<br>
த்வத் வக்த்ராம் புஜதஸ்த்வவாப்த நிகிலச்ருத்யந்த கூடாசயாः<br>
த்ரஷ்டும் த்வாமுபயாந்த்ய மேயமஹிமன் தே ஸுப்ரபாதம் குரோ ॥

தப்தர் முதலிய (ஆறு) பராசரர் புதல்வரான முனிவர்கள், அகஸ்தியர், நந்திகேச்வரர், ப்ரஹ்மா, நக்கீரர், கவிராஜர் அருணகிரி, ஸ்ரீ வாமதேவ முனிவர் இவர்கள் அனைவரும் தங்களுடைய முக கமலத்தினின்றே வேதாந்தங்களின் ரஹஸ்யமான அபிப்ராயங்களைப் பெற்றவர்கள். அவர்கள் தங்களைக் காண வருகின்றனர். அளவிடற்கரிய மஹிமையுடைய குருமூர்த்தியான முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

अष्टादशायतविलोचनवीक्षणेन<br>
त्वत्पदपङ्कजरतान् वरशक्तिपाणे ।<br>
अष्टादशस्वपि कलासु कुशाग्रबुद्धे<br>
दक्षान्करोषि भगवन् तव सुप्रभातम् ॥

அஷ்டாதசாயத விலோசன வீக்ஷணேன<br>
த்வத்பாத பங்கஜ ரதான் வரசக்திபாணே ।<br>
அஷ்டாதசஸ்வபி கலாஸு குசாக்ரபுத்தே<br>
தக்ஷான் கரோஷி பகவன்தவ ஸுப்ரபாதம் ॥



நீண்ட பதினெட்டு கண்களுடைய பார்வையினால் தங்கள் திருவடித் தாமரைகளில் ஈடுபட்டவர்களை பதினெட்டு வித்யைகளிலும் வல்லுநர்களாகச் செய்து விடுகின்றீர்கள். சக்தியைக் கைக் கொண்டவரும் நுண்ணறிவு படைத்தவருமான பகவான் முருகா, தங்களுக்கு ஸுப்ரபாதம்.

दैत्येन्द्र सिंहमुखतारकशूरपद्म<br>
प्रोन्मूलनेन दिविषत्कुल रक्षकस्य ।<br>
नित्यं त्रिमूर्ति - कृति - शक्ति - गुणा - ग्निरूप<br>
शक्त्यायुधोज्ज्वल तवास्तु शुभं प्रभातम् ॥

தைத்யேந்த்ர ஸிம்ஹமுக தாரக சூரபத்ம<br>
ப்ரோன்மூலனேன திவிஷத்குல ரக்ஷகஸ்ய ।<br>
நித்யம் த்ரிமூர்த்தி க்ருதிசக்தி குணாக்னிரூப<br>
சக்த்யாயுதோஜ்வல தவாஸ்து சுபம் ப்ரபாதம் ॥

மும் மூர்த்திகளாகவும் மூன்று க்ருதிகளாகவும் மூன்று சக்திகளாகவும் மூன்று குணங்களாகவும் மூன்று அக்னிகளாகவும் உள்ள சக்தி ஆயுதம் கொண்ட முருகா அசுரத் தலைவனாகிய ஸிம்ஹமுகன் தாரகன், சூரபத்மா முதலியவர்களை அழித்து, தேவர்கள் குலத்தைக் காத்த தங்களுக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

वेदान्तवेद्यमखिलश्रुतिजीवभूतं<br>
तारार्थसारममलं शिवकर्णयुग्मे ।<br>
संयङ्निवेदितवतः शुभदत्तशैल<br>
शृंगाश्रयस्य महतस्तव सुप्रभातम् ॥

வேதாந்த வேத்ய மகில ச்ருதி ஜீவபூதம்<br>
தாரார்த்த ஸாரமமலம் சிவகர்ணயுக்மே ।<br>
ஸம்யங்நிவேதிதவதः சுப தத்தசைல<br>
ச்ருங்காச்ரயஸ்ய மஹதஸ் தவ ஸுப்ரபாதம் ॥

உபநிஷத்துக்களால் அறியத் தக்கதும் வேதங்களின் ஜீவனும் குறை அற்றதுமான ஓங்காரார்த்தத்தை சிவனுடைய காதுகளில் நன்கு

दत्ताद्रिमौलिं समुपेत्य देव
सेनापते नः कुरू सुप्रभातम् ॥

பராசலாத் ஸ்கந்தகிரேঃ சிவாத்ரேঃ
ஸ்ரீ ஸ்வாம்யகாத் ஸ்ரீ பரிபூர்ணசைலாத்।
ஸ்கந்தா த்ரிமௌளிம் ஸமுபேத்ய தேவ
ஸேனாபதே நঃ குரு ஸுப்ரபாதம்॥

தேவ ஸேனாபதே! தாங்கள் திருப்பரங்குன்றம், ஸ்கந்தகிரி, பழனிமலை (சிவகிரி) திருவேரகம் திருத்தணி முதலிய மலைகளில் இருந்து தத்தகிரியின் சிகரம் வந்து எங்களுக்கு ஸுப்ரபாதம் அருளுவாயாக.

पूर्वा सन्ध्या प्रसरति विभो दत्तशैलाग्रवासिन्
विश्वामित्र प्रभृति मुनयः त्वत्प्रियास्त्वन्मनुज्ञाः।
स्नात्वा गङ्गासरिति करयोरात्त कल्हारमालाः
कांक्षन्ते त्वां गणपसहजोत्तिष्ठ भार्यासमेताः॥

பூர்வா ஸந்த்யா ப்ரஸரதி விபோ தத்தசைலாக்ரவாஸின்
விச்வாமித்ரப்ரப்ருதி முனயঃ த்வத்ப்ரியா ஸ்த்வன்மனுஞாঃ।
ஸ்னாத்வா கங்காஸரிதி கரயோ ராத்த கல்ஹாரமாலাঃ
காங்க்ஷந்தே த்வாம் கணப ஸஹஜோத்திஷ்ட பார்யாஸமேதாঃ॥

கணபதியின் சகோதர விபோ, தத்தகிரியின் உயரே வஸிக்கும் முருகா! விடியற்காலை தொடங்குகின்றது. உனக்குப் பிரியமானவர்களும் உன் மந்த்ரம் அறிந்தவர்களுமான விச்வாமித்ரர் முதலிய முனிவர், கங்கா நதியில் ஸ்னானம் செய்து செங்கழுநீர்ப் பூக்களால் ஆன மாலைகளைக் கைகளில் ஏந்தி மனைவியருடன் கூட உன்னை எதிர்பார்க்கின்றனர் எழுந்தருள்வாயாக.

वीणामुनिर्विधिमहेन्द्र दिशाधिपाद्याः
देवा द्युलोक ललनाश्च तिलोत्तमाद्याः।
गायन्ति दिव्यचरितं तव दिव्यगेह
द्वारे तु दर्शनधिया तव सुप्रभातम्॥



வீணாமுனிர் விதி மஹேந்த்ர திசாதிபாத்யাঃ
தேவா த்யுலோக லலனாச்ச திலோத்தமாத்யাঃ।
காயந்தி திவ்யசரிதம் தவ திவ்ய கேஹ
த்வாரேது தர்சனதியா தவ ஸுப்ரபாதம்॥

நாரதர், ப்ரஹ்மா, இந்திரன் முதலான திக்பதிகள் திலோத்தமை முதலிய தேவ லோகத்து அப்ஸர ஸ்த்ரீகள் முதலியோர் தங்களுடைய திவ்யமான மாளிகையின் வாயிலில் (நின்று கொண்டு) தங்களைக் காண வேண்டும் என்ற எண்ணத்தால் தங்களுடைய திவ்ய சரிதத்தைக் கானம் செய்கின்றனர். தங்களுக்கு ஸுப்ரபாதம்.

अत्रागताः सुरसरित्तटयोः कृतां तां
षड्कृत्तिकाः शुभकरीं तव बाललीलाम्।
कल्हारपुष्पसहिताः सततं स्मरन्त्यो
दत्ताद्रिनाथ भगवन् तव सुप्रभातम्॥

அத்ராகதাঃ ஸுரஸரித்தடயோঃ க்ருதாம் தாம்
ஷட் க்ருத்திகাঃ சுபகரீம் தவ பாலலீலாம்।
கல்ஹாபுஷ்பஸஹிதাঃ ஸததம் ஸ்மரந்த்யோ
தத்தாத்ரிநாத பகவன் தவ ஸுப்ரபாதம்॥

கங்கை நதிக் கரையில் செய்த தங்களுடைய மகிழ்ச்சிகரமான பால லீலைகளை எப்போதும் நினைத்துக் கொண்டு செங்கழுநீர் பூக்களைக் கைகளால் ஏந்தியவர்களாய் ஆறு கிருத்திகை தேவியரும் இங்கு வந்திருக்கின்றனர். தத்தகிரி முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

सावित्री, हिमशैलजा च, जगतां अष्टौ जनन्यः पराः
ब्राह्मद्याः सुरवाहिनी, शुभगुणाः सप्तर्षिपत्न्यो मुदा।
दिव्यस्वादु सुगन्धिपुष्पफलभक्ष्यांचत्कराः सुस्थिताः
स्मेरोल्लासि मुखेन्दुदर्शनकृते ते सुप्रभातं प्रभो॥

ஸாவித்ரீ ஹிமசைலஜா ச ஜகதாம் அஷ்டௌ ஜனன்யঃ பராঃ
ப்ராம்ஹ்யாத்யাঃ ஸுரவாஹினீ சுபகுணাঃ ஸப்தர்ஷி பத்ன்யோ முதா।
திவ்யஸ்வாது ஸுகந்தி புஷ்ப பல பக்ஷ்யாஞ் சத்கராঃ ஸுஸ்திதাঃ
ஸ்மேரோல்லாஸி முகேந்து தர்சனக்ருதே தே ஸுப்ரபாதம் ப்ரபோ॥

ஸாவித்ரீ, பார்வதீ, உயர்ந்த லோக மாதாக்களான ப்ராம்ஹீ முதலியவர் நற்குணம் படைத்த ஸப்தர்ஷிகளின் மனைவியர்கள் இவர்கள் எல்லோரும், திவ்யமான ருசியுள்ள நல்ல வாசனை உடைய புஷ்பம், பழம், பக்ஷணம் இவைகளைக் கைகளில் ஏந்தி முகங்களைக் கான அமைதியுடன் அமர்ந்திருக்கின்றனர். ப்ரபோ முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

तप्ताद्याः घटभूः पराशरसुताः नन्दीश्वरः पद्मभूः
नत्कीरः कविराद् तथारूणगिरिः श्रीवामदेवो मुनिः ।
त्वद्वक्त्रांबुजतस्त्ववाप्त निखिलश्रुत्यन्तगूढाशयाः
द्रष्टुं त्वामुपयान्त्यमेय महिमन् ते सुप्रभातं गुरो ॥

தப்தாத்யாஃ கடபூஃ பராசரஸுதாஃ நந்தீச்வரஃ பத்மபூஃ
நத்கீரஃ கவிராட்ததாருணகிரிஃ ஸ்ரீ வாமதேவோ முனிஃ।
த்வத் வக்த்ராம் புஜதஸ்த்வவாப்த நிகிலச்ருத்யந்த கூடாசயாஃ
த்ரஷ்டும் த்வாமுபயாந்த்ய மேயமஹிமன் தே ஸுப்ரபாதம் குரோ॥

தப்தர் முதலிய (ஆறு) பராசரர் புதல்வரான முனிவர்கள், அகஸ்தியர், நந்திகேச்வரர், ப்ரஹ்மா, நக்கீரர், கவிராஜர் அருணகிரி, ஸ்ரீ வாமதேவ முனிவர் இவர்கள் அனைவரும் தங்களுடைய முக கமலத்தினின்றே வேதாந்தங்களின் ரஹஸ்யமான அபிப்ராயங்களைப் பெற்றவர்கள். அவர்கள் தங்களைக் கான வருகின்றனர். அளவிடற்கரிய மஹிமையுடைய குருமூர்த்தியான முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

अष्टादशायतविलोचनवीक्षणेन
त्वत्पदपङ्कजरतान् वरशक्तिपाणे।
अष्टादशस्वपि कलासु कुशाग्रबुद्धे
दक्षान्करोषि भगवन् तव सुप्रभातम् ॥

அஷ்டாதசாயத விலோசன வீக்ஷணேன
த்வத்பாத பங்கஜ ரதான் வரசக்திபாணே।
அஷ்டாதசஸ்வபி கலாஸு குசாக்ரபுத்தே
தக்ஷான் கரோஷி பகவன்தவ ஸுப்ரபாதம்॥



நீண்ட பதினெட்டு கண்களுடைய பார்வையினால் தங்கள் திருவடித் தாமரைகளில் ஈடுபட்டவர்களை பதினெட்டு வித்யைகளிலும் வல்லுநர்களாகச் செய்து விடுகின்றீர்கள். சக்தியைக் கைக் கொண்டவரும் நுண்ணறிவு படைத்தவருமான பகவான் முருகா, தங்களுக்கு ஸுப்ரபாதம்.

दैत्येन्द्र सिंहमुखतारकशूरपद्म
प्रोन्मूलनेन दिविषत्कुल रक्षकस्य।
नित्यं त्रिमूर्ति - कृति - शक्ति - गुणा - ग्निरूप
शक्त्यायुधोज्वल तवास्तु शुभं प्रभातम् ॥

தைத்யேந்த்ர ஸிம்ஹமுக தாரக சூரபத்ம
ப்ரோன்மூலனேன திவிஷத்குல ரக்ஷகஸ்ய।
நித்யம் த்ரிமூர்த்தி க்ருதிசக்தி குணாக்னிரூப
சக்த்யாயுதோஜ்வல தவாஸ்து சுபம் ப்ரபாதம்॥

மும் மூர்த்திகளாகவும் மூன்று க்ருதிகளாகவும் மூன்று சக்திகளாகவும் மூன்று குணங்களாகவும் மூன்று அக்னிகளாகவும் உள்ள சக்தி ஆயுதம் கொண்ட முருகா அசுரத் தலைவனாகிய ஸிம்ஹமுகன் தாரகன், சூரபத்மா முதலியவர்களை அழித்து, தேவர்கள் குலத்தைக் காத்த தங்களுக்கு ஸுப்ரபாதமாக இருக்கட்டும்.

वेदान्तवेद्यमखिलश्रुतिजीवभूतं
तारार्थसारममलं शिवकर्णयुग्मे।
संयङ्निवेदितवतः शुभदत्तशैल
शृंगाश्रयस्य महतस्तव सुप्रभातम् ॥

வேதாந்த வேத்ய மகில ச்ருதி ஜீவபூதம்
தாரார்த்த ஸாரமமலம் சிவகர்ணயுக்மே।
ஸம்யங்நிவேதிதவதஃ சுப தத்தசைல
ச்ருங்காச்ரயஸ்ய மஹதஸ் தவ ஸுப்ரபாதம்॥

உபநிஷத்துக்களால் அறியத் தக்கதும் வேதங்களின் ஜீவனும் குறை அற்றதுமான ஓங்காரார்த்தத்தை சிவனுடைய காதுகளில் நன்கு

வெளியிட்டவரும் அழகிய தத்தகிரியின் சிகரத்தில் வாழ்பவருமாகிய பெரியோராகிய தங்களுக்கு ஸுப்ரபாதம்.

गङ्गानदीजल समुद्गतफुल्लपद्म
    बृन्दोद्भवा नल समीरधृतोरू कीर्ते।
ब्रह्मण्यदेव सुरवर्ग समर्चिताङ्घ्रे
    दत्ताद्रिवास भगवन् तवं सुप्रभातम्॥

கங்காநதீ ஜல ஸமுத்கத புல்ல பதம
ப்ருந்த்தோத்பவானல ஸமீர த்ருதோரு.கீர்த்தே।
ப்ரஹ்மண்யதேவ ஸுரவர்க ஸமர்சிதாங்க்ரே
தத்தாத்ரி வாஸ பகவன் தவ ஸுப்ரபாதம்॥

கங்கை ஜலத்தில் இருந்து தோன்றிய தாமரை மலர்களில் உதித்தவரும், அக்னி, காற்று இவர்களால் சுமக்கப்பட்டவரும்,. பெரும் கீர்த்தியை உடையவரும், ப்ரஹ்மண்ய தேவரும், சூரர்களால் பூஜிக்கப்பட்ட திருவடியை உடையவரும் ஆகிய தத்தாத்ரியில் வாஸம் செய்யும் பகவான் முருகா தங்களுக்கு ஸுப்ரபாதம்.

षट्कृत्तिका स्तनजपान नितान्ततृप्त
    दीर्घ त्रिषण्णयन शोभि मुखारविन्द।
श्रीवीरबाहुमुख सोदर सेविताङ्घ्रे
    दत्ताद्रिवास भगवन्तव सुप्रभातम्॥

ஷட்க்ருத்திகா ஸ்தனஜ பான நிதாந்த த்ருப்த
தீர்கத்ரிஷண்ணயன சோபி முகாரவிந்த।
ஸ்ரீவீரபாஹுமுக ஸோதர ஸேவிதாங்க்ரே
தத்தாத்ரிவாஸ பகவன் தவ ஸுப்ரபாதம்॥

ஆறு க்ருத்திகா தேவியரின் பாலருந்தி மிகவும் த்ருப்தி அடைந்தவரும், பதினெட்டு கண்களால் விளங்கும் தாமரை மலர் போன்ற முகங்களை உடையவரும், ஸ்ரீ வீரபாஹு முதலிய 9 சகோதரர்களால் வணங்கப்பட்ட திருவடியை உடையவரும், தத்தாத்ரியில் வாசம் செய்பவருமாகிய பகவன் முருகா தங்களுக்கு ஸுப்ரபாதம்.



उग्रादिभूतवर सेवितपादपद्म
    शूरादि दैत्यवधतोषित देववर्ग।
वल्ली महेन्द्रतनयाश्रित पार्श्वयुग्म
    दत्ताद्रिशेखर विभो तव सुप्रभातम्॥

உக்ராதி பூதவரஸேவித பாதபத்ம
சூராதிதைத்யவத தோஷித தேவவர்க।
வல்லீமஹேந்த்ர தனயாச்ரித பார்ச்வயுக்ம
தத்தாத்ரிசேகர விபோதவ ஸுப்ரபாதம்॥

உக்ரன் முதலிய பூதத் தலைவர்களால் வணங்கப்பட்ட திருவடித் தாமரையினை உடையவரும், சூரர் முதலிய அவுணர்களின் வதத்தால் தேவர்களை மகிழ்வித்தவரும், வள்ளி தேவஸேனை இவர்கள் அமர்ந்திருக்கும் இரு பக்கங்களை உடையவரும், தத்தாத்ரியில் வசிப்பவருமாகிய பகவான் முருகா தங்களுக்கு ஸுப்ரபாதம்.

वाल्मीकि पराशरि कालिदास
    कवीश संवर्णित पुण्यकीर्ते।
प्रशस्त भाग्यप्रद सौम्यदृष्टे
    दत्ताद्रिवासिन् तव सुप्रभातम्॥

வால்மீகி பாராசரி காளிதாஸ
கவீச ஸம்வர்ணித புண்யகீர்த்தே।
ப்ரசஸ்த பாக்ய ப்ரத ஸௌம்யத்ருஷ்டே
தத்தாத்ரிவாஸின் தவ ஸுப்ரபாதம்॥

வால்மீகி மஹர்ஷி வியாஸாசாரியார் மஹாகவி காளிதாஸன் முதலிய அருட்கவிகளால் பாடப் பெற்ற புண்ய கீர்த்தியை உடையவரும், மிகவும் உயர்ந்த பாக்யம் அளிக்கும் சுகமான பார்வையை உடையவரும், தத்தாத்ரியில் வாழ்பவருமாகிய முருகா! தங்களுக்கு ஸுப்ரபாதம்.

कवीन्द्र नक्कीर सुपद्यगीत
श्रीशंकराचार्यवचोभिरीड्य।
श्लाघास्पद द्राविडवर्णमूर्ते
दत्ताद्रिवासिन् तव सुप्रभातम्॥

கவீந்த்ர நக்கீர ஸுபத்யகீத
ஸ்ரீசங்கராசார்ய வசோபிரீட்ய।
ச்லாகாஸ்பத த்ராவிட வர்ணமூர்த்தே
தத்தாத்ரி வாஸின் தவ ஸுப்ரபாதம்॥

*கவீசன் நக்கீரரால் நல்ல பாக்களால் (திரு முறுகாற்றுப் படையால்) பாடப் பெற்றவரும், ஸ்ரீ சங்கராசார்யர் வாக்கால் (ஸுப்ரஹ்மண்ய புஜங்கத்தால்) துதிக்கப்பட்டவரும், பெருமைக்குரிய தமிழ் எழுத்துக்களின் உருவமாய் அமைந்தவருமான தத்தாத்ரியில் வாழும் முருகா தங்களுக்கு ஸுப்ரபாதம்.*

उत्फुल्ल पद्मायत चारूनेत्र
भास्वत्प्रभानिर्मितशक्तिपाणे।
विजित्वराभिख्य रथाधिरूढ
दत्ताद्रिवासिन् तव सुप्रभातम्॥

உத்புல்ல பத்மாயத சாருநேத்ர
பாஸ்வத்ப்ரபாநிர்மிதசக்திபாணே।
விஜித்வராபிக்ய ரதாதிரூட
தத்தாத்ரிவாஸின் தவ ஸுப்ரபாதம்॥

*மலர்ந்த தாமரை போன்ற அழகிய கண்களை உடையவரும், சூரியன் ஒளிகளால் செய்யப்பட்ட சக்தி ஆயுதத்தைத் திருக்கரத்தில் தாங்குபவரும், "விஜித்வரம்" என்ற ரதத்தில் ஏறி இருப்பவரும், தத்தாத்ரியில் வாழ்பவருமாகிய முருகா தங்களுக்கு ஸுப்ரபாதம்.*

ओंकारवाच्यः प्रणवोपदेष्टा
हितः श्रुतीनां तपसां द्विजानां।
त्वं सच्चिदानन्द धनोसि दत्त
गिरीन्द्रवासिन्तव सुप्रभातम्॥



ஓங்காரவாச்யஃ ப்ரணவோபதேஷ்டா
ஹிதஃ ச்ருதீனாம் தபஸாம் த்விஜானாம்।
த்வம் ஸச்சிதானந்த கனோஸி தத்த
கிரீந்த்ர வாஸின் தவ ஸுப்ரபாதம்॥

*ஓங்காரத்தினால் அறிவிக்கப்படுகின்றவரும் ப்ரணவத்தை உபதேசித்தவரும், வேதங்கள், தவம், அந்தணர்கள் முதலியவர்களுக்குப் பிரியமானவரும், ஸச்சிதானந்த ரூபமாய் உள்ளவரும் தத்தகிரியில் வாழ்பவருமாகிய முருகா தங்களுக்கு ஸுப்ரபாதம்.*

महागणेशनुज शैलराज
दौहित्र सौवर्गिबलाधिनाथ।
महेन्द्र जामातृवरेशसूनो
श्रीदण्डपाणे तव सुप्रभातम्॥

மஹாகணேசானுஜ சைலராஜ
தௌஹித்ர ஸௌவர்கி பலாதி நாத।
மஹேந்த்ர ஜாமாத்ரு வரேச ஸூநோ
ஸ்ரீதண்டபாணே தவ ஸுப்ரபாதம்॥

*மஹா கணபதியின் தம்பியும், ஹிமாலயத்தின் (மலையரசன்) பெண்ணின் புதல்வனும் (பேரனும்) தேவர் படையின் தலைவனும் மஹேந்த்ரனின் சிறந்த மாப்பிள்ளையும் பரமசிவனின் குமாரனுமாகிய தண்டபாணியே தங்களுக்கு ஸுப்ரபாதம்.*

यो नैगमेयश्च विशाखशाखौ
स्कन्दोपि भूत्वा समकालमेव।
अवाप गङ्गा गिरिजाग्नि शंभून्
तस्यास्तु ते सर्वग सुप्रभातम्॥

யோ நைகமேயச்ச விசாக சாகௌ
ஸ்கந்தோபி பூத்வா ஸமகாலமேவ।
அவாப கங்கா கிரிஜாக்னி சம்பூன்
தஸ்யாஸ்துதே ஸர்வக ஸுப்ரபாதம்॥

எவர் நைகமேயன், விசாகன், சாகன், ஸ்கந்தன் என்று பெயர் கொண்டவராய் ஒரே சமயத்தில் (நால்வரும் அழைக்க) கங்கை, பார்வதி, அக்னி பகவான், சிவன் இவர்களை அடைந்தாரோ அந்த எங்கும் உள்ள தங்களுக்கு ஸுப்ரபாதம்.

यो वीरबाहोर्वरगन्धशैले
ह्यवाङ् मनोगोचरमप्रमेयम्।
अदर्शयच्चाद्भुत विश्वरूपं
तस्यास्तु ते षण्मुख सुप्रभातम्॥

யோ வீரபாஹ்வோர் வரகந்த சைலே
ஹ்யவாங்மனோகோசர மப்ரமேயம்।
அதர்சயச் சாத்புத விச்வருபம்
தஸ்யாஸ்து தே ஷண்முக ஸுப்ரபாதம்॥

உயர்ந்த (திருச்செந்தூரில்) கந்தமாதன பர்வதத்தில் வாக்கு, மனம் இவற்றிற்கு எட்டாததும், அளவிட முடியாததும், வியக்கத் தக்கதுமான விச்வ ரூபத்தை வீரபாஹுவிற்குக் காட்டிய அந்த ஷண்முகராகிய தங்களுக்கு ஸுப்ரபாதம்.

ब्रह्मविदां वर वाक्प्रद दुष्टो
न्मूलनदीक्षित दत्तगिरीश
कालमयावयवोज्वल मूर्ते
प्रातरिदं शुभकारि तवास्तु॥

ப்ரம்ஹவிதாம்வர வாக்பரத துஷ்டோன்
மூலன தீக்ஷித தத்தகிரீச।
காலமயாவயவோஜ்வல மூர்தே
ப்ராதரிதம் சுபகாரி தவாஸ்து॥

ப்ரஹ்ம வித்துக்களில் சிறந்தவரும், சொல் வளத்தினை அருள்பவரும், துஷ்டர்களைக் களைவதில் கங்கணம் கட்டிக் கொண்டவரும் தத்தகிரியின் ஈசரும், கால மயமான அவயவங்களால்



பிரகாசிக்கும் உருவம் உடையவருமாகிய தங்களுக்கு இந்த விடியற்காலை மங்களகரமாய் அமையட்டும்.

वल्लीगजालिंगित दिव्यदेहो
मयूरमारूह्य धृतोरूशक्तिः।
आयाहि वीरै र्नवभिः परीतः
ते सुप्रभातं द्युनदीसुतास्तु॥

வல்லீ கஜாலிங்கித திவ்ய தேஹோ
மயூர மாருஹ்ய த்ருதோரு சக்தி:।
ஆயாஹி வீரைர் நவபி: பரீத:
தே ஸுப்ரபாதம் த்யுநதீ ஸுதாஸ்து॥

வள்ளி, தேவயானை இவர்களால் ஆலிங்கனம் செய்து கொள்ளப்பட்டவரும், சக்தியுடன் கூடியவருமாகிய கங்கா புத்திரராகிய தாங்கள் மயிலின் மீதேறி, நவவீரர்கள் புடைசூழ வரவேண்டும். தங்களுக்கு ஸுப்ரபாதம்.

वल्लीविनोदनकृते धृतवृद्धवेषः
सेनां च तोषयितु माद्दतराजवेषः।
वल्लीगिरौ शुभकरे परपर्वते यः
चिक्रीड तस्य महतस्तव सुप्रभातम्॥

வல்லீ வினோதன க்ருதே த்ரு வ்ருத்தவேஷ:
ஸேனாம் ச தோஷயித்து மாத்ருதராஜவேஷ:।
வல்லீகிரௌ சுபகரே பர பர்வதே ய:
சிக்ரீட தஸ்ய மஹதஸ் தவ ஸுப்ரபாதம்॥

வள்ளியுடன் திருவிளையாடல் புரிய வள்ளி மலையில் விருத்த (கிழ) வேடம் தரித்தும், தேவ ஸேனையை சந்தோஷப்படுத்த பரங்குன்றில் ராஜவேஷம் தரித்தும், எவர் திருளையாடல் புரிந்தாரோ, அந்தப் பெருமைக்கு உரிய தங்களுக்கு ஸுப்ரபாதம்.

वीथ्यां वीथ्यां लसति जगतां विघ्नहांतेऽग्रजातो
ग्रामे ग्रामे विलसति सतां रक्षणार्थं च शास्ता।
क्षेत्रे क्षेत्रे वसति जनको, हयूर्ध्वदृष्टीश्च पातुं
शैलाग्रेष्वावससि भगवन् सुप्रभातं तवेश॥

வீத்யாம் வீத்யாம் லஸதி ஜகதாம் விக்னஹா தேக்ரஜாதோ
க்ராமே க்ராமே விலஸதி ஸதாம் ரக்ஷணார்த்தம் ச சாஸ்தா।
க்ஷேத்ரே க்ஷேத்ரே வஸதி ஜனகோ, ஹ்யூர்த்வத்ருஷ்டீம்ச்ச பாதும்
சைலாக்ரேஷ்வாவஸஸி பகவன் ஸுப்ரபாதம் தவேச॥

உலகத்தின் இடையூறைப் போக்கத் தங்கள் தமையனாராகிய கணபதி வீதியில் வாசம் செய்கின்றார். ஸாதுக்களைக் காக்க சாஸ்தா (தங்கள் தமையனார்) கிராமம் தோறும் விளங்கிக் கொண்டிருக்கிறார். தங்கள் தந்தை ஒவ்வொரு க்ஷேத்ரத்திலும் வசிக்கின்றார். தாங்களோ மேல்நோக்கும் குணமுடையவர்களையும் காக்க மலையின் சிகரங்களில்வசிக்கின்றீர். அவ்வாறான பகவன் ஈசா தங்களுக்கு ஸுப்ரபாதம்.

रूढं शंकरपादपद्मयुगलैकासक्त वाङ्मानसं
चण्डाण्डाभरणेन सत्यगिरि संराजद्गुहागह्वरे।
औचित्योज्वलभावपुष्ट सरसस्तोत्रेण तुष्टान्तरो
नक्कीरं कृपया विमुक्तमकरो स्ते सुप्रभातं गुह॥

ருத்தம் சங்கர பாபபத்ம யுகளை காஸத்த வாங்மானஸம்
சண்டாண்டா பரணேன ஸத்யகிரி ஸம்ராஜத்குஹா கஹ்வரே।
ஔசித்யோஜ்வல பாவபுஷ்ட ஸரஸ ஸ்தோத்ரேண துஷ்டாந்தரோ
நக்கீரம் க்ருபயா விமுக்தமகரோः தேஸுப்ரபாதம் குஹ॥

சங்கரரின் திருவடித் தாமரைகளில் மட்டும் ஈடுபாடு கொண்ட வாக்கு, மனம் உடையவரும் பயங்கரமான அன்டாபரணனால் ஸத்யகிரியில் (திருப்பரங்குன்றம்) விளங்கும் குஹையின் உள்ளே அடைக்கப்பட்டவருமான நாற்கீர கவியை ஔசித்யம் (பொருத்தம்) திகழும் பொருள் செறிந்த ரஸமான துதியால் மகிழ்ந்தவராய் கருணையினால் விடுதலை செய்தீர் குஹ! அவ்வாறான தங்களுக்கு ஸுப்ரபாதம்.



शान्तानन्द यतीश्वरः करयुगे पुष्पांजलिं धारयन्
सद्भिर्भक्तवरैः सहैव शुचिभिः त्वन्मूल मन्त्रं जपन्।
आस्ते द्वारि ततो मयूरसहितो वल्लीगजालंकृतो
दत्वा दर्शन माशु सर्वजगतां त्वं सुप्रभातं कुरू॥

சாந்தானந்த யதீச்வரः கரயுகே புஷ்பாஞ்ஜலிம் தாரயன்
ஸத்பிரः பக்தவரைः ஸஹைவ சுசிபிः த்வன்மூல மந்த்ரம் ஜபன்।
ஆஸ்தே த்வாரிததோ மயூர ஸஹிதः வல்லீ கஜா லங்க்ருதோ
தத்வா தர்சனமாசு ஸர்வ ஜகதாம் த்வம் ஸுப்ரபாதம் குரு॥

பவித்திரர்களான ஸாதுக்களான பக்த சிரேஷ்டர்களுடன் கூட தங்கள் மூல மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டு கைகளில் புஷ்பாஞ்ஜலி ஏந்தி ஸ்ரீ சாந்தானந்த யதீச்வரர் வாயிலில் காத்துக் கொண்டிருக்கிறார். ஆகவே தாங்கள் மயிலுடனும், வள்ளி தேவ ஸேனையுடனும் அனைத்து உலகத்திற்கும் தர்சனம் கொடுத்து ஸுப்ரபாதமாகச் செய்யுங்கள்.

व्याधेन्द्रकन्ये तव सुप्रभातं
महेन्द्र जाते तव सुप्रभातं।
श्रीवीरबाहो तव सुप्रभातं
खगेन्द्र केकिन् तव सुप्रभातम्॥

வ்யாதேந்த்ரகன்யே தவ ஸுப்ரபாதம்
மஹேந்த்ர ஜாதே தவ ஸுப்ரபாதம்।
ஸ்ரீவீரபாஹோ தவ ஸுப்ரபாதம்
ககேந்த்ர கேகின் தவ ஸுப்ரபாதம்॥

வேடர் பெண்ணாகிய வள்ளிக்கும், இந்திரன் பெண்ணாகிய தேவஸேனைக்கும் ஸ்ரீவீரபாஹுவிற்கும் பக்ஷி ராஜாவாகிய மயிலுக்கும் ஸுப்ரபாதம்.

मेषेश वाहोत्तम सुप्रभातं
ते कुक्कुटेश ध्वज सुप्रभातम्।

षण्डोग्रभूताधिप सुप्रभातं
हिडिम्ब भृत्योत्तम सुप्रभातम् ॥

மேஷேச வாஹோத்தம ஸுப்ரபாதம்
தே குக்குடேச த்வஜ ஸுப்ரபாதம்।
சண்டோக்ர பூதாதிப ஸுப்ரபாதம்
ஹிடிம்ப ப்ருத்யோத்தம ஸுப்ரபாதம்॥

வாஹன சிரேஷ்டமான ஆட்டுக் கடாவிற்கும் த்வஜம் (கொடியாகிய) சேவலுக்கும் பூதாதிபர்களாகிய சண்டர், உக்ரன் இவர்களுக்கும் தாஸனாகிய ஹிடிம்பனுக்கும் ஸுப்ரபாதம்.

प्रियंगुसस्यसंपूर्ण वल्लीगिरि विहारिणे।
श्रीपूर्ण पर्वतेशाय वल्लीकान्ताय मङ्गलम् ॥

ப்ரியங்கு ஸஸ்யஸம்பூர்ண வல்லீகிரி விஹாரிணே।
ஸ்ரீபூர்ண பர்வதேசாய வள்ளீ காந்தாய மங்களம்॥

தினைப் பயிர் நிறைந்த வள்ளி மலையில் திருவிளையாடல் புரியும் திருத்தணி மலையின் ஈசனாகியவள்ளீ காந்தனுக்கு மங்களம்.

पराचलादि षड्शैल तुंगशृंगविहारिणे।
भुज द्वादशदीप्ताय षण्मुखायास्तु मङ्गलम् ॥

பராசலாதி ஷட்சைல துங்க ச்ருங்க விஹாரிணே।
புஜத்வாதசதீப்தாய ஷண்முகாயாஸ்து மங்களம்॥

பரங்குன்றம் முதலிய ஆறு படை வீடுகளின் உயர்ந்த சிகரங்களில் திருவிளையாடல் புரிபவரும் பன்னிரண்டு கைகளால் பிரகாசிப்பவருமாகிய ஷண்முகருக்கு மங்களம்.

शिवभक्तवरश्रीमन्मुचुकुन्देष्टदायिने।
पराचलनिवासाय सेनाकान्ताय मङ्गलम् ॥

சிவ பக்தவர ஸ்ரீமன் முசுகுந்தேஷ்டதாயினே।
பராசல-நிவாஸாய ஸேனாகாந்தாய மங்களம்॥



சிவ பக்த சிரேஷ்டனாகிய முசுகுந்தருக்கு இஷ்டம் எல்லாம் அளிக்கும் திருப்பரங்குன்றத்தில் அமர்ந்துறையும் தேவ ஸேனாதிபதிக்கு மங்களம்.

वेदान्तवाक्यवेद्याय कलिकल्मषनाशिने।
ओंकारवदनायास्तु कार्तिकेयाय मङ्गलम् ॥

வேதாந்த வாக்யவேத்யாய கலிகல்மஷ நாசினே।
ஓங்காரவதனாயாஸ்து கார்த்திகேயாய மங்களம்॥

வேதாந்த வாக்யங்களால் அறியத் தக்கவரும் கலியின் தோஷங்களைப் போக்குபவரும் ஓங்காரத்தை முகமாய் உடையவருமான கார்த்திகேயருக்கு மங்களம்.

कान्तत्वं उन्नतिः सत्यं शक्ति धर्मो बलं महत्।
तेजश्च सहजा यस्य गुणास्तस्यास्तु मङ्गलम् ॥

காந்தத்வம் உன்னதிঃ ஸத்யம் சக்திர் தர்மோ பலம் மஹத்।
தேஜச்ச ஸஹஜா யஸ்ய குணாஸ்தஸ்யாஸ்து மங்களம்॥

அழகு, உயர்வு, ஸத்யம், சக்தி, தர்மம், சிறந்த பலம், தேஜஸ் இவைகள் எவரிடம் இயற்கையாகவே நிறைந்திருக்கின்றனவோ, அந்த ஸ்கந்தருக்கு மங்களம்.

श्रुतिस्वरूपो यद्वाहो यन्मूर्तिः प्रणवात्मिका।
यच्छक्तिदर्शनान्मुक्तिः तस्मै स्कन्दाय मङ्गलम् ॥

ச்ருதிஸ்வரூபோ யத்வாஹோ யன்மூர்த்திঃ ப்ரணவாத்மிகா।
யச்சக்தி தர்சனான் முக்திஸ் தஸ்மை ஸ்கந்தாய மங்களம்॥

எவருடைய வாஹனம் வேதமோ, எவருடைய உருவம் ப்ரணவமான ஓங்காரமோ, எவருடைய சக்தியைத் தர்சித்தால் முக்தி கிடைக்குமோ அந்த ஸ்கந்தருக்கு மங்களம்.

कुंकुमारूणगात्राय स्कन्दाश्रमनिवासिने।
अस्तु स्कन्दाय गोविन्द भागिनेयाय मङ्गलम् ॥

குங்குமாருண காத்ராய ஸ்கந்தாச்ரமநிவாஸினே।
அஸ்து ஸ்காந்தாய கோவிந்த பாகினேயாய மங்களம்॥

குங்குமம் போன்று சிவந்த தேஹத்தினை உடையவரும், ஸ்காந்சிரமத்தில் வஸிப்பவரும், கோவிந்தரின் மருமகனுமாகிய ஸ்கந்தருக்கு மங்களம்.

मन्दारपारिजातादि पुष्पहारोज्वलोरसे।
इन्द्रादि देववृन्देड्य पाद पङ्काय मङ्गलम्॥

மந்தாரபாரிஜாதாதி புஷ்ப ஹாரோஜ்வலோர்ஸே।
இந்த்ராதி தேவ ப்ருந்தேட்ய பாதபத்யாய மங்களம்॥

மந்தாரம், பாரிஜாதம் முதலியவற்றாலான ஹாரங்களால் ஜ்வலிக்கும் மார்பினை உடைய இந்த்ராதி தேவர்கள் பணியும் திருவடித் தாமரையினை உடைய குகனுக்கு மங்களம்.

सिंहव्यघ्रसमावद्ध मनोवेगरथस्थितः।
नगेन्द्रपुत्रिकापुत्रः स्कन्दो दिशतु मङ्गलम्॥

ஸிம்ஹவ்யாக்ரஸமாபத்த மனோவேக ரதஸ்திதः।
நகேந்த்ர பத்ரிகாபுத்ரः ஸ்கந்தோ திசது மங்களம்॥

ஸிம்ஹம், புலி இவை பூட்டிய மனோவேகம் என்ற ரதத்தில் வீற்றிருப்பவரும், ஹிமவான் புத்திரியாகிய பார்வதீ மைந்தனுமாகிய ஸ்கந்தருக்கு மங்களம்.

मङ्गलं दत्तशैलेश मङ्गलं मङ्गलप्रद।
वल्लीसेनापते तुभ्यं अस्तु सर्वत्र मङ्गलम्॥

மங்களம் தத்தசைலேச மங்களம் மங்களப்ரத।
வள்ளீஸேனாபதே துப்யம் அஸ்து ஸர்வத்ர மங்களம்॥

தத்தகிரியின் ஈசனும் மங்களம் அளிப்பவரும் வள்ளீ தேவ ஸேனாதிபதியுமாகிய தங்களுக்கு எங்கும் மங்களம் இருக்கட்டும்.



मङ्गलाशासनमिदं स्कन्दभक्त विनिर्मितम्।
प्रातः श्रुणोति यो भक्त्या तस्य स्यान्मङ्गलं सदा॥

மங்களாசாஸனமிதம் ஸ்கந்தபக்த விநிர்மிதம்।
ப்ராதः ச்ருணோதி யோ பக்த்யா தஸ்ய ஸ்யான் மங்களம் ஸதா॥

இந்த மங்களாசாஸனம் ஸ்கந்த பக்தரால் செய்யப்பட்டதாகும். இதைக் காலையில் கேட்பவருக்கு மங்களம் எப்போதும் கிடைக்கட்டும்.

पण्डितेन प्रवक्त्रा च श्रीमुत्तुस्वामि शास्त्रिणा।
शान्तानन्दावधूतनामाज्ञयेयं कृता स्तुतिः॥

பண்டிதேன ப்ரவக்த்ராச ஸ்ரீ முத்துஸ்வாமி சாஸ்த்ரிணா।
சாந்தானந்தாவதூதானாம் ஆஜ்ஞயேயம் க்ருதா ஸ்துதிः॥

பண்டிதரும் உபன்யாஸகருமாகிய ஸ்ரீ முத்துஸ்வாமி சாஸ்திரிகள் ஸ்ரீ சாந்தானந்தாவதூத ஸ்வாமிகளின் ஆஜ்ஞைப்படி இத் துதியை எழுதினார்.

உ

ஓம் ஸத்குருப்யோ நம:

# அவதூதர் மூவர் சரிதம்

அவதூத பரம்பரையில் ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்வதூத ஸ்வாமிகள்

त्रैलिंगदेशे धवलेश्वराख्ये
क्षेत्रे प्रजातं गुरू रामकृष्णात्।
अवाप्त वेदान्त रहस्यमीडे
सदाशिवाख्यं हयवधूतमुख्यम् ॥

த்ரைலிங்க தேசே தவளேச்வராக்யே
க்ஷேத்ரே ப்ரஜாதம் குருராமக்ருஷ்ணாத்।
அவாப்த வேதாந்த ரஹஸ்யமீடே
ஸதாசிவாக்யம் ஹ்யவதூத முக்யம்॥

जातोऽवधूतः किल यो महात्मा
न्यायाधिपत्वं सहसा विहाय।
समाधिमाप्तं नवसालपुर्यां
सदाशिवाख्यं तमहं नतोऽस्मि॥

ஜாதோவதூத:கில யோ மஹாத்மா
ந்யாயாதி பத்வம் ஸஹஸா விஹாய।
ஸமாதி மாப்தம் நவஸர்ல புர்யாம்
ஸதாசி வாக்யம் தமஹம் நதோஸ்மி॥

तं ब्रह्मेन्द्र सरस्वतीत्यभिधया ख्यातं च लिंगात्मना
भान्तं श्रीनवसालपत्तनवरे श्रीवेदमूर्त्यात्मजं।
विज्ञातोपनिषद्रहस्यमनघं योगीश्वराणां वरं
श्रीमन्तं तु सदाशिवाभिधमहं वन्दे भवाब्धेस्तारिम्॥



தம் ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வதீத்யபிதயாக்யாதம்ச லிங்காத்மனா
பாந்தம் ஸ்ரீநவஸால பத்தனவரே ஸ்ரீ வேதமூர்த்யாத்மஜம்।
விஞ்ஞாதோப நிஷத்ரஹஸ்ய மனகம் யோகீச்வராணாம் வரம்
ஸ்ரீமந்தம்து ஸதாசிவாபிதமஹம் வந்தே பவாப்தேஸ் தரிம்॥

**ஆஸ்திகோத்தமர்களே!**

தமிழகத்தின் தென் பகுதியில் புகழ் மிக்க புண்யாத்மாக்கள் மிக்க புதுக்கோட்டையை இன்று அறியாதார் பாரதத்தில் இல்லை. புதுக்கோட்டை என்ற சொல் காதில் விழுந்ததும், அதிஷ்டானம் நம் நினைவிற்கு வரும் ஸ்ரீஜகன் மாதா புவனேச்வரீ என்று நாக்கு பெருமிதத்துடன் கூறும். ஒவ்வொரு ஆண்டும் தவறாமல் மிகச் சிறப்பாக நடக்கும் வேள்விகள் ஞாபகத்திற்கு வரும்.

இன்று புதுக்கோட்டை சாக்தர்கள் வந்த தர்சித்துப் போகும் புண்ய க்ஷேத்ரமாகி விட்டது. ஸ்ரீ புவனேச்வரீ ஜகன்மாதா அருளாட்சி புரியும் பூலோகத்திய மணி த்வீபமாகி விட்டது. இதற்குக் காரணம் புதுக்கோட்டையில் ஸ்ரீ புவனேச்வரீ பீடத்தை நிறுவி, தென்னகத்தில் சாக்த ஸம்ப்ரதாயத்தைப் பரவச் செய்த ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்தாவதூத ஸ்வாமி அவர்கள்தான் என்பதில் மாறுபட்ட கருத்து கிடையாது. புதுக்கோட்டைக்கு பெரும் பெருமை தேடித் தந்தவர்களில் ஸ்ரீ ஸ்வாமிகள் முன்னணியில் நிற்கிறார். சாந்தானந்த ஸ்வாமிகள் புதுக்கோட்டைக்கு வந்த காரணத்தைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகின்றோம்.

**புதுக்கோட்டையில் பரமகுருவின் அதிஷ்டானம்**

புதுக்கோட்டை மன்னர்கள் பரம்பரையாக தேவியிடம் ஈடுபாடு கொண்டவர்கள். மன்னர் ஆட்சி இருந்த காலத்தில் புதுக்கோட்டையில் ஆண்டுதோறும் நவராத்ரி விழா கோலாஹலமாய் நடைபெற்று வந்ததை அனைவரும் அறிவர். விசேஷமாய் வித்வத்ஸதஸ் நடைபெறும். அதில் பரீக்ஷை கொடுத்து ஸன்மானம் பெற்ற பண்டிதர்களிடம் மக்கள் விசேஷ மரியாதை செலுத்தி வந்தனர். புதுக்கோட்டையைத் தெரியாத பண்டிதர்களே கிடையாது எனலாம். இது போன்ற பல பெருமைகள் புதுக்கோட்டைக்கு உண்டு.

இங்கே முக்கியமாக ஜட்ஜ் ஸ்வாமிகள் எனப் போற்றப்படும் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அவர்களின் ஸமாதி அமைந்திருப்பதுதான் புதுக்கோட்டை புண்ய பூமியாக வேள்வி வளர்க்கும் யாக சாலையாக புவனேச்வரீ நித்ய வாஸம் செய்யும் நிலையமாக மாறியதற்குக் காரணம். இந்த ஜட்ஜ் ஸ்வாமிகள் அவதூதர் பரம்பரையில் வந்த மாசு மருவற்ற மஹான்.

### அவதூத பரம்பரைக்கு மூலம் பகவான் ஸ்ரீ தத்தாத்ரேயர்

பகவான் தத்தாத்ரேயர் அத்தி மஹரிஷிக்கும் அனஸூயா தேவிக்கும் புத்திரனாக அவதைரித்தார். இவரை மும்மூர்த்தி ஸ்வரூபர் என்றும் விஷ்ணுவினுடைய அவதார விசேஷம் என்றும் புராணங்கள் பேசும்.

இந்தத் தத்தாத்ரேயர் யோகிகளுக்குள்ளே மிகச் சிறந்தவர். வில்லிற்கு ராமன், வேலுக்கு முருகன் என்பது போல யோகத்திற்குத் தத்தாத்ரேயர். திருச்செந்தூர் புராணத்திலே வீரபாஹு வேண்ட, அவனுக்கு விசுவரூப தர்சனம் அளிக்கின்றார் முருகன். அங்குத் தன் விபூதிகளைப் பற்றி முருகன் வீரபாஹுவிற்கு உபதேசிக்கின்றார். அதில் ''நான் யோகிகளுக்குள்ளே, ஸ்ரீ தத்தாரேயராக இருக்கின்றேன்'' என்று கூறுகின்றார். ஸ்ரீ சுப்ரமணிய ஸ்வாமிக்கு பரமனுக்குப் பிரணவோபதேசம் செய்த பெம்மானுக்கு இந்தத் தத்தாத்ரேயர் அவதூத கீதையை உபதேசித்தார் என்பர் பெரியோர். இந்தத் தத்தாத்ரேயர் கணபதி உபாஸகர் என்று முத்கல புராணத்தின் மூலம் தெரிய வருகின்றது. இந்தத் தத்தாத்ரேயர் விஷ்ணுவின் அவதாரமான பரசுராமருக்கு உபதேசம் செய்த ஆசார்ய புருஷன் என்றும் தெரிகிறது. இவரை உபாஸித்தே கார்த்தவீர்யார்ஜுனன் உலகில் மற்றவர்க்குக் கிடைக்காத பல சக்திகளைப் பெற்றான். இவர் இன்னும் ஹிமாலய குகையில் தியான யோகத்தில் திளைத்திருக்கின்றார் எனக் கூறுகின்றனர் யோகிகள். இவர் திருவடி தத்தாத்ரேயர் தவம் செய்த கிரினாரில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பதாகவும், அதைத் தர்சனம் செய்தாலே ஞானம் ஹ்ருதயத்தில் சுடர் விடும் என்றும் ஸ்ரீ ஸ்வாமிகள் அடிக்கடி பக்தர்களிடம் கூறுவதைக் கேட்டிருக்கிறேன்.

இந்தப் பகவான் தத்தாரேயர் உருவம் புதுக்கோட்டையிலும் சேந்தமங்களத்திலும் ஸ்கந்தகிரி ஸ்கந்தாச்ரமத்திலும் பிரதிஷ்டை



செய்யப்பட்டிருக்கின்றது. அதில் ஸ்கந்தாச்ரமத்தில் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் மூர்த்தி பதினாறு அடி உயரம் உள்ளவராய் அழகு சொட்டும் திருமேனியராய் சாந்த ஸ்வரூபியாய் ஒரு தனித் தன்மை கொண்டு பிரகாசிக்கின்றார் (இந்த ''தத்தாத்ரேயர் வரலாறு'' பற்றி, ''சீர்மிகு சேந்தமங்கலத்தில் அற்புதத் தெய்வங்கள்'' என்ற தலைப்பில் விஸ்தாரமாக எழுதப்பட்டுள்ளது. அங்கு காண்க). இந்தத் தத்தாத்ரேயர் பரம்பரையில் வந்தவர்களே அவதூத ஸன்யாஸிகள்.

அந்த அவதூத பரம்பரையில் வந்தவரே ஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் என்று அனைவராலும் அழைக்கப்படும் ஸத்குரு ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் ஆவார்.

### ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத் யவதூத ஸ்வாமிகளின் வரலாறு

அனைத்து வளங்களும் அதிகம் படைத்தது த்ரைலிங்கம் என்ற ஆந்திர தேசம். மல்லிகார்ஜுன லிங்கம், காள ஹஸ்தீஸ்வர லிங்கம், தவலேச்வர லிங்கம் என்ற மூன்று லிங்கங்கள் அதைப் பெருமை மிக்கத் தேசமாக்குகின்றன. இதை விசாலாந்திரம் எனவும் கூறுவர். அந்த மாநிலத்தில் பல ஜீவ நதிகளில் கோதாவரி மிகவும் புண்யம் நல்கும் நதியாகும். கங்கையும், கோதாவரியும் உள்ளளவும் பாரதமும் இருக்கும் என்பர்.

இந்தக் கோதாவரிக் கரையில் தவளேச்வரம் என்றொரு அக்ரஹாரம் இருந்தது. அது சரித்திர பிரஸித்தி பெற்ற இடங்களில் ஒன்றாகும். வேதங்களிலும் அவை கூறும் வேள்விகளிலும் இதற்கு ஆதார சாஸ்திரமான ஜைமினி மஹர்ஷி அளித்த மீமாம்ஸா சாஸ்திரத்திலும் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர் குமரில பட்டர். பௌத்த வேடம் பூண்டு, பௌத்தர்களிடமே அவர் மத ரஹஸ்யங்களைக் கற்று, தேர்ச்சி பெற்று அந்தப் பௌத்தர்களை வாதிலே வென்று வைதிக மதத்தை நிலை நாட்டியவர். வேத வேள்வியை நிந்தனை செய்து வாழும் பௌத்தர்களிடம் இருந்து வேத மார்க்கத்தைக் காத்தவர். அவர் அவதரித்த புண்ணிய பூமியல்லவா தவளேச்வர அக்ரஹாரம்.

அந்தத் தவளேச்வரத்தில் வாழ்ந்து வந்தார் வேத வித்தும் பரம பாகவதருமாகிய ஸ்ரீ வேதமூர்த்தி சாஸ்திரிகள் என்பவர். இவன் பின்னர் விசாகப்பட்டினம் வந்து வாழ்ந்து வந்தார் என்பர்.

அவருக்கு வேதநெறி தழைத்து ஓங்க ஞானியர் குலம் சிறப்புற்று வளர யோக மார்க்கம் நிலைபெற, பாரத நாட்டு ஞானியர்கள் வரிசையில் ஒரு எண் அதிகமாக ஒரு திவ்யக் குழந்தை பிறந்தது.

प्राप्य पुण्यकृतां लोकान् उषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योग भ्रष्टोऽभिजायते ॥
अथवा योगिनामेव कुले भवति धीमतां ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥

ப்ராப்ய புண்ய க்ருதாம் லோகான் உஷித்வா சாச்வதீ: ஸமா:।
சுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபி ஜாயதே॥
அதவா யோகினாமேவ குலே பவதி தீமதாம்।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீருசம்॥

யோக ப்ரஷ்டன் (பெரும் வேள்விகள் செய்த) புண்யம் செய்தவர்கள் எந்த லோகத்தை அடைவார்களோ, அந்த லோகத்தை அடைந்து வெகு காலம் சுகம் அனுபவித்துப் பின் நல்ல ஆசாரமுள்ள ஐச்வர்யம் உடையவர்களின் வீட்டில் பிறக்கின்றான்.

அல்லது ஞானிகளான யோகாப்யாஸம் செய்கின்றவர்களுடைய குலத்திலே ஜனிக்கிறான். இந்த லோகத்தில் இப்படிப்பட்ட பிறவியானது மிகவும் துர்லபமானதாகும் என்பது இந்தச் சுலோகத்தின் கருத்து.

**வித்யாப்யாஸம்**

குழந்தைக்கு ஆறு வயது வந்ததும் ப்ரஹ்மோபதேசம் செய்தனர். மஹாத்மாக்களாய் வர வேண்டிய குழந்தைகளுக்கு எந்த லக்ஷணங்கள் தேவையோ அதெல்லாம் இருந்தது. தாய் தந்தையருடன் சென்னை வந்து கல்லூரியில் படிக்கும் போது ஞான மார்க்கத்திற்குத் தேவையான காவ்ய நாடக சாஸ்த்ராதிகளையும் கற்று அறிந்தார். சட்டக் கல்லூரியிலும் படித்து முடித்து தொழில் தொடங்கி வெற்றியும் பெற்றார். குமாரனுக்குத் திருமணம் செய்து வைத்து மகிழ்ந்த வேதமூர்த்தி சாஸ்திரிகள் தனது வாழ்நாளைக் காசியிலே கழிக்கும் பேறு பெற்றார்.



கௌபீனம் யத்ரகௌசேயம் மரணம் யத்ரமங்களம்।
விபூதிர்பூஷணம் யத்ர ஸாகாசீ கேன மீயதே॥

காசியில் வாஸம் செய்வோர்க்குக் கௌபீனமே பட்டாடை. மரணமே மங்களம். விபூதியே அலங்காரம். இக் காசிக்கு ஸமமான க்ஷேத்ரமுண்டோ எனக் கேட்கும் புராணம். பரமசிவன் தம் மடிமீது அமர்த்தியல்லவா அங்கு உயிர் விடும் ஜீவ ராசிகளுக்குத் தாரக மந்திரத்தை உபதேசித்து அருளுகின்றார்.

**நீதிபதியானார்**

சென்னையில் வக்கீலாகத் தொழில் நடத்தும் வேத மூர்த்தி குமாரருக்குத் தொழிலில் கீர்த்தியும் கிடைத்தது. இரண்டு குமாரர்களும் பிறந்தனர்.

இவர் புகழ் கேட்ட திருவாங்கூர் மன்னர் இவரைத் தம் ராஜ்யத்தின் நீதிபதியாய் நியமித்தார். சென்னையில் திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாளைத் தர்சித்து வந்தவர், இங்கு அனந்த சயனம் பத்மனாப ஸ்வாமியைத் தர்சித்து மகிழ்ந்திருந்தார். அங்கு இவருக்குக் கிடைத்த பன்மொழிப் புலமை இவருடைய ஞானத்தை அதிகமாய் வளர்க்கப் பயன்பட்டது.

**பந்தம் விலகியது**

ஒரு கொலை வழக்கை விசாரித்தார் நம் சாஸ்திரிகளின் குமாரராகிய ஜட்ஜ். அதில் அவனுக்கு மரண தண்டனை விதிக்க நேரிடுகின்றது. அவன் குற்றமற்றவன் என அந்தராத்மா கூறுகின்றது. சாக்ஷியமும் சட்டமும் அவனைக் குற்றவாளி எனக் கூறுகின்றது. அவனை மரண தண்டனைக்கு உள்ளாக்க விரும்பவில்லை ஜட்ஜ். குற்றம் புரிந்தவன் தண்டனை பெறாமல் இருப்பதோ, குற்றமற்றவன் தண்டனைக்கு ஆளாவதோ நியாயம் இல்லை என இடித்துரைக்கிறது மனு தர்மம். தர்ம ஸங்கடம். இப்பதவி நமக்கு ஒத்து வராது என முடிவு செய்தார். உள்ளுணர்வோ ஐயா போதும் இந்த ப்ரபஞ்ச வாழ்வு என முடிவுரை கூறுகின்றது. "யதஹரேவ விரஜேத் தகஹரேவ ப்ரப்ஜேத்" என்று சாஸ்திரம் ஒத்துப் பாடுகின்றது. பூர்வ ஜன்ம ஸம்ஸ்காரம் மனத்தை

பிடித்து உந்துகின்றது. அனைத்தையும் தியாகம் செய்து விட்டு ஸர்வ ஸங்க பரித்யாகம் செய்து விட்டு வெளியேறி விட்டார் மஹான்.

**ஆச்ரம ஸ்வீகாரம்**

மௌனியாய் பல புண்ய க்ஷேத்ரங்களுக்குச் சென்றார். கிடைத்தை உண்டார். அன்னைக் காமாக்ஷி அமர்ந்து அருளும் காஞ்சி வந்தார். உபநிஷத் ப்ரஹ்மேந்த்ரர்களின் மடத்தை அடைந்தார். இந்த உபநிஷத் ப்ரஹ்மேந்த்ராளிடமே தியாகராஜ ஸ்வாமிகள் ஸந்யாஸம் பெற்றார் என்பர் பெரியோர். உபநிஷத் ப்ரஹ்மேந்த்ராளின் மடத்திற்குச் செல்வோர், அங்குக் கருங்கல்லில் செதுக்கி அமைக்கப்பட்டிருக்கும் ''ஸ்ரீ ராம யந்த்ரத்தை'' அவசியம் தர்சிக்க வேண்டும். உபநிஷத்துக்கள் 108க்கும் பாஷ்யம் கண்டவர் அந்த மஹான். இன்று சாக்த உபநிஷத்துக்கள் அவர் உரையுடன் விளங்குகின்றன. அற்புதமானஉரை. அங்குச் சில ஆண்டுகள் தங்கி பழுத்த ஞானியாகிய பின்னர் காளஹஸ்தி சென்றார். அங்குத் தங்கியிருந்த ஸ்ரீ ராம கிருஷ்ண அவதூத ஸ்வாமிகளைக் கண்டார்.

திருப் பெருந்துறையிலே குருந்த மரத்தடியில் தக்ஷிணா மூர்த்தியாய் அமர்ந்து திருவாதவூர் அடிகளுக்கு ஞானோபதேசம் செய்து, மாணிக்கவாசகர் எனத் தீக்ஷ நாமமு சூட, பகவான் காத்திருந்தது போல ஜட்ஜ் ஸ்வாமிகளின் வருகைக்காகக் காத்திருந்தார் அந்தக் குருமூர்த்தி. அவரைப் பார்த்த போது ஜட்ஜ் ஸ்வாமிகளுடைய மனம் அனலில் இட்ட மெழுகு போல் உருகியது.

பாவகாந்தஸ்த்த ஜதுவந் த்ரவீபூத மபூன் மனः

குருநாதர் ஸ்ரீ ராமகிருஷ்ணாவதூத ஸ்வாமிகள் தன்னை வணங்கி நிற்கும் மஹா புருஷனுக்கு அவதூத ஆச்ரமம் அளித்து ''ஸதாசிவம்'' என்ற தீக்ஷா நாமம் அளித்து, மஹா மந்த்ரத்தை உபதேசித்து அருளினார்கள். அன்றே சரீராபிமானத்தை விட்டதற்கு அறிகுறியாக ஆடையைத் துறந்து அவதூதரானார் ஜட்ஜ் ஸ்வாமிகள்.

अक्षरत्वात् वरिष्ठत्वात् धूतसंसार बन्धनात्।
तत्वमस्यादिलक्ष्यत्वात् अवधूत इतीर्यते ।।



அக்ஷரத்வாத் வரிஷ்டத்வாத் தூதஸம் ஸார பந்தனாத்।
தத்வமஸ்யாதி லக்ஷ்யத்வாத் அவதூத இதீர்யதே॥

அக்ஷரமாய் இருக்கின்றான். உலகில் க்ஷரன், அக்ஷரன் என்ற இருவகைப் புருஷர்கள் இருக்கின்றனர். ஸகல அசேதனங்களும் (ஜட பதார்த்தங்கள்) க்ஷரம் என்றும், சேதனன், அக்ஷரன் என்றும் பேசப்படுகின்றான். இந்த அக்ஷரன் தேஹம் அழிந்தாலும் அசையாமல் மலைபோல் இருக்கின்றவன.

வரிஷ்டனாய் இருக்கின்றான் , பஹூதக, குடீசக, ஹம்ஸ பரம ஹம்ஸாதியரையும் விட உயர்ந்தவனாய் இருக்கிறான்.

**தூதஸம்ஸார பந்தன**

பிரபஞ்சத்தின் பந்தங்கள் ஏதும் அற்றவனாய் இருக்கிறான். தத்துவமஸ்யாதி லக்ஷ்யனாய் இருக்கின்றான்.

ஜீவ ப்ரஹ்ம ஐக்யத்தைக் காட்டும் தத்வமஸி என்ற மஹா வாக்யத்தால் குறிக்கப்படுகின்ற ஜீவ ப்ரஹ்ம அபேதபாவம் பெற்ற பரப்ரஹ்ம ஸ்வரூபியாய் இருக்கின்றான். இந்த அவ்தூத என்ற சொல் ''அக்ஷர'' என்ற பதத்தில் இருந்து முதல் எழுத்தான அ என்பதையும் ''வரிஷ்ட'' என்ற பதத்தில் இருந்து வ என்ற முதல் எழுத்தையும், ''தூதஸம்ஸார பந்தன'' என்பதில் இருந்து தூ என்ற முதல் எழுத்தையும், ''தத்துமஸ்யாதி லக்ஷ்ய'' என்பதில் இருந்து முதல் எழுத்தான த என்பதையும் சேர்த்து அவதூத என்று சுருக்கிச் சொல்லப்படுகின்றது என அவதூத லக்ஷணம் கூறுவர். உடன் ஹிமாலயம் வரை யாத்ரை செய்து ''கிரினாரில்'' ஸ்ரீ தத்தாத்ரேயர் பாதுகைகளைத் தர்சித்து, கிருதார்த்தர்களாய்ப் பல க்ஷேத்ரங்களையும் தர்சித்து கடைசியாய்த் தென்னாட்டில் மானாமதுரையை வந்தடைந்தார் ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்.

அங்குதான் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ராளுக்கு உபதேசம் செய்து, அவரைத் தம் உத்தம சிஷ்யராக்கிக் கொண்டார் (இந்த விபரத்தை ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்தராளின் சரிதையில் காண்க).

**புதுக்கோட்டை வந்தார்**

பின் திருச்சி வந்து தங்கிய ஸ்வாமிகள், புதுக்கோட்டை செல்ல ஆயத்தமாகி நார்த்தாமலை வந்து அங்குள்ள சிவன் கோயிலில் அமர்ந்து, தியானத்திலே நிலைத்து விட்டார். அங்குள்ளவர்கள் ஸ்வாமிகளைச் சிவிகையில் ஏற்றி வைத்து சற்றும் சமாதியைக் கலைக்காமல், புதுக்கோட்டைக்கு எடுத்து வந்தனர். அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை மட்டும் புதுக்கோட்டைக்குக் கொண்டு வரவில்லை. புதுக்கோட்டைக்கு எல்லை இல்லாத புண்ணியத்தை, குன்றாத புகழைக் கொண்டு வந்தார்கள் என்றே சொல்லலாம். எங்கோ பிறந்தார், எங்கேயோ வளர்ந்தார், எங்கேயோ இன்புற வாழ்நாளைக் கழித்தார். எங்கெல்லாமோ நிஷ்டையில் இருந்தார். கடைசியில் நிரந்தரமான ப்ரஹ்ம பாவத்தை அடைய புதுக்கோட்டை வந்தார். என்னே புதுக்கோட்டை செய்த பாக்யம்!

**அதிஷ்டானம்**

புதுக்கோட்டை வந்ததும் ஜட்ஜ் ஸ்வாமிகள் ஸச்சிதானந்த பரப்ரஹ்ம நிலை எய்தி விட்டார்.

அப்போது புதுக்கோட்டை திவானாய்ப் பணியாற்றிய வேங்கட் ராமதாஸ் நாயுடு அவர்கள் (அவர் ஜட்ஜ் ஸ்வாமிகளின் சட்டக் கல்லூரித் தோழர்), ஸ்வாமிகள் யார் என அடையாளம் கண்டு கொண்டார். மன்னரிடம் கூறி, நகரின் வடகிழக்குப் பகுதியில் (இப்போது அதிஷ்டானம் உள்ள இடம்) மன்னரால் வாய்மொழியாக அளிக்கப்பட்ட இடத்தில் வேத வித்துக்கள் எடுத்து வர உபநிஷத்துக்களின் கோஷம் வானை முட்ட ஆஸ்திகோத்தமர்களின் கூட்டம் அணி வகுத்து வர, திவான் முன்னின்று உதவி புரிய, வேத விதிகளின்படி ஸ்வாமிகளை அடக்கம் செய்தனர் பெரியோர்கள். அவர் அடக்கம் செய்யப்பட்ட இடமே இன்றைய அதிஷ்டானமாகும். இங்கு ஜட்ஜ் ஸ்வாமிகள் என்றும் அருள் வழங்கிக் கொண்டிருக்கின்றார்கள். மாபெரும் ஞானியைத் தாங்கி நின்ற பூதவுடல் அழியும். ஞானமாகிய ஆத்மா என்றும் அழியாதிருக்கும்.



अविनाशि तु तद्वि येन सर्वमिदं ततं।
विनाश मव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥

அவினாசிது தத்வித்தி யேன ஸர்வமிதம் ததம்।
விநாச மவ்யஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்துமர்ஹதி ॥ (கீதை)

இந்த உலகம் எல்லாம் எந்த வஸ்துவினால் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்த ஜீவனாகிய ப்ரஹ்மத்தை நாசம் அற்றதாகவும், அதற்கு நஷ்டத்தை உண்டு பண்ண ஒருவராலும் ஆகாது என்றும் அறிந்து கொள் என்பதே இதன் பொருள்.

**அதிஷ்டானத்தில் விளக்கேற்றி வைத்தார் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகள்**

வருடங்கள் பல உருண்டோடின. அதிஷ்டானத்தை மக்கள் மறந்தனர். அதிஷ்டானம் இருந்த இடத்தைக் குப்பை மேடு பிடித்துக் கொண்டது. அது ஸமாதியிடம் எனத் தெரியாமல் ரிடையர்ட் ஆன நீதிபதி பத்மனாப சாஸ்திரியார் அதை அரசாங்கத்திடம் இருந்து விலைக்கு வாங்கினார்.

இவ்வாறு இருந்த நாளில் ஜட்ஜ் ஸ்வாமிகளின் முக்கிய சிஷ்யரான ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகள், சேந்தமங்கலத்தில் உலகை மறந்து நிஷ்டையில் இருந்தார். அவருக்குத் தம் குரு ஸமாதி அடைந்த விபரமே தெரியாது. பின்னரே விபரம் அறிந்தார். தம் குரு ஸமாதி அடைந்த இடத்தைக் காண ஓர் இரவில் புதுக்கோட்டை வந்து ஸமாதி இடத்தை நன்கு அறிந்து, குப்பைகளை நீக்கி சுத்தம் செய்து தீபம் ஏற்றி விட்டு உடன் சேந்தமங்கலம் சென்றார். இந்த இடம் ஒளிபெற்றுப் பிரகாசிக்க வேண்டும் எனத் திட ஸங்கல்பம் செய்து கொண்டார். மஹான்களுடைய ஸங்கல்பம் வீணானதுண்டோ!

**கும்பாபிஷேகம் நடந்தது**

புதுக்கோட்டை மக்கள் மனத்தில் அதிஷ்டானத்தைப் புதுப்பித்து வழிபாட்டிற்கு உரியதாக ஆக்க வேண்டும் என்ற அவா எழுந்தது. ஓய்வு பெற்ற நீதிபதி ரெகுநாத அய்யர் தலைமையில் அனைவரும் சேந்தமங்கலம் சென்று ஸ்வாமிகளிடம் இதை விண்ணப்பித்தனர். ஸ்வாமிகள் தன் சிஷ்யரான சங்கரானந்தரை அனுப்பி இடத்தைக் காட்டச் சொன்னார்.

பூமியைத் தோண்டி ஸமாதி இருப்பதைக் கண்டு, அங்கு ஒரு அதிஷ்டானத்தை நிறுவினார்கள். கோபுரத்துடன் இதை அமைத்தனர். ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ரரை அழைத்து வந்தனர். ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர அவதூத ஸ்வாமிகள் அம்ருத ஹஸ்தத்தால் கும்பாபிஷேகம் நடந்தது. இன்றும் அது ஸ்ரீ புவனேச்வரீ வாஸம் செய்யும் பூலோகத்திய மணி த்வீபமாய்ப் பிரகாசித்துக் கொண்டு இருக்கின்றது.



# ஸ்ரீ ஸத்குரு ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளின் சரிதம்

सदाशिवावधूतेन्द्र मुख्यशिष्यान्यतीश्वरान्।
स्वयंप्रकाशब्रह्मेन्द्र सरस्वत्यभिधान्भजे॥

ஸதாசிவாவ தூதேந்த்ர முக்யசிஷ்யான் யதீச்வரான்।
ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யபிதான்பஜே॥

ஸ்ரீமத் ஸதாசிவாவதூதேந்த்ரர்களின் முக்கிய சிஷ்யர்களான ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வதி என்ற பெயர் கொண்ட யதீச்வரர்களை பூஜிக்கிறேன்.

२ शान्तानन्दावधूतानां गुरून्ब्रह्मविदुत्तमान्।
स्वयंप्रकाशयोगीन्द्रान् अवधूतोत्तमान् नुमः॥

சாந்தானந்தாவதூதானாம் குருன் ப்ரஹ்மவிதுத்தமான்।
ஸ்வயம்ப்ரகாசயோகீந்த்ரான் அவதூதோத்தமான் நுமஃ॥

ஸ்ரீ சாந்தானந்தாவதூத ஸ்வாமிகளின் குருவும் ப்ரஹ்மத்தை அறிந்தவர்களில் உயர்ந்தவருமான ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரஹ்மேந்த்ரர் அவர்களை நமஸ்கரிக்கின்றோம்.

प्रातिष्ठिपद्यः किल शेन्दमङ्गल
क्षेत्रे त्रिमूर्त्यात्मकमत्रिसम्भवम्।
श्रीदत्तशैलोपरि दत्तयोगिनं
स्वयंप्रकाशाख्ययतिं तमाश्रये॥

ப்ராதிஷ்டிபத்யஃ கில சேந்தமங்கல
க்ஷேத்ரே த்ரிமுர்த்யாத்மக மத்ரிஸம்பவம்।
ஸ்ரீதத்த சைலோபரி தத்த யோகினம்
ஸ்வயம்ப்ரகாசாக்ய யதிம் தமாச்ரயே॥

சேந்தமங்கல க்ஷேத்ரத்தில் தத்தகிரியில் த்ரிமூர்த்தி ஸ்வரூபம் அத்திரி மஹர்ஷி புத்திரரும் ஆகிய தத்தாத்ரேய யோகியைப் பிரதிஷ்டை செய்து அருளிய ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகளை சரணடைகிறேன்.

स्वयं प्रकाशमिथतथ्यनाम्ना
प्रकाशमानं विदितात्मतत्वम्।
चिन्मुद्रयांचत्स्वकरारविन्दं
योगीन्द्रमीडे भवबन्धमुक्त्यै॥

ஸ்வ்யம்ப்ரகா காமித தத்ய நாம்னா
ப்ரகாச மானம் விதிதாத்ம தத்வம்।
சின்முத்ரயாஞ்சத்ஸ்வகரார விந்தம்
யோகீந்த்ரமீடே பவ பந்த் முக்த்யை॥

ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாசர் என்ற உண்மையான பெயருடன் விளங்குபவரும் ஆத்ம தத்வம் அறிந்தவரும் சின்முத்ரை திகழும் கர கமலங்களை உடையவருமான ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச யோகீஸ்வரரை ஸம்ஸார பந்தத்தில் இருந்தும் விடுதலை பெறத் துதிக்கிறேன்.

कल्पट्टग्रामसंजातं रामस्वामि द्विजात्मजम्।
स्वयंप्रकाशं वन्देऽहं चिन्मुद्रांचत्करांबुजम्॥

கல்பட்டு க்ராமஸம்ஜாதம் ராமஸ்வாமி த்விஜாத்மஜம்।
ஸ்வயம்ப்ரகாசம் வந்தேஹம் சிந்முத்ராம் சத்கராம்புஜம்॥

கல்பட்டு கிராமத்தில் ஸ்ரீ ராம ஸ்வாமி என்பவரின் புதல்வராய்த் தோன்றிய சிந்முத்ரை பிரகாசிக்கும் கர கமலமுடைய ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளை வணங்குகிறேன்.

श्री शेंदमंगलमिति प्रथिते पुराणे
क्षेत्रे समाधि मुपगम्य सदा लसन्तं।
लिंगात्मना गुरुवरं प्रथितप्रभावं
श्री स्वप्रकाश यतिराजमुपानतोऽस्मि॥



ஸ்ரீசேந்தமங்கலமிதி ப்ரதிதே புராணே
க்ஷேத்ரே ஸமாதி முபகம்ய ஸதா லஸந்தம்।
லிங்காத்மனா குருவரம் ப்ரதிதப்ர பாவம்
ஸ்ரீ ஸ்வப்ரகாசதிராஜ முபானதோஸ்மி॥

புராணத்தில் சேந்தமங்கலம் என்று பிரஸித்தமான க்ஷேத்ரத்தில் ஸமாதி பெற்று லிங்க ரூபியாய் எப்போதும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் மிகப் பெருமை பொருந்திய ஸத்குரு சிரேஷ்டரான ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளை வணங்குகிறேன்.

புராணங்கள் போற்றிப் புகழும் சீர்மிகு சேந்தமங்கலத்தில் தத்தகிரிக்குச் சென்றால், தத்தாத்ரேயருடன் முருகனும், மஹா சாஸ்தாவும், தக்ஷிணா மூர்த்தியும், பஞ்சமுக கணபதியும் இன்னும் பல தெய்வங்களும் ஸாந்நித்யம் கொண்டு அருள் வழங்கி வருவதைக் காணலாம். உள்ளே சென்று பார்த்தால் செப்பனிட்ட ஒருவர் மட்டும் ஊர்ந்து செல்லக் கூடிய ஒரு குகையைக் கண்டு வியப்புறுவோம். இந்த இடம் முன்பு மனுஷ்ய ஸஞ்சாரம் அற்றதாய் இருந்திருக்கும். இவ்வாறான இடத்தில் யார் குகையை நிர்மாணித்தார்கள்? யார் இங்கு யோகத்தில் திளைத்திருந்தார்கள்? என்ற பல கேள்விகளை நம் மனம் கேட்கும். அதற்கெல்லாம் இதோ இந்த வரலாறு பதில் கூறும்.

**கல்பட்டு ராமஸ்வாமி சாஸ்திரிகள் தனயன்**

சிற்சில ஊர்களுக்கு அங்குள்ள கோயில்களால் சிறப்பு. சில ஊர்களுக்குப் புண்ணிய நதிகளால் புகழ். சில ஊர்களுக்கு மஹனீயர்களையும் வித்வான்களையும் பெற்றதால் சிறப்பு. மூன்றாம் சிறப்பைத் தாங்குகிறது கல்பட்டு கிராமம். கல்பட்டிலே கனபாடிகள் அதிகம். வேத வித்துக்கள் நிறைந்த ஊர்.

அங்கு அந்தணர்களுக்கு உரிய நியமத்துடன் வாழ்ந்து வந்தவர்கள் ப்ரஹ்ம ஸ்ரீ ராம ஸ்வாமி சாஸ்திரிகள். இவருக்கு நாராயண ஸ்வாமி, குருஸ்வாமி, நரஸிம்ஹன் என்று மூன்று குழந்தைகள். நான்காவதாகப் பிறந்தவர் கிருஷ்ண மூர்த்தி என்பவர். இவர் நாடு போற்றும் யோகியாய், நல்ல உபதேசங்களைச் செய்யும் ஞானாசாரியனாய்ச் செயற்கரிய யோக பலத்தால் ப்ரஹ்ம வித்தாய் இருப்பார் என்று யார் அறிவர்? குழந்தையின்

ஜன்ம தினம் ப்ரஜோத்பத்தி வருடம் கார்த்திகை மாதம் சதுர்தசி (28.11.1871). ஸ்ரீ ராமஸ்வாமி சாஸ்திரிகளின் குடும்பம் கல்பட்டை விட்டு மாயூரத்தின் பக்கத்தில் உள்ள ஆடுதுறைக்கு வந்து சேர்ந்தது.

**கிருஷ்ணமூர்த்தியாய் இருந்த போது**

ப்ரஹ்மோபதேசம் பெற்ற கிருஷ்ணமூர்த்தி சில ஆண்டுகள் திருவிடைமருதூரில் படித்தார். பின் கும்பகோணத்தில் வஸித்து வந்த "அபிநவ காளிதாஸன்" என்று அனைவராலும் போற்றப்பட்ட ஸ்ரீ நாராயண சாஸ்திரிகளிடம் ஸம்ஸ்கிதம் படித்து தேர்ச்சி பெறும் பாக்யமும் இவருக்குக் கிடைத்தது. பின் திருவனந்தபரத்தில் மெட்ரிகுலேஷன் பாஸ் செய்து சேலத்தில் 50 ரூபாய் சம்பளத்திற்கு அரசாங்க உத்யோகத்தில் (செட்டில்மென்ட் டிபார்ட்மெண்டில்) அமர்ந்தார். சென்னைக்குப் மாற்றப்பட்டு சம்பளமும் அதிகமாய்ப் பெற்றார்.

இவருக்குக் கல்யாணம் செய்து வைக்கப் பெற்றோர் விரும்பினர். கிருஷ்ணமூர்த்தி அதற்கு இணங்கவில்லை. பிராரப்த கர்மாவை அனுபவிப்பதற்கு இந்த உடலை எடுத்தவர் அவர். மீண்டும் ஜீவனை பந்தத்தில் ஈடுபடுத்த விரும்பவில்லை. ஞான மார்க்கத்தை நாடி நின்றவர் பந்தத்தில் மாட்டிக் கொள்ள இஷ்டப்படவில்லை. திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்று தீர்மானமாய் இருந்தார். இதனால் இவர் பிராதாக்களுக்கும் பெற்றோருக்கும் இவரிடம் கசப்பு ஏற்பட்டது.

கடைசியாக உத்யோகத்தை உதறித் தள்ளி விட்டு காசியை நோக்கி நடந்தார் கிருஷ்ண மூர்த்தி.

कालं जेतुमुपायौ द्वौ कलिकल्मष संप्लुतम्।
कथा वा निषधेशस्य काशी वा विश्वपावनी ।।

காலம் ஜேதும் உபாயௌ த்வௌ கலிப்மஷஸம்ப்லுதம்।
கதாவா நிஷ தேசஸ்ய காசீவா விச்வ பாவனீ॥ (நீலகண்ட தீக்ஷிதர்)

காசி சென்றால் கலியின் கல்மஷம் தொலையும். அங்குப் பிரபலமாய் இருந்த ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகளைத் தர்சித்து ஸந்யாஸம் தருமாறு பிரார்த்தித்தார். அவரோ பெற்றோர் அனுமதி பெற்று வருமாறு கூறி விட்டார்.



காசியை விட்டு ஊர் வந்த போது தந்தை இறந்து விட்டார். மானஸீக ஸந்யாஸம் ஏற்ற இவர் தந்தையின் ஈமக் கிரியைகளில் கலந்து கொள்ளவில்லை. உண்மை நிலை தெரியாதவர் தூற்றியதை போல, மெய் அறிவுடையவர் போற்றவும் செய்தனர்.

**குரு கிடைத்தார்**

பின்னர் சில நாட்கள் சென்ற பின்னர் ஜட்ஜ் ஸ்வாமிகள் என்ற மஹான் மானா மதுரையில் இருப்பதாய் அறிந்தார். ஓடோடி வந்து, அவர் திவ்ய சரணார விந்தங்களை விடாப்பிடியாய்ப் பிடித்துக் கொண்டார் நவீன ஹஸ்தாமலகர். உடனேஜட்ஜ் ஸ்வாமிகள் பொதிகை மலைசென்று அங்கே ஒருவாரம் யோகத்தில் அமர்ந்திருந்தார். சிஷ்யரின் பொறுமையைச்சோதிக்க எண்ணினார் போலும். கண் விழித்துப் பார்த்த போது கிருஷ்ணமூர்த்தி தன்னுடன் இருப்பதையும், அன்ன ஆஹாரம் இன்றி வாடிக் கிடப்பதையும் கண்டு, இவர் ஆச்ரமத்திற்குத் தகுதி உள்ளவர் எனக் கண்டு கொண்டார். வெருட்டியடித்துப் பார்த்து விடாமல் தொடர்ந்த அன்பருக்கு ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூதர் என்ற தீக்ஷா நாமம் சூட்டி, மஹா வாக்ய மந்த்ரோபதேசமும் செய்து அருளினார். ஸந்யாஸம் பெற்ற தினம் 1900 விகாரி வருடம் ஆனி மாதம் பௌர்ணமி திதி என்பர்.

**அவதூதர் ஆனார்**

தாயிடம் வந்து ஒரு நாள் தங்கி, அவதூத கோலம் கொண் மௌனியாய் வடதிசை நோக்கிச் சென்று, ஜன ஸஞ்சாரம் அற்ற கொல்லி மலைக்கு வந்து தங்கி, பின்னர் சேந்தமங்கலம் வந்தடைந்தார். ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகள் தங்கியதால் சேந்தமங்கலம் பெருமை பெற்றது.

उपधाय बाहुमूलं परिधायाकाशमवनिमास्तीर्य।
प्रस्वपति विरतिवनितां परिरभ्यानन्दमन्थरः कोपि ।।

உபதாய பாஹுமூலம் பரிதாயாகா சமவனி மாஸ்தீர்ய ।
ப்ரஸ்வபதி விரதிவனிதாம் பரிரப்யானந்தமந்தர: கோபி ॥
(ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்)

என்றபடி ஸ்வாமிகள் நினைத்தபோது கரதல பிக்ஷை பெற்று, இரவில் மரத்தடியில் கைகையே தலையணையாய்க் கொண்டு திகம்பரராய் பூமியிலே படுத்துறங்கி, பரமானந்தத்தில் மூழ்கி இருந்தார். இப்படியிருக்கும் ஸ்வாமிகள் ஒரு நாள் சேலம் சென்றபோது, போலீஸார் ஆடையின்றிச் செல்லும் இவரைக் கைது செய்து கோர்ட்டில் நிறுத்தினர்.

இவர் ஞானி என்று கண்டு கொண்ட கிருஷ்ணஸ்வாமி அய்யர் என்ற வக்கீல் இவர் பெருமைகளைக் கூறி, இவரை விடுவிக்குமாறு செய்து, தன்னுடைய இல்லத்தில் தங்க வைத்து பலநாள் காப்பாற்றி வந்தார். மீண்டும் ஸ்வாமிகள் சேந்தமங்கலமே வந்தனர்.

சேந்தமங்கலத்தில் இவர் ஒருநாள் முஸ்லீம் தெரு வழியாக வந்த போது, அவர்கள் ஆடை அற்றிருக்கும் இவரைத் தவறாகப் புரிந்து கொண்டு அடித்து ஹிம்ஸித்தனர். மற்றவர்கள் வந்து அவரைக் காப்பாற்றி அழைத்துச் சென்றனர். ஸ்வாமிகள் முகத்தில் ஒரு மாறுதலும் தெரியவில்லை. ஸ்வாமிகள் சினமேதும் கொள்ளாமல் மீண்டும் அந்தத் தெரு வழியே நடந்து சென்று கொண்டிருந்தார் என்பர். உயர்வு தாழ்வு, நல்லது கெட்டது, கௌரவம் அவமானம் இவை எல்லாம் உலகைத் துறந்த ஞானியர்களுக்கு ஏது?

### குகையில் கிடந்தார்

பின்னர் ஸ்வாமிகள் பன்னெடுங்காலம் யோகத்தில் அமர விரும்பினார். அது தெரிந்த அன்பர்கள் சேந்தமங்கலம் ஸந்யாசிக் காட்டிலே (இப்போதைய பெயர் தத்தகிரி) ஒரு அழகிய குகையை அமைத்துக் கொடுத்தனர். இதுவே குஹாலயம் என்று அழைக்கப்படுகின்றது. இக்குகையை இன்றும் காணலாம்.

அங்கு யோகத்தில் அமரச் செல்லும் முன்னர் ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு அன்பரைக் கூப்பிட்டு வெளியில் பூட்டி விடுமாறு கூறி யோகத்தில் ஆழ்ந்து விட்டார். கொஞ்சம் கொஞ்சமாக இச் செய்தி பரவ, யோகியைப் பார்க்க மஹா ஜனங்கள் கூடினர். இது தெரிந்த சேலம் கலெக்டர் இவ்வாறு மனிதனைப் பூட்டி வைப்பதும் குற்றம் எனக் கூறி,



அதிகாரிகளை அனுப்பி பூட்டைத் திறக்குமாறு உத்தரவிட்டார். அதிகாரிகளும் பூட்டை உடைத்து அவரை வெளியே கொண்டு வந்த போது, அவர் கட்டை போல் கிடந்தார். கண் விழித்த ஸ்வாமிகளைக் கண்டு அதிகாரிகள் பெரிதும் வருந்தி, தங்களை மன்னிக்குமாறு வணங்கிச் சென்றனர். இவ்வாறு இவர் குகையில் பூட்டப்பட்டிருந்த காலத்தில், இவரைக் கொல்லி மலைப் பகுதிகளிலும் வேறு சில இடங்களிலும் நேரில் பார்த்ததாய்ப் பலர் கூறியதுண்டு. இடையிலே சித்து விளையாடல்கள்.

### க்ஷேத்ராடனம்

பின்பு ஸ்வாமிகள் கால்நடையாகவே ராமபத்ரரின் பாதம் பட்ட புண்ணிய பூமியாம் சேது முதற்கொண்டு, காணியாய் காத்து இடப் புறத்தே குடி கொண்ட கன்னியை பாகமுடைய கண்ணுதற் கடவுள் தங்கும் கைலை வரை பிரயாணம் செய்தார். பதரிகாசிரமத்தில் தத்தாத்ரேயர் குகைக்கு அருகில் இரவு தங்கி இருக்கும்போது தென்னாட்டில் குறிப்பிட்ட இடத்தில் தத்தாத்ரேயரைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்ற ஓர் தீவிர உணர்ச்சி எழுந்தது. பின் ஸ்வாமிகள் 17 ஆண்டுகள் சுற்றிய பிறகு மீண்டும் சேந்தமங்கலம் வந்தருளினார்.

### தத்தாத்ரேயர் பிரதிஷ்டை

உடன் பகவான் தத்தாத்ரேயரை ஸ்வாமிகள் ஸந்யாஸிக் கரட்டிலே பிரதிஷ்டை செய்தார். சான்றோரும் மக்களும் ஒத்துழைக்க, பகவான் தத்தாத்ரேயருக்குச் சிறிய கோயில் உதயமாயிற்று. 29.5.31 பிரஜோத்பத்தி வருடம் வைகாசி மாதம் 16ஆம் தேதி கும்பாபிஷேகம் சிறப்புற நடந்தது. மஹாத்மாக்கள் ஸங்கல்பம் என்றும் வீணாவதில்லை. அந்த இடமே இன்று தத்தகிரி முருகன் திருக் கோயிலாக விளங்குகின்றது.

### சிஷ்யர்கள்

ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளுக்குப் பணிவிடை செய்து இவருக்கு சிஷ்யரானவர் பலர். ஸ்ரீ சங்கரானந்தர், ஸ்ரீ நிஜானந்தர், ஸ்ரீ சிவானந்தர், ஸ்ரீ கைவல்யானந்தர், ஸ்ரீ கிருஷ்ணாநந்தர், ஸ்ரீ சுகானந்தர், ஸ்ரீ சாந்தானந்தர் முதலியவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

**ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்தர்**

அதில் ஸ்ரீ சாந்தானந்தர் ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகளின் அன்பிற்குப் பாத்திரமானவர். அவரிடம் ஒன்றிக் கிடக்கும் ஒரு சக்தியை ஸ்வாமிகள் கண்டு கொண்டார்.

**அதிஷ்டான கும்பாபிஷேகம்**

ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகள் யோகத்தில் இருக்கும்போது இவர் குருநாதர் ஜட்ஜ் ஸ்வாமிகள் மஹா ஸமாதி அடைந்து விட்டார். இது ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகளுக்குத் தெரியவில்லை. வெகு காலத்திற்குப் பின்னரே தெரிந்து உடனே புறப்பட்டு, புதுக்கோட்டைக்கு வந்து, இடத்தைக் கண்டு பிடித்து, சுத்தம் செய்து, ஒரு விளக்கினை ஏற்றி வைத்து விட்டுச் சென்று விட்டார். பின்னர் ரிடையர்ட் ஜட்ஜ் ரகுநாத அய்யர் தலைமையில் புதுக்கோட்டை மக்களால் கோபுரம் அமைக்கப் பட்டு தாது வருஷம் வைகாசி மாதம் 18ஆம் நாள் (21.5.1936)ல் தானே நேரில் வந்து ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளின் கும்பாபிஷேகத்தை நடத்தி அருளினார்கள்.

**ஸ்ரீ+ சாந்தானந்தருக்குக் கிடைத்த பணி**

இப்படி இருக்கும் நாளில்தான் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி வழிகாட்டுமாறு வேண்டி நின்றார்கள். இவரைப் பார்த்த உடனேயே, தம் ஸங்கல்பம் நிறைவேறும் என்ற உறுதி கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் மகிழ்ந்து, சாந்தானந்தர் என தீக்ஷா நாமம் சூட்டி மஹா மந்த்ரம் உபதேசித்து ஸந்யாஸ ஆசிரமம் அளித்து, "குழந்தாய்! என் குருநாதர் ஸமாதியை உயர்வு படுத்துவது உன் வேலை" என அருளாணை இட்டு, உடன் ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளைப் புதுக்கோட்டைக்கு அனுப்பி வைத்தார்கள்.

**மஹா ஸமாதி**

தான் செய்ய வேண்டிய பணிகள் முடிந்து விட்டதை அறிந்த ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகள் தத்தகிரியில் தத்தாத்ரேயர் கோயிலின் கீழ் தன் ஸமாதிக்கான இடத்தை அன்பர்களைக் கொண்டு அமைக்கச் செய்திருந்தனர்.



1958ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 29ஆம் தேதி பல பக்தர்கள் சூழ்ந்திருக்க, ஸ்ரீ ஸ்வாமிகள் ஸச்சிதானந்த பரப்ரஹ்ம பாவம் பெற்றார். இன்றும் அங்கு லிங்காகாரமாய் இருந்து கொண்டு அன்பர்களுக்கு அருள்பாலித்து வருகின்றார்.

## ஸ்ரீ ஸத்குரு ஸ்ரீசாந்தானந்தாவதூத ஸ்வாமிகள்

ईशस्येच्छा कुण्डली ह्रीं स्वरूपा
सर्वान्तस्था चिन्त्यते यैः सदैव।
लोकोद्धारासक्तचित्तान्गुरूस्तान्
वन्दे शान्तानन्दनाम्नो यदीन्द्रान्॥

ஈசஸ்யேச்சா குண்டலீ ஹ்ரீம் ஸ்வரூபா
ஸர்வாந்தஸ்தா சிந்த்யதே யைஸ் ஸதைவ।
லோகோத்தராரா ஸக்த சித்தான் குரும்ஸ்தான்
வந்தே சாந்தானந்த நாம்னோ குரும்ஸ்தான்॥

आचक्षते यं विद्वांसः प्रत्यक्षभुवनेश्वरीम्।
तं शान्तानन्द योगीन्द्रं वन्देऽहं यतिनां वरम्॥

ஆசக்ஷதே யம் வித்வாம்ஸः ப்ரத்யக்ஷ புவனேச்வரீம்।
தம் சாந்தானந்த யோகீந்த்ரம் வந்தேஹம் யதினாம்வரம்॥

यज्जिह्वा मधुरं ब्रवीति ललिते प्रत्यङ्गिरे ह्रीं शिवे
श्रीमातर्भुवनेशीवरीति सततं यत्नं विना श्वासवत्।
यन्नेत्रे विमले प्रयञ्चमखिलं देवीमयं पश्यतः
शान्तानन्द यतीश्वरो विजये सोऽयं सतामग्रणीः॥

யஜ்ஜிஹ்வா மதுரம் ப்ரவீதி லலிதே ப்ரத்யங்கிரே ஹ்ரீம் சிவே
ஸ்ரீமாதர் புவனேச்வரீதி ஸததம் யத்னம் வினா ச்வாஸவத்।
யந்நேத்ரே விமலே ப்ரபஞ்சமகிலம் தேவீமயம் பச்யதঃ
சாந்தானந்த யதீச்வரோ விஜயதே ஸோயம் ஸதாமக்ரணீ॥

### ஸ்ரீ ஸ்வாமிகளின் திருப்பணிகள்

தென்னாட்டில் புகழ் மிக்க புதுக்கோட்டையில் ஸ்ரீ புவனேச்வரீ அதிஷ்டானத்தையும் ஸ்ரீ யோகி சாந்தானந்த ஸ்வாமிகளையும் அறியாதவர் இல்லை என்றே சொல்லலாம். ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வதியவதூத ஸ்வாமிகளைப் பரம குருவாகவும், ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ப்ரஹ்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளைக் குருவாகவும் கொண்ட பாக்யசாலி ஆவார். சிறு வயதிலேயே வேதாத்தியயனம் செய்யவும் வாய்ப்பு பெற்றவர். இதுவரை இவர் செய்த வேள்விகள் 31 என்று தெரிகிறது.

புதுக்கோட்டை புவனேச்வரீ ஸந்நிதியும், சேலம் உடையாப்பட்டி ஸ்கந்தாச்ரமத்தில் அவர் அமைத்துள்ள ஸ்ரீ ஸ்கந்தமாதா அஷ்டாதசபுஜ தேவியும் ஸ்ரீ தண்டபாணியும் அமர்ந்து அருளும் ஸ்கந்தகிரி ஆச்ரமமும், சேந்தமங்கலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள பெரிய உருவம் கொண்ட அற்புதமான தெய்வ மூர்த்திகளும் இவர் தம் திருப் பணிகளுக்கு நிறுவப்பட்ட ஜயஸ்தம்பங்களாகவே காட்சி அளிக்கின்றன.

1. புதுக்கோட்டையில் புவனேச்வரீ தேவி, ஸ்ரீ சக்ரம், ஸ்ரீ அஷ்டாதசபுஜ துர்கா தேவி (சுதையில்) பஞ்சமுக கணபதி பஞ்சமுக ஹனுமான்.

2. ஸ்கந்தகிரி ஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீ ஸ்கந்த மாதா அஷ்டாதசபுஜ தேவி (பஞ்ச லோகத்தில்) தேவியின் பெரிய விக்ரஹம், ஸ்ரீ தண்டபாணி ஆழ்வார்கள், வேத மூர்த்திகள், சமயாசாரியர்கள், சந்தானாசாரியர்கள், சித்தர், யோகிகள் உபாஸகர்கள் இவர்களின் 30க்கும் மேற்பட்ட விக்ரஹங்கள் இவற்றில் மிகமிகப் பெரியதும் அழகு வாய்ந்தவையாயும் உள்ள தத்தாத்ரேயர், பஞ்சமுக ஹனுமான், பஞ்சமுக கணபதி, ஸ்வர்ணாகர்ஷண பைரவர், தந்வந்த்தரி இவர்களின் விக்ரஹங்கள்.

3. சேந்தமங்கலத்தில் ஸ்ரீ தண்டபாணி, ஸ்ரீ ஐயப்ப ஸ்வாமி, பஞ்ச முக கணபதி, பஞ்சமுக ஆஞ்சநேயர், ஸ்ரீ சனி பகவான், கருப்பண்ண ஸ்வாமி, ஸ்ரீ கங்கா தேவி, வன துர்கை, தக்ஷிணா மூர்த்தி, இடும்பன் முதலிய அற்புதமான மூர்த்திகள். ஸ்ரீ ஸ்வாமிகளின் திருப்பணிப் பணியையும் கலைகளில் உள்ள நுண்ணறிவையும் பக்தி ச்ரத்தையையும் நமக்கு எடுத்துக் கூறுகின்றன. இவற்றை நேரில் சென்று



பார்ப்பவரே நன்கு அறிய முடியும். அந்தந்தக் காலங்களுக்கு ஏற்றவாறு அவர் வேள்விகளைத் தேர்ந்து எடுக்கும் முறையே ஒரு தனித் தன்மை கொண்டது.

### தோற்றம்

இந்தப் பாரத தேசம் பற்பல மஹான்களை உலகம் உய்ய அளித்திருக்கின்றது. அவ்வாறான மஹான்களில் இன்று நம்மிடையே வாழ்ந்து வருபவர் அவதூத குலத் திலகமான யோகி ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் ஆவார். தூக்கிக் கட்டிய மிகப் பெரிய ஜடா மகுடம், விபூதியும், அன்னைப் புவனேச்வரீ தேவியின் அருள் பிரஸாதமுமான குங்குமமும், அணி செய்யும் விசாலமான நெற்றி. இனிய பார்வை. கபடம் அற்ற குழந்தை உள்ளத்தைக் காட்டும் சிரிப்பு. யாருடைய மனத்தையும் புண்படுத்தாத உரையாடல். மேடைகளில் தெய்வ நெறி காட்டும் தொடர்பறாத அனுபவம் மிக்கப் பேச்சு, புலவர், வித்வான், கலைஞர் முதலியவர்களிடமும் அன்பும் பண்பும் நிறைந்த பழக்கம். தன் குருவைப் பற்றி பேசும்போது பொங்கி எழும் உத்ஸாஹம். வித்வான்களையும், கலைஞர்களையும் பஞ்சம் இல்லாமல் குளிர்ந்த நாவுடன் பாராட்டிப் பேசும் பாங்கு. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத இயற்கையான குணம். இதன் உருவமே ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் எனலாம்.

### தவம்

இவர் சிறுவயது முதற்கொண்டே, குறிப்பாக ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச ஸ்வாமிகளிடம் ஆச்ரம ஸ்வீகாரம் பெற்றது முதலே பல மாகாணங்களுக்குச் சென்று பல புண்ணிய க்ஷேத்ரங்களில் தங்கி, பல தெய்வங்களைச் தர்சித்து, பல மஹான்களுடன் தொடர்பு கொண்டு உயர்ந்தவர். மனுஷ்ய ஸஞ்சாரம் அற்ற பல இடங்களில் தங்கி, பல தினங்கள் ஆஹாரம் இல்லாமல் ஸ்ரீ புவனேச்வரீ ஏகாக்ஷர மஹா மந்த்ரத்தை முறைப்படி ஜபம் செய்திருக்கின்றார் ஸ்வாமிகள். பல பாஷைகளிலும் பரிச்சயம் பெற்றவர். ஸதா ஸர்வ காலம் தெய்வத் திருப்பணிகளில் இவர் மனம் லயித்திருக்கின்றது. தெய்வ ஆராதனைக்கும், பாடசாலைக்கும் நிறையப் பொருள் சேர்க்க முயலும் ஸ்ரீ ஸ்வாமிகள், தனக்காக வைத்துக் கொண்டிருப்பது காஷாயம் மட்டுமே. காலை 4 மணி முதல் 9 மணி வரை நித்தம் த்யானத்திலேயே அமர்ந்திருக்கும் ஸ்வாமிகளை வெளியில் காண்பது அரிதே.

### ஸ்ரீ ஸ்வாமிகளின் பூர்வாச்ரமம்

மதுரையம்பதி 64 சக்தி பீடங்களில் கதம்ப வன பீடம் என்று அழைக்கப்படுகின்றது. இந்தக் கடம்ப வனம் என்ற மதுரை அன்னை அங்கயற் கண்ணியாகிய ஜகன்மாதா அரியணை அமர்ந்து அர்சாட்சி செய்ததோடு அல்லாமல் அவர் பதியான ஸ்ரீ சுந்தரேச்வரப் பெருமாளும் இவ்விருவர் மைந்தராகி உக்கிரப் பெருவழுதி என்ற பெயர் கொண்டு சுப்ரஹ்மண்ய ஸ்வாமியும ஆக, தாய் தந்தை தனயன் என்ற முப்பெருந் தெய்வங்களாலும் அரசாட்சி செய்யப்பட்ட மிகச் சிறந்த தென்னாட்டின் நன்னாடு:

அதன் பக்கத்தில் உள்ள அளகாபுரி என்ற சிற்றூரிலே ஸ்ரீமான் ராமஸ்வாமி சாஸ்திரியார் என்ற திருப்பெயர் தாங்கிய மஹா புருஷருக்கு 10 குழந்தைகள். அதில் பத்தாவதாகப் பிறந்தவர் சுப்ரமண்யம் என்ற பெயர் கொண்டவர் (இக் குழந்தையே ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள்). மாயாண்டி யோகி என்ற பெரியவர் இக் குழந்தையின் எதிர்காலத்தைப் பற்றி, ''இக் குழந்தை ஞானியாவான். இவனை உலகம் போற்றும். இல்லறத்தில் இவன் ஈடுபட மாட்டான்'' என்று கூறியிருந்தார். ஞான மூர்த்தியாய் விளங்கப் போகும் இக் குழந்தைக்கு முருகப் பெருமானின் பெயர் அமைந்தது ஆச்சரியத்தையே தருகின்றது. உபநயனம் செய்து வைக்கப்பட்ட பின்னர் ஸ்ரீ சுப்ரமண்யம், காரைக்குடியில் நாகநாதபுரம் வேத பாடசாலையில் வேதாத்தியயனத்தைப் பூர்ணமாய்ச் செய்து முடித்தார்.

### ஸமூகத் தொண்டும் ஞானோதயமும்

ஸ்ரீ சுப்ரமண்யம் வேதாத்தியயனத்தை முடித்த போது பாரத நாடு அன்னியர் பிடியில் இருந்தும் விடுதலை பெற்று வாழ, வெள்ளையர்களை விரட்டி அடிக்க மஹாத்மா காந்தி அடிகளின் ஸிம்ஹநாதம் கேட்டுக் கொண்டிருந்தது. மஹாத்மா காந்தியின் உபதேசம் இளைஞர்களிடம் விடுதலை உணர்ச்சியை ஏற்படுத்தி இருந்தது. விடுதலை அடைந்தே தீருவோம் என்ற உறுதி மக்களிடையே வேரூன்றி நின்றது. அந்தப் போராட்டத்தில் தீவிரமாய்ப் பங்கு கொண்டதன் காரணமாக ஸ்ரீ சுப்ரமண்யத்திற்குச் சிறைவாசம் பரிசாய்க் கிடைத்தது. அங்கிருந்தபோது தேச விடுதலையில் நாட்டம் கொண்ட ஞானிக்கு ஆத்ம விடுதலை வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாயிற்று.



விடுதலை பெற்றவுடன் மதுரை வந்து மீனாட்சி அம்மன் ஸந்நிதியில் மஹான் மாயாண்டி யோகியைக் கண்டு வியப்புற்றார். அந்த மஹான் ஸ்ரீ சுப்ரமண்யத்திற்குக் கிடைத்தற்கரிய மஹா மந்த்ரமான, ஏகாக்ஷரீ புவனேச்வரீ மந்த்ரத்தை மீனாக்ஷி ஸந்நிதியில் உபதேசித்து அருளினார் (அன்னை மீனாக்ஷி ஸந்நிதானத்தில் பெற்ற மஹா மந்த்ரத்தின் பெருமையை இன்று உலகம் முழுதும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றார்கள் ஸ்ரீ ஸ்வாமிகள்).

### கடுந்தவம்

நதி தீரங்களிலும் மலைகளிலும் தேவாலயங்களிலும் செய்யப்படும் ஜபம் சீக்கிரம் ஸித்திஅளிக்க வல்லது என்பதை உணர்ந்த ஸ்ரீ சுப்ரமண்யம், மௌனியாகி, கிடைத்தை உண்டு, ஜபத்திலேயே முழுமூச்சாய் லயித்தார். மௌனியாய் இருந்த காலத்தில் தனக்கு ஏற்பட்ட பல இன்னல்களை, சிரமங்களை மறைத்து ஸ்ரீ ஸ்வாமிகள் கதை போல சுவைபட சில சமயங்களில் சொல்லுவார்கள். ஒரு ஆனந்தர் ஸ்வாமிகளைப் படுத்தி வைத்ததை வேடிக்கையாய் வர்ணிப்பார். தவம் செய்வது எவ்வளவு கடினம் என்பதை விவரிக்க இதையெல்லாம் கூறுவார்கள். பக்தியின் மேலீட்டால் தவத்திலேயே தீவிர சிரத்தை கொண்ட சுப்ரமண்யம் கன்யாகுமரியில் இருந்து ஹிமாலயம் வரை யாத்திரை செய்துள்ளார்.

### கிரிநார் அடைந்தார்

குஜராத்தில் உள்ள கிரிநார் சென்றார் ஸ்வாமிகள். அங்கு மலை அடிவாரத்தில் நின்றார். பிரயாணம் வெகுவாக உடலைப் பாதித்திருந்தது. 10 ஆயிரம் படிகள் கொண்ட கிரிநார் மலைச் சிகரம் சென்று அங்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் ஸ்ரீ தத்த பாதுகையைக் காணத் துடித்தது உள்ளம். மறுத்தது உடல். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாது போய்விடுமோ என்று ஏங்கித் தவிக்கும் ஸுப்ரஹ்மண்யத்திடம் ஒரு ஸாது வந்தார்.

அவர், ''உன்னைப் பார்த்தால் மதராஸியாய்த் தோன்றுகிறது. ஸ்ரீ தத்த பாதுகையைக் காண ஆசைப்படுகின்றாய். கவலைப்படாதே. இந்தக் குளிகையைச் சாப்பிடு. ஸுகமாய் மலை ஏறி தர்சனம் செய்'' என்று ஒரு குளிகையை வாயில் போட்டு விட்டு மறைந்தார்.

வந்தவர் தத்த குருவே என்று சொல்லவும் வேண்டுமோ! உயரச் சென்று பாதுகையைத் தர்சித்து தியானத்தில் இருந்தபோது ஒரு அசரீரி ''சேந்தமங்கலம் செல். குருவிடம் உபதேசம் பெற்றுத் தொண்டு செய்'' என்று எழுந்தது. ஸ்ரீ தத்தர் அருள் பெற்ற ஸ்வாமிகள் சேந்தமங்கலத்திற்கு ஓடி வந்தார்.

### ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள்

அவதூத குல ரத்னமாய், பழுத்த ஞானியாய், அருளும் அமைதியும் உருவெடுத்தவர் போல் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ ஸ்வயம் ப்ரகாச குருவை சரணம் அடைந்தார் சுப்ரமண்யம். இவரைக் கண்டதும் மகிழ்ச்சிக் கடலிலே மிதந்தார் குருநாதர். உடன் சாந்தானந்தர் எனப் பெயர் சூட்டி, ஸந்யாஸ ஆசிரமம் அளித்தார். அவதூதராகவே இருக்க விரும்பியவரிடம் ''தான் கண்ட அனுபவங்களை மனத்தில் கொண்டு நீ வஸ்திரத்தைப் போர்த்திக் கொள்'' என்று கட்டளை இட்டார். அதனால் தான் இன்று ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் ஜடா மகுடத்துடனும் மேலே போர்த்திய காஷாயத்துடனேயே தோற்றம் அளிக்கிறார்.

தம் சிஷ்யரான ஸ்ரீ சாந்தானந்தரை நோக்கி, ''அப்பா! என் குரு நாதரின் அதிஷ்டானம் புதுக்கோட்டையில் இருக்கின்றது. அதைப் பிரகாசிக்கச் செய்வதே நீ குருவிற்குச் செய்யும் கைங்கர்யம். அதன் வளர்ச்சியில் உன் தொண்டு முக்கியத்துவம் பெற வேண்டும். நீ நினைப்பதெல்லாம் அதிஷ்டானத்தில் பிரகாசிக்கும். என் குருநாதர் நிறைவேற்றி வைப்பார்'' என்று ஆசீர்வதித்தார்.

### புதுக்கோட்டை வந்தார்

அந்த ஆணையைச் சிரமேல் கொண்டு ஸ்ரீ சாந்தானந்தர் புதுக்கோட்டை வந்தடைந்தார். அதிஷ்டானம் இன்று புதுப் பொலிவு பெற்று விளங்குகின்றது. ஸ்ரீ புவனேச்வரீ ஜகன்மாதாவும் புதுக்கோட்டையில் குடி புகுந்து விட்டாள். ''நான் இருக்கும் இடத்தில் செல்வம் கொழிக்கும்'' என்று பக்தர்கள் மீது கருணா கடாக்ஷத்தை வீசிக் கொண்டிருக்கின்றாள். ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளின் சரித்திரம் தனியாக எழுத வேண்டாம். புதுக்கோட்டை புவனேச்வரீ வாஸம் செய்யும் அதிஷ்டானமும், தத்தகிரியில் அவர் செய்துள்ள தேவதா பிரதிஷ்டையும் திருப்பணியும், ஸ்கந்தகிரி ஸ்கந்தாச்ரமத்தில் அவர் செய்திருக்கும் அற்புதப் பணிகளே ஸ்ரீ ஸ்வாமிகளின் சரித்திரமாய்த் திகழ்கின்றன.

வாழ்க ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்



## சிவராத்ரி முதல் ஒரு வருஷம் அகண்ட பஜனை

ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களுக்கு வேதங்களை காப்பதிலும் வேள்விகளை நடத்துவதிலும் எவ்வளவு ஈடுபாடு உண்டோ, அவ்வளவு ஈடுபாடு பஜனையிலும் நாம ஸங்கீர்த்தனத்திலும் உண்டு. நாம ஸங்கீர்த்தனம் செய்யும் பரம பாகவதர்களிடம் ஸ்வாமிகளுக்கு அளவு கடந்த ப்ரீதியும் உண்டு. ஸ்ரீ ஸ்வாமிகள் புதுக்கோட்டையில் ஸ்ரீ புவனேச்வரீ ஸந்நிதியில் முருக நாம அகண்ட பஜனை முன்பு செய்துள்ளார்.

பக்தியினாலும் நாம ஸங்கீர்த்தனத்தினாலும் தான் மக்கள் [illegible] பெற முடியும் என்ற எண்ணமும் கொண்டவர் ஸ்வாமிகள்.

நான்கு யுகங்களிலும் நான்கு கால்கள் கொண்ட தர்ம [illegible] யுகத்தில் நான்கு கால்கள் கொண்டும் த்ரேதா யுகத்தில் மூன்று கால்கள் கொண்டும் த்வாபர யுகத்தில் இரண்டு கால்கள் கொண்டும் கலியுகத்தில் ஒரு காலை மட்டும் பற்றிக் கொண்டும் நிற்கின்றது என்பர் [illegible] கலியில் அனைவரும் தர்மத்திற்கு ஒவ்வாத காரியங்களையே செய்வர் [illegible] வேத நிந்தனை செய்வர். ஈச்வர வழிபாட்டில் ஈடுபாடு [illegible] குறைந்த ஆயுளும் குறைந்த புத்தி சக்தியும் கொண்டு [illegible] புராணங்கள் பேசுகின்றன.

இவ்வாறான கலியில் யஞ்ஞம், தானம், தவம், வ்ரதம் இவற்றை முறைப்படி குறைவின்றி நம்மால் செய்வது முடியாது. [illegible] குறைவின்றி செய்யவில்லை என்றால் அது முழுப் பலன் அளிக்குமோ! செய்த அளவிற்குப் பயன் உண்டு.

ஆகையால் கலியில் கங்கா ஸ்னானமும், ஹரி [illegible] நாமோச்சாரணமும் தான் நாம் உய்ய ஒரே வழி. இக் கலியில் தவத்தினாலும் எது அடைய முடியாததோ அந்தப் புண்ணிய பலன் நாம ஸங்கீர்த்தனத்தினாலேயே அடைய முடியும் என்பது ஒன்றுதான் கலியின் சிறந்த குணம்.

ஆகவே கலியில் அனைவரும் நலன்கள் பெற பக்தி மார்க்கம் கூறப்பட்டிருக்கின்றது. அது ஒன்பது விதம். அவையாவன: 1. பகவான் நாமாவைக் கேட்பது, 2. பகவன் நாமாவைச் சொல்லுவது 3. பகவானை எப்போதும் நினைப்பது, 4. திருவடிச் சேவை செய்வது.

5. அர்ச்சிப்பது, 6. வணங்குவது, 7. பகவானுக்கு அடிமையாவது, 8. பகவானுடன் தோழமை கொள்வது, 9. ஆத்மார்ப்பணம் செய்வது என்று இவ்வாறு வகுத்துக் கூறி இருக்கின்றனர் பெரியோர். இந்த ஒன்பது மார்க்கங்களில் நாம ஸங்கீர்த்தனம் என்பது அனைவரும் கையாளக் கூடிய சுலபமான வழியாகும். இதற்குப் பிறருடைய உதவி தேவையில்லை. இந்த நாம ஸங்கீர்த்தனத்திற்குத் தேசம், காலம், ஸ்னானம், ஆசாரம் இவை எல்லாம் கூட அவசியமில்லை என்று நாம ஸங்கீர்த்தனத்தைப் பெருமைப் படுத்திப் பேசுகின்றன புராணங்கள். ஸந்தியா வந்தனம், மந்த்ர ஜபம், வேள்வி, வேதாந்த ஞானம், வேதாத்தியயனம், பூஜை இவற்றிற்குச் சொல்லப்பட்ட வர்ணாச்ரமிகளுக்கு உள்ள நியமம் ஏதும் இதில் இல்லை. ஆகவே சுலபமான வழி நாம ஸங்கீர்த்தனம். நாமாக்களை உச்சரித்தாலேயே கலி தோஷம் அனைத்தும் நீங்கி விடும்.

இதை மனத்தில் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகள் குரோதன வருஷம் மாசி மாதம் 24ஆம் நாள் சனிக் கிழமை (8.3.86) மிகப் புண்ணியம் அளிக்கும் சிவராத்ரி தினத்தில் தொடங்கி மறு சிவராத்ரி வரை ஒரு வருஷ காலம் "ஓம் நமः சிவாய ஓம் நமோ நாராயணாய" என்ற 7 கோடி மந்த்ரங்களில் மிகவும் உயர்ந்த பஞ்சாக்ஷரத்தையும் அஷ்டாக்ஷரத்தையும் பல பாகவதர்களைக் கொண்டு சிறப்பாக நடத்தினார்கள். நித்யமும் ஒரு வருஷமும் அன்னதானம். பாகவதர்களுக்கு மனத்திற்கு மகிழ்வு அளிக்கும் முறையில் நல்ல உபசாரம். இப்படியாக வருஷம் பூராவாக ஸ்கந்த கிரியில் நாம ஸங்கீர்த்தனம் நடந்தது. வருஷ முடிவில் சிவராத்ரி அன்றும் அதை ஒட்டி முன்னும் பின்னுமாக 5 தினங்கள் ஸ்காந்தாச்ரமம் விழாக் கோலம் பூண்டு வைகுண்டமாகவும் கைலாஸமாகவுமே காட்சி அளித்தது. அப்படி ஒரு சிறப்பான அலங்காரங்கள். பல மின் ஒளி விளக்குகளின் மாயா ஜாலங்கள். பல ஊர்களின் இருந்தும் வந்திருந்த பாகவதர்களின் கூட்டம். இது ஒரு மாபெரும் பாகவத மேளா. ஆண்களின் பரத நாட்டியம். வேஷம் தரித்து அதற்கேற்ப பஜனை, ஸகல விதமான வாத்யங்களும் ஒலித்தன. இரவு பகல் வித்யாஸம் தெரியவில்லை. எப்போதும் காதுகளையும் மனத்தையும் ஒருங்கே கவரும் இன்னிசை. இப்படி ஒரு அகண்ட பஜனையைச் செய்தார் ஸ்வாமிகள். இது வரை ஒரு வருஷ காலம் அகண்ட பஜனை செய்ததாகக் கேள்விப்பட்டதில்லை. ஸ்வாமிகள் செய்யும் அனைத்துக் கார்யங்களும் பிறரால் செயற்கரியனவே. வளர்க ஸ்ரீ ஸ்வாமிகளின் தெய்வத் தொண்டு. ஜெய ஜெய ஸ்கந்தகுரோः ஜயஜய ஸ்கந்தமாதः ஜய ஜய ஸ்ரீ மஹாதுர்கேः

உ

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ காளிகா தேவ்யை நம:

I

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில் "காளீ" முதல் மஹா வித்யை

# "श्री दशमहाविद्यासु काली महाविद्या"

எழுதியவர்
திருவெண்காடு
நியாய-மீமாம்ஸா சிரோமணி
கவி T.K. முத்து ஸ்வாமி சாஸ்திரி அவர்கள்

नहि काली समा विद्या
नहि कालीसमं फलं।
नहि कालीसमं ज्ञानं
नहि काली समं तपः ॥

நஹி காளீ ஸமா வித்யா நஹி காளீ ஸமம் பலம்।
நஹி காளீ ஸமம் ஞானம் நஹி காளீ ஸமம் தப: ॥

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ காளீ தேவ்யை நம:

# दश महाविद्यासु ''श्री काली विद्या''

## தசமஹாவித்யைகளில் ''ஸ்ரீ காளீ வித்யா''

क्रीं क्रीं क्रीं :

### संभवामि युगे युगे

### ஸம்பவாமி யுகே யுகே

ஆதிபராசக்தி அனந்தகோடி பிரம்மாண்டங்களின் நாயகி ஸச்சிதானந்த ரூபிணீ அனைத்திற்கும் மூலமாய் இருப்பவள், மஹாமாயா ஸ்ரீ ஜகன்மாதா, உலகனைத்தும் நலம் பெற்று வாழவும் தீய சக்திகள் அழியவும் கருணை கொண்டு பல யுகங்களில் பல்வேறு வடிவங்கள் தாங்கி ஆவிர்ப்பவித்து அருள் நலம் வழங்கிக் கொண்டிருக்கின்றாள். இதை உபநிஷத்துக்கள் இதிஹாஸங்கள் புராணங்கள் ஆகமங்கள் தந்த்ரங்கள் இவையெல்லாம் விஸ்தாரமாய் பேசுகின்றன.

यदा यदा हि साधूनां दुःखं भवति दानव।
तदा तेषां च रक्षार्थं देहं संधारयाम्यहम्॥
अरूपायाश्च मे रूपं अजन्मायाश्च जन्म च।
सुराणां रक्षणार्थाय विद्धि दैत्य विनिश्चितं॥

யதா யதா ஹி ஸாதூனாம் துக்கம் பவதி தானவ।
ததா தேஷாம் ச ரக்ஷார்த்தம் தேஹம் ஸந்தாரயாம்யஹம்॥
அரூபாயாச்ச மே ரூபம் அஜன்மாயாச்ச ஜன்மச।
ஸுராணாம் ரக்ஷணார்த்தாய வித்தி தைத்ய விநிச்சிதம்॥

(தேவீ பாகவதம்)

தேவீ பாகவதத்தில் மஹிஷாஸுரனுடன் நேர்ந்த ஸம்வாதத்தில் தேவீயே, "ஹே மஹிஷாஸுரா ஸாதுக்களுக்கு எப்போதெல்லாம் துன்பம் நேரிடுகின்றதோ அப்போதெல்லாம் அவர்களைக் காக்க நான்



ஸ்ரீ காளி

தேஹமெடுக்கின்றேன். உருவமில்லா எனக்கு உருவமும், பிறவியற்ற எனக்கு ஜன்மாவும் அமரரைக் காப்பதற்காகவே ஏற்படுகின்றது என்பதை நீ அறிந்து கொள்'' எனக் கூறியிருக்கின்றாள்.

காளீ தேவீ நித்யை. ஆதிமத்யாந்த ரஹிதை (ஆதி, நடு, ஈறு இல்லாதவள்). அவள் மஹாமாயா ஸ்வரூபிணி. ஆகவே அவளுக்கு ரூபம் கிடையாது. ஜன்மா கிடையாது. ஆயினும் ஒவ்வொரு யுகங்களிலும் அவுணர் பலர் தோன்றுகின்றனர். தீய சக்திகள் உதயமாகின்றன. அதனால் தேவரும் ரிஷிகளும் நல்லோரும் படும் துன்பங்கள் அனந்தம். அவற்றைப் போக்கி உலகினுக்கு நன்மையளிக்கவே ஒளிமயமானவளும் காலத்தை நடத்துபவளுமாகிய பராசக்தி தாமஸ, ராஜஸ, ஸாத்விகக் குணங்களுக்கும், தான் செய்ய வேண்டிய காரியங்களுக்கும் உகந்தவாறு ரூபங்களை ஏற்று அருள் புரிகின்றாள்.

अरूपायाः कालिकायाः कालमातु र्महाद्युतेः ।
गुण क्रियानुरूपेण क्रियते रूप कल्पना ॥

அரூபாயாஃ காளிகாயாஃ கால்மாதுர் மஹாத்யுதேஃ।
குணக்ரியானுரூபேண க்ரியதே ரூப கல்பனா॥

என்று மஹா நிர்வாண தந்த்ரம் எடுத்துக் காட்டுகின்றது.

அதனால்தான் பரமாத்மா ஸ்ரீ க்ருஷ்ணரும் கீதையில் இக் கருத்தை வலியுறுத்திக் கூறியுள்ளார்.

यदा यदा हि धर्मस्य ग्लानि र्भवति भारत।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥
परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृतां।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥
अजोपि सन्नव्ययात्मा भूतनामीश्वरोपि सनू।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்॥

பரித்ராணாய் ஸாதூனாம் வினாசாய ச துஷ்க்ருதாம்।
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே॥
அஜோபிஸன் அவ்யயாத்மா பூதானாம் ஈச்வரோபிஸன்
ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாம் யாத்மமாயயா॥

எப்போது தர்மம் நலிவுறுகின்றதோ அதர்மம் தலை தூக்குகின்றதோ, அப்போது நான் என்னை ஸ்ருஷ்டித்துக் கொள்ளுகின்றேன். நல்லோரைக் காக்கவும், தீயோரை அழிக்கவும் தர்மத்தை நிலைநிறுத்தவும் நான் ஒவ்வொரு யுகங்களிலும் அவதரிக்கின்றேன்.

ஆகவே கீதையில் உள்ள ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவின் ப்ரதிக்ஞை கூட ஸ்ரீ காளி தேவியின் அருள் வாக்கே ஆகும். இதைத் தோடல தந்த்ரம் நமக்கு அறிவுறுத்துகின்றது.

तारा देवी मीनरूपा कमला कूर्मरूपिणी।
धूमावती वराहःस्यात् छिन्न मस्ता नृसिंहिका॥
भुवनेशी वामनःस्यात् मातंगी राममूर्तिका।
त्रिपुरा ज्ञामदग्न्यःस्यात् बलभद्रस्तु भैरवी॥
महालक्ष्मीः भवेद्बुद्धः दुर्गास्यात्कल्किरूपिणी।
स्वयं भगवती काली कृष्णमूर्तिः समुद्गता॥

தாரா தேவீ மீன்ரூபா கமலா கூர்மரூபிணீ।
தூமாவதீ வராஹஃ ஸ்யாதி சின்னமஸ்தா ந்ருஸிம்ஹிகா॥
புவனேசீ வாமனஃ ஸ்யாத் மாதங்கீ ராமமூர்த்திகா।
த்ரிபுரா ஜாமதக்ன்யஃஸ்யாத் பலபத்ரஸ்து பைரவீ।
மஹாலக்ஷ்மீஃ பவேத் புத்தஃ துர்காஸ்யாத் கல்கிரூபிணீ॥
ஸ்வயம் பகவதீ காளீ க்ருஷ்ணமூர்த்திஃ ஸமுத்கதா॥

தாரா மத்ஸ்யமாகவும், கமலா கூர்மமாகவும், தூமாவதீ வராஹமாகவும், சின்னமஸ்தா ந்ருஸிம்ஹமாகவும், புவனேச்வரீ வாமனராகவும், மாதங்கி ஸ்ரீ ராமராகவும், த்ரிபுரா பரசு ராமராகவும், பைரவீ பலதேவராகவும், மஹாலக்ஷ்மீ புத்தராகவும், துர்கை கல்கியாகவும், பகவதி ஸ்ரீ காளி தேவியே ஸ்ரீ க்ருஷ்ணராகவும் ஆவிர்ப்பவித்தனர்.



தேவகார்ய ஸித்திக்காகவே பராசக்தி அடிக்கடி ஆவிர்ப்பவிக்கின்றாள் என்பதை ஸப்தசதீ மூர்த்தி ரஹஸ்யமும் தெளிவாக்குகின்றது.

देवानां कार्यसिद्धयर्थं आविर्भवति सा यदा।
उत्पन्नेति तदा लोके सानित्याप्यमिधीयते॥
स्फुरद्दशनदंष्ट्रा सा भीमरूपापि भूमिप।
रूपसौभाग्यकान्तीनां सा प्रतिष्ठा परा श्रियाम्॥

தேவானாம் கார்ய ஸித்யர்த்தம் ஆவிர்பவதிஸா யதா।
உத்பன்னேதி ததா லேகே ஸா நித்யாப்யபிதீயதே॥
ஸ்புரத்தசன தம்ஷ்ட்ரா ஸா பீமரூபாபி பூமிப।
ரூபஸௌபாக்யகாந்தீனாம் ஸா ப்ரதிஷ்டா பரா ஸ்ரீயாம்॥

அமரர் காரியத்தை ஸாதிக்க எப்போது அழியாத அவள் ஆவிர்ப்பவிக்கின்றாளோ, அப்போது அவள் உலகில் உண்டானாள் எனப் பேசப்படுகின்றாள். பளிச்சிடும் பற்களும், தெற்றிப் பற்களும் கொண்டு பயங்கரமான உருவம் கொண்டவளாயினும் அவள், ரூபம் ஸௌபாக்யம் அழகு முதலான பேறுகளுக்கு நிலையான ஸ்தானமாய் இருக்கின்றாள் இதனால் அழகு, ரூபம், ஸௌபாக்யம் இவை அனைத்தும் நிறைந்தவள் காளீ தேவீ எனத் தெரிகின்றது.

## காளீ என்ற சொல்லின் பொருள்

மஹா ப்ரளயம் வந்து அனைத்தும் அழிந்த பின் காளீ ஒருவளே நிலைபெற்றிருக்கின்றாள். ஸர்வ பூதங்களையும் கலனாத் (कलनात्) அழிப்பதால் பகவான் மஹா காலன் எனப் பெயர் பெற்றார். அவரும் அழிந்த பின் காளீ இருப்பதால் மஹா காலஸ்ய கலனாத் (महाकालस्य कलनात्) காளீ எனப் பெயர் பெறுகின்றாள். அழிப்பதாலும் அனைவருக்கும் முன்பே இருப்பதாலும் இவள் ஆதிகாளீ (आदि काली) எனப் பெயர் பெறுகின்றாள்.

कलनात् सर्वभूतानां महाकालः प्रकीर्तितः।
महा कालस्य कलनात् त्वमाद्या कालिका मता।
काल संग्रसनात् काली सर्वेषामादिरूपिणी॥

கலனாத் ஸர்வ பூதானாம் மஹாகால: ப்ரகீர்த்தித:।
மஹாகாலஸ்ய கலனாத் த்வமாத்யா காளிகா மதா॥
காலஸங்ரஸனாத் காளீ ஸர்வேஷாமாதிரூபிணீ॥

காலன் என்றால் சிவன். 'அவருடைய பத்னீ காளீ. காளியின் மாயா சக்தியால் ஆவிர்ப்பவித்தவர் சிவன். காளியின் மானஸிகமான ஸங்கல்பத்தால் உதித்தவர் என்று தந்த்ர சாஸ்த்ரம் கூறும்.

काली माया समुद्भूतः कालीमानसिकः शिवः ।
महाकालः परः शंभुः परातीतो गुणाकरः ॥

காளீமாயாஸமுத்பூத: காளீமானஸிக: சிவ:।
மஹாகாள: பர: சம்பு: பராதீதோ குணாகர:॥

(काली) காளீ என்ற சொல்லில் க, ஆ, ல, ஈ என்று நான்கு அக்ஷரங்கள் உள்ளன. க என்றால் பிரம்மா. ஆ என்றால் அனந்தம். ல என்றால் விச்வாத்மா. ஈ என்றால் ஸூக்ஷ்மம் எனப் பொருள் கொண்டு காளீ ப்ரம்ம ஸ்வரூபிணி, அனந்தா, விச்வாத்மிகா, ஸூக்ஷ்மரூபிணி என்றும் பொருள் கொள்ளலாம் எனப் பேசும் காளீ கல்பத்ருமம்.

(कलयतीति काली) கலயதீதி காளீ என்றாகின்றது. கல = என்ற தாதுவிற்கு, கலயதி = உத்பாதயதி, கலயதி = பாலயதி. கலயதி = ஆத்மன்யேவ லோபயதி எனப் பல பொருள் கொண்டால் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழிலும் புரிபவள் காளீ என்ற பொருள் கிடைக்கின்றது.

(क्लीं) க்லீம் என்ற காமராஜபீஜம் மஹா காளிக்கு உரியதாகும். இங்கு க்லீம் என்பதே காளீ என மருவியிருக்கின்றது என்று கொள்வாரும் உளர். இது விபரம் பற்றி 22 அக்ஷர தக்ஷிணகாளீ மந்த்ர விளக்கத்தில் காணலாம்.

## கலியில் வரம் அளிக்கும் தெய்வம் காளீ

கலியுகத்தில் விசேஷமாய் சீக்கிரமாய் பலனளிக்கும் தெய்வம் காளீ என்று கீழ்க் கண்ட சுலோகங்கள் நமக்கு உறுதி கூறுகின்றன.

सदा सर्वं युगे देवि कलिकाले विशेषतः ।
सर्व प्राणि हितकर भोगमोक्षैक कारणं ॥



विशेषत! कलियुगे जीवाना माशु सिद्धिदं ॥
कालिका मोक्षदा देवि कलौ शीघ्रफलप्रदा ॥
पिच्छिलातन्त्रे:—
कलौ काली कलौ काली नान्यो देवः कलौ युगे।
कलौ काली महाविद्या कलौ कालीच सिद्धिदा।
कलौ काली च सिद्धा च कलौ काली वरप्रदा ॥
कलौ काली साधकस्य दर्शनार्थं समुद्यता
कलौ काली केवला स्यात् नात्र कार्या विचारणा ॥
नान्यविद्या नान्यविद्या नान्यविद्या कलौ भवेत् ॥

ஸதா ஸர்வ யுகே தேவி கலிகாலே விசேஷத:।
ஸர்வ ப்ராணிஹிதகர போக மோக்ஷைககாரணம்।
விசேஷத: கலியுகே ஜீவனாமாசு ஸித்திதம்।
காளிகா மோக்ஷதா தேவி கலௌ சீக்ர பலப்ரதா॥
பிச்சிலாதந்த்ரே!—
கலௌ காளீ கலௌ காளீ நான்யோ தேவ: கலௌ யுகே।
கலௌ காளீ மஹாவித்யா கலௌ காளீச ஸித்திதா॥
கலௌ காளீ ச ஸித்தா ச கலௌ காளீ வரப்ரதா॥
கலௌ காளீ ஸாதகஸ்ய தர்சனார்த்தம் ஸமுத்யதா।
கலௌ காளீ கேவலாஸ்யாத் நாத்ர கார்யாவிசாரணா।
நான்ய வித்யா நான்ய வித்யா நான்ய வித்யா கலௌயுகே॥

காளீ மந்த்ரங்கள் எல்லா யுகங்களிலும் ஸித்தி அளிக்கும் ஸித்த வித்தைகள் ஆகும். அதுவும் குறிப்பாகக் கலியுகத்தில் விசேஷ பலனை அளிக்கும். அனைத்துப் பிராணிகளுக்கும் ஹிதமளிக்கக் கூடிய போகம், மோக்ஷம் இவற்றின் ஸித்திக்கு காரணமாய் உள்ளது காளீ மந்த்ரம். அது கலியில் விசேஷமாய் ஜீவர்களுக்கு ஸித்தியளிக்கும். காளீ மோக்ஷமளிப்பவள். அத்துடன் விரைவிலேயே பயனளிக்கக் கூடியவள்.

பிச்சிலா தந்த்ரத்தில், கலியில் காளியே தெய்வம். கலியில் காளீயே தெய்வம். கலியில் மற்ற தேவர் தெய்வமாகார். ஸித்தியளிக்கும் காளீ மந்த்ரமே மஹா வித்யையாகும். கலியுகத்தில் காளீ தேவீ, உபாஸகனுக்குத் தர்சனம் அளிக்க எப்போதும் தயாராய் இருக்கின்றாள்.

காளீ ஒருவளே அவ்வாறான தெய்வம். இதில் வேறு சிந்தனைக்கே இடமில்லை. இக் காளீ வித்யை தவிர வேறு வித்தை கலியில் இவ்வாறு பயனளிக்கக் கூடியதாக இல்லை என்றே உறுதிபடச் சொல்லலாம் எனத் தந்த்ரங்கள் கோஷிக்கின்றன.

माभैर्माभैः स्वभक्तेषु जल्पन्तीं घोरनिस्वनैः।
यूयं किमिच्छत ब्रूत ददामीति प्रभाषिणीं॥

மாபைர்மாபைஃ ஸ்வபக்தேஷு ஜல்பந்தீம் கோர நிஸ்வனை।
யூயம் கிமிச்சத ப்ரூத ததாமீதி ப்ரபாஷிணீம்॥

காளீ தன் பக்தர்களைப் பார்த்து, "பயப்பட வேண்டாம்! பயப்பட வேண்டாம் (அபயம் அளிக்கிறேன்)" எனப் பெரும் சப்தத்துடன் கூறுகின்றாள். அத்துடன் தயக்கமின்றி உங்களுக்கு என்ன வேண்டுமென்று சொல்லுங்கள். நான் அளிக்கிறேன் என தெள்ளத் தெளிவாகவும் கூறுகின்றாள். இவ்வாறான தெய்வமுண்டோ!

## காளீ உபாஸனையின் மஹத்துவம்

கலியில் காளீ, தாரா, அன்னபூர்ணா, ஸ்ரீ வித்யா இவர்களுடைய மந்த்ரோபதேசம் பெற்றதனாலேயே உபாஸகன் சிவமாம் தன்மை பெற்று விடுகிறான். காளீ ப்ரக்ருதிகளில் முந்தையவள் காலஸ்வரூபிணி. அனைத்துக் காமங்களையும் அளிப்பவள். அவளுடைய செய்கை அனைவருக்கும் ஆச்சரியம் அளிப்பவையாக இருக்கும். அவளுடைய மந்த்ரமே மஹா மந்த்ரம். மந்த்ரங்களுக்குள்ளே மிகவும் ஸாரமானதும்கூட. இந்தக் காளீகா மந்த்ரம் மஹா- மஹா- பிரம்ம வித்யை ஆகும். கீழ்த்தரமானவன்கூட இம் மந்த்ரம் பெற்று முக்தி அடைகிறான். இக் காளீ மந்த்ரத்தை உபாஸித்தவர்கள் ஸாதாரணமானவர்கள் அல்லர். பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலிய பெரும் தெய்வங்கள்.

## காளீ உபாஸகர்கள்

ஹனுமான், விக்னேச்வரர், இந்திரன், பரசுராமர், கங்கை, லக்ஷ்மீ, சூரியன், சந்திரன், ராவணன், குபேரன், வாயு, குரு, சுக்ரர், பூமி, ராகவன், பரதன், ப்ரஹ்லாதன், சுகதேவர், க்ஷேத்ரபாலன் இன்னும் பலர் காளீ உபாஸகர்கள் என்று "காளீகல்பதரு" ஒரு பட்டியலிட்டுக் காட்டுகின்றது.



हनूमांश्चैव विघ्नेशः मघवा भार्गवस्तथा।
गंगा श्रीः सूर्यचन्द्रौ च रावणो यक्षनायकः॥
वायु र्गणेशोऽथ गुरुः शुक्रो भूमिश्च राघवः।
प्रह्लादः शुकदेवश्च क्षेत्रपालस्तथैव च॥
एते ह्येकोनविंशाः श्रीकाल्याः देवा उपासकाः॥

ஹனுமாம்ச்சைவ விக்னேசோ மகவா பார்கவஸ்ததா।
கங்கா ஸ்ரீஃ ஸூர்யசந்த்ரௌ ச ராவணோ யக்ஷநாயக:।
வாயுஃ கணேசோத குருஃ சுக்ரோ பூமிச்ச ராகவஃ।
ப்ரஹ்லாதஃ சுகதேவச்ச க்ஷேத்ரபாலஸ்ததைவச॥
ஏதே ஹ்யேகோனவிம்சாஃ ஸ்ரீ காள்யாதேவாஃ உபாஸகாஃ॥

காளீ வித்யைக்கு ஸமமான வித்யை கிடையாது. காளீ வித்யோபாஸனையினால் ஏற்படும் பலனுக்கும் ஈடு கிடையாது. காளீ மந்த்ரத்தால் ஏற்படும் ஞானத்திற்கும் ஸமமான ஞானம் கிடையாது. காளீயைக் குறித்துச் செய்யப்படும் தவத்திற்கும் ஸமமாக வேறு தவம் கிடையாது என்றும் காளீ தந்த்ரம் கூறும்.

कलौ कालीः तथा तारा अन्नपूर्णाच सुन्दरी।
एतासां सिद्धविद्यानां श्रीमन्त्रग्रहणादपि॥
शिवत्वं ज्ञायते सुभ्रु संशयो नास्ति कश्चन।
यामाद्यां प्रकृतिं प्राहुः काली कालस्वरूपिणी।
तस्या मन्त्रं महामन्त्रं मन्त्रसारमिदं प्रिये॥
सर्वकामप्रदा देवी सर्वविस्मयकारिणी।
महामहाब्रह्मविद्या विद्येयं कालिका मता॥
यामासाद्य च निर्वाण मुक्ति मेति नराधमः।
अस्या उपासकाश्चैव ब्रह्मविष्णु शिवादयः॥
कालीतन्त्रेः—
नहि काली समाविद्या नहि काली समं फलं।
नहि कालीसमं ज्ञानं नहि काली समं तपः॥

கலௌ காளீ ததா தாரா அன்னபூர்ணா ச ஸுந்தரீ।
ஏதாஸாம் ஸித்த வித்யானாம் ஸ்ரீ மந்த்ரக்ரஹணாதபி॥
சிவத்வம் ஜாயதே ஸுப்ரு ஸம்சயோ நாஸ்தி கச்சன॥
யாமாத்யாம் ப்ரக்ருதிம் ப்ராஹு: காளீ கால ஸ்வரூபிணீ।
தஸ்யா மந்த்ரம் மஹா மந்த்ரம் மந்த்ர ஸாரமிதம் ப்ரியே॥
ஸர்வகாம ப்ரதா தேவீ ஸர்வ விஸ்மயகாரிணீ।
மஹாமஹாப்ரம்ஹ வித்யா வித்யேயம் காளிகா மதா॥
யாமாஸாத்ய ச நிர்வாண முக்திமேதி நராதம:।
அஸ்யா உபாஸகாச்சைவ ப்ரஹ்ம விஷ்ணு சிவாதய:॥
காளீ தந்த்ரே—
நஹி காளீஸமா வித்யா நஹி காளீ ஸமம்பலம்।
நஹி காளீ ஸமம் ஞானம் நஹி காளீ ஸமம் தப:॥

## காளீ உபாஸனையின் பயன்

आयुरारोग्यमैश्वर्यं बलं पुष्टिं महद्यशः।
कवित्वं भुक्ति मुक्ती च कालिका पद पूजनात्॥
स एव सुकृती लोके स एव कुलनन्दनः।
धन्या च जननी तस्य येन देवी समर्चिता।
ब्रह्मज्ञानमवाप्नोति श्रीमदाद्याप्रसादतः॥
ब्रह्मज्ञान युतो मर्त्यः जीवन्मुक्तो न संशयः।
स धन्यः सच विज्ञानी स एव सुरपूजितः॥
स दीक्षितः सुखी साधुः सत्यवादी जितेन्द्रियः।
स वेदवक्ता स्वाध्यायी नात्र कार्या विचारणा॥
तेनाश्वमेधप्रमुखैः यागैरिष्टं सुजन्मना।
दत्तं दानं तपस्तप्तं उपास्ते यस्तु कालिकाम्॥

ஆயுராரோக்யமைச்வர்யம் பலம் புஷ்டி: மஹத்யச:।
கவித்வம் புக்திமுக்தீச காளீகாபதபூஜனாத்॥
ஸ ஏவ ஸுக்ருதீ லோகே ஸ ஏவ குல நந்தன:।
தன்யா ச ஜனனீ தஸ்ய யேன தேவீ ஸமர்சிதா॥



ப்ரஹ்மஞான மவாப்னோதி ஸ்ரீமதாத்யா ப்ரஸாதத:।
ப்ரஹ்மஞானயுதோ மர்த்ய: ஜீவன் முக்தோ நஸம்சய:।
ஸதன்ய: ஸச விஞ்ஞானீ ஸ ஏவ ஸுரபூஜித:।
ஸதீக்ஷித: ஸுகீ ஸாது: ஸத்யவாதீ ஜிதேந்த்ரிய:।
ஸவேதவக்தா ஸ்வாத்யாயீ நாத்ர கார்யா விசாரணா।
தேனாச்வ மேத ப்ரமுகை: யாகைரிஷ்டம் ஸுஜன்மனா।
தத்தம் தானம் தபஸ்தப்தம் உபாஸ்தே யஸ்து காளிகாம்॥

காளியின் பாதாரவிந்தங்களில் பூஜை செய்வதால் நீண்ட ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், பலம், புஷ்டி, பெரும் கீர்த்தி, கவி புனையும் சக்தி, போக மோக்ஷம் முதலியன கிடைக்கும். உலகில் அவனே புண்யசாலியாகவும், குலம் தழைக்கச் செய்யும் புத்திரனாகவும் ஆகின்றான். அவன் தாய் கொடுத்து வைத்தவள் (பாக்யசாலி). இவை காளீ அர்ச்சனையால் ஏற்படும் பயன்கள். ஸ்ரீ காளியின் அனுக்ரஹத்தால் பிரம்ஹ ஞானம் ஏற்படுகின்றது. அதனால் ஜீவன் முக்தனாகின்றான். காளீ உபாஸகன் பாக்யசாலி. அவனே விசேஷமான ஞானமுடையவன். அவனைத் தேவரும் பூஜிப்பர். அவனே பூர்ண தீக்ஷை பெற்றவன். அவனே நல்லவன். அவனே சுகி. ஸத்யவாதியும் ஜிதேந்த்ரியனும் அவனே. அவனே அத்யயனம் செய்தவன். அவனே வேதம் பற்றிக் கூறும் வல்லமை உடையவன். நற்பிறவி பெற்ற அவனே அச்வமேதம் முதலிய யாகங்கள் செய்தவனாகின்றான். அவனே தானம் செய்தவன். அவனே தபஸ்வீ. இவை காளீ உபாஸனையால் ஏற்படும் பலன்களாகும்.

## காளீ வழிபாடே அனைத்துத் தேவர் வழிபாடாகும்

ஸர்வ தேவதா ஸ்வரூபிணீ ஸ்ரீ காளீ. அவள் ஒருவளை வழிபடுவதனாலேயே பிரம்மா, விஷ்ணு, சிவன், கௌரீ, லக்ஷ்மீ, கணபதி, ஸூர்யன் இவர்கள் பூஜிக்கப்பட்டவர்களாகின்றனர். இவ்வாறெல்லாம் மந்த்ர சாஸ்திரங்கள் ஸ்ரீ காளீ தேவியின் உபாஸனை பற்றிச் சிறப்பாக வர்ணிக்கின்றன.

ब्रह्म विष्णुः शिवो गौरी लक्ष्मीर्गणपती रविः।
पूजिताः सकला देवाः यःकालीं पूजयेत्सदा॥
ப்ரஹ்மாவிஷ்ணு: சிவோ கௌரீ லக்ஷ்மீர்கணபதீ ரவி:।
பூஜிதா: ஸகலா தேவா: ய: காளீம் பூஜயேத் ஸதா॥

## ஸ்ரீ காளீ உபாஸனை ஸுலபமானது

காளீ மந்த்ர உபாஸனை செய்பவன் புரச்சரணம் செய்வதற்காக விசேஷமான யத்னங்கள் (முயற்சிகள்) ஒன்றும் செய்ய வேண்டாம். ''வித்யாராஞ்ஞீ'' எனப் புகழப்படுகின்ற இக் காளீ தேவியின் மந்த்ரத்தை ஸ்மரித்த மாத்திரத்திலேயே ''அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி:, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம்'' முதலிய அஷ்ட ஸித்திகளையும் பெற்று விடுகின்றான் என மந்த்ர மஹோததி குறிப்பிடுகின்றது.

न यत्नातिशयः कश्चित् पुरश्चर्यानिमित्तकः ।
विद्या राज्ञ्याः स्मृतेरेव सिद्धयष्टकमवाप्नुयात् ॥

ந யத்னாதிசய: கச்சித் புரச்சர்யா நிமித்தக:।
வித்யாராஞ்யா: ஸ்ம்ருதேரேவ ஸித்யஷ்டகமவாப்னுயாத் ॥

## ஸ்ரீ காளீ காயத்ரீ

அனைத்து மந்த்ரங்களின் உபாஸனையின்போது அந்தந்த தேவியின் (தேவதையின்) காயத்ரீ ஜபம் மிகவும் முக்கியம் என்று மந்த்ர சாஸ்திரம் கூறுகின்றது. ஆகவே, அந்த முறைப்படி இங்கு ஸ்ரீ காளீ காயத்ரீயின் ஜபவிதானம் கூறப்பட்டிருக்கின்றது.

ओं कालिकायै विद्महे श्मशानवासिन्यै धीमहि ।
तन्नो घोरा प्रचोदयात् ॥

ஓம் காளிகாயை வித்மஹே ச்மசானவாஸின்யை தீமஹி।
தன்னோ கோரா ப்ரசோதயாத் ॥

எவளைக் காளிகா என்று அறிகின்றோமோ, எவளை ச்மசான வாஸினீயாகத் தியானிக்கின்றோமோ, அந்த கோர ரூபமுடைய (அல்லது மங்கள ரூபமுடைய) காளிகா தேவி நம்மை அவளுடைய ஞானத்திலும், தியானத்திலும் ஈடுபடச் செய்யட்டும். இந்த காயத்திரியில் ''கோரா'' என்றும், ''அகோரா'' என்றும் பதம் பிரிக்கலாம். கோரா என்றால் பயங்கர உருவம் கொண்டவள் என்று பொருள். ''அகோரா'' எனப் பதம் பிரித்தால் பத்ரகாளீ, அதாவது மங்கள உருவினள், மங்களம் அளிப்பவள் எனப் பொருள் கொள்ளலாம். காளீ கோரமான உருவம் கொண்டவளாயினும், தன் பக்தர்களுக்கு வசீகரத் தோற்றம் கொண்டவளாகவே (ஸௌம்யையாக) காட்சி கொடுப்பாள். மூர்த்தி ரஹஸ்யத்தில்—



स्फुरद्दशनदंष्ट्रा सा घोररूपापि भूमिप ।
रूपसौभाग्यकान्तीनां सा प्रतिष्ठा परा श्रियाम् ॥

ஸ்புரத்தசனதம்ஷ்ட்ரா ஸா கோரரூபாபி பூமிப।
ரூபஸௌபாக்யகாந்தீனாம் ஸா ப்ரதிஷ்டா பரா ஸ்ரீயாம் ॥

என அவள் ரூபம் ஸௌபாக்ய காந்திகளுக்கும் ஐச்வர்யங்களுக்கும் இருப்பிடம். இவ்வாறு அழகியாக மங்களம் விளைவிப்பவளாகத் தோற்றம் கொடுக்கும் காளிக்கு பத்ரகாளீ எனப் பெயர். மங்கள ரூபிணியும் எப்போதும் உள்ளவளுமான அந்த காளீ தேவி உலக மங்களத்திற்காகப் பல மஹத்தான கல்யாண கார்யங்களைச் செய்துள்ளாள். அதனால் அவள் பத்ரகாளீ எனப் பெயர் கொண்டாள் என மார்க்கண்டேய புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

भद्राय जगतां देवी यानि यानि सनातनी ।
कार्याणि चक्रे कल्याणी कल्याणानि महान्ति च ॥

பத்ராய ஜகதாம் தேவீ யானி யானி ஸனாதனீ।
கார்யாணி சக்ரே கல்யாணீ கல்யாணானி மஹாந்தி ச ॥

अस्य श्री कालिकागायत्र्याः ब्रह्मा ऋषिः गायत्रं छन्दः श्री कालिका देवता ।
ओं बीजं ह्रीं शक्तिः सर्वाभीष्ट सिद्ध्यर्थे जपे विनियोगः ॥

அஸ்ய ஸ்ரீ காளிகாகாயத்ரியா: ப்ரம்ஹா ரிஷி: காயத்ரம் சந்த:
ஸ்ரீ காளிகா தேவதா।

ஓம் பீஜம் ஹ்ரீம் சக்தி: மம ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே
வினியோக: ॥

| | கரநியாஸம் | அங்கநியாஸம் |
|---|---|---|
| 1. | ओं कालिकायै अंगुष्ठाभ्यां नमः | ओं कालिकायै हृदयायनम्: |
| 2. | विद्महे तर्जनीभ्यां नमः | विद्महे शिरसे स्वाहा |
| 3. | श्मशानवासिन्यै मध्यमाभ्यां नमः | श्मशानवासिन्यै शिखायै वषट् |
| 4. | धीमहि अनामिकाभ्यां नमः | धीमहि कवचाय हुं |
| 5. | तन्नो घोरा कनिष्ठिकाभ्यां नमः | तन्नोघोरा नेत्रत्रयाय वौषट् |
| 6. | प्रचोदयात् करतलकरपृष्ठाभ्यां नमः | प्रचोदयात् - अस्त्रायफट् |

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

| | | |
|---|---|---|
| 1. | ஓம் காளிகாயை அங்குஷ்டாப்யாம் நம: | ஓம் காளிகாயை ஹ்ருதயாய நம: |
| 2. | வித்மஹே தர்ஜனீப்யாம் நம: | வித்மஹே சிரஸேஸ்வாஹா |
| 3. | ச்மசானவாஸின்ய மத்யமாப்யாம் நம: | ச்மசான வாஸின்யை சிகாயை வஷட் |
| 4. | தீமஹி அனாமிகாப்யாம் நம: | தீமஹீ கவசாய ஹும் |
| 5. | தன்னோகோரா கனிஷ்டிகாப்யாம் நம: | தன்னோகோரா நேத்ர த்ரயாய வௌஷட் |
| 6. | ப்ரசோதயாத் கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: | ப்ரசோதயாத் அஸ்த்ராயபட் |

பூர்புவுஸ்ஸுவரோமிதி திக்பந்த:

ध्यानं

सद्यः छिन्नशिरः कृपाणमभयं हस्तैर्वरं बिभ्रतीं
घोरास्यां शिरसां स्रजा सुरुचिरां आमुक्तकेशावलिं।
सृक्कासृक्प्रवहां श्मशाननिलयां श्रुत्योः शवालंकृतिं
श्यामांगीं कृतमेखलां शवकरैः देवीं भजे कालिकाम्॥



தியானம்
ஸத்ய: சின்னசிர:க்ருபாணமபயம் ஹஸ்தைர் வரம் பிப்ரதீம்
கோராஸ்யாம் சிரஸாம் ஸ்ரஜா ஸுருசிராம் உன்முக்தகேசாவளிம்
ஸ்ருக்காஸ்ருக்ப்ரவஹாம் ச்மசான நிலயாம் ச்ருத்யோ:
சவாலங்க்ருதிம்
ச்யாமாங்கீம் க்ருத்தமேகலாம் சவகரை: தேவீம் பஜே காளிகாம்॥

*இதன் விளக்கம் மூல மந்த்ரத்தின் தியானத்தில் எழுதப்படவுள்ளது. ஆங்கே காண்க.*

लमित्यादिपूजा
लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि।
हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि।
यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि।
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।
अं अमृतात्मिकायै अमृतोपहारं समर्पयामि।
सं सर्वात्मिकायै सर्वोपचारान्सपर्ययामि॥
मूल मन्त्रं-काली गायत्री

லமித்யாதிபூஜா
லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி।
ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி।
யம் வாய்வாத்மிகாயை தூபமாக்ராபயாமி।
ரம் வன்ஹ்யாத்மிகாயை தீபம் தர்சயாமி।
அம் அம்ருதாத்மிகாயை அம்ருதோபஹாரம் ஸமர்பயாமி।
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி
மூலமந்த்ரம்-காளீ காயத்ரீ

*மீண்டும் அங்கநியாஸம், பூர்புவஸ் ஸுவரோமிதி திக்விமோக: தியானம் லமித்யாதி பூஜா ஸமர்பணம்.*

हृदयाद्यंगन्यासः भूर्भुवस्सुवरोमिति दिग्विमोकः।
ध्यानं, लमित्यादि पूजा समर्पणम्

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा॥

குஹ்யாதிகுஹ்ய கோப்த்ரீ த்வம் க்ருஹாணாஸ்மத்க்ருதம் ஜபம்।
ஸித்திர்பவது மே தேவி த்வத்ப்ரஸாதான் மயி ஸ்திரா॥

## ஆதிகாளீ — தக்ஷிணகாளீ

மந்த்ர சாஸ்திரத்தில் ப்ரமாணிக க்ரந்தமான மஹனீயர் ஸ்ரீ மஹீதராசார்யர் அருளியுள்ள மந்த்ர மஹோததியில் ஸ்ரீ காளீ ப்ரகரணத்தைத் தொடங்கும்போது "எந்த மந்த்ரங்களின் உபாஸனையினால் ஜனங்கள் அனைத்து இஷ்டங்களையும் பெறுகின்றார்களோ, அவ்வாறான, உடனேயே வாக்ஸித்தியளிக்கக் கூடிய காளீ மந்த்ரங்களை கூறப் போகிறேன் என்றும், இக் காளீ மந்த்ரங்களுக்கு ஸித்த ஸாத்யாதி சோதனங்கள் பற்றிச் சிந்தித்துப் பார்க்கக் கூட தேவையில்லை. புரச்சரணம் செய்வதற்கும் மிகப் பெரிய முயற்சிகளும் தேவையில்லை. மந்த்ரங்களுக்குள்ளே அரசியான (வித்யாராஜ்ஞீ) இம் மந்த்ரஸ்மரணத்தினாலேயே அஷ்ட ஸித்திகளையும் ஸாதகன் பெறுகிறான் எனக் கூறப் பெற்றுள்ளது.

अथ कालीमनून्वक्ष्ये सद्यो वाक् सिद्धिदायकान्।
आराधितैर्यैः सर्वेष्टं प्राप्नुवन्ति जना भुवि।
नचात्र सिद्ध साध्यादि शोधनं मनसापि च।
न यत्नातिशयः कश्चित् पुरश्चर्यानिमित्तकः॥
विद्याराज्ञ्याः स्मृतेरेव सिद्ध्यष्टकमवाप्नुयात्॥

அதகாளீ மனுன்வக்ஷ்யே ஸத்யோ வாக்ஸித்திதாயகான்।
ஆராதிதைர்யைः ஸர்வேஷ்டம் ப்ராப்னுவந்தி ஜனா புவி॥
ந சாத்ர ஸித்தஸாத்யாதி சோதனம் மனஸாபிச।
ந யத்னாதிசயः கச்சித் புரச்சர்யா நிமித்தகः॥
வித்யா ராஜ்ஞ்யாः ஸ்ம்ருதேரேவ ஸித்யஷ்டகமவாப்னுயாத்॥



ஆக, இப்போது கூறப்படும் மந்தரம் வித்யாராஜ்ஞீ எனச் சிறப்பிற்குரிய மந்த்ரமாகும்.

### दक्षिणकालीमन्त्रं

### தக்ஷிணகாளீ மந்த்ரம்

ओं क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं दक्षिणे कालिके क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं स्वाहा॥

ஓம் க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் தக்ஷிணே காளிகே க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா.

22 அக்ஷரங்கள் கொண்டது இந்த தக்ஷிண காளீ மந்த்ரம்.

### இதன் உத்தாரம்

क्रोधीशत्रितयं वन्हिवामाक्षिविधुभिर्युतं।
वराहद्वितयं वामकर्ण चन्द्रसमन्वितम्॥
मायायुग्मं दक्षिणेच दीर्घासृष्टिः सद्दक्रिया।
चक्री झिण्टीशमरूढः प्रागुक्तं बीज सप्तकं।
मन्त्रो वन्हिप्रियान्तोऽयं द्वाविंशत्यक्षरो मतः॥

க்ரோதீசத்ரிதயம் வன்ஹிவாமாக்ஷி விதுபிர்யுதம்।
வராஹ த்விதயம் வாமகர்ண சந்த்ர ஸமன்விதம்।
மாயா யுக்மம் தக்ஷிணேச தீர்கா ஸ்ருஷ்டிः ஸருக்க்ரியா।
சக்ரீ ஜின்டீசமாரூடः ப்ராகுக்தம் பீஜ ஸப்தகம்।
மந்த்ரோ வன்ஹிப்ரியாந்தோயம் த்வாவிம்சத்ய க்ஷரோ மதः॥

இதன் விளக்கம்: க்ரோதீசத்ரிதயம் = மூன்று ககாரங்கள், வன்ஹி - வாமாக்ஷி, விதுபிர்யுதம் = ர, ஈ பிந்து(ம்) இவற்றுடன் கூடியவை. ஆக க்ரீம் க்ரீம் க்ரீம். வாமகர்ண - சந்த்ர ஸமன்விதம் = ஊ, அனுஸ்வாரம். இவற்றுடன் கூடிய, வராஹத்விதயம் ஹ ஹ. இரண்டு ஆக ஹூம் ஹூம். மாயா யுக்மம் = ஹ்ரீம், ஹ்ரீம். தக்ஷிணே = தக்ஷிணே, தீர்கா ஸ்ருஷ்டிः = கா, ஸத்ருக்க்ரியா = ளி, சக்ரீ ஜின்டீச மாரூடः = கே, இத்துடன் முன் கூறிய ஏழு பீஜங்கள் க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம்

இவற்றையும் சேர்த்து வஹ்நிப்ரியாந்த: = ஸ்வாஹாவை கடையில் உடையதான மந்த்ரம். த்வாவிம்சத்யக்ஷரோமந்த்ர: = 22 அக்ஷரங்கள் கொண்டதாகும்.

## இம் மந்திரத்தின் பொருள்

क्रीं : (க்ரீம்) என்பது காளீ பீஜமாகும். இதில் க. ர ஈம் என்ற அக்ஷரங்கள் உள்ளன. க: மோக்ஷம் அளிப்பது. ர = அனைத்து தேஜஸ்ஸுகள். ஈ = சக்தி. அனுஸ்வாரம் (ம்) ப்ரஹ்மரூபம். இதனால் காளிதேவி மோக்ஷமளிப்பவள். ஸகல தேஜஸ் ஸ்வரூபிணி சக்தி பிரம்ம ஸ்வரூபிணியாய் இருப்பவள் என்ற பொருள் கிடைக்கின்றது.

★ க்ரீம் க்ரீம் க்ரீம் என மும்முறை இந்த பீஜம் கூறப்பட்டிருப்பது. அச் சக்தி ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவற்றைச் செய்பவள் என்பதைக் காட்ட.

★ ஹூம் என்பதில் ஹ-ஊ-ம் உள்ளன. ஹ = ஞானத்தையும், ஊ = குருவையும், ம் = பரமசிவனையும் குறிப்பிடுகின்றது. ஆக இவ்விரண்டு பீஜங்களும் சப்தம், சப்தார்த்தம் இவற்றை அளிக்கும் சக்தி படைத்தவள் காளி என்பதை உணர்த்துகின்றன.

★ ஹ்ரீம் என்பதில் ஹ-ர-ஈ-ம் என்ற நான்கு அக்ஷரங்கள் உள்ளன. ஹ : பிரம்ம ஞானத்தையும், ர = பரம தேஜஸ்ஸையும், ஈ = பரா சக்தியையும், ம் = பரப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் குறிப்பிடுகின்றது. அதாவது மஹாகாளீ ஞான ரூபிணீ. தேஜோ மயமாய் உள்ளவள். சக்தி ஸ்வரூபிணி. இவளே பரப்ரஹ்மம் என்பதைக் காட்டுகின்றது. அத்துடன் ஹ்ரீம் ஹ்ரீம் என இரண்டு தடவை கூறியிருப்பது ஸ்ருஷ்டி, ஸ்திதி, சக்தி உடையவள் என்பதைக் குறிக்க.

★ தக்ஷிணே காளிகே - என்று கூறியவுடன் காளியின் ஸான்னித்யம் ஸாதகனுக்கு ஏற்பட்டு விடுவதை உணர்த்தும்.

★ ஸ்வாஹா = என்பது உலகம். மாத்ரு ஸ்வரூபம் என்பதையும் மந்த்ர உச்சாரணத்தினால் பாபம் விலகும் என்பதையும் உணர்த்துகின்றது என மந்த்ர மஹோததி நூலுக்கு உரையாசிரியராய் (மோஹினீ என்பது உரையின் பெயர்) ஸ்ரீ சுகதேவ் சதுர்வேதீ கூறுகின்றார்.



## க்ரீம் என்பதற்கு மற்றொரு பொருள்

தோடல தந்த்ரம் க்ரீம் என்பதற்கு இவ்வாறு உரை கூறுகின்றது.

ककारं धर्मदं देवि ईकारं चार्थदायकं।
रकारं कामदं कान्ते मकारं मोक्षदायकं।
एकत्रोच्चारणाद्देवि निर्वाण मोक्षदायिनी॥

ககாரம் தர்மதம் தேவி ஈகாரம் சார்த்த தாயகம்।
ரகாரம் காமதம் காந்தே மகாரம் மோக்ஷ தாயகம்॥
ஏகத்ரோச்சாரணாத்தேவி நிர்வாண மோக்ஷதாயினீ॥

க = தர்மமளிக்கும். ஈ = பொருளைக் கொடுக்கும். ர = (காமம்) விரும்பியதை அளிக்கும். ம் = மோக்ஷம் நல்கும். இவையனைத்தையும் சேர்த்து உச்சாரணம் செய்ய நிர்வாண முக்தி கிடைக்கும் என்று உரை கொடுக்கப்பட்டிருக்கின்றது.

## "க்ரீம்" காளியின் ஏகாக்ஷர மந்திரமாகும்

க்ரீம் என்பது காளியின் ஏகாக்ஷர மந்த்ரமுமாகும். குஹ்ய காளீ தந்த்ரத்தில்,

चक्री त्रिमूर्ति संयुक्तः तथा वैश्वानरासनः।
अर्ध चन्द्रेण देवेशि बिन्दुनोपरि भूषितः।
एकाक्षरी महा विद्या सर्वतन्त्रेषु दुर्लभा॥

சக்ரீ த்ரிமூர்த்திஸம்யுக்த: ததா வைச்வானராஸன:।
அர்தசந்த்ரேண தேவேசி பிந்துனோபரிபூஷித:।
ஏகாக்ஷரீ மஹாவித்யா ஸர்வதந்த்ரேஷு துர்லபா॥

சக்ரீ = க. திரிமூர்த்தி = ஈ. வைச்வானர: = ர. அர்த்த சந்த்ரோ = ம் (பிந்து:). இதன் சேர்க்கையே க்ரீம். இதன் ரிஷி பைரவர். காயத்ரீ சந்தஸ் தக்ஷிண காளீ தேவதா, ககாரோ பீஜம் ஈகார: சக்தி: ரேப: கீலகம். கவித்வப்ராப்தெள விநியோக: க்ராம் க்ரீம் இத்யாதினா ஷடங்க ந்யாஸம் செய்ய வேண்டும்.

இதன் தியானம்.

वामोर्ध्वे छिन्नमुण्डं वरमपि तदधो दक्षिणोर्ध्वेच तीक्ष्णं
खड्गं चाधोह्यभीतिं करकमलतले बिभ्रतीं मेघकान्तिं।
दिग्वस्त्रामूर्ध्वकेशीं शवकरकृतकांचीकलापां शवासृक्
विस्फूर्यत्व्यात्तवक्त्रां श्रितजनफलदां कालिकां तां भजेऽहं॥

வாமோர்த்வே சின்னமுண்டம் வரமபிததோ தக்ஷிணோர்த்வேச தீக்ஷ்ணம்
கட்கம் சாதோ ஹ்ய பீதிம் கரகமலதலே பிப்ரதீம் மேககாந்திம்।
திக்வஸ்த்ராம் ஊர்த்துவ கேசீம் சவகரக்ருத காஞ்சீகலாபாம் சவாஸ்ருக்
விஸ்பூர்யத் வ்யாத்தவக்த்ராம் ச்ரிதஜனபலதாம் காளிகாம் தாம் பஜேஹம்॥

இடது மேல் கரத்தில் வெட்டப்பட்ட தலை, அதன் கீழ்க் கரத்தில் வரம், வலது மேல் கரத்தில் கூரிய கத்தி, அதன் கீழ்க் கரத்தில் அபயம். இவற்றைத் தரித்திருப்பவளும் கரு நிறத்தினளும் ஆடையற்றவளும் மேல் நோக்கிய கேசமுடையவளும் சவங்களின் கரத்தாலான ஒட்டியாணம் உடையவளும் சவத்தின் ரத்தத்தால் பூர்ணமான திறந்த வாயினளும் பக்தர்களுக்குப் பலனளிப்பவளுமாகிய காளீதேவியைப் பஜிக்கிறேன்.

இது விச்வாமித்ர மஹர்ஷி உபாஸித்த காளீ மந்த்ரமாகும்.

இங்கு ஒரு ஐதிஹ்யமுண்டு. மஹர்ஷி சிரேஷ்டரான விசுவாமித்திரர் தனக்குப் பிரஹ்மண்யம் கிடைக்க வேண்டும் என்பதற்காக பிரமனைக் குறித்துத் தவம் செய்தார். ஆயினும் பிரம்மா அவருக்குப் பிரம்ஹண்யவரம் அளிக்கவில்லை. விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்தார். அவரும் அளிக்கவில்லை. பின் பிருஹஸ்பதியின் உபதேசப்படி விருஷபவாஹனராம் ஸ்ரீ பரமேச்வரனைக் குறித்துத் தவம் செய்தார். பரமன் நேரில் வந்து தரிசனம் அளித்தார். மஹர்ஷியும் சிவனை வணங்கி, தாங்கள் எனக்குப் பிரம்ஹண்யம் பெற வரமருள வேண்டும் எனப் பிரார்த்தித்தார். சிவனும் காளியின் ஏகாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்யும் அது மஹா வித்யையாகும். அதனால் நீர் ப்ரம்ஹண்யம் பெறுவீர் எனக் கூறி மறைந்தார்.

விசுவாமித்திரரும் முறைப்படி அந்தக் காளீ மந்திரத்தை ஜபித்தார். ஆயினும் மந்திரம் சித்தியாகவில்லை. கோபம் கொண்ட மஹர்ஷி, "நீ



இனி உபாஸிப்பதற்குத் தகுதி அற்றவள் ஆவாய்" எனச் சாபம் கொடுத்தார். பின் சிவனிடம் வந்து விப்ரம் கூறினார். சிவன் அவரைக் கடிந்து கொண்டு, "நீர் ஏன் அம் மஹாமந்த்ரத்தைச் சபித்தீர். நீர் அம் மந்திரத்தைக் ககாரத்துடன் ரேபம் சேர்த்து உபாஸித்திருக்க வேண்டும். அப்போது மந்திர ஸித்தி ஏற்பட்டிருக்கும். அதனால்தான் மந்திர ஸித்தி ஏற்படவில்லை எனக் கூறி மறைந்தார். உடன் விசுவாமித்திரர் பரமன் கூறியபடி ககாரத்தை ரேபத்துடன் கூடியதாய் க்ரீம் என உபாஸித்தார் (முன்பு விசுவாமித்திரர் "கீம்" என்றே ஜபித்திருப்பார் எனத் தோன்றுகின்றது).

உடன் தேவி விசுவாமித்திரரை நோக்கி வரம் கேளும். அருளுகிறேன் என்றார். விசுவாமித்திரர் நான் பிரம்மாதி தேவர்களை ஆராதித்தேன். அவர்கள் எனக்கு வரம் கொடுக்காதது ஏன் என்று தெரியவில்லை. தாங்கள்தான் அவ் வரத்தை எனக்கு அருள வேண்டும் எனப் பிரார்த்தித்தார்.

விசுவாமித்திரருக்கு அருள் வழங்கப் பரமனும் கூடவே வந்திருந்தார். காளீ பரமனின் முகம் பார்த்து சங்கேதமாக ஏதோ கூறினாள். மஹாதேவரும் அதை அறிந்து கொண்டு மகிழ்வுடன் விசுவாமித்திரரை ஆலிங்கனம் செய்து கொண்டு அவருக்குப் பிரம்ஹண்யவரம் அருளினார். மஹர்ஷியும் சிறந்த பிரம்ஹண்யம் பெற்றார். ஸர்வ சாஸ்திரங்களிலும் அஸ்த்ர சஸ்த்ரங்களிலும் வல்லமை பெற்றார். இவ்வாறு விசுவாமித்திரருக்குப் பிரம்ஹண்யம் அளிக்க உதவிய மந்திரமாகும் க்ரீம். காயத்ரீ மந்திரத்தின் தேவதை சக்தி ஆதலால், அந்தப் பராசக்தி ரூபிணியான காளீ தேவி விசுவாமித்திரருக்கு வரமளிக்கும்படிக் கூறியுள்ளாள் என்று தோன்றுகின்றது. காயத்ரிக்கு சக்திதான் தேவதை என்பதை ஸ்ரீ புவனேச்வரீ மஹாவித்தை பற்றிய கட்டுரையில் விரிவாக விளக்கியுள்ளேன். அங்கே காண்க (இந்த இதிஹாஸம் நாரத பாஞ்சராத்ரத்தில் உள்ளதாகத் தர்பங்கா ராஜ வம்சத்தில் உதித்த ஸ்ரீ ச்யாமாநந்த நாதர் அவர்கள் ஸ்ரீ காளீ தத்துவம் என்ற கட்டுரையில் கூறிய செய்தியின் ஸாரமாகும் இது).

श्रुत्वा वाक्यं नृपस्याशु सा देवी स्वामिनो मुखं।
निरीक्ष्य हितभावेन संकेतेनाप्युवाच तम्॥
महादेवोपि तत्ज्ञात्वा प्रीतिभावेन शंकरः।

हस्ताभ्यामपि चालिंग्य विप्रत्वं प्रददौ ततः।
तत्क्षणादेव राजासौ विप्रत्वं गतवान्ध्रुवं।
सर्व शास्त्रैकनिपुणः सर्वशस्त्रैक पारगः।

ச்ருத்வா வாக்யம் ந்ருபஸ்யாசு ஸாதேவீ ஸ்வாமினோ முகம்।
நிரீக்ஷ்ய ஹிதபாவேன ஸங்கேதேனாப்யுவாச தம்।
மஹாதேவோபி தத்ஞாத்வா ப்ரீதிபாவேன சங்கர:।
ஹஸ்தாப்யாமபி சாலிங்க்ய விப்ரத்வம் ப்ரததௌ தத:।
தத்க்ஷணாதேவ ராஜாஸௌ விப்ரத்வம் கதவான் த்ருவம்॥
ஸர்வ சாஸ்த்ரைக நிபுண: ஸர்வ சஸ்த்ரைக பாரக:

22 அக்ஷரங்கள் கொண்ட மஹா மந்திரத்தில் தக்ஷிணே காளிகே என்ற இரண்டு பதங்கள் உள்ளன. அவற்றின் பொருளையும் இங்கே காண்போம்.

## தக்ஷணே

தக்ஷிணா என்ற சொல்லிற்குப் பலவிதமாய் விளக்கங்கள் கூறப் பெற்றுள்ளன.

1. தக்ஷிணம் என்றால் தெற்கு என்று பொருள். தெற்கு திக்கில் நிரந்தரமாய் உள்ளவன் யமன். அவன் காளீ என்ற சொல்லைக் கேட்டவுடன் பயந்து ஓடி விடுவான். ஆகவே தக்ஷின திக்கிலுள்ள காலனை விரட்டும் சக்தி படைத்தவள். ஆதலால் காளீ தக்ஷிண காளீ என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றாள்.

दक्षिणस्यां दिशि स्थाने संस्थितश्च रवेः सुतः।
कालीनाम्ना पलायेत भीतियुक्तः समन्ततः॥
अतः सा दक्षिणाकाली त्रिषु लोकेषु गीयते॥

தக்ஷிணஸ்யாம் திசிஸ்தானே ஸம்ஸ்திதச்ச ரவே: ஸுத:।
காளீநாம்னா பலாயேத பீதியுக்த: ஸமந்தத:।
அத: ஸா தக்ஷிணா காளீ த்ரிஷு லேகேஷு கீயதே॥

2. "தக்ஷிணா" என்பது யாக யஞ்ஞாதிகள் செய்து முடிக்கும் போது அதை நடத்தித் தந்த ரித்துவிக்குகளுக்குக் கொடுக்கும் காணிக்கையாகும். சம்பாவனையாகும். இதைத் தக்ஷிணா என்று கூறுவர். "அதக்ஷிணோ ஹதோ யஞ்ஞ:". தக்ஷிணையில்லா யஜ்ஞம் நஷ்டம் என்பர். அதாவது யஜ்ஞத்தின் பலனைக் கொடுக்காது என்பது கருத்து. அந்தத் தக்ஷிணை போன்றவள் காளீ. ஒவ்வொரு காரியத்தையும் முடித்தவுடன் இவளே பயனை வழங்குகின்றாள். ஆக தக்ஷிணை போன்று கர்ம பலன்களை அளிப்பதால் இவளை தக்ஷிணா என்றே குறிப்பிடுகின்றனர் என்று காமாக்யா தந்த்ரம் கூறுகின்றது.

यथा कर्म समाप्तौ च दक्षिणा फल सिद्धिदा।
तथा शक्ति रसौ देवी सर्वेषां फलदायिनी॥

யதா கர்மஸமாப்தௌ ச தக்ஷிணா பலஸித்திதா।
ததா சக்திரஸௌ தேவீ ஸர்வேஷாம் பலதாயினீ॥

3. தக்ஷிண: என்றால் (வலது) புருஷனையும், வாமா (இடது) என்றால் ஸ்த்ரீயையும் குறிப்பிடுவர். இங்கு தக்ஷிண: சிவன். வாமா சக்தி காளி. அதாவது தக்ஷிண ரூபியான சிவனை ஜயித்துப் பக்தர்களுக்கு மோக்ஷத்தை அருளுவதால் இவள் தக்ஷிணா எனப்படுகின்றாள் என்றும் கூறுவர். இதுவும் காமாக்யா தந்த்ரத்தில் உள்ளது.

पुरुषो दक्षिणः प्रोक्तः वामा शक्तिर्निगद्यते।
वामा सा दक्षिणं जित्वा महा मोक्ष प्रदायिनी॥
ततः सा दक्षिणा नाम्ना त्रिषु लोकेषु गीयते॥

புருஷோ தக்ஷிண: ப்ரோக்தோ வாமா சக்திர்நிகத்யதே।
வாமா ஸா தக்ஷிணம் ஜித்வா மஹாமோக்ஷப்ரதாயினீ।
தத: ஸா தக்ஷிணா நாம்னா த்ரிஷு லோகேஷு கீயதே॥

4. தக்ஷிணா மூர்த்தி ரூப பைரவரால் ஆராதிக்கப்பட்டவள் என்பதால் தக்ஷிணா எனவும் பெயர் கொண்டாள்.

(दक्षिणामूर्ति) भैरवाराधिता तस्मात् दक्षिणा परिकीर्तिता।

(தக்ஷிணாமூர்த்தி) பைரவாராதிதா தஸ்மாத் தக்ஷிணா பரிகீர்த்திதா।

5. தக்ஷிணா என்றால் வல்லவள் என்று பொருள். உலகில் பக்தர்களுக்கு மற்றைய தெய்வங்களைவிட வரம் வழங்குவதில் வல்லவளாயிருப்பதால் காளீ, தக்ஷிணா எனப்படுகின்றாள் என்று சக்தி ஸங்கம தந்த்ரம் கூறும்.

वरदानेषु चतुरा तेनेयं दक्षिणास्मृता ॥

வரதானேஷு சதுரா தேனேயம் தக்ஷிணா ஸ்ம்ருதா ॥

## காளிகே

ஸ்ரீ காளீ தேவீ கருநிறம் கொண்டவள். தமோ குண ரூபிணீ. அதைக் குறிக்கின்றது கருநிறம். தமோ குணம் கொண்ட இவளிடம் ஸத்வ குணம் படைத்த சக்திகளும், ரஜோ குணம் படைத்த சக்திகளும் லயமடைந்து விடுவதால் காளீ ஒருவளே கடைசியில் மிஞ்சுவாள். அவள் நித்யை. இதை உணர்த்தவே கரு நிறமுடையவளாய் இருக்கின்றாள். வெள்ளை நிறம், சிவப்பு நிறம் இவ்விரண்டும், நீல நிறத்தில் ஒன்றுபட்டு விடுவதை நாம் காண்கின்றோம். மஹா நிர்வாண தந்த்ரம் இதைப் பேசுகின்றது.

श्वेतपीतादिको वर्णः यथा कृष्णे विलीयते ।
प्रविशन्ति तथा काल्यां सर्वभूतानि शैलजे ॥

ச்வேத பீதாதிகோ வர்ண: யதாகிருஷ்ணே விலீயதே ।
ப்ரவிசந்தி ததா கால்யாம் ஸர்வபூதானி சைலஜே ॥

இதனால் ராத்ரியாக தமோ ரூபமாக காளீ கூறப்படுகின்றாள்.

सृष्टेरादौ त्वमेवासि तमोरूपमगोचरं ।

ஸ்ருஷ்டேராதௌ த்வமேவாஸி தமோரூபமகோசரம்

ஆகமே ஸப்தசதி

कालरात्रिः महारात्रिः मोह रात्रिश्च दारुणा (रात्रिः)

காள ராத்ரி: மஹாராத்ரி: மோஹராத்ரிச்ச தாருணா (ராத்ரி:)



என்று மஹா ராத்திரி காள ராத்திரி, மோஹ ராத்திரி, தாருணா ராத்திரி என்று சக்தியை வர்ணிக்கின்றது. இங்குள்ள ஒவ்வொரு ராத்ரி சப்தமும் ஒவ்வொரு சக்திகளை (தேவிகளை) லக்ஷணையாய்க் குறிக்கின்றது என்று அறிய வேண்டும். இதன் விளக்கங்களைத் தந்த்ர சாஸ்திரங்கள் விரிவாய்ப் பேசுகின்றன. இந்த ராத்திரிகள் பற்றிப் பின்வரும் தச மஹா வித்யா கட்டுரைகளில் விளக்கம் காணலாம்.

## ஸீதா தேவியே காளீஸ்வரூபிணீ

ஸ்ரீ ராமருடைய சரிதத்தில் ஏறக்குறைய அரை நூற்றாண்டின் வரலாறு பற்றியேதான் நாம் தெரிந்து கொண்டிருக்கின்றோம். ஸ்ரீ ராமர் அயோத்தியில் 11,000 ஆண்டுகள் வாழ்ந்து தர்மரக்ஷணம் செய்தருளியிருக்கிறார். இதனிடையே எவ்வளவோ வரலாறுகள் நிகழ்ந்துள்ளன. அவை வால்மீகி முதலிய ரிஷிகள் இயற்றிய ஸ்ரீராம காதையில் காணப்படாவிடினும் பல சரிதங்கள் நடந்துள்ளன. அவற்றில் இதோ ஒரு ஐதிஹ்யம்.

புஷ்கரத்வீபத்தில் ஸஹஸ்ர (1000) முக ராவணன் என்றொரு அரக்கன் வாழ்ந்து எல்லோருக்கும் தீமை செய்து வந்தான். அவனையும் அழிக்கப் பகவான் ஸ்ரீ ராமர் திருவுள்ளம் கொண்டார். தம் தம்பியர், வானரர், மந்திரிகள், சேனை முதலியவற்றுடன் புஷ்பக விமானமேறி ஸ்ரீ ஸீதா தேவியுடன் கூட புஷ்கரத்வீபம் சென்றார். ஸஹஸ்ரமுக ராவணனுடன் சண்டை நிகழ்ந்தது. அந்த ஸஹஸ்ரமுக ராவணனுடைய ஒரு பாணத்தால் அடிபட்ட தம்பியர், வானரர், மந்திரிகள், சேனை இவர்கள் எல்லாம் எங்கே போயிற்று என்றே தெரியவில்லை! ஸ்ரீ ராமர் புஷ்பக விமானத்தில் மூர்ச்சித்துக் கிடந்தார். தேவர் பதறிப் போயினர். வஸிஷ்டாதி ரிஷிகள் ரண பூமியில் சீதையைக் கண்டு ஸீதே "அனைவருக்கும் என்ன நேர்ந்தது. ஸ்ரீ ராமருக்கு என்னவாயிற்று" எனக் கேட்டு வருந்தி நின்றனர். இதைக் கேட்ட ஸீதா தேவி கோபம் கொண்டாள். புஷ்பக விமானத்தினின்றும் இறங்கினாள். "குழி விழுந்த கண்ணினளாய் (कोटराक्षी) நான்கு கரத்தினளாய், கையில் கத்தி கொண்டு பேருருவம் கொண்ட காளியாகி, ஸஹஸ்ர முக ராவணனின் ரதம், சேனை அனைத்தையும் அழித்து, அவன் சிரங்களை வெட்டி வீழ்த்தினாள். அந்த மகிழ்ச்சியில் நர்த்தனம் புரிந்தாள். கடலிலே பெருங்காற்றால் ஆடும் ஓடம்போல் பூமி ஆடிற்று. மலைகளும்

நடுங்கின. கடல்கள் கொந்தளித்தன. காளியின் நர்த்தனம் தாங்காது பூமி பாதாளத்தில் அமுழ்ந்த ஆரம்பித்தது. அனைவரும் பகவான் மஹாதேவனைப் பிரார்த்திக்கப் பகவான் சிவன் சவமாகி ஜானகியின் காலைத் தாங்கிக் கிடந்தார். தன்னையும் அசையாதிருக்குமாறு செய்து கொண்டார். பூமி கீழே அமிழ்ந்து போகாமல் காத்தருளினார்.

जानक्याः पादविन्यासे शवरूप धरो हरः।
आत्मानं स्तंभयामास धरणीधृति हेतवे॥

ஜானக்யா! பாதவின்யாஸே சவரூபதரோ ஹர:।
ஆத்மானம் ஸ்தம்பயாமாஸ தரணீத்ருதி ஹேதவே॥

ஸ்ரீ ஜானகி தேவி இவ்வாறிருக்க பிரம்மாதி தேவர்கள் சென்று புஷ்பக விமானத்தில் மூர்ச்சை அடைந்து கிடக்கும் ஸ்ரீ ராமரின் கையைத் தொட, அவர் எழுந்து அடே ராவணா! என் பாணம் உன்னை யமலோகத்திற்கு அனுப்பப் போகின்றது பார்! எனக் கூறிக் கொண்டு வில்லையும் அம்பையும் எடுத்தார். அப்போது புஷ்பகத்தில் ஸீதையைக் காணாது யுத்த பூமியில் நடனம் புரியும் காளியைக் கண்டார். நான்கு புஜமும் தொங்கும் நாக்கும் கத்தியும் கபாலமும் தாங்கும் கரங்களும் கொண்டு திகம்பரையாய் சவரூப சிவன்மீது நின்றிருப்பவளும், ரத்தத்தை அருந்துபவளும் உலகினையே விழுங்க முயற்சிக்கின்றவளும், முண்ட மாலையை அணிந்தவளும், மாத்ருகா தேவிகளுடன் கூடி, ராவணன் தலைகளைப் பந்தாடுபவளுமான காளியைக் கண்டு நடுங்கிய ராமருடைய கையினின்றும் வில்லும் அம்பும் நழுவின. அக் காளியைப் பணிந்து வணங்கி, "நீ யார். எனக்கு உண்மையைத் தெரிவிப்பாயாக" எனப் பிரார்த்தித்தார்.

அப்போது அவள் கூறினாள்.

மஹேச்வரனுடன் ஒன்றியிருக்கும் பராசக்தி நான். அழியாதவள். அவரைத் தவிர வேறில்லாதவள். ஒருவள். இவ்வாறு என்னை வேதியர் கூறுவர். நான்தான் அனைத்திற்கும் ஆதாரம். எல்லாவற்றிலும் உறைபவள். நித்யமானவள். ஆனந்தமயமாயிருப்பவள். அனைத்து ஆத்திகர்களையும் தூண்டுபவள். அளவற்ற அழியாத மஹிமை கொண்டவள். பக்தர்களை ஸம்ஸாரக் கடலினின்றும் கரையேற்றுபவள். என்னுடைய பரமேச்வர சக்தி கொண்ட பதத்தைப் பார். உமக்கு ஞானக் கண் (திவ்ய) அளிக்கிறேன் என ராகவரைப் பார்த்துக் கூறினாள். ஸ்ரீ ராமரும்



திவ்ய த்ருஷ்டி பெற்று "கோடி சூர்ய ப்ரகாசமுள்ளதும், நாற்புறமும் பரந்து கிடக்கும் ஒளியுடையதும் ஸ்திரமானதும், ப்ரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலாம் அமரரும் யோகி சிரேஷ்டர்களும் போற்றும் சரணாரவிந்தம் உள்ளதும், எங்கும் கைகள் எங்கும் கால்கள் நிறைந்ததும், எங்கும் கண்கள் எங்கும் சிரங்கள் எங்கும் முகங்கள் நிறைந்ததும் அனைத்தையும் அளாவி நிற்கின்றதுமான அந்தக் காளீ தேவியின் ஈச்வர பதத்தைக் கண்டு அதனால் ஈர்க்கப்பட்ட மனத்தினராய் ஸ்ரீ ராமர் தன் ஆத்மாவிலேயே ஆத்மாவை நிலைநிறுத்தி ஓங்காரத்தை ஸ்மரித்துக் கொண்டு "மஹா ஸாம்ராஜ்யம்" எனப் பெயர் கொண்ட காளீ ஸஹஸ்ரநாமாவை ஜபித்தார். பின் காளீ சாந்த ரூபையாகி ஸ்ரீ ஸீதா தேவியானாள். இவ்வாறு ஸஹஸ்ரமுக ராவணனை அழித்து ஸ்ரீ ராமர் அயோத்தி வந்தார். இதனால் ஸ்ரீ ஸீதா தேவீ காளியின் ஸ்வரூபமே என்பதும், ராவணாதி வத நிமித்தம் ஸீதையாக ஆவிர்ப்பவித்தாள் என்றும் தெரிகின்றது. காளியே ஸீதை என்ற கட்டுரை, கௌலாவதூத பண்டித மாதவானந்த ஜீ மஹாராஜ் அவர்களுடைய "காளீ மாஹாத்மியம்" என்ற கட்டுரையின் ஸாரமாகும். விரிவை அங்கு நோக்குக.

## 22 அக்ஷரங்கள் கொண்ட ஸ்ரீ தக்ஷிண காளீ மஹா மந்த்ரம் ஒரு பெட்டகம்

இக் காளீ தேவியின் மந்த்ரங்கள் மொத்தம் ஒன்பது லக்ஷம் எனக் கணக்கிடப் பெற்றிருக்கின்றன. இவை அனைத்தும் கிடைத்தற்கரியவையாம். இந்த 22 அக்ஷரங்கள் கொண்ட தக்ஷிண காளீ மந்த்ரம் அனைத்து காளீ மந்த்ரங்களுக்கும் பெட்டகம் போன்றதாகும். ஒன்பது லக்ஷம் காளீ மந்த்ரங்களின் ஸாரம் இந்த 22 அக்ஷர மந்த்ரம். இதற்கும் மூலமாய் உள்ளது காமராஜபீஜம். க்லீம் क्लीं என்பதாகும். இதைக் குறிப்பிடும் ஸித்தலஹரீ தந்த்ரம்.

नवलक्षमहाविद्याः कालिकायाः सुदुर्लभाः।
सर्वासां चैव विद्यानां भाण्डं द्वाविंशदक्षरी॥
कामराजसमुद्भूता द्वाविंशत्यक्षरी परा।
द्वाविंशत्यक्षरीचैव नवलक्षाद्विनिर्गता॥

நவலக்ஷ மஹாவித்யா: காளிகாயா: ஸுதுர்லபா:।
ஸர்வாஸாம் சைவ வித்யானாம் பாண்டம் த்வாவிம்ச தக்ஷரீ।

காமராஜஸமுத்பூதா த்வாவிம்சத்யக்ஷரீ மதா।
த்வாவிம்சத்யக்ஷரீ சைவ நவ லக்ஷாத் வினிர்கதா॥

ஆகவே ओं क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं दक्षिणे कालिके क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं स्वाहा ஓம் க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் தக்ஷிணே காளிகே க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா என்ற இம் மந்திரம் காளீ மந்திரங்களில் மிகவும் சிறந்ததாகும். இம் மந்திரத்திற்குப் பைரவர் ரிஷி. உஷ்ணிக் சந்தஸ் ஸ்ரீ காளிகா தேவதா. க்ரீம் பீஜம்; ஹூம் சக்தி; க்ராம் க்ரீம் என்று ஷடங்க நியாஸாதிகள்.

अस्य श्री दक्षिण काली महामन्त्रस्य भैरवः ऋषिः
उष्णिक् छन्दः श्रीकाली देवता क्रीं बीजं हूं शक्तिः क्रां क्रीमिति षडंगन्यासः

ध्यानं தியானம்

सद्यः छिन्नशिरः कृपाणमभयं हस्तैर्वरं बिभ्रतीं
घोरास्यां शिरसां स्रजा सुरुचिरां उन्मुक्त केशावलिं।
सृक्कासृक्प्रवहां श्मशाननिलयां श्रुत्योः शवालंकृतिं
श्यामांगीं कृतमेखलां शवकरैः देवीं भजे कालिकाम्॥

ஸத்யஃ சின்னசிரஃ க்ருபாணமபயம் ஹஸ்தைர் வரம் பிப்ரதீம்
கோராஸ்யாம் சிரஸாம் ஸ்ரஜா ஸுருசிராம் உன்முக்த கேசாவலிம்।
ஸ்ருக்காஸ்ருச் ப்ரவஹாம் ச்மசான நிலயாம் ச்ருத்யோஃ சவாலங்க்ருதிம்
ச்யாமாங்கீம் க்ருதமேகலாம் சவகரைஃ தேவீம் பஜே காளிகாம்॥

உடன் வெட்டப்பட்ட சிரத்தையும், கத்தி, அபயம், வரம் இவற்றையும் கைகளால் தரித்திருப்பவளும் (கத்தியும் வரமும் வலது கைகளில், சிரமும் அபயமும் இடது கைகளில்) பயங்கரமான முகத்தினளும் முண்டமாலையால் அழகியவளும் அவிழ்த்து விடப்பட்ட கேசபாசமுடையவளும் கடைவாய் வழியாய்ப் பெருகும் ரத்தத்தினளும், ச்மசானத்தில் வஸிப்பவளும் காதுகளில் சவ(சிசுக்கள்)ங்களைத் தோடாகக் கொண்டவளும், கருத்த அவயவங்கள் உடையவளும் சவகரங்களாலான ஒட்டியாணம் உடையவளும் ஆகிய ஸ்ரீ காளிகா தேவியைப் பஜிக்கிறேன். இந்த தக்ஷிணா காளீ ஆதி காளியாவாள்.



ஆயினும் மஹா நிர்வாண தந்த்ரத்தில் வேறுவிதமான தியானம் கூறப்பட்டுள்ளது.

मेघांगीं शशिशेखरां त्रिणयनां रक्तांबरां, बिभ्रतीं
पाणिभ्यामभयं वरं च विलसद्रक्तारविन्दस्थितां।
नृत्यन्तं पुरतो निपीय मधुरं माध्वीकमद्यं महा
कालं वीक्ष्य विकासिताननवरां आद्यां भजे कालिकाम्॥

மேகாங்கீம் சசிசேகராம் த்ரிணயனாம் ரக்தாம்பராம் பிப்ரதீம்
பாணிப்யாம் அபயம் வரம் ச விலஸத் ரக்தாரவிந்த ஸ்திதாம்
ந்ருத்யந்தம் புரதோ நிபீய மதுரம் மாத்வீகமத்யம் மஹா
காலம் வீக்ஷ்ய விகாஸிதானைவராம் ஆத்யாம் பஜே காளிகாம்

கருத்தவள், சந்த்ர சேகரை, முக்கண்ணி, சிவந்த வஸ்திரத்தினள். இரண்டு கைகளால் அபயம், வரம் தரித்தவள். மலர்ந்த செந்தாமரையில்வீற்றிருப்பவள். தன் முன்பு இனிய த்ராக்ஷாஸவத்தை அருந்தி, நடனமிடும் மஹா காலரை (ஆதி நாதினை)க் கண்டு மலர்ந்த முகத்தினள். இவ்வாறான காளியைப் பஜிக்கிறேன் (இது காளியின் சௌம்ய மூர்த்தித் தியானம்).

முண்ட மாலை இங்கு முந்தைய தியானத்தில் காளிகா தேவி முண்டமாலை தரித்திருக்கின்றாள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அம்மாலையில் 51 முண்டங்கள் உள்ளதெனவும், அவை 51 மாத்ருகாக்ஷரங்கள் என்றும் கூறப்படுகின்றது. அனைத்து மந்திரங்களுக்கும் (7 கோடி மந்திரங்கள்) 51 அக்ஷரங்களே முக்கியமானவை. முக்கியமானதைத் தலை என்போம். ஆகவே 51 அக்ஷரங்களையே இங்குத் தலைகளாகக் கொள்ள வேண்டும். தக்ஷிண காளி தியானத்திலும் இதன் குறிப்பு தென்படுகின்றது.

पंचाशन्मुण्डघटित मालाशोणितलोहितां।

பஞ்சாசன்முண்டகடிதமாலா சோணிதலோஹிதாம்।

என்பதால் முண்டங்கள் (மாலையில்) 51 என்பதும்,

मम कण्ठे स्थितं बीजं पंचाशद्वर्णमद्भुतं

மம கண்டே ஸ்திதம் பீஜம் பஞ்சாசத்வர்ணமத்புதம்

என்ற காமதேனு தந்த்ர வாக்யத்தாலும் உணரலாம்.

1. ச்மசான நிலயாம் என்று காளீ ச்மசானத்(இடுகாடு)தில் உறைபவளாகக் கூறப்பட்டிருக்கின்றது. ச்மசானம் என்பது ஜீவராசிகள் உயிர் துறந்தபின் போடப்படும் இடமாகும். மஹா ப்ரளயம் வந்த போது உலகில் உள்ள ஜீவராசிகள் அனைத்துமே ஆங்காங்கே சவமாய் வீழ்ந்து விடுவதால் உலகமே ச்மசானமாகி விடுகின்றது. அந்த ச்மசானமாகிய உலகில் காளீ ஒருவளே தனித்திருப்பதால் அவளை ச்மசான வாஸினீ என்பர். அவள் நித்யை. ஆகவே ச்மசான வாஸினீ என்பதன் கருத்து அவள் என்றும் அழியாதவள், நித்யை என்பதாகும்..

महान्त्यपि च भूतानि प्रलये समुपस्थिते।
शेरतेऽत्र शवो भूत्वा श्मशानस्तु ततो भवेत्॥

மஹாந்த்யபி ச பூதானி ப்ரளயே ஸமுபஸ்திதே।
சேரதேத்ர சவோபூத்வா ச்மசானஸ்து ததோ பவேத்॥

2. சக்தியில்லாதபோது சிவன் ச்மசானமாகின்றார். அவர்மீது அமர்ந்திருப்பதாலும் காளீ ச்மசானவாஸினீ எனப்படுகின்றாள்.

श्मशानं दक्षिणास्थानं श्मशानं च सदाशिवः।
शवरूप महाकाल हृदयां भोजवासिनी॥

ச்மசானம் தக்ஷிணாஸ்தானம் ச்மசானம் ச ஸதாசிவ:।
சவரூப மஹாகால ஹ்ருதயாம் போஜவாஸினீ॥ (சக்தி தந்த்ரம்)

## தந்த்ர சாஸ்திரம் கூறும் பல தக்ஷிண காளீ மந்திரங்கள்

தக்ஷிண காளீ மந்திரங்கள், ஏறக்குறைய48 மந்திரங்கள், மந்த்ர மஹார்ணவம், மந்த்ரமஹோததி, ஸ்ரீ மஹா காளீ ஸித்தி, காளீ கல்பத்ருமம், ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம், ஸ்ரீ மஹாகாள ஸம்ஹிதா முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ளன. இம் மந்திரங்கள் 'क्रीं க்ரீம்'' என ஒரு அக்ஷரத்திலிருந்து 28 அக்ஷரங்கள் கொண்ட மந்திரங்களாய் உள்ளன. அவற்றை அந்தந்த நூல்கள் வாயிலாகத் தெரிந்து கொள்ளலாம்.



## श्री दक्षिणकाली मन्त्र जप विधानम्

अस्यश्री दक्षिणकाली महामन्त्रस्य भैरवः ऋषिः उष्णिक् छन्दः श्री दक्षिणकालिका देवता क्रीं बीजं हूं शक्तिः क्रीं कीलकं मम सर्वाभीष्ट सिद्धयर्थेजपे विनियोगः।

| | करन्यासः | | अंगन्यासः |
|---|---|---|---|
| ओं क्रां | अंगुष्ठाभ्यां नमः | ओं क्रां | हृदयाय नमः |
| क्रीं | तर्जनीभ्यां नमः | क्रीं | शिरसे स्वाहा |
| क्रूं | मध्यमाभ्यां नमः | क्रूं | शिखायैवषट् |
| क्रैं | अनामिकाभ्यां नमः | क्रैं | कवचाय हुं |
| क्रौं | कनिष्ठिकाभ्यां नमः | क्रौं | नेत्रयाय वौषट् |
| क्रः | करतलकरपृष्ठाभ्यां नमः | क्रः | अस्त्राय फट् |

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

सद्यः छिन्नशिरः कृपाणमभयं हस्तैर्वरं बिभ्रतीं
घोरास्यां शिरसां स्रजा सुरुचिरां उन्मुक्तकेशावलिं।
सृक्कासृक्प्रसरां श्मशाननिलयां श्रुत्योः शवालंकृतिं
श्यामागीं कृत मेखलां शवकरैः देवीं भजे कालिकां।

लमित्यादिपूजा

लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि
हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि
यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि
अं अमृतात्मिकायै अमृतोपहारं समर्पयामि
सं सर्वात्मिकायै सर्वोपचारान्समर्पयामि

मूलमन्त्रं

ओं क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं दक्षिणे कालिके क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं स्वाहा (२२)

जपानन्तरं - हृदयादिन्यासः भूर्भुवस्सुवरोमिति दिग्विमोक्ष ध्यानं लमित्यादिपूजा समर्पणं

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा॥

ஸ்ரீ தக்ஷிண காளீ மந்த்ர ஜபவிதானம்

அஸ்ய ஸ்ரீ தக்ஷிண காளீ மஹாமந்த்ரஸ்ய பைரவ: ரிஷிः உஷ்ணிக் சந்தः ஸ்ரீ தக்ஷிணகாளீ தேவதா க்ரீம் பீஜம் ஹூம் சக்திः க்ரீம் கீலகம் மம ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே விநியோகः

| | | | |
|---|---|---|---|
| ஓம் க்ராம் | அங்குஷ்டாப்யாம் நமः | ஓம் க்ராம் | ஹ்ருதயாய நமः |
| க்ரீம் | தர்ஜனீப்யாம் நமः | க்ரீம் | சிரஸே ஸ்வாஹா |
| க்ரூம் | மத்யமாப்யாம் நமः | க்ரூம் | சிகாயைவஷட் |
| க்ரைம் | அனாமிகாப்யாம் நமः | க்ரைம் | கவசாய ஹூம் |
| க்ரௌம் | கனிஷ்டிகாப்யாம் நமः | க்ரௌம் | நேத்ரத்யாய வௌஷட் |
| க்ரः | கரதலகர ப்ருஷ்டாப்யாம் நமः | க்ரः | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த:

தியானம்

ஸத்யः சின்னசிரः க்ருபாணமபயம் ஹைஸ்தைः வரம்பிப்ரதீம்
கோராஸ்யாம் சிரஸாம்ஸ்ரஜா ஸுருசிராம் உன்முக்த கேசாவளிம்।
ஸ்ருக்காஸ்ருக்ப்ரவஹாம் ச்மசானநிலயாம் ச்ருத்யோः
ஸவாலங்க்ருதிம்
ச்யாமாங்கீம் க்ருதமேகலாம் சவகரைः தேவீம் பஜே காளிகாம்
லமித்யாதி பூஜை
லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி



ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி
யம் வாய்வாத்மிகாயை தூபம் ஆக்ராபயாமி
ரம் வன்ஹ்யாத்மிகாயை தீபம் தர்சயாமி
அம் அம்ருதாத்மிகாயை அம்ருதோபஹாரம் ஸமர்பயாமி
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி

மூல மந்த்ரம்—ஓம் க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் தக்ஷிணே காளிகே க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா. ஹ்ருதயாதிநியாஸः பூர்புவஸ்ஸுவரோமிதி திர்விமோகः தியானம் லமித்யாதி பூஜை ஸமர்பணம்

குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீ த்வம் க்ருஹாணாஸ்மத்க்ருதம் ஜபம்।
ஸித்திர்பவது மே தேவி த்வத் ப்ரஸாதான் மயி ஸ்திரா॥

## कालीस्थानं காளீ ஸ்தானம்

கணபதியின் ஸ்தானம், ஸ்வானந்த புவனம், புவனேச ஸ்தானம், மணித்வீபம், லலிதா ஸ்தானம், ஸ்ரீ புரம். துர்கா ஸ்தானம், ஜயம் என்ற லோகம். அவ்வாறு ஆத்ய ஸ்ரீ தக்ஷிண காளீ ஸ்தானம் எது? மஹா காள ஸம்ஹிதை கூறும்.

शून्ये ब्रह्माण्डगोले तु पंचाशत्शून्यमण्डले।
पंचशून्ये स्थिता तारा सर्वान्ते कालिकास्मृता॥

சூன்யே ப்ரஹ்மாண்டகோளேது பஞ்சாசத் சூன்ய மண்டலே।
பஞ்சசூன்யே ஸ்திதா தாரா ஸர்வாந்தே காளிகா ஸ்ம்ருதா॥

மஹா ப்ரளயம் வந்தபோது அனைத்துமே அழிந்து விடுகின்றன.
பிரம்ஹாண்டம் சூன்யமாகின்றது. 50 தத்துவங்களும் அழிந்து
விடுகின்றன. அப்போது காளீ மட்டும் இருக்கிறாள். அவள் சித் சக்தி
ரூபமாய் இருப்பாள். எல்லாம் அழிந்த நிலையில் எல்லாம் ச்மசானமாகி
விடுகின்றது. அந்த ச்மசானத்தில் தக்ஷிணகாளீ வாஸம் செய்கிறாள்.

श्रीदक्षिणाश्मशानं च श्मशानाष्टक मध्यगं।
परितो देवदेवेशि शतद्वारसमन्वितं॥
महा प्रलय मासाय कोटिब्रह्माण्ड नायिका।

सप्त प्रेत पर्यंकेतु राजते शवहृच्छिवा।
शवरूप महाकाल हृदयां भोजवासिनी॥

ஸ்ரீ தக்ஷிணாச்மசானம் ச ச்மசானாஷ்டகமத்யகம்।
பரிதோ தேவ தேவேசி சதத்வார ஸமன்விதம்।
மஹாப்ரளய மாஸாத்ய கோடிப்ரம்ஹாண்ட நாயிகா।
ஸப்த ப்ரேத பர்யங்கேது ராஜதே சவ ஹ்ருத்சிவா।
சவரூப மஹா காள ஹ்ருதயாம் போஜவாஸினீ॥

கோடி ப்ரம்ஹாண்ட நாயகியான மஹா காளீ வர்ஸம் செய்யும் ச்மசானம் (ஸ்ரீ காமரூபம் உஜ்ஜயினீ, காச்மீரம், காஞ்சி, கரவீரம், தேவீ கோட்டம், ஒட்டியாணம், ஹிரண்யபுரமென்ற) எட்டு ச்மசானங்களின் மத்தியில் உள்ளது. நூறு வாயில் கொண்டது. பிரம்மாதி ஸப்த ப்ரேதங்களுக்கும் மேல் சவ ரூபம் கொண்ட மஹா காளருடைய ஹ்ருதயத்தில் அமர்ந்துள்ளாள்.

## ஸ்திதி காலத்தில் ஸ்ரீ காளீயின் வாஸ ஸ்தானம்

ஸ்ரீ ஆதி காளீ ஹிமாலயத்தின் நடுவில் திவ்ய ஸ்தானமாகிய ஸ்ரீ பைரவ நகரத்தில் மணி மண்டபத்தில் மஹா பீடத்தில் அமர்ந்திருப்பாள். நாரதாதி முனி சிரேஷ்டர்கள் அவள் திவ்யத் திருவடித் தாமரைகளில் வணங்கி நிற்பர். ஸ்ரீ பைரவரே அவளை வந்தனம் செய்வார். இவ்வாறு ஆத்ய காளீயை தியானிக்க வேண்டும் என இவள் தியானத்திலிருந்து தெரிகின்றது.

हिमालये गिरेर्मध्ये नगरे भैरवस्य च।
दिव्यस्थाने महापीठे मणिमण्डपराजिते॥
नारदाद्यैः मुनिश्रेष्ठैः संसेवित पदांबुजां।
तत्र ध्यायेन्महाकालीं आद्यां भैरववन्दितां॥

ஹிமாலய கிரேர்மத்யே நகரே பைரவஸ்யச।
திவ்யஸ்தானே மஹாபீடே மணிமண்டப ராஜிதே।
நாரதாத்யைர் முனிச்ரேஷ்டை: ஸம்ஸேவித பதாம்புஜாம்।
தத்ர த்யாயேன் மஹாகாளீம் ஆத்யாம் பைரவ வந்திதாம்॥



## தந்த்ர சாஸ்திரங்கள் கூறும் பல காளிகள்

தந்த்ர சாஸ்த்ரங்கள் ஸ்ரீ காளியின் பல பேதங்களைப் பற்றிப் பேசுகின்றன. அந்த மூர்த்தி பேதங்களின் நாமாக்களை இங்கே காணலாம். ஆதிகாளீ, பத்ரகாளீ, ச்மசான காளீ, கால காளீ, குஹ்ய காளீ, காமகலா காளீ, தன காளீ, ஸித்தி காளீ, சண்டி காளீ என ஒன்பது காளிகள் பற்றிப் பேசும் புரச்சர்யார்ணவம்.

டம்பர காளீ, கஹனேச்வரீ காளீ, ஏகதாரா காளீ, சாமுண்டா சாபரீ காளீ, வஜ்ராவதீ காளீ, ரக்ஷா காளீ, இந்தீவரீ காளீ, தனதா காளீ, ரமண்யா காளீ, ஈசான காளீ, மந்த்ரமாலா காளீ என பதினோரு காளிகள் பற்றிக் குறிப்பிடுகின்றது ஜயத்ரதயாமள தந்த்ரம்.

ஸ்பர்சமணி காளீ, சிந்தாமணி காளீ, ஸித்தி காளீ, வித்யா ராஞ்ஞீ காளீ, காமகலா காளீ, ஹம்ஸ காளீ, குஹ்ய காளீ என்று ஏழு காளிகளைக் கூறுகின்றது ஸம்மோஹன தந்த்ரம்.

ஸம்ஹார காளீ, தக்ஷிண காளீ, பத்ரகாளீ, குஹ்ய காளீ, மஹா காளீ, வீர காளீ, உக்ர காளீ, சண்ட காளீ என எட்டு விதம் என்றும் பேசப்படுகின்றது.

காளீ, காத்யாயனீ, சாந்தா, சாமுண்டா, முண்டமர்தினீ, பத்ரகாளீ, பத்ரா, த்வரிதா, வைஷ்ணவீ என்று ஒன்பது காளி பற்றி ஸ்காந்த புராணம் குறிப்பிடுகின்றது.

காளி பற்றி சில விபரங்களை என்னுடைய ''ப்ரத்யங்கிரா'' என்ற தலைப்பில் எழுதப்பட்ட நூலில் காணலாம். இந்த தச மஹா வித்யா என்ற நூலைத் தொடர்ந்து அதுவும் வெளி வரும்.

## சில அற்புத மந்த்ரங்கள்

22 அக்ஷரங்கள் கொண்ட தக்ஷிண காளீ மஹா மந்த்ரம் சில அற்புதமான மந்த்ரங்களையும் தன்னிடையே தாங்கித் திகழ்கின்றது.

1. क्रीं க்ரீம் என்பது காளீ ஏகாக்ஷர மந்த்ரம். இதை ஸ்ரீ காளீ ப்ரணவம் என்று கூறுவர். இதை ''சிந்தாமணி'' காளீ மந்த்ரம் எனவும் கூறுவர்.
2. हूँ हूँ ஹூம் ஹூம் என்ற இரண்டு க்ரோத பீஜங்கள் தக்ஷிண காளீ மந்த்ரத்தில் உள்ளன. இவ்விரண்டையும் ''ஸ்பர்சமணி'' காளீ பீஜம் என்று கூறுவர்.

3. हूं ஹூம், क्रीं க்ரீம், ह्रीं ஹ்ரீம் இவையும் தக்ஷிண காளி மந்த்ரத்தில் உள்ள பீஜாக்ஷரங்களாகும். இவை மூன்றும் இணைந்த மந்த்ரமே ஸந்ததி ப்ரத காளீ மந்த்ரம் எனக் கூறுவர்.

இந்தத் தக்ஷிண காளீ மந்த்ரத்தையே பலவிதமாய்ப் பிரித்து, பல்வேறு மந்த்ரங்களாய் பல்வேறு தியானங்களுடன் பேசுகின்றது தந்த்ர சாஸ்திரம். காதி, ஹாதி, க்ரோதாதி, வாகாதி, நாதி, தாதி, ப்ரணவாதி என ஏழு வித க்ரமங்கள் கூறப்பட்டுள்ளன. மேற் கூறப்பட்ட அக்ஷரங்களை முதலெழுத்தாகக் கொண்ட இந்த ஏழு மந்த்ரங்களுக்கும் தனித் தனியாகத் தியானங்களும் கூறப்பட்டுள்ளன. இவை பற்றி எழுத தனி நூலே தேவைப்படும். ஸாதகர்களுக்கு ஸ்ரீ காளியைப் பற்றி விபரங்கள் தெரிந்து கொள்ளவே இங்கு மேலே சில குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. இதன் விபரங்களை மந்த்ர சாஸ்த்ரமறிந்தவர் மூலமாகவோ, இதற்கான தந்த்ர சாஸ்திரங்களைப் படித்தோ தெரிந்து கொள்ளவும்.

## भद्रकाली பத்ரகாளீ

பத்ரம் என்றால் மங்களம் என்று பொருள். உலக நன்மையைக் கருதி ஸ்ரீ பகவதீ காளீ தேவீ பல மங்களகரமான காரியங்களைச் செய்துள்ளாள். அதனால் பத்ரகாளீ என அழைக்கப்படுகின்றாள்.

भद्राय जगतां देवी यानि यानि सनातनी।
कार्याणि चक्रे कल्याणी कल्याणानि महान्ति च॥

பத்ராய ஜகதாம் தேவீ யானி யானி ஸனாதனீ।
கார்யாணி சக்ரே கல்யாணீ கல்யானானி மஹாந்தீ ச॥

அவள் தியானம்

क्षुत्क्षामा कोटराक्षी मसिमलिनमुखी मुक्तकेशी रुदन्ती
नाहंतृप्ता यदन्ती जगदखिलमिदं ग्रासमेकं करोमि।
हस्ताभ्यां धारयन्ती ज्वलदनलशिखासन्निभं पाशमुग्रं
दन्तैःजंबू फलाभैः परिहरतु भयं पातु मां भद्रकाली॥



க்ஷுத்க்ஷாமா கோடராக்ஷீ மஸிமலின முகீ முக்தகேசீ ருதந்தீ
நாஹம் த்ருப்தாவதந்தீ ஜகதகிலமிதம் க்ராஸமேகம் கரோமி।
ஹஸ்தாப்யாம் தாரயந்தீ ஜ்வலதனலசிகா ஸன்னிம்பாசமுக்ரம்
தந்தைஃ ஜம்பூபலாபைஃ பரிஹரது பயம் பாதுமாம் பத்ரகாளீ॥

பசியால் மெலிந்தவள். கருத்த முகத்தினள். அவிழ்ந்த கேசத்தினள். அழுபவள். நான் திருப்தி அடையவில்லை. அகில உலகையும் ஒரு பிடியாய் செய்கிறேன் என்று கூறுபவள் (இலையில் போட்ட அன்னத்தை ஒவ்வொரு உருண்டையாக எடுத்துச் சாப்பிடுவதுபோல அகில உலகத்தையும் ஒரு உருண்டை போன்று ஆகாரமாய் கொள்ளுகிறேன், எனக் கூறுபவள்). ஜ்வலிக்கும் நெருப்பு ஜ்வாலை போன்ற உக்கிரமான பாசத்தை இரு கரங்களிலும் தரித்திருப்பவள். நாகப் பழம் போன்ற நிறமுடைய பற்களுடன் கூடியவள். இவ்வாறான காளீ தேவி என் பயத்தைப் போக்கி, என்னைக் காக்கட்டும்.

## மதுகைடபரை வதைத்த மஹா காளீ

காளீ மது-கைடபர்களைக் கொல்லுவதற்கு உதவி செய்திருக்கின்றாள். இந்தக் காளீ பற்றி மார்க்கண்டேய புராணத்திலுள்ள "ஸப்தசதீ"யும், தேவீ பாகவதம் முதலான புராணங்களும் விஸ்தாரமாகப் பேசுகின்றன. இக் காளீ நவாக்ஷரீ மஹா மந்த்ரத்தின் மூன்று பீஜாக்ஷரங்களில் க்லீம் என்ற பீஜாக்ஷரத்தின் பொருள் எனக் கூறுவர் சாக்தர். இவ்வாறே உரை இயற்றியிருக்கின்றார் சாக்த குல திலகமான ஸ்ரீ பாஸ்கர ராயர் அவர்கள். தேவீ பாகவதமும் இந்த உரையைப் பரிபூர்ணமாய் ஏற்றுக் கொண்டிருக்கின்றது.

ஏழு கோடி மஹா மந்த்ரங்களில் ஸப்த சதீயின் மூலமான நவாக்ஷரீ மந்த்ரமாம் "ऐं ह्रीं क्लीं चामुण्डायै विच्चे ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே" என்பதில் ஐம் ஹ்ரீம் க்லீம் என்ற மூன்று பீஜாக்ஷரங்கள் உள்ளன. அதில் ऐं ஐம் என்பதை வாக்பவ பீஜம் என்பர். இது மஹா ஸரஸ்வதீயின் பீஜாக்ஷரமாகும். ह्रीं ஹ்ரீம் என்பதை மாயா பீஜம் என்பர். இது ஸ்ரீ மஹா லக்ஷ்மியைக் குறிக்கும். क्लीं க்லீம் என்பதை காமராஜ பீஜம் என்பர். இது மஹா காளியின் பீஜாக்ஷரமாகும். நவாக்ஷரி மஹா மந்த்ரத்தில் உள்ள "விச்சே विच्चे" என்பதில் वित्-च.ई என்ற மூன்று பதங்கள் உள்ளன. வித் என்றால் சித் எனவும், ச என்றால் ஸத் எனவும், ஈ என்றால் ஆனந்தம் எனவும் பொருள் கொள்ளுவர் பெரியோர். இந்த

வித், ச, ஈ என்ற மூன்று பதங்களும் ஐம், ஹ்ரீம், க்லீம் என்பனவற்றிற்கு விசேஷணமாகும் (அதாவது அடைமொழிகளாகும்). சாமுண்டாயை என்றால் பிரம்ஹ வித்யையை அடையும் பொருட்டு எனப் பொருள் கொள்ள வேண்டும். அனுஸந்தத்மஹே अनुसंदध्महे என ஒரு க்ரியா பதத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அதனால் ஐம், ஹ்ரீம், க்லீம் சாமுண்டாயை விச்சே என்பதற்கு ஞானஸ்வரூபிணியாகிய ஹே ஸரஸ்வதி தேவியே! ஸத்ரூபிணியாகிய ஹே மஹாலக்ஷ்மி! ஆனந்த ரூபிணியான ஹே மஹாகாளீ! உங்களைப் பிரம்ஹ வித்யையை அடைவதன் பொருட்டு தியானிக்கின்றோம் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. இதை ஸ்ரீ பாஸ்கரராயர் அவர்கள், ·

महा सरस्वति चिते महालक्ष्मि सदात्मिके।
महाकाल्यानन्दरूपे त्वत्तत्वज्ञानसिद्धये॥
अनुसंदध्महे देवि वयं त्वां हृदयांबुजे॥

மஹா ஸரஸ்வதி சிதே மஹாலக்ஷ்மி ஸதாத்மிகே।
மஹாகாள்யானந்தரூபே த்வத் தத்வஞான ஸித்தயே॥
அனுஸந்தத்மஹே தேவி வயம் த்வாம் ஹ்ருதயாம்புஜே॥

மேற்கண்ட சுலோகத்தினால் விரித்துள்ளார்கள் (உரை நுட்பங்கள்). ஆகவே இந்தக் காளிக்குப் பீஜம் க்லீம் என்பதும் இவள் ஆனந்தஸ்வரூபிணீ என்றும் தெளிவாகத் தெரிகின்றது.

க்லீம் பீஜமுடைய இந்த ஆனந்த ரூபிணியான காளி மதுகைடபரை வதைக்க விஷ்ணுவிற்கு உதவியவள். இவளே ஸப்தசதியின் ப்ரதமாத்யாயத்தின் (முதல் அத்யாயத்தின் (தேவதை).

## மதுகைடபரை வதைக்க உதவினாள்

ஒரு ஸமயம் மஹா ப்ரளயம் நிகழ்கின்றது. உலகம் முழுவதும் ஜலமயமாய்க் காட்சி கொடுக்கின்றது. அப்போது விஷ்ணு ஒருவரே மிஞ்சுகின்றார். அவர் கடலில் ஆலிலையில் குழந்தையாய்க் கிடந்து விளையாடுகின்றார். அவர் தன் குறும்பையை (காது அழுக்கை) எடுத்து ஸ்ரீ மாதாவாய் உள்ள ஜகன்மாதா கடலில் போட மது-கைடபர் என இரு அசுரர்கள் உதிக்கின்றனர். கடல் நீரிலே விளையாடிக் கொண்டிருக்கின்றனர். இவ்விருவரும் கருநிறம் கொண்டவர்கள். நீண்ட



கையினர். விசால மார்பினர். விகாரமான செக்கச் சிவந்த கண்ணினர். கேயூரமும் வீர வளயமும் தரித்தவர்கள். தித்திப் பற்களுடனும் கருப்பு-சிவப்பு ஆடைகளுடனும் கூடியவர்கள். சூரியன் போன்று ஒளியினர். மலை போன்று தேஹத்தினர். மதம் பிடித்தவர். இந்த வர்ணனை என்னால் இயற்றப்பட்ட ஸ்ரீ காளி ஸ்துதியில் காணலாம் (இந்த ஸ்துதி 16 சுலோகங்கள் கொண்டது).

कनक मयांगद वीरवरोचित कंकण भूषित दीर्घभुजौ
विकृत महानयनौ सितभीकरवक्त्ररदौ मदमत्ततनू।
असितवरांबर धारि महाचलतुल्यतनू रवितुल्यमुखौ
तव कृपया मधुकैटभदानव वीरवरौ जलधेरुदितौ॥

(இந்த வர்ணனை ஹரி வம்ச புராணத்தின் அடிப்படையில் வரையப்பட்டதாகும்).

கனக மயாங்கத வீரவரோசித கங்கண பூஷித தீர்க புஜௌ
விக்ருத மஹானயனௌ ஸிதபீகர வக்த்ரதௌ மதமத்ததனூ।
அஸித வராம்பரதாரி மஹாசல துல்யதனூ ரவிதுல்யமுகௌ
தவ க்ருபயா மதுகைடப தானவீர வரௌ ஜலதேருதிதௌ॥

இப்படி அவர்கள் கடலில் விளையாடிக் கொண்டிருக்கும்போது ஐம் என்ற ஒலி கேட்டது. இந்த மந்திரத்தை 1000 வர்ஷம் ஜபித்தனர் மதுகைடபர். இது ஸரஸ்வதியின் பீஜாக்ஷரமாகும். இந்த மந்திரத்தின் தேவதையாகிய ஸரஸ்வதியை, பாசம் அங்குசம் புஸ்தகம், ஜபமாலை ஏந்திய நான்கு கரத்தினளாகத் தியானித்தனர். அந்தச் சக்தி நேரில் வராமல் "உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள். தருகிறேன்" என்றாள். மதுகைடபர்,

स्वेच्छया मरणं देवि वरं नौ देहि सुव्रते।

ஸ்வேச்சயா மரணம் தேவி வரம் நௌ தேஹி ஸுவ்ரதே।

என நாங்கள் விரும்பினாலேயே மரணம் வர வேண்டும். எங்கள் விருப்பமின்றி எங்களுக்கு மரணம் நேரக் கூடாது என்று வரம் கேட்டனர். தேவியும்,

वांछितं मरणं दैत्यौ भवेद्वां मत्प्रसादतः।
अजेयौ देव दैत्यैश्च भ्रातरौ नात्र संशयः॥

வாஞ்சிதம் மரணம் தைத்யெள பவேத்வாம் மத்ப்ரஸாததஃ।
அஜேயெள தேவ தைத்யைச்ச ப்ராதரெள நாத்ர ஸம்சயஃ॥

நீங்கள் விரும்பியவாரே மரணம் உண்டாகும். என் அருளால் உங்களை தேவர், அசுரர் இவர்கள் ஜயிக்க முடியாது எனக் கூறி மறைந்தாள்.

இது ஸ்ருஷ்டியின் ஆரம்ப காலம். கடலில் யோக ரூபமான நித்திரையில் ஆழ்ந்திருந்த பகவான் மஹாவிஷ்ணுவின் நாபீ கமலத்தினின்றும் நான்கு முகங்கள் கொண்ட பிரம்ம தேவர் வெளி வந்தார்.

நாபீ கமலத்தில் சுகமாய் அமர்ந்திருக்கும் பிரம்மாவைக் கண்டு பொறாமை கொண்டனர் மதுகைடபர். நாம் ஜத்தில் தத்தளித்துக் கொண்டிருக்கும்போது இந்தப் பிரமன் சுகமாய் அமர்ந்திருக்கின்றான் என வெகுண்டு, பிரமனைச் சண்டைக்கு அழைத்தனர். மலை போன்ற சரீரமுடைய மதுகைடபர்களைக் கண்ட பிரமன் பயந்து, விஷ்ணுவிடம் ஓடி வந்தார். அங்கு விஷ்ணு யோக நித்திரையில் இருந்தார். அவரை நித்திரையில் இருந்து எழுப்ப நித்ரா தேவி ஸ்வரூபிணியான தேவியைத் துதித்தார்.

या देवी सर्वभूतेषु निद्रारूपेण संस्थिता।
नमस्तस्यै नमस्तस्यै नामस्तस्यै नमोनमः॥

யாதேவீ ஸர்வபூதேஷு நித்ராரூபேண ஸம்ஸ்திதா।
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நமஃ॥

என்று தேவீ நித்ரா ஸ்வரூபிணியாயும் உள்ளாள் எனப் பேசுகின்றது ஸப்தசதி.

இங்குப் பிரம்மாவினால் அருளப்பட்ட யோக நித்ரா ரூபிணியான மஹா காளீயின் ஸ்துதி மிகச் சிறந்த பொருள் பொலிவுடையதாகும்.



ब्रह्मोवाचः—
त्वं स्वाहा त्वं स्वधा त्वं हि वषट्कारः स्वरात्मिका।
सुधात्व मक्षरे नित्ये त्रिधा मात्रात्मिका स्थिता॥
अर्धमात्रा स्थिता नित्या यानुच्चार्या विशेषतः।
त्वमेव सन्ध्या सावित्री त्वं देवि जननी परा॥
त्वयैतद्धार्यते विश्वं त्वयैतत्सृज्यते जगत्।
त्वयैतत्पाल्यते देवि त्वमत्स्यन्ते च सर्वदा॥
विसृष्टौ सृष्टिरूपा त्वं स्थिति रूपा च पालने।
तथा संहृतिरूपान्ते जगतोस्य जगन्मये॥

महा विद्या महामाया महामेधा महास्मृतिः।
महा मोहा च भवती महा देवी महा सुरी॥
प्रकृतिस्त्वं च सर्वस्य गुणत्रयविभाविनी।
कालरात्रिर्महारात्रिः मोहरात्रिश्च दारुणा॥
त्वं श्री स्त्वमीश्वरी त्वं ह्रीः त्वं बुद्धि र्बोधलक्षणा।
लज्जा पुष्टिस्तथा तुष्टिः त्वं शान्तिः क्षान्तिरेवच॥
खड्गिनी शूलिनी घोरा गदिनी चक्रिणी तथा।
शंखिनी चापिनी बाण भुसुण्डी परिघायुधा॥
सौम्या सौम्यतरा शेष सौम्येभ्यस्त्वतिसुन्दरी।
परापराणां परमा त्वमेव परमेश्वरी॥

यच्च किंचित्कचिद्वस्तु सदसद्वाखिलात्मिके।
तस्य सर्वस्य या शक्तिः सात्वं किं स्तूयसे तदा॥
यया त्वया जगत्स्रष्टा जगत्पात्यत्ति यो जगत्।
सोपि निद्रा वशं नीतः कस्त्वां स्तोतु मिहेश्वरः॥
विष्णुः शरीरग्रहणं अहमीशान एव च।
कारितास्ते यतोऽतस्त्वां कस्तोतुं शक्तिमान्भवेत्॥ (१२ श्लोकाः)

பிரம்ஹோவாச:—

த்வம் ஸ்வாஹா த்வம் ஸ்வதா த்வம்ஹி வஷ்ட்கார: ஸ்வராத்மிகா
ஸுதாத்வமக்ஷரே நித்யே த்ரிதா மாத்ராத்மிகா ஸ்திதா॥ 1

அர்த்தமாத்ரா ஸ்திதா நித்யா யானுச்சார்யா விசேஷத:।
த்வமேவ ஸந்த்யா ஸாவித்ரீ த்வம் தேவி ஜனனீ பரா॥ 2

த்வயைத்தார்யதே விச்வம் த்வயைத் ஸ்ருஜ்யதே ஜகத்।
த்வயைதத் பால்யதே தேவி த்வமத்ஸ்யந்தேச ஸர்வதா॥ 3

விஸ்ருஷ்டௌ ஸ்ருஷ்டி ரூபா த்வம் ஸ்திதி ரூபாச பாலனே।
ததா ஸம்ஹ்ருதி ரூபாந்தே ஜகதோஸ்ய ஜகன்மயே॥ 4

மஹாவித்யா மஹாமாயா மஹாமேதா மஹாஸ்ம்ருதி:।
மஹாமோஹா பவதீ மஹாதேவீ மஹாஸுரீ॥ 5

ப்ரக்ருதிஸ்த்வம் ச ஸர்வஸ்ய குணத்ரய விபாவினீ।
காலராத்ரி: மஹாராத்ரி: மோஹராத்ரிச்ச் தாருணா॥ 6

த்வம் ஸ்ரீஸ்த்வமீச்வரீ த்வம் ஹ்ரீ: த்வம் புத்தி: போதலக்ஷணா।
லஜ்ஜா புஷ்டி: ததாதுஷ்டி: த்வம் சாந்தி: க்ஷாந்திரேவச॥ 7

கட்கினீ சூலினீ கோரா கதினீ சக்ரிணீ ததா।
சங்கினீ சாபினீ பாண புஸுண்டீ பரிகாயுதா॥ 8

ஸௌம்யா ஸௌம்யதரா சேஷஸௌம்யேப்யஸ்வதி ஸுந்தரீ।
பராபராணாம் பரமா த்வமேவ பரமேச்வரீ॥ 9

யச்ச கிஞ்சித் க்சித்வஸ்து ஸதஸத் வா கிலாத்மிகே।
தஸ்ய ஸர்வஸ்ய யாசக்தி: ஸா த்வம் கிம் ஸ்தூயஸே ததா॥ 10

யயா த்வயா ஜகத் ஸ்ரஷ்டா ஜகத் பாத்பத்தியோ ஜகத்।
ஸோபி நித்ரா வசம் நீத: கஸ்த்வாம் ஸ்தோது மிஹேச்வர:॥ 11

விஷ்ணு: சரீரக்ரஹணம் அஹமீசான ஏவ ச।
காரிதாஸ்தே யதோ தஸ்த்வாம் க:ஸ்தோதும் சக்திமான் பவேத்॥ 12

நீயே ஸ்வாஹா. நீயே ஸ்வதா. நீயே வஷட்காரம். நீயே ஓங்கார ரூபிணி. நீயே ஸ்வர ரூபிணீ. நீயே அம்ருதம். நீயே ஹ்ரஸ்வம், தீர்கம், ப்லுதம் என்ற மாத்ராரூபிணீ. அர்த்தமாத்ரையும் நீயே! சப்த ப்ரம்ஹ



ரூபிணியாயும் நீயே இருக்கின்றாய். நீ நித்யை, ஸந்த்யா, ஸாவித்ரீ, ஸ்ரீ மாதா. இவ்வுலகை சிருஷ்டித்து, தரித்து, பாலித்து, அழித்து விடுபவளும் நீயே. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார ரூபிணியாகவும் நீயே இருக்கின்றாய். நீயே மஹாவித்யை (தச மஹா வித்யா ஸ்வரூபிணீ. தச மஹா வித்யையில் காளீ வித்யையே முதலாவ்தாகக் கணக்கிடப்படுகின்றது) மஹா மாயை. மஹா புத்தி. மஹா ஸ்ம்ருதி. ஸம்ஸார மூல காரணம். தேவ, அசுர சக்திகளும் நீயே. நீயே ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களாய் அல்லது பஞ்ச க்ருத்யங்களில் தனித் தன்மை வாய்ந்த ஸாமர்த்தியம் உள்ளவளாய் மூன்று குணங்களையும் இயக்குவிப்பவளாய் இருக்கின்றாய். நீயே காளராத்ரி, மஹாராத்ரி, மோஹராத்ரி, தாருணா ராத்ரி ஸ்வரூபிணியாய் இருக்கின்றாய். இவற்றின் விளக்கம் "தாரா வித்யா" என்பதில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அங்கே காண்க. நீயே ஸ்ரீ ஹ்ரீ: ஈச்வரீ, புத்தி, லஜ்ஜை, புஷ்டி, மகிழ்ச்சி, சாந்தி, பொறுமை அனைத்துமாய் இருக்கின்றாய். சக்தி, சூலம், கதை, சக்ரம், சங்கம், வில், பாணம், புசுண்டீ, பரிகம் இவை தாங்கித் திகழ்பவளாகவும் நீயே இருக்கின்றாய். நீயே கோர ரூபிணி. நீயே ஸௌம்ய ரூபிணீ. நீயே மிக மிக ஸௌம்யமானவள் மட்டுமின்றி பேரழகு படைத்தவள். பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ இவற்றுள் பரா ரூபையாய் உள்ளவள். சிறந்தவள்களுக்கு எல்லாம் மேலாய்ச் சிறந்தவள். நீயே அனைத்திற்கும் ஈச்வரீ. நீ அனைத்துமாய் இருப்பவள். எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் உள்ள ஸத், அஸத் ரூபமான வஸ்துக்களின் சக்தியாகவும் நீயே இருக்கின்றாய். உன்னை எவ்வாறு துதிக்க முடியும்? உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவற்றைச் செய்யும் விஷ்ணுகூட உன்னால் நித்திரைக்கு வசமாக்கப்பட்டார் (நீ ஸ்வதந்திரை. மற்றவர் பரதந்த்ரர்) உன்னைத் துதிக்க எவருக்கு சக்தி இருக்கிறது. விஷ்ணுவும் நானும் ஈச்வரனும் உன் மாயா சக்தியின் வலிமையால் அல்லவோ சரீரம் பெற்றிருக்கின்றோம். அவ்வாறான உன்னை வெல்ல எவருக்குச் சக்தி உண்டு? எனத் துதித்தார்.

இங்கு நித்ரா தேவியான மஹா காளியின் பெருமை பற்றிக் கூற சக்தி அற்றவன் நான் என மும்முறை "ஸா த்வம்கிம் ஸ்துயஸேததா, கஸ்த்வாம் ஸ்தோதுமிஹேச்வர:, கஸ்த்தோதும் சக்திமான்பவேத்" எனப் பிரம்மா, வாக்தேவியின் பர்த்தா, கூறியிருப்பதிலிருந்து இவள் வாக்கு மனத்திற்கு எட்டாத சக்தி படைத்தவள் என்பது தெளிவாக்கப்பட்டிருக்கின்றது.

## மஹா காளீ ஸ்வரூபம்

மஹா விஷ்ணுவை விட்டு தன் ரூபத்தைப் பெற்றாள் யோக நித்ரா மூர்த்தியான மஹா காளீ. இவள் ஸ்வரூபத்தைப் பேசுகின்றது சப்தசதீ.

दशवक्त्रा दश भुजा दश पादांजनप्रभा।
विशालया राजमाना त्रिंशल्लोचनमालया॥
स्फुरद्दशन दंष्ट्रा सा भीमरूपापि भूमिप।
रूप सौभाग्यकान्तीनां सा प्रतिष्ठा महाश्रियः॥
खड्गबाण गदाशूल चक्रशंख भुसुण्डिभृत्।
परिघं कार्मुकं शीर्षं निश्चोद्द्रुधिरं दधौ॥
एषा सा वैष्णवी माया महा काली दुरत्यया।
आराधिता वशीकुर्यात् पूजाकर्तु श्चराचरं॥

தசவக்த்ரா தசபுஜா தசபாதாஞ்ஜனப்ரபா।
விசாலயா ராஜமானா த்ரிம்சல்லோசன மாலயா॥
ஸ்புரத்தசன தம்ஷ்ட்ரா ஸா பீமரூபாபி பூமிப।
ரூபஸௌபாக்யகாந்தீனாம் ஸா ப்ரதிஷ்டா மஹாஸ்ரீய:॥
கட்க பாணகதாசூல சக்ர சங்க புஸுண்டி ப்ருத்।
பரிகம் கார்முகம் சீர்ஷம் கிச்ச்யோதத்ருதிரம் ததௌ॥
ஏஷா ஸா வைஷ்ணவீமாயா மஹாகாளீ துரத்யயா।
ஆராதிதா வசீகுர்யாத் பூஜாகர்த்து: சராசரம்॥

பத்து முகங்கள். பத்து கரங்கள். பத்து பாதங்கள். கருத்த நிறத்தினள். அகன்ற முப்பது கண்கள். வெளியில் தெரியும் பற்களும், தெற்றிப் பற்களும் கொண்டவள். பயங்கர உருவத்தினளாயினும் ரூபம் ஸௌபாக்யம். காந்தி முதலிய சோபை நிறைந்தவள். வலது பக்கக் கரங்களில் மேலிருந்து சக்ரம், சூலம், கதை, பாணம், கத்தி இவற்றையும், இடது புறம் மேலிருந்து சங்கு, புசுண்டி, பரிகள், வில், ரத்தம் சிந்தும் தலை இவற்றையும் தரித்திருப்பாள். இவள் வைஷ்ணவீ மாயை. இவளை யாராலும் வெல்ல முடியாது. இம் மஹா காளியைப் பூஜிப்பவருக்கு சராசரங்கள் அனைத்தும் வசமாகும்.



மஹா விஷ்ணுவிற்கு காளீ தர்னம் தந்த சமயம், சுவேத கல்பம் முதல் பித்ரு கல்பம் ஈறாகக் கணக்கிடப்படும் முப்பது கல்பங்களில் பன்னிரண்டாம் கல்பமான ஸாரஸ்வத கல்பத்தின் ஆரம்ப தினமான பங்குனி மாதம் சுக்ல பக்ஷ த்வதாசியாகும் எனச் சிவ புராணம் உமா சம்ஹிதையில் கூறப்பட்டுள்ளதாக தேவீ பாகவத்தின் உரைகாரர் குறிப்பிடுகின்றார்.

விழித்துக் கொண்ட விஷ்ணு மதுகைடபர்களுடன் 5000 வர்ஷங்கள் சண்டையிட்டார். சண்டையில் களைப்படைந்த விஷ்ணு உயரே தர்சனம் தந்த தேவியைத் துதித்து மதுகைடபர்களை வதைக்க உபாயம் கேட்டார். அவளும் தன் வக்கிரமான பார்வையால் மதுகைடபர்களை மோஹிக்கச் செய்து,

या देवी सर्वभूतेषु बुद्धिरूपेण संस्थिता।

யா தேவீ ஸர்வபூதேஷு புத்திருபேண ஸம்ஸ்திதா।

என்றபடி புத்திருபிணியாய் இருந்து விஷ்ணுவிற்கு அருளினாள். உடன் விஷ்ணு அவர் வரம் பெற்ற விபரம் தெரிந்தவராய், மதுகைடபரை நோக்கி, "வீரர்களே! நீங்கள் யுத்தத்திலே சிறந்து விளங்குகின்றீர்கள். நான் மகிழ்ச்சியுற்றேன். வேண்டும் வரம் தருகிறேன். கேளுங்கள்" என்றார். மதம் கொண்ட மதுகைடபர், "நாங்கள் யாசகர்கள் அல்ல. நீர் வேண்டுமானால் வரம் கேளும். நாங்கள் தருகின்றோம்" என்றனர். விஷ்ணு நீங்கள் என் கையால் மரணம் பெற வேண்டும் என, திகைத்த அவுணர்கள், உலகம் ஜலமாய் இருப்பது கண்டு ஜலமில்லாத இடத்தில் எங்களைக் கொல்லுங்கள் என்றனர். விஷ்ணுவும் விசுவரூபம் கொண்டு, மிக வளர்ந்துள்ள இரு அவுணர்களையும் தன் தொடை மீது அமர்த்தி சக்ராயுதத்தால் வெட்டி வீழ்த்தினார். இப்படி மதுகைடபரை அழிக்க விஷ்ணுவிற்கு உதவினாள் மஹா காளீ. மற்ற விபரங்களை ஸப்தசதீயில் காண்க.

தக்ஷிணகாளியின் பீஜம் க்ரீம். மதுகைடபரை வதைத்த தசமுக மஹாகாளியின் பீஜம் க்லீம். விசுவாமித்திரர் உபாஸித்த காளியின் பீஜம் க்ரீம் என்று முன் கூறப்பட்டதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும்.

## ஸ்ரீ குஹ்ய காளீ

காளிகளில் குஹ்யகாளிக்கு மந்த்ர சாஸ்திரத்தில் ஒரு தனிச் சிறப்பு உண்டு. எட்டு முக்கியமான காளிகளில் இந்த குஹ்ய காளீ கணக்கிடப் பெற்றிருக்கின்றாள்.

अथ वक्ष्ये महेशानि विद्यां सर्वफलप्रदां।
चतुर्वर्ग प्रदां साक्षात् महापातक नाशिनीं॥
सर्वसिद्धि प्रदां विद्यां भुक्तिमुक्तिप्रदायिनीं।
गुह्य काली महाविद्यां त्रैलोक्ये चाति दुर्लभां॥

அத வக்ஷ்யே மஹேசானி வித்யாம் ஸர்வபலப்ரதாம்।
சதுர்வர்கப்ரதாம் ஸாக்ஷாத் மஹாபாதக நாசினீம்॥
ஸர்வஸித்திப்ரதாம்வித்யாம் புத்திமுக்தி ப்ரதாயினீம்।
குஹ்யகாளீ மஹா வித்யாம் த்ரைலோக்யே சாதிதுர்லபாம்॥

இந்தக் குஹ்ய காளீ மஹா வித்யை மூவுலகத்திலும் கிடைப்பது அரிது. இது மூவுலகையும் வசீகரிக்கும் திறனுடையது. இது அனைத்துப் பலனையும் அளிக்கும். தர்மார்த்த, காம, மோக்ஷம் என்ற நான்கு வித புருஷார்த்தங்களையும் அளிக்கும். மஹா பாதகங்களைப் போக்கும். ஸர்வ ஸித்தி அளித்து போக மோக்ஷம் நல்கும் என்று விச்வ ஸார தந்த்ரத்தில் கூறப்பட்டுள்ள குஹ்யகாளீ வித்யையை ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம் எடுத்து விளக்கியிருக்கின்றது. இவள் தியானம்.

महामेघप्रभां देवीं कृष्ण वस्त्राभिधायिनीं।
ललजिह्वां घोरदंष्ट्रां घोररावां हसन्मुखीं॥
नागहारलतोपेतां चन्द्रार्धकृतशेखरां।
यां लिखन्ती जटामेकां ....... ..... ॥
..... ..... लेलिहानं शवं स्वयं।
नागयज्ञोपवीतांगीं नागशय्या निषेदुषीं॥
पंचाशन्मुण्ड संयुक्त नरमालां महोदरीं।
सहस्रफणसंयुक्तं अनन्तं शिरसोपरि॥



(दधतीमितिशेषः)
चतुर्दिक्षु नाग फणावेष्टितां गुह्य कालिकां।
तक्षक सर्पराजेन वामकंकण भूषितां।
अनन्त नागराजेन कृतदक्षिण कंकणाम्॥
नागेन्द्ररशनाहार लतिकां रत्न नूपुरां॥
द्विभुजां चिन्तयेद्देवीं नाग यज्ञोपवीतिनीं।
नरदेहसमाबद्ध कुण्डलद्वयमण्डितां।
प्रसन्नवदनां सौम्यां नवरत्न विभूषितां।
नारदाद्यैर्मुनिगणैः सेवितां शिवगेहिनीं।
अट्टहासां महाभीमां साधकाभीष्टदायिनीम्॥

மஹாமேக ப்ரபாம் தேவீம் க்ருஷ்ணவஸ்த்ராபிதாயினீம்।
லலஜ்ஜிஹ்வாம் கோரதம்ஷ்ட்ராம் கோரராவாம் ஹஸன்முகீம்।
நாகஹாரலதோபேதாம் சந்த்ரார்த்தக்ருதசேகராம்।
த்யாம் லிகந்தீம் ஜடாமேகாம் ...... ....
...... லேலிஹானா சவம் ஸ்வயம்।
நாகயஞ்ஞோபவீதாங்கீம் நாகசய்யாநிஷேதுஷீம்॥
பஞ்சாசந்முண்ட ஸம்யுக்த வரமாலாம் மஹோதரீம்।
ஸஹஸ்ரபண ஸம்யுக்தம் அனந்தம் சிரஸோபரி।
(தததீமிதிசேஷ:)
சதுர்திக்ஷு நாகபணாவேஷ்டிதாம் குஹ்யகாளிகாம்
தக்ஷகஸர்பராஜேன வாமகங்கணபூஷிதாம்॥
அனந்த நாகராஜேன க்ருததக்ஷிணகங்கணாம்॥
நாகேந்த்ர ரசனாஹாரலதிகம் ரத்ன நூபுராம்।
த்விபுஜாம் சிந்தயேத் தேவீம் நாகயஞ்ஞோபவீதினீம்।
நரதேஹஸமாபத்த குண்டலத்வயமண்டிதரம்॥
ப்ரஸன்னவதனாம் ஸௌம்யாம் நவரத்ன விபூஷிதாம்।
நாரதாத்யைர்முனிகணைః ஸேவிதாம் சிவகேஹினீம்॥
அட்டஹாஸாம் மஹாபீமாம் ஸாதகாபீஷ்டதாயினீம்॥

குஹ்ய காளீ தேவீ, மேகம் போன்ற கரு நிறம் உடையவள். கருப்பு வஸ்த்ரம் தரித்திருப்பவள். துவளும் நாக்கினள். கோரமான சப்தமும் தெற்றிப் பற்களும் உடையவள். சிரித்த முகத்தினள். நாகஹாரம், பிறைச் சந்திரன் அணிந்தவள். ஒரு ஜடையுடன் வானளாவி நிற்பவள். மாம்ஸத்தையும் சுவைப்பவள். ஸர்ப்பப் பூணூல் தரித்து நாகசயனத்தில் இருப்பவள். 50 முண்டங்கள் கொண்ட அழகிய மாலையினள். பெரு வயிற்றினள். ஆயிரம் படமுடைய அனந்தனை சிரத்தால் தரித்தவள். நாற்புறமும் பாம்புப் படத்தால் சூழப் பெற்றவள். தக்ஷகனை இடது கைக் கங்கணமாகவும், அனந்தனை வலது கைக் கங்கணமாகவும் கொண்டவள். நாக ஒட்டியாணம், ரத்ன பாதஸரம் அணிந்தவள். இவள் இரண்டு கையினள். நர தேஹத்தை இரண்டு காதுகளிலும் குண்டலமாய்த் தரித்தவள். மலர்ந்த முகத்தினள். ஸௌம்ய மூர்த்தி. நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டவள். நாரதாதி முனிவர்களால் வணங்கப்பட்டவள். சிவனின் மனைவி. அட்டஹாஸம் செய்பவள். மிகவும் பயங்கரமானவள். ஸாதகர்கள் விரும்பியதை அளிப்பவள்.

இந்தத் தியானம் நிறைய சுலோகங்கள் கொண்டதாய் இருக்கின்றது. ஸாதகர்களின் சௌகரியத்தைக் கருதி இதைச் சுருக்கமாக அளித்துள்ளேன். விரும்பியவர்கள் இதைத் தியானமாகக் கொள்ளலாம்.

मेघाभां वर पन्नगेन्द्रशयनां नीलांबरालंकृतां
नागाधीश्वरकंकणां शशिकलाचूडां द्विहस्तांवुजां।
नागाधीशफणासहस्रविलसन्मौलिं मुनीन्द्रार्चितां
पंचाशन्नरमुण्डहार रुचिरां श्रीगुह्यकालीं भजे।।

(मुत्तुस्वामिं कवेः)

மேகாபாம் வரபன்னகேந்த்ர சயனாம் நீலாம்பராலங்க்ருதாம்
நாகாதீச்வர கங்கணாம் சசிகலாசூடாம் த்விஹஸ்தாம்புஜாம்।
நாகாதீச பணாஸஹஸ்ர விலஸன்மௌளீம் முனீந்த்ரார்சிதாம்
பஞ்சாசன்நரமுண்டஹாரருசிராம் ஸ்ரீ குஹ்யகாளீம் பஜே॥

(இந்நூலாசிரியர் (முத்துஸ்வாமி கவியினுடையது)



மேகத்தின் நிறத்தினள். ஸர்ப ராஜன் மீது படுத்திருப்பவள். கருநிற ஆடையினள். ஸர்ப ராஜர்களை கங்கணங்களாய் அணிந்தவள். சந்திரகலை தரித்தவள். இரண்டு கர கமலத்தினள். ஸர்ப ராஜனின் ஆயிரம் படங்களால் ஒளிரும் கிரீடத்தினள். முனிவர்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 50 முண்டங்களை மாலையாக தரித்தவள். அவ்வாறான குஹ்ய காளியைப் பூஜிக்கிறேன்.

## தேவீ பாகவதத்தில் குஹ்ய காளி பற்றிய குறிப்பு

தேவீ பாகவதம் குஹ்யகாளீ பற்றிப் பேசுகின்றது. துர்கமாஸுரனுடன் தேவீ சதாக்ஷீ (சாகம்பரீ) சண்டையிடுகின்றாள். அப்போது தேவீ சரீரத்தினின்றும் பல மாபெரும் சக்திகள் உதயமாயினர்.

ततो देवी शरीरात्तु निर्गताःतीव्रशक्तयः।
कालिका तारिणी बाला त्रिपुरा भैरवी तथा।।
बगला चैव मातंगी तथा त्रिपुरसुन्दरी
कामाक्षी तुलजादेवी जंभिनी मोहिनी तथा।
छिन्नमस्ता गुह्यकाली दशसाहस्रबाहुका।।

ததோ தேவீ சரீராத்து நிர்கதாஃ தீவ்ரசக்தயஃ।
காளிகா தாரிணீ பாலா த்ரிபுரா பைரவீ ததா।
பகளா சைவ மாதங்கீ ததா த்ரிபுர ஸுந்தரீ
காமாக்ஷீ துளஜாதேவீ ஜம்பினீ மோஹினீ ததா।
சின்னமஸ்தா குஹ்யகாளீ தசஸாஹஸ்ரபாஹுகா॥

இங்கு காளீ, தாரா, த்ரிபுர பைரவீ, கமலா, பகளா, மாதங்கீ, ஷோடசீ, சின்னமஸ்தா, எட்டு மஹா வித்தைகளும், மற்றும் பாலா காமாக்ஷீ துளஜா தேவீ, ஜம்பினி, மோஹினீ இவர்களும் உதித்தனர். குறிப்பாகப் பத்தாயிரம் கைகள் உடைய குஹ்ய காளியும் உதித்தாள் (இங்கு தூமாவதீ, புவனேச்வரீ என்ற இரண்டு மஹாவித்யைகள் கூறப்படவில்லை).

இந்தக் குஹ்யகாளீ 5000 கைகளில் விற்களும், 5000 கைகளில் அம்புகளும் கொண்டு சண்டையிட்டாள். இவள் தியானம் மஹாகாள ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது என்றும், தேவீபாகவத உரைகாரர் சைவ நீலகண்டர் அவர்கள் விளக்கியுள்ளார்.

இவள் ஒன்று, மூன்று, ஐந்து, பத்து, நூறு, ஆயிரம் முகங்கள் எனப் பல முகங்கள் கொண்டவள் என்றும், அதில்பத்து முகம் கொண்ட குஹ்ய காளியைப் பற்றி ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர் துதித்துள்ளார் எனவும், "குலமார்த்தாண்ட" பண்டித யோகீந்த்ர கிருஷ்ண தெளர்காதத்தி சாஸ்திரி அவர்கள் "காளீ" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார்கள். இவள் மூல மந்த்ரம்.

ओं क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं गुह्ये कालिके क्रीं क्रीं क्रीं हूं हूं ह्रीं ह्रीं स्वाहा।

"ஓம் க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் குஹ்யே காளிகே க்ரீம் க்ரீம் க்ரீம் ஹூம் ஹூம் ஹ்ரீம் ஹ்ரீம் ஸ்வாஹா" என்பதாகும். இவள் மூல மந்த்ரங்கள் ஆறு உள்ளன. இவற்றின் விரிவை இனி எழுதப்படும் நூலில் காண்க.



உ

ஸ்ரீ மஹா கணபதயே நம:

ஸ்ரீ தாரா தேவ்யை நம:

❀❀❀

# II

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில் தாரா தேவீ இரண்டாவது மஹா வித்யை

## "श्री दशमहाविद्यासु तारा देवी महाविद्या"

❀❀❀

तारां तारपरां देवीं तारकेश्वरपूजितां।
तारिणीं भव पाथोधेः उग्रतारां भजाम्यहम्॥
(भैरवीतन्त्रे-ताराहृदये)

தாராம் தாரபராம் தேவீம் தாரகேச்வரபூஜிதாம்।
தாரிணீம் பவ பாதோதே: உக்ரதாராம் பஜாம்யஹம்॥
(பைரவீ தந்த்ரத்தில் தாரா ஹ்ருதயத்தில்)

## दश महाविद्यासु "श्री तारा विद्या"

### தசமஹாவித்யைகளில் "ஸ்ரீ தாரா வித்யா"

ஓஓஓ

ओं तारायै विद्महे महोग्रतारायै धीमहि।
तन्नो देवी प्रचोदयात्॥

ஓம் தாராயை வித்மஹே உக்ரதாராயை தீமஹி।
தன்னோ தேவீ ப்ரசோதயாத்॥

பெரு வெள்ளத்தினின்றும் காப்பாற்றுவதாலும், ஸம்ஸார பந்தத்தினின்றும் கரையேற்றி மோக்ஷம் அளிப்பதாலும் தாரா என்று அறிகின்றோம்.

ताराकत्वात् सदा तारा सुखमोक्ष प्रदायिनी

தாராகத்வாத் ஸதா தாரா ஸுகமோக்ஷ ப்ரதாயினீ"

"तारां च तोयप्लवे தாராம் ச தோய ப்லவே

(லகு ஸ்துதி)

உக்ரமான ஆபத்தினின்றும் காப்பாற்றுவதால் மஹோக்ரா என்றும் தியானிக்கின்றோம்.

उग्रापत्तारिणी यस्मात् उग्रतारा प्रकीर्तिता

(श्री.वि.तन्त्रे)

உக்ராபத் தாரிணீ யஸ்மாத் உக்ரதாரா ப்ரகீர்த்திதா

(ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம்)

இவ்வாறான இந்த ஸ்ரீ தாரா தேவீ நம்மை அந்த ஞானத்திலேயும் தியானத்திலேயும் ஈடுபடத் தூண்டட்டும்.

### श्री तारा देवी मन्त्रः ஸ்ரீ தாரா தேவீ மந்த்ரம்

ओं ह्रीं स्त्रीं हूं फट्

ஓம் ஹ்ரீம் ஸ்த்ரீம் ஹூம் பட்

இந்த மந்த்ரம் ஐந்து அக்ஷரங்கள் கொண்டது.



ஸ்ரீ தாரா

अस्य श्री तारा मन्त्रस्य अक्षोभ्य ऋषिः बृहती छन्दः तारा देवता, ह्रीं बीजं, हूं शक्तिः, मम सर्वाभीष्टसिद्धये जपे विनियोगः

அஸ்ய ஸ்ரீ தாரா மந்த்ரஸ்ய அக்ஷோப்ய: ரிஷி: ப்ருஹதீசந்த: தாரா தேவதா, ஹ்ரீம் பீஜம் ஹூம் சக்தி ! மம ஸர்வாபீஷ்ட ஸித்தயே ஜபே விநியோக.

| | करन्यासः | अंगन्यासश्च |
|---|---|---|
| 1. ओं ह्रां | अंगुष्ठाभ्यां नमः | हृदयाय नमः |
| 2. ओं ह्रीं | तर्जनीभ्यां नमः | शिरसे स्वाहा |
| 3. ओं ह्रूं | मध्यमाभ्यां नमः | शिखायै वषट् |
| 4. ओं ह्रैं | कनिष्ठिकाभ्यां नमः | कवचाय हुं |
| 5. ओं ह्रौं | अनामिकाभ्यां नमः | नेत्रत्रयाय वौषट् |
| 6. ओं ह्रः | करतलकरपृष्ठाभ्यां नमः | अस्त्राय फट् |

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

| | கரநியாஸம் | அங்கநியாஸம் |
|---|---|---|
| 1. ஓம் ஹ்ராம் | அங்குஷ்டாப்யாம் நம: | ஹ்ருதயாய நம: |
| 2. ஓம் ஹ்ரீம் | தர்ஜநீப்யாம் நம: | சிரஸே ஸ்வாஹா |
| 3. ஓம் ஹ்ரூம் | மத்யமாப்யாம் நம: | சிகாயை வஷட் |
| 4. ஓம் ஹ்ரைம் | கனிஷ்டிகாப்யாம் நம: | கவசாயஹூம் |
| 5. ஓம் ஹ்ரௌம் | அனாமிகாப்யாம் நம: | நேத்ரத்ராய வௌஷட் |
| 6. ஓம் ஹ்ர: | கரதல-கரப்ருஷ்டாப்யாம் நம: | அஸ்த்ராயபட் |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த:

ध्यानं

विश्व व्यापक वारिमध्य विलसच्छ्वेतांबुजन्मस्थितां।
कर्त्रीं खड्गकपाल नीलनलिनैः राजत्करामिन्दुभां।
कांची कुण्डल हारकंकणलसत् केयूर मंजीरतां
प्राप्तैर्नागवरैर्विभूषिततनुं आरक्त नेत्रत्रयाम्॥

पिंगाग्रैकजटां लसत्सुरसनां दंष्ट्रा करालाननां
चर्म द्वैपिवरं कटौ विदधतीं श्वेतास्थि पट्टालिकां।
अक्षोभ्येण विराजमानशिरसं स्मेराननांभोरुहां
तारां शावहृदासनां दृढकुचां अंबां त्रिलोक्याः स्मरेत्॥

தியானம்

விச்வவ்யாபக வாரிமத்ய விலஸத் ச்வேதாம்புஜன்ம ஸ்திதாம்
கர்த்ரீம் கட்ககபால நீலநளினைஃ ராஜத்கரா மிந்துபாம்।
காஞ்சீ குண்டல ஹார கங்கணலஸத் கேயூரமஞ்ஜீரதாம்
ப்ராப்தைர்நாகவரைஃ விபூஷிததனும் ஆரக்த நேத்ரத்ரயாம்॥
பிங்காக்ரைகஜடாம் லலத்ஸ்வரஸனாம் தம்ஷ்ட்ராகராளானனாம்
சர்ம த்வைபிவரம் கடௌ விததீம் ச்வேதாஸ்தி பட்டாளிகாம்।
அக்ஷோப்யேண விராஜமான சிரஸம் ஸ்மேரானனாம் போருஹாம்
தாராம் சாவஹ்ருதாஸனாம் த்ருடகுசாம் அம்பாம் த்ரிலோக்யாஃ ஸ்மரேத்॥

உலகம் எங்கும் நிறைந்த ஜலத்தின் நடுவில் (ஸமுத்ர ஜலத்தில்) விளங்கும் வெண் தாமரையில் வீற்றிருப்பவளும், கத்திரிக்கோல், கத்தி, கபாலம், கருங்குவளைப் பூ இலை மிளிரும் நான்கு கரத்தினளும், சந்திரன் போன்ற நிறத்தினளும், சிறந்த ஸர்பங்களையே ஒட்டியாணம், குண்டலம், ஹாரம், கங்கணம், தோள் வளை, பாதச் சலங்கை (நூபுரம்) முதலிய ஆபரணங்களாகக் கொண்ட தேஹத்தினளும், சிவந்த மூன்று கண்களுடையவளும், மஞ்சளும் சிவப்பும் கலந்த வர்ணம் கொண்ட முனையுடைய ஒற்றைச் சடையுடையவளும், மின்னும் (அசையும்) நாக்கினளும் தித்திப் பற்களுடன் கூடிய விசாலமான முகத்தினளும், இடையில் யானைத் தோலாடை அணிந்தவளும் வெண்ணிறமான எலும்புகளை அணிந்த நெற்றியினளும், "அக்ஷோப்ய" என்ற ஸர்பத்தால் (இவர் ஒரு ரிஷி. சிவ ஸ்வரூபி. தாரா மந்த்ரத்தை முதலில் ஜபம் செய்த மந்த்ர ரிஷி. ஸர்ப ரூபியாய் இருப்பவர்) பிரகாசிக்கும் சிரத்தினளும், புன்சிரிப்பு தவழும் தாமரை முகத்தினளும், சவத்தின் மார்பில் அமர்ந்திருப்பவளும், கடினமான மார்பகமுள்ளவளும், மூவுலகினுக்கும் தாயாய் இருப்பவளுமான ஸ்ரீ தாரா தேவியைத் தியானிக்க வேண்டும்.



## ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரத்தில் தாரா த்யானம்

प्रत्यालीढपदां घोरां मुण्डमालाविभूषितां।
खर्वां लंबोदरीं भीमां व्याघ्रचर्मावृतां कटौ।
नवयौवनसंपन्नां पंचमुद्राविभूषितां॥

ப்ரத்யாலீடபதாம் கோராம் முண்டமாலா விபூஷிதாம்।
கர்வாம் லம்போதரீம் பீமாம் வ்யாக்ரசர்மாவ்ருதாம் கடௌ।
நவயௌவனஸம்பன்னாம் பஞ்சமுத்ரா விபூஷிதாம்॥

இவள் ஒரு கால் முன்னும், ஒரு கால் பின்னுமாக வைத்திருப்பவள் (இடது காலைச் சவத்தின் மார்பிலும், வலது காலை சவத்தின் காலிலும் மிதித்துக் கொண்டு நிற்பவள்). கோரமானவள். முண்டமாலை தரித்தவள். குள்ளமானவள். சரிந்த வயிறுடையவள். பயங்கரமானவள். இடையில் புலித் தோல் அணிந்திருப்பவள். யௌவன வயதினள். பஞ்சமுத்ரையால் அலங்கரிக்கப்பட்டவள் (அதாவது வெண்மையான நான்கு எலும்புப் பட்டைகள் கொண்ட ஐந்து கபாலங்களைக் கொண்டிருப்பவள்). இதை ஆதிசங்கர பகவத்பாதர்,

विचित्रास्थिमालां ललाटे करालां
कपालं च पंचान्वितं धारयन्तीं

விசித்ராஸ்திமாலாம் லலாடேகராளாம்
கபாலம் ச பஞ்சான்விதம் தாரயந்தீம் । எனக் கூறியுள்ளார்.

ललाटे श्वेतास्थिपट्टिका चतुष्टयान्वित कपाल पंचकान्वितां

லலாடே ச்வேதாஸ்தி பட்டிகா சதுஷ்டயான்வித கபால பஞ்சகான்விதாம்

என்று இதற்கு உரை கண்டிருக்கின்றது ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம்.

இந்த ஸ்ரீ தாரா தேவியை யந்திரத்திலே பூஜை செய்யும் போது இவ்வாறு தியானிக்க வேண்டும் என்று மந்த்ர சாஸ்திரம் கூறும். அந்தத் தியானம்,

हृत्सरोजे सुधासिन्धुं मध्ये द्वीपं सुवर्णजं।
परितः पारि जातांश्च मध्ये कल्परुं ततः॥

तन्मूले हेमनिर्माणं द्वाश्चतुष्टयभूषितं।
मण्डपं मन्दवातेन पराक्रान्तं सुधूपितं।
तत्र यन्त्रं प्रतिष्ठाप्य तत्र पूजां समाचरेत्॥

ஹ்ருத்ஸரோஜே ஸுதாஸிந்தும் மத்யே த்வீபம் ஸுவர்ணஜம்।
பரித: பாரிஜாதாம்ச்ச மத்யே கல்பதரும் தத:॥
தன்மூலே ஹேமநிர்மாணம் த்வாச்சதுஷ்டயபூஷிதம்।
மண்டபம் மந்தவாதேன பராக்ராந்தம் ஸுதூபிதம்॥
தத்ர யந்த்ரம் ப்ரதிஷ்ட்டாப்ய தத்ர பூஜாம் ஸமாசரேத்॥

இதயத் தாமரையில் அமிர்தக் கடலையும், அதன் நடுவில் ஸுவர்ண மயமான த்வீபத்தையும், அதைச் சுற்றிப் பாரிஜாத வ்ருக்ஷங்களையும், அதன் நடுவே கற்பக வ்ருக்ஷத்தையும், அதனடியில் நான்கு வாயில்கள் கொண்ட ஸ்வர்ண மண்டபத்தையும், அந்த மண்டபம் சுகமான காற்றுடையதாகவும் நறுமண தூபம் உடையதாயும் தியானம் செய்து கொண்டு யந்த்ரத்தை ஸ்தாபித்துப் பூஜிக்க வேண்டும். இதனால் தாரா தேவியின் வாஸஸ்தானம் குறிப்பிட்டதாகின்றது.

ஸ்ரீ லலிதா பரமேச்வரீ வாஸம் செய்யும் ஸ்ரீ புரத்தில் பத்தொன்பதாவதாக வர்ணிக்கப்படுவது மனோஸாலம் (மனோமயமானது). அங்கு ஸ்ரீ தாரா என்ற சக்தி வாஸம் செய்கின்றாள்.

तारानाम महाशक्तिः वर्तते तारिणीश्वरी

தாராநாம மஹாசக்தி: வர்த்ததே தாரிணீச்வரீ

இவள் மஹா சக்தி, தன் பிரியனுடன் (பர்த்தாவுடன்) சந்தோஷமாய் இருக்கின்றாள். மனோமயமான ப்ராகாரத்தில்தான் அம்ருதவாபீ இருக்கின்றது. இவளுக்குப் பணிவிடை செய்ய ஆயிரக் கணக்கில் தோழிகள் இருக்கின்றனர். செந்நிறம் கொண்ட கப்பல்கள் ஆயிரக் கணக்கில் அங்கு மிதக்கின்றன. அவற்றில் அவர்கள் விளையாடுவர். இந்த ஸாலத்திற்குள் யாரும் பிரவேசிக்க முடியாது. அப்படி வர வேண்டுமானால் மந்திரிண்யம்பாவும், தண்டின்யம்பாவும் அனுமதி கொடுக்க வேண்டும். அப்போதுதான் தாரா தேவி அனுமதி வழங்குவாள். அவ்வாறில்லையானால் முக்கண்ணனும் பரமசிவனும்கூட உள்ளே வர, அவள் அனுமதிக்க மாட்டாள் என லலிதோபாக்யானம் வர்ணிக்கின்றது.



புவனேச்வரீயின் மணித்வீபத்தில் பதினெட்டாவது ப்ரகாரம் நவமணிமயமானது. இங்கு மஹாவித்தைகளான காளீ, தாரா முதலிய வித்யைகளும், அதன் தேவதைகளும் ஏழு கோடி மஹா மந்த்ர தேவதைகளும் உள்ளனர் என வணிக்கின்றது ஸ்ரீ தேவீ பாகவதம். இவள் மூல மந்திரம் பின்வருமாறு:

பஞ்சபூஜை

लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि।
हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि।
यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि।
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।
वं अमृतात्मिकायै अमृतोप हारं समर्पयामि।
सं सर्वात्मिकायै सर्वोपचारान्समर्पयामि।

லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி
ஹம் ஆகாசாத்மிகாயை தீபம் தர்சயாமி
யம் வாய்வாத்மிகாயை தூபமாக்ராபயாமி
ரம் வன்ஹயாத்மிகாயை தீபம் தர்சயாமி
வம் அம்ருதாத்மிகாயை அம்ருதோப்ஹாரம் ஸமர்பயாமி
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி

## मूलमन्त्रं (पंचाक्षरी)

ॐ ह्रीं स्त्रीं हूं फट् ஓம் ஹ்ரீம் ஸ்த்ரீம் ஹூம் பட் — இந்த ஐந்து அக்ஷரங்கள் கொண்ட மந்திரத்தை நான்கு லக்ஷம் ஜபம் செய்து புரச்சரணம் செய்ய, மந்திர ஸித்தி ஏற்படும்.

ஜபஸமர்பணம்

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा॥

குஹ்யாதிகுஹ்யகோப்த்ரீத்வம் க்ருஹாணாஸ்மத்க்ருதம் ஜபம்।
ஸித்திர்பவது மே தேவி த்வத்ப்ரஸாதான்மயி ஸ்திரா॥

# श्री तारा माहात्म्यं

## ஸ்ரீ தாரா தேவியின் பெருமை

இந்தத் தாரா தேவிக்கு ஸமமாக எந்தத் தேவதையும் இல்லை. ஸர்வ ஸித்திகளையும் அளிக்க வல்லவள் தாரா தேவி. ஆகையால் கலியுகத்தில் விரும்பிய பயன்களை அடைய விரும்புபவன் இவளுடைய மஹா மந்த்ரத்தை மிவுகம் ரஹஸ்யமாய் வைத்துக் கொள்ள வேண்டும்.

नैव तारा समा कचित् देवता सर्वसिद्धिदा।
कलौ युगे ततो गोप्या वांछितां सिद्धिमीप्सुना॥
(मन्त्र महोदधिः)

நைவ தாரா ஸமா காசித் தேவதாஸர்வஸித்திதா।
கலௌ யுகே ததோ கோப்யா வாஞ்சிதாம் ஸித்திமீப்ஸுனா॥
(மந்த்ர மஹோததி)

சில ஸமயம் ஸ்ரீ காளீ ஆதியில் ஆவிர்ப்பவிப்பாள். சில ஸமயம் தாரா ஆதியில் ஆவிர்ப்பவிப்பாள். இவளே பார்வதீ. இவளே தேவர்களைக் காக்கவும் அரக்கர்களை அழிக்கவும் ராவண வதம் செய்யவும் ஸ்ரீ ராமரூபிணியாய் புருஷ தேஹம் பெறுகின்றாள். இவளே வைஷ்ணவீ மாயா. இவளே மஹா த்ரிபுர ஸுந்தரீ.

कदाचिदाद्या श्री काली सैव तारास्ति पार्वती।
कदाचिदाद्या श्रीतारा पुंरूपा रामविग्रहा॥
रावणस्य वधार्थाय देवानां स्थापनाय च।
दैत्य संहरणार्थाय रूपं संबिभ्रती परं॥
आद्या तारा महाशक्तिः सैव काली महेश्वरी।
या महावैष्णवी माया सा महासुन्दरी मता॥

கதாசித் ஆத்யா ஸ்ரீ காளீ ஸைவ தாராஸ்தி பார்வதீ।
கதாசித் ஆத்யா ஸ்ரீ தாரா பும்ரூபா ராம விக்ரஹா॥
ராவணஸ்ய வதார்த்தாய தேவானாம் ஸ்தாபனாயச।



தைத்ய ஸம்ஹரணார்த்தாய ரூபம் ஸம்பிப்ரதீ பரம்।
ஆத்யா தாரா மஹாசக்திः ஸைவ காளீ மஹேச்வரீ॥
யா மஹா வைஷ்ணவீ மாயா ஸா மஹாஸுந்தரீ மாதா॥
(श.सं.तन्त्रे)

காளீ கண்டம் 12ம் படலத்தில் இந்தத் தாரையின் பெருமை விரிவாய்ப் பேசப்பட்டுள்ளது: யோகம் என்பது தாரா யோகமே. ஜபம் என்பதும் தாரா ஜபமே. மஹா மந்த்ரம் என்றால் அது தாரா மந்த்ரமே. அதுவே மந்த்ரங்களில் உத்தமமான மந்த்ரம். தாரா தேவியின் மந்த்ரத்தை உபாஸிப்பவனே பாக்யவான். அவனே ஞானி. அவனே வ்ரதசீலன். அவனே தீக்ஷை பெற்றவன். அவனே ஆத்ம ஸ்வரூபம். அவனே அனைத்துத் தேவர்களுக்கும் ப்ரபுவான மஹா தேவனாவான். அவனே சாஸ்த்ரஞன். அவனே ப்ரம்ஹானந்தத்தில் திளைப்பவன்.

அவனை ஈன்றெடுத்த தாயே பாக்யசாலி. அவனுடைய பிதா தெய்வத்திற்கு ஸமமானவன். தாரா ஜபம் செய்து, பூர்ண தீக்ஷை பெற்றவன் ஸாக்ஷாத் தாரா தேவியின் ஸ்வரூபமே ஆவான். அவனே ஸர்வேச்வரன். அவனே எங்கும் செல்லும் வல்லமை படைத்தவன். ஸர்வ மந்த்ரங்களும் அறிந்தவன். அனைத்துத் தந்த்ர சாஸ்திரங்களும் அறிந்தவன். எல்லா சாஸ்திரங்களும் அறிந்தவன்.

श्री शिव उवाचः—
रहस्याति रहस्यंच तारायोग रहस्यकं।
कथ्यते देव देवेशि श्रुणु सावहिता भव॥
तारा योगो योग एव तथा तारा जपो जपः।
तारा मन्त्रो महामन्त्रः सर्वमन्त्रोत्तमोत्तमः॥
सधन्यः सच विज्ञानी सव्रती स च दीक्षितः।
सचात्मा स महादेवः सर्वदेवाधिकः प्रभुः॥
परमात्मा स एवात्र सर्वदेव नमस्कृतः।
स दर्शनी स विज्ञानी ब्रह्मानन्द परायणः।
तस्यैव जननी धन्या पिता तस्य सुरोपमः॥
ताराजापी पूर्ण दीक्षा संयुक्तः तारिणी स्वयं।

सर्वेश्वरः सर्वगश्च सर्वमन्त्र परायणः।
सर्वतन्त्रार्थ वेत्ता च सर्वतन्त्र परायणः ॥

ஸ்ரீ சிவ உவாச:—
ரஹஸ்யாதி ரஹஸ்யம்ச தாராயோக ரஹஸ்யகம்।
கத்யதே தேவதேவேசி ச்ருணு ஸாவஹிதா பவ॥
தாராயோகோ யோகஏவ ததா தாராஜபோ ஜபஃ।
தாராமந்த்ரோ மஹாமந்த்ரஃ ஸர்வமந்த்ரோத்தமோத்தமஃ॥
ஸதன்யஃ ஸ ச விஞ்ஞானீ ஸவ்ரதீ ஸச தீக்ஷிதஃ।
ஸசாத்மா ஸமஹாதேவஃ ஸர்வதேவாதிக ப்ரபுஃ॥
பரமாத்மாஸ ஏவாத்ர ஸர்வதேவ நமஸ்க்ருதஃ।
ஸ தர்சனீ ஸ விஞ்ஞானீ ப்ரம்ஹானந்த பராயணஃ।
தஸ்யைவ ஜனனீ தன்யா பிதா தஸ்ய ஸுரோபமஃ।
தாரா ஜாபீ பூர்ண தீக்ஷா ஸம்யுக்தஃ தாரிணீ ஸ்வயம்॥
ஸர்வேச்வரஃ ஸர்வகச்ச ஸர்வமந்த்ர பராயணஃ।

## ஸ்ரீ காளியும் தாரா தேவியும் வேறல்ல

இத்துடன் ஸ்ரீ முண்டமாலா தந்த்ரம், சிவன் தேவிக்குக் கூறுமிடத்தில் ஸ்ரீ காளியும் தாரையும் வேறானவர் அல்ல என்பது உறுதிப்படுத்தப்படுகின்றது.

या काली परमा विद्या सा तारा परिकीर्तिता।
या तारा परमाविद्या सैव काली प्रकीर्तिता॥
एतयो र्भिन्नभावेन मन्त्राः सिद्धाः भवन्ति न।
उक्तं तु कालिकातन्त्रे ताराकल्पे च तन्मया॥

யா காளீ பரமாவித்யா ஸா தாரா பரிகீர்த்திதா।
யா தாரா பரமாவித்யா ஸைவகாளீ ப்ரகீர்த்திதா॥
ஏதயோர் பின்னபாவேன மந்த்ராஃ ஸித்தா பவந்தி ந॥
உக்தம் து காளிகா தந்த்ரே தாரா கல்பேச தன்மயா॥

ஸ்ரீ காளி வித்யையே ஸ்ரீ தாரா வித்யையாகும். ஸ்ரீ தாரா மஹா வித்யையே ஸ்ரீ காளீ மஹா வித்யை ஆகும். இவர்களைப் பற்றிப் பேத புத்தி ஏற்பட்டால் மந்த்ரங்கள் ஸித்தி அளிக்க மாட்டா. இவ்வாறு காளிகா தந்த்ரத்திலும் தாரா கல்பத்திலும் உனக்குக் கூறியிருக்கிறேன்.



அதனால்தான் தசமஹா வித்யைகளை வரிசைப்படுத்திக் கூறும்போது ஸ்ரீ காளீ வித்யையை முன் கூறி, அதன்பின் இரண்டாவதாக தாரா வித்யை மந்த்ர சாஸ்திரம் உபதேசிக்கிறது.

இந்தத் தாரா மந்த்ரம் அறிந்தவன் தாரா மந்த்ரம், காளி மந்த்ரம் இரண்டுமறிந்த சிவனைவிட மேலானவனாவான் என்பதில் ஸந்தேஹமில்லை. போகத்தையும் மோக்ஷத்தையும் அடைய வேண்டுமானாலும் யசஸ்ஸையம் லக்ஷ்மீயையும் அடைய வேண்டுமானாலும் ஸ்ரீ தாரா மந்த்ரத்தையும் ஸ்ரீ காளீ மந்த்ரத்தையும் விட வேறு மந்த்ரம் கிடையாது.

तारामन्त्रविदो मन्त्री कालीमन्त्रविदस्तथा।
शिवादप्यधिको देवि नात्र कार्यश्च संशयः॥
तारामन्त्रं विना देवि कालिकामन्त्रमेव च।
नाप्नुयात् परमेशानि भोगमोक्षौ यशः श्रियः॥

தாரா மந்த்ரவிதோ மந்த்ரீ காளீ மந்த்ர விதஸ்ததா।
சிவாதப்யதிகோ தேவீ நாத்ர கார்யச்ச ஸம்சயஃ॥
தாரா மந்த்ரம் வினாதேவி காளீகா மந்த்ரமேவச।
நாப்னுயாத் பரமேசானி போகமோக்ஷௌ யசஃ ஸ்ரீயஃ॥

என்று உறுதிப்படுத்துகின்றது மந்த்ர சாஸ்திரம்.

## ஸ்ரீ தாரா தேவீ உபாஸனையின் பயன்

ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம் தாரா வித்யா படலத்தைத் துவக்கும்போது "தாரிணீ (தாரா) மந்த்ரங்கள் ஸர்வ ஸித்திகளையும் அளிப்பவை. அவற்றை அறிந்து கொண்ட உடனேயே ஸாதகன் ஜீவன் முக்தனாகவும் ஆகின்றான். இடைவிடாது பொங்கி வரும் நல்ல கவிதா சக்தியைப் பெறுகின்றான். ஸர்வ சாஸ்திரங்களிலும் பாண்டித்யம் அடைகின்றான். தனம், தான்யம் இவற்றிற்கு அதிபதி ஆகின்றான். அரசாங்கத்திலும் சபையிலும் விவாதத்திலும் வ்யவஹாரத்திலும் அனைத்துக் காரியங்களிலும் வெற்றி பெறுகின்றான். அவன் தேவ குரு பிருஹஸ்பதி பகவானுக்கு ஸமமாகி விடுகின்றான். இந்தத் தாரா தேவீ அனாயாஸமாக வாக் வன்மை அளிக்கின்றாள். தாரக மந்த்ர ஸ்வரூபிணியாய்

இருப்பதாலும் ஸுக மோக்ஷம் அளிப்பதாலும் தாரா என்ற பெயர் பெறுகின்றாள். உக்கிரமான கஷ்டத்தினின்றும் காப்பதால் இவள் உக்ர தாரா எனவும் பெயர் பெறுகின்றாள். இவ்வாறு இவள் பெருமையை விஸ்தாரமாக வர்ணிக்கின்றது தாரா படலம்.

## ஸ்ரீ தாரா தேவியின் ஆவிர்ப்பாவம்

பராசக்தி நித்தியை. அவளுக்கு ஜனனமும் கிடையாது. மரணமும் கிடையாது. ஆதியந்தம் இல்லாதவள் அப்பராசக்தி. ஆயினும், நல்லோரைக் காக்கவும் தீயோரை அழிக்கவும் சில ஸமயங்களில், தேவர் பிரார்த்தனைக்கு இணங்க அவள் ஆவிர்ப்பவிக்கின்றாள்.

देवानां कार्यसिद्ध्यर्थं आविर्भवति सा यदा।
उत्पन्नेति तदा लोके सा नित्याप्यभिधीयने॥
(सप्तशती)

தேவானாம் கார்யஸித்யர்த்தம் ஆவிர்ப்பவதிஸா யதா।
உத்பன்னேதி ததா லோகே ஸா நித்யாப்யபிதீயதே॥

என்று சப்த சதீ மூர்த்தி ரஹஸ்யம் பேசும். அவ்வாறே இந்தத் தாரா தேவியும் ஓர் இரவில் ஆவிர்ப்பவித்தாள். இந்த இரவிற்கு காளராத்ரி என்று பெயர்.

काल रात्रि दिने प्राप्ते निशायां मध्य भागके।
उग्रापत्तरणार्थं तु उग्रतारा स्वयं कला॥

காளராத்ரி தினேப்ராப்தே நிசாயாம் மத்ய பாககே।
உக்ராபத்தரணார்த்தம் து உக்ரதாரா ஸ்வயம் கலா॥

காள ராத்ரி தினத்தில் நடு இரவில் உக்கிரமான ஆபத்தினின்றும் காப்பதற்காக உக்ரதாரா ஆவிர்ப்பவித்தாள் (பிரளய காலத்தில் நான்கு ஸமுத்திரங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து பொங்கி எழ அந்தச் ஸமயத்தில் தேவரைக் காக்க ஆவிர்ப்பவித்தாள் என்பர்).

சாக்த தந்த்ரங்களில் பதினொரு இரவுகள் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு இரவும் ஒவ்வொரு மஹா சக்திக்கு உரிய இரவாகும். அந்தந்த ராத்ரிகளில் அந்தந்த சக்திகளை உபாஸித்து பேறு பெற



வேண்டும். அவையாவன:— காள ராத்ரி, வீர ராத்ரி, மோஹ ராத்ரி, மஹா ராத்ரி, க்ரோத ராத்ரி, கோர ராத்ரி, தாரா ராத்ரி, அபலா ராத்ரி, தாருணா ராத்ரி, சிவ ராத்ரி, திவ்ய ராத்ரி என்பனவாகும். காள ராத்ரியில் தாரா தேவி ஆவிர்ப்பவித்ததாகக் கூறப்பட்டது. காள ராத்ரி என்றால் என்ன?

दीपोत्सवं चतुर्दश्यां अमायाःयोग एव च।
कालरात्रिः महेशानि ताराकाली प्रियंकरी॥

தீபோத்ஸவம் சதர்தச்யாம் அமாயாஃ யோக ஏவ ச।
காள ராத்ரிஃ மஹேசானி தாரா காளீ ப்ரியங்கரீ॥

நரக சதுர்த்தி தீபோத்ஸவம் நடக்கிறது. அந்தத் தினத்தை நாம் தீபாவளி என்று கொண்டாடுகின்றோம். அந்தச் சதுர்த்தசியின் தொடர்பு (ஸம்பந்தம்) அமாவாஸ்யைக்கு இருக்க வேண்டும். அப்படியுள்ள இரவே காள ராத்ரி எனப்படும். இந்தக் காள ராத்ரி ஸ்ரீ காளீ தேவிக்கும், ஸ்ரீ தாரா தேவிக்கும் பிரியமான ராத்ரி ஆகும். அந்தச் ஸமயம் செய்யும் தேவி வழிபாடு, அந்த சக்திகளுக்கு மகிழ்ச்சி அளிக்கும்.

### தாரா ராத்ரி

தாரா தேவியின் உபாஸனைக்குரிய மற்றொரு ராத்ரியும் குறிப்பிடப்படுகின்றது.

अमा भौमसमायुक्ता संक्रमेण समन्विता।
कुलऋक्ष समायुक्ता ग्रहणं यदि चेद्भवेत्॥
तारा रात्रिस्तु सा प्रोक्ता भाग्यादेव तु लभ्यते॥

அமா பௌமஸமாயுக்தா ஸங்க்ரமேண ஸமன்விதா।
குலருக்ஷ ஸமாயுக்தா க்ரஹணம் யதிசேத் பவேத்॥
தாரா ராத்ரிஸ்து ஸா ப்ரோக்தா பாக்யாதேவ து லப்யதே॥

செவ்வாய்க் கிழமை அமாவாசை வர, அன்று க்ரஹணமும் நேர குல நக்ஷத்ரமும் சேர நேர்ந்தால் அந்த ராத்ரி தாரா ராத்ரியாகும். அவ்வாறான புண்ணிய காலம் ஏற்படுவது துர்லபமே ஆகும். அப்படியொரு தினம் ஏற்பட்டு விட்டால் அது தாரா உபாஸகர்கள்

செய்த பாக்யமேயாகும் (அந்தந்த மஹா வித்தைகளைப் பற்றி எழுதும்போது அவர்களுக்குரிய ராத்ரீ பற்றிய விளக்கத்தைக் காணலாம்).

## ஸ்ரீ தாரா தேவியின் புருஷ ரூபமே ஸ்ரீ ராமர்

சக்தி சிவ ஸம்யோகமே ஸ்ரீ ராமநாமா என்று விரிவாய்ப் பேசுகின்றது சாக்த தந்த்ரம். அதை இங்கே காண்போம்.

சில ஸமயம் ஆதியில் காளியின் ஆவிர்ப்பாவம் என்றும், சில ஸமயம் ஆதியில் தாரையின் ஆவிர்ப்பாவம் என்றும் அவளே பார்வதீ என்றும் முன்பு கூறினோம். அப்படி ஆதியாய் ஆவிர்ப்பவித்த தாரா தேவியே ராவண வதத்திற்காக புருஷ ரூபம் பெற்று ஸ்ரீ ராமராய் ஆவிர்ப்பவித்தாள்.

அப்படித் தாரா தேவீ ஸ்ரீ ராமராய் அவதரித்த காலம் பற்றி சாக்த தந்த்ரம் குறிப்பிடுகின்றது.

कदाचिदाद्या श्री तारा पुंरूपा रामविग्रहा।

கதாசிதாத்யா ஸ்ரீ தாரா பும்ரூபா ராமவிக்ரஹா।

என்று.

किंत्वा मन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः।
राम जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहं॥

கிம்த்வாமன்யத வைதேஹ: பிதாமே மிதிலாதிப:।
ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்॥

காட்டிற்கு அழைத்துச் செல்ல விருப்பம் தெரிவிக்காத ஸ்ரீ ராமரிடம் ஸீதை கூறுகின்றாள். நீ ஸ்த்ரீ-புருஷ ரூபம் கொண்டிருக்கின்றாய் என்பது இதன் கருத்தாகும். இந்த "ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்" என்ற தொடர் சாக்தர்களின் சிந்தனைக்கு உரியதாகும்.

இதற்கு ஒத்ததாக மற்றொரு இடத்தில் வால்மீகி மஹர்ஷியின் ராமாயண சுலோகமும் அமைந்திருப்பதைச் சாக்தர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும்.



तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहं।
बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे॥

தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் சுகாவஹம்।
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே॥

கரன் தூஷணன் த்ரிசிரஸ் முதலிய 14 ஆயிரம் அரக்கர்களை அழித்து வெற்றியுடன் நிற்கும் ஸ்ரீ ராமரைக் கண்டு பெரு மகிழ்ச்சியுற்ற ஸீதா பிராட்டி, ஓடோடியும் வந்து ஆலிங்கனம் (கட்டித் தழுவுதல்) செய்து கொண்டாள் என்பது இந்தச் சுலோகத்தின் வெளிப்படையான கருத்தாகும். ஆயினும் இங்கு ஒரு அவதார ரஹஸ்யம் உள்ளுரையாக த்வனிப்பதைக் காண முடிகின்றது.

இலங்கை அரசன் ராவணன் பிரம்மாவிடமிருந்து வரங்கள் பல பெற்று அஹங்காரம் அடைகிறான். மதமத்தனாய் கண்ணுதற் கடவுள் வாஸம் செய்யும் கைலையங்கிரியைப் பெயர்த்தெடுக்க முயற்சிக்கின்றான். அதனால் நிலைகுலைந்த உமையம்மை பயந்து ஓடோடியும் வந்து பரமனை மார்புறத் தழுவிக் கட்டிக் கொள்ளுகிறாள். இதனால் மகிழ்ந்த பரமன் ராவணனிடம் கோபம் காட்டாதிருக்கின்றான். அதனால் வேதனையுற்ற பார்வதி, பயந்து "தங்களை நான் தழுவ, ஏன் என் பயத்திற்குக் காரணமான ராவணனிடம் கோபம் கொள்ளவில்லை?" எனக் கேட்கின்றாள். அப்போது பகவான், தேவீ பெண் தானாக வந்து ஆலிங்கனம் செய்து கொள்வது ஒரு புருஷனுக்கு அளவு கடந்த மகிழ்ச்சியை உண்டாக்கும். அந்த ஸுகானுபவம் சொல்லுதற்கரியது எனக் கூறுகின்றார். அவ்வாறான ஸுகத்தை நான் பெற வேண்டும் எனப் பார்வதீ விரும்ப, தேவீ இந்த ராவணனை வதம் செய்ய ஸ்ரீ ராமராய் நீ அவதாரம் செய். நான் சீதையாய் அவதரிக்கின்றேன். அப்போது நான் கரவதத்தின்போது உன்னை வந்து ஆலிங்கனம் செய்து கொள்வேன். அங்கு அந்த ஸுகத்தை நீ பெற முடியும் என்றார். ஆகவே ஸீதையாக அவதாரம் செய்த சிவன் உமையின் அவதாரமான ராமரை ஆலிங்கனம் செய்து கொண்டு மகிழ்ந்தாள் என்று புராணாந்தரங்கள் குறிப்பிடும். அதையும் இங்கே மனதில் கொள்ளலாம்.

## ராமாவதார காலம்

இவள் ராமராய் அவதரித்தக் காலத்தையும் சாக்த தந்த்ரம் குறிப்பிடுகின்றது.

त्रेतायां तारणे देवि वत्सरे मधुसंयुते।
तस्य शुक्लाच नवमी इन्दुवारे पुनर्वसौ॥
शुक्र योगे च मध्याह्ने दिवा रामो महेश्वरि।
रावणस्य वधार्थाय ह्यवतीर्णो हरिस्स्वयं॥

த்ரேதாயாம் தாரணே தேவி வத்ஸரே மது ஸம்யுதே।
தஸ்ய சுக்லாச நவமீ இந்து வாரே புனர்வஸௌ॥
சுக்ர யோகேச மத்யான்ஹே திவா ராமோ மஹேச்வரீ।
ராவண்ணஸ்ய வதார்த்தாய ஹ்யவதீர்ணோ ஹரிঃ ஸ்வய்ம்॥

த்ரேதா யுகத்தில் தாரண வர்ஷத்தில் சித்திரை மாதத்தில் திங்கள் கிழமை பகல் மத்யான்ஹ வேளையில் நவமீ திதியில் புனர்வஸு நக்ஷத்ரத்தில் சுக்ர யோகத்தில் ஹரி ஸ்வரூபியான ராமராக ஸ்ரீ தாரா தேவி அவதாரம் செய்தாள்.

## ''ராம'' என்பதன் பொருள்

ரா என்பதற்குச் சக்தி என்பது பொருள். மঃ என்பதற்குச் சிவன் என்று பொருள். சிவசக்தி ரூபமான பரப்ரம்ஹமே ஸ்ரீ ராமர் என்ற பெயர் பெறுகின்றது.

யோகாஸனத்தில் அமர்ந்து ஜடாமண்டலதாரியாக விபூதி அணிந்தவராக, முக்கண் கொண்டு சந்த்ர சேகரனாக, நான்கு புஜமுடையவராக (அல்லது இரண்டு கைகள் உடையவராக) ஸர்பாபரணதாரியாய், புலித் தோல் அணிந்து, ஸகளமாகவும், நிஷ்களமாகவும் ஒளியின் (தேஜஸ்ஸின்) குவியலாய் இருப்பார் அவர். தேஜஸ் ஸ்வரூபிணீ ஸ்ரீ ஸீதாதேவி. இவளே கௌரீ. இவளே மஹா ஸாம்ராஜ்யநாயிகா. ஆகவே ஸ்ரீ ராமர் ஸாக்ஷாத் பரமசிவன். மனுஷ்யனாகக் கொள்ளக் கூடாது. ஆக ''ராம'' என்ற இரண்டு அக்ஷரம் பரிசுத்தமான ஸாக்ஷாத் பரப்ரம்ஹமே என்று உறுதிபடப் பேசுகின்றது சாக்த தந்த்ரம்.

राशक्तिरिति विख्याता मः शिवः परिकीर्तितः।
शिवशक्त्यात्मकं ब्रह्म राम रामेति गीयते॥



योगासन समारूढं जटापटलमण्डितं।
विभूति भूषितं देवं त्रिनेत्रं चन्द्रशेखरं।
चतुर्भुजंवा द्विभुजं सकलं निष्कलं च वा॥
सर्पैर्विभूषितं देवं व्याघ्रांबर विभूषितं।
तेजःपुंजनिभं ....................
....... देवि सीतां तेजः स्वरूपिणीम्॥
गौरीरूपां परां सीतां महासांराज्य नायिकां।
रामः परशिवो ज्ञेयः नावतारो नरोपि न।
यत्परं ब्रह्म विख्यातं तद्रामेत्यक्षरद्वयम्॥

ராசக்திரிதி விக்யாதா மঃசிவঃ பரிகீர்த்திதঃ।
சிவசக்த்யாத்மகம் ப்ரம்ஹ ராம ராமேதி கீயதே।
யோகாஸன ஸமாரூடம் ஜடாபடல மண்டிதம்।
விபூதிபூஷிதம் தேவம் த்ரிநேத்ரம் சந்த்ரசேகரம்॥
சதுர்புஜம் வாத்விபுஜம் ஸகளம் நிஷ்களம்ச வா।
ஸர்பைர்விபூஷிதம் தேவம் வ்யாக்ராம்பரவிபூஷிதம்।
தேஜঃ புஞ்ஜநிபம் ..............................
......... தேவி ஸீதாம் தேஜஸ் ஸ்வரூபிணீம்।
கௌரீ ரூபாம் பராம் ஸீதாம் மஹாஸாம்ராஜ்ய நாயிகாம்।
ராமঃ பரசிவோ ஜ்ஞேயঃ நாவதாரோ நரோபின।
யத்பரம் ப்ரஹ்மவிக்யாதம் தத் ராமேத்யக்ஷர த்வயம்॥

## சிவராமன்

தேவி சிவனைக் கேட்டாள். எப்படி சிவனும் ராமனும் ஒன்றாவார்? என்று. அப்போது சிவன் கூறினார்.

முன்னொரு ஸமயம் ருத்ரன் விஷ்ணு ஸ்வரூபம் பெறவும் விஷ்ணு சிவ ஸ்வரூபம் பெறவும் தவம் செய்தனர். இதன் பயனாகவே ஹரிஹரர்கள் அர்த்த நாரீச்வர ஸ்வரூபமானார்கள். இந்த இரண்டு சேர்ந்த ஒளிக் குவியலே பரம்ப்ரம்ஹம். அதில் சிவன் ராமரானார். விஷ்ணு ஸௌந்தரீ ரூபமானார். ஆக லக்ஷ்மீபதி பார்வதீபதியும் பார்வதீபதி லக்ஷ்மீபதியும் ஆனார்கள். ஸீதை கௌரீ ஆனாள். லக்ஷ்மீ ஹர ஸௌந்தரி னாள். ஆக சிவனே ராமர். அதாவது சிவராமனானார். இந்தச்

சிவராமாத்மகமான ஞானம் பிரம்மஞானமாகும். சிவன் வேறு, ராமன் வேறு என்று பேத புத்தி கொள்ளக் கூடாது. அப்படி நினைப்பவன் மூடன் என்கிறது சாக்தம்.

यो रामः स शिवः प्रोक्तः यः शिवः स हि रामतां।
उभयोरन्तरं देवि यः पश्यति स मूढधीः ॥
तस्य नाशो भवत्येव नात्र कार्या विचारणा।

யோ ராமः ஸசிவः ப்ரோக்தः யः சிவः ஸஹிராமதாம்।
உபயோரந்தரம் தேவி யः பச்யதி ஸ மூடதீः॥
தஸ்ய நாசோ பவத்யேவ நாத்ர கார்யா விசாரணா॥

ஆகவே ராமரே சிவன். சிவனே ராமர் என்பது தெளிவாகின்றது. வால்மீகி ராமாயணத்திலும் ராமருக்குச் சிவனை உவமையாக்கி இக் கருத்தைச் சுட்டிக் காட்டி உள்ளார்.

कृताभिषेकः स रराज रामः सिताद्वितीयः सह लक्ष्मणेन।
कृताभिषेको गिरिराजपुत्र्या रुद्रस्सनन्दी भगवानिवैषः ॥

க்ருதாபிஷேகः ஸ ரராஜ ராமः ஸிதாத்விதீயः ஸஹ லக்ஷ்மணேந।
க்ருதாபிஷேகோ கிரிராஜபுத்ரியா ருத்ரஸ்ஸநந்தீ பகவாநிவைஷः॥

இங்குக் கம்ப ராமாயணத்தின் சிலேடைச் செய்யுள் சாக்தர்களின் கவனத்திற்குரியதாகின்றது.

வெங்கண் நாகக் கரத்தினன், வெண்ணிறக்
கங்கை வார்சடைக் கற்றையன், கற்புடைக்
மங்கை காண நின்றாடுகின்றான் வகிர்த்
திங்கள் கூடிய செல்வனில் தோன்றினான்.

தாரா என்ற சொல்லினின்றும் எழுந்ததே ஸீதாராம் என்ற பெயர். முதல் எழுத்தையும் கடை எழுத்தையும் அகற்றினால் இடையில் உள்ள இரண்டெழுத்தே தாரா என்ற சக்தியின் மங்கள நாமாவாகும். இத்துடன் ஹர சப்தத்தின் கடை எழுத்தையும் உமா சப்தத்தின் கடை எழுத்தையும் சேர்த்தே ராம என்ற சொல் எழுந்ததென்று சைவர் கர்ண பரம்பரையாய்க் கூறுவதும் இங்கு நினைத்தற்குரியது.



## உக்ர தாராவின் ஆவிர்ப்பாவம் பற்றிய வரலாறு

உலகம் மஹா ப்ரளயத்தில் அழிந்த பின் ஸ்ருஷ்டிக்கும் முன்பு நான்கு கரங்களிலும் சங்கம், சக்ரம், கதா, பத்மம் தரித்து விஷ்ணு ஆவிர்ப்பவித்தார். அவருடைய நாபி கமலத்தினின்று சதுர்முகப் பிரம்மாவும் ஆவிர்ப்பவித்தார். அதே சமயம் பிரம்மாவின் நெற்றிக் கண்ணிலிருந்து ருத்ரர் ஆவிர்ப்பவித்தார். அப்போது பிரம்மா, விஷ்ணுவை நோக்கி, ''ஐயனே! எந்த வித்யையை உபாஸித்தால் நான்கு வேதங்களையும் அறிந்து ஓத முடியும்?'' என்றுகேட்டார். பிரம்மாவின் வார்த்தையைக் கேட்டு ருத்ரர், ''நீர் மஹாநீல ஸரஸ்வதியை (தாரா) உபாஸித்து அவள் அருளால் சதுர் வேதங்களையும் அடைய முடியும்'' என்று கூறினார். அவ்வாறே உக்ர தாராவை உபாஸித்து நான்கு வேதங்களையும் பெற்றார்.

மேரு மலையின் மேற்குச் சிகரத்தில் ''சோளம்'' (चोलं) என்ற பெயர் கொண்ட ஒரு மடு இருக்கின்றது. அங்குதான் வேத மாதாவான நீல நிறத்தினளான (நீல ஸரஸ்வதி) உக்ர தாரா உதயமானாள். மடுவின் ஜலத்தில் ஓங்காரத்தின் மீது டாங்காரம் எழ, அதன் மீது ஹூங்காரம் என்ற கூர்ச்ச பீஜ ஸ்வரூபிணியாய் முன்புறமாய் இடது காலையும், பின்புறமாய் வலது காலையும் ஊன்றி, ஞான ஒளியாய் மஹா கலா ஸ்வரூபிணியாய், கத்தி, கத்தரி, கபாலம், நீலோத்பலம் தாங்கிய நான்கு கரத்தினளாய் தியான சுலோகத்தில் கூறியவாறு மஹோக்ர தாரா ஆவிர்ப்பவித்தாள். உடன் தாரா தேவி மேருவின் மேற்குப் புறத்திலுள்ள மடுவில் இறங்கினாள். உடன் நீல நிறம் பெற்றாள். அதனால் தாரா தேவியையே நீல ஸரஸ்வதி என்று அழைக்கின்றனர்.

## அக்ஷோப்யர் ரிஷி

இந்தச் சோள ஹ்ரதத்தின் உத்தர (வடக்கு) பாகத்தில் அக்ஷோப்யர் என்ற ஒரு ரிஷி இருந்தார். அவர் சிவ ஸ்வரூபி. அவர் மூன்று யுகங்கள் தவம் செய்து கொண்டிருந்தார். அவர் சீன தேசத்தில் நாடு நிறைந்த வெள்ளப் பெருக்கால் உண்டான ஸங்கடத்தைப் போக்க தாரா ஜபம் செய்தார். அவள் மக்களை ஆபத்திலிருந்து தாரணம் செய்தாள். அதனால் உக்ரதாரா என்ற பெயர் பெற்றாள். இந்தத் தாரா மந்த்ரத்தை முதலில்

ஜபம் செய்தவர் அக்ஷோப்யர். அதனால் தாரா மந்த்ரத்திற்கு அவரே ரிஷி. மந்த்ரஜபம் செய்யும்போது "ருஷயே நமः" என்று கூறி நம் தலையைத் தொடுவது வழக்கம். ஆனால், இந்த அக்ஷோப்ய ரிஷி தாரா தேவியின் சிரத்தில் ஸர்ப ரூபியாய் அமர்ந்திருக்கின்றார். சிவ ஸ்வரூபி அல்லவா இந்த ரிஷி. இந்த அக்ஷோப்யருக்கு தாரா சக்தி ப்ரக்ருதியாவாள்.

## மற்றைய பெயர்கள்

மந்த்ர சாஸ்த்ரம் இவளை (தச மஹா வித்யையின்) ஸ்ரீ தாரா எனக் கூறும். ஜைனர் இந்தத் தேவியை ப்ரபாவதி அல்லது. பத்மாவதி என்று கூறுவர். பௌத்தர்கள் தாரா என்ற பெயரினாலேயே வழிபடுவர். கௌலர்கள் சக்ரா எனவும், சீனர்கள் மஹோக்ரா எனவும், காதி மதத்தினர் காளீ எனவும், ஹாதி மதத்தினர் ஸ்ரீ ஸுந்தரீ எனவும், காதி ஹாதி மதத்தினர் மஹேச்வரீ என்றும் கூறுகின்றனர்.

हंस तारा महाविद्या योगपट्टेश्वरी मता।
जैनाः प्रभावतीं प्राहुः शाक्ताः शक्तिं समूचिरे।
बौद्धास्तारां च संप्राहुः काद्याः कालीं समूचिरे।
हाद्याः श्री सुन्दरीं प्राहुः कादिहादि महेश्वरी॥

ஹம்ஸ தாரா மஹா வித்யா யோகபட்டேச்வரீ மதா।
ஜைனாः ப்ரபாவதீம் ப்ராஹுः சாக்தாः சக்திம்ஸமூசிரே॥
பௌத்தாः தாராம் ச ஸம்ப்ராஹுः காத்யாः காளீம் ஸமூசிரே।
ஹாத்யாः ஸ்ரீ ஸுந்தரீம்ப்ராஹுः காதிஹாதி மஹேச்வரீ॥

காயத்ரியை உபாஸிக்கும் அனைவரும் சாக்தரே. அந்தக் காயத்ரியோ வேதமாதா. அவளே காளீ. அவளே தாரிணீ (தாரா). அவளே அன்பின் இருப்பிடமான ஸ்ரீ சின்னமஸ்தா தேவீ. இந்தச் சின்னமஸ்தா தேவியை உபாஸித்தே விசுவாமித்திர மஹர்ஷி ப்ரம்ஹண்யம் பெற்றார் என்று தெரிகின்றது.

गायत्रीं जपमानास्ते सर्वे शाक्ताः द्विजातयः।
गायत्री वेदमाता या सैव काली च तारिणी॥
छिन्ना प्रेमास्पदा सैव विश्वामित्र प्रसाधिता॥



காயத்ரீம் ஜபமாநாஸ்தே ஸர்வே சாக்தாः த்விஜாதயः।
காயத்ரீ வேதமாதா யா ஸைவ காலீ ச தாரிணி।
சின்னா ப்ரேமாஸ்பதா ஸைவ விச்வாமித்ர ப்ரஸாதிதா॥

## மஹர்ஷி வஸிஷ்டர் தாரோபாஸகர்

தாரா தந்த்ரத்தில் ருத்ர யாமளத்தில் கீழ்க்கண்ட வரலாறு பேசப்பட்டிருக்கின்றது. ப்ரம்ம யாமளத்திலும் உள்ளது. இரண்டின் கருத்தையும் இங்கே காணலாம்.

பிரம்ம புத்திரராகிய வஸிஷ்டர் காமாக்யா என்ற யோனி பீடத்தில் அமர்ந்து 6000 வருடங்கள் தவம் இயற்றினார். ஆயினும் தாரா தேவி, பூமியில் வந்து வஸிஷ்டருக்குத் தரிசனம் தரவில்லை. உடன் வஸிஷ்டர் தந்தையிடம் சென்று விபரம் கூறி, வேறு மந்திரம் உபதேசிக்குமாறு கூறினார். இல்லையானால் சபித்து விடுவேன் என்றார். அப்போது பிரம்மா, "புத்திரா! அந்தத் தேவி மஹா சக்தி. ஸர்வ ஸங்கடங்களையும் போக்குவாள். கோடி ஸூர்யனின் ஒளியைக் கொண்டவள். நீல நிறத்தினள். கோடி சந்திரன் போன்ற தண்மையை உடையவள். அசையாத கோடி மின்னல் கொடி போன்றவள். எல்லாம் அவளே. அவளே அனைத்திற்கும் முதல். அவள் தர்மா தர்மங்களுக்கு அப்பாற்பட்டவள். சுத்தமான சீனா சாரத்தில் விருப்பமுடையவள். சக்தி சக்ரத்தையே இயக்குபவள். அனந்தமான பெருமை உடையவள். ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரை சேர்ப்பவள். புத்தர் வழிபடும் ஈச்வரீ. புத்தி ஸ்வரூபிணி. அதர்வண சாகையில் கூறப்படுபவள். அவளே லோக பாலர்களைக் காக்கின்றாள். இந்த ஸ்தாவர ஜங்கமமான ப்ரபஞ்சம் அவளுடைய ஸ்ருஷ்டி. மகிழ்ச்சியுடன் அவளை அடைவாயாக. எவ்வாறு சாபம் செய்யத் துணிந்தாய். ஒன்றிய மனத்துடன் கருணாநிதியான அவளை வழிபடு. அவளுடைய தரிசனம் பெறுவாய்" என்று கூறி அனுப்பினார்.

सा देवी परमा शक्तिः सर्व संकट तारिणी।
कोटिसूर्य प्रभा नीला चन्द्रकोटिसुशीतला॥
स्थिरविद्युल्लता कोटि सदृशी कालकामिनी।
सर्व स्वरूपा सर्वाद्या धर्माधर्म विवर्जिता॥

शुद्ध चीनाचाररता शक्ति चक्र प्रवर्तिका।
अनन्तानन्तमहिमा संसारार्णव तारिणी॥
बुद्धेश्वरी बुद्धरूपा अथर्ववेद शाखिनी।
सा पाति जगतां पालान् तस्याः कर्म चराचरं॥
भज पुत्र स्थिरानन्दः कथं शम्भुं सनुद्यतः।
एकाग्रचेतसा नित्यं भज पुत्र दयानिधिं।
तस्याः दर्शनमेवं हि अवश्यं समवाप्स्यसि॥

ஸா தேவீ பரமாசக்திः ஸர்வஸங்கடதாரிணீ।
கோடிஸூர்ய ப்ரபா நீலா சந்த்ரகோடி ஸுசீதளா॥
ஸ்திரவித்யுல்லதா கோடி ஸத்ருசீ கால காமினீ।
ஸர்வஸ்வரூபா ஸர்வாத்யா தர்மா தர்ம விவர்ஜிதா॥
சுத்தசீனாசா ரதா சக்தி சக்ர ப்ரவர்த்திகா।
அனந்தானந்த மஹிமா ஸம்ஸாரார்ணவ தாரிணீ॥
புத்தேச்வரீ புத்தரூபா அதர்வவேத சாகினி।
ஸா பாதி ஜகதாம் பாலான் தஸ்யாः கர்ம சராசரம்।
பஜபுத்ர ஸ்திரா நந்தः கதம் சம்பும் ஸ முத்யதः।
ஏகாக்ரசேதஸா நித்யம் பஜ புத்ர தயாநிதிம்।
தஸ்யாः தர்சனமேவம்ஹி அவச்யம் ஸமவாப்ஸ்யஸி॥

உடன் வஸிஷ்டர் கடற்கரை சென்று ஆயிரம் ஆண்டுகள் யோக மார்க்கத்தை அனுசரித்துத் தவம் செய்தார். பராசக்தி ப்ரத்யக்ஷமாகவில்லை. உடன் மந்திரத்திற்குச் சாபமிட்டு விட்டார் வஸிஷ்டர்.

உடன் தேவீ ப்ரஸன்னமானாள். மஹர்ஷே காரணமின்றி சாபமிட்டு விட்டீர். என் பூஜா விதானத்தை நீர் தெரிந்து கொள்ளவில்லை. யோகாப்யாஸ மாத்திரத்தினால் என் சரணாரவிந்த தர்சனம் கிடைத்து விடாது. என் மந்த்ரோபாஸனம் புண்ணியமானது. வேதங்களும் அறியாதது. பௌத்த தேசமான மஹா சீன தேசம் செல்லும். அங்கு புத்த ரூபியாய் அமர்ந்திருக்கும் பகவான் விஷ்ணுவின் உபதேசப்படி என்னை வழிபடும் அந்த வழிபாட்டின் காரணமாக சரணாரவிந்த தரிசனம் பெற்று மஹா ஸித்தராவீர் எனக் கூறி மறைந்து விட்டாள்.



ममैव साधनं पुण्यं वेदानामप्यगोचरं।
बौद्ध देशेऽथर्ववेदे महाचीने सदा व्रज।
तत्र गत्वा महाभाव विलोक्य मत्पदांबुजे।
मत्कुलज्ञो महर्षेत्वं महासिद्धो भविष्यसि॥

மமைவ ஸாதனம் புண்யம் வேதானாமப்யகோசரம்।
பௌத்ததேசே(அ)தர்வவேதே மஹாசீனேஸதா வ்ரஜ॥
தத்ர கத்வா மஹாபாவ விலோக்ய மத்பதாம்புஜே।
மத்குலஞ்ஞோ மஹர்ஷேத்வம் மஹாஸித்தோ பவிஷ்யஸி॥

வஸிஷ்டர் சீன தேசம் சென்றார். அங்கு புத்த ரூபியான பகவான் ஜனார்த்தனரைக் கண்டு நமஸ்கரித்து விபரத்தைக் கூறி வேண்டினார். வேத மார்க்கத்தை விட்டு வேதம் விலக்கிய மார்க்கத்தைக் கடைப்பிடித்து (வாமாசாரத்தை) எப்படி நான் தேவியை வழிபடுவேன். அனுக்ரஹிக்க வேண்டும் என்றார்.

*சீனாசாரம்:* கை, கால்களை ஜலத்தினால் கழுவிக் கொண்டு முகத்தையும் ஜலத்தினால் சுத்தப்படுத்திக் கொள்வது ஸ்னானம். மண்டியிட்டு, சிரத்தால் பூமியைத் தொட்டு நமஸ்கரிப்பதும் நமஸ்காரமாகும். இது போன்றவை மஹாசீனாசாரமாகும்.

பகவன் விஷ்ணுரூபியான புத்தர் வஸிஷ்டரே! யோகத்தால் சித்த சுத்தி செய்து கொண்டு காம க்ரோதாதிகளுக்கு இடம் அளிக்காமல் வாமாசாரப்படி உபாஸனை செய்யும். இந்த மார்க்கத்தைக் கடைப்பிடித்து, அவள் அருளால் பிரம்மா ஸ்ருஷ்டி செய்கின்றார். விஷ்ணு பாலனம் செய்கின்றார். அத்துடன் யஜுர் வேதத்திற்கும் அதிபதியாய் இருக்கின்றார். ஹரன் ஸம்ஹாரம் செய்கின்றார். ஒரு மாதம் உபாஸிக்க ஆகர்ஷண ஸித்தி ஏற்படும். இரண்டு மாதம் உபாஸிக்க பிரஹஸ்பதியாகவே ஆகி விடுவான். மூன்று மாதத்தில் தேவர்களுக்குப் பிடித்தவனாகின்றான். நான்கு மாதங்களில் திக்பதிகள் பார்வைக்கு இலக்காகின்றான். ஐந்தில் காமவேளாகின்றான். ஆறில் ஸாக்ஷாத் ருத்ரனாகவே ஆகி விடுகிறான். ஆகவே நீரும் சீனாசாரத்துடன் அவளை உபாஸனை செய்யும் எனக் கூறி சீனாசாரங்களையும் உபதேசித்தார். அவ்வாறே அங்கமர்ந்து உபாஸித்து ஸ்ரீ தாரா தேவியின் அருள் பெற்று ஸித்திகளுக்கு ஈச்வரனாய் ஆகி நக்ஷத்ர லோகம் சென்று என்றும் நிலைத்திருக்கின்றார்.

चिद्रूपां ज्ञाननिलयां चैतन्यानन्दविग्रहां।
कोटि सौदामिनीभासां सर्वतत्व स्वरूपिणीं॥
आश्रित्य प्रजपेन्मत्रं कुलमार्गाश्रयो नरः।
कुलमार्गतपरं मार्गं को जानाति जगत्रये।
एतन्मार्गप्रसादेन ब्रह्मा स्रष्टा स्वयं महानू।
विष्णुश्च पालने शक्तः निर्मलः सत्वरूप धृक्।
सर्वसेव्यो महापूज्यः यजुर्वेदाधिपोऽभवत्॥
हरः संहारकर्ताच वीरेशोत्तम मानसः।
मासेनाकर्षणं सिद्धिः द्विमासे वाक्पतिर्भवेत्॥
मासत्रयेण संयोगे जायते सुरवल्लभः।
एवं चतुष्टये मसि भवेद्दिक्पाल गोचरः॥
पंचमे पंचबाणःस्यात् षष्ठे रुद्रो भवेत्स्वयं॥
एनां वसिष्टोप्याराध्य नक्षत्रलोक मागतः।
योगसिद्धीश्वरो भूत्वा द्योततेऽद्यापि वल्लभे॥

சித்ரூபாம் ஞானநிலயாம் சைதன்யானந்த விக்ரஹாம்।
கோடிஸௌதாமினீபாஸாம் ஸர்வதத்வஸ்வரூபிணீம்॥
ஆச்ரித்ய ப்ரஜபேன்மந்த்ரம் குலமார்காச்ரயோ நரஃ।
குலமார்காத்பரம் மார்கம் கோ ஜானாதி ஜாத்ரயே॥
ஏதன்மார்க ப்ரஸாதேன ப்ரம்ஹா ஸ்ரஷ்டா ஸ்வயம் மஹான்।
விஷ்ணுச்ச பாலனே சக்தஃ நிர்மலஃ ஸத்வரூபத்ருக்॥
ஸர்வஸேவ்வோ மஹாபூஜ்யஃ யஜுர்வேதாதியோ(அ)பவத்।
ஹரஃ ஸம்ஹாரகர்த்தாச வீரேசோத்தம மானஸஃ॥
மாஸேனாகர்ஷணம் ஸித்திஃத்விர்மாஸே வாக்பதிர் பவேத்॥
மாஸத்ரயேண ஸம்யோகே ஜாயதே ஸுரவல்லபஃ।
ஏவம் சதுஷ்டயேமாஸி பவேத் திக்பாலகோசரஃ॥
பஞ்சமே பஞ்சபாணஃ ஸ்யாத் ஷஷ்டேருத்ரோ பவேத் ஸ்வயம்॥
ஏனாம் வஸிஷ்டோப்யாராத்ய நக்ஷரலோக மாகதஃ।
யோகஸித்தீச்வரோபூத்வா த்யோததேத்யாபி வல்லபே॥



## வஸிஷ்டர் உபாஸித்த மந்த்ரம்

முதலில் வசிஷ்டர் உபாஸனை செய்த மந்த்ரம் "ஓம் ஹ்ரீம் த்ரீம் ஹூம் பட்" "ॐ ह्रीं त्रीं हूं फट्" என்ற பஞ்சாக்ஷர மந்த்ரமாகும். இந்த மந்த்ரத்திற்கே சாபமிட்டார் வஸிஷ்டர். பின் சாப மோக்ஷமும் கூறினார். கிருஷ்ணாவதாரம் ஆனவுடன் மந்த்ரம் சாபத்தினின்றும் முக்தி பெறும் என்று வஸிஷ்டர் சாப மோக்ஷம் கூறினார். பின் அவர் உபாஸித்த மந்த்ரம் ஓம் ஹ்ரீம் ஸ்த்ரீம் ஹூம் பட் (ॐ ह्रीं स्त्रीं हूं फट्) என்பதாகும். அதன் பிறகு இந்த வித்யை புகழ் பெற்று அனைத்து வித்யைகளுக்கும் பலனளிப்பதால் வெற்றியை விரும்புபவருக்கு வெற்றி அளிப்பதாய் விஷத்தைப் போக்குவதாய் அமிர்தத்தவம் அளிப்பதாய் ஆயிற்று. இந்த மந்த்ரத்தைத் தெரிந்து கொள்ளுவதாலேயே வெற்றி கிடைக்கும் என்று ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம் கூறுகின்றது.

## 8 तारा भेदाः
### எட்டு தாரா பேதங்கள்

தாரா, உக்ர தாரா, மஹோக்ர தாரா, வஜ்ரா தாரா, காளீ தாரா, ஸரஸ்வதி தாரா, காமேச்வரீ தாரா, சாமுண்டா (பத்ரகாளீ), தாரா என எட்டு பேதங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவர்களுக்கான எட்டு மந்திரங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றை மந்த்ர சாஸ்த்ரங்களில் இருந்து அறிந்து கொள்ளலாம். மற்றும் தாரா ஏக ஜடா நீல ஸரஸ்வதீ என்றும் மூன்றாகவும் பேசப்படுகின்றாள். மந்த்ரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை மந்த்ர சாஸ்திரங்களில் காண்க.

## இவள் ரஹஸ்ய நாமாக்கள் 30 ஆகும்

பைரவீ தந்த்ரத்தில் தாரா ஹ்ருதயத்தில் மிக ரஹஸ்ய நாமாக்கள் 30 கொடுக்கப்பட்டுள்ளன. இந்த நாமாக்களை ஜபம் செய்பவனுக்கு ஹரன் கிங்கரனாகிறேன் (வேலையாளாகிறேன்) எனக் கூறியுள்ளார். அவ்வளவு சக்தி மிக்க நாமாக்கள் இவை.

तारिणी तत्वनिष्ठानां सर्वतत्व प्रकाशिका।
रामाभिन्ना पराशक्तिः शत्रु नाशं करोतु मे॥

श्रुणु देवि तव स्नेहात् तारानामानि तत्वतः ।
वर्णयिष्यामि गुप्तानि दुर्लभानि जगत्रये ॥
तारिणी तरला तारा त्रिरूपा तरणिप्रभा ।
सत्वरूपा महासाध्वी सर्वसज्जनपालिका ॥
रमणीया रजोरूपा जगत्सृष्टिकरी परा ।
तमोरूपा महामाया घोररूपा भयानका ॥
कालरूपा कालिकाख्या जगद्विध्वंसकारिका ।
तत्वज्ञानपरानन्दा तत्वज्ञान प्रदाऽनघा ॥
रक्तांगी रक्तवस्त्रा च रक्तमाला प्रशोभिता ।
सिद्धलक्ष्मीश्च ब्रह्माणी भद्रकाली महालया ॥
नामान्येतानि ये मर्त्याः सर्वदैकाग्रमानसाः ।
प्रपठन्ति प्रिये तेषां किंकरत्वं करोम्यहं ॥

தாரிணீ தத்வநிஷ்டாநாம் ஸர்வதத்வ ப்ரகாசிகா ।
ராமாபின்னா பராசக்திః சத்ருநாசம் கரோது மே ॥
ச்ருணு தேவி தவஸ்னேஹாத் தாராநாமானி தத்வதః ।
வர்ணயிஷ்யாமி குப்தானி துர்லபானி ஜகத்த்ரயே ॥
தாரிணீ தரலா தாரா த்ரிரூபா தரணி ப்ரபா ।
ஸத்வரூபா மஹாஸாத்வீ ஸர்வஸஜ்ஜனபாலிகா ॥
ரமணீயா ரஜோரூபா ஜகத்ஸ்ருஷ்டிகரீ பரா ।
தமோரூபா மஹாமாயா கோரரூபா பயானகா ॥
காலரூபா காலிகாக்யா ஜகதத்வித்வஸ காரிகா ।
தத்வஞானபரானன்தா தத்வஞான ப்ரதா(அ)னகா ॥
ரக்தாங்கீ ரக்த வஸ்த்ரா ச ரக்தமாலா ப்ரசோபிதா ।
ஸித்தலக்ஷ்மீச்ச ப்ரஹ்மாணீ பத்ரகாளீ மஹாலயா ॥
நாமான்யேதானி யே மர்த்யாః ஸர்வதைகாக்ரமானஸாః ।
ப்ரபடந்தி ப்ரியே தேஷாம் கிம்கரத்வம் கரோம்யஹம் ॥

*1. தாரிணீ, 2. தரளா, 3. தாரா, 4. த்ரிரூபா, 5. தரணிரூபா, 6. ஸத்வரூபா, 7. மஹாஸாத்வீ, 8. ஸர்வ ஸஜ்ஜன பாலிகா, 9. ரமணீயா, 10. ரஜோரூபா, 11. ஜகத் ஸ்ருஷ்டிகரீ, 12. பரா, 13. தமோரூபா,*



*14. மஹாமாயா, 15. கோர ரூபா, 16. பயானகா, 17. கால ரூபா, 18. காளிகாக்யா, 19. ஜகத்வித்வம்ஸ காரிகா, 20. தத்வஞானபரா, 21. ஆனந்தா, 22. தத்வஞானப்ரதா, 23. அனகா, 24. ரக்தாங்கி, 25. ரக்த வஸ்த்ரா, 26. ரக்தமாலா ப்ரசோபிதா, 27. ஸித்த லக்ஷ்மீ, 28. ப்ரம்ஹாணீ, 29. பத்ரகாளீ, 30. மஹாலயா.*

## ஸ்ரீ தாராவித்யையின் குரு பரம்பரை

1. திவ்யௌக குருக்கள்:—ஊர்த்துவகேசர், நீலகண்டர், விருஷத்வஜர்.
2. ஸித்தௌக குருக்கள்:—வஸிஷ்டர், கூர்மநாதர், மீன நாதர், மஹேச்வரர், ஹரிநாதர்:
3. மானவௌக குருக்கள்:—தாராவதி, பானுமதி, ஜயா, வித்யா, மஹோதரீ, ஸுகானந்த: பரானந்த: பாரிஜாத: குலேச்வரர்: விரூபாக்ஷர், ப்பேரவீ என்பவராவர்.

உ

**ஸ்ரீ மஹா கணபதயே நம:**
**ஸ்ரீ காளிகா தேவ்யை நம:**

❀❀❀

# III

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில் ஸ்ரீ வித்யா

❀❀❀

## "श्री दशमहाविद्यासु श्री विद्या"

चतुर्भुजे चन्द्रकलावतंसे
कुचोन्नते कुंकुमरागशाणे ।
पुण्ड्रे पाशांकुशंपुष्पवाण-
हस्ते नमस्ते जगदेकमातः

சதுர்புஜே சந்த்ரகலாவதம்ஸே
குசோன்னதே குங்கும ராகசோணே ।
புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ்பபாண
ஹஸ்தே ஸமஸ்தே ஜகதேகமாத: ॥

# दश महाविद्यासु ''श्री विद्या'' तृतीया

## தசமஹாவித்யைகளில் மூன்றுவது ''ஸ்ரீ வித்யா''

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ

ब्रह्मादि देव वर वन्दितपादपद्मः
पाशं धनुः शरसृणी च करैर्दधानः।
आरक्त पद्मनिलयः प्रियया समेतः
श्रीमन्महागणपतिः श्रियमातनोतु॥
(मु.शास्त्री)

பிரம்ஹாதிதேவவரவந்தித பாத பத்மः
பாசம் தனுः சரஸ்ருணீச கரைர் ததானः।
ஆரக்த பத்மநிலயः ப்ரியயா ஸமேதः
ஸ்ரீமன் மஹா கணபதிः ஸ்ரீயமாதனோது॥
(மு.சாஸ்திரி)

பிரம்மா முதலிய தேவ சிரேஷ்டர்கள் வணங்கும் சரண கமலமுடையவரும், பாசம், அங்குசம், வில், பாணம் இவற்றை (நான்கு) கரங்களால் தரித்திரிப்பவரும் சிவந்த தாமரை மலர் மீது அமர்ந்தருளுபவரும் மனைவியுடன் சேர்ந்திருப்பவருமான ஸ்ரீ மஹா கணபதி நமக்குச் செல்வம் அளிக்கட்டும்.

### ஸ்ரீ வித்யோபஸகர்கள்

विरिंचिं श्रीकान्तं शिव-मिनगणाधीश शरजान्
अगस्त्यं देवेन्द्रं मदन-मनु चन्द्रा त्रि-धनदान्।
मुनिं दुर्वासाख्यं कलशभवपत्नीं च शिरसा
पराशक्तेर्भक्तान् भुवनविदितान्नौमि महितान्॥
(मु. शास्त्री)

விரிஞ்சிம் ஸ்ரீகாந்தம் சிவ-மின கணாதீச சரஜான்
அகஸ்த்யம் தேவேந்த்ரம் மதன-மனு சந்த்ரா-த்ரி-தனதான்।
முனிம் துர்வாஸாக்யம் கலசபவ பத்னீம் ச சிரஸா
பராசக்தேர் பக்தான் புவனவிதிதான் நௌமி மஹிதான்॥

(மு.சாஸ்த்ரி)

பிரம்மா, விஷ்ணு, சிவன், சூரியன், கணபதி, முருகன், அகஸ்தியர், இந்திரன், மன்மதன், மனு, சந்த்ரன், அத்ரி மஹர்ஷி, குபேரன், துர்வாஸ முனி, லோபாமுத்ரை இவர்கள் பராசக்தியின் பக்தர்களான உலகம் போற்றும் உத்தமர்கள் இவர்களை வணங்குகிறேன்.

नन्दीश्वरं च वरुणं बुधधर्मराजौ
आत्रेयदत्त जमदग्निज-रौहिणेयान्।
वायुं च जीव-रति शेष मुखांश्च नित्यं
श्रीशक्त्युपासकवरान् शिरसा नमामः॥
(मु.शास्त्री)

நந்தீச்வரம் ச வருணம் புத-தர்மராஜௌ
ஆத்ரேய தத்த-ஜமதக்னிஜ ரௌஹிணேயான்।
வாயும் ச ஜீவ ரதி சேஷ முகாம்ச்ச நித்யம்
ஸ்ரீ சக்த்யுபாஸகவரான் சிரஸா நமாமः॥
(மு. சாஸ்திரி)

நந்தீச்வரர், வருணன், புதன், யமன், தத்தாத்ரேயர், பரசுராமர், பலதேவர், வாயு, ப்ருஹஸ்பதி, ரதி தேவீ, ஆதிசேஷன் முதலான ஸ்ரீ சக்த்யுபாஸகர்களையும் நித்தம் தலை வணங்குகின்றோம்.

பரசுராமர், பரசுராம கல்பம் எழுதியவர். கிழ்க்காணும் ஸ்துதி தத்தாத்ரேயர் இயற்றியது.

तदुक्तं दत्तात्रेययोगिना



यत्पादपद्ममकरन्दकणा धरित्री
यन्मध्यवर्ति विवरं गगनं समस्तं।
यद्गात्रसंगि किरण त्रसेरेणुरर्कः
तस्यास्तवांब वपुषो मिति रीशवेद्या॥

யத்பாத பத்ம மகரந்தகணாः தரித்ரீ
யன்மத்யவர்த்தி விவரம் ககனம் ஸமஸ்தம்।
யத் காத்ர ஸங்கிகிரணத்ரஸரேணு ரர்கः
தஸ்யாஸ்தவாம்ப வபுஷோ மிதி ரீச வேத்யா॥

உன் பாத பத்ம மகரந்தப் பொடிகளே இந்தப் பூமி. உன் இடையில் உள்ள தொப்புள் இடைவெளியே ஆகாயம். உன் தேஹத்தில் எழும் ஒளியின் மிகச் சிறிய சிதறலே சூரியன். உன் தேஹத்தின் அளவை ஈசனே அறிவார். மானஸோல்லாஸே

विष्णुः शिवः सुरज्येष्ठो मनुश्चन्द्रो धनाधिपः।
लोपा मुद्रा तथागस्त्यः स्कन्दः कुसुमसायकः॥
सुराधीशो रौहिणेयः दत्तात्रेयो महामुनिः।
दुर्वासा इति च प्रोक्ताः श्रीविद्यायाः उपासकाः॥

விஷ்ணு! சிவः ஸுரஜ்யேஷ்டோ மனுச் சந்த்ரோ தனாதிபः।
லோபாமுத்ரா ததாகஸ்த்யः ஸ்கந்தः குஸும ஸாயகः॥
ஸுராதீசோ ரௌஹிணேயः தத்தாத்ரேயோ மஹாமுனிः।
துர்வாஸா இதிச ப்ரோக்தாः ஸ்ரீ வித்யாயாः உபாஸகாः॥

விஷ்ணு, சிவன், ப்ரம்மா, மனு, சந்த்ரன், குபேரன், லோபாமுத்ரை, அகஸ்த்யர், ஸ்கந்தன், மன்மதன், இந்த்ரன், பலதேவர், தத்தாத்ரேயர், துர்வாஸர் என பதினான்கு பேர்கள் ஸ்ரீ வித்யா உபாஸகர்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இதில் "ரௌஹிணேயः" என்று பலராமர் குறிப்பிடப்பட்டிருக்கின்றார்.

லலிதா த்ரிபுர ஸுந்தரீயின் மஹா மந்த்ரத்தைக் கண்டு பிடித்தவர்கள் பன்னிரண்டு பேர்கள் எனக் கூறப்பட்டிருக்கின்றது.

मनुश्चन्द्रः कुबेरश्च लोपा मुद्राच मन्मथः।
अगस्तिरग्निः सूर्यश्च इन्द्रः स्कन्दः शिवस्तथा॥
क्रोध भट्टारको देव्याः द्वादशामी उपासकाः॥

மனுச்சந்த்ரः குபேரச்ச லோபாமுத்ரா ச மன்மதः।
அகஸ்திரக்னிः ஸூர்யச்ச இந்த்ரः ஸ்கந்தः சிவஸ்ததா॥
க்ரோபட்டாரகோ தேவ்யாः த்வாதசாமீ உபாஸகாः॥

மனு, சந்த்ரன், குபேரன், லோபாமுத்ரா, மன்மதன், துர்வாஸர், அக்னி, ஸூர்யன், இந்த்ரன், முருகன், சிவன், துர்வாஸர் இந்தப் பன்னிரண்டு பேர்களும் ஸ்ரீ தேவி உபாஸகர்கள் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. மற்றோரிடத்தில்,

मनुं चन्द्रं कुबेरं च लोपामुद्रांच मन्मथं।
अगस्त्यं नन्दिकेशं च सूर्यं विष्णुं च षण्मुखं।
शिवं दुर्वाससं चादौ क्रमेणान्ते समर्चयेत्॥

மனும் சந்த்ரம் குபேரம் ச லோபாமுத்ராம் ச மன்மதம்।
அகஸ்த்யம் நந்திகேசம் ச ஸூர்யம் விஷ்ணும் ச ஷண்முகம்॥
சிவம் துர்வாஸஸம் சாதௌ க்ரமேணாந்தேச பூஜயேத்॥

மனு, சந்த்ரன், குபேரன், லோபாமுத்ரா, மன்மதன், அகஸ்த்யர், நந்திகேச்வரர், ஸூர்யன், விஷ்ணு, ஸ்கந்தர், சிவன், துர்வாஸர் என அக்னியை விட்டு நந்திகேச்வரரையும் இந்திரனை விட்டு விஷ்ணுவையும் சேர்த்து பன்னிரண்டு பேர்கள் ஸ்ரீ வித்யை உபாஸகர்கள் எனக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ வித்யோபாஸகர்கள், இவர்களை ஸ்ரீ வித்யையை உபாஸிப்பதற்கு முன்னும் பின்னும் வழிபட வேண்டும் எனக் கூறுவதோடு க்ரமும் (வரிசையும்) கூறப்பட்டுள்ளது. அபிராமி அந்தாதியில்,

ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர்தங்கோன்
போதிற்பிரமன் புராரிமுராரி பொதியமுனி



காதிற்பொரு படைக் கந்தன் கணபதி காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே

என அபிராமப் பட்டர் சூரியன், சந்த்ரன், அக்னி, குபேரன், இந்த்ரன், பிரம்மா, சிவன், விஷ்ணு, அகஸ்த்யர், கந்தன், கணபதி, மன்மதன், இவர்கள் பன்னிரண்டு பேர்கள் ஸ்ரீ வித்யோபாஸகர் எனவும் கூறுகின்றார்.

பிரபஞ்ச ஸாரஸார ஸங்க்ரஹத்தில் மற்றுமொரு பதின்மூன்று உபாஸகர்களின் பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

शक्रश्चैवोन्मनी चैव तथा च वरुणस्तथा।
धर्मराजोऽनलो नागराजो वायुर्बुधस्तथा॥
ईशानश्च रतिश्चैव तथा नारायणस्तथा।
ब्रह्मा जीवो महादेव्याः त्रयोदश उपासकाः॥

சக்ரச்சைவோன்மனீ சைவ ததாச வருணஸ்ததா।
தர்மராஜோ(அ)நலோ நாகராஜோ வாயுர்புதஸ்ததா
ஈசானச்ச ரதிச்சைவ ததா நாராயணஸ்ததா।
ப்ரம்ஹா ஜீவோ மஹாதேவ்யாः த்ரயோதச உபாஸகாः॥

இந்த்ரன், உன்மனீ, வருணன், தர்மராஜர், அக்னீ, நாகராஜன், வாயு, புதன், ஈசானன், ரதி, நாராயணர், ப்ரம்ஹா, பிருஹஸ்பதி என பதின்மூன்று பேர்களும் கூட தேவி உபாஸகர்கள் என்று ப்ரபஞ்சஸார ஸங்க்ரஹம் கூறும். ஆக மொத்தம் இருபத்தைந்து பேர்கள் தேவி உபாஸகர் வரிசையில் உள்ளனர்.

பொதுவாக, பிரம்ஹ வித்யைக்குப் போல, சாக்த வித்யைக்கும் விஷ்ணு, ப்ரம்ஹா, நாரதர், வ்யாஸர், சுகர் இவர்கள் குரு பரம்பரையைச் சேர்ந்தவர் ஆவர் எனத் தேவி பாகவதம் பேசுகின்றது.

ப்ரம்ஹாண்ட புராணம் (லளிதோபாக்யானம்), ஹயக்ரீவர் (விஷ்ணு) சொல்ல, ஹயக்ரீவர் (மஹர்ஷி நாராயணாம்சம்) பெற்று அவர் அகஸ்தியருக்கு தேவி மஹிமை கூறியதாய் உள்ளது.

## ஸ்ரீ வித்யா

ஸ்ரீ வித்யா என்ற ஷோடசாக்ஷரீ (பதினாறு அக்ஷரங்கள் கொண்ட மஹா மந்த்ரம்) மந்த்ரங்களிலேயே மிகவும் சிறந்தது. இதை "मंत्र नायिका மந்த்ர நாயிகா" எனப் பேசுகின்றது மந்த்ர மஹோததி என்ற மந்த்ர சாஸ்திர க்ரந்தம். மந்த்ர மஹோததியில்,

त्रिनेत्रं कमलाकान्तं नृसिंहं चन्द्रशेखरं।
नत्वा संक्षेपतो वक्ष्ये श्रीविद्यां मन्त्रनायिकां॥

த்ரிநேத்ரம் கமலாகாந்தம் ந்ருஸிம்ஹம் சந்த்ரசேகரம்।
நத்வா ஸங்க்ஷேபதோ வக்ஷ்யே ஸ்ரீ வித்யாம் மந்த்ர நாயிகாம்॥

இந்நூலிற்கு உரை எழுதிய ஸ்ரீ மஹீதராசார்யரின் "நௌகா" என்ற உரையில்,

त्रिलोकवर्तिनां सर्वमन्त्राणां स्वामिनी

த்ரிலோக வர்த்தினாம் ஸர்வமந்த்ராணாம் ஸ்வாமினீ

மூன்று உலகங்களிலும் உள்ள மந்த்ரங்கள் அனைத்திற்கும் ஸ்ரீ வித்யா தலைமை வஹிக்கின்றது எனக் குறிப்பிட்டுள்ளார். இதைப் பஞ்சதசாக்ஷரீயாகவும் (பதினைந்து அக்ஷரங்கள் கொண்டதாயும்) உபாஸிப்பர்.

இம் மஹா மந்த்ரத்தை எல்லோருக்கும் உபதேசம் செய்துவிடக் கூடாது. ஆசிரியன் சிஷ்யனைத் தேர்ந்தெடுத்தே உபதேசிக்க வேண்டும். இதை,

अपरीक्षित शिष्याय तां न दद्यात् कथंचन

அபரீக்ஷிதசிஷ்யாய தாம் ந தத்யாத் கதஞ்சன

என்பதால் அறியலாம்.



ஸ்ரீ வித்யை பரம ரஹஸ்யமானது. "தன்னைக் கொடு. தன் சிரத்தை வேண்டுமானாலும் கொடு. ஷோடசாக்ஷரீ மந்த்ரத்தை மட்டும் கொடுத்து விடாதே".

अपि प्रियतमं देयं सुतदार धनादिकं।
राज्यं देयं शिरो देयं न देया षोडशाक्षरी॥
(ज्ञानार्णवे)
आत्मा देयः शिरो देयं न देया षोडशाक्षरी

அபி ப்ரியதமம் தேயம் ஸுததாரதனாதிகம்।
ராஜ்யம் தேயம் சிரோ தேயம் நதேயா ஷோடசாக்ஷரீ॥
(ஞானார்ணவம்)
ஆத்மா தேயః சிரோ தேயம் நதேயா ஷோடசாக்ஷரீ॥

மிகவும் பிரியமான பிள்ளை, மனைவி, ராஜ்யம், சிரம் இவற்றை வேண்டுமானாலும் கொடுக்கலாம். ஷோடசாக்ஷரீயை மட்டும் கொடுக்கவே கூடாது. இவ்வாறு உபாஸகர்கள் கூறுவர். இந்த வாக்யம் ஷோடசாக்ஷரீ எவ்வளவு உயர்ந்தது என்பதை நமக்கு விளக்குகின்றது.

ஸ்ரீ வித்யை அனைவருக்கும் கிடைக்கக் கூடியது அல்ல. இந்த மந்த்ர ஜபம் முக்தியை அளிக்கும். இம் மந்த்ரத்தை ஜபம் செய்பவன் சிவஸ்வரூபமாகவே ஆகி விடுவான். இதை,

यस्य वा पश्चिमं जन्म यदिवा शंकरः स्वयं।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पंच दशाक्षरी॥

யஸ்ய வா பச்சிமம் ஜன்ம யதிவா சங்கரः ஸ்வயம்।
தேனைவலப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்சாதசாக்ஷரீ॥

ஆகமப் பிரஸித்தமானது இந்த ஸ்ரீ வித்யை. எவனுக்கு இதுவே கடைசி ஜன்மாவோ அல்லது எவன் சங்கர ஸ்வரூபியோ, அவனுக்கே இந்த ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ வித்யை கிடைக்கும். அவனே லக்ஷ்மீ பீஜத்துடன் கூடிய பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்தை ஜபம் செய்யும் பேறு பெறுவான் எனத் தந்த்ர சாஸ்திரம் கோஷிக்கின்றது.

मन्त्र महोदधौ
यदुच्चारणमात्रेण पाप संघः प्रलीयते।

மந்த்ர மஹோததௌ
யதுச்சாரணமாத்ரேண பாபஸங்கஃ ப்ரலீயதே।

இந்த ஷோடசாக்ஷரீ மந்த்ரத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே பாபங்கள் எல்லாம் அழிந்து விடும். அவ்வாறு செய்த பாபங்கள் அனைத்தையும் போக்கும் சக்தி கொண்டது இம் மந்த்ரம். மந்த்ர மஹோததியில்,

अनेक पुण्य संप्राप्या श्रीविद्या षोडशाक्षरी।

அநேக புண்ய ஸம்ப்ராப்யா ஸ்ரீ வித்யா ஷோடசாக்ஷரீ।

இந்த ஷோடசாக்ஷரீ என்ற ஸ்ரீ வித்யை பல ஜன்மா செய்த புண்ணியத்தினால்தான் கிடைக்கும் எனவும் பேசப்படுகின்றது.

ஸ்ரீமயம்

ஸ்ரீ லளிதா பரமேச்வரீ இம் மந்த்ரத்தின் தேவதை. அவளை "ஸ்ரீ மாதா" என்று அழைக்கின்றது லளிதா ஸஹஸ்ர நாமாவின் முதல் நாமா (பெயர்). இவள் வாஸம் செய்யும் பட்டினம் "ஸ்ரீபுரம்" என்பதாகும். இது மஹா மேருவின் சிகரத்திலே விளங்குகின்றது. இவள் மஹா மந்த்ரம் "ஸ்ரீ வித்யை" எனப் பேசப்படுகின்றது. இவளது யந்த்ரம் "ஸ்ரீ சக்ரம்" எனப் புகழப்படுகின்றது. இவளது ஸிம்ஹாஸனம் "ஸ்ரீமத் ஸிம்ஹாஸனம்" என்று வர்ணிக்கப்படுகின்றது. இம் மந்த்ரத்தின் பெருமை பல இடங்களில் பேசப்பட்டுள்ளது.

ப்ரம்ஹாண்ட புராணத்தில் ஸ்ரீ லளிதா ஸஹஸ்ர நாமாவின் பெருமை பற்றிப் பேசுமிடத்தில்:

श्री विद्यैव तु मन्त्राणां तत्र कादिर्यथा परा।
पुराणां श्रीपुरमिव शक्तीनां ललिता यथा॥



श्री विद्योपासकानां च यथा देव! परः स्थितः।
तथा नाम सहस्रेषु परमेतत्प्रकीर्तितम्॥

ஸ்ரீ வித்யைவ து மந்த்ராணாம் தத்ர காதிர்யதா பரா।
புராணாம் ஸ்ரீ புரமிவ சக்தீனாம் லளிதா யதா॥
ஸ்ரீ வித்யோபாஸகானாம்ச யதாதேவஃ பரஃ ஸ்திதஃ।
ததா நாம ஸஹஸ்ரேஷு பரமேதத்ப்ரகீர்த்திதம்॥

மந்த்ரங்களுக்குள் ஸ்ரீ வித்யையும், அதிலேயும் காதி வித்யையும், புரங்களுக்குள் ஸ்ரீ புரமும், சக்திகளுக்குள் லளிதா தேவியும், ஸ்ரீ வித்யோபாஸகர்களுக்குள் ஸ்ரீ கண்டரும் (பரமேச்வரர்) எப்படி உயர்ந்தவர்களோ அப்படியே பல ஸஹஸ்ர நாமாக்களில் லளிதா ஸஹஸ்ர நாமாவும் மிகவும் சிறந்ததாய்ப் பிரகாசிக்கின்றது. என வர்ணிக்கப்பட்டுள்ளது. இவ்வாறே லளிதோபாக்யானத்தில்,

कामाक्ष्येव महालक्ष्मीः चक्रं श्री चक्रमेवच।
श्रीविद्यैव पराविद्या.....

காமாக்ஷியேவ மஹாலக்ஷ்மீஃ சக்ரம் ஸ்ரீ சக்ர மேவச।
ஸ்ரீ வித்யைவ பரா வித்யா....

ஸ்ரீ காமாக்ஷி தேவியே ஸ்ரீ மஹாலக்ஷ்மீ (ஸ்ரீம் பீஜத்தினால் கூறப்படுபவள்). சக்ரம் என்பது ஸ்ரீ சக்ரமே. ஸ்ரீ வித்யையே சிறந்த வித்யை என்று பேசப்படுகின்றது. இவ்வாறே லளிதோபாக்யானத்தில்,

सर्वेभ्यो पि पदार्थेभ्यः शब्दं वस्तु महत्तरं।
सर्वेभ्योपिहि शब्देभ्यो वेदराशिर्महामते॥
सर्वेभ्योपिहि वेदेभ्यो वेदमन्त्राः महत्तराः।
सर्वेभ्यो वेदमन्त्रेभ्यो विष्णुमन्त्रा महत्तराः॥
तेभ्योपि दौर्गामन्त्रास्तु महान्तो मुनिपुंगव।
तेभ्योपि गाणपत्यास्तु मन्त्रा दिव्या महत्तराः॥
तेभ्योप्यर्कस्य मन्त्रास्तु तेभ्यःशैवा महत्तराः।

तेभ्योपि लक्ष्मीमन्त्रास्तु तेभ्यः सारस्वता वराः ॥
तेभ्योपि गिरिजामन्त्राः तेभ्यश्चाम्नायभेदजाः ।
सर्वाम्नाय मनुभ्योहि वाराहीमनावो वराः ।
तेभ्यःश्यामामनुवराः वरिष्ठा इल्वलान्तक ।
तेभ्योपि ललितामन्त्राः ............ ॥

ஸர்வேப்போபி பதார்த்தேப்யஃ சாப்தம் வஸ்து மஹத்தரம்।
ஸர்வேப்யோபிஹி சப்தேப்யோ வேதராசிஃ மஹாமதே॥
ஸர்வேப்யோபிஹி வேதேப்யோ வேதமந்த்ரா மஹத்தரா:।
ஸர்வேப்யோ வேதமந்த்ரேப்யோ விஷ்ணு மந்த்ரா மஹத்தரா:॥
தேப்யோபி தௌர்கா மந்த்ராஸ்து மஹாந்தோ முனிபுங்கவ।
தேப்யோபி காணபத்யாஸ்து மந்த்ரா திவ்யா மஹத்தரா:।
தேப்யோப்யர்கஸ்ய மந்த்ராஸ்து தேப்யஃ சைவா மஹத்தரா:॥
தேப்யோபி லக்ஷ்மீ மந்த்ராஸ்து தேப்யஃ ஸாரஸ்வதாவரா:।
தேப்யோபிகிரிஜா மந்த்ரா: தேப்யச்சாம்னாய பேதஜா:॥
ஸர்வாம்னாய மனுப்யோபி வாராஹீமனவோ வரா:।
தேப்யஃ ச்யாமாமனுவரா: வரிஷ்டா இல்வாந்திக।
தேப்யோபி லளிதா மந்த்ரா: ........॥

பதார்த்தங்களுக்குள் சப்தமும், சப்தங்களில் வேதங்களும், வேதங்களில் வேத மந்த்ரங்களும், உயர்ந்தனவாம். அவற்றிலும் விஷ்ணு மந்த்ரங்களும், அவற்றிலும் துர்கா மந்த்ரங்களும் சிறந்தனவாகும். துர்கா மந்த்ரங்களை விட கணபதி மந்த்ரங்களும், அவற்றினும் சூர்ய மந்த்ரங்களும் உயர்ந்தவையாகும். சைவ மந்த்ரங்கள், லக்ஷ்மி மந்த்ரங்கள், ஸரஸ்வதி மந்த்ரங்கள், பார்வதி மந்த்ரங்கள் இவை ஒன்றை விட ஒன்று சிறப்புடையவையாகும். அவற்றினும் லளிதா மந்த்ரங்கள் மிகச் சிறந்தவையாகும்.

## வேதத்தில் ஷோடசாக்ஷரீ

இந்த ஷோடசாக்ஷரீ மந்த்ரம் பற்றிய குறிப்பு ருக் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. चत्वारि ईं बिभ्रति क्षेमयन्तः (சத்வாரி ஈம்பி ப்ரதி க்ஷேமயந்த:) என்பதனால். இதில் ஷோடசாக்ஷரீ மந்த்ரத்தில் விளங்கும்



மூன்று ஹ்ரீங்காரங்களையும் சகார-ரேப-ஈகார-பிந்துவுடன் சேர்ந்த ஸ்ரீ பீஜத்தையும் சேர்த்து நான்கு ஈகாரங்கள் இதில் இணைந்திருக்கின்றன என்பது ஸ்ரீ லக்ஷ்மீ தராசார்யாளின் அபிப்பிராயமாகும்.

## ஸ்ரீ லக்ஷ்மீ தராசார்யாள் குரு

இந்த ஷோடசாக்ஷரீ வித்யையை குருவின் உபதேசம் மூலம்தான் அறிந்து கொள்ள வேண்டும். ஆயினும் ஸ்ரீ லக்ஷ்மீதராசார்யாள் தன்னுடைய' ஸௌந்தர்ய லஹரீயின் உரையில் "நான் எழுதிய இவ்வுரையின் மூலம் இந்த ஷோடசாக்ஷரீ வித்யையின் ரஹஸ்யத்தைத் தெரிந்து கொண்டவர்களை நான் என் சிஷ்யர்களாகவே ஏற்றுக் கொள்கிறேன். ஆகவே இது குருமுகமாகக் கொண்ட உபதேசமாகி விடும்" என்ற ஒரு சிறந்த அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கின்றார்கள். ஸௌந்தர்ய லஹரீ 32ம் சுலோகத்தின் லக்ஷ்மீதராசார்யாளின் உரையில்,

यद्यपि ककारादयः श्रूयमाणाः पंचदशवर्णाः संप्रदायतो ज्ञातव्याः, एकोवर्णः षोडशकलात्मकः प्रभूतभूत इति, यद्यपि षोडशीकला गुरुमुखादेवावगन्तव्या, तथापि तस्याः अप्रतिपादने व्याख्यानं सापेक्षमेव। अतो अनुपादेयं स्यादेवेति सा कला निरूप्यते। न च "सच्छिष्यायोपदेष्टव्या गुरु भक्ताय सा कला" इति शिष्याणामेवोपदेष्टव्या नान्येषामिति वाच्यं। येतु मदीयं ग्रन्थं दृष्ट्वा तां कलां जानन्ति ते मच्छिष्या एवेति अस्माकमनुग्रहः। ननु पादबन्दन पादोप संग्रहण हस्तमस्तक संयोगादेः अंगकलापस्य शिष्यत्वा पादकस्याभावेपि कथं तेषां शिष्यत्वमिति चेत् सत्यं। अस्मदीयं ग्रन्थं दृष्ट्वा षोडश्याः कलायाः स्वरूपं गुर्वन्तरमुखादेव जानतां शिष्यत्वं मास्तु। येतु न जानन्ति गुरुमुखादपि तेषा मुपदेशो न संभाव्यते एव। तदानीं गुर्वेकपरतन्त्रे तस्मिन्मन्त्रे "केवास्माकं गुरवः" इति जिज्ञासायां उदयमानायां तेषां जिज्ञासूनां वर्तमानानां वर्तिष्यमाणानां च वयमेव गुरवः इति तेषा मनुग्रहः कृतोऽस्माभिः ॥

யத்யபி ககாராதய: ச்ரூயமாணா: பஞ்சதசவர்ணா: ஸம்ப்ரதாயதோ ஞாதவ்யா:। ஏகோவர்ண: ஷோடச கலாத்மக: ப்ரபூதபூத: இதி। யத்யபி ஷோடசீகலா குருமுகா தேவாவ கந்தவ்யா। ததாபி தஸ்யா: அப்ரதி பாதனே வ்யாக்யானம் ஸாபேக்ஷமேவ. அதோ அனுபாதேயம் ஸ்யாதேவேதி ஸாகலா நிரூப்யதே। நச "ஸச்சிஷ்யாயோபதேஷ்டவ்யா குரு பக்தாய ஸா கலா" இதி சிஷ்யாணா மேவோபதேஷ்டவ்யா நான்யேஷாமிதிவாச்யம்। யேது மதீயம் க்ரந்தம் த்ருஷ்ட்வா தாம் கலாம் ஜானந்தி தேமச்சிஷ்யா ஏவேதி அஸ்மாகம் அனுக்ரஹ:। நனு பாத வந்தன பாதோப ஸங்க்ரஹண ஹஸ்தமஸ்தக ஸம்யோகாதே: அங்ககலாபஸ்ய சிஷ்யத்வாபாதகஸ்யாபாவே கதம் தேஷாம் சிஷ்யத்வமிதி சேத்—ஸத்யம். அஸ்மதீயம் க்ரந்தம் த்ருஷ்ட்வா ஷோடச்யா: கலாயா: ஸ்வரூபம் குர்வந்தர முகாதேவ ஜானதாம் சிஷ்யத்வம் மாஸ்து. யேது ந ஜானந்தி குருமுகாதபி தேஷாம் உபதேசோ ந ஸம்பாவ்யதே ஏவ। ததானீம் குர்வேக பரதந்த்ரே தஸ்மின் மந்த்ரே கே வா அஸ்மாகம் குருவ:? இதி ஜிஞ்ஞாஸாயாம் உதயமானாயாம் தேஷாம் ஜிஞ்ஞாஸூனாம் வர்தமானானாம் வர்த்திஷ்யமாணானாம் ச வயமேவ குரவ: இதி தேஷாம் அனுக்ரஹ: க்ருதோஸ்மாபி:।

ஆகவே, இந்த ரஹஸ்யத்தைத் தெரிந்து கொண்டவர் ஸ்ரீ லக்ஷ்மீ தராசார்யர் அவர்களை குருவாகப் பாவித்து வழிபடுவது மிகவும் சிறந்த மார்க்கமாகும். குருவின் நினைவோடு செய்யும் வழிபாடே சிறந்த ஸித்தியை அளிக்க வல்லது. ஆகவே ஷோடசி கலை என்பது "சகாரம் ரேபம் (ர), ஈகாரம், பிந்து இவற்றின் இணைப்பேயாகும் என்பது இங்கு ரஹஸ்யம். இந்தப் பீஜாக்ஷரத்துடன் கூடியதே ஸ்ரீ வித்யையாகும். அதாவது श्रीं बीजात्मिका विद्या श्रीविद्या (ஸ்ரீம் பீஜாத்மிகா வித்யா ஸ்ரீ வித்யா). ஸ்ரீம் என்பது ஸ்ரீ பீஜம் என்பது உரைகாரரின் பொருள் விளக்கமாகின்றது. ஆகவே க ஏ ஈ ல ஹ்ரீம் ஹ ஸக ஹல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம் என்பது ஸ்ரீம் என்பதுடன் கூடியதாய் ஷோடசீ வித்யை ஆகின்றது.

## ஸர்வமும் ஸ்ரீ வித்யையே

இந்த ஷோடசாக்ஷரீ மந்த்ரம், "வித்யாரத்னம்" எனப்படுகின்றது. இம் மந்த்ரங்கள் வேதங்கள், ஸ்ம்ருதிகள், புராணங்கள், ஆகமங்கள் இங்கெல்லாம் பரவியிருக்கின்றன. இந்த மந்த்ரங்களை காமன்



(மன்மதன்) ஒன்றாகத் திரட்டித் தந்தான். ஆக மன்மதனே அந்த மந்த்ரத்திற்கு ரிஷி. அந்த மந்த்ரம்,

सर्वभूतात्मकं सर्वमन्त्रात्मकं सर्वतत्वात्मकं सर्वावस्थात्मकं सर्वदेवात्मकं सर्ववेदार्थात्मकं सर्वशब्दात्मकं सर्वशक्त्यात्मिकं त्रिगुणात्मकं त्रिखण्डं त्रिगुणातीतं सादाख्यकलाऽपरपर्यायं षड्विंशं शिवशक्ति संपुटात्मकं (सौन्दर्यलहरी व्याख्या)

ஸர்வபூதாத்மகம் ஸர்வமந்த்ராத்மகம் ஸர்வ தத்வாத்மகம் ஸர்வாவஸ்தாத்மகம் ஸர்வ தேவாத்மகம் ஸர்வவேதார்த்தாத்மகம் ஸர்வ சப்தாத்மகம் ஸர் வசக்த்யாத்மிகம் த்ரிகுணாத்மகம் த்ரிகண்டம் த்ரிகுணாதீதம் ஸாதாக்ய கலா(அ)பரபர்யாயம் ஷட்விம்சம் சிவசக்தி ஸம்புடாத்மகம் (ஸௌந்தர்ய லஹரீ உரை)

இந்த ஸ்ரீ வித்யா மந்த்ரம் ஸர்வ பூத ஸ்வரூபமாகவும் ஸர்வ மந்த்ரங்களின் ஸ்வரூபமாகவும் காலத்ரயங்களிலும் சாஸ்வதமாக உள்ள வஸ்துவாகவும் (तत्वं नाम कालत्रयवर्ति शाश्वतं वस्तु சிவார்க மணி தீபிகை) ஜாக்ரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி ரூப அவஸ்தை ரூபமாகவும் ஸர்வதேவ ஸ்வரூபமாகவும் ஸர்வ வேதார்த்த ரூபமாகவும் ஸர்வ சப்த ரூபமாகவும் ஸர்வ சக்தி ரூபமாகவும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக் குண ரூபமாகவும் சந்திரன், சூரியன், அக்னி கண்டமாகவும் (त्रिखण्डं मातृकाचक्रं सोमसूर्यानलात्मकं த்ரிகண்டம் மாத்ருகாசக்ரம் ஸோமஸூர்யானலாத்மகம்) முக் குணங்களுக்கும் அப்பாற்பட்டதாகவும் "ஸாதா" கலா என்று சொல்லக் கூடிய சிவ சக்தி ஸம்புடாத்மகமான இருபத்து ஆறாம் தத்துவமாகவும் பேசப்படுகின்றது. ஸாதா என்ற 26ம் தத்துவம் நாத பிந்து கலைகளுக்கும் அப்பாற்பட்டது. ஸௌந்தர்ய லஹரீ உரையில் பின்வருமாறு காணப்படுகின்றது.

सादाख्यं षड्विंशं तत्वं तेन सह नादबिन्दुकलानां ऐक्यं नास्ति तस्य नादबिन्दुकला तीतत्वात्

ஸாதாக்யம் ஷட்விம்சம் தத்துவம் தேன ஸஹ நாத பிந்து கலானாம் ஐக்யம் நாஸ்தி தஸ்ய நாத பிந்து கலா தீதத்வாத்

அதாவது, முன்பு மன்மதன் 50 வர்ண ரூபம் உள்ளதும், 16 நித்யா ரூபமாயுள்ளதும் 16 கலா ரூபமாயுள்ளதுமான "வித்யா ரத்னம்" என்ற

ஷோடசீ வித்யையை வேதங்கள், ஸ்ம்ருதிகள், புராணங்கள், பல ஆகமங்கள் இவற்றில் பரவிக் கிடப்பதை அறிந்தான். அதன்பின் பரவிக் கிடக்கும் இம் மந்த்ரத்தைக் கண்டு ஒருங்கிணைத்தான். அதாவது 50 வர்ணங்களை மூன்றாகப் பிரித்து மூன்று கண்டங்களாகச் செய்து அதில் த்ரிபுர ஸுந்தரீ முதலான 16 நித்யா தேவிகளை அதில் அந்தர்பாவம் செய்து அதிலேயே பிரதமை முதலான திதிகளையும் அந்தர்பாவம் செய்து, 15 அக்ஷரங்களை (பஞ்சதசாக்ஷரீயை) மூன்று கண்டங்களாகச் செய்து, அதில் சோம, சூர்யா, அக்னி ஸ்வரூபமாகவும், பிரம்ம விஷ்ணு மஹேச்வராத்மகமாகவும், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று உள்ளதினாலும், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற அவஸ்தை அமைந்திருப்பதனாலும், சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவற்றிற்குக் காரணமாய் நிச்சயித்து ஸ்ரீ வித்யா ரூபமான நான்காம் கண்டத்தில் 15 கலைகளையும் அந்தர்பாவமாகும் என நிச்சயித்து புவனேச்வரீ முதலான ஒன்பது யோகினீ வித்யைகளுக்கும் மூன்று மூன்றிற்கு ஒவ்வொரு ஹ்ரீங்காரத்திலும் அந்தர்பாவத்தை ஏற்று, ஸர்வ பூதாத்மகமாகவும் ஸர்வ மந்த்ராத்மகமாகவும் ஸர்வ தத்வாத்மகமாகவும் ஸர்வ தேவாத்மகமாகவு ஸர்வ வேதார்த்தாத்மகமாகவும் ஸர்வ சப்தாத்மகமாகவும் ஸர்வ சக்த்யாத்மகமாகவும் த்ரிகுணாத்மகமாகவும் கண்டத்ரயாத்மகமாகவும் த்ரிகுணாதீதமாகவும் "ஸாதா" என்ற பெயர் கொண்ட 26ம் சிவ சக்தி ஸம்புடாத்மகமாகவும் (ஸாதா என்ற கலையே ஸ்ரீ வித்யா எனப் பெயர் பெறுகின்றது) நிச்சயித்து 15 வர்ணங்கள் கொண்ட மூல வித்யையைத் தொகுத்தான். அந்தப் பஞ்சதசாக்ஷரீ வித்யையை (மந்த்ரராஜத்தை) வெகு காலம் தியான யோகத்தால் வழிபட்டான். அதன்பின் சந்த்ரகலா அம்ருதாஸ்வாதத்தை அனுபவித்தான். அந்த மன்மதன் இந்த மந்த்ரத்தின் ரிஷியானான் என்று ஸௌந்தர்ய லஹரீயில் 'सोजिह्वो असश्चत ஸோஜிஹ்வோ அஸச்சத" என்ற மந்த்ர வ்யாக்யானத்தில் ஸ்ரீ லக்ஷ்மீ தராசார்யாள் உரை இங்குக் கவனத்திற்கு உரியதாகும்.

## த்ரிபுரோபநிஷத்திலும் பஞ்சதசாக்ஷரீ

த்ரிபுரோபநிஷத் புஞ்சதசாக்ஷரீ பற்றி விளக்கம் கொடுத்திருக்கின்றது (பஞ்சதசாக்ஷரீ மந்த்ரோத்தாரம் கொடுக்கப்பட்டிருக்கின்றது).



त्रिपुरोपनिषदि (ऋग्वेदान्तर्गतायां)
कामो योनिः कामकला वज्रपाणिः
गुहा हसा मातरिश्वाऽभ्रमिन्द्रः ।
पुनर्गुहा सकला मायया च
पुरूच्येषा विश्वमाता हि विद्या ॥

व्याख्या —विश्वमाता—शब्दार्थात्मक प्रपंच जनन्येषा पंचदशाक्षरी आदि विद्या। श्री जगन्मातुः सर्ववेद मन्त्राणां सर्वविद्यानां च कारणभूता परमोत्कृष्टा श्री पंचदशाक्षरी श्री विद्या ॥

காமோ யோனிః காமகலா வஜ்ரபாணிः
குஹா ஹஸா மாதரிச்வாப்ர மிந்த்ரः ।
புனர்குஹா ஸகலா மாயயாச
புரூச்யே ஷா விச்வ மாதா ஹி வித்யா ॥
(த்ரிபுரோபநிஷத்)

விச்வமாதா சப்தார்தாத்மக ப்ரபஞ்சஜனன்யேஷா பஞ்சதசாக்ஷரீ ஆதி வித்யா. ஸ்ரீ ஜகன் மாது: ஸர்வ வேத மந்த்ராணாம் ஸ்ர்வ வித்யானாம்ச காரணபூதா பரமோத்க்ருஷ்டா ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ ஸ்ரீ வித்யா ॥

இதன் பொருள்: காமः = க. யோனிः = ஏ, கமலா = ஈ, வஜ்ரபாணிः = ல, குஹா = ஹ்ரீம், ஹஸா = ஹ ஸ, மாதரிச்வா = க, அப்ரம் = ஹ, இந்த்ரः = ல, புனர்குஹா = ஹ்ரீம், ஸகலா = ஸகல, மாயயாச = ஹ்ரீம், புரீச்யேஷா = புராதனீ, விச்வமாதாஹி வித்யா = சப்த அர்த்த ரூபமான பிரபஞ்சத்திற்கு மாதா பஞ்ச தசாக்ஷரீ என்ற ஆதி வித்யா. ஸ்ரீ ஜகன் மாதாவின் பஞ்தசாக்ஷரீ என்ற ஸ்ரீ வித்யா ஸர்வ வேத மந்த்ரங்களுக்கும் ஸர்வ வித்யைகளுக்கும் காரணமாய் உள்ளதும் மிகவும் உயர்ந்ததுமாகும். அந்த வித்யை (क ए ई ल ह्रीं हसक हल ह्रीं सकल ह्रीं க ஏ ஈ ல ஹ்ரீம் ஹஸக ஹல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம்) என்பதாகும்.

## ஸௌந்தர்ய லஹரீயிலும் மந்த்ரோத்தாரம்

இந்தப் பஞ்சதசாக்ஷரீயின் மந்த்ரோத்தாரம் ஸௌந்தர்ய லஹரீயிலும் ஆதிசங்கர பகவத் பாதரால் கூறப்பட்டிருக்கின்றது.

शिवः शक्तिः कामः क्षितिरथ रविः शीतकिरणः।
स्मरो हंसः शक्रः तदनुच परा मार हरयः॥
अमी हृल्लेखाभिः तिसृभिरवसानेषु घटिताः।
भजन्ते वर्णास्ते तव जननि नामा वयवताम्॥

சிவঃ சக்திঃ காமঃ க்ஷிதிரத ரவிঃ சீதகிரணঃ।
ஸ்மரோ ஹம்ஸঃ சக்ரঃ ததனுச பரா மார ஹரயঃ॥
அமீ ஹ்ருல்லேகாபிঃ திஸ்ருபிரவ ஸானேஷு கடிதாঃ।
பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜனனி நாமா வயவதாம்॥

இதன் பொருள்: 1. சிவঃ = க, சக்திঃ = ஏ, காமঃ = ஈ, க்ஷிதிঃ = ல, 2. ரவிঃ = ஹ, சீதகிரணঃ = ஸ, ஸ்மரঃ = க, ஹம்ஸঃ = ஹ; சக்ரঃ = ல, 3. பரா = ஸ, மாரঃ = க, ஹரிঃ = ல. இம்மூன்று கண்டங்களுடைய கடைசியில் ஹ்ரீகாங்காரத்தைச் சேர்க்க இவ் வர்ணங்கள் பதினைந்தும் அம்மா! த்ரிபுர ஸுந்தரீயாகிய உன் மந்த்ரத்தின் அவயவங்கள் ஆகின்றன (உன் பெயராகின்றன). இத்துடன் சகார, ரேப, ஈகார, பிந்துக்களுடன் சேர்ந்த பீஜாக்ஷரத்தையும் சேர்த்தால் (16) பதினாறு (ஷோடச) அக்ஷரங்கள் கொண்ட ஷோடசாக்ஷரீ மந்த்ரமாகும். மந்த்ரம் என்பது தேவதையின் வாசகம். தேவதை மந்த்ரத்தின் வாச்யம் (பொருள்).

वाच्यवाचकरूपेण सर्वे मन्त्राः व्यवस्थिताः।
यद्देवतायाः यो मन्त्रः तस्या मन्त्रः स वाचकः॥

வாச்யவாசக ரூபேண ஸர்வே மந்த்ராঃ வ்யவஸ்திதাঃ।
யத்தேவதாயா யோ மந்த்ரঃ தஸ்யா மந்த்ரঃ ஸ வாசகঃ॥

என்ற மந்த்ர சாஸ்த்ர ஸித்தாந்தப்படி ஷோடசாக்ஷரீ மந்த்ரம், ஸ்ரீ லளிதா பரா பட்டாரிகாவின் வாசகம். அந்த மந்த்ரத்திற்கு வாச்யம் ஸ்ரீ லளிதா தேவி என்று கொள்ள வேண்டும்.

## மூன்று கண்டங்கள்

இங்கு க ஏ ஈ ல என்ற நான்கு வர்ணமும், அக்னி கண்டம், ஹஸக ஹல என்ற ஐந்து வர்ணமும் ஸூர்ய கண்டம், இந்த இரண்டு கண்டங்களுக்கும் இடையிலே, "ருத்ர க்ரந்தி" ஸ்தானத்தை



வஹிக்கின்றது முதல் ஹ்ரீங்காரம், ஸகல என்ற மூன்று வர்ணம், ஸோம கண்டம் ஸோம கண்டத்திற்கும், ஸூர்ய கண்டத்திற்கும் இடையில் உள்ள இரண்டாம் ஹ்ரீங்காரம் "விஷ்ணு க்ரந்தி" ஸ்தானத்தைப் பெறுகின்றது. நான்காவது அக்ஷரம் சந்த்ரகலா கண்டம். இதுவே ஷோடசாக்ஷரீயின் பரம ரஹஸ்யமான பீஜாக்ஷரம். இந்த சந்த்ரகலா கண்டத்திற்கும், ஸோம கண்டத்திற்கும் இடையில் உள்ள மூன்றாம் ஹ்ரீங்காரம் பிரம்ம க்ரந்தி ஸ்தானத்தை வஹிக்கின்றது.

சந்த்ரகலா கண்டத்தை ஸ்ரீ லக்ஷ்மீதராசார்யாளை குருவாகக் கொண்டு அறியவும் என முன்பு நாம் குறிப்பிட்டிருக்கின்றோம். இதைத்தான்,

त्रिखण्डो मातृकावर्णः सोमासूर्यानलात्मकः।

த்ரிகண்டோ மாத்ருகாவர்ணঃ ஸோமாஸூர்யானலாத்மகঃ॥

என மந்த்ர சாஸ்திரம் குறிப்பிடுகின்றது. இம் மூன்று கண்டங்களையும், ஞான சக்தி, இச்சா சக்தி, க்ரியா சக்தி ரூபமாகவும், ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி ரூபமாகவும் விச்வ, தைஜஸ, ப்ராக்ஞ என்ற வ்ருத்திகளாகவும் தமஸ், ரஜஸ், ஸ்தவ குணாத்மகமாகவும் கொள்ளலாம்.

## ஹ்ரீங்காரம்

ஹ்ரீங்காரம் ஹ்ருல்லேகா எனப் பெயர் பெறுகின்றது. இது ஜீவர்களின் ஹ்ருதயத்தில் ஒரு மின்னல் கொடி போன்று பிரகாசிக்கின்றது. இது பிராணிகளின் ப்ராண சக்தியாகும். மந்த்ரங்களின் ஜீவனாகும். இது சிவனை விட்டுப் பிரியாத நாசமற்ற ஸ்வதந்த்ர சக்தி. இது அகில புவனங்களையும் வியாபித்து நிற்கின்றது.

शिवाऽविनाभूतशक्तिः स्वतन्त्रा निरूपप्लवा।
समस्तं व्याप्य भुवनं ईष्टे तेनेश्वरी मता॥
व्यापृतं तेन सकलं अनया चिद्विलासया।
यस्मा दखिलजीवानां मन्त्राणामपि सर्वतः।
हृदि लेखेव जागर्ति प्राणशाक्तिरियं परा।

ह्लेखा कथ्यते तस्मात् मायैवाऽचिन्त्यवैभवा ॥

சிவாவினாபூதசக்தி: ஸ்வதந்த்ரா நிருபப்லவா।
ஸமஸ்தம் வ்யாப்ய புவனம் ஈஷ்டே தேனேச்வரீ மதா॥
வ்யாப்ருதம் தேன ஸகலம் அனயா சித்விலாஸயா।
யஸ்மாதகில ஜீவானாம் மந்த்ராணாமபி ஸர்வத:।
ஹ்ருதி லேகேவ ஜாகர்த்தி ப்ராணசக்திரியம் பரா।
ஹ்ல்லேகா கத்யதே தஸ்மாத் மாயை வாசின்த்ய வைபவா॥
(ஸௌந்தர்ய லஹரீ உரை - ஸௌபாக்யவர்தனி)

இந்த ஹ்ருல்லேகா என்ற ஹ்ரீங்காரம் (ஸ்ரீ புவனேச்வரீ பீஜம்) சேர்க்கப்படாத மந்த்ரங்கள் அனைத்தும் ஜீவனில்லாதவை போன்றதாகும். ஆகவே இது எல்லா மந்த்ரங்களுக்கும் உயிர் எழுச்சியை அளிக்கின்றது. இதை,

अनया रहिताः सर्वे निर्जीवा मन्त्रराशयः ।
अतस्तु सर्वमन्त्राणां इयमुद्बोधिनी मता ॥

அனயா ரஹிதா: ஸர்வே நிர்ஜீவா மந்த்ரராசய:।
அதஸ்து ஸர்வமந்த்ராணாம் இயமுத்போதினீ மதா॥

என்று "ஸ்வச்சந்த ஸங்க்ரஹம்" என்ற நூல் கூறுவதாய் ஸௌபாக்ய வர்தனீ கூறுகின்றது.

ஆதிசங்கர பகவத் பாதர் அவர்கள் ப்ரபஞ்ச ஸாரத்தில் ஸ்ரீ புவனேச்வரீ ஸ்தோத்திரத்தில் இந்த மந்த்ரம் (ஹ்ரீங்காரம்) பிராணிகளின் ப்ராணன் என்றே கூறியிருக்கின்றார்.

प्रसीद प्रपंच स्वरूपे प्रधाने।
प्रकृत्यात्मिके प्राणिनां प्राणसंज्ञे ॥

ப்ரஸீத ப்ரபஞ்ச ஸ்வரூபே ப்ரதானே।
ப்ரக்ருத்யாத்மிகே ப்ராணினாம் ப்ராணஸம்ஜ்ஞே॥

என்று (இதன் விளக்கத்தை என்னுடைய ஸ்ரீ புவனேச்வரீ தத்துவ ப்ரகாசத்தில் விரிவாய்க் காணலாம்).



இவ்வாறே ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யார் அவர்கள் தன்னுடைய க்ரம ஸ்துதியிலும்,

ह्रीङ्कारमेव तव नाम गृणन्ति वेदाः।
मातस्त्रिकोणनिलये त्रिपुरे त्रिनेत्रे ॥

ஹ்ரீங்காரமேவ தவ நாம க்ருணந்தி வேதா:।
மாத ஸ்த்ரிகோணநிலயே த்ரிபுரே த்ரிநேத்ரே॥

என்ற இடத்தில் காணலாம். ஸ்ரீ வித்யையின் முழுமையான மந்த்ரோத்தாரம் மந்த்ரஹோததியில் பின்வருமாறு கூறப்படுகின்றது.

....वक्ष्ये श्रीविद्यां मन्त्र नायिकां।
अपरीक्षित शिष्याय तां न दद्यात् कदाचन ॥
यदुच्चारणमात्रेण पापसंघः प्रलीयते।
तारं मायां च कमलां आदौ बीजत्रयं पठेत्।
ब्रह्म झण्टीशगोविन्द धरामायेति चादिमं ॥
आकाशभृगु चक्र्यग्रमांसमाया द्वितीयकं।
हंस धातृ क्षमामाया तृतीयं बीजमीरितं ॥
वाक्काम शक्ति संज्ञंतु क्रमा बीजत्रयं भवेत् ॥
इयं षडर्णा श्रीमाया कामवाक्शक्ति संयुता ॥
अनेक पुण्य संप्राप्या श्रीविद्या षोडशाक्षरी ॥

...... வக்ஷ்யே ஸ்ரீ வித்யாம் மந்த்ரநாயிகாம்।
அபரீக்ஷித சிஷ்யாய தாம் ந தத்யாத் கதஞ்சன।
யதுச்சாரணமாத்ரேண பாப ஸங்க: ப்ரலீயதே॥
தாரம் மாயாம் ச கமலாம் ஆதௌபீஜத்ரயம் படேத்।
ப்ரம்ஹ ஜஞ்டீச கோவிந்த தராமாயேதி சாதிமம்।
ஆகாச ப்ருகு சக்ரியப்ர மாம்ஸ மாயா த்விதீயகம்।
ஹம்ஸதாத்ரு க்ஷமாமாயா த்ருதீயம் பீஜமீரிதம்॥
வாக்காம சக்திஸம்ஞும்து க்ரமாத் பீஜத்ரயம் பவேத்॥
இயம் ஷடர்ணா ஸ்ரீ மாயா காமவாக் சக்தி ஸம்புடா॥
அநேக புண்ய ஸம்ப்ராப்யா ஸ்ரீ வித்யா ஷோடசாக்ஷரீ॥

இதன் பொருள்: தார = ஓம், மாயா = ஹ்ரீம், கமலா = ஸ்ரீம் என்ற மூன்று பீஜங்களையும் மூன்று கூடங்களுக்கு முன் படிக்க வேண்டும். மூன்று கூடங்களாவன:

1. முதல் கூடம்: பிரம்மா = க, ஜின்டீச = ஏ, கோவிந்த = ஈ, தரா = ல, மாயா ஹ்ரீம் (க ஏ ஈ ல ஹ்ரீம்) என்பதாகும்.

2. இரண்டாம் கூடம்: ஆகாச = ஹ, ப்ருகு: = ஸ, சக்ரீ = க, அப்ரம் = ஹ, மாம்ஸம் = ல, மாயா = ஹ்ரீம் (ஹ ஸக ஹல ஹ்ரீம்) என்பதாகும்.

3. மூன்றாம் கூடம்: ஹம்ஸ = ஸ, தாதா = க, க்ஷமா = ல், மாயா = ஹ்ரீம் (ஸகல ஹ்ரீம்) என்பதாகும். இம் மூன்று கூடத்திற்கும் க்ரமமாக 1) வாக் = வாக்பீஜம் ஐம், 2) காமபீஜம் க்லீம், 3) சக்தி பீஜம் ஸௌ: என்பதுமாகும்.

ஆக, ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம் ஸௌ: இவற்றால் ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க ஏ ஈ ல ஹ்ரீம் ஹ ஸகஹ ல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம் என்பதை ஸம்புடீகரணம் செய்தால் 28 அக்ஷரங்கள் கொண்டதாக ஷோடசாக்ஷரீ மஹா மந்த்ரம் ஆகும்.

அதாவது ஸ்ரீம், ஹ்ரீம், க்லீம், ஐம், ஸௌ:, ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க ஏ ஈ ல ஹ்ரீம் ஹ ஸக ஹல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம், ஸௌ: ஐம் க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் என ஆகும்.

இந்த மஹா மந்த்ரத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே பாபங்கள் எல்லாம் அழிந்து விடும். அதிகமாகப் புண்யம் செய்த காரணத்தினாலேயே இந்த ஸ்ரீ வித்யை கிடைக்கும்.

ஸ்ரீ மந்த்ர மஹோததியின் படி ஸ்ரீ வித்யை श्रीं ह्रीं क्लीं ऐं सौः ओं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं ह स क ह ल ह्रीं सकल ह्रीं सौं ऐं क्लीं ह्रीं श्रीं (28) ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம் ஸௌ: ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க ஏ ஈ ல ஹ்ரீம் ஹ ஸஹல ஸ்ரீம் ஸகல் ஹ்ரீம் ஸௌ: ஐம் க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் (28) அக்ஷரங்கள் கொண்டதாகின்றது.

இவ்வாறு 28 அக்ஷரங்கள் கொண்டதாகவே ஷோடசாக்ஷரீயைஜபம் செய்ய வேண்டும் என உத்தார சுலோகம் உணர்த்துகின்றது.

உத்தாரம்



अष्टौ बीजाक्षराण्यादौ पश्चात्पंचदशी ततः।
पंच बीजाक्षराण्येषा श्रीमहाषोडशी मता॥

அஷ்டௌ பீஜாக்ஷராண்யாதௌ பச்சாத் பஞ்சதசீ தத:।
பஞ்ச பீஜாக்ஷராண்யேஷா ஸ்ரீ மஹாஷோடசீ மதா॥

முன் எட்டு பீஜங்கள் பின் பஞ்சதசாக்ஷரீ அதன் பின் ஐந்து பீஜாக்ஷரங்கள் இவை சேர்ந்ததே மஹா ஷோடசாக்ஷரீயாகும்.

श्रीमाया काम वाक्शक्ति तारमायारमाः क्रमात्।
विद्या पंचदशी पश्चात् शक्तिवाक्कामचिद्रमाः॥
अष्टविंशतिवर्णेयं पूर्णा पूर्णफलप्रदा।
वोध दीप्त्यादि संयुक्ता श्रीमहाषोडशाक्षरी॥

ஸ்ரீ மாயா காமவாக் சக்தி தாரமாயா ரமா: க்ரமாத்।
வித்யா பஞ்சதீ பஸ்சாத் சக்தி வாக்காக சித்ரமா:॥
அஷ்ட விம்சதி வர்ணேயம் பூர்ணா பூர்ண பலப் ரதா।
போததீப்த்யாதி ஸம்யுக்தா ஸ்ரீ மஹா ஷோடசாக்ஷரீ॥

முன் கூறிய சுலோகத்திற்கு இவ்வாறு விசேஷ விளக்கம் கூறுகின்றது தந்த்ர சாஸ்திரம். இவ்வாறு 28 அக்ஷரங்கள் கொண்டதாக ஜபம் செய்தால் தான் ஷோடசாக்ஷரீ பூர்ண மந்த்ரமாகவும் பூர்ண பலன்களை அளிப்பதாகவும் ஆகும். இதை ப்ரபஞ்ச ஸாரமும் வலியுறுத்தும்.

श्रीबीज माया स्मर योनि शक्तीः
तारं च बीज द्वय मात्मविद्या
शक्त्यादि बीजानि विलोमितानि
श्री षोडशार्णा त्रिपुरांबिकायाः॥

ஸ்ரீபீஜமாயா ஸ்மரயோனி சக்தீ:
தாரம்ச பீஜத்வயமாத்ம வித்யா ர
சக்த்யாதி பீஜானி விலோமிதானி
ஸ்ரீ ஷோடசார்ணா த்ரிபுராம்பிகாயா:॥

## மூன்று கூடங்கள்

இந்தப் பஞ்சதசாக்ஷரீயிலுள்ள க ஏ ஈ ல ஹ்ரீம் என்பதை வாக்பவ கூடம் என்றும், ஹ ஸ க ஹல ஹ்ரீம் என்பதைக் காம கூடம் எனவும், ஸகல ஹ்ரீம் என்பதை சக்தி கூடம் எனவும் கூறுவர் ஸ்ரீ வித்யோபாஸகர். இதை லலிதா ஸஹஸ்ரநாமம்.

श्रीमद्वाग्भव कूटैक स्वरूपमुखपंकजा।

ஸ்ரீமத்வாக்பவ கூடைக ஸ்வரூப முகபங்கஜா।

कण्ठाधः कटि पर्यन्त मध्य कूटस्वरूपिणी।

கண்டாதஃ கடிபர்யந்த மத்யகூட ஸ்வரூபிணீ।

शक्ति कूटैकतापन्न कट्यधो भागधारिणी।

சக்தி கூடைகதாபன்ன கட்யதோபாக தாரிணீ॥

என்று குறிப்பிடுகின்றது. வாக்பவ கூடம் ஸ்ரீ லலித்தா பரமேச்வரீயின் முக கமலம், காமகூடம் லலிதா பரமேச்வரீயின் கழுத்திற்குக் கீழும் இடைக்கு மேலும் உள்ள தேஹமாம், இடைக்கும் கீழே உள்ள பகுதியே சக்தி கூடம் என்பது இதன் பொருள். ஆக ஸ்ரீ லலிதா பரமேச்வரீ பஞ்ச தசாக்ஷர ஸ்வரூபிணீ. இம் மூன்று கூடங்களும் அவள் திவ்ய தேஹம். இதை मूल मन्त्रात्मिका மூல மந்த்ராத்மிகா, मूलकूट त्रयकलेवरा மூலகூட த்ரயகளேபரா என்ற நாமாக்களும் ஞாபகப்படுத்துகின்றன.

இங்கு பாஸ்கரராயர் அவர்கள் லலிதா ஸஹஸ்ரநாமாவின் உரையாகிய ஸௌபாக்ய பாஸ்கரத்தில் ஸ்ரீ லலிதா பரமேச்வரீயின் ரூபம் ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம், ஸூக்ஷ்மதமம் என மூவகைப்படும். அதில் ஸூக்ஷ்ம ரூபம் ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ வித்யையாகும். ஸூக்ஷ்மதர ரூபம் காமகலா க்ஷரமாகும். ஸூக்ஷ்மதம ரூபம் குண்டலினீயாகும் என்று கூறியிருக்கின்றார். இதன் விரிவை ஸௌபாக்ய பாஸ்கரத்தை ஆராய்ந்து அறிந்து கொள்க.

तारमाया रमा योगो मनोर्दीपनमुच्यते।

தாரமாயா ரமா யோகஃ மனோர்தீபனமுச்யதே।



என்றபடி ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் இவற்றின் சேர்க்கையால் தீப்தி உடையதாயும்,

विद्यादौ श्रीबीजदानेन बोधरूपा भवति।

வித்யாதௌ ஸ்ரீபீஜதாநேந போதரூபா பவதி।

என்றபடி ஸ்ரீ ரூபமான மஹா பீஜாக்ஷரத்தின் சேர்க்கையால் போதம் பெற்றதாகவும் ஆகின்றது என்று பேசுகின்றது மந்த்ர சாஸ்திரம். இம் மந்திரம் முக்கியமாக ஐச்வர்ய விருத்தி ரூபமான பலனைச் சிறப்பாக அளிக்க வல்லது. இந்தப் பஞ்ச தசாக்ஷரீ மந்திரத்தின் முன் பின் இணைக்கப்பட்ட ஐந்து அக்ஷரங்கள் சாக்த ப்ரணவங்கள் ஆகும், இது இம் மந்திரத்திற்குத் தனிச் சிறப்பைத் தருகின்றன.

28 அக்ஷரங்கள் கொண்ட இம் மந்திரத்தை எப்படி 16 அக்ஷரங்கள் கொண்டதாகக் கூற முடியும்? என்று ஒரு சங்கையை ஏற்படுத்திக் கொண்டு, அதற்குச் சமாதானம் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

1. முதல் ஐந்து பீஜங்கள் ஒரு கூடம், 2. ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் என்பது ஒரு கூடம், 3. க ஏ ஈ ல ஹ்ரீம் என்பது ஒரு கூடம், 4. ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் என்பது ஒரு கூடம், 5. ஸ க ல ஹ்ரீம் என்பது ஒரு கூடம், 6. முன்கூறிய ஐந்து பீஜங்கள் ஒரு கூடம் என்று மஹா ஷோடசீயை ஆறு கூடங்களாகக் கொண்டு அதில் முதல் கூடம் 5 அக்ஷரங்கள், இரண்டாம் கூடம் மூன்று அக்ஷரங்கள், மூன்றாம் கூடம், நான்காம் கூடம், ஐந்தாம் கூடம் இவற்றை மூன்று அக்ஷர ரூபங்களாகவும் ஆறுவது கூடத்தின் ஐந்து அக்ஷரங்களையும் கொண்டு 16 அக்ஷரங்கள் எனக் கொள்ள ஷோடசீ என இம் மந்திரம் பேசப்படுகின்றது என்றும், கௌடபாத ஸூத்ரம் முன்னும் பின்னும் ஸ்ரீம் என்பதைக் கொண்ட மஹா மந்திரமே ஸ்ரீ வித்யை என்றும் பேசப்படுகின்றது எனவும் ஆனந்தானந்த மண்டலீயின் நிர்வாஹ கரும் ஸ்ரீ வித்யோபாஸர்களுக்காக ஸ்ரீ வித்யா பூஜா பத்ததி என்ற சிறந்த நூலை இயற்றிய வருமான ப்ரம்ஹ ஸ்ரீ கல்யாண சுந்தரமய்யர் குறிப்பிடப்பட்டிருப்பதை இங்கு நினைவில் கொள்ளலாம்.

### श्री पंचदशाक्षरी जपविधानं
### ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ ஜபவிதானம்

अस्य श्री श्रीविद्या पंचदशाक्षरीमहामन्त्रस्य दक्षिणामूर्तिऋषिः गायत्री छन्दः श्रीललिता महात्रिपुर सुन्दरी देवता।

क ए ई ल ह्रीं बीजं, सकल ह्रीं शक्तिः हसकहलह्रीं कीलकं। श्री ललिता महा त्रिपुर सुन्दरी प्रसादसिद्धयर्थे जपे विनियोगः।

| | | |
|---|---|---|
| 1. | क ए ई लह्रीं | अंगुष्ठाभ्यां नमः |
| 2. | हसकहल ह्रीं | तर्जनीभ्यां नमः |
| 3. | सकलह्रीं | मध्यमाभ्यां नमः |
| 4. | क ए ई ल ह्रीं | अनामिकाभ्यां नमः |
| 5. | हसकहल ह्रीं | कनिष्ठिकाऽयापं नमः |
| 6. | सकल ह्रीं | करतल करपृष्ठाभ्यां नमः |

| | | |
|---|---|---|
| 1. | क ए ई ल ह्रीं | हृदयाय नमः |
| 2. | ह स कहल ह्रीं | शिरसे स्वाहा |
| 3. | सकल ह्रीं | शिखायै वषट् |
| 4. | क ए ई ल ह्रीं | कवचाय हुं |
| 5. | हस कहल ह्रीं | नेत्रत्रयाय वौषट् |
| 6. | सकल ह्रीं | अस्त्राय फट् |

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

अरुणां करुणातरंगिताक्षीं
धृत पाशांकुश पुष्पबाणचापां।
अणिमादिभिरावृतां मयूखैः
अहमित्येव विभावये भवानीं॥
लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि।
हं आकांशात्मिकायै पुष्पाणि समर्पयामि।
यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि।
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।



अं अमृतात्मिकायै अमृतोपहारं समर्पयामि।
सं सर्वात्मिकायै सर्वोपचारान् समर्पयामि॥

मूलमंत्रं

"कएईलह्रीं हसक लह्रीं सकलह्रीं" जपान्ते पुनरपि हृदयन्यासः भूर्भुवस्सुवरोमिति दिक्विमोकः ध्यानं लमित्यादि पंचपूजा कार्या।

समर्पणं

गुह्याति गुह्य गोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धि भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा॥

## பஞ்சதசாக்ஷரீ ஜபவிதானம்

அஸ்ய ஶ்ரீ ஶ்ரீ வித்யா பஞ்சதசாக்ஷரீ மஹா மந்த்ரஸ்ய தக்ஷிணாமூர்த்திః ரிஷிః காயத்ரீசந்தః ஶ்ரீ லளிதா த்ரிபுர ஸுந்தரீ தேவதா।
க ஏ ஈ ல ஹ்ரீம் பீஜம் ஸகல ஹ்ரீம் சக்திः
ஹஸக ஹல ஹ்ரீம் கீலகம் ஶ்ரீ லளிதாத்ரிபுரஸுந்தரீப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே விநியோகः

| | | |
|---|---|---|
| 1. | க ஏ ஈ ல ஹ்ரீம் | அங்குஷ்டாப்யாம் நமः |
| 2. | ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் | தர்ஜனீப்யாம் நமः |
| 3. | ஸகல ஹ்ரீம் | மத்யமாப்யாம் நமः |
| 4. | க ஏ ஈ ல ஹ்ரீம் | அனாமிகாப்யாம் நமः |
| 5. | ஹ ஸக ஹல ஹ்ரீம் | கனிஷ்டாகாப்யாம் நமः |
| 6. | ஸகல ஹ்ரீம் | கரதல கரப்ருஷ்டாப்யாம் நமः |

ஹ்ருதயாதிநியாஸः

| | | |
|---|---|---|
| 1. | க ஏ ஈ ல ஹ்ரீம் | ஹ்ருதயாய நமः |
| 2. | ஹஸக ஹல ஹ்ரீம் | சிரஸே ஸ்வாஹா |
| 3. | ஸகல ஹ்ரீம் | சிகாயை வஷட் |
| 4. | க ஏ ஈ ல ஹ்ரீம் | கவசாய ஹும் |

5. ஹஸக ஹல ஹ்ரீம் நேத்ரத்ரயாய வௌஷட்
6. ஸகல ஹ்ரீம் அஸ்த்ராய பட்

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்தஃ

த்யானம்

அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம்
த்ருதபாசாங்குச புஷ்பாணசாபாம்।
அணிமாதிபிஃ ஆவ்ருதாம் மயூகைஃ
அஹமித்யேவ விபாவயே பவானீம்॥

செந்நிறத்தினளும், கருணை அலை மோதும் கண்ணினளும், பாசம், அங்குசம், புஷ்ப பாணம், கரும்பு வில் இவற்றை நான்கு கரங்களில் தரித்தவளும், அணிமாதி சக்திகளோடு கூடியவளுமான ஸ்ரீ பவானியைத் தியானிக்கிறேன்.

லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி
ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி
யம் வாய்வாத்மிகாயை தூபமாக்ரபயாமி
ரம் வஹ்ன்யாத்மிகாயை தீபம் தர்சயாமி
அம் அம்ருதாத்மிகாயை அம்ருதோபஹாரம் ஸமர்பயாமி
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி

மூல மந்த்ரம்

க ஏ ஈ ல ஹ்ரீம் ஹஸக ஹல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம்

ஜபம் முடிந்தவுடன் ஹ்ருதயாதி நியாஸம் செய்து "பூர்புவஸ்ஸுவரோமிதி திக் விமோகஃ" எனத் திக்விமோகம் கூறி, த்யானம் லமித்யாதி பஞ்சபூஜை செய்யவும்.

ஸமர்பணம்

குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீ த்வம்
க்ருஹாணாஸ்மத்க்ருதம் ஜபம்।
ஸித்திஃ பவது மே தேவி
த்வத் ப்ரஸாதான் மயி ஸ்திரா॥

குறிப்பு: இம் மந்திரத்திற்குத் தியான சுலோகங்கள் பல உள்ளன. அவரவர் குருவின் உபதேசப்படி தியானச் சுலோகங்களைக் கூறிக்



கொள்ளலாம். அந்தந்த தியான சுலோகங்களில் பொருளை, அந்தந்த குருவின் மூலமாகவே தெரிந்து கொள்ளலாம். தியான சுலோகத்தின் பொருள் அறிந்து தியானம் செய்வது சிறந்த பயனைக் கொடுக்கும்.

श्री महा षोडशाक्षरीजपविधानं

अस्य श्री महा षोडशाक्षरीमहामन्त्रस्य श्री दक्षिणामूर्तिः ऋषिः पंक्तिःछन्दः जगदादिभूता श्रीमंत्त्रिपुर सुन्दरीदेवता। ऐं बीजं सौः शक्तिः क्लीं कीलकं सकलाभीष्ट सिद्ध्यर्थे जपे विनियोगः

करन्यासः

1. श्रीं ह्रीं क्लीं ऐं सौः अंगुष्ठाभ्यां नमः
2. ओं ह्रीं श्रीं तर्जनीभ्यां नमः
3. क ए ई ल ह्रीं मध्यमाभ्यां नमः
4. हसकहल ह्रीं अनामिकाभ्यां नमः
5. सकल ह्रीं कनिष्ठिकाभ्यां नमः
6. सौः ऐं क्लीं ह्रीं श्रीं करतल करपृष्ठाभ्यां नमः

अंगन्यासः

1. श्रीं ह्रीं क्लीं ऐं सौः हृदयाय नमः
2. ओं ह्रीं श्रीं शिरसे स्वाहा
3. क ए ई ल ह्रीं शिखायै वषट्
4. हसकहल ह्रीं कवचाय हुं
5. सकल ह्रीं नेत्रत्रयाय वौषट्
6. सौं ऐं क्लीं ह्रीं श्रीं अस्त्राय फट्

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

बालार्कायुततेजसं त्रिणयनां रक्तांबरोल्लासिनीं
नानालंकृति राजमानवपुषं बालोडुराट् शेखरां

हस्तैरिक्षुधनुः सृणिं सुमशरं पाशं मुदा बिभ्रतीं
श्री चक्रस्थित सुन्दरीं त्रिजगतां आधारभूतां स्मरेत् ॥
(बाण - अंकुशौ दक्षहस्तयोः धनुः - पाशौ वामहस्तयोः रिति ध्येयं)
लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि
हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि
यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि
अं अमृतात्मिकायै अमृतोपहारं समर्पयामि
सं सर्वात्मिकायै सर्वोपचारान्समर्पयामि
मूलमन्त्रः

श्रीं ह्रीं क्लीं ऐं सौः ओं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं हसकहल ह्रीं सकल ह्रीं सौः ऐं क्लीं ह्रीं श्रीं''

जपान्ते हृदयादि न्यासः भूर्भुवस्सुवरोमिति दिग्विमोकः ध्यानं, लमित्यादिपूजा
समर्पणं
गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा ॥

## ஸ்ரீ மஹா ஷோடசாக்ஷரீ மஹாமந்த்ர ஜப விதானம்

அஸ்ய ஸ்ரீ மஹா ஷோடசாக்ஷரீ மஹாமந்த்ரஸ்ய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திः ரிஷிः பங்திः சந்தः ஜகதாதிபூதா ஸ்ரீமத் த்ரிபுர ஸுந்தரீ தேவதா ஐம்பீஜம் ஸௌः சக்திः க்லீம் கீலகம் ஸகலாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே வினியோகः ॥

கரந்யாஸः

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம் ஸௌः | அங்குஷ்டாப்யாம் நமः |
| 2. | ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் | தர்ஜனீப்யாம் நமः |
| 3. | க ஏ ஈ ல ஹ்ரீம் | மத்யமாப்யாம் நமः |
| 4. | ஹஸக ஹல ஹ்ரீம் | அனாமிகாப்யாம் நமः |
| 5. | ஸகல ஹ்ரீம் | கனிஷ்டிகாப்யாம் நமः |
| 6. | ஸௌः ஐம் க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் | கரதலகரப்ருஷ்டாப்யாம் நமः |



| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம் ஸௌः | ஹ்ருதயாய நமः |
| 2. | ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் | சிரஸே ஸ்வாஹா |
| 3. | க ஏ ஈ ல ஹ்ரீம் | சிகாயை வஷட் |
| 4. | ஹஸக ஹல ஹ்ரீம் | கவசாய ஹும் |
| 5. | ஸகல ஹ்ரீம் | நேத்ரத்ராய வௌஷட் |
| 6. | ஸௌः ஐம் க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோமித்தி திக்பந்தः

தியானம்
பாலார்காயுத தேஜஸம் த்ரிணயனாம் ரக்தாம்பரோல்லாஸினீம்
நானாலங்க்ருதி ராஜமான வபுஷம் பாலோடுராட்சேகராம்।
ஹஸ்தைரிக்ஷுதனுः ஸ்ருணிம் ஸுமசரம் பாசம் முதா பிப்ரதீம்
ஸ்ரீ சக்ரஸ்தித ஸுந்தரீம் த்ரிஜகதாமாதாரபூதாம் ஸ்மரேத் ॥

*(பத்தாயிரம் இளம் சூரியனின் ஒளியை உடையவளும், முக்கண்ணியும், சிவப்பு ஆடை தரித்தவளும், பலவித ஆபரணங்களால் அழகிய தேஹம் உடையவளும், பிறைச் சந்திரனைச் சிரத்தில் அணிந்தவளும், கைகளால் கரும்பு வில், அங்குசம், புஷ்ப பாணம், பாசம் (கயிறு) இவற்றைத் தரித்திருப்பவளும் (வலது கரங்களில் பாணம் அங்குசம், இடது கரங்களில் வில், பாசம்). ஸ்ரீ சக்ரத்தில் வீற்றிருப்பவளும் மூவுலகினுக்கும் ஆதாரமாய் உள்ளவளுமாக ஸ்ரீ சக்ரத்தில் அமர்ந்தருளும் பேரழகியை ஸ்மரிக்க வேண்டும்).*

லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி
ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி
யம் வாய்வாத்மிகாயை தூபமாக்ராபயாமி
ரம் வன்ஹ்யாத்மிகாயை தீபம் தர்சயாமி
அம் அம்ருதாத்மிகாயை அம்ருதோபஹாரம் ஸமர்பயாமி
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி
மூல மந்த்ரம்
"ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம்ஸௌः க ஏ ஈ ல ஹ்ரீம் ஹஸக ஹல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம் ஸௌः ஐம் க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம்"

ஜபம் முடிந்தவுடன் ஹ்ருதயாதி நியாஸம், பூர்புவஸ்ஸுவரோமிதி திக்விமோக: தியானம், லமித்யாதி பூஜை செய்து

ஸமர்ப்பணம்
குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீ த்வம்
க்ருஹாணாஸ்மத்க்ருதம் ஜபம்
ஸித்திர்பவது மே தேவி
த்வத்ப்ரஸாதான் மயி ஸ்திரா.

குறிப்பு: இந்த ஷோடசக்ஷரீ மந்திரத்திற்குப் பலவிதமான தியானங்கள் உள்ளன. அவரவர் குருவின் உபதேசப்படி தியான சுலோகங்களைக் கூறிக்கொள்ளலாம். அந்தந்தத் தியானச் சுலோகங்களுக்குப் பொருளை, அந்தந்த குருவின் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம். தியான சுலோகத்தின் பொருள் தெரிந்து தியானம் செய்து ஜபித்தால் சிறந்த பலனைப் பெறலாம்.



# श्री ललिता शरितम्

## ஸ்ரீ லலிதா சரிதம்

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ

सिन्दूरारुणविग्रहां त्रिनयनां माणिक्य मौलिस्फर
त्तारानायकशेखरां स्मितमुखीं आपीनवक्षोरुहां।
पाणिभ्यां अलिपूर्णरत्नचषकं रक्तोत्पलं बिभ्रतीं
सौम्यां रत्नघटस्थ सव्यचरणां ध्यायेत्परामंबिकाम्॥

ஸிந்தூராருண விக்ரஹாம் த்ரிணயனாம் மாணிக்ய மௌளிஸ்புரத்
தாராநாயகசேகராம் ஸ்மிதமுகீம் ஆபீனவக்ஷோருஹாம்।
பாணிப்யாம் அளிபூர்ண ரத்ன சஷகம் ரக்தோத்பலம் பிப்ரதீம்
ஸௌம்யாம் ரத்ன கடஸ்த ஸ்வயசரணும் த்யாயேத் பராம் அம்பிகாம்॥

ஸர்வ லோக ஜனனீயான ஸ்ரீ லளிதா பரமேச்வரீயை இவ்வாறு தியானிக்க வேண்டும் என்று லளிதா ஸஹஸ்ரநாம த்யான சுலோகம் குறிப்பிடுகின்றது. குங்குமம் போன்ற சிவந்த நிறமுடையவளாய், முக்கண்ணியாய், மாணிக்கக் கிரீடத்தின் மீது சந்திர கலை தரித்தவளாய் புன்சிரிப்புத் தவழும் முகத்தினளாய், பருத்த ஸ்தனமுள்ளவளாய், வண்டுகள் மொய்க்கும் ரத்னமயமான பாத்திரத்தையும் செந்தாமரை மலரையும் தாங்கும் இரு கர கமலங்கள் உடையவளாய், அனுக்ரஹம் செய்யும் மூர்த்தி உடையவளாய், ரத்னக் குடத்தில் வைக்கப்பட்ட தன் இடது சரண கமலமுடையவளாய் (அதாவது தன் இடது காலை கடார்கள யந்த்ரத்தின் மீது வைத்திருப்பவளாய்) லளிதா பரமேச்வரியைத் தியானிக்க வேண்டும் என்பது இதன் கருத்து. இதை லளிதா ஸஹஸ்ரநாம்ாவின் தியான சுலோகமாக, மஹனீயர்களான ஸ்ரீ பாஸ்கர ராயாசார்யார் அவர்கள் ஏற்று, உரை இயற்றியிருக்கின்றார்கள். இந்த சுலோகத்தை, மூன்று அக்ஷரங்கள் கொண்ட த்ரியக்ஷரீ புவனேச்வரீ மந்த்ரத்திற்குத் தியான சுலோகமாகவும் சாரதா திலகம் குறிப்பிடுகின்றது: இந்தத் தியானத்தினால் ஸ்ரீ லளிதா தேவியும், ஸ்ரீ புவனேச்வரீ தேவியும் ஒன்றாகின்றார்கள். அவ்வாறான சிறந்த தியான சுலோகம் இது.

என்று உதிக்கும் சூரியன் போன்ற ஒளியுடையவள், உலகை உய்விக்கும் உருவினள், பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர் உருவானவள், சிறந்த அழகின் கடைசி எல்லை, ஆனந்த ரஸக் கடல், செம்பரத்தைப் பூப் போன்று பிரகாசிப்பவள், மாதுளம் பூப் போன்ற செந்நிற ஆடை அணிந்தவள், ஆபரணங்கள் நிறைய அணிந்து கொண்டிருப்பவள், சிருங்கார ரஸத்தின் இல்லம், கருணை அலை மோதும் கடைக்கண், உலகை மகிழச் செய்யும் சந்திரிகை, பாசம், அங்குசம், கரும்பு வில், பஞ்ச புஷ்பபாணம் கொண்டவள் இவள் என்று லளிதையின் ஸ்வரூபத்தை வர்ணிக்கின்றது லளிதோபாக்யானம்.

வஜ்ரம் போன்ற உறங்கொண்டது. இக் கரும்பு வில். இது பிரம்ம தேவனால் அன்னைக்கு அளிக்கப்பட்டதாகும். பகவான் மஹா விஷ்ணுவினால் அளிக்கப்பட்டது வாடாத குஸுமசரம். வருணன் பாசத்தை அளித்தான். விசுவகர்மா அங்குசத்தை ஈந்தான்.

அமரர் குலத்திற்குத் தொல்லைகள் பல தந்த பண்டாசுரனை அழிக்க, அவதரித்தருளினான் இந்த லளிதா பராபட்டாரிகை. ஒரு சமயம் சிவ நேத்ராக்னியினால் பஸ்மமாகப் போனான் மன்மதன். சித்ரஸேனன் என்ற கணநாதன், அந்தப் பஸ்மாவை ஒரு புருஷ வடிவமாகச் செய்ய, அதைப் பகவான் பரமேச்வரன் பார்க்க, அவர் அருள் நோக்கால் அது உயிர் பெற்று எழுந்தது. அவனுக்கே பண்டன் என்று பெயர். ருத்ர கோபமாகிய நெருப்பினால் சாம்பல் ஆக்கப்பட்டு, அந்தச் சாம்பலில் இருந்து பிறந்த காரணத்தினால் ரௌத்ர ஸ்வபாவம் உள்ளவனாகவும், அரக்கனாகவும் ஆனான் பண்டன். அவன் பரமேச்வரனிடமிருந்து 60,000 ஆண்டுகள் பெரு வாழ்வும், சத்துருக்களிடம் சண்டையிடும் போது அவர்களது பாதி பலம் தனக்குச் சேர வேண்டும் என்றும், சத்ருக்களின் அஸ்திர சஸ்திரங்கள் தன்னை ஹிம்ஸிக்காது இருக்குமாறும் வரங்கள் பல பெற்றான்.

சுக்ராசாரியாரினால் அரசு ஸாம்ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டு, மயனால் நிர்மாணிக்கப்பட்ட ''சோணிதபுரம்'' என்ற பட்டிணத்தில் அமர்ந்து அரசு புரிந்து வந்தான். இது மாஹேந்த்ர மலையின் பக்கத்திலே ஸமுத்திரக் கரையில் அமைக்கப்பட்டது. 100 யோசனை அகலம் கொண்டது. இதற்கு ''சூன்யம்'' என்ற மற்றொரு பெயரும் உண்டு என்று பேசுகின்றது புராணம்.



இவன் ஸம்மோஹினி, குமுதினி, சித்ராங்கி, சுந்தரீ என்ற நான்கு மனைவியருடனும், மற்ற புத்திர பௌத்ராதிகளுடனும், பந்துக்களுடனும் அரசு புரிந்து வந்தான். அவன் இந்த்ராதி தேவர்களுக்குக் கொடுத்த தொல்லைகளோ அனந்தம்.

இதைத் தாங்காத தேவர், நாரதர் உபதேசப்படி இமாலயத்தின் ஸமீபத்தில் இந்திரப்ரஸ்தம் என்ற இடத்தில் அமர்ந்து பராசக்தியை வழிபட்டனர்.

## மஹாயாகம்

பராசக்தி ப்ரத்யக்ஷமாய் வராததால், தேவர், ஒரு யோசனை அளவு கொண்ட குண்டம் நிர்மாணம் செய்து, தன் அவயவங்களை அறுத்து அதில் ஹோமம் செய்து கடைசியில் தங்களையே அக்னியில் ஹோமம் செய்ய முயலும்போது ஸ்ரீ பராசக்தி அந்த அக்னி குண்டத்தினின்றும் எழுந்தாள். இதை மஹா யாக க்ரமாராத்யா என்று கூறுகின்றது ஸஹஸ்ரநாமா. பராசக்தியின் கருணா கடாக்ஷம் பெற்ற மாத்திரத்தில், வஜ்ர தேஹம் படைத்தவர்களாய், நிறைந்த பூர்ணமான அங்கங்கள் உள்ளவர்களாய், தேவர் எழுந்தனர். அன்னை பராசக்தியைத் துதித்தனர். இந்த ஸ்துதிக்கு ''லளிதா ஸ்தவராஜம்'' என்று பெயர்.

## லளிதா பட்டாபிஷேகம்

மூவரும் முப்பத்து முக்கோடி தேவரும், அனைவரும் ஒன்றுகூடி லளிதா தேவியைத் துதிக்க, ''அஞ்சேல்'' என அருள் வழங்கினாள். தேவர் அனைவரும் ஸ்ரீ மாதாவை ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரியாய் அமர்த்தி, பட்டாபிஷேகம் செய்ய விரும்பினர். சாஸ்திரங்களோ, ''மனைவி இல்லாத புருஷனோ, புருஷனை மணந்து கொள்ளாத நங்கையோ ஆளத் தகுதி அற்றவர்'' என்று கூறுவதால், அழகின் உருவமான சிருங்கார தேவதையான லளிதா தேவிக்குப் பொருத்தமானவர் சிவகாமேச்வரரே ஆவார். அவர் திவ்ய தேஹம் படைத்தவர். கோடி மன்மதர்கள் ஒன்றாய்த் திரண்டது போன்ற உருவத்தினர். திவ்ய கேயூர கடக கிரீடாதிகளால் அலங்கிருதனாய் இருப்பவர் எனக் கருதி, இருவருக்கும் திருமணம் செய்து வைத்தனர். காமேச்வரீயான லளிதா தேவீ ''மஹாராஞ்ஞீ'' என்ற பெயர் கொண்டாள். இவள் காமேச்வரரின் மனைவியாயினும் स्वाधीनवल्लभा

ஸ்வாதீனவல்லபா - சுதந்திரை. புருஷனைத் தன் வசம் வைத்திருப்பவள். இவளை நினைத்த இடத்திற்குச் செல்லக் கூடியதும், வாடா மலர் மாலை உடையதுமான "குஸுமாகரம்" என்ற விமானத்தில் வீதி வலம் அழைத்து வந்து, சிம்மாஸனத்தில் அமர்த்தி, பட்டாபிஷேகம் செய்து வைத்தனர். அங்கு உள்ளவர்களின் காமனைகளை எல்லாம் அவள் பூர்த்தி செய்தாள். ஆகவே பிரமன் அவளுக்குக் காமாக்ஷீ என்றும் பெயர் சூட்டினார்.

தேவர் வேண்டுகோளுக்கு இணங்கி, பண்டாசுர வதத்திற்காகப் புறப்பட்டாள் லலிதா தேவி. அவளுடைய அங்குசத்தினின்றும் தோன்றிய யானைப் ப்டைத் தலைவியான "ஸம்பத்கரீ" தேவியும், பாசத்தினின்றும் உதித்த குதிரைப் படைத் தலைவியான "அச்வாருடா" தேவியும், தன் வாஹனத்துடனும் படையுடனும் லலிதா தேவியுடன் வந்தனர். வராஹ முகமுடைய "தண்டனாதா" தேவி கிரிசக்ரம் என்ற ரதத்தில் ஏறி வந்தாள். கேய சக்ரத்தில் அமர்ந்து "மந்த்ரிண்யம்பா" தன் பரிவாரம் புடை சூழப் பின் தொடர்ந்தாள். இந்த ஸங்கீத யோகினீ எந்த மந்த்ரிண்யம்பாவின் கையில் உள்ள கிளியினின்றும் எழுந்ததே தனுர் வேதமென்பர்.

## சக்ர ராஜ ரதம்

சக்ர ராஜம் எனப் பெயர் கொண்ட ரதத்தில் அமர்ந்து காட்சி கொடுத்தாள் லலிதா பராபட்டாரிகா. இதை चक्रराजरथारूढा सर्वायुध परिष्कृता (சக்ர ராஜ ரதா ரூடா ஸர்வாயுத பரிஷ்க்ருதா) என்று பேசுகின்றது லலிதா ஸஹஸ்ரநாமம்.

ஒன்பது ஆவரணங்கள் கொண்டது இந்த ஸ்ரீ சக்ர ராஜம். த்ரைலோக்ய மோஹன சக்ரம், ஸர்வாசா பரிபூரக சக்ரம், ஸர்வ ஸம்க்ஷோபண சக்ரம், ஸர்வ ஸௌபாக்யதாயக சக்ரம், ஸர்வார்த்த ஸாதக சக்ரம், ஸர்வ ரக்ஷாகர சக்ரம், ஸர்வரோக ஹர சக்ரம், ஸர்வ ஸித்தி ப்ரத சக்ரம், ஆனந்தமய சக்ரம் என்று நவாவரணங்களுக்கும் பெயர் கூறுகின்றது லலிதோபாக்யானம்.

முறையே இவற்றில் வாசம் செய்யும் சக்திகளை, ப்ரகட யோகினிகள், குப்த யோகினிகள், குப்ததர யோகினிகள், ஸம்ப்ரதாய யோகினிகள், குலோத்தீர்ண யோகினிகள், நிகர்ப யோகினிகள், ரஹஸ்ய யோகினிகள், அதிரஹஸ்ய யோகினிகள், பரம ரஹஸ்ய யோகினிகள் என்று அழைக்கும் புராணம்.



இந்த ஒன்பதாவதாகிய ஆனந்தமய சக்ரத்தில்தான் परब्रह्मरूपिणी, परामृत शक्तिस्वरूपिणी, सर्व मन्त्रेश्वरी, सर्व यन्त्रेश्वरी, सर्व तन्त्रेश्वरी, सर्व चक्रेश्वरी, सर्व पीठेश्वरी, महा भट्टारिका, श्री ललिता परमेश्वरी பரப்ரஹ்ம ஸ்வரூபிணீ, பராம்ருத சக்தி ஸ்வரூபிணீ, ஸர்வ மந்த்ரேச்வரீ, ஸர்வ யந்த்ரேச்வரீ, ஸர்வ தந்த்ரேச்வரீ, ஸர்வ சக்ரேச்வரீ, ஸர்வ பீடேச்வரீ, மஹா பட்டாரிகா, ஸ்ரீ லலிதா பரமேச்வரீ) அமர்ந்து அருள் வழங்குகின்றாள். இந்தச் சக்ர ராஜ ரதத்திற்கு மூன்று பெண்களும், மூன்று ஆண்களும் ஸாரதிகள். இரா தேவீ, த்ரிபுர பைரவீ, சாமுண்டா, ஸம்ஹார பைரவர், ரக்த யோகினி வல்லப்ர், ஸாரஸர் என்பராவார் அவர்.

லலிதா தேவி ரதமேறி பண்டாசுரனின் பட்டிணமான சூன்யகத்தை அடைந்தாள். பெரும் போர் நிகழ்ந்தது. இரண்டாம் நாள் யுத்தத்தில் "பலாத்புரி ஸுந்தரீ" பண்டனின் 30 புத்திரர்களையும் அழித்தாள்.

भण्डपुत्र वधोद्युक्तबाला विक्रमनन्दिता।

பண்ட புத்ர வதோத்யுக்த பாலாவிக்ரமநந்திதா।

என்றபடி பாலையின் பராக்ரமம் கண்டு மகிழ்ந்தாள் லலிதா தேவி.

## கணபதி ஆவிர்பாவம்

விசுக்ரன், விஷங்கன் இருவரும் பண்டனின் சகோதரர்கள். இவர்களில் விசுக்ரன், விக்னயந்த்ரத்தை வன்ஹிப்ராகாரத்தின் வெளியில், சிலையில் எழுதி, உள்ளே எறிந்து விட்டான். அதனால் சக்திகள் செலயற்றுக் கிடந்தனர். இதை மந்த்ரிண்யம்பா தண்டனாதா இருவரும் லலிதா தேவியிடம் கூற, லலிதா காமேச்வரரின் முகத்தை நோக்கினாள். அங்கு மஹா கணபதி தோன்றினார்.

कामेश्वर मुखालोक कल्पित श्रीगणेश्वरा।

காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேச்வரா।

என்றிதை ஸஹஸ்ரநாமா குறிப்பிடுகின்றது. இது அந்த விநாயகரின் தியான சுலோகம்.

बीजापूरगदेक्षुकार्मुक रुजा चक्राब्ज पाशोत्पल
व्रीह्यग्र स्वविषाणरत्नकलश प्रोयत्करांभोरुहः ।
ध्येयो वल्लभया सपद्मकरया श्लिष्टो ज्वलद्भूषया
विश्वोत्पत्तिविपत्ति संस्थितिकरो विघ्नेश इष्टार्थदः ॥

பீஜாபூர கதே க்ஷு-கார்முக ருஜா சக்ராப்ஜ பாசோத்பல
வ்ரீஹ்யக்ர ஸ்வவிஷாண ரத்னகலச ப்ரோத்யத் கராம்போருஹ:।
த்யேமோ வல்லபயா ஸபத்மகரயா ச்லிஷ்டோ ஜ்வலத்பூஷயா
விச்வோத்பத்தி விபத்தி ஸம்ஸ்திதிகரோ விக்னேச இஷ்டார்த்தத:॥

கொய்யாப் பழம், கதை, கரும்பு வில், சூலம், சக்ரம், தாமரை மலர், பாசம், நீலோத்பலம், நெற்கதிர், தன் தந்தம், ரத்ன கலசம் இவை விளங்கும் கரத்தினர் (துதிக்கை சேர்த்து பதினோரு கரங்கள்) தாமரை தாங்கும் கரம் உடையவளும் ஜ்வலிக்கும் ஆபரணங்கள் உடையவளுமான வல்லபா தேவியுடன் இருப்பவரும், உலகின் உற்பத்தி, நாசம், ரக்ஷணம் இவற்றைச் செய்பவரும், இஷ்டத்தை அளிப்பவருமான விக்னேச்வரரைத் தியானிக்க வேண்டும் என்பது இதன் பொருள். கணபதி லளிதா தேவியை வணங்கி அவள் ஆசி பெற்று, தன் தந்தத்தால் விக்ன யந்த்ரத்தைச் சூர்ணம் செய்து வெளியில் எடுத்து வீசினார். இதனால் லளிதா மகிழ்ந்தாள். महागणेश निर्भिन्न विघ्नयन्त्र प्रहर्षिता மஹா கணேச நிர்பின்ன விக்னயந்த்ர ப்ரஹர்ஷிதா என்று ஸஹஸ்ரநாமா கூறுகின்றது.

உடன் லளிதா தேவர் அனைவருக்கும் முன் பூஜிக்கப்படும் வரத்தை கணேசருக்கு அருளினாள்.

विततार महाराज्ञी प्रीयमाणा गणेशितुः ।
सर्व दैवत पूजायाः पूर्व पूज्यत्वमुत्तमम् ॥

விததார மஹாராஞ்ஞீ ப்ரீயமாணா கணேசிது:।
ஸர்வதைவத பூஜாயா: பூர்வ பூஜ்யத்வமுத்தமம்:॥

மூன்றாம் நாள் யுத்தத்தில் தண்டிணீ விசுக்ரனைக் கொன்றாள். 4ம் நாள் யுத்தத்தில் லளிதைக்கும் பண்டனுக்கும் நேருக்கு நேர் சண்டை நடந்தது. 55 ஸேனா நாயகர்களும் 2150 அக்ஷௌஹிணீ சேனையும் புடைசூழ, ஆபிலம் என்ற ரதமேறி, யாதனா என்ற கத்தியை ஏந்தியவனாய் பண்டன் லளிதா தேவியை எதிர்த்தான்.



## பண்டாசுர வதம்

லளிதை நான்கு வேதங்களும் சக்ரங்களாக, நான்கு புருஷார்த்தங்களும் குதிரைகளாக, ஆனந்தம் கொடியாக, 9 ஆவரணங்களுடன் கூடிய சக்ர ராஜ ரதத்தில் ஏறியமர்ந்து, பரார்த்தத்துக்கு மேல் சேனை சூழ்ந்து வர, யுத்த பூமி வந்தாள். சக்ர ராஜ ரதம் 10 யோசனை உயரமும், 4 யோசனை அகலமும் கொண்டதாய்க் காட்சி கொடுத்தது. பண்டன் ஹிரண்யாக்ஷன் முதலியவர்களை அஸ்திரங்களாய்ப் போட, कराङ्गुलिनखोत्पन्न नारायण दशाकृतिः (கராங்குலி நகோத்பன்ன நாராயணதசாக்ருதி:) என்றவாறு லளிதா பரமேச்வரீ தன் கை விரல்களினின்றும் மஹா வராஹம் முதலிய அஸ்த்ரங்களை உண்டாக்கி, அவற்றை அழித்தாள். 4ம் நாள் சாயங்காலம் லளிதை நாராயணாஸ்திரத்தால் பண்ட சேனையையும், பாசுபதாஸ்திரத்தினால் 40 சேனாபதிகளையும்,

महा पाशुपतास्त्राग्नि निर्दग्धासुर सैनिका ।

மஹாபாசுபதாஸ்த்ராக்னி நிர்தக்தாஸுரஸைனிகா।

कामे श्वरास्त्र निर्दग्ध सभण्डासुरशून्यका ।

காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாசுரசூன்யகா।

என்றபடி காமேச்வர அஸ்திரத்தினால் பட்டினத்துடன் பண்டாசுரனையும் அழித்து, தேவர்களுக்கு மகிழ்ச்சி அளித்தாள். மகிழ்ந்த தேவர்,

कामेश्वरोत्संग सदानिवासे कलात्मिके कन्दलितानुकंपे ।
कल्पावसानोद्यत कालिरूपे कामप्रदे कल्पलते नमस्ते ॥

காமேச்வரோத்ஸங்கஸதா நிவாஸே
கலாத்மிகே கந்தளிதானுகம்பே।
கல்பவாஸானோத்யத காளிரூபே
காமப்ரதே கல்பலதே நமஸ்தே॥

என்றெல்லாம் கூறித் துதித்தனர். இதை ப்ரம்ஹோபேந்த்ர மஹேந்த்ராதி தேவ ஸம்ஸ்துத வைபவா (ब्रह्मोपेन्द्र महेन्द्रादि देवसंस्तुतवैभवा) என்று குறிப்பிடுகின்றது ஸஹஸ்ரநாமா.

## ஸ்ரீ புரம்

பிரம்மாதி தேவர் விச்வகர்மாவையும் மயனையும் அழைத்து லலிதா தேவிக்கு ஸ்ரீ புரம் நிர்மாணம் செய்யுமாறு கட்டளை இட்டனர். 16 இடங்களிலே பட்டினங்களை அமைக்குமாறும் உத்தரவிட்டனர். 1. மஹா மேரு, 2. நிஷதபர்வதம், 3. ஹேமகூடம், 4. ஹேமகிரி, 5. கந்தமாதனம், 6. நீலமேகம், 7. ச்ருங்கம், 8. மஹேந்த்ரம், 9. மஹாகிரி என்பவை பூமியில் உள்ள இடங்களாகும். லவண ஸாகரம், இக்ஷுஸாகரம், ஸுராஸாகரம், ஸர்பிஸாகரம், ததிஸாகரம், க்ஷீர ஸாகரம், ஜலஸாகரம் என்ற ஏழு கடல்கள். இவையே முன் கூறிய 16 க்ஷேத்திரங்கள்.

மேருவில் உள்ள ஸ்ரீ புரத்தைக் காண்போம். மேருவில் நான்கு சிகரங்கள் உள்ளன. அதன் நடுச் சிகரத்திலே அமைக்கப்பட்டிருக்கின்றது ஸ்ரீபுரம். இப்பட்டினத்திற்கு 25 பிராகாரங்கள். அவையாவன:— 1. இரும்பு, 2. வெங்கலம், 3. செப்பு, 4. அலுமினியம், 5. பித்தளை, 6. பஞ்ச லோஹம், 7. வெள்ளி, 8. தங்கம், 9. புஷ்பராகம், 10. பத்மராகம், 11. கோமேதகம், 12. வைரம், 13. வைடூரியம், 14. இந்திர நீலம், 15. முத்து, 16. மரகதம், 17. பவளம், 18. மாணிக்கம், 19. பல ரத்னங்கள், 20. மனஸ், 21. புத்தி, 22. அகங்காரம், 23. சூர்யபிம்பம், 24. சந்திர பிம்பம், 25. ச்ருங்காரம் என்பனவாம்.

இந்த 25 பிராகாரங்களுக்கு இடையில் மஹாபத்மாடவியினால் சூழப்பட்டு, சிந்தாமணி மயமான க்ருஹம் மிகவும் அழகாய் விளங்குகின்றது. இந்த ஸ்ரீபுரத்தின்மையமான இடம் இரண்டு யோசனை விஸ்தாரம் உடையது. இங்கு எல்லாம் சிந்தாமணி மயம். இச்சை, ஞானம், கிரியை இவை ஸ்தூபிகளாகவும், பூர்வாம்னாயம், தக்ஷிணாம்னாயம், பச்சிமாம்னாயம், உத்ராம்னாயம் இவையெல்லாம் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்ற நான்கு வாயில்களாகவும் பிரகாசிக்கின்றன.

இந்த க்ருஹத்தின் மையமான இடம் பிந்து சக்ரம். இதைச் சுற்றிலும் 9 ஆவரணங்களின் தேவதைகள் வீற்றிருக்கின்றனர். இது பிந்து பீடம்,



ஸ்ரீ பீடம், மஹாபீடம், வித்யா பீடம், ஆனந்த பீடம் என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றது. உலகில் 50 சக்தி பீடங்களாய்த் திகழ்வதும் இந்தப் பீடமே.

இதில் லலிதா தேவியின் மஞ்ச ரத்னம் இருக்கின்றது. அதற்குப் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன் இந்த நால்வரும் கால்களாய் இருக்கின்றனர். ஸதாசிவன் பலகையாகவும், 36 தத்துவங்கள் படிகளாகவும் விளங்குகின்றன. மேலே ஹம்ஸதூலிகா. இரண்டு பக்கமும் இரண்டு தலையணைகள். அதன்மீது சிகப்பு வஸ்திரம் விரிக்கப்பட்டிருக்கும்.

## காமேச்வரர்

அதில்,

शृंगारवेषरुचिरः सदा षोडशवार्षिकः ।
उद्यत्भास्कर बिंवाभः चतुर्हस्त स्त्रिलोचनः ॥

ச்ருங்கார வேஷருசிரஃ ஸதா ஷோடச வார்ஷிகஃ ।
உத்யத்பாஸ்கர பிம்பாபஃ சதுர்ஹஸ்தஃ த்ரிலோசனஃ ॥

என்றபடி அழகியவராய் சிருங்கார ரஸத்தைக் குறிக்கும் வேஷத்தினராய் 16 வயதுடையவராய் காமேச்வரர் திகழ்வார். அவருடைய மடியில்,

...... तरुणादित्यपाटला ।
सदाः षोडशर्षा च नव यौवन दर्पिता ॥
समस्त लोकमाता च सदानन्द विवर्धिनी ॥
ब्रह्मविष्णु गिरीशेश सदाशिवनिदासभूः ।
भासते सा भगवती पापघ्नी ललितांबिका ॥

........ தருணாதித்ய பாடலா ।
ஸதாஷோடச வர்ஷா ச நவயௌவனதர்பிதா ॥
ஸமஸ்தலோக மாதாச ஸதானந்த விவர்த்திநீ
ப்ரம்ஹவிஷ்ணு கிரீசேச ஸதாசிவ நிவாஸபூஃ
பாஸதே ஸா பகவதீ பாபக்னீ லலிதாம்பிகா ॥

உதய சூரியன் போன்ற சிவந்த நிறம் உள்ளவளும், எப்போதும் பதினாறு வயதுடையவளும், புதிய யௌவனத்தினளும், உலகங்களுக்கெல்லாம் அன்னையும், எப்போதும் ஆனந்தத்தை வளர்ப்பவளும், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேசன், ஸதாசிவன் இவர்களைப் பீடமாய்க் கொண்டவளும், பாபத்தை நீக்குபவளுமாகிய பகவதீ ஸ்ரீ லலிதாம்பிகை பிரகாசித்துக் கொண்டிருக்கின்றாள். இவளுடைய அழகை லலிதா ஸஹஸ்ரநாமா விஸ்தாரமாய் வர்ணிக்கின்றது.

## லலிதா

செக்கச் சிவந்தத் திருமேனி, சம்பகம், அசோகம் முதலிய பூக்கள் சூடிய கூந்தல், பத்ம ராகக் கற்களால் ஜ்வலிக்கும் கிரீடம், பிறைச் சந்திரன் போன்ற நெற்றி, கருப்பு நிறக் கஸ்தூரிப் பொட்டு, அழகிய புருவங்கள், மீன் போன்ற விழிகள், சம்பகப் பூப் போன்ற நீண்ட மூக்கு, நக்ஷத்திரம் போல் ஜ்வலிக்கும் மூக்குத்தி, கடம்பப் பூங்கொத்து அலங்கரிக்கும் காதுகள், சந்திர சூரியரே தோடுகள், பத்ம ராகத்தாலான கண்ணாடி போன்ற கன்னம், பவளத்தைப் பழிக்கும் உதடுகள் பதினாறு பதினாறாக இரண்டு வரிசையான அரும்புப் பற்கள், கற்பூரம் கலந்த வெற்றிலைப் பாக்கின் வாசனை, ஸரஸ்வதியின் வீணையைப் பழிக்கும் இனிய சொல், காணபோரைச் சொக்க வைக்கும் புன்முறுவல், உவமை காணாத மோவாய், கழுத்தில் காமேசர் கட்டிய மாங்கல்ய சூத்திரம், கடக கேயூரம் அணிந்த கைகள், மூன்று மடிப்புகள் கொண்ட சிற்றிடை சிவப்புப் பட்டு, ரத்னங்கள் இழைத்த உயர்ந்த ஒட்டியாணம், சரக் கூடு போன்ற கணுக் கால்கள், பணிந்தவரின் தமோ குணத்தைப் போக்கும் நகங்கள், தாமரை மலரைத் தோற்கடிக்கும் சரண கமலங்கள், சப்திக்கும் பாத ஸரங்கள், ஹம்ஸ நடை, அழகின் புதையல் என்று.

## லலிதா ஸஹஸ்ரநாமா

இந்த லலிதா ஸஹஸ்ரநாமா ஒரு பெருமை மிக்க ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம். சில ஸஹஸ்ர நாமாக்களில் 1008 நாமாக்கள் இருந்தாலும் ச.வை.து.ஹி முதலிய வெற்றுச் சொற்கள் நிறைந்திருக்கும். லலிதா ஸஹஸ்ர நாமாவிலோ ஒரு ச.வை.து.ஹியைக் காண முடியாது. அத்துடன் இந்த லலிதா ஸஹஸ்ர நாமாவிலுள்ள பெயர்கள் மஹா மந்த்ரங்களைத் தன்னகத்தே தாங்கித் திகழ்கின்றன. உதாரணமாக:



**श्रीमाता श्री महाराज्ञी श्रीमत्सिंहासनेश्वरी।**

**ஸ்ரீ மாதா ஸ்ரீ மஹாராஞ்ஞீ ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ॥**

என்ற இடத்தில் ஸ்ரீ மஹாராஞ்ஞீ என்ற சொல் ஹ்ரீம் என்ற மந்த்ரத்தை ரஹஸ்யமாய்த் தாங்கி நிற்கின்றது. ஹகாரம் ரேபம் ஈகாரம் மகாரம் ஹ்ரீங்காரத்தில் உண்டு. இதையே மஹாராஞ்ஞீயிலும் காணலாம் (அக்ஷரங்கள் முறை மாறியிருக்கின்றன). இந்த லலிதா ஸஹஸ்ரநாமாவிற்கு ஸௌபாக்ய பாஸ்கரம் என்ற உரைகண்ட மஹாசாக்தரான பாஸ்கர ராயாசார்யார் அவர்கள்

**रागस्वरूप पाशाढया क्रोधाकारांकुशोज्वला।**

**ராகஸ்வரூபபாசாட்யா க்ரோதாகாராங்குசோஜ்வலா।**

என்ற இடங்களில் மந்த்ர சாஸ்த்ர ரஹஸ்யங்களைத் தெளிவாக விளக்கி இருக்கின்றார்கள். அத்துடன் இந்த ஸஹஸ்ரநாமாவில் லலிதோபாக்யானமும் இழைந்து வருவதைக் காணலாம். இது இந்த ஸஹஸ்ரநாமாவின் ஏற்றத்திற்குக் காரணம். அத்துடன் இம் மாதிரியான சொற்சுவை, பொருட் சுவை நிறைந்த வேறு ஸஹஸ்ர நாமாவைக் காண்பது துர்லபம்.

இந்த ஸஹஸ்ர நாமா வசினீ முதலிய வாக்தேவிகளால் இயற்றப்பட்ட பெருமை உடையது. வசினீ காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேச்வரீ, கௌலினீ என்ற எண்மர் வசின்யாதி சக்திகள். இவர்கள் வாக்கின் ஜனனீக்கள். வெண்ணிறமுடையவர்கள். இவர்களுடன் சேர்த்து லலிதா தேவியை வழிபடுபவர் மஹா கவிகளாகத் திகழ்வார் என்கிறார் ஆதிசங்கர பகவத் பாதர் அவர்கள் தம் ஸௌந்தர்ய லஹரீயில்.

सवित्रीभि र्वाचां शशिमणिशिलाभंगरुचिभिः
वशिन्याद्याभिस्त्वां सह जननि संचिन्तयति यः।
स कर्ता काव्यानां भवति महतां भंगिसुभगैः
वचोभि र्वाग्देवी वदन कमला मोद मधुरैः ॥

ஸவித்ரீபிர் வாசாம் சசிமணி சிலாபங்கருசிபி:
வசின்யாத்யாபிஸ்த்வாம் ஸஹஜனனி ஸஞ்சிந்தயதி ய: ।
ஸ கர்த்தா காவ்யானாம் பவதி மஹதாம் பங்கிஸுபகை:
வசோபிர் வாக் தேவீ வதனகமலா மோத மதுரை: ॥

இதற்கு ஒரு ஐதிஹ்யமுண்டு. ஒரு சமயம் லளிதா தேவீ பக்தர்கள் பாக்யம் பெற விரும்பினாள். உடன் வசினீ முதலிய வாக் தேவிகளை அழைத்து, "நீங்கள் என் அருளால் சொல்லின் தெய்வங்களாய் இருக்கின்றீர்கள். என் பக்தர்களுக்குச் சொல் வளம் அருளும் பேறும் பெற்றிருக்கின்றீர்கள். என் ஆயிரம் பெயர் கொண்ட ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்யும் பக்தர்கள்பால், எனக்கு மகிழ்ச்சி ஏற்படும் வண்ணம் ஒரு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை இயற்றுங்கள் என்று அருளாணையிட்டாள். அந்த ஆணையை ஏற்ற வசினீ முதலிய வாக்தேவிகள் 1000 நாமாக்களைக் கொண்ட அழகிய லளிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தை இயற்றி அருளினர்.

ஒரு சமயம் லளிதா பரமேச்வரீ ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்திருந்தாள். அவளை வழிபட அனைவரும் திரண்டு வந்தனர். ஸரஸ்வதிகளுடன் கூட கோடிக் கணக்கான பிரம்மாக்களும், லக்ஷ்மிக்களுடன் கூடிய கோடிக் கணக்கான விஷ்ணுக்களும், கௌரீகளுடன் கூடிய கோடிக் கணக்கான ருத்ரர்களும் அவளை வழிபடக் குழுமி நின்றனர். மந்த்ரிணீ, தண்டினீ முதலிய எண்ணிலாச் சக்திகளும் மற்றும் பலரும் வழிபட வந்தனர். அனைவருக்கும் லளிதா பரா பட்டாரிகா திவ்ய தர்சனம் தந்தருளினாள்.

இந் நிலையில் லளிதா தேவியின் கடைக் கண் நோக்கம் பெற்றுயர்ந்த வசினீ முதலிய வாக்தேவிகள் கை கூப்பியவர்களாய்ப் பக்தியுடன் லளிதையின் திருவருளால் இயற்றிய ஆயிரம் நாமாக்களையும் கூறித் துதித்தனர். அதனால் மிகவும் மகிழ்ந்த லளிதா தேவீ, துதியைக் கேட்டு ஆனந்தத்தில் திளைத்திருந்த அனைவரையும் நோக்கி, "என் ஆணையால் இயற்றப்பட்டதாகும் இந்த ஸ்தோத்திரம். இந்த ஸஹஸ்ரநாமாவில் எனக்கு மகிழ்வளிக்கக் கூடிய நாமாக்கள் நிறைய இருக்கின்றன. இந்த ஸ்துதியைப் படிக்கும் பக்தன் எனக்கு மிகவும் பிடித்தவனாகின்றான். அவனுக்கு வேண்டியவற்றை எல்லாம் நான் வழங்குவேன். நீங்களும் இந்த நாமாக்களால் என்னைப் போற்றுங்கள்" என்று அருளினாள்.



## மூவரும் பிறரும் படித்த ஸ்தோத்ரம்

இது கேட்ட பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் முதலிய தேவரும் மந்த்ரிணீ முதலிய சக்திகளும் மற்றவரும் லளிதா பரமேச்வரீக்கு பிடித்த இந்த ஸஹஸ்ரநாமாவைப் பாராயணம் செய்தனர். ஆகவே நாமும் இந்த ஸஹஸ்நாமாவைப் படித்து ஸ்ரீ லளிதா தேவியை வழிபடுவது சிறந்த முறையாகும்.

## ஸஹஸ்ரநாம பாராயணப் பலன்கள்

रहस्यानां रहस्यं च ललिता प्रीतिदायकं।
अनेन सदृशं स्तोत्रं न भूतं न भविष्यति॥
सर्व रोग प्रशमनं सर्व संपत्प्रवर्धनं।
सर्वापमृत्युशमनं कालमृत्यु निवारणं॥
सर्वज्वरार्ति शमनं दीर्घायुष्य प्रदायकं॥

ரஹஸ்யானாம் ரஹஸ்யம்ச லளிதா ப்ரீதிதாயகம்।
அநேன ஸத்ருசம் ஸ்தோத்ரம் நபூதம் ந பவிஷ்யதி॥
ஸர்வரோக ப்ரசமனம் ஸர்வ ஸம்பத் ப்ரவர்த்தனம்।
ஸர்வாபம்ருத்யு சமனம் காலம்ருத்யு நிவாரணம்
ஸர்வஜ்வரார்த்திசமனம் தீர்காயுஷ்ய ப்ரதாயகம்॥

இந்த ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் மிகவும் ரஹஸ்யமானது. லளிதைக்கு ப்ரீதி அளிக்க வல்லது. இது போன்ற ஸ்தோத்திரம் இருந்ததும் இல்லை. இருக்கப் போவதுமில்லை. இது எல்லா ரோகங்களையும் போக்கும். ஸம்பத்துக்களை வளர்க்கும். அபம்ருத்யுவையும், காலருத்யுவையும்கூட தடுத்து நிறுத்தும். ஜ்வரமெல்லாம் நீங்கும். நீண்ட ஆயுளையும் அளிக்கும்.

## ஒரு நாமாவின் மஹிமை

இதிலுள்ள ஒரு நாமாவைச் சொன்னாலே போதும். கீழக் குறிக்கப்பட்டுள்ள புண்ணியங்களின் பயன்கள் கிடைக்கும். ஆயிரம் நாமாக்களையும் சொன்னால் அதன் பயனை எவ்வாறு கணக்கிட்டுக் கூற முடியும்?

கோடி ஜன்மாக்களில் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்னானத்தினால் உண்டாகும் புண்ணியத்தையும், காசியில் கோடி

லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்த புண்ணியத்தையும், குரு க்ஷேத்திரத்தில் சூரிய க்ரஹணத்தின் போது வேத வித்துக்களுக்குக் கோடி தடவை கோடி ஸுவர்ண பாரத்தை தானம் கொடுத்த புண்ணியத்தையும், கங்கைக் கரையில் கோடி அசுவமேதம் செய்ததால் உண்டாகும் புண்ணியத்தையும், ஜலமற்ற வறண்ட பூமியில் கோடிக்கணக்கான கிணறுகள் வெட்டிய புண்ணியத்தையும், துர்பிக்ஷ காலத்தில் ஆயிரமாண்டுகள் பிரதி தினம் கோடி அந்தணர்களுக்குப் போஜனம் செய்து வைத்த புண்ணியத்தை கோடியால் பெருக்கிய புண்ணியத்தைம் உண்டாக்கும் என்று லளிதா ஸஹஸ்ரநாம மாஹாத்யம் பேசுகின்றது.

## பாபங்களும் போகும்

இந்த ஸஹஸ்ரநாமாவில் ஒரு நாமாவைப் படித்தாலும் அவனுக்கு மஹா பாதகங்களும் அற்றுப் போகும். நித்ய கர்மாவை அனுஷ்டிக்காததாலும், செய்யக் கூடாததைச் செய்ததாலும், நேரும் பாபமும் அழியும். ஒரு நாமாவிற்கு எவ்வளவு பாபம் போக்கும் சக்தி உண்டோ, அவ்வளவு பாபத்தை பதினான்கு உலகங்களும் சேர்ந்துகூடச் செய்ய முடியாது.

இந்த ஜன்மாவில் தேவிக்கு அர்ச்சனை செய்தால்தான் அடுத்த பிறவி நமக்கு மிகவும் சிறந்த பிறவியாய் இருக்கும். எவர் முன் பிறவியில் தேவியைக் குந்தம், சம்பகம், பில்வம் முதலியவற்றினால் பூஜித்தனரோ அவரே இப் பிறவியில் அரசர்களாய்ப் பிறக்கின்றனர்.

यैः पूजिता पूर्वभवे भवानी सत्कुन्द पुष्पैरथ चंपकैश्च।
विल्वैर्दलैस्ते भुविभोगयुक्ताः नृपा भवन्तीत्यनुमेयमेव॥

யை: பூஜிதா பூர்வபவே பவானீ ஸத்குந்த புஷ்பைரத சம்பகைச்ச।
பில்வைர்தளைத்ஸ்தே புவிபோகயுக்தா: ந்ருபா பவந்தீத்யனுமேயமேவ॥

என்று தேவி பாகவதம் வலியுறுத்துகின்றது.

வையம் துரகம் மதகரி மாமகுடம் சிவிகை
பெய்யுங்கனகம் பெருவிலையாரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாளடித் தாமரைக் கன்பு முன்பு
செய்யுந்தவமுடையார்க்கு உளவாகிய சின்னங்களே

என்ற அபிராம பட்டர் வாக்காலும் இதை அறிய முடிகின்றது.



# श्री ललिता स्तुतिः

## ஸ்ரீ லளிதா ஸ்துதி:

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ

(இயற்றியவர் T.K. முத்துஸ்வாமி சாஸ்திரி)

या माया त्रिगुणात्मिका भगवती वाणीरमाकालिका
भूत्वा व्रह्महरीश्वरैरुपवृता सृष्टिं स्थितिं संहृतिं।
लीलार्थं कुरुते प्रपंचजननी सर्वेष्टदा चिन्मयी
सा देवी ललिता शुभं वितनुतां कामेशवामाङ्गगा॥ १

யா மாயா த்ரிகுணாத்மிகா பகவதீ வாணீரமாகாளிகா
பூத்வா ப்ரம்ஹ ஹரீச்வரைருபவ்ருதா ஸ்ருஷ்டிம் ஸ்திதிம் ஸம்ஹ்ருதிம்।
லீலார்த்தம் குருதே ப்ரபஞ்சஜனனீ ஸர்வேஷ்டதா சின்மயீ
ஸா தேவீ லளிதா சுபம் விதனுதாம் காமேச வாமாங்ககா॥

விரும்பிய அனைத்தையும் அளிப்பவளும் ஞான ஸ்வரூபிணியும் எல்லாம் அறிந்தவளுமாகிய எந்தத் தேவி ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக் குணங்களின் கூட்டமாய், மாயை என்ற பெயர் கொண்டவளாய், பின் ஸரஸ்வதி, லக்ஷ்மீ, காளி என்ற பெயர் தாங்கி, பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களுடன் இணைந்து ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவற்றை விளையாட்டாகச் செய்கின்றாளோ, அந்தக் காமேச்வரரின் இடது மடியில் அமர்ந்திருக்கும் லளிதா தேவீ எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

குறிப்பு: सदा शिवस्य मनसः लालनात् ललिताभिधा (ஸதாசிவஸ்ய மனஸ: லாலனாத் லளிதாபிதா) என்று ஸதாசிவருடைய மனத்தைக் கொண்டாடும்படிச் செய்வதால் தேவிக்கு லளிதா எனப் பெயர் என்று லளிதோபாக்யானம் கூறும்.

चिन्मूर्तिं र्भुवनेश्वरी त्रिजगतां भद्र प्रदा कालिका
मातङ्गी कमलाभिधाच वगला धूमावती भैरवी।

तारा, षोडशिका महामनुमयी, त्वं छिन्नमस्तेति च
प्रख्याता दश नामभिस्तु ललिते संपत्समृद्धिं कुरु ॥ २

சின்மூர்த்திர் புவனேச்வரீ, த்ரிஜகதாம் பத்ரப்ரதா காளிகா
மாதங்கீ கமலாபிதாச பகளா தூமாவதீ பைரவீ ।
தாரா ஷோடசிகா மஹாமனுமயீ த்வம் ச்சின்னமஸ்தேதிச
ப்ரக்யாதா தசநாமபிஸ்து லளிதே ஸம்பத் ஸம்ருத்திம் குரு ॥

ஞான ரூபிணியான புவனேச்வரீ, மூவுலகங்களுக்கும் மங்களம் அளிக்கும் காளீ, மாதங்கீ, கமலா, பகளா, தூமாவதி, பைரவீ; தாரா, மஹா மந்த்ர ஸ்வரூபிணியான ஷோடசீ (ஸ்ரீ வித்யா) சின்னமஸ்தா என்ற பத்துப் பெயர்கள் கொண்ட ஹே லளிதா தேவியே! எனக்கு நிறைய ஐசுவர்யத்தை அளிப்பாயாக.

குறிப்பு: ஸ்ரீ லளிதா தேவிக்கு லளிதோபாக்யானத்தில் 25 நாமாக்கள் கூறப்பட்டிருக்கின்றன. "ஸிம்ஹாஸனேசி, லளிதா, மஹாராஞ்ஞீ, வராங்குசா, சாபினீ, த்ரிபுரா, மஹாத்ரிபுரஸுந்தரீ, ஸுந்தரீ, சக்ரனாதா ஸம்ராஞ்ஞீ, சக்ரிணீ, சக்ரேச்வரீ, மஹாதேவீ, காமேசி, பரமேச்வரீ, காமராஜப்ரியா, காமகோடிகா, சக்ரவர்த்தினீ, மஹாவித்யா, சிவா, அனங்கவல்லபா, ஸர்வபாடலா, குலநாதா, ஆம்னாய நாதா, ஸர்வாம்னாய நிவாஸினீ, ச்ருங்கார நாயிகா" என்பன. இந்த 25 நாமாக்களைக் கூறித் துதிப்பவர் ஸௌபாக்யத்தையும் அஷ்ட ஸித்திகளையும் புகழையும் பெறுவர்.

मणिकलशस्थितपादतले मणिमौलिविभूषण शीतकरे
कमल निभत्रय लोचनभूषित सौम्यमुखे स्तनभारनते ।
अरुणपयोरुह हेममणीमयपात्र समुज्वल बाहुलते
जय जय काम शिवाङ्गते नत मङ्गलदायिनि हे ललिते ॥ ३

மணிகலசஸ்திதபாததலே மணிமௌளி விபூஷண சீதகரே
கமலநிபத்ரய லோசன பூஷிதஸௌம்ய முகே ஸ்தன பாரநதே ।
அருண பயோருஹ ஹேமமணீமய பாத்ர ஸமுஜ்வல
பாஹுலதே
ஜய ஜய காமசிவாங்ககதே நத மங்களதாயினி ஹே லளிதே ॥



ரத்ன கலசத்தில் தன் திருவடியை வைத்துக் கொண்டிருப்பவளும், ரத்னக். கிரீடத்தில் சந்திரனை அணிந்து கொண்டிருப்பவளும், செந்தாமரை பொன் மணி மயமான பாத்திரம் இவற்றுடன் விளங்கும் இரு கரங்கள் உடையவளும், தாமரை மலர் போன்ற மூன்று கண்களால் அழகிய சாந்தி தவழும் முகமுடையவளும், ஸ்தன பாரத்தால் சற்றே குனிந்தவளும், வணங்கியவர்க்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரர் மடியில் அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதா தேவி வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இந்தச் சுலோகம் லளிதா ஸஹஸ்ரநாமாவின் தியான சுலோகமான "ஸிந்தூராருண விக்ரஹாம்" என்ற சுலோகத்தின் தாத்பர்யத்தைக் கொண்டது. "சாருசந்த்ரகலாதரா" 54 என்ற நாமாவையும் ஞாபகப்படுத்துகின்றது.

कुसुम शरैक्षव चाप महांकुश पाशसमुज्वलदीर्घकरे
विधिहरिरुद्र महेश्वररूप खुराश्रित शैवसुपीठगते ।
अतिरुचिरारुण वस्त्रविभूषण पुष्पभरांचित दिव्यतनो
जय जय काम शिवाङ्गते नतमङ्गलदायिनि हे ललिते ॥ ४

குஸுமசரைக்ஷவ சாபமஹாங்குச பாச ஸமுஜ்வல தீர்க்கரே
விதிஹரிருத்ரமஹேச்வரரூப குராச்ரித சைவ ஸுபீடகதே ।
அதிருசிராருண வஸ்த்ர விபூஷண புஷ்பபராஞ்சித திவ்யதனோ
ஜய ஜய காமசிவாங்ககதே நதமங்கள தாயினி ஹே லளிதே ॥

புஷ்ப பானம், கரும்பு வில், அங்குசம், பாசம் இவை விளங்கும் நீண்ட திருக்கரங்கள் உடையவளும், பிரமன், விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன் இவர்களைக் கால்களாகக் கொண்ட சதாசிவ பீடத்தில் அமர்ந்திருப்பவளும், மிக அழகிய சிவந்த வஸ்த்ரம், ஆபரணங்கள், புஷ்பங்கள் இவற்றால் அலங்கரிக்கப் பெற்ற திவ்ய தேஹமுடையவளும், வணங்குபவர்களுக்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரரின் மடி மீது அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதா தேவீ, வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இந்தச் சுலோகம் "சதுர்புஜே சந்த்ரகலாவதம்ஸே" என்ற கருத்தைக் கொண்டது. ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேச்வரீ, பஞ்சப்ரம்ஹாஸன ஸ்திதா, ஸர்வாருணா, பக்திமத் கல்பலதிகா, சிவகாமேச்வராங்கஸ்தா முதலிய நாமாக்களையும் உள்ளடக்கிக் கொண்டதாகும்.

प्रकृतिरिति प्रथमा तवमूर्तिरिहाब्जजसृष्टिकृते विहिता
सकल विमोहन रूपयुताऽमृत मन्थनकाल भवा त्वपरा।
अथ ललितेत्यभिधां दधती समभूज्जगतां किल सौख्यकरी
जय जय कामशिवाङ्कगते नतमङ्गलदायिनि हे ललिते ॥ ५

ப்ரக்ருதிரிதி ப்ரதமா தவமூர்த்திரிஹாப்ஜஜஸ்ருஷ்டி க்ருதே விஹிதா
ஸகல விமோஹன ரூபயுதா(அ)ம்ருதமந்தனகால பவா த்வபரா।
அத லளிதேத்யபிதாம் ததீ ஸமபூஜ்ஜகதாம் கில ஸௌக்யகரீ
ஜய ஜய காமசிவாங்ககதே நத மங்களதாயினி ஹே லளிதே॥

இவ்வுலகில் பிரம்மாவின் சிருஷ்டி பெருகுவதற்காக ''ப்ரக்ருதி'' என்ற உன் மூர்த்தி அமைக்கப் பெற்றது. அடுத்ததாக அனைவரையும் மோஹிக்கச் செய்யும் ரூபம் கொண்டதாக (மோஹினியாக) அம்ருதம் கடையும் காலத்தில் அமைக்கப்பட்டது. பின்னர் உலகங்களுக்கு ஸௌக்கியம் அளிக்கும் லளிதை என்ற பெயர் தாங்கிய மூர்த்தி உண்டாயிற்று. அவ்வாறாக வணங்குபவர்களுக்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரர் மடிமீது அமர்ந்திருப்பவளுமான லளிதா தேவியே! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு

आदौ प्रादुरभूच्छक्तिः ब्रह्मणो ध्यानयोगतः।
प्रकृतिर्नाम सा ख्याता देवानां इष्टसिद्धिदा ॥

ஆதௌ ப்ராதுரபூச்சக்திः ப்ரணம்ஹணோ த்யானயோகதः।
ப்ரக்ருதிர் நாம ஸா க்யாதா தேவனாம் இஷ்ட ஸித்திதா॥

என்றபடி தனக்கு ஸ்ருஷ்டி சக்தி பெற வேண்டி, பிரம்மா சக்தியைத் தியானிக்க, அப்போது சக்தி தேவர்களுக்கு இஷ்டங்களை அளிக்க ''ப்ரக்ருதி'' என்ற பெயருடன் உதித்தாள் (இந்த ப்ரக்ருதி, ஸ்ருஷ்டி, சக்தி) இவள் முதல் சக்தி.



द्वितीयमुदभूद्रूपं प्रवृत्तेऽमृतमन्थने।
सर्व संमोहजनकं अवाङ्मनसगोचरम् ॥

த்விதீயமுதபூத்ரூபம் ப்ரவ்ருத்தே(அ)ம்ருதமந்தனே।
ஸர்வஸம்மோஹஜனகம் அவாங்மனஸகோசரம்॥

என்றபடி, வாக்கிற்கும், மனத்திற்கும் எட்டாத அனைவரையும் மோஹம் அடையச் செய்யும் ரூபம் கொண்டு அம்ருதம் கடையும் ஸமயத்தில் உதித்த சக்தி (மோஹினீ) இரண்டாம் சக்தியாகும் (இவள் ஸ்திதி கரீ சக்தி).

பண்டாசுரனை ஸம்ஹாரம் செய்வதற்காகத் தேவர்கள் செய்த மஹா யாகத்தின் காரணமாய் உதித்த சக்தி மூன்றாம் சக்தியாகும். இவளே லளிதா பரா பட்டாரிகா (இவளிடம் ஸம்ஹார சக்தியும் உண்டு).

शिवमयचक्र चतुष्टय शक्तिमयोज्वल पंच सुचक्रगते
गजगतया तुरगाश्रितया किरिचक्ररथोज्वलया सुवृते।
वरसचिवांबिकया च शुभंकर शक्ति गणार्चित पादयुगे
जय जय काम शिवाङ्कगते नत मङ्गलदायिनि हे ललिते ॥ ६

சிவமயசக்ரசதுஷ்டய சக்திமயோஜ்வல பஞ்சஸுசக்ரகதே
கஜகதயா துரகாச்ரிதயா கிரிசக்ரரதோஜ்வலயா ஸுவ்ருதே।
வரஸசிவாம்பிகாயாச சுபங்கர சக்தி கணார்சித பாதயுகே
ஜய ஜய காமசிவாங்ககதே நத மங்களதாயினி ஹே லளிதே॥

சிவமயமான நான்கு சக்கரங்களும் (அஷ்டதளம், ஷோடசதளம், மேகலாத்ரயம், பூபுரத்ரயம்) சக்தி மயமான ஐந்து சக்ரங்களும் (த்ரிகோணம், அஷ்டகோணம், 2 பத்து கோணங்கள், சதுர்தசகோணம்) கொண்ட (சைவசக்ர மயமான) ஸ்ரீ சக்ரத்தில் அமர்ந்திருப்பவளும், ஸம்பத்கரீ, அச்வாரூடா,தண்டநாதா, மந்த்ரிண்யம்பா இவர்களால் சூழப்பட்டவளும், நன்மை விளைவிக்கும் சக்திகள் வணங்கும் திருவடியை உடையவளும், வணங்குபவர்க்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரர் மடியில் அமர்ந்திருப்பவளுமான லளிதா தேவியே வெற்றியுடன் விளங்குவாயாக.

अतिरमणीयनवावरणोज्वल सारथिषट्क सुशोभिरथे
निजगुणकल्पित शंकरचक्रि विधिप्रमुखे स्मितशोभिमुखे।
सकल जगज्जननि प्रियभाषण निर्जितकच्छपि योगिहिते
जय जय काम शिवाङ्गते नतमङ्गलदायिनि हे ललिते ॥ ७

அதிரமணீய நவாவரணோஜ்வல ஸாரதிஷ்டக ஸுசோபிரதே
நிஜகுணகல்பித சங்கர சக்ரிவிதிப்ரமுகே ஸ்மிதசோபிமுகே।
ஸகல ஜகஜ்ஜனனி ப்ரியபாஷண நிர்ஜிதகச்சபி யோகிஹிதே
ஜய ஜய காமசிவாங்ககதே நதமங்கள தாயினி ஹே லளிதே ॥

மிக அழகிய ஒன்பது ஆவரணங்களால் பிரகாசிக்கின்றதும், ஆறு தேர்ப் பாகர்களுடனும் பிரகாசிக்கின்றதுமான ரதத்தை உடையவளும், தன்னுடைய (மாயையினுடைய) தமஸ், ரஜஸ், ஸத்வம் என்ற முக்குணங்களால் ருத்ரன், விஷ்ணு, பிரம்மா முதலியவர்களை ஸ்ருஷ்டித்தவளும், புன்சிரிப்புத் தவழும் முகம் உடையவளும், அனைத்து உலகங்களுக்கும் தாயாய் உள்ளவளும், அன்பான மொழியால் ஸரஸ்வதியின் கச்சபி என்ற வீணையை வெற்றி கொண்டவளும், யோகியருக்கு ஹிதம் செய்பவளும், வணங்கியவர்களுக்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரர் மடி மீது அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதே! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: ஒன்பது ஆவரணங்களாவன: 1. பூபுரம், 2 16 தள பத்மம், 3. 8 தள பத்மம், 4. 14 கோணம், 5. வெளிப் பத்து கோணம், 6. உள்பத்துக் கோணம், 7. 8 கோணம், 8. 3 கோணம், 9. பிந்து. மொத்தம் 43 கோணங்கள். பிந்துவைச் சேர்த்து 44 கோணங்கள் என ''சதுர்பி: ஸ்ரீ கண்டை:'' என்ற சுலோகத்தின் மூலம் தெரிகின்றது. இதில் தரஸ்மேரமுகாம்புஜா, தரஹாஸோஜ்வலன்முசி என்ற நாமாக்களும் உள்ளன.

सुरमुनिवर्ग विहिंसकभण्ड बलोन्मथनक्षमशक्तिवृते
करयुगलांगुलि जातमुरारि दशाकृति खण्डित भण्डशरे।
अनुमपशक्ति समुज्वल कामशिवास्त्र सुदग्धसभण्डपुरे
जय जय कामशिवाङ्गते नत मंगलदायिनि हे ललिते॥ ८



ஸுரமுனிவர்கவிஹிம்ஸக பண்ட பலோன்மதனக்ஷம சக்திவ்ருதே
கரயுகளாங்குளி ஜாதமுராரி தசாக்ருதி கண்டித பண்டசரே।
அனுபமசக்திஸமுஜ்வல காமசிவாஸ்த்ர ஸுதக்தஸபண்டபுரே
ஜய ஜய காமசிவாங்ககதே நதமங்களதாயினி ஹே லளிதே ॥

தேவர், முனிவர் இவர்களுக்கு ஹிம்ஸை விளைவித்த பண்டாசுரனின் சேனையை அழிக்கும் சக்தி கொண்ட சக்திகளால் சூழப்பட்டவளும், (தன்) இரண்டு கைகளின் விரல்களினின்றும் வெளிவந்த மஹா விஷ்ணுவின் பத்து அவதார அஸ்திரங்களால் பண்டாசுரனுடைய பாணங்களை அழித்தவளும், உவமையற்ற சக்தியுடன் ஜ்வலிக்கும் காமேசரவாஸ்திரத்தினால் பண்டாசுரனையும், அவனுடைய சூன்யகம் என்ற பட்டிணத்தையும் கொளுத்தியவளும், வணங்குபவர்க்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரரின் மடியில் அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதா தேவியே வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இதில், ''பண்டாசுரவதோத்யுக்த சக்தி ஸேனா ஸமன்விதா'', ''கராங்குளிநகோத்பன்ன நாராயண தசாக்ருதி:॥'', ''காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாசுரசூன்யகா'' என்ற நாமாக்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

नवबिसतन्तुतनीयसि सर्पसमाकृति धारिणि रक्ततनो
रसमितचक्रतलान्तरचारिणि भव्यसहस्रदलाब्जभवे।
शिव सहितेऽमृतवर्षिणि कुण्डलि योगविदां सुलभे सुखदे
जय जय काम शिवाङ्गते नत मंगलदायिनि हे ललिते॥ ९

நவபிஸதந்துதனீயஸி ஸர்பஸமாக்ருதிதாரிணி ரக்ததனோ
ரஸமிதசக்ரதலாந்தரசாரிணி பவ்யஸஹஸ்ரதளாப்ஜபவே।
சிவ ஸஹிதே(அ)ம்ருத வர்ஷிணி குண்டலி யோகவிதாம் ஸுலபே சுகதே
ஜய ஜய காமசிவாங்ககதே நதமங்கள தாயினி ஹே லளிதே ॥

தாமரைத் தண்டின் நடுவில் உள்ள நூல் போல நுண்ணியவளும், (மூன்றரைச் சுற்றுடன் படமெடுத்த) ஸர்பம் போன்ற உருவம் கொண்டவளும், சிவப்பு நிறம் உடையவளும், ஆறு சக்கரங்களுடைய (மூலாதாரம் முதலிய பத்மங்களுடைய) இடையில் செல்லுபவளும்,

அழகிய ஆயிரம் இதழ் கொண்ட தாமரை மலரில் (ஸஹஸ்ராரக கமலத்தில்) தங்குபவளும், ஸதாசிவனோடு கூடியிருப்பவளும், அமிர்தரஸத்தை வர்ஷிப்பவளும், யோகம் அறிந்தோரால் சுலபமாய் அடையத் தகுந்தவளும் (அவர்க்கு) சுகமளிப்பவளும், குண்டலீ சக்தியாய் இருப்பவளும், வணங்கியவர்க்கு மங்களம் அளிப்பவளுமான காமேச்வரர் மடிமீது அமர்ந்திருக்கும் ஹே லளிதா தேவி! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இந்தச் சுலோகத்தில் ''பிஸதந்துதனீயஸீ, ரக்தவர்ணா, ஸஹஸ்ராராம்புஜாரூடா, ஸுதாஸாராபிவர்ஷிணீ, ஷட்சக்ரோபரிஸம்ஸ்திதா'' முதலிய ஸஹஸ்ரநாமாவின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. குண்டலினீ மூலாதார சக்ரத்தில் இருக்கும் தேவீ ரூபிணியான குண்டலினீ சக்தி, சுஷும்னா நாடியின் வழியாகப் பிராண வாயுவுடன் புறப்பட்டு மூலாதாரம். ஸ்வாதிஷ்டாம் (இவ்விரண்டிற்கும் அக்னிகண்டம் எனப் பெயர்) இரண்டு சக்கரங்களையும் அதன் மேலுள்ள பிரம்ம க்ரந்தி என்ற முடிச்சையும் பிளந்து கொண்டு மேலே சென்று, மணிபூரகம், அனாஹம் (இந்த இரண்டிற்கும் சூர்யகண்டம் எனப் பெயர்) என்ற இரண்டு சக்கரங்களையும் தாண்டி, அதன் மேலுள்ள விஷ்ணு க்ரந்தி என்ற முடிச்சையும் பிளந்து கொண்டு மேலே சென்று, விசுத்தி, ஆஞ்ஞாசக்ரம் (இந்த இரண்டு சக்கரங்களுக்கும் சந்த்ரகண்டம் எனப் பெயர்) இந்த இரண்டு சக்கரங்களையும் தாண்டி ருத்ர க்ரந்தி என்ற முடிச்சையும் பிளந்து கொண்டு ஸஹஸ்ரநாம கமலத்தில் இருக்கும் பரம புருஷனோடு சேர்ந்து பரமானந்தத்தில் திளைக்கின்றாள். அங்கிருந்து அமிர்த ரஸத்தைப் பொழிகின்றாள். மீண்டும் யோகிக்கு வ்யுத்தான தசை வரும் போது, சென்ற வழியே திரும்ப வந்து மீண்டும் மூலாதாரத்தில் அமர்ந்து விடுகின்றாள். இந்த விபரத்தை ஆசார்யாள் ஸௌந்தர்ய லஹரீயில் இரண்டு சுலோகங்களால் வர்ணித்திருக்கின்றார்கள்.

महीं मूलं धारे कमपि मणिपूरे हुतवहं
स्थितं स्वाधिष्ठाने हृदि मरुतमाकाशमुपरि ।
मनोपि भ्रूमध्ये सकलमपि भित्वा कुलपथं
सहस्रारे पद्मे सह रहसि पत्या विहरसे ॥



மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருதமாகாசமுபரி।
மனோபி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே॥

सुधाधारासारैः चरण युगलान्तर्विगलितैः
प्रपंचं सिंचन्ती पुनरपि रसाम्नाय महसः ।
अवाप्य स्वां भूमिं भुजगनिभमध्युष्टवलयं
स्वमात्मानं कृत्वा स्वपिषि कुलकुण्डे कुहरिणि ॥

ஸுதாதாரா ஸாரைச் சரண யுகளாந்தர்விகளிதைः
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புனரபி ரஸாம்னாய மஹஸः।
அவாப்ய ஸ்வாம்பூமிம் புஜக நிபமத்யுஷ்டவலயம்
ஸ்வாவமாத்மானம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி॥

இந்தக் குண்டலினீ யோகம் பற்றி நான் எழுதிய ''புவனேச்வரீ தத்வ ப்ரகாசம்'' என்ற நூலில் (புதுக்கோட்டை அதிஷ்டானம் வெளியீடு. விலை ரூ.200) விஸ்தாரமாக இரண்டு இடங்களில் எழுதியுள்ளேன். அதில் காண்க.

दिनकरमण्डलमध्यगतेऽखिल मन्त्रभवेऽखिल यन्त्रभवे
विधु रविरूप सुकर्णविभूषण रम्य मुखे वशिनीविनुते ।
शुभ गुण रूप वशीकृत वल्लभ कामशिवे भवतापहरे
जय जय काम शिवाङ्गगते नत मङ्गल दायिनि हे ललिते ॥ १०

தினகரமண்டல மத்யகதே(அ)கில மந்த்ரபவே(அ)கில யந்த்ரபவே
வித்து ரவிரூபஸுகர்ண விபூஷண ரம்யமுகே வசினீ விநுதே।
சுபகுணரூப வசீக்ருத வல்லப காமசிவே பவதாபஹரே
ஜய ஜய காம சிவாங்ககதே நத மங்களதாயினி ஹே லளிதே॥

சூர்ய மண்டலத்தின் நடுவில் உள்ளவளும், அனைத்து மந்த்ரங்களிலும் யந்த்ரங்களிலும் உள்ளவளும், சந்திரன், சூரியன் என்ற தோடுகளால் அழகிய முகம் உடையவளும், வசினீ முதலிய சக்திகளால் துதிக்கப்பட்டவளும், நல்ல குணம் ரூபம் இவற்றால் பர்த்தாவான

காமேச்வரரைத் தன் வசப்படுத்தியிருப்பவளும், சிவனின் தாபத்தை (ஸம்ஸார தாபத்தை)ப் போக்குபவளும், வணங்கியவர்க்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரர் மடி மீது அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதா தேவீ! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இந்தச் சுலோகத்தில் "பானுமண்டல மத்யஸ்தா, தாடங்கயுகளீபூத தபனோடுப மண்டலா, ஸ்வாதீன வல்லபா, ஸர்வ மந்த்ர ஸ்வரூபிணி, ஸர்வ யந்த்ராத்மிகா" முதலிய நாமாக்கள் நினைவுறுத்தப்பட்டிருக்கின்றன.

कनक महीधर शृंग विनिर्मित सालवरावलि शोभिपुरे
भुवनगणोपरि भासिसुधोदधि मध्यविनिर्मित रत्नगृहे।
भवहृदयेऽखिल वस्तु चयेऽपि च नित्य विहारिणि सर्वनुते
जय जय काम शिवाङ्गगते नतमंगलदायिनि हे ललिते॥ ११

கனக மஹீதர சருங்க விநிர்மித ஸாலவராவளி சோபிபுரே
புவனகணோபரி பாஸி சுதோததி மத்யவிநிர்மித ரத்ன க்ருஹே।
பவ ஹ்ருதயே(அ)கில வஸ்து சயேபி ச நித்ய விஹாரிணி ஸர்வநுதே
ஜய ஜய காமசிவாங்ககதே நத மங்கள தாயினி ஹே லளிதே॥

மஹா மேரு மலையின் கொடு முடியில் அமைக்கப்பட்ட (25) பிராகாரங்களால் பிரகாசிக்கின்ற (ஸ்ரீபுரம்) என்ற பட்டினத்திலும், அனைத்து உலகங்களுக்கும் மேல் பிரகாசிக்கும் அமிர்தக் கடலின் நடுவில் அமைக்கப்பட்ட (சிந்தாமணி மயமான) ரத்ன க்ருஹத்திலும், சிவன் உள்ளத்திலும் அனைத்து வஸ்துக்களிலும், எப்போதும் இருந்து கொண்டிருப்பவளும், அனைவராலும் துதிக்கப்பட்டவளும், வணங்குபவர்க்கு மங்களம் அளிப்பவளும் காமேச்வரர் மடிமீது அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதா தேவி! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: 25 பிராகாரங்களின் பெயர்களை முன்னுரையில் காண்க.

हयवदनांश हयाननतापस रौद्रमहामुनि वाग्विनुते
कलिमलभंजन कांच्यभिधोत्तम पत्तनमध्यविहाररुचे।



नयन समीक्षणमात्र विनिर्मित पद्मज माधव रुद्रतनो
जय जय कामशिवाङ्गगते नत मङ्गलदायिनि हे ललिते॥ १२

ஹயவதனாம்ச ஹயானன தாபஸ ரௌத்ர மஹாமுனி வாக்விநுதே
கலிமலபஞ்ஜன காஞ்ச்ய பிதோத்தம பத்தனமத்ய விஹாரருசே।
நயன ஸமீக்ஷண மாத்ர விநிர்மித பத்மஜ மாதவ ருத்ரதனோ
ஜய ஜய காமசிவாங்ககதே நத மங்களதாயினி ஹே லளிதே॥

ஹயக்ரீவரின் (விஷ்ணுவின்) அம்சமான ஹயக்ரீவ முனிவருடையவும், ருத்ராம்சமான துர்வாஸ மஹர்ஷியினுடையவும் வாக்குகளால் போற்றப்பட்டவளும், கலி தோஷம் போக்கும் காஞ்சி என்ற சிறந்த பட்டினத்தின் நடுவில் அமர்ந்தருள்வதில் ப்ரீதி உடையவளும், கண்களின் (மூன்று) பார்வை மாத்திரத்தினாலேயே பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர் தேஹங்களை ஸ்ருஷ்டித்தவளும், வணங்கியவருக்கு மங்களம் அளிப்பவளும் காமேச்வரரின் மடிமீது அமர்ந்திருப்பவளுமான ஹே லளிதா தேவியே! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: கச்ச, அச்ச, மச்ச = காமாா, பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இம் மூவரும் எந்தத் தேவியின் கண்களினின்று உதித்தனரோ, அவள் காமாக்ஷி என்று சிவ பக்த விலாஸத்தின் உரை கூறும். "காமாக்ஷி" இரண்டு கையுடையவள் ஆதிகாரணபூதை, அனாக்யா என்பது வேதப் பெயர், சித்ஸ்வரூபிணி. வலது கையில் தாமரை மலர், இடது கை தொடையின் மீது வைத்திருப்பாள். இவளே பின் நான்கு கரமுடையவளானாள் எனக் கூறும் லளிதோபாக்யானம்.

## காமாக்ஷீ வரலாறு

காசியும் காஞ்சியும் மஹேச்வரருக்கு இரண்டு கண்கள் போன்றவை. இங்கு சிவனும் விஷ்ணுவும் ஸாந்நித்யம் கொண்டிருக்கின்றனர். காஞ்சி க்ஷேத்ரத்தில் பிரம்மா ஸ்ரீ தேவியை தரிசிக்கத் தவம் புரிந்தார். இவள் ஆதிலக்ஷ்மி. பத்மம் தாங்கிய கரத்தினளாய் விஷ்ணுவுடன் பிரம்மாவுக்குக் காட்சி கொடுத்தாள். இவள் ஆதிலக்ஷ்மீ என்றும் த்ரிபுரா என்றும் பிரம்ம, விஷ்ணு, ருத்ரர்களுக்கு எல்லாம் ஜனனீயாகவும் இருக்கின்றாள். இவளே காமாட்சி. பிரம்மா இந்த ஆதிலக்ஷ்மியை இங்கேயே இருந்து தரிசனம் அளிக்குமாறு

கேட்டுக் கொண்டார். அத்துடன் அவள் பாதி ஆஸனத்தில் அமர்ந்தருளும் விஷ்ணுவையும் இங்கேயே ஸாந்நித்யம் கொள்ளுமாறும் கேட்டார். அவ்வாறே வரமளித்தாள். இங்கு சிவனும் ஸாந்நித்யம் கொள்ளுமாறு கேட்டார். அதையும் அருளினாள். பின் அந்த த்ரிபுரா மஹா லக்ஷ்மியின் வலது புறத்தினின்று காமேச்வரரும் இடது புறத்தினின்று மஹா கௌரீயும் உதித்தனர். பிரம்மாவும், விஷ்ணுவும் சேர்ந்து அந்த ஆதி தம்பதிகளுக்கு விவாஹம் செய்து வைத்தனர். காமாட்சி கோயிலுக்கு வாயு பாகத்தில் சிவனும், ஆக்நேய பாகத்தில் விஷ்ணுவும் கோயில் கொண்டனர். பின் அந்த ஆதிலக்ஷ்மீ வலது கண்ணால் பிரம்மாவையும் இடது கண்ணால் விஷ்ணுவையும் நோக்க, லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் உதித்தனர். அது முதற்கொண்டு அவள் காமாக்ஷி எனப் பெயர் கொண்டாள். காமாக்ஷி என்ற மூன்றுவர்ணங்கள் கொண்ட பெயரைச் சொன்னால் போதும்; ஸர்வ மங்களங்களும் உண்டாகும். உடன் லக்ஷ்மியை விஷ்ணுவிற்கும், ஸரஸ்வதியை பிரம்மாவிற்கும் அளித்தாள். அவர்கள் காமாக்ஷியின் ஆவரண தேவதைகளாக விரும்பினார்கள். அதையும் ஏற்றாள் அவள். பின் மஹா கௌரியும் அங்கேயே ஸாந்நித்யம் கொண்டாள். பின் மறைந்த அந்த ஆதிலக்ஷ்மி, மீண்டும் பிம்பத்தில் பிரவேசித்தாள். அவளே காமாக்ஷியாய் காட்சி கொடுக்கின்றாள்.

पूर्ण ब्रह्म महाशक्ते महात्रिपुर सुन्दरि।
श्री कामाक्षीति च विख्याते नमस्तुभ्यं शिवे परे॥

பூர்ண பிரம்ஹ மஹா சக்தே மஹாத்ரிபுர ஸுந்தரி।
ஸ்ரீ காமாக்ஷீதிச விக்யாதே நமஸ்துப்யம் சிவே பரே॥

என்று இவளைத் துதிக்கின்றது லளிதோபாக்யானம்.

पाशांकुशेक्षु कोदण्ड पंच बाण लसत्करा।
ललिता सैव कामाक्षी कांच्यां ख्याति मुपागता॥
सरस्वती रमा गौर्यः तामेवाद्या मुपासते॥

பாசாங்குசேக்ஷு கோதண்ட பஞ்சபாண லஸத்கரா।
லளிதா ஸைவ காமாக்ஷீ காஞ்ச்யாம் க்யாதிம் உபாகதா॥
ஸரஸ்வதீ ரமா கௌர்யஃ தாமே வாத்யாம் உபாஸதே॥



இவளே பாசம், அங்குசம், கரும்பு வில், புஷ்ப பாணம் கொண்டு காமாக்ஷீ எனப் பெயர் கொண்டு காஞ்சியில் விளங்குகின்றாள். இவளே ஸாக்ஷாத் லளிதா தேவி. இவளை ஸரஸ்வதி, லக்ஷ்மீ, கௌரீ இவர்கள் உபாஸிக்கின்றனர். இவளிடம் ब्रह्म विष्णु महेशेश सदाशिव निवासभूः (பிரம்ம விஷ்ணு மஹேசேச ஸதாசிவ நிவாஸபூஃ) பிரம்மா, விஷ்ணு, மஹேசன், ஈசன், ஸதாசிவன் அனைவரும் இருக்கின்றனர் என்கின்றது லளிதோபாக்யானம்.

धनपति शीतकरेश्वर षण्मुख मन्मथ माधवनन्दिमुखैः
मनु कलशोद्भव तद्गृहिणी रवि रौद्र महामुनिभिश्वनुते।
मधुरिपु पद्मज नारद शक्तिसुतात्मजवर्णित दिव्यकथे
जय जय काम शिवाङ्गगते नतमंगलदायिनि हे ललिते॥

தனபதி சீதகரேச்வர ஷண்முகமன்மத மாதவ நந்திமுகைஃ
மனுகலசோத்பவ தத்க்ருஹணீ ரவிரௌத்ர மஹாமுனி பிச்சநுதே।
மதுரிபு பத்மஜநாரத சக்திஸுதாத்மஜ வர்ணித திவ்யகதே
ஜய ஜய காமசிவாங்ககதே நத மங்கள தாயினி ஹே லளிதே॥

குபேரன், சந்திரன், சிவன், ஷண்முகன், மன்மதன், விஷ்ணு, நந்தி, மனு, அகஸ்தியர், அவர் மனைவி லோபாமுத்ரா, சூரியன், ருத்ராம்சமான துர்வாஸ முனி இவர்களால் துதிக்கப்பட்டவளும், விஷ்ணு, பிரம்மா, நாரதர், வியாஸர் இவர்களால் வர்ணிக்கப்பட்ட திவ்ய சரிதமுடையவளும் வணங்கியவர்க்கு மங்களம் அளிப்பவளும் காமேச்வரர் மடிமீது அமர்ந்திருப்பவளுமான ஸ்ரீ லளிதா தேவி! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: லளிதா பரா பட்டாரிகையின் மந்திரங்களைக் கண்டுபிடித்த ரிஷிகள், குபேரன் முதலிய பன்னிருவர் ஆவர். விஷ்ணு, பிரம்மா முதலியவர் சாக்த வித்யையின் குரு பரம்பரையினர் ஆவர். காமஸேவிதா, லோபாமுத்ரார்சிதா, நந்திவித்யா, மனுவித்யா, சந்த்ரவித்யா முதலிய நாமாக்களும் இங்கு நினைவிற்கு உரியவை.

अमितफलप्रद षोडशवर्ण सुमन्त्र जपोद्यतकल्पलते
वियदनलस्फुरदीं मनु पंजर मध्यलसच्छुकि वेदनुते।

शिववदनांबुज वीक्षणकल्पितविघ्नहरे कलिदोषहरे
जय जय कामशिवाङ्गते नत मङ्गलदायिनि हे ललिते ॥ १४

அமித பலப்ரதஷோடச வர்ண ஸுமந்த்ர ஜபோத்யத கல்பலதே
வியதனல ஸ்புரதீம் மனு பஞ்ஜர மத்லலஸத்சுகி வேதனுதே।
சிவ வதனாம்புஜ வீக்ஷண கல்பிதவிக்னஹரே கலிதோஷஹரே
ஜய ஜய காமசிவாங்ககதேநத மங்களதாயினி ஹே லளிதே ॥

அளவற்ற பலன்களை அளிக்கும் ஷோடசாக்ஷரீ மந்த்ரத்தை ஜபிப்பவர்களுக்கு கல்பகக் கொடி போன்றிருப்பவளும், ஹகாரம், ரேபம் இவற்றுடன் கூடிய 'ஈ' என்ற மந்திர(ஹ்ரீம்)மாகிய கூட்டில் விளங்கும் பச்சைக் கிளியாய் இருப்பவளும்,. வேதத்தினால் போற்றப்பட்டவளும், காமேச்வர முகத்தை நோக்கி விக்னேச்வரரைப் படைத்தவளும், கலி தோஷத்தைப் போக்குபவளும், வணங்கியவர்க்கு மங்களம் அளிப்பவளும், காமேச்வரர் மடி மீது அமர்ந்திருப்பவளுமான ஹே லலிதா தேவி! வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: ஸ்ரீ வித்யா, ஸ்ரீ ஷோடசாக்ஷரீ வித்யா, ஹ்ரீங்காரீ, ஹ்ரீம்மதீ, ச்ருதி ஸீமந்த ஸிந்தூரிக்ருத பாதாப்ஜ தூளிகா, கலிகல்மஷ நாசினீ முதலிய நாமாக்களின் குறிப்புகளும் இதில் உள்ளன. ஹ்ரீங்கார மந்த்ர மஹாத்மியம் பற்றி புவனேச்வரீ தத்வ ப்ரகாசத்தில் காண்க.

महिष महासुरमर्दिनि शूलिनि शाबरि भैरवि विन्ध्यभवे
बहु भुवनेश्वरि वाणि महेश्वरि कालि कलामयि कामकले।
विमलमहामनुपंचदशाक्षरि भव्यनवाक्षरि काव्यनुते
तव चरणां बुरुहे मम चेतसि सन्निहिते कुरु हे ललिते ॥ १५

மஹிஷமஹாஸுரமர்தினி சூலினி சாபரி பைரவி விந்த்யபவே
பஹு புவனேச்வரீ வாணி மஹேச்வரி காளிகலாமயி காமகலே।
விமல மஹாமனு பஞ்சதசாக்ஷரி பவ்ய நவாக்ஷரி காவ்யனுதே
தவ சரணாம்புருஹே மம சேதஸி ஸந்நிஹிதே குரு ஹே லளிதே ॥

மஹிஷாஸுர மர்த்தினி, சூலினீ, சாபரீ, பைரவீ, விந்திய வாஸினி துர்கா, பல புவனங்களுக்கு ஈச்வரியாகிய புவனேச்வரீ, ஸரஸ்வதீ, பார்வதீ, காளீ, கலா ஸ்வரூபிணீ, காம கலை (ஈ கார ரூபிணி) சிறந்த பஞ்சதசாக்ஷரீ மந்த்ர ரூபிணீ, நவரக்ஷரீ ரூபிணி, சுக்ரர் போறியவள் என்ற பல பெயர் கொண்டவளான ஹே லளிதா பரமேச்வரீ உன் திவ்ய சரணார விந்தங்களை என் சித்தத்தில் பதித்து அருளுவாயாக.



குறிப்பு: காமகலா ரூபா, புவனேச்வரீ, சதுஷ்ஷட்டி கலாமயீ, கலாநிதி முதலிய நாமாக்கள் இங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## श्रीसंपत्करी स्तुतिः ஸம்பத்கரீ ஸ்துதிः

अखिल जमज्जननीकर संगत तीक्ष्णमहांकुशलब्धतनो
गजबल रक्षिणि भण्डमहासुर सैन्यप दुर्मद नाशकरी।
हिमगिरितुल्य महागजचारिणि शक्तिगणैर्नितरां महिते
जय ललिता चरणांबुज सक्तमते विनिवारितदुःखतते ॥ १६

அகில ஜகஜ்ஜனனீகரஸங்கத தீக்ஷ்ணமஹாங்குசலப்ததனோ
கஜபலரக்ஷிணி பண்டமஹாஸுர ஸைன்யப துர்மத நாசகரி।
ஹிமகிரிதுல்ய மஹாகஜசாரிணி சக்திகணைர் நிதராம் மஹிதே
ஜய லளிதா சரணாம் புஜ ஸக்த மதே விநிவாரித துஃக்கததே ॥

அகில லோக மாதாவான லளிதா தேவியின் கரத்திலுள்ள கூரிய அங்குசத்தினின்றும் உதித்தவளும், பண்டாசுரனின் ஸேனாபதி துர்மதனை (முதலியவர்களை) அழித்தவளும், ஹிமாலயம் போன்றிருக்கும் பெரும் யானை மீது அமர்ந்து சஞ்சரிப்பவளும், சக்தி கணங்களால் அர்ச்சிக்கப்பட்ட திருவடியை உடையவளும், லளிதா சரணாரவிந்தங்களில் ஈடுபட்ட மனத்தினளும், துக்கத்தைப் போக்குபவளுமான, யானைப் படைத் தலைவியான ஹே ஸம்பத்கரீ தேவி, நீ வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இவள் வாஹனமாகிய யானைக்கு ''ரணகோலாஹலம்'' என்று பெயர். துர்மதன் என்பவன் 10 அக்ஷௌஹிணீ ஸேனைக்கு அதிபதி. பண்டாசுரனின் ஸேபதிகளில் ஒருவன். இவனை ஸம்பத்கரீ அழித்தாள்.

## अश्वारूढा स्तुतिः அச்வாரூடா ஸ்துதிః

वरद महा त्रिपुराकर पंकज संगत पाशवरात्ततनो
हयबल रक्षिणि भण्ड महाबलनाशिनि सौम्य महाश्वमुखि।
बृहद पराजित तुंगहये हत दुष्ट कुरुण्डमुखासुरपे
जय हय सैन्य महेश्वरि पाश महांकुश वेत्रलतादि धरे॥ १७

வரத மஹா த்ரிபுரா கரபங்கஜ ஸங்கத பாசவராத்ததனோ
ஹயபலரக்ஷிணி பண்டமஹாபல நாசினி ஸௌம்ய மஹாச்வமுகி।
ப்ருஹதபராஜித துங்கஹயே ஹத துஷ்டகுருண்ட முகாஸுரபே
ஜய ஜய ஸைன்ய மஹேச்வரி பாசமஹாங்குச வேத்ரலதாதிதரே॥

வரமளிக்கும் மஹா த்ரிபுர சுந்தரியின் கையிலுள்ள பாசத்தினின்றும் உதித்தவளும், குதிரைப் படைகளைக் காப்பவளும், பண்டாசுரனின் சைன்யத்தை அழித்தவளும், அழகிய குதிரை முகம் உடையவளும், பெரிய "அபராஜிதம்" என்ற குதிரையை உடையவளும், துஷ்டர்களான குருண்டன் முதலிய அசுர ஸேனைத் தலைவர்களை அழித்தவளும், குதிரைப் படைத் தலைவியும், பாசம், அங்குசம், பிரம்பு முதலியவற்றைத் தரித்தவளுமாகிய ஹே அச்வாரூடா தேவியே! நீ வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இவள் மூல மந்த்ரம் "ஓம் ஆம் ஹ்ரீம் க்ரோம் ஏஹி பரமேச்வரீ ஸ்வாஹா" பிறரை வசீகரிக்க இவள் மந்த்ரம் பெரிதும் பயன்படும். இவள் குதிரை சிவப்பு நிறம் உடையது. இவள் கையில் கயிறும் தண்டமும் இருக்கும். இவள் முக்கண்ணி. அச்வாரூடா மந்த்ராக்ஷரமயமான 14 சுலோகங்கள் உண்டு. இவள் பார்வதியின் அம்சம்.

## दण्डिनी स्तुतिः தண்டினீ ஸ்துதிః

वर किरिचक्रमहारथ भासुर पंचमहावरणान्तरगे
शुभहरिणोत्तमसिंह महामहिषोत्तम वाहधृतेऽभयदे।
हलमुसलादि महायुध धारिणि भण्ड सहोदरदर्पहरे
जय ललिताखिल सैन्य गणेश्वरि दण्डिनि दिव्यवराहमुखि॥ १८



வர கிரிசக்ரமஹாரத பாஸுர பஞ்சமஹாவரணாந்தரகே
சுப ஹரிணோத்தமஸிம்ஹ மஹாமஹிஷோத்மவாஹத்ருதே(அ)பயதே।
ஹல முஸலாதிமஹாயுததாரிணி பண்ட ஸஹோதர தர்பஹரே
ஜய லளிதாகில ஸைன்ய கணேச்வரீ தண்டினி திவ்ய வராஹமுகி॥

உயர்ந்த கிரி சக்ரம் என்ற ரதத்தில் விளங்கும் ஐந்து ஆவரணங்களின் நடுவில் உள்ளவளும், மான், ஸிம்ஹம், மஹிஷம் இவற்றை வாஹனமாய்க் கொண்டவளும், அபயம் அளிப்பவளும், ஏறு உலக்கை முதலிய ஆயுதம் உடையவளும், பண்டாசுர ஸஹோதரன் (விசுக்ரன்) கொழுப்பை அடக்கியவளும், லலிதா பரமேச்வரியின் ஸைன்ய கணத்தின் தலைவியும், திவ்ய வராஹ முகமுடையவளுமான ஹே தண்டினீ தேவி! நீ வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: இவளுக்குப் பஞ்சமீ, தண்டநாதா, ஸங்கேதா, ஸமயேச்வரீ, ஸமயஸங்கேதா, வாராஹீ, போத்ரிணீ, சிவா, வார்த்தாளீ, மஹாஸேனா, ஆஜ்ஞாசக்ரேச்வரீ, அரிக்னீ என்று பன்னிரண்டு பெயர்கள் உண்டு. இந்த நாமாக்களைச் சொல்லத் துக்கம் உண்டாகாது. இவளுக்கு "நிக்ரஹ ஸ்தோத்ரம், அனுக்கிரஹ ஸ்தோத்ரம்" என்ற 16 சுலோகங்கள் கொண்ட ஸ்துதி உண்டு (இதற்கு நான் எழுதி புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் வெளியிட்ட தமிழ் மொழி பெயர்ப்பு நூல் அதிஷ்டானத்தில் கிடைக்கும்) இவள் ஸ்ரீ புரத்தில் 16ம் மரகத ஸாலத்தில் வஸிப்பாள். உன்மத்த பைரவீ, ஸ்வப்னேசீ, திரஸ்கரிண்யம்பா, கிரிபதா தேவீ இவர்கள் இவளை உபாஸித்துக் கொண்டிருப்பர். ஆயினும் இவள் மஹாபத்மாடவியிலும் ஆலயம் கொண்டு லளிதை பக்கத்திலிருப்பாள். இவளை உபாஸிக்க சத்ருபயம் நீங்கும்.

## मन्त्रिणीस्तुतिः மந்த்ரிணீ ஸ்துதிః

अतिरमणीय विपंचिकयांचित कंकणभूषितमंजुकरे
सबल विषंग विनाशिनि पालितलोकतते ललिताभिमते।
निखिलकलामय चाप शरप्रदरम्य शुकाश्रयचारुकरे
जय सचिवेश्वरि सप्तमहावरणोज्वलगेय सुचक्ररथे॥ १९

அதிரமணீய விபஞ்சிகயாஞ்சித கங்கணபூஷித மஞ்ஜுகரே
ஸபல விஷங்கவினாசினி பாலித லோகததே லளிதா பிமதே।
நிகிலகலாமய - சாபசரப்ரத - ரம்ய சுகாச்ரய சாருகரே
ஜய ஸசிவேச்வரீ ஸப்த மஹா வரணோ ஜ்வல கேயஸுசக்ரரதே ॥

ஏழு ஆவரணங்கள் கொண்ட "கேய சக்ரம்" என்ற ரதம் உடையவளும், ஸர்வ கலா மயமாயும், வில், அம்பு இவற்றை அளிக்கின்றதாயும் உள்ள கிளியுடன் கூடிய கரத்தினளும், மிக அழகிய வீணை அலங்கரிக்கும் கங்கணம் அணிந்த கரமுடையவளும், சேனையுடன் கூடிய விஷங்கனை அழித்தவளும், உலகங்களைக் காத்தவளும், லளிதையின் அன்பிற்குப் பாத்திரமானவளுமான மந்த்ரிண்யம்பா நீ வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: ஸ்ரீ நகரத்தின் 7ம் ரூப்ய ஸாலத்தில் கதம்பவனவாடிகாவில் இவளுடைய ஆலயம் இருக்கின்றது. ஆயினும் இவள் லளிதா தேவியின் ஸேவையை உத்தேசித்து சிந்தாமணி க்ருஹத்தின் பக்கத்திலேயே (மஹாபத்மாடவியில்) தங்கியிருக்கின்றாள். கதம்பவனவாடிகாவில் மாதங்க கன்யைகள் வீணை வாசித்துக் கொண்டு விளையாடுவர்.

## மாதங்க கன்யகா வரலாறு

மதங்கர் என்றொரு தபோதனர் இருந்தார். அவருக்கு லளிதா தேவியின் ஆணைப்படி மந்த்ரிண்யம்பா பெண்ணாய்ப் பிறந்தாள். அதனால் அவளுக்கு மாதங்கி என்றும், மதங்ககன்யா என்றும் பெயர் ஏற்பட்டது. இவளுடைய பணிவிடைக்காக சிருஷ்டிக்கப்பட்டவர்களே मातंग கன்யகைகள். இவர்கள் எட்டு கோடியாவர். அதனால்தான் காளிதாஸன், மாதா மரகதச்யாமா மாதங்கீ மதுசாலினீ। குர்யாத்கடாக்ஷம் கல்யாணீ கதம்பவன வாஸினீ॥என்று சியாமளா தண்டகத்தில் கூறினான். இவளே மஹாசியாமா என்று பெயர் பெறுகின்றாள். இந்த மந்த்ரிண்யம்பா லளிதைக்கு மிகவும் வேண்டியவள். இவளுக்கு 16 பேர்கள் கூறியிருக்கிறது லளிதோபாக்யானம். ஸங்கீத யோகினீ, ச்யாமா, ச்யாமளா, மந்த்ரிநாயிகா, மந்த்ரிணீ, ஸசிவேசானீ, ப்ரதானேச்வரீ, சுகப்பிரியா, வீணா, வைணிகீ, முத்ரிணீ, ப்ரிகப்ரியா, நீபப்ரியா, கதம்பேசீ, கதம்பவன வாஸினீ, ஸதாமதா என்பன. இந்தப் பேர்களை கூறுவோருக்கு மூன்று உலகங்களும் வசமாகும்.



## बालास्तुतिः பாலா ஸ்துதி

अयि नववर्ष मिताद्भुतदेहलते हतभण्डसुते शुभदे
निखिलजगज्जननी सदृशाकृति धारिणि मन्त्रमहांबुनिधे।
अति सुकुमार कुमारक कामशिवाद्भुतकेलि सुखाभिरते
जय ललितातनये ललिताचरणांबुज पीठकृतावसते॥ २०

அயி நவவர்ஷ மிதாத்புத தேஹலதே ஹத பண்டஸுதே சுபதே
நிகில ஜகஜ்ஜனனீ ஸத்ருசாக்ருதி தாரிணி மந்த்ரமஹாம்புநிதே।
அதிசுகுமாரகுமாரக காமசிவாத்புத கேளிஸுகாபிரதே
ஜய லளிதாதனயே லளிதாசரணாம்புஜ பீடக்ருதாவஸதே॥

ஒன்பது வயது மதிக்கத் தக்க ஒல்லியான தேஹம் உடையவளும், பண்டாசுரனின் புத்திரர்களைக் கொன்றவளும், சுபம் அளிப்பவளும், ஸர்வ லோக ஜனனீயான லளிதா பரமேச்வரீ போன்ற ஆக்ருதி உடையவளும், மந்த்ரக் கடலாய் இருப்பவளும், மிக அழகிய குமார காமேச்வரரின் அற்புத விளையாட்டில் ஈடுபட்டவளும், லளிதா தேவியின் திருவடித் தாமரைகளைத் தாங்கும் பீடத்தில் அமர்ந்திருப்பவளுமான லளிதா தேவியின் குமாரியே (பாலாம்பிகையே) வெற்றியுடன் விளங்குவாயாக.

குறிப்பு: "பாண்டபுத்ரவதோத்யுக்த பாலா விக்ரமநந்திதா" என்று லளிதா ஸஹஸ்ரநாமம் இவள் பெருமையைக் குறிப்பிடுகின்றது. பண்டனுடைய சதுர்பாஹு முதலான 30 புத்திரர்களை அழித்த பெருமையை உடையவள் பாலா த்ரிபுரஸுந்தரி.

உ

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ புவனேச்வரீ வித்யா

❋❋❋

# IV

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில் ஸ்ரீ புவனேச்வரீ

❋❋❋

## ''श्री दशमहाविद्यासु श्री भुवनेश्वरी''

॥

அஞ்ஞானதிமிரத்வம்ஸி ஸம்ஸாரார்ணவதாரகம் ।
ஆனந்தபீஜமவதாத் அதர்க்யம் த்ரைபுரம் மஹ: ॥

"அஞ்ஞான இருளை அழிக்கக்டியதும், ஸம்ஸாரக் கடலினின்றும் கரையேற்றுவதும் ஆனந்தத்தின் உத்பத்திஸ்தாநமும் மனோவாக்குகளால் அளவிட முடியாததுமான த்ரிபுரை என்ற ஜோதிஸ்ஸம்மை காக்கட்டும். *(சாரதா திலகம்)*

श्रीः

दशमहाविद्यासु

महाविद्या चतुर्थी

தசமஹாவித்யைகளில்

ஸ்ரீ புவனேச்வரீ மஹாவித்யை நான்காவது பாகம்

முன்னுரை

# ஜகத் காரணம் சக்தியே

இவ்வுலகம் சப்தரூபமாகவும் அர்த்த ரூபமாகவும் காணப்படுகின்றது. இந்த சப்தார்த்த ரூபமான உலகத்திற்கு மூலகாரணமாகத் திகழ்பவள் சக்தியே என்பது சாத்தர்களின் ஸித்தாந்தம். அதனால் சாக்தர்கள் சக்தியை ஜகத்திற்கு மூலகாரணமாகவும் உலகத்தின் தாயாகவும் போற்றுகின்றனர். இந்த ஸித்தாந்தத்தைச் சாரதா திலகம் முதலிய நூல்கள் சிறப்பாக உணர்த்துகின்றன. அதை இங்கே காண்போம்.

ஸச்சிதானந்த ரூபமானசிவம் "நிஷ்களம் - ஸகளம்" என்று இரண்டு விதமாய் இருக்கின்றது. "களம்" என்றால் பிரக்ருதி என்று பொருள் "நிஷ்களம்" என்றால் பிரக்ருதியின் தொடர்பற்ற சிவம். "ஸகளம்" என்பது ப்ரக்ருதியின் தொடர்புள்ள சிவம். ★ நிஷ்களமான பிரக்ருதியின் தொடர்பற்ற நிர்குணமான சிவமே பிரம்மம் என்று கூறப்படுகின்றது.

---

★ नित्यः सर्वगतः सूक्ष्मः सदानन्दो निरामयः ।
विकाररहितः साक्षी शिवो ज्ञेयः सनातनः ॥

- प्रयोगसारः

நித்ய: ஸர்வகத: ஸூக்ஷ்ம: ஸதானந்தோ நிராமய: ।
விகாரரஹித: ஸாக்ஷீ சிவோ ஜ்ஞேய: ஸனாதன: ॥

- ப்ரயோகஸாரம்

பிரக்ருதி ஸம்பந்தமுள்ள சிவத்தை "ஸகளம்" என்று கூறுகின்றோம்.

இந்த ப்ரக்ருதியையே ஸாங்கிய மதத்தினர் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களின் ஸாம்யாவஸ்தாரூபமான 'பிரதானம்' என்று கூறுகின்றனர். இந்த ப்ரக்ருதியையே வேதாந்திகள் ''அவித்யை'' என்றும் கூறுகின்றனர். இந்த ப்ரக்ருதியையே சிவதந்த்ரத்தில் 'சக்தி' என்று அழைக்கின்றனர்.

இங்கு ஸகளம் என்று கூறப்பட்ட ஸத்-சித் ஆனந்த ஸ்வரூபமான ஸகள சிவத்தினின்று மஹாப்ரளய காலத்தில் மிக ஸூக்ஷ்மமாய் சிவத்தோடு ஐக்கியமாகியிருந்த சக்தி, ஸ்ருஷ்டி காலத்தில் ''எள்ளிலிருந்து எண்ணை போல'' வெளியாகிறது. ★

निष्क्रियं निर्गुणं शान्तं आनन्दमजमव्ययम् ।
अजरामरमव्यक्तं अजेयमचलं ध्रुवम् ॥
ज्ञानात्मकं परं ब्रह्म स्ववेद्यं हृदि संस्थितम् ।
सत्यं बुद्धेः परं नित्यं निर्मलं निष्कलं स्मृतम् ॥ — नारायणीयम्

நிஷ்க்ரியம் நிர்குணம் சாந்தம் ஆனந்தமஜமவ்யயம்
அஜராமரமவ்யக்தம் அஜேய மசலம் த்ருவம் ।
ஞானாத்மகம் பரம் ப்ரம்ஹ ஸ்வவேத்யம் ஹ்ருதி ஸமஸ்திதம் ।
ஸத்யம் புத்தே: பரம் நித்யம் நிர்மலம் நிஷ்களம் ஸ்ம்ருதம் ॥
(நாராயணீயம்)

★ शिवेच्छया पराशक्तिः शिवतत्वैक्यतां गता ।
ततः परिस्फुरत्यादौ सर्गे तैलं तिलादिव ॥ — वायवीय संहिता

சிவேச்சயா பராசக்தி: சிவதத்வைக்யதாம் கதா ।
தத: பரிஸ்புரத்யாதௌ ஸர்கே தைலம் திலாதிவ ॥
(வாயவீய ஸம்ஹிதா)

இந்த சக்தியிடமிருந்து 'நாதம்' பிறக்கின்றது. இந்த நாதத்திடமிருந்து 'பிந்து'' பிறக்கின்றது. ''நாதம் பிந்து'' இவை இரண்டும் ஸ்ருஷ்டிக்கு உபயோகமான சக்தியின் நிலையாகும் ★.

இவற்றில் ''நாதம்'' என்பதை ஆண்பாலாகவும், ''பிந்து'' என்பதை பெண்பாலாகவும் கூறுவர் ★★.

एवमालोक्य सर्गादौ सच्चिदानन्दरूपिणीम् ।



समस्ततत्वसङ्घात्म स्फूर्त्यधिष्ठानरूपिणीम् ॥
व्यक्तां करोति नित्यां तां प्रकृतिं परमः पुमान् ॥ — पाञ्चरात्रम्

ஏவ மாலோக்ய ஸர்காதௌ ஸச்சிதானந்த ரூபிணிம் ।
ஸமஸ்த தத்வ ஸங்காத்ம ஸ்பூர்த்யதிஷ்டான ரூபிணீம் ॥
வ்யக்தாம் கரோதி நித்யம் தாம் ப்ரக்ருதிம் பரம: புமான் ॥
(பாஞ்சராத்ரம்)

★ नादबिन्दू सृष्ट्युपयोगावस्थारूपौ ।

நாத பிந்து ஸ்ருஷ்ட்யுபயோகாவஸ்தாரூபௌ ॥

नादात्मना प्रबुद्धा सा निरामयपदोन्मुखी ।
शिवोन्मुखी यदा शक्तिः पुंरूपा सा तदा स्मृता ॥
सैव सर्गक्षमा..... — प्रयोगसारे

நாதாத்மனா ப்ரபுத்தா ஸா நிராமய பதோன்முகீ ।
சிவோன் முகீ யதாசக்தி: பும்ரூபாஸா ததா ஸ்ம்ருதா ॥
ஸைவ ஸர்கக்ஷமா - (ப்ரயோகஸாரே)

आचार्यास्तु - ஆசார்யாஸ்து
सा तत्वसंज्ञा चिन्मात्रज्योतिषः सन्निधेस्तदा ।
विचिकीर्षुर्घनीभूता क्वचिदभ्येति बिन्दुताम् ॥

ஸாதத்வ ஸம்ஞா சின்மாத்ர ஜ்யோதிஷ: ஸந்நிதே: ததா ।
விசிகீர்ஷு: கனீபூதா க்வசிதப்யேதி பிந்துதாம் ॥
अन्यत्रापि - அந்யத்ராபி
अभिव्यक्ता परा शक्तिः अविनाभावलक्षणा ।
अखण्ड परचिच्छक्तिः व्याप्ता चिद्रूपिणी विभुः ॥
समस्ततत्वभावेन विवर्तेच्छा समन्विता ।
प्रयाति बिन्दुभावं च क्रियाप्राधान्यलक्षणम् ॥

.................................................................

இந்த ''பிந்து'' பிந்து, நாதம், பீஜம் என்று மூன்று விதமாக வேறுபடுகின்றது. இந்த பிந்துவிலிருந்து உண்டான நாதம் பிந்து இவை இரண்டும், முன்பு கூறப்பட்ட சக்தியினிடமிருந்து தோன்றிய

நாதத்தினின்றும், முன் கூறிய நாதத்தினின்றும் தோன்றிய பிந்துவினின்றும், வேறுபட்டதாகும். முன் கூறிய நாத பிந்துக்கள் காரணங்கள் பின்கூறிய நாத. பிந்துக்கள் காரியங்கள். இவைகளில் பிந்து (2) என்பது சிவஸ்வரூபம். இந்த பிந்து-பீஜங்களுடைய சேர்க்கையால் நாதம் (2) உதயமாயிற்று என்று ஆகமங்களே நன்கறிந்தோர் உரைப்பர்.

''ரௌத்ரீ முதலிய சக்திகளின் தோற்றமும், மும்மூர்த்திகளின் உதயமும்''

சிவமயமான பிந்து (2) விலிருந்து ரௌத்ரீயும், சக்தி மயமான பீஜத்திலிருந்து வாமையும், பிந்து பீஜங்களின் சேர்க்கையான (2) நாதத்திலிருந்து ஜ்யேஷ்டையும் உதித்தனர். இந்த ரௌத்ரீ சக்தியினின்று ருத்திரனும், வாமா சக்தியினின்று விஷ்ணுவும், ஜ்யேஷ்டா சக்தியினின்று பிரம்மாவும் உண்டானார்கள். ★

---

அபிவ்யக்தா பராசக்தி: அவினாபாவலக்ஷணா ।
அகண்டபரசித்சக்தி: வ்யாப்தா சித்ரூபிணீ விபு: ।
ஸமஸ்த தத்வ பாவேன விவர்த்தேச்சா ஸமன்விதா ।
ப்ரயாதி பிந்து பாவம் ச க்ரியா ப்ராதான்ய லக்ஷணம் ॥

★ बिन्दुः शिवात्मकस्तत्र बीजं शक्त्यात्मकं स्मृतम् ।
तयोर्योगे भवेन्नादः तेभ्यो जतास्त्रिशक्तयः ॥
रौद्री बिन्दोः समुद्भूता ज्येष्ठा नादादजायत ।
वामा बीजादभूच्छक्तिः तेभ्यो देवास्त्रयोऽभवन् ॥ — प्रयोगसारे

பிந்து: சிவாத்மகஸ்தத்ர பீஜம் சக்த்யாத்மகம் ஸ்ம்ருதம் ।
தயோர்யோகே பவேந்நாத: தேப்யோ ஜாதாஸ்த்ரி சக்தய: ।
ரௌத்ரீபிந்தோ: ஸமுத்பூதா ஜ்யேஷ்டா நாதாதஜாயத ।
வாமா பீஜாதபூத்சக்தி: தேப்யோ தேவா: ஸ்த்ரயோऽபவன் ॥
- ப்ரயோகஸாரே

---

''சப்த ப்ரம்ஹமும், புவனேச்வரியும்''

முதலில் கூறிய பிந்துவினின்றும், இவ்வாறான வர்ணம் என்று அறியமுடியாத அவ்யத்தமான சப்தம் உண்டாயிற்று. இதையே 'ரவம்' என்றும், சப்த ப்ரம்ஹம் என்றும் ஆகமங்கள் அறிந்தோர் உரைப்பர். இந்த சப்த ப்ரம்ஹம் சைதன்ய ரூபம் என்பதும் சாக்தர்களின்



சித்தாந்தமாகும். ★

இதையே

अथानन्दमयीं देवीं शब्दब्रह्मस्वरूपिणीम् ।
ईडे सकलसम्पत्यै जगत्कारणमम्बिकाम् ॥

அதனாந்தமயீம் தேவீம் சப்தப்ரம்ஹஸ்வரூபிணீம் ।
ஈடே ஸகல ஸம்பத்யை ஜகத்காரணமம்பிகாம் ॥

என்று ''ஆனந்தமயீஸ்தவம்'' புகழும் இங்கு சப்த ப்ரம்ஹம் என்று பேசப்படும் பராசக்தியே குண்டலினீ என்று கூறப்படுகின்றுள் என்று

तत्प्राप्य कुण्डलीरूपं प्राणिनां देहमध्यगम् ।
वर्णात्मनाऽविर्भवति गद्य - पद्यादिभेदतः ॥

தத்ப்ராப்ய குண்டலீரூபம் ப்ராணினாம் தேஹமத்யகம் ।
வர்ணாத்மனாऽவிர்பவதி கத்யபத்யாதி பேதத: ॥

என்று ''சாரதாதிலகம்'' குறிப்பிடுகின்றது.

இந்த குண்டலினீயே ஸ்ரீ புவனேச்வரீ என்பது

तदूर्ध्वं तु शिखाकारा कुण्डली रक्तविग्रहा ।
देव्यात्मिका तु सा प्रोक्ता मदभिन्ना नगाधिप ॥

ததூர்த்வம் து சிகாகாராகுண்டலீ ரக்தவிக்ரஹா ।
தேவ்யாத்மிகாது ஸா ப்ரோக்தா மதபின்னா நகாதிப ॥

என்ற தேவீபாகவத ச்லோகத்தின் மூலம் தெளிவாகின்றது.

இந்த சப்த ப்ரம்ஹமான குண்டலினீ பிராணிகளின் சரீரத்தின் நடுவில் இருந்து கொண்டு வர்ணங்களாகவும் (அக்ஷரங்களாகவும் பாக்களாகவும் வசனமாகவும்) வெளிப்படுகின்றாள்.

---

★ चैतन्यं सर्वभूतानां शब्दब्रह्मेति मे मतिः । - शारदातिलके

சைதன்யம் ஸர்வபூதானாம் சப்த ப்ரம்ஹேதி மே மதி: ॥
(சாரதா திலகே)

''அர்த்த (பொருள்) சிருஷ்டி''

இந்த குண்டலினியே பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்று பெயர் பெறுகின்றாள்: சரீர ஸ்ருஷ்டியைத் தெரிந்து கொண்டாலன்றி பச்யந்தீ முதலியவற்றைத் தெரிந்துகொள்வது இயலாதாகையால் அர்த்த ஸ்ருஷ்டியை இங்கே காண்போம்.

முன்பு பிந்து (2) என்று கூறப்பட்டவரும் கலாத்மா என்ற மாயா ஸ்வரூபியும், कालबन्धुः காலபந்து என்று சிருஷ்டிரூப காலத்தை ஸஹாயமாகக் கொண்டவருமான (மாயையும் காலமும் எப்போதும் இருக்கும்) சம்புவிடமிருந்து சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரம் அனுக்ரஹம் திரோதனம் என்ற ஐந்து காரியங்களைச் செய்கின்றவரும், ஜகன் நிர்மாணத்திற்கு பீஜமாகவும் உள்ள சதாசிவன் உண்டானார். சதாசிவனிடமிருந்து ஈசன் உதயமானார். ஈசனிடமிருந்து ருத்ரனும் ருத்ரனிடமிருந்து விஷ்ணுவும் விஷ்ணுவிடமிருந்து பிரம்மாவும் உண்டானார்கள்.

"அர்த்த சிருஷ்டியிலே தத்வசிருஷ்டி"

ஸர்வ சிருஷ்டிக்கும் மூலகாரணமானதும் अव्यक्त अव्यக்தம் என்று அழைக்கப்படுகிறதும், சிருஷ்டிக்குத் தயாராயிருக்கின்றதுமான சப்தப் பிரம்மத்தினின்றும் "மஹத்தத்துவம்" உண்டாயிற்று. இதை 'புத்தி தத்துவம்" என்றழைப்பர் ★.

இந்த மஹத்திலிருந்து "அஹங்காரம்" உண்டாயிற்று. இந்த அஹங்காரம், ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்ற குணங்களின் பேதத்தால் वैकारिक வைகாரிகம் तैजसं தைஜஸம் भूतादि பூதாதி என்று மூன்று விதமான பேதங்களைப் பெறுகின்றது. (அ) வைகாரிகமான அஹங்காரத்தினின்று இந்திரியங்களின் அதிஷ்டான தேவதைகளான திக், வாத, அர்கன், பிரசேதஸ், அச்விநெள, வன்ஹி, இந்திரன், உபேந்த்ரன், மித்திரன் (மூன்றாவது சூர்யன்) க: என்ற பிரம்மா, அல்லது சந்திரன் ஆகிய 10 பேர்கள் உண்டானார்கள்.

---

★ अव्यक्तविग्रहात् शब्दब्रह्मणः सर्वकारणम् ।
व्यक्त सत्वगुणं व्यक्तं बुद्धितत्त्वमजायत ॥ - वामकेश्वरतन्त्रे

அவ்யக்த விக்ரஹாத் சப்த ப்ரம்ஹண: ஸர்வகாரணம் ।
வ்யக்த ஸத்வகுணம் வ்யக்தம் புத்தி தத்வமஜாயத ॥ - (வாமகேச்வரதந்த்ரே)

(ஆ) தைஜஸமான அஹங்காரத்தினின்றும் வாக், பாணி, பாதம்,



பாயு, உபஸ்தம் என்ற கர்மேந்த்ரியங்கள் ஐந்தும், ச்ரோத்ரம், த்வக், சக்ஷு, ஜிஹ்வா, க்ராணம் என்ற ஞானேந்த்ரியங்கள் ஐந்தும், ஆக பத்து இந்த்ரியங்கள் தோன்றின.

(இ) பூதாதியான அஹங்காரத்தினின்றும் சப்த தன் மாத்திரை, ஸ்பர்ச தன்மாத்திரை ரூப தன்மாத்திரை, ரஸ தன் மாத்திரை, கந்த தன்மாத்திரை என்ற ஐந்து தன்மாத்திரைகள் தோன்றின. அவைகளிடமிருந்து முறையே சப்த தன்மாத்திரையிலிருந்து ஆகாசமும், ஸ்பர்சதன் மாத்திரையிலிருந்து வாயுவும், ரூப தன்மாத்திரையிலிருந்து நெருப்பும், ரஸ தன்மாத்திரையிலிருந்து ஜலமும், கந்த தன்மாத்திரையிலிருந்து பூமியும் தோன்றின. சப்தம், ஸர்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பன மேற்கூறிய பூதங்களின் குணங்களாகும்.

## பூதங்களிடமிருந்து தோன்றியதே உலகம்

இந்த பஞ்ச பூதங்களினின்றும் தோன்றியதேயாகும். சரம் (அசையும்) அசரம் (அசையாத) என்ற இந்த ப்ரபஞ்சம், மலை மரம் முதலியன அசரப்ரபஞ்சமும், ஸ்வேதஜம் அண்டஜம் ஜராயுஜம் என்ற மூன்றுவிதமான ஜீவராசிகளும் சரப்ரபஞ்சமுமாகும்.

1. ஸ்வேதஜம் என்பன புழு பூச்சி முதலியவை.
2. அண்டஜம் என்பன பக்ஷீ, ஸர்பம் முதலியன.
3. ஜராயுஜம், மனுஷ்யன். (ஜராயு என்பது ஒரு வலை போன்றது. கர்பாசயத்தைக் குறிக்கும்.)

ஆண் பெண் சேர்க்கையால் பூர்வ கர்மாவின் காரணமாக ஆத்மா ஜீவபாவத்தை அடைந்து, கருவாக ஆகின்றது. கர்ப்பத்தில் ஜராயுவால் கண்டுண்டு கிடக்கும்போது பூர்வ ஜன்மங்களில் தான் செய்த புண்ணிய பாவங்களைச் சிந்திக்கின்றது. பின்பு தாயைக் கஷ்டப்படுத்திக்கொண்டு தலைகீழாய்ப் பிறக்கின்றது. பிறந்து, சேஷ்டையின்றி சிறிது நேரங்கிடந்து, பின் பயத்தினால் கத்துகின்றான். பிறகு நாட்செல்ல மெல்லமெல்ல பேசத் தொடங்குகின்றான்.

## குண்டலினீ

முதலில் அவ்யக்தமான (விளங்காத) சப்தம் உண்டாகின்றது. இதற்கு மூலம் குண்டலினீ சக்தி. இந்தக் குண்டலினீ சக்தி யோகிகள் மனதில்

நடமிடுகின்றாள். ஒவ்வொரு ஜீவர்களுடைய மூலாதாரங்களிலும் மின்னல்போல் ஜ்வலிக்கின்றாள். (மூன்றரைச் சுற்று) சுற்றிக்கிடக்கும் பாம்புபோன்று ★ இவள் மூலாதாரத்தில் காட்சி கொடுக்கின்றாள். இவள் தேஜோரூபிணீ, இவளே ஸர்வமந்த்ரமயீ. சூரியன், சந்திரன், அக்னி இவர்களை ஈன்றவள், சப்த ப்ரம்ஹம் என்று பேசப்படுபவள். ஐம்பது வர்ணங்களாய் திகழ்பவள். இவளே இச்சா ஞானக்ரியா ஸ்வரூபிணீ.

''குண்டலியினின்றும் வர்ணங்கள் உண்டாகும் முறை''

சப்த ப்ரம்ஹம் என்ற இந்த குண்டலிணீயிடமிருந்து சக்தியும், சக்தியிலிருந்து த்வனியும், த்வனியிலிருந்து நாதமும், நாதத்தில் இருந்து நிரோதிகையும், நிரோதிகையிலிருந்து அர்த்தேந்துவும், அர்த்தேந்துவிலிருந்து பரையும், பரையிலிருந்து மத்யமையும், மத்யமையலிருந்து வைகரீயம் பிறக்கின்றது. இந்த வைகரீதான் அகாரம் முதலான க்ஷகாரம் ஈறான வர்ணங்களின் உருவமாய் ஆகின்றாள் ★★.

---

★ कुण्डलीभूतसर्पाणां अङ्गश्रियमुपेयुषी
सर्वदेवमयी देवी सर्वमन्त्रमयी शिवा
सर्वतत्वमयी साक्षात् सूक्ष्मा सूक्ष्मतरात् विभुः ।
त्रिधामजननी देवी शब्दब्रह्मस्वरूपिणी ॥ - शारदातिलके

குண்டலீபூத ஸர்பாணும் அங்கச்ரிய முபேயுஷீ ।
ஸர்வ தேவமயீ தேவீ ஸர்வமந்த்ரமயீ சிவா ॥
ஸர்வதத்வமயீ ஸாக்ஷாத் ஸூக்ஷ்மாஸூக்ஷ்மதராத் விபு: ।
த்ரிதாமஜனனீ தேவீ சப்தப்ரம்ஹ ஸ்வரூபிணீ ॥
(சாரதாதிலகே)

★★ सा प्रसूते कुण्डलिनी शब्दब्रह्ममयी विभुः ।
शक्तिं ततो ध्वनिं तस्मात् नादस्तस्मान्निरोधिका ॥
ततोऽर्धेन्दुः ततो बिन्दुः तस्मादासीत्परा ततः ।
पश्यन्ती मध्यमा वाचि वैखरी शब्दजन्मभूः ॥
इच्छाज्ञान क्रियात्मासौ तेजोरूपा गुणात्मिका ।
क्रमेणानेन सृजति कुण्डली वर्णमालिकाम् ॥ - शारदातिलके



ஸா ப்ரஸூதே குண்டலினீ சப்தப்ரம்ஹமயீ விபு: ।
சக்திம் ததோ த்வனிம் தஸ்மாத் நாதஸ் தஸ்மாந் நிரோதிகா ॥
ததோऽர்தேந்து: ததோ பிந்து: தஸ்மாதாஸீத் பரா தத: ।
பச்யந்தீ மத்யமா வாசி வைகரீ சப்த ஜன்மபூ: ॥
இச்சாஞான க்ரியாத்மாஸௌ தேஜோரூபா குணாத்மிகா ।
க்ரமேணானேன ஸ்ருஜதி குண்டலீ வர்ணமாலிகாம் ॥
-சாரதாதிலகே

---

இங்கு பிந்துக்கு அர்த்தேந்துவும், அர்த்தேந்துக்கு நிரோதிகையும் நிரோதிகைக்கு நாதமும், நாதத்திற்கு த்வனியும், த்வனிக்கு சக்தியும், சக்திக்கு சப்த ப்ரம்ஹமும் மூலமாகின்றன. மேற்கூறிய பேதங்கள் மிகவும் ஸூக்ஷ்மமானவையாகும்.

சப்த ப்ரம்ஹத்தினின்றும் ஏழாவதாகக் கூறப்படும் பிந்து சரீரத்தில் ஒவ்வொரு ஸ்தானத்தில் இருக்கும்போது வெவ்வேறு பெயர் பெறுகின்றன.

1. மூலாதாரத்தில் இச்சா சக்தி ரூபமாய் இருந்துகொண்டு 'பரா'' என்றும்.
2. ஸ்வாதிஷ்டானத்தில் ஞான சக்தியாக இருந்துகொண்டு ''பச்யந்தீ'' என்றும்,
3. ஹ்ருதயத்தில் க்ரியாசக்தியாய் இருந்துகொண்டு ''மத்யமை'' என்றும்,
4. முகத்தில் ''வைகரீ'' என்றும் பெயர் பெறுகின்றது. இதில் பரா பச்யந்தி மத்யமா என்ற மூன்றும் வ்யக்தமாகாத த்வனிகள்.

நான்காவதான வைகரீ தான் அகாரம் முதல் க்ஷகாரம் ஈறான வர்ணங்களாய்த் தோன்றி காதில் படுகின்றது. மூன்றும் அவ்யக்தமென்றும், நான்காவதான வைகரீதான் வ்யக்தமான வர்ணமாகிறதென்றும் வேதம் ★ கூறுகின்றது.
அவ்வாறே ப்ரபஞ்ச ஸாரத்திலும் கூறப்பட்டிருக்கன்றது. ★

---

★ चत्वारि वाक् परिमिता पदानि
तानि विदु ब्राह्मणा ये मनीषिणः ।
गुहा त्रीणि निहिता नेङ्गयन्ति
तुरीयं वाचो मनुष्या वदन्ति ॥ (श्रुतिः)

சத்வாரி வாக் பரிமிதா பதானி
தானி விதுர் ப்ராம்ஹணா யே மனீஷிண: ।
குஹா த்ரீணி நிஹிதா நேங்கயந்தி
துரீயம் வாசோ மனுஷ்யா வதந்தி ॥ (சுருதி:)

★ मूलाधारात्प्रथममुदितः यस्तु भावः पराख्यः
पश्चात् पश्यन्त्यथ हृदयगो बुद्धियुङ् मध्यमाख्यः ।
वक्त्रे वैखर्यपि रुरुदिषोः अस्य जन्तोः सुषुम्ना
बद्धस्तस्मा द्भवति पवनप्रेरितो वर्णसङ्घः ॥ ४४ ॥
स्रोतो मार्गस्याऽविभक्तत्वहेतोः
तत्रार्णानां जायते न प्रकाशः ।
तावद्यावत् कण्ठ मूर्धादिभेदो
वर्णव्यक्तिस्थान संस्था यतोऽतः ॥ (२ पटले)

श्री शङ्कराचार्याणां प्रपञ्चसारतन्त्रे

மூலாதாராத் ப்ரதமமுதித: யஸ்து பாவ: பராக்ய:
பஸ்சாத் பச்யந்த்யத ஹ்ருதயகோ புத்தியுங் மத்யமாக்ய: ।
வக்த்ரே வைகர்யபி ருருதிஷோ: அஸ்ய ஜந்தோ: ஸுஷும்னா
பத்தஸ்தஸ்மாத் பவதி பவனப்ரேரிதோ வர்ணஸங்க: ॥
ஸ்ரோதோ மார்கஸ்யாவிபக்தத்வஹேதோ:
தத்ரார்ணானாம் ஜாயதே ந ப்ரகாச: ।
தாவத்யாவத் கண்டமூர்த்தாதிபேதோ
வர்ணவ்யக்திஸ்தான ஸம்ஸ்தா யதோऽத: ॥ 45 படலம்

*(சங்கராசார்யரின் பிரபஞ்சஸார தந்த்ரே)*

---

ஆகவே எல்லாவற்றிற்கும் மூலகாரணம் குண்டலினியே. இவளே சப்தப்ரம்ஹம் என்ற பெயராலும், ஸ்ரீ புவனேச்வரீ என்ற பெயராலும் அழைக்கப்படுகின்றாள்.

ஞான உருவானவள்

பல கோடி அண்டங்களை ஆக்கித்தந்தவள் ஸ்ரீ புவனேச்வரீ தேவி.



अथापि वक्ष्ये सकल प्रपंच
मूलात्मिकायाः प्रकृते र्यथावत् ॥
அதாபி வக்ஷ்யே ஸகலப்ரபஞ்ச-
மூலாத்மிகாயா: ப்ரக்ருதேர் யதாவத் ॥

என்று பிரபஞ்ச ஸார தந்த்ரத்தில் ஒன்பதாவது படலத்தின் முதல் சுலோகத்தால் இவளை 'எல்லாப் பிரபஞ்சங்களுக்கும் மூலப்ரக்ருதி' என்று போற்றுகிறார் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாசார்யார் அவர்கள்.

இவள் ''ஞான உருவானவள்'' என்பதை,

१. बोधस्वरूपवाची संविप्रोक्ता च देवता गुरूभिः ।
२. बोधस्वरूपा संविद्देवता ।
३. सर्वचैतन्यरूपां तामाद्यां विद्यां च धीमहि ।
बुद्धिं या नः प्रचोदयात् ॥

1. போதஸ்வரூபவாசீ ஸம்வித் ப்ரோக்தா ச தேவதா குருபி: ।
2. போதஸ்வரூபா ஸம்வித் தேவதா ।
3. ஸர்வசைதன்யரூபாம் தாம் ஆத்யாம் வித்யாம் ச தீமஹி ।
புத்திம் யா ந: ப்ரசோதயாத் ॥

---

1. பிரபஞ்ச ஸாரதந்த்ரம் 9-வது படலம் 3-ம் ச்லோகம்
2. பிரபஞ்சஸார ஸாரஸங்க்ரஹம் 9-வது படலம்
3. தேவிபாகவதம் 1 ஸ்கந்தம் அத்யாயம் 1, முதல் ச்லோகம்

४. देवता चित्कलारूपा भुवनेशी परात्मिका ॥

4. தேவதா சித்கலாரூபா புவனேசீ பராத்மிகா ॥

என்று பிரபஞ்சஸார தந்த்ரம், பிரபஞ்சஸார ஸாரஸங்க்ரஹம், தேவிபாகவதம், தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை முதலிய நூல்கள் குறிப்பிடுகின்றன. அதனால்தான் ஸ்ரீ புவனேச்வரீ மந்த்ரங்கள் ஞானஸ்வரூபிணியான ஸரஸ்வதி தேவியைப் பற்றிக் குறிப்பிடும் பிரகரணத்தின் பின் கூறப்பட்டிருக்கின்றன என்று,

५. एवं सरस्वतीमन्त्रानुक्त्वा तदन्तर्गतत्वात् एतदनन्तरं
भुवनेशीमन्त्रान् वक्तुमारभते

"ஏவம் ஸரஸ்வதீ மந்த்ரான் உக்த்வா ததந்தர்கதத்வாத்
ஏததனந்தரம் புவனேசீ மந்த்ரான் வக்தும் ஆரபதே ।"

சாரதா திலகத்தின் உரையாசிரியராகிய ராகவ பட்டர் அவர்கள் புவனேச்வரீ படலத்தின் முன்னுரையில் விளக்கியிருக்கின்றார்.

பிரபஞ்ச ஸார தந்த்திரத்திற்கு உரை எழுதிய ஸ்ரீ பத்மபாதாசார்யார் அவர்களின் விவரணத்தின் உரையான பிரயோக க்ரம தீபிகையில் "ஸரஸ்வதிதேவியிடம் ஞானசக்தி பிரத்தானமாய் விளங்குகின்றது" ஸ்ரீபுவனேச்வரீ தேவீயிடம் இச்சாசக்தி பிரதானமாய் விளங்குகின்றது, என்று பத்மபாதாச்சார்யாள் அபிப்ராயப் படுகின்றார் என்பது.

इच्छाशक्तिप्रधानां भुवनेशीमिति । ततश्च एतदपि लभ्यते ।
एकैवोन्मनी शक्तिः इच्छाशक्ति प्रधाना भुवनेशी ।
ज्ञानशक्तिप्रधाना सरस्वती, क्रियार्शक्ति प्रधाना त्रिपुरेति ॥

இச்சாசக்தி ப்ரதானாம் புவனேசீமிதி । ததஸ்ச ஏததபிலப்யதே ।
ஏகைவோன்மனீ சக்தி: இச்சாசக்தி ப்ரதானா புவனேசீ
ஞானசக்தி ப்ரதானா ஸரஸ்வதீ, க்ரியாசக்தி ப்ரதானா த்ரிபுரேதி ॥

..........................................................

4. தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிகை 33-ம் படலம்
5. சாரதா திலகம் 9-ம் படலம், முதல் ச்லோகத்தின் உரை
6. प्रपंचसारतन्त्रं (ஆகமானுஸந்தான ஸமிதி பிரசுரம்) ஒன்பதாவது படலத்தில் ஸ்ரீ பத்மபாதாசார்யாரின் ப்ரயோக க்ரமதீபிகை 555-ம் பக்கம்)

என்ற வாக்யங்களால் புலனாகிறது. ஸரஸ்வதி ஞானசக்தியாய் இருந்தபோதிலும், இச்சா-க்ரியா சக்திகளும் அங்கு குணங்களாய் (அப்பிரதானங்களாய்) இருக்கும். த்ரிபுரா க்ரியாசக்தி பிரதானையாய் இருந்தபோதிலும் அவளிடம் இச்சா ஞானசக்திகளும் குணங்களாய் விளங்கும். அவ்வாறே இச்சாசக்தி ப்ரதானையாய் புனேசி இருந்தபோதிலும் அவளிடம் க்ரியா ஞானசக்திகளும் குணங்களாய் அமைந்திருக்கும் என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது.



"ஹ்ரீங்காரம்"

இந்த புவனேச்வரீயின் மந்த்ரம் ஹ்ரீங்காரம் ह्रीं. இந்த ஹ்ரீங்காரத்தை "புவனேசி" என்ற சொல்லாலேயே வழங்குகின்றது மந்த்ர சாஸ்த்ரம். ஓங்காரத்தைப் பிரணவம் என்று கூறுவது போல் இந்த ஹ்ரீங்காரத்தை "சக்தி ப்ரணவம்" என்று கூறுவர். இந்த ஹ்ரீங்காரத்தை "மாயாபீஜம், சக்திபீஜம், ஹ்ருல்லேகா" என்ற பெயர்களாலும் குறிப்பிடப்படுவதையும் பல இடங்களில் காணலாம். இதற்கே "மாலினீ, சிவவல்லரீ, மாயாமூர்த்தி, கலா, வாணீ, பீஜசக்தி, குண்டலீ" என்ற மற்ற பெயர்களும் உண்டு என்று

७. मायाबीजस्य नामानि मालिनी शिववल्लरी ।
मायामूर्तिः कला वाणी बीजाक्तिश्च कुण्डली ॥

மாயாபீஜஸ்ய நாமாவளி மாலினீ சிவவல்லரீ ।
மாயாமூர்த்தி: கலாவாணீ பீஜசக்திஸ்ச குண்டலீ ॥

இந்த ச்லோகத்தால் தெரிகின்றது.

"வேதம் ஈன்றெடுத்த ஹ்ரீங்காரம்"

இந்த ஹ்ரீங்காரம் வேதத்திலிருந்து கிடைத்த மஹாமந்த்ரம் ஆகும். வேதங்களில் சக்தியின் பெருமையும், சக்தி வழிபாடும் காணப்படுகின்றன. குறிப்பாக உபநிஷத்துக்களில் சக்தியின் சிறப்பியல்புகள் பறைசாற்றப்படுகின்றன. அப்படி சக்தியைப் பற்றிக் கூறும் உபநிஷத்துக்களை "சாக்த உபநிஷத்துக்கள்" என்று கூறுவர்.

அவை த்ர்புரோபநிஷத், த்ரிபுரதாபின்யுபநிஷத், தேவீ உபநிஷத், பஹ்வ்ருசோபநிஷத், பாவனோபநிஷத், ஸரஸ்வதி ரஹஸ்யோபநிஷத், ஸீதோபநிஷத், ஸௌபாக்யலக்ஷ்மீ உபநிஷத் முதலியனவாகும். மேற்கூறிய உபநிஷத்துக்களில் சாதாரணமாக தேவியைப்பற்றிக் கூறப்பட்டிருந்தபோதிலும், புவனேச்வரீயைப் பற்றிக் கூறியிருப்பதையும் ஆங்காங்கே காணமுடிகின்றது. புவனேச்வரீயைப் பற்றிக் கூறும் "புவனேச்வரீ உபநிஷத்தும் உண்டு என்று (भुवनेश्वर्युपनिपदि) புவனேச்வர்யுபிநிஷதி ★

अथाम्बोपनिषदं व्याख्यास्यामो ह्येनां ब्रह्मरन्ध्रे ब्रह्मरूपिणी माप्नोति इति ।
तथा भुवनाधीश्वरी तुर्यातीता विश्वमोहिनी इति ॥

அதாம்போபநிஷதம் வ்யாக்யாஸ்யாமோ ஹ்யேனும் ப்ரம்ஹரந்த்ரே ப்ரம்ஹரூபிணீமாப்னோதி இதி ।
ததா புவனேச்வரீ துர்யாதீதா விச்வமோஹினீ இதி ॥

என்பன போன்ற தேவீபாகவத உரைகாரரின் வாக்யங்களாலும் அறியமுடிகின்றது.

(त्रिपुरोपनिषदि) த்ரிபுரோபநிஷத்தில்

कामो योनिः कामकला वज्रपाणिः
गुहा हसा मातरिश्वाभ्रमिन्द्रः ।
पुनर्गुहा सकला मायया
पुरूच्येषा विश्वमाताऽदिविद्या ॥

காமோ யோநி: காமகலா வஜ்ரபாணி:
குஹா ஹஸா மாதரிச்வராப்ர மிந்த்ர: ।
புனர் குஹா ஸகலா மாயயா ச
புருச்யேஷா விச்வமாதாऽதிவித்யா ॥

என்ற மந்த்ரத்தின் உரையில் ஸ்ரீபாஸ்கராசார்யார் அவர்கள் गुहा - माया भुवनेश्वरी बीजे குஹா-மாயே புவனேச்வரீ பீஜம் என்று குறிப்பிட்டிருக்கின்றார்கள். இவருடைய காலத்தில் ஸ்ரீதேவீ பாகவதம் நல்ல ப்ரமாணநூலாக எடுத்தாளப்பட்டிருக்கின்றது என்று தெரிகின்றது. இங்கு உரையில்.

किं बहुना गायत्र्यपि आदिविद्योद्धारिकैव त्रिपुरतापिन्या स्पष्टं, प्रदर्श्यते ।
भागवतप्रथमश्लोकोपि एवमेवोपबृंहयति ।
सर्वचैतन्यरूपां तामाद्यां विद्यां च धीमहि ।
बुद्धिं या नः प्रचोदयात् ॥

கிம் பஹுனா காயத்ரியபி ஆதிவித்யோத்தாரிகைவ த்ரிபுரதாபின்யா ஸ்பஸ்டம் ப்ரதர்ச்யதே ।
பாகவத ப்ரதமச்லோகோபி ஏவமேவோபப்ரும்ஹயதி ॥
ஸர்வ சைதன்ய ரூபாம் தாம் ஆத்யாம் வித்யாம் சதீமஹி ।
புத்திம் யாந: ப்ரசோதயதாத் ॥



என்று தேவீ பாகவத முதல் சுலோகத்தை எடுத்துப் பிரமாணமாகக் கொடுத்திருக்கின்றார். ஆகவே குஹா-மாயா இரண்டு சொற்களும் புவனேச்வரீ பீஜமான ஹ்ரீங்காரத்தைக் குறிப்பிடுகின்றன என்பது தெரிகின்றது. இந்த ★ कामो योनिः காமோ யோனி: என்ற மந்த்ரம் தேவீ உபநிஷத்திலும் தென்படுகின்றது. இம் மந்த்ரத்தின் உரையில் "உபநிஷத் பிரம்மேந்திரயோகி" அவர்களும் गुहा-ह्रींकारः குஹா - ஹ்ரீங்கார: என்று உரை எழுதியிருக்கின்றார் இதனால் குஹா என்றும் ஹ்ரீங்காரத்திற்கு ஒரு பெயர் உண்டு எனவும் தெரிகின்றது.

இந்த ஹ்ரீங்காரம் ஸ்ரீபுவனேச்வரீ ஜகன்மாதாவின் மூல மந்த்ரம் என்பது தேவீ உபநிஷத்தின் மூலமாகவே அறியப்படுகின்றது.

वियदीकारसंयुक्तं वीतिहोत्रसमन्वितम् ।
अर्धेन्दुलसितं देव्याः बीजं सर्वार्थसाधकम् ॥

வியதீகாரஸம்யுக்தம் வீதிஹோத்ரஸமன்விதம் ।
அர்த்தேந்து லஸிதம் தேவ்யா: பீஜம் ஸர்வார்த்த ஸாதகம் ॥

(தேவீ உபநிஷத், மந்த்ரம் 20. பக்கம் 57)

இதன் உரையில் உபநிஷத் ப்ரம்ஹேந்திரயோகிகள்.

भुवनेश्येकाक्षरमन्त्रं उद्धरति वियदिति । ह्रीमिति
புவனேச்வரீ மந்த்ரமுத்தரதி "வியதிதி ஹ்ரீமிதி"

என்று பிரகாசப்படுத்தியிருக்கின்றார்.

सर्वार्थसाधकं ஸர்வார்த்தஸாதகம் - அனைத்தையும் ஸாதித்துக் கொடுக்கும் देव्याः தேவ்யா: - புவனேசீ தேவியினுடைய बीजं பீஜம் -பீஜமான ஹ்ரீங்காரமானது, वियदीकारसंयुक्तं வியதீகார ஸம்யுக்தம் - ஹகார ஈகாரங்களுடன் கூடியதும், वीतिहोत्रसमन्वितं வீதிஹோத்ர ஸமந்விதம் -ரேபத்தோடு கூடியதும், अर्धेन्दुलसितं அர்த்தேந்துலஸிதம் - பிந்துவினால் பிரகாசிக்கின்றதாயும் இருக்கின்றது.

பஹ்வ்ருசோபநிஷத்தில் சித்சக்தியே,

योऽहमस्मीति वा, सोहमस्मीति वा, योऽसौ सोहमस्मीति वा या भाव्यते । सैषा षोडशी श्रीविद्या पञ्चदशाक्षरी श्रीमहात्रिपुरसुदरी, बालांबिकेति बगलेति मातङ्गीति स्वयंवरकल्याणीति भुवनेश्वरीति - चामुण्डेति चण्डीति वाराहीति तिरस्करिणीति वा शुकश्यमलेति वा अश्वारूढेति वा प्रत्यङ्गिराः सावित्री सरस्वती गायत्री ब्रह्मानन्दकलेति

"யோஹமஸ்மீதி வா, ஸோஹமஸ்மீதி வா, யோஸௌ ஸோஹமஸ்மீதி வா யா பாவ்யதே ஸைஷா ஷோடசீ ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரீ ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரீ, பாலாம்பிகேதி பகளேதி மாதங்கீதி திரஸ்கரிணீதி ராஜமாதங்கீதி சுகச்யாமளேதி வா அச்வாரூடேதி வா ப்ரத்யங்கிரா: தூமாவதீ ஸாவித்ரீ ஸரஸ்வதீ காயத்ரீ ப்ரம்ஹானந்தகலேதி"

என்று பல பெயர்களால் கூறப்படுகின்றாள் என்று விளக்கம் கொடுக்கும் போது ''புவனேச்வரி'' என்ற பெயரும் காணப்படுகின்றது.

## த்ரிபுரோபநிஷத்தில்

கடைசியில் ''ओं ह्रीं ओं ह्रीं इत्युपनिषत्'' ''ஓம் ஹ்ரீம் ஓம் ஹ்ரீம் இத்யுபநிஷத்'' என்று ஹ்ரீங்காரம் கூறப்பட்டு இருக்கின்றது. இதற்கு ஸ்ரீ உபநிஷத் ப்ரம்மேத்திர யோகிகள் தமதுரையில்,

तत्तनुः कीदृशीत्यत्र ओं इति ओंकारार्थः चित्वं,
ह्रींकारार्थः चिच्छक्तित्वं चेति चिच्छक्तिरूच्यते ।

தத்தனு: கீத்ருசீத்யத்ர ஓம் ஹ்ரீம் இதி ஓங்காரார்த்த: சித்வம்,
ஹ்ரீங்காராத்த: சித்சக்தித்வம் சேதி சித்சக்தி ருச்யதே ।

என்பதால் ஹ்ரீங்காரத்தின் பொருள் சித்சக்தியே என்று விளக்கியிருக்கின்றார். சித்சக்தி புவனேச்வரீ என்று பிரபஞ்சஸார தந்த்ரத்தில் கூறியிருப்பதை இங்கு நினைவு கொள்ளலாம்.

## துர்காஸூக்தத்தில்:

வேதங்கள் என்ற உத்யான வனத்தில் கல்பகவிருக்ஷம் போன்றது ஸ்ரீ துர்காஸூக்தம். அந்த ஸ்ரீ துர்காஸூக்தம் அளித்த சிறந்த மாணிக்கம்.



तामग्निवर्णां तपसा ज्वलन्तीं
वैरोचनीं कर्मफलेषु जुष्टाम् ।
दुर्गां देवीं शरणमहं प्रपद्ये
सुतरसि तरसे नमः ।

தாமக்னி வர்ணாம் தபஸா ஜ்வலந்தீம்
வைரோசனீம் கர்ம பலேஷு ஜுஷ்டாம் ।
துர்காம் தேவீம் சரணமஹம் ப்ரபத்யே
ஸுதரஸி தரஸே நம: ॥

என்ற மந்தரமாகும். இதற்கு அக்னிபோன்ற வர்ணமுள்ளவளும் வேதரூபமான ஞானத்தால் பிரகாசிப்பவளும், சூர்யமண்டலத்தின் நடுவில் உள்ளவளும் கர்மபலனை அடைவதின் பொருட்டு உபாஸிக்கப்படுகின்றவளும் துர்கை என்ற பெயர்கொண்டவளுமாகிய தேவியை நான் சரணம் அடைகிறேன். கடப்பதற்குரிய ஸம்ஸாரத்தில் கடந்து செல்வதற்காக உனக்கு நமஸ்காரம் என்பது வெளிப்படையான பொருள். ஆயினும் இம்மாபெரும் மந்த்ரத்தினின்றும் எழுந்ததே புவனேச்வரீ பீஜமான ஹ்ரீங்காரம் என்று சைவ நீலகண்டர் என்ற மஹான் தேவீபாகவதத்திற்கு ''திலகம் என்ற நல்லதொரு உரையியற்றிருக்கின்றார். அதில் அவர் ह्रीं ஹ்ரீங்காரம் என்ற மந்த்ரம் तामग्निवर्णां தாமக்னிவர்ணாம் என்ற மந்த்ரத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும் என்று விரித்துரைத்திருக்கின்றார்.

தேவிபாகவதம் ஏழாவது ஸ்கந்தத்தில் பார்வதி தேவியின் அவதாரம் பற்றிப் பேசப்படுகின்றது.. அவ்விடத்தில் தாரகன் என்ற அசுரனால் நலிந்த தேவர் தேவியைப் பார்த்து பரமேச்வரீ, தாரகாசுரன் சிவபெருமானின் குமாரனைத் தவிர மற்றவரால் தனக்கு மரணமில்லை என்று வரம் வாங்கிவிட்டான். இப்போது சிவனே மனைவியற்றிருக்கின்றார். (தாக்ஷாயணீ சிவனை விட்டுப்பிரிந்த ஸமயம் இது) அவருக்கு மனைவியிருந்தாலல்லவோ குமாரன் பிறப்பான். ஆகவே இவ்விஷயத்தில் நீதான் அருள் புரிய வேண்டும் என்று பிரார்த்திக்கின்றனர். அவர்கள் தேவியை குறித்து பிரார்த்திக்கும் ஸ்துதிகளிலே வியாஸாசாரியாரின் வாக்காக ★ ★ தாமக்நிவர்ணாம் என்று தொடங்கும் மந்த்ரமும் வருகின்றது. இவ்விடத்தில்,

★ विरोचनः सूर्यः तेन तद्बीजं गृह्यते । सूर्यस्य बिन्द्वात्मकपरमेश्वरत्वेन, बिन्दोश्च हकारात्मकत्वेन प्रपंचसारे तृतीयचतुर्थपटलयोरुक्तत्वात् । (देवीभागवतव्याख्या)

விரோசன: ஸூர்ய:, தேந தத்பீஜம் ஹகாரோ க்ருஹ்யதே । ஸூர்யஸ்ய பிந்த்வாத்மக பரமேச்வரத்வேன பிந்தோஸ்ச ஹகாராத்மகத்வேன ப்ரபங்சஸாரே த்ருதீய சதுர்த்த படலயோ: உக்தத்வாத் ॥ (தேவீபாகவத உரை)

.............................................................

अग्निवर्णां அக்னிவர்ணாம் - இது அக்னிவாசகமான ரேபத்தைக் குறிக்கின்றது. (ர்), तपसा ज्वलन्तीं தபஸாஜ்வலந்தீம் - என்பதில் உள்ள தபஸ் என்ற சொல் மாயையைக் குறிக்கும். அதனால் ஈகாரம் குறிக்கப்பெறுகின்றது. वैरोचनीं வைரோசனீம் - என்பது சூரியபீஜமான ஹகாரத்தையும் பிந்துவையும் குறிக்கின்றது.★

ஆகவே இவ்வெழுத்துக்களின் சேர்க்கையே ஹ்ரீங்காரமாகி விடுகின்றது. இந்த ஹ்ரீங்காரத்தின் தேவதை புவனேச்வரீ என்று உரை கண்டிருக்கின்றார். சைவ நீலகண்டர் என்பார். இதிலிருந்து तामग्निवर्णां தாமக்னிவர்ணாம் என்ற ரிக்கே ஹ்ரீங்காரத்தின் மூலம் என்று தெளிவாகின்றது,

"ஸாமவேதம் கண்டஹிம்"

இந்த ஹ்ரீங்காரம்தான் ஸாமவேதத்தில் "पृथ्वी हिंकारः आदित्यो हिंकारः द्यौ हिंकारः पुरोवातो हिंकारः प्रजापति हिंकारः उद्याकारो मनो हिंकारः" ப்ருத்வீ ஹிங்கார: ஆதித்யோ ஹிம்கார: த்யௌர் ஹிம்கார: புரோவாதோ ஹிங்கார: ப்ரஜாபதிர் ஹிங்கார: உத்யன் ஹிங்கார: மனோஹிங்கார:" என்று "ஹிம்" கூறப்படுகின்றது. ஆனால் இங்கு கூறப்படும் ஹ்ரீங்காரமே, ரேபரூபமான கிலகமில்லாமலும், குறிலான இகாரத்தோடு கூடியதுமாய் இருக்கின்றது, என்பதை "புவனேச்வரீ ஸம்ஹிதை" என்ற நூல்,

सामसु प्रथमा भक्तिः हिंकारो मे मनुर्मतः ।
ह्रस्वेकारयुतं तत्तु मायाबीजं प्रचक्षते ॥

ஸாமஸு ப்ரதமா பக்தி: ஹிங்காரோ மே மனுர் மத: ।
ஹ்ரஸ்வேகாரயுதம் தத்து மாயாபீஜம் ப்ரசக்ஷதே ॥

என்ற சுலோகத்தால் விளங்குகின்றது.



இந்த ஹிங்காரமானது வேதங்களில் பல இடங்களில் வருகின்றது.

"वज्रो वै हिंकारः शुक्लमेव हिंकारः वायुरेव हिंकारः प्राणो वै हिंकारः प्रजापति हिंकारः चन्द्रमा एव हिंकारः अहोरात्राणि हिंकारः वसन्तो हिंकारः एष वै साम्नां रसः यद्धिंकारः श्रीर्वै साम्नो हिंकारः"

"வஜ்ரோவை ஹிங்கார: சுக்லமேவ ஹிங்கார: வாயுரேவ ஹிங்கார: ப்ராணோவை ஹிங்கார: ப்ரஜாபதிர் ஹிங்கார: சந்த்ரமா ஏவ ஹிங்கார: அஹோராத்ராணி ஹிங்கார: வஸந்தோ ஹிங்கார: ஏஷ வை ஸாம்னாம் ரஸ: யத்திங்கார: ஶ்ரீர்வை ஸாம்னோ ஹிங்கார:"

ஸப்தசதியின் முதல் சுலோகத்தில்

सावर्णिः सूर्यतनयो यो मनुः कथ्यतेऽष्टमः ।
निशामय तदुत्पत्तिं विस्तराद्गदतो मम ॥

ஸாவர்ணி: ஸூர்யத னயோ யோமனு: கத்யதேஷ்டம: ।
நிசாமய ததுத்பத்திம் விஸ்தராத் கததோ மம ॥

என்று சப்தசதியின் முதல் சுலோகம் கூட ஹ்ரீங்கார மந்த்ரத்தைத் தன்னகத்தே தாங்கித் திகழ்கின்றது என்று கூறுவர். இங்கு सावर्णिः ஸாவர்ணி: என்பது ई ஈம் என்பதையும், सूर्यतनयः ஸூர்யதனய: என்பது ரேபத்தையும், यो मनुः कथ्यतेऽष्टमः யோ மனு: கத்யதேஷ்டம: என்பது ஹகாரத்தையும் तदुत्पत्तिं ததுத்பத்திம் என்பது ஸ்பஷ்டமாக பிந்துவையும் குறிக்கின்றன. ஆக ஹ்ரீமென்பது இந்த சுலோகத்தால் குறிப்பிடப்படுகின்றது ★

★ ஸப்தசதீ நாகோஜிபட்டரின் உரையினின்றும்

★ यः = यकारादष्टमो मनुः हकारः तस्य विशेषणं सूर्यतनयः इति, सच अग्निः तेजस्वित्वेन तन्नेदिष्टत्वात् तेन तद्बीजं रेफो लभ्यते । तद्वत्वं च हकारस्य लक्षणयोच्यते तस्यैव विशेषणान्तरत्वात् सावर्णिरिति, सवर्णा लोहित-शुक्लकृष्ण - वर्णसहिता प्रकृतिः तस्या अपत्यवत् सम्बन्धी तद्वाचकः ईकारः तद्वत्वं लक्षणया, अन्तिमो बिन्दुस्तु श्लोके स्वरूपत एव निवेशित इति ई ह्रीं बीजं लब्धं तदुत्पत्तिं तन्मन्त्रप्रतिपाद्य देवतायाः उत्पत्तिं निशामयेति सम्बन्धः

ய: யகாராத் அஷ்டமோமனு: ஹகார: தஸ்ய விசேஷணம் ஸூர்யதனய: இதி, ஸ ச அக்னி: தேஜஸ்வித்வேன தந்நே திஷ்டத்வாத்

தேன தத்பீஜம் ரேபோ லப்யதே। தத்வத்வம் ச ஹகாரஸ்ய லக்ஷணயோச்யதே தஸ்யைவ விசேஷணாந்தரத்வாத் ஸாவர்ணிரிதி ஸவர்ண லோஹித சுக்ல க்ருஷ்ணவர்ண ஸஹிதா ப்ரக்ருதி: தஸ்யா அபத்யவத் ஸம்பந்தி தத்வாசக: ஈகார: தத்வத் த்வம் ச லக்ஷணயா, அந்திமோ பிந்துஸ்து ச்லோகே ஸ்வரூபத ஏவ நிவேசித இதி. ஈம்ஹரீம் பீஜம் லப்தம் ததுப்பத்திம் தன்மந்த்ர ப்ரதிபாத்ய தேவதாயா: உத்பத்திம் நிசாமயேதி ஸம்பந்த: ॥

### லலிதாஸஹஸ்ரநாமாவில் ஹ்ரீங்காரம்

லலிதாஸஹஸ்ர நாமாவிலுள்ள श्रीमाता श्रीमहाराज्ञी ஸ்ரீமாதா ஸ்ரீமஹாராஞ்ஞீ என்ற முதல் சுலோகத்திலுள்ள 'மஹாராஞ்ஞீ' என்ற சொல் ஹ்ரீங்காரத்தின் மாற்றமே என்று சாக்தர் பரம்பரையாகக் கூறுவர். ह्रीं ஹ்ரீம்காரத்தில் ஹ, ர், ஈ, ம் (பிந்து) இவையே மஹாராஞ்ஞி என்ற சொல்லிலும் இருக்கின்றன. "ம், ஹ், ர், ஈ என மாற்றியமைக்கப் பெற்றிருக்கின்றது.

### "த்ரிசதியிலே ஹ்ரீங்காரமும் ஆதிசங்கரரின் உரையும்"

சாக்தர்களின் பாராயணத்தில் முக்யநூலாகக் கருதப்படும் லலிதாத்ரிசதியில் இந்த ஹ்ரீங்காரவைபமும் இந்த ஹ்ரீங்காரத்திற்கு ஆதிசங்கர பகவத்பாதாசார்யாள் உரையில் கூறியிருக்கும் சில கருத்துக்களும் தெரிந்துகொள்ள வேண்டியவையாகும். லலிதா ஸஹஸ்ரநாமாவில் ह्रींकारी ह्रीमती ஹ்ரீங்காரீ ஹ்ரீமதீ (70 श्लोकं) என்ற நாமாக்கள் தென்படுகின்றன. இவ்வாறே த்ரிசதியில் நிறைய ஹ்ரீங்கார நாமாக்கள் வருகின்றன.

**ह्रींकाररूपा, ह्रींकारनिलया, ह्रींकारवीजा, ह्रींकारमन्त्रा, ह्रींपदाभिधा, ह्रींकारवाच्या, ह्रींकारपूज्या, ह्रींकारवेद्या, ह्रींशरीरिणी ।**

ஹ்ரீங்காரரூபா, ஹ்ரீங்காரநிலயா, ஹ்ரீங்காரபீஜா, ஹ்ரீங்காரமந்த்ரா, ஹ்ரீம்பதாபிதா, ஹ்ரீங்காரவாச்யா, ஹ்ரீங்காரபூஜ்யா, ஹ்ரீங்காரவேத்யா, ஹ்ரீம்சரீரிணீ முதலிய நாமாக்கள் குறிப்பாக ஹ்ரீங்காரம் பரசக்தியை குறிப்பிடுகின்றது என்பதை காட்டுகின்றன.

இதுபோன்றே ஹ்ரீங்காரம் என்ற மஹாமந்த்ரத்தின் மூலமாகவே பராசக்தி விளங்குகின்றாள் என்பதை உறுதிப்படுத்தும் பல நாமாக்கள் தென்படுகின்றன. இதில்-



१. **ह्रींकारभास्कररूचिः**
ஹ்ரீங்கார பாஸ்கரருசி:

२. **ह्रींकाराम्भोदचञ्चला**
ஹ்ரீங்காராம்போத சஞ்சலா

३. **ह्रींकारकन्दांकुरिका**
ஹ்ரீங்கார கந்தாங்குரிகா

४. **ह्रींकारदीर्घिकाहंसी**
ஹ்ரீங்கார தீர்கிகா ஹம்ஸீ

५. **ह्रींकारोद्यानकेकिनी**
ஹ்ரீங்காரோத்யான கேகினீ

६. **ह्रींकारारण्यहरिणी**
ஹ்ரீங்காராரண்ய ஹரிணீ

७. **ह्रींकारालवालवल्लरी**
ஹ்ரீங்காராலவால வல்லரீ

८. **ह्रींकारपञ्जरशुकी**
ஹ்ரீங்கார பஞ்ஜரசுகீ

९. **ह्रींकाराङ्गणदीपिका**
ஹ்ரீங்காராங்கண தீபிகா

१०. **ह्रींकारकन्दरासिंही**
ஹ்ரீங்கார கந்தரா ஸிம்ஹீ

११. **ह्रींकाराम्भोजभृङ्गिका**
ஹ்ரீங்காராம்போஜ ப்ருங்கிகா

१२. **ह्रींकारसुमनो माध्वी**
ஹ்ரீங்கார ஸுமனோ மாத்வீ

१३. **ह्रींकारतरुमञ्जरी**
ஹ்ரீங்கார தருமஞ்ஜரீ

१४. **ह्रींकारसौधभृङ्गकपोतिका**
ஹ்ரீங்காரஸௌத ச்ருங்க கபோதிகா

१५. **ह्रींकारदुग्धाब्धिसुधा**
ஹ்ரீங்கார துத்தாப்தி ஸுதா

१६. ह्रींकारकमलेन्दिरा
ஹ்ரீங்கார கமலேந்திரா
१७. ह्रींकारमणिदीपार्चिः
ஹ்ரீங்கார மணிதிபார்சி:
१८. ह्रींकारतरुशारिका
ஹ்ரீங்கார தருசாரிகா
१९. ह्रींकारपेटकमणिः
ஹ்ரீங்கார பேடகமணி:
२०. ह्रींकारादर्शबिम्बिता
ஹ்ரீங்காரா தர்ச பிம்பிதா
२१. ह्रींकारकोशासिलता
ஹ்ரீங்கார கோசாஸிலதா
२२. ह्रींकारास्थाननर्तकी
ஹ்ரீங்காராஸ்தானநர்தகீ
२३. ह्रींकारशुक्तिकामुक्तामणिः
ஹ்ரீங்கார சுத்திகா முக்தாமணி:
२४. ह्रींकारमयसौवर्णस्तम्भविद्रुमपुत्रिका
ஹ்ரீங்காரமய ஸௌவர்ண ஸ்தம்ப வித்ரும புத்ரிகா
२५. ह्रींकारवेदोपनिषत्
ஹ்ரீங்கார வேதோபநிஷத்
२६. ह्रींकाराध्वरदक्षिणा
ஹ்ரீங்காராத்வரதக்ஷிணா
२७. ह्रींकारनन्दनारामनवकल्पकवल्लरी
ஹ்ரீங்கார நந்தனாராம நவ கல்பக வல்லரீ
२८. ह्रींकारहिमवद्गङ्गा
ஹ்ரீங்கார ஹிமவத் கங்கா
२९. ह्रींकारार्णवकौस्तुभा
ஹ்ரீங்காரார்ணவ கௌஸ்துபா



மேற்கூறிய நாமாக்கள் - பராசக்தி,

1. ஹ்ரீங்காரம் என்ற சூரியனின் ஒளியாகவும்
2. ஹ்ரீங்காரம் என்ற கருமேகத்திடை மின்னலாகவும்
3. ஹ்ரீங்காரம் என்ற கிழங்கின் முளையாகவும்
4. ஹ்ரீங்காரம் என்ற ஓடையில் திரியும் பேடையாகவும்
5. ஹ்ரீங்காரம் என்ற உத்யானத்தில் மயிலாகவும்
6. ஹ்ரீங்காரம் என்ற காட்டில் மானாகவும்
7. ஹ்ரீங்காரம் என்ற பாத்தியில் கொடியாகவும்
8. ஹ்ரீங்காரம் என்ற கூட்டில் திகழும் கிளியாகவும்
9. ஹ்ரீங்காரம் என்ற அங்கணத்தில் ஜ்வலிக்கும் விளக்காகவும்
10. ஹ்ரீங்காரம் என்ற மலைக்குகையில் வசிக்கும் சிங்கமாகவும்
11. ஹ்ரீங்காரத் தாமரையில் வண்டாகவும்
12. ஹ்ரீங்காரமலரில் மதுவாகவும்
13. ஹ்ரீங்கார விருக்ஷத்தின் பூங்கொத்தாகவும்
14. ஹ்ரீங்கார மாடியின் மேற்பகுதியில் வாழும் புறாவாகவும்
15. ஹ்ரீங்காரப் பாற்கடலின் அமிர்தமாகவும்
16. ஹ்ரீங்காரத் தாமரையில் தங்கும் திருவாகவும்
17. ஹ்ரீங்காரமணி விளக்கின் ஒளியாகவும்
18. ஹ்ரீங்காரத்தருவில் கிளியாகவும்
19. ஹ்ரீங்காரப் பெட்டியில் வைக்கப்பட்ட ரத்னமாகவும்
20. ஹ்ரீங்காரக் கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பமாகவும்
21. ஹ்ரீங்காரமாகிய உறையில் செறுகிய வாளாகவும்
22. ஹ்ரீங்காரமென்ற மேடையில் நடனமிடும் நர்த்தகியாகவும்
23. ஹ்ரீங்காரச் சிப்பியீன்ற முத்தாகவும்
24. ஹ்ரீங்காரப்பொற்றூணில் பொலியும் பவளச்சிலையாகவும்
25. ஹ்ரீங்கார வேதத்தின் உபநிஷத்தாகவும்
26. ஹ்ரீங்கார யஞ்ஞத்தின் தக்ஷிணையாகவும்
27. ஹ்ரீங்காரப் பூங்காவில் முளைத்த கற்பகக் கொடியாகவும்
28. ஹ்ரீங்கார ஹிமாலயத்தினின்று பெருகும் கங்கையாகவும்
29. ஹ்ரீங்காரக்கடலிற் கிடைத்த கௌஸ்துமணியாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றாள். பொதுவாக ஹ்ரீங்காரம் ஸ்ரீ புவனேச்வரீயையே குறிக்கும்.

## ஸ்ரீ புவனேச்வரீ மந்த்ரங்கள்

இந்த ஹ்ரீங்காரத்தின் பொருளான புவனேச்வரியின் பல மந்த்ரங்கள் பிரபஞ்சஸார தந்த்ரம், ப்ரபஞ்சஸார ஸாரஸங்க்ரஹம், தக்ஷிணாமூர்த்தி உத்தாரகோசம், தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை, சாரதாதிலகம், ஸ்ரீவித்யார்ணவ தந்த்ரம் முதலிய நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன.

அவற்றுள் தக்ஷிணாமூர்த்தி உத்தாரகோசத்தில்

उक्तं च भैरवीतन्त्रे *(உக்தம் ச பைரவிதந்த்ரே)*

भैरवी भीमरूपा च भीमापि भुवनेश्वरी ।
भक्त्या फलप्रदा देवी नित्यं वर्षचतुष्टये ॥

பைரவீ பீமரூபாச பீமாபி புவனேச்வரீ ।
பக்த்யா பலப்ரதா தேவீ நித்யம் வர்ஷசதுஷ்டயே ॥

என்பதனால் பைரவி, பீமரூபா, பீமா புவனேச்வரீ என்று புவனேச்வரீயின் நான்கு பேதங்களும், அதற்கான நான்கு மந்த்ரங்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன.

1. தனி ப்ரணவத்தோடு கூடியது ஒன்று
   ॐ भैरव्यै नमः ஓம் பைரவ்யை நம:
2. பிரணவமும் மாயாபீஜமும் சேர்ந்தது இரண்டாவது
   ॐ ह्रीं भीमरूपायै नमः ஓம் ஹ்ரீம் பீமரூபாயை நம:
3. பிரணவமும் ஸ்ரீபீஜமும் கூடியது மூன்றாவது
   ॐ श्रीं भीमायै नमः ஓம் ஸ்ரீம் பீமாயை நம:
4. பிரணவம் மாயை ஸ்ரீபீஜம் காமபீஜம் இவைகள் கொண்டது நான்காவது
   ॐ ह्रीं श्री क्लीं भुवनेश्वर्यै नमः
   ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் புவனேச்வர்யை நம:

இந்த நான்காவது மந்த்ரத்தின் உத்தாரம் (उद्धार) ''कुब्जिका सर्वस्वं ''குப்ஜிகா ஸர்வஸ்வம்'' என்ற நூலில் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

प्रणवं च तथा मायां कमलां मन्मथं तथा ।



अन्ते विश्वं नाममध्ये प्रोक्तं वै तु सुरेश्वरी ॥
प्रोक्तोयं भुवनेश्वर्याः मनुस्तुर्याक्षराभिधः ॥

ப்ரணவம் ச ததா மாயாம் கமலாம் மன்மதம் ததா ।
அந்தே விச்வம் நாம மத்யே ப்ரோக்தம் வைது ஸுரேச்வரி ॥
ப்ரோக்தோயம் புவனேச்வர்யா: மனுஸ்துர்யாக்ஷராபித: ॥

என்று வைதிக மந்திரங்களின் முன் (ॐ) ஓம்காரம் சேர்ப்பது மந்த்ர சாஸ்த்ரத்தின் முறை. ஆகவே அதைச் சேர்த்து இந்த புவனேச்வரீ மந்த்ரம் நான்கு அக்ஷரங்கள் கொண்டதாகும்.

### சாரதாதிலகத்திலும் அதன் உரைகளிலும் புவனேச்வரீ மந்த்ரங்கள்

சாரதா திலகம் என்ற மிகச்சிறந்த மந்த்ர சாஸ்த்ரமும் அதன் உரைகாரரும் கூறும் மந்த்ரங்கள்.

1. ह्रीं ஹ்ரீம் என்ற ஏகாக்ஷரீ மந்த்ரம் ஒன்று. இந்த ஹ்ரீம் என்ற மந்த்ரத்தின் உத்தாரம் (उद्धार) பல நூல்களில் இருந்து கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றது.

लकुलीशोऽग्निमारूढः वामनेत्रार्धचन्द्रवान् ।
बीजं तस्याः समाख्यातं सेवितं सिद्धिकाङ्क्षिभिः ॥

— शारदातिलकम्

லகுலீசோऽக்னிமாரூட: வாமநேத்ரார்தசந்த்ரவான் ।
பீஜம் தஸ்யா: ஸமாக்யாதம் ஸேவிதம் ஸித்திகாங்க்ஷிபி: ॥

— சாரதாதிலகம்

महाघोषं समादाय वह्निवर्णमतः परम् ।
मायाबीजं समुद्धृत्य विन्दुं च तदनन्तरम् ॥
उद्धरेन्मन्त्रमेवं तु मन्त्रराजमनुत्तमम् ॥ — भुवनेश्वरीपूजाकल्पे

மஹாகோஷம் ஸமாதாய வன்ஹி வர்ணமத: பரம் ।
மாயாபீஜம் ஸமுத்ருத்ய பிந்தும் ச ததனந்தரம் ॥
உத்தரேன் மந்த்ரமேவம் து மந்த்ரராஜ மனுத்தமம் ॥

— புவனேச்வரீ பூஜாகல்பம்

घनवर्त्मकृष्णगतिशान्तिबिन्दुभिः
कथितः परः प्रकृतिवाचको मनुः ।
दुरितापहोऽर्थसुखधर्ममोक्षदो
भजतामशेषजनरञ्जनक्षमः ॥ (प्रपञ्चसारे)

கனவர்த்ம க்ருஷ்ணகதிசாந்திபிந்துபி:
கதித: பர: ப்ரக்ருதி வாசகோ மனு: ।
துரிதாபஹோர்த்த ஸுகதர்ம மோக்ஷதோ
பஜதாமசேஷ ஜனரஞ்ஜனக்ஷம: ॥ (பிரபஞ்சஸாரம்)

घनवर्त्मा கனவர்த்மா - ஹகாரம், कृष्णगतिः க்ருஷ்ணகதி:- ரேபம் (ர்) शान्ति சாந்தி: ஈகாரம், विन्दु பிந்து:- அனுஸ்வாரம்.

वाग्भवं शंभुवनिता रमा बीजत्रयात्मकम् ।
मन्त्रं समुद्धरेन्मन्त्री त्रिवर्गफलसाधनम् ॥

வாக்பவம் சம்புவனிதா ரமா பீஜத்ரயாத்மகம் ।
மந்த்ரம் ஸமுத்தரேன் மந்த்ரீ த்ரிவர்க பலஸாதனம் ॥

என்பதால் கிடைத்த மூன்று அக்ஷரங்கொண்ட புவனேச்வரீ மந்த்ரம் இரண்டாவது.

ओं ऐं ह्रीं श्रीं भुवनेश्वर्यै नमः ।

ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் புவனேச்வர்யை நம:

३. वाग्बीजपुटिता माया विद्येयं त्र्यक्षरी मता ।

வாக்பீஜபுடிதா மாயா வித்யேம் த்ரயக்ஷரீ மதா ।

என்பதால் கிடைத்த மூன்று அக்ஷரங்கொண்ட மந்த்ரம் மூன்ருவது.

ओं ऐं ह्रीं ऐं भुवनेश्वर्यै नमः ।

ஓம் ஐம் ஹ்ரீம் ஐம் புவனேச்வர்யை நம:

४. अनन्तो बिन्दुसम्युक्तो माया ब्रह्माग्निरूपवान् ।
पाशादित्र्यक्षरो मन्त्रः सर्ववश्यफलप्रदः ॥



அனந்தோ பிந்து ஸம்யுக்தோ மாயா ப்ரம்ஹாக்னிரூபவான் ।
பாசாதி த்ரயக்ஷரோ மந்த்ர: ஸர்வவச்யபலப்ரத: ॥

என்பதால் கிடைத்த மூன்று அக்ஷரங்கள் கொண்டது நான்காவது.

ओं आं ह्रीं क्रों भुवनेश्वर्यै नमः ।

ஓம் ஆம் ஹ்ரீம் க்ரோம் புவனேச்வர்யை நம:

இது பாசம் (आं) ஆம், அங்குசம் (क्रों) க்ரோம் இவைகளால் இணைக்கப்பட்டதாகும். இது சிறப்புப் பொருந்திய மந்த்ரம். எல்லோரையும் தன்வயமாக்கும் சக்தி படைத்தது. இவ்வாறு மொத்தம் நான்கு மந்த்ரங்கள்.; சாரதாதிலகத்தால் உபதேசிக்கப் பெற்றிருக்கின்றன. இதில் முதல் மந்த்ரமும் நான்காவது மந்த்ரமும் ஆதிசங்கர பகவத்பாதர் அருளிய ப்ரபஞ்சஸார தந்த்ரத்திலும் கூறப்பெற்றிருக்கின்றது.

## சாரதாதிலகத்தின் உரையில்

ஆயினும் சாரதாதிலகத்தின் உரையில் ஸ்ரீராகவபட்டர் அவர்கள் புவனேச்வரீ பீஜாக்ஷரமான ஹ்ரீங்காரத்தோடு (ह्रीं ஹ்ரீம்) श्रीं ஸ்ரீம் क्लीं க்லீம் (காம) ऐं ஐம் (வாக்) என்ற பீஜாக்ஷரங்களை இணைத்து மற்றும் எட்டு மந்த்ரங்களையும் அமைத்துக்கொடுத்திருக்கின்றார். அவை யாவன:

1. वाक्पुटितम् வாக்புடிதம், வாக்பவபீஜமான ऐं ஐம் காரத்தால் முன்னும் பின்னும் இணைக்கப்பெற்றிருக்கின்றது ஹ்ரீங்காரம் (இது சாரதாதிலகத்தின் மூலத்திலேயே இருக்கின்றது).

ओं ऐं ह्रीं ऐं भुवनेश्वर्यै नमः

ஓம் ஐம் ஹ்ரீம் ஐம் புவனேச்வர்யை நம:

2. श्रीपुटितं ஸ்ரீபுடிதம். இங்கு ஹ்ரீம் காரம் முன்னும் பின்னும் ஸ்ரீ பீஜத்தால் ஸம்புடீகரணம் செய்யப்பட்டிருக்கின்றது.

ओं श्रीं ह्रीं श्रीं भुवनेश्वर्यै नमः ।

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் புவனேச்வர்யை நம:

3. श्री कामपुटितं ஸ்ரீ காமபுடிதம். இதில் ஹ்ரீங்காரம் முன்னும் பின்னும் ஸ்ரீ பீஜத்தாலும் காமராஜ பீஜத்தாலும் இணைக்கப்பட்டிருக்கின்றது.

ओं श्रीं ह्रीं क्लीं भुवनेश्वर्यै नमः ।

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் புவனேச்வர்யை நம:

4. कामश्रीपुटितम् காம ஸ்ரீபுடிதம், இங்கு ஹ்ரீங்காரம் முன்னும் பின்னும் காமராஜ பீஜத்தாலும் ஸ்ரீ பீஜத்தாலும் ஸம்புட கரணம் செய்யப்பட்டிருக்கின்றது.

ओं क्लीं ह्रीं श्रीं भुवनेश्वर्यै नमः।

ஓம் க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் புவனேச்வர்யை நம: ।

5. कामपुटितम् காமபுடிதம். இங்கு ஹ்ரீங்காரம் முன்னும் பின்னும் காமராஜ பீஜத்தால் இணைக்கப்பட்டிருக்கின்றது.

ओं क्लीं ह्रीं क्लीं भुवनेश्वर्यै नमः

ஓம் க்லீம் ஹ்ரீம் க்லீம் புவனேச்வர்யை நம:

6. श्रीवाक्पुटितम् ஸ்ரீ வாக்புடிதம். இங்கு ஹ்ரீங்காரம் ஸ்ரீ பீஜத்தாலும் வாக் பீஜத்தாலும் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

ओं श्रीं ह्रीं ऐं भुवनेश्वर्यै नमः

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் புவனேச்வர்யை நம:

7. वाक् कामपुटितम् வாக் காம புடிதம், இதில் ஹ்ரீங்காரம் வாக்பவ பீஜத்தாலும் காமராஜ பீஜத்தாலும் இணைக்கப்பட்டிருக்கின்றது.

ओं ऐं ह्रीं क्लीं भुवनेश्वर्यै नमः

ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம் புவனேச்வர்யை நம:

8. कामवाक्पुटितम् காம வாக்புடிதம். இங்கு ஹ்ரீங்காரம் காமராஜ பீஜத்தாலும் வாக்பவ பீஜத்தாலும் இணைக்கப்பட்டிருக்கின்றது.

ओं क्लीं ह्रीं ऐं भुवनेश्वर्यै नमः

ஓம் க்லீம் ஹ்ரீம் ஐம் புவனேச்வர்யை நம:



இம் மந்த்ரங்களில் ஐँ ஐம் என்ற வாக்பவ பீஜம் கல்வியறிவையும் க்லீं க்லீம் என்ற காமராஜபீஜம் எல்லா காமனைகளையும் ஸ்ரீं ஸ்ரீம் என்ற லக்ஷ்மீ பீஜம் பிள்ளைப்பேறு செல்வம் இவைகளையும் அளிக்கும். இவைகளைத் தனித்தனியே விரும்புவோரும் சேர்ந்து விரும்புவோரும் அவரவர் இஷ்டப்படி அதற்குரிய மந்த்ரங்களை தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இதை:-

कामाद्यन्ता प्रभवति यदा सर्वकामेश्वरी सा
साद्यन्तश्रीः सुतधनफला वाक्प्रदा वाग्भवेन ।
एवं व्यस्तैः विरचितपुटा कामधुक् सा हि शक्तिः ॥ शारदातिलकव्याख्या

காமாத்யந்தா ப்ரபவதி யதா ஸர்வகாமேச்வரீஸா
ஸாத்யந்தஸ்ரீஸ்ஸுததனபலா வாக்ப்ரதா வாக்பவேன ।
ஏவம் வ்யக்தைர் விரசிதபுடா காமதுக் ஸாஹி சக்தி: ॥
— சாரதாதிலக வ்யாக்யா

என்ற ச்லோகத்தால் அறியலாம்.

### ஸ்ரீ பத்மபாதாசாரியார் கூறிய இரு மந்த்ரங்கள்

ஸ்ரீ பத்மபாதாசாரியார் அவர்கள் प्रणवपुटित (ப்ரணவபுடித)மான

ओं ह्रीं ओं भुवनेश्वर्यै नमः

ஓம் ஹ்ரீம் ஓம் புவனேச்வர்யை நம:

என்ற ஒரு மந்த்ரத்தையும்,

ओं श्रीं ह्रीं क्लीं ऐं भुवनेश्वर्यै नमः

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஐம் புவனேச்வர்யை நம:

என்றும், ஸ்ரீமாயா, காமராஜம் வாக்பவம் இவைகளுடன் கூடிய மற்றொரு மந்த்ரத்தையும் அருளியுள்ளார்.

அவருடைய உரையில்,

प्रणवयोगे मोक्षस्य, श्रीयोगे अर्थस्य, कामयोगे कामस्य, वाग्योगे धर्मज्ञानादेः, सर्वयोगे सर्वसिद्धिः ॥

ப்ரணவயோகே மோக்ஷஸ்ய, ஸ்ரீயோகே அர்த்தஸ்ய. காமயோகே காமஸ்ய, வாக்யோகே தர்மஞானதே:, ஸர்வயோகே ஸர்வஸித்தி: என்று கூறுகின்றார்.

அதாவது: பிரணவச் சேர்க்கையால் மோக்ஷமும், ஸ்ரீபீஜச்சேர்க்கையால் பொருளும், காமபீஜச் சேர்க்கையால் விரும்பியவையும், வாக்பவபீஜத்தின் சேர்க்கையால் தர்மஞானாதிகளும் ஸித்திக்கும்'' என்பது இதன் பொருள்.

மற்றொன்று

பிரபஞ்சஸாரஸங்க்ரஹத்தில் பொன், செல்வம் ஆரோக்யம் இவைகளை அளிக்கவல்ல ॐ ह्रीं हंसः ஓம் ஹ்ரீம் ஹம்ஸ: என்ற நான்கு அக்ஷரங்கள் கொண்ட புவனேச்வரீ மந்த்ரம் ஒன்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஆக எல்லாவற்றையும் சேர்த்து 18 மந்த்ரங்கள் ஸ்ரீபுவனேச்வரீ உபாஸனைக்காகக் கிடைத்திருக்கின்றன.

## एकाक्षरी भुवनेश्वरीमन्त्रः

### ஏகாக்ஷரீ புவனேச்வரீ மந்த்ரம்

ॐ ह्रीं भुवनेश्वर्यै नमः ।

ஓம் ஹ்ரீம் புவனேச்வர்யை நம: ।

இந்த புவனேச்வரீ மந்த்ரத்தை ப்ரம்ஹாதிகள் தெரிந்து கொண்டதனால் நிலையான ஐச்வர்யம் பெற்றனர்.

ब्रह्मादयोऽपि यां ज्ञात्वा लेभिरे श्रियमूर्जिताम् ।

பிரம்மாதயோபி யம் ஞாத்வா லேபிரே ச்ரியமூர்ஜிதாம் ।

என்று சாரதாதிலகம் உணர்த்தும்.

உலக ஆனந்தத்தின் இருப்பிடமான இம்மந்திரத்தைத் தெரிந்து கொண்டாலேயே ஆபத்துக்கள் பறந்தோடும்.

श्रुणु देवि प्रवक्ष्यामि भुवनानन्दमन्दिरम् ।
यस्याः विज्ञानमात्रेण पलायन्ते महापदः ॥



ச்ருணுதேவி ப்ரவக்ஷ்யாமி புவனானந்த மந்திரம் ।
யஸ்யா விஞ்ஞானமாத்ரேண பலாயந்தே மஹாபத: ॥

என்று ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதையும் புகழுகின்றது.

இம் மந்த்ரத்திற்கு ஸமமான மந்த்ரம் இதுவரையில் கிடைக்கவில்லை. இனியும் ஏற்படப்போவதில்லை என்று புவனேச்வரீ பாரிஜாதம் என்ற நூல் பேசுகின்றது.

मत्समः पुरुषो नास्ति त्वत्समा नास्ति चाङ्गना ।
मायाबीजसमो मन्त्रः न भूतो न भविष्यति ॥

மத்ஸம: புருஷோ நாஸ்தி த்வத்ஸமா நாஸ்தி சாங்கனா ।
மாயாபீஜஸமோ மந்த்ர: ந பூதோ ந பவிஷ்யதி ॥

''என் போன்ற புருஷன் கிடையாது. உன் போன்ற பொன்னும் கிடையாது. மாயாபீஜத்திற்கு (ஹ்ரீம்) ஸமமான மந்த்ரமும் முன்னும் இருந்ததில்லை. இனியும் இருக்கப்போவதுமில்லை.

दुरितापहोऽर्थसुखधर्ममोक्षदो ।
भजतामशेषजनरंजनक्षमः ॥

துரிதாபஹோர்த ஸுக தர்மமோக்ஷதோ ।
பஜதாமசேஷ ஜனரஞ்ஜனக்ஷம: ॥

என்னும் ஆசார்யாளின் வாக்கால் இம் மந்த்ரம் ஜபிப்பவர்களுக்கு பாபத்தைப் போக்கி பொருள், இன்பம், தர்மம், மோக்ஷம் இவற்றை நல்கும். எல்லோருக்கும் திருப்தியுண்டாக்கும் என்று தெரிகின்றது. (பிரபஞ்சஸாரம்)

இம் மந்த்ரம் உயர்ந்த ஜ்யோதி. இதுவே அடையவேண்டிய பதம். இதுவே வைஷ்ணவ சக்தி. இதுவே சிவசக்தி என்று

तमाहुः परमं ज्योतिः तमाहुः परमं पदम् ।
तमाहुर्वैष्णवीं शक्तिं तमाहुः शिवशक्तिकाम् ॥

தமாஹு: பரமம் ஜ்யோதி: தமாஹு: பரமம் பதம் ।
தமாஹுர்வைஷ்ணவீம் சக்திம் தமாஹு: சிவசக்திகாம் ॥

என்று புவனேச்வரீ பூஜாகல்பம் புகழ்ந்துரைக்கின்றது.

### ரிஷி சந்தஸ்

இம்மந்த்ரத்திற்கு ரிஷி சக்தி என்பவர். இவர் வஸிஷ்ட புத்திரரான சக்தி என்ற ரிஷியே என்று கூறுகின்றது. தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை. காயத்ரீ சந்தஸ், ह्रं ஹம் பீஜம் ई ஈம் சக்தி என்று தசபடலீ என்ற நூல் அறிவிக்கின்றது. ★

### இம்மந்திரத்தின் தேவதை

..................... देवता मनोः ।
कथिता सुरसंघेन सेविता भुवनेश्वरी ॥

..................... தேவதா மனோ: ।
கதிதாஸுரஸங்கேன ஸேவிதா புவனேச்வரீ ॥

என்றபடி தேவர் கூட்டம் தொழும் பெருமையுடைய संविद्रूपा ஸம்வித்ரூபா, அறிவுருவமான ஸ்ரீ புவனேச்வரீ தேவியாவாள்.

★ रेफः (ர்) இலகம் என்று மற்றைய நூல்களில் உள்ளது.

### "தியானம்"

இம் மந்த்ரத்தை ஜபிப்பவர் தியானிக்கத் தகுந்த புவனேச்வரீயின் ஸ்வரூபம் சாரதாதிலகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

उद्यदिनद्युतिमिन्दुकिरीटां तुङ्गकुचां नयनत्रययुक्ताम् ।
स्मेरमुखीं वरदांकुशपाशाऽभीतिकरां प्रभजे भुवनेशीम् ॥

உத்யதினத்யுதி மிந்துகிரீடாம்
துங்ககுசாம் நயனத்ரயயுக்தாம் ।
ஸ்மேரமுகீம் வரதாங்குச பாசா
ऽபிதிகராம் ப்ரபஜே புவனேசீம் ॥

★ रेफः (ர்) இலகம் என்று மற்றைய நூல்களில் உள்ளது.



இதன் பொருள்,

★ இடது கீழ்மேல் கரங்களால் வருமுத்ரை பாசம் இவைகளையும், வலது கீழ்மேல் கரங்களால் அபயமுத்திரை அங்குசம் இவைகளையும் ஏற்றியிருப்பவளும், உதயசூரியன் போன்று பிரகாசிப்பவளும், சந்திரன் திகழும் கிரீடமுடையவளும், நிமிர்ந்த ஸ்தனமுடையவளும், மூன்று கண்களோடு கூடியவளும், புன்சிரிப்புத் தவழும் முகமுள்ளவளும், ★★ செந்தாமரை மலர்மீது வீற்றிருப்பவளுமான புவனேச்வரீ தேவியை ஸேவிக்கிறேன்.

ஆதிசங்கர பகவத்பாதாசார்யாள் தன் ப்ரபஞ்சஸாரத்தில் எல்லா புவனேச்வரீ மந்த்ரங்களுக்கும் உரியதாக இந்த தியானசுலோகத்தை அருளியிருக்கின்றார்.

उद्यद्भास्वत्समाभां विजितनवजपां इन्दुखण्डावनद्ध-
द्योतन्मौलिं त्रिनेत्रां विविधमणिलसत्कुण्डलां पद्मगां च ।

हारग्रैवेयकाञ्चीगुणमणिवलयाद्यैर्विचित्रांबराढ्यां
अम्बां पाशांकुशेष्टाभयकरकमलां अंबिकां तां नमामि ॥

உத்யத் பாஸ்வத்ஸமாபாம் விஜிதநவஜபாம் இந்துகண்டாவனத்த
த்யோதன் மௌளிம் த்ரிநேத்ராம் விவிதமணி
லஸத்குண்டலாம் பத்மகாம் ச ।
ஹார க்ரைவேய காஞ்சீகுணமணி வலயாத்யைர் விசித்ராம்பராட்யாம்
அம்பாம் பாசாங்குசேஷ்டாபயகரகமலாம் அம்பிகாம் தாம் நமாமி ॥

★ दक्षिणे चांकुशं दद्यात् वामे पाशं प्रदापयेत् ।
वरदं वामतो दद्यात् अभयं दक्षिणे करे ॥ - महासंमोहने

தக்ஷிணே சாங்குசம் தத்யாத் வாமே பாசம் ப்ரதாபயேத் ।
வரதம் வாமதோதத்யாத் அபயம் தக்ஷிணே கரே ॥
- மஹாஸம்மோஹனே

★★ சாரதா திலகத்தின் உரையில்,

இதன் பொருள்:-

பாசம் அங்குசம் வரமுத்திரை அபயமுத்திரை இவைகளுடன் கூடிய கரகமலங்களுடையவளும், உதிக்கும் சூர்யன்போன்ற காந்தியுடையவளும், தன் சிவந்த உருவால் செல்வரத்தைப் பூவை வென்றவளும், பிறைச் சந்திரனைச் சூட்டிக்கொண்டு இருப்பதால் மின்னும் சிரங்கொண்டவளும், மூன்று கண்கள் உள்ளவளும், பல்வேறு ரத்னங்களால் ஒளிறும் காதணிபூண்டவளும் ஆரம் கழுத்தணி, ஒட்டியாணம் ரத்னம் பதித்த கையணி அழகிய ஆடை இவைகள் நிறைந்தவளும், செந்தாமரை மலரில் வீற்றிருப்பவளும் உலகின் அன்னையுமாகிய ஸ்ரீ புவனேச்வரீ தேவியை நான் வணங்குகின்றேன்.

தக்ஷிணாமூர்த்தி உத்தார கோசத்தில் தியானம் இவ்வாறு கூறப்பட்டிருக்கின்றது.

★ उद्यद्भानुसहस्रसन्निभमुखीं पीनस्तनीं पद्मगां
दोर्भिश्चांकुशपाशपुस्तकजयान् संबिभ्रतीं सादरम् ।
विष्णुब्रह्ममहेश्वरेन्द्रमुनिभिः नित्यं स्तुतां वन्दनैः
स्तोत्राद्यैर्भुवनेश्वरीं त्रिनयनां हृत्पंकजेऽहं भजे ॥

உத்யத்பானு ஸஹஸ்ரஸன்னிபமுகீம் பீனஸ்தனீம் பத்மகாம்
தோர்பிச்சாங்குச பாசபுஸ்தகஜயான் ஸம்பிப்ரதீம் ஸாதரம் ।
விஷ்ணுப்ரம்ஹ மஹேச்வரேந்த்ரமுனிபி: நித்யம் ஸ்துதாம் வந்தனை:
ஸ்தோத்ராத்யைர் புவனேச்வரீம் த்ரிநயனாம் ஹ்ருத்பங்கஜேஹம் பஜே ॥

இதன் பொருள்:- உதிக்கும் ஆயிரம் சூரியர்கள் போன்ற ஒளியுள்ள முகமுடையவளும், பருத்த ஸ்தனமுடையவளும், மூன்று கண்களையுடையவளும், அங்குசம், பாசம், புஸ்தகம், அபயம் இவைகளைக் கைகளால் ஏற்றிருப்பவளும், தாமரை மலரில் வீற்றிருப்பவளும், நித்யம் அன்புடன் விஷ்ணு, ப்ரம்மா, சிவன், இந்திரன், முனிவர் இவர்களால் நமஸ்காரங்களினாலும் துதி முதலியவற்றாலும் புகழப்பட்டவளுமான புவனேச்வரீ தேவியை நான் (என்னுடைய) ஹ்ருதய கமலத்தில் (வீற்றிருப்பவளாக) பஜிக்கிறேன்.

புவனேச்வரீ பூஜாகல்பத்தில் இவ்வாறு தியானம் கூறப்பட்டிருக்கின்றது:-

★ தக்ஷிணாமூர்த்தி உத்தாரகோசம் 12 பக்கம் சுலோகம் 46



देवीध्यानं प्रवक्ष्यामि सर्वकामार्थसिद्धये ।
हृत्पद्म कर्णिकामध्ये सुखासीनां शुचिस्मिताम् ॥
रक्तवर्णां सुप्रसन्नां सर्वाभरणभूषिताम् ।
त्रिनेत्रां चारुभुकुटां चन्द्ररेखावतंसकाम् ॥
हारनूपुरकेयूर स्तनबन्ध विराजिताम् ।
मुक्तामाणिक्य वैदूर्यैरुपेतकटकांचिताम् ॥
रत्नबद्धस्रजं चैव रत्नकुण्डलमण्डिताम् ।
विंचित्ररत्नवलयां विचित्रावयवां शिवाम् ॥
पांशांकुशदरां चैव वरदाभयधारिणीम् ।
दधतीं अक्षमालां च साभयेनैव पाणिना ॥
चामराभ्यां वीज्यमानां चण्डिकाछत्रशोभिताम् ।
शंखपद्म निधिभ्यां च सेवितां पादमूलतः ॥
अङ्गैः षड्भिः समायुक्तां गुरुपंक्तिसमन्विताम् ।
इन्द्राद्यैर्लोकपालैश्च स्वस्यां स्वस्यां दिशि स्थितैः ॥
अनङ्गरूपाद्यष्टाभिः सेवितां भक्तिपूर्वकम् ।
चषकं तालवृन्दं च ताम्बूलछत्रचामरैः ॥
शुकं च शारिकां पुष्पं धारयन्तीभिरावृताम् ।
सखीभिर्विजयाद्याभिः सेवितां परमेश्वरीम् ॥
रक्ताद्याभिः चतुर्दिक्षु गीतवाद्यैश्च शक्तिभिः ।
मलयाद्यष्टपीठैश्च लोकपूज्यैश्च सेविताम् ।
एवं भूतां शिवां ध्यायेत् ....... ॥

தேவித்யானம் ப்ரவக்ஷ்யாமி ஸர்வகாமார்த்த ஸித்தயே ।
ஹ்ருத்பத்ம கர்ணிகாமத்யே ஸுகாஸீனாம் சுசிஸ்மிதாம் ॥
ரக்தவர்ணாம் ஸுப்ரஸன்னாம் ஸர்வாபரணபூஷிதாம் ।
த்ரிநேத்ராம் சாருமுகுடாம் சந்தரரேகாவதம் ஸகாம் ॥
ஹாரநூபுர கேயூர ஸ்தனபந்த விராஜிதாம் ।
முக்தா மாணிக்ய வைதூர்யை: உபேதகடகாம்சிதாம் ॥

2. மோஹனத்திற்கான த்யானம் मोहनोपयोगि ध्यानम्

स्वर्णवर्णां महादेवीं तुङ्गपीनपयोधराम्।
अब्जासनां दरस्मेर मुह्यल्लोकत्रयां भजे॥

ஸ்வர்ண வர்ணாம் மஹாதேவீம் துங்கபீன பயோதராம்।
அப்ஜாஸனாம் தரஸ்மேர முஹ்யல் லோகத்ரயாம் பஜே॥

பொன்னிறம் கொண்டவளும், நிமிர்ந்த பருத்த ஸ்தனமுடையவளும், தாமரை மலரில் வீற்றிருப்பவளும், (தன்) புன்சிரிப்பினால் மூவுலகத்தையும் மோஹிக்கச் செய்கின்றவளுமான ஸ்ரீ புவனேச்வரீ மஹா தேவியை ஸேவிக்கிறேன் (வரம் - அபயம், பாசம் அங்குசம் இவை தாங்கும் நான்கு கரத்தினளாகவும் பாவிக்க வேண்டும். இது புவனேச்வரீ தேவிக்கு அசாதாரண லக்ஷணமாகும்).

3. ஸ்தம்பனத்திற்கான த்யானம் स्तम्भनोपयोगि ध्यानम्

घनाघनसुपेशलां मुकुटकुण्डलालंकृतां
शुकच्छविनिभोल्लसत् वसनचारुकांचीपदाम्।
स्मरामि भुवनेश्वरीं असितपद्मभद्रासनां
धृतां कुश सरोरुहां कुसुमबाणकोदण्डिनीम्॥

கனாகன ஸுபேசலாம் முகுடகுண்டலாலங்க்ருதாம்
சுகச்சவி நிபோல்லஸத் வஸன சாருகாஞ்சீ பதாம்।
ஸ்மராமி புவனேச்வரீம் அஸித பத்ம பத்ராஸனாம்
த்ருதாங்குச ஸரோருஹாம் குஸும பாணகோதண்டினீம்॥

மழை மேகம் போன்று கரு நிறத்தால் அழகியவளும், கிரீடம், குண்டலம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டவளும், பச்சைக் கிளியின் நிறம் போன்று பிரகாசிக்கின்ற புடவையால் அழகிய ஒட்டியாணம் உடைய இடையை உடையவளும், கருத்த தாமரையில் (நீலோத்பலத்தில்) பத்ராஸனத்தில் அமர்ந்திருப்பவளும், அங்குசம், மலர், புஷ்ப பாணம், கரும்பு வில் இவைகளுடன் கூடியவளும் (நான்கு கரங்கள்) ஆன ஸ்ரீ புவனேச்வரீ தேவியைப் பிரார்த்திக்கிறேன்.



4. உச்சாடனத்திற்கான தியானம் उच्चाटनोपयोगि ध्यानम्

ध्यायेऽहं कनकाम्बुजासनगतां कार्तस्वरालंकृतां
हस्तैरैक्षवचाप-बाण-वरदा भीष्टाख्यमुद्रान्विताम्।
नानारत्नघृणिच्छटाशबलितेनाङ्गेन संशोभितां
पीनोत्तुङ्गकुचां विचित्रवसनां वीरासनामम्बिकाम्॥

த்யாயேஹம் கனகாம்பு ஜாஸனகதாம் கார்தஸ்வராலங்க்ருதாம்
ஹஸ்தைரைக்ஷவ சாப பாண வரதா பீஷ்டாக்ய முத்ரான்விதாம்।
நானாரத்ன க்ருணிச்சடா சபளிதேனாங்கேன ஸம்சோபிதாம்
பீனோத்துங்ககுசாம் விசித்ரவஸனாம் வீராஸனா மம்பிகாம்॥

தங்கத் தாமரையில் வீற்றிருப்பவளும், ஸ்வர்ணத்தாலான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், கரும்பு வில், (புஷ்ப) பாணம் இவைகளையும், அபயம், வரதம் என்ற முத்திரைகளையும் கரங்களால் தாங்குபவளும், பலவிதமான ரத்னங்களின் ஒளிக் கற்றையாலும் பலவித வர்ணங்கள் உள்ளதாகச் செய்யப்பட்ட அங்கங்கள் உடையவளும், பருத்த நிமிர்ந்த ஸ்தனங்களை உடையவளும், பல வர்ணங்களுடைய உடை உடுத்திக் கொண்டிருப்பவளும், வீராஸனத்தில் அமர்ந்திருப்பவளுமான ஸ்ரீ புவனேச்வரீ அம்பிகையை நான் தியானிக்கிறேன் (வலது காலை ஊன்றி அதன்மீது இடது காலைப் போட்டுக் கொண்டு அமர்வது வீராசனம். தக்ஷிணாமூர்த்தி போல).

5. ஆகர்ஷணத்திற்கான தியானம் आकर्षणोपयोगि ध्यानम्

ध्यायेत्कुसुम्भकुसुमारुणदिव्यदेहां
बालार्ककोटिसदृशेऽश्वगजाधिरूढे।
सा ये विकृष्य ददतीं विवशे समोदं
प्रातस्सहाटक कुचाभरणे युवत्यौ॥

த்யாயேத் குஸும்பகுஸுமாருண திவ்யதேஹாம்
பாலார்க கோடி ஸத்ருசே(அ)ச்வகஜாதிரூடே।

ஸாத்யே விக்ருஷ்ய தததீம் விவசே ஸமோதம்
ப்ராதப்த ஹாடக குசாபரணே யுவத்யெள ॥

குதிரை, யானை இவற்றின் மீது ஏறியுள்ளவர்களும், கோடி இளஞ்சூரியர் போன்ற ஒளியை உடையவர்களும், காய்ச்சிய தங்கத்தாலான ஹாரம் அணிந்திருப்பவர்களும் (ஸ்தனத்தின் மீது பதியும் ஹாரம்), தன் வசமிழந்தவர்களுமான இரண்டு யுவதிகளை மகிழ்வுடன் பக்தனுக்கு இழுத்துக் கொடுக்கின்ற கோலத்தில் உள்ளவளும், செவ்வரத்தைப் பூப் போன்ற சிவந்த அழகிய திருமேனியை உடையவளுமான ஸ்ரீ புவனேச்வரீ தேவியைத் தியானிக்க வேண்டும் (ஒவ்வொருவரையும் இரண்டு இரண்டு கைகளால் இழுப்பவள் போன்று தியானிக்க வேண்டும் என்பது த்வனிக்கின்றது) (நான்கு கைகள்).

6. வித்வேஷணத்திற்கான தியானம் विद्वेषणोपयोगि यानम्

उद्यत्पिङ्गजटाधरां उरुदिवानाथोल्लसत्कुण्डलां
शत्रूणां रुधिरान्त्रभूषितमहाशूलां कराटीकराम्।
पाशं नागमयं सृणिं च दधतीं दावानलाकारिणीं
अम्भोजासनवासिनीं भज मनः शार्दूलचर्माम्बराम्॥

உத்யத்பிங்க ஜடாதராம் உருதிவானாதோல்லஸத் குண்டலாம்
சத்ரூணாம் ருதிராந்த்ரபூஷித மஹாசூலாம் கராடீகராம்।
பாசம் நாகமயம் ஸ்ருணிம்ச தததீம் தாவாநலா காரிணீம்
அம்போஜாஸன வாஸினீம் பஜ மனஃ சார்தூல சர்மாம்பராம்॥

மஞ்சள் நிறமான ஜடாபாரம் உடையவளும், சூரியன் போன்று பிரகாசிக்கும் இரு பெரிய குண்டலங்கள் அணிந்திருப்பவளும் சத்ருக்களுடைய ரத்தம், நரம்பு இவைகளுடன் அலங்கரிக்கும் சூலத்தையும், எலும்புகளையும் (இரண்டு) கரங்களிலும், பாம்பு, பாசம், அங்குசம் இவைகளை (இரண்டு) கரங்களிலும் தரித்திருப்பவளும், காட்டுத் தீ போன்ற மேனியை உடையவளும், புலித்தோல் உடுத்தியவளும், தாமரை மீது வீற்றிருப்பவளுமாகிய ஸ்ரீ புவனேச்வரீ தேவியை, மனமே! நீ பஜிப்பாய்.



7. பேதனத்திற்கான தியானம் भेदनोपयोगि यानम्

अकलङ्क शरन्निशीथिनीश प्रतिमामंबुरुहाश्रितां सवित्रीम्।
सृणिपाश वराभयाभिरूपां स्मर चित्रांबरधारिणीं मनो मे॥

அகளங்க சரந்நிசீதினீச ப்ரதிமாம் அம்புருஹாச்ரிதாம் ஸவித்ரீம்।
ஸ்ருணிபாசவரா பயாபிரூபாம் ஸ்மர சித்ராம்பரதாரிணீம் மனோ மே॥

களங்கமற்ற சரத் காலத்திய சந்திரன் போன்று வெண்ணிறமுடையவளும், அழகிய வஸ்த்ரம் அணிந்திருப்பவளும், அங்குசம், பாசம், வரதம், அபயம் இவைகளைக் கரங்களில் தரித்திருப்பவளும், தாமரை மலர் மீது அமர்ந்திருப்பவளுமான ஸ்ரீ புவனேச்வரீ தேவியை என் மனமே நீ நினை.

8. மாரணத்திற்கான தியானம் मारणोपयोगि यानम्

मुसलं हलङ्कपालं दधती शूलं दवानलाकाराम्।
द्विषता मान्त्रवसाभिः पूरितवदनां भजामि भुवनेशीम्॥

முஸலம் ஹலம் கபாலம் தததீம் சூலம் தவானலாகாராம்।
த்விஷதா மாந்த்ரவஸாபிஃ பூரிதவதனாம் பஜாமி புவனேசீம்॥

உலக்கை, ஏறு, கபாலம், சூலம் இவைகளைத் தரித்துக் கொண்டிருப்பவளும் சத்ருக்களுடைய நரம்பு, வஸை இவற்றால் நிறைந்த முகமுள்ளவளும் காட்டுத் தீ போன்ற மேனியளுமான ஸ்ரீ புவனேச்வரி தேவியை ஸேவிக்கின்றேன்.

---

ஸ்ரீ யுத பத்ரசில சர்மா வெளியிட்ட புவனேச்வரீ ரஹஸ்யத்தில் (ஆற படலங்கள் கொண்டது) இரண்டாம் படலத்தில் 14 புவனேச்வரீ மந்த்ரங்களும் மூன்றாம் படலத்தில் 16 மந்த்ரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இத்துடன் 6ம் படலத்தில் சில புவனேச்வரீ தியானங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை அந் நூலிலிருந்து அறிந்து கொள்க.

# श्री भुवनेश्वरीस्तुतिः

## ஸ்ரீ புவனேச்வரீ ஸ்துதி

(ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் அருளியது)

"உன்னைத் துதிக்க நீயே எனக்கருள வேண்டும்" என்று இந்தச் சுலோகத்தால் வேண்டுகின்றார்.

प्रसीद प्रपंचस्वरूपे प्रधाने
प्रकृत्यात्मिके प्राणिनां प्राणसंज्ञे।
प्रणोतुं प्रभो प्रारभे प्रांजलिस्त्वां
प्रकृत्या प्रतर्क्ये प्रकाम प्रवृत्ते

ப்ரஸீத ப்ரபஞ்சஸ்வரூபே ப்ரதானே
ப்ரக்ருத்யாத்மிகே ப்ராணினாம் ப்ராணஸம்க்ஞே।
ப்ரணோதும் ப்ரபோ ப்ராரபே ப்ராஞ்ஜலிஸ்த்வாம்
ப்ரக்ருத்யா ப்ரதர்க்யே ப்ரகாம ப்ரவ்ருத்தே ॥

ஸ்வதந்த்ரையான ஸ்ரீ புவனேச்வரீ தேவியே! கை கூப்பி பணிந்தவனாக நான் உன்னைத் துதிக்க முற்படுகின்றேன். ப்ரபஞ்ச ஸ்வரூபிணியாகவும், ப்ரதானம் என்று அழைக்கப்படுகின்றவளாகவும், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக் குணங்களின் ஸாம்யாவஸ்தா ரூபமான ப்ரக்ருதியாய் உள்ளவளும், பிராணிகளிடத்து ப்ராணனாய் உள்ளவளும், சிறந்த பிரபஞ்ச ஸ்ருஷ்டியைக் கொண்டு அறியத் தகுந்தவளும், இச்சா சக்தியாய், பிரபஞ்சமாக ஆனவளுமான புவனேச்வரியே (அதற்கு) அருளுவாயாக.

சப்த ப்ரபஞ்சமாகித் திகழ்பவள் புவனேசி என்பதன் மூலம் அவையடக்கமும் இதனால் கூறப்படுகின்றது.

स्तुतिर्वाक्यबद्धा पदात्मैव वाक्यं
पदं त्वक्षरात्माऽक्षरस्त्वं महेशि।
ध्रुवं त्वां त्वमेवाक्षरै स्त्वन्मयै स्तो
ष्यसि त्वन्मयी वाक् प्रवृत्तिः यतस्यात्॥



ஸ்துதிர்வாக்யபத்தா பதாத்மைவ வாக்யம்
பதம் த்வக்ஷராத்மா(அ)க்ஷரஸ்வத்வம் மஹேசி।
த்ருவம் த்வாம் த்வமே வாக்ஷரைः த்வன்மயைஸ்தோ
ஷ்யஸி த்வன்மயீ வாக் ப்ரவ்ருத்திர் யதஸ்ஸ்யாத்॥

மஹேச்வரீ! துதி என்பது வாக்கியங்களினால் ஆனது. வாக்யமோ பதங்களினால் ஆக்கப்பட்டிருக்கின்றது. பதம் அக்ஷரங்களினால் அமைந்தது. அந்த அக்ஷரங்கள் நீதான். ஆகவே வாக்கின் எழுச்சி நின் மயமாய் இருப்பதால் நின் உருவமான அக்ஷரங்களால் நீயே உன்னைத் துதித்துக் கொள்ளுகிறாய். இது நிச்சயம்.

இதனால் அக்ஷர ரூபிணி புவனேச்வரீ என்று குறிப்பிடப்படுகிறது. ஐம்பது அக்ஷரங்களும் பராசக்தியின் அவயவங்களாகக் கூறப்படுவதை:

पंचाशद्वर्णभेदैः विहितवदन दोः पादयुक् कुक्षि वक्षो-
देहां भास्वत्कपर्दाकलित शशिकलां इन्दुकुन्दावदातां।
अक्षस्रक् कुंभचिन्तालिखित वरकरां त्रीक्षणां पद्मसंस्थां
अच्छाकल्पा मतुच्छ स्तनजघनभरां भारतीं तां नमामि॥

(பிரபஞ்சஸாரம் 7ம் படலம் 3ம் சுலோகம்)

என்ற மாத்ருகா த்யான சுலோகத்தால் அறியலாம்.

பெரியோர்கள் வழிப்படி நானும் உன்னுடைய ஸ்தூல ரூபத்தையே துதிக்கிறேன்.

अजोधोक्षज त्रीक्षणाश्चापि रूपं
परं नाभिजानन्ति मायामयं ते।
स्तुवन्तीशि तां त्वाममी स्थूलरूपां
तदेतावदंवेह युक्तं ममापि॥

அஜாதோக்ஷஜ த்ரீக்ஷணாச்சாபி ரூபம்
பரம் நாபிஜானந்தி மாயாமயம் தே।
ஸ்துவந்தீசி தாம் த்வாமமீ ஸ்தூலரூபாம்
ததேதாவதம்பேஹ யுக்தம் மமாபி॥

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இம் மூவரும் கூட சிறந்ததும் மாயாமயமாயும் உள்ள உன் ரூபத்தை அறியாதிருக்கின்றனர். ஆகவே இம் மூவரும் ஸ்தூல ரூபம் தரித்த (புவனேசி, ஸரஸ்வதி, லக்ஷ்மீ, காளீ முதலிய ரூபமுள்ள) உன்னையே துதிக்கின்றனர். ஆதலால் எனக்கும் உன் ஸ்தூல ரூபத்தைப் புகழ்வதே உசிதமாகின்றது.

இதிலிருந்து மூன்று சுலோகங்களால் இருபத்து நான்கு தத்வ ஸ்வரூபிணியாயும் இருப்பவள் புவனேச்வரியே என்று கூறப்படுகின்றது.

नमस्ते समस्तेशि बिन्दुस्वरूपे
नमस्ते खत्वेन तत्वाभिधाने।
नमस्ते महत्वं प्रपन्ने प्रधाने
नमस्तेस्त्वहंकार तत्व स्वरूपे॥

நமஸ்தே ஸமஸ்தேசி பிந்துஸ்வரூபே
நமஸ்தே ரவத்வேன தத்வாபிதானே।
நமஸ்தே மஹத்வம் ப்ரபன்னே ப்ரதானே
நமஸ்தே ஸ்த்வஹம்கார தத்வஸ்வரூபே॥

எல்லோருக்கும் ஈசுவரியே! சப்த ப்ரம்மத்தின் உத்பத்திக்கு மூலமான பிந்து ஸ்வரூபிணியே நமஸ்காரம். பிந்துவில் இருந்து உண்டான சப்த ப்ரம்ஹம் என்று அழைக்கப்படுகின்ற தத்துவமாய் இருப்பவளே நமஸ்காரம் (முக்குணங்களின் கூட்டான ப்ரக்ருதிக்கு வேறொரு பெயரான) பிரதானமாய் (ஸாங்கியமதப்படி) இருப்பவளே நமஸ்காரம். பிரதானத்திலிருந்து பிறந்த மஹத்தத்துவமாய் (புத்தி தத்துவம்) இருப்பவளே நமஸ்காரம். மஹத்திலிருந்து உண்டான அகங்கார ஸ்வரூபிணியே நமஸ்காரம்.

ஐந்து தன்மாத்திரைகளும் அவைகளிடமிருந்து தோன்றிய ஐந்து பூதங்களும் புவனேசியே என்று இதனால் கூறப்படுகின்றது.

नमः शब्दरूपे नमो व्योमरूपे
नमः स्पर्शरूपे नमो वायुरूपे।



नमो रूप तेजो रसांभस्स्वरूपे
नमस्तेस्तु गन्धात्मिके भूस्वरूपे॥

நமः சப்தரூபே நமோ வ்யோமரூபே
நமः ஸ்பர்சரூபே நமோ வாயுரூபே।
நமோ ரூப தேஜோ ரஸாம்பஸ்ஸ்வரூபே
நமஸ்தேஸ்து கந்தாத்மிகே பூஸ்வரூபே॥

சப்த ரூபமாய் உள்ளவளே நமஸ்காரம். ஆகாய ரூபமாய் உள்ளவளே நமஸ்காரம். ஸ்பர்ச ரூபமாய் உள்ளவளே நமஸ்காரம். வாயு ரூபமாய் உள்ளவளே நமஸ்கார்ம். ஒளியாகவும், நெருப்பாகவும், ருசியாகவும், ஜலமாகவும் இருப்பவளே நமஸ்காரம். கந்தமாகவும், பூமியாகவும் இருப்பவளே நமஸ்காரம்.

அஹங்காரத்தினின்றும் சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தம் என்னும் ஐந்து தன்மாத்திரைகள் உண்டாயின. அந்தத் தன்மாத்திரைகளினின்றும் முறையே ஆகாயம், வாயு, தேஜஸ், ஜலம், பூமி என்ற பஞ்ச பூதங்கள் உதயமாயின. இவை யாவும் பராசக்தியின் ஸ்வரூபங்களே என்பது இச் சுலோகத்தின் கருத்து. இங்கு,

भूतादिका दहंकारात् पंचभूतानि जज्ञिरे।
शब्दात्पूर्वं वियत् स्पर्शाद्वायू रूपाद्धुताशनः॥
रसादंभः क्षमा गन्धात् इति तेषां समुद्भवः॥

என்ற சாரதா திலக சுலோகத்தைக் காண்க.

இந்தச் சுலோகத்தால் "ஞானேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள், அந்தக்கரணம் இவைகளின் உருவினளாகவும் பராசக்தியே இருக்கின்றாள்" என்பது உரைக்கப்படுகின்றது.

नमः श्रोत्र चर्माक्षि जिह्वाख्यनासा
सवाक् पाणि पाध्पायु सोपस्थरूपे।
मनोबु यहंकार चित्तस्वरूपे
विरूपे नमस्ते विभो विश्वरूपे॥

நம: ச்ரோத்ர சர்மாக்ஷி ஜிஹ்வாக்யநாஸா
ஸவாக் பாணி பாத் பாயு ஸோபஸ்தரூபே।
மனோபுத்யஹங்கார சித்தஸ்வரூபே
விரூபே நமஸ்தே விபோ விச்வரூபே॥

காது, தோல், கண், நாக்கு, மூக்கு, வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்ற ஞானேந்த்ரிய, கர்மேந்த்ரிய ஸ்வரூபமாய் உள்ளவளே மனஸ், புத்தி, அஹங்காரம், சித்தம் இவைகளின் ரூபமாய் உள்ளவளே! நமஸ்காரம். (உண்மையில்) ரூபம் இல்லாதவளாய் இருந்தும் எங்கும் நிறைந்து, எல்லாமாய் உருவானவளே நமஸ்காரம்.

இந்தச் சுலோகத்தால் முக்கியமான மூன்று தேஜஸ்ஸுக்களும் சக்தியிடமிருந்து பிறந்தவை என்று விளக்கப்படுகின்றது.

रवित्वेन भूत्वान्तरात्मा दधासि
प्रजा श्चन्द्रमस्त्वेन पुष्णासि भूयः।
दहस्यग्नि मूर्तिं वहन्त्याहृतं वा
महादेवि तेजस्त्रयं त्वत्त एव॥

ரவித்வேன பூத்வாந்தராத்மா ததாஸி
ப்ரஜாச்சந்த்ரமஸ்த்வேன புஷ்ணாஸி பூய:।
தஹஸ்யக்னி மூர்த்திம் வஹந்த்யாஹ்ருதம் வா
மஹாதேவி தேஜஸ்த்ரயம் த்வத்த ஏவ॥

மஹா தேவியே! சூரியனாய் இருந்து கொண்டு (உயிர்களின்) அந்தராத்மாவாக (அந்த உயிர்களைத்) தாங்குகின்றாய். மீண்டும் சந்திரனாய் இருந்து கொண்டு உயிர்களைப் போஷிக்கின்றாய். அக்னியின் உருவத்தை ஏற்று தஹிக்கின்றாய். ஆக, சூரியன், சந்திரன், அக்னி இம் மூன்று தேஜஸ்களும் உன்னிடத்திலிருந்து உண்டானவையாகும்.

சூரியன், சந்திரன், அக்னி இம் மூன்றும் பராசக்தியின் மூன்று கண்கள் என்ற,

जगत्सूते सव्यं तव नयन मर्कात्मकतया
त्रियामां वामं ते सृजति रजनीनायकमयम्।



तृतीया दृष्टिस्ते दरदलित हेमांबुजरुचिः
समाधत्ते सन्ध्यां दिवस निशयो रन्तरचरीम्॥

சங்கரபகவத்பாதர் அவர்களின் ஸௌந்தர்யலஹரி சுலோகமும் இங்கு நோக்குதற்குரியதாகும்.

இதனால் "உலகங்களை சிருஷ்டி செய்யும் பிரமனும் சக்தியே" என்று கூறப்படுகின்றது (இதிலிருந்து மூன்று சுலோகங்களால் மாயையின் மூன்று குணங்களான ரஜஸ், ஸத்வம், தமஸ் என்ற முக் குணங்களையும் பிரதானமாய் கொண்டவர்களான "பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இம் மூவரும் சக்தியின் ஸ்வரூபமே" என்று சக்தி புகழப்படுகின்றாள். இந்தக் கருத்தை ஆதிசங்கர பகவத் பாதர்களுடைய,

त्रयाणां देवानां त्रिगुण जनितानां तवशिवे।

த்ரயாணாம் தேவானாம் த்ரிகுண ஜனிதானாம் தவசிவே।

என்ற ஸௌந்தர்யலஹரீ சுலோகமும் விளக்குவதைக் காணலாம்.

चतुर्वक्त्रयुक्ता लसद्धंसवाहा
रजः संश्रिता ब्रह्मसंज्ञां दधाना।
जगत्सृष्टि कार्या जगन्मातृभूते
वरं त्वत्पदं यायसीशि त्वमेव॥

சதுர் வக்ரயுக்தா லஸத்ஹம்ஸ வாஹா
ரஜஸ் ஸம்ச்ரிதா ப்ரம்ஹஸம்ஞாம் ததானா।
ஜகத் ஸ்ருஷ்டிகார்யா ஜகன் மாத்ரு பூதே
வரம் த்வத்பதம் த்யாயஸீசி த்வமேவ॥

உலகிற்குத் தாயே! ஈசுவரியே! நான்கு முகங்கள் கொண்டவளாய் ஹம்ஸ வாஹனம் ஏறியவளாய், ரஜோ குணத்தை ஏற்றுப் பிரமன் எனப் பெயர் கொண்டு, லோக ஸ்ருஷ்டி என்ற காரியத்தைச் செய்து கொண்டு நீயே உன் உயர்ந்த பதத்தை (ஸச்சிதானந்த ஸ்வரூபத்தை) தியானிக்கின்றாய்.

மாயையின் அம்சமான ரஜோ குணத்தினால் உண்டானவர் பிரஹ்மா பராசக்தியைத் தியானித்து அதன் பயனாக உலகஙல்களை ஸ்ருஷ்டிக்கும்

சக்தி பெற்றார். அவர் எப்போதும் பராசக்தியையே தியானித்துக் கொண்டிருக்கின்றார் என்பது கருத்து. இந்தப் பிரஹ்மாவின் தியானம் பின்வருமாறு.

सौरे बिंबे चतुरास्यः किरीटी
हंसे सौधं कलशं चाक्षमालाम्।
ब्रह्मा बिभ्रद्वरदं चाभयाख्यं
हस्तैर्घ्येयः सितवस्त्रः चतुर्भिः॥

என்று சாரதா திலகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீ புவனேச்வரீயின் அம்சமே ஸ்ரீமந் நாராயணரும் என்று இதனால் கூறப்படுகின்றது.

विराजत्किरीटा लसच्छंखचक्रा
वहन्ती च नारायणाख्यां जगत्सु।
गुणं सत्वमास्थाय विश्वस्थितिं यः
करोतीह सों ऽशोपि देवि त्वमेव॥

விராஜத்கிரீடா லஸச்சங்க சக்ரா
வஹந்தீ ச நாராயணாக்யாம் ஜகத்ஸு।
குணம் ஸத்வ மாஸ்தாய விச்வஸ்திதிம் யः
கரோதீஹ ஸோ(அ)ம்சோபி தேவி த்வமேவ॥

தேவீ எந்த உன் அம்சமானது ஸத்வ குணத்தை ஏற்று, பிரகாசிக்கும் கிரீடத்துடன் கூடியதும், மின்னும் சங்க சக்ரங்களோடு கூடியதுமாக இருந்து கொண்டு உலகில் நாராயணன் என்ற பெயர் பெற்று உலகத்தைக் காக்கின்றதோ அந்த (ஸாத்விக) அம்சமும் (நாராயணனும்) நீயே!

இந்த நாராயண ஸ்வரூபம்

सौम्ये बिंबे गरुडे मेघनीलः
चक्रं शंखं सद्गदाब्जं दधानः।
हारी माली कटकी सत्किरीटी
विष्णुः पीतं वसनं कौस्तुभं च॥ (சாரதா திலக உரை)



"ஜகத் ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனும் புவனேச்வரியின் அம்சமே" என்றிதனால் உரைக்கப்படுகின்றது.

जटाबद्ध चन्द्राहि गंगा त्रिनेत्रा
जगत्संहरन्ती च कल्पावसाने।
तमः संश्रिता रुद्रसंज्ञां दधाना
वहन्ती परश्वक्षमाले विभासि॥

ஜடாபத்த சந்த்ராஹி கங்கா த்ரிநேத்ரா
ஜகத்ஸம்ஹரந்தீ ச கல்பாவஸாநே।
தமஸ் ஸம்ச்ரிதா ருத்ரஸம்ஜ்ஞாம் ததானா
வஹந்தீ பரச்வக்ஷமாலே விபாஸி॥

சந்திரன், ஸர்பம், கங்கை இவற்றை சடை முடியில் தரித்தவளாய், மூன்று கண்கள் கொண்டவளாய், பரசு (கோடறி) ருத்ராக்ஷ மாலை இவற்றைக் கரங்களில் தரிப்பவளாய் தமோ குணத்தை ஏற்று ருத்ரன் என்ற பெயர் கொண்டவளாய் நீயே கல்பத்தின் முடிவில் உலகை அழிப்பவளாயும் விளங்குகிறாய். இங்கு,

अग्नेर्बिंबे वृषभे चन्द्रमौलिः
श्वेतो रुद्रो दशबाहु स्त्रिनेत्रः।
टंकैणाग्नि त्रिशिखाहत्कपाल
मुद्राक्षस्रक् वरदा भाति पाणिः॥

என்று ருத்ர த்யானம் சாரதா திலக வ்யாக்யானத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

சொல்லின் தெய்வமான ஸரஸ்வதீ தேவியும் புவனேச்வரீயின் ஸ்வரூபமே என்றிதனால் கூறப்பெறுகின்றது.

★ सचिन्ताक्षमाला सुधाकुंभलेखा-
धरा त्रीक्षणाऽर्धेंदु राजत्कपर्दा।
सुशुक्लांशुकाकल्प देहा सरस्व-
त्यपि त्वन्मयैवेशि वाचामधीशा॥

ஸசிந்தாக்ஷமாலா ஸுதாகும்பலேகா
தரா த்ரீக்ஷணா(அ)ர்த்தேந்து ராஜத்கபர்தா।
ஸுக்லாம்சுகாகல்ப தேஹா ஸரஸ்வ
த்யபி த்வன்மயைவேசி வாசாமதீசா॥

ஈச்வரியே! ஞானமுத்ரை, ருத்ராக்ஷ மாலை, அமிர்த கலசம், புஸ்தகம் இவைகளை (கைகளில்) தரித்துக் கொண்டிருப்பவளும், முக்கண்ணியும், சந்திர கலை தரித்த சிரமுள்ளவளும், வெண்மையான வஸ்த்ரம் முதலிய அணிகள் அணிந்த தேஹம் உள்ளவளுமான சொல்லின் தெய்வமாம் ஸரஸ்வதி தேவியும் உன் ஸ்வரூபமே.

ஸகல தேவதைகளுடைய தேஜஸ்களை உருவமாகக் கொண்ட துர்கையும் புவனேச்வரியே என்று இதனால் விளக்கப்படுகின்றது.

लसच्छङ्खचक्रा चलत्खड्ग भीमा
नदत्सिंहवाहा ज्वलत्तुंग मौलिः।
द्रव दैत्यवर्गा स्तुवत्सिद्ध सङ्घा
त्वमेवशि दुर्गा विसर्गाऽविहीने॥

லஸச்சங்கசக்ரா சலத்கட்கபீமா
நதத் ஸிம்ஹவாஹா ஜ்வலத்துங்கமௌலிः
த்ரவத் தைத்யவர்கா ஸ்துவத்ஸித்த ஸங்கா
த்வமேவேசி துர்கா விஸர்கா(அ)விஹீனே॥

அழிவற்றவளே! ஈச்வரி! பிரகாசிக்கின்ற சங்கு, சக்கரம் இவைகளை உடையவளும், துவளும் கத்தியினால் பயங்கரமானவளும், கர்ஜிக்கின்ற ஸிம்ஹத்தை வாஹனமாய்க் கொண்டவளும், ஜ்வலிக்கும் உன்னத கிரீடத்தை அணிந்திருப்பவளும் (தன்னைக் கண்டு) பயந்தோடும் அரக்கர் கூட்டமுடையவளும், ஸித்தர் ஸமூகத்தால் துதிக்கப்படுகின்றவளாகியும் விளங்குகின்ற துர்கா தேவியும் நீயே.

दुर्गमासुरहन्त्रीत्वात् दुर्गेति परिकीर्त्यते।

என்றபடி துர்கமன் என்ற அஸுரனைக் கொன்று தேவர்களுக்கும், நல்லோருக்கும் அருள் புரிந்த துர்கை ஸர்வ தேவதைகளின் தேஜோமயமானவள். பல தெய்வங்களால் அளிக்கப்பட்ட அஸ்த்ர சஸ்திரங்களைத் தரித்திருப்பாள். இவளை சதாக்ஷி என்றும் சாகம்பரீ என்றும் அழைப்பர். இந்த வரலாற்றை தேவீ பாகவதத்தில் காண்க. இந்த துர்கா த்யானத்தை,



कालाभ्राभां कटाक्षैः अरिकुल भयदां मौलिबद्धेन्दुरेखा
शंखं चक्रं कृपाणं त्रिशिखमपि करैः उद्वहन्तीं त्रिनेत्रां।
सिम्ह स्कन्धांधिरूढां त्रिभुवनमखिलं तेजसा पूरयन्तीं
यायेदुर्गा जयाख्यां त्रिदशपरिवृतां सेवितां सिद्धिकामैः॥

சாரதா திலகத்தில் காண்க.

பரமனின் பாதி உடலில் பதிந்திருக்கும் பார்வதியும் பரா சக்தியே என்று இதனால் வர்ணிக்கப்படுகின்றது.

पुराराति देहार्धभागो भवानी
गिरीन्द्रात्मजात्वेन यैषा विभासि।
महायोगिवन्द्या महेशासुनाथा
महेश्यंबिका तत्वतः त्वन्मयैव॥

புராராதி தேஹார்த்தபாகோ பவானீ
கிரீந்த்ராத் மஜாத்வேன யைஷா விபாஸி।
மஹாயோகி வந்த்யா மஹேசாஸுநாதா
மஹேச்யம்பிகா தத்வதः த்வன்மயைவ॥

ஹே மஹேசி! முப்புரம் எரித்தவரின் பாதி பாகமாய் பவானீ என்ற பெயர் கொண்டு மலை மகளாய் எவள் விளங்குகின்றாளோ, பெரும் யோகிகளால் வணங்கத் தகுந்தவளும் பரமனின் ப்ராண நாயகியாயும் இருக்கின்ற அந்த அம்பிகை (பார்வதி) உண்மையில் உன் ஸ்வரூபமே. இந்தப் பார்வதியின் தியானத்தை,

उदयार्क समप्रख्यां बन्धूक सदृश प्रभां।
आपीन तुंगकठिन कुचद्वय विराजितां।
द्विनेत्रां द्विभुजां पद्महस्तां च जनमोहिनीं।
देवस्य वाम पार्श्वस्थां ........।

சாரதா திலக உரையில் காண்க.

திருமாலின் மார்பில் உறைந்தருளும் திருவும் புவனேசியே என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது.

लसत्कौस्तुभोद्भासिते व्योमनीले
वसन्ती च वक्षस्थले कैटभारेः ।
जगद्वल्लभां सर्वलोकैकनाथां
श्रियं तां महादेव्यहं त्वामवैमि ॥

லஸத் கௌஸ்துபோத் பாஸிதே வ்யோமநீலே
வஸந்தீ ச வக்ஷஸ்தலே கைடபாரே:।
ஜகத்வல்லபாம் ஸர்வலோகைக நாதாம்
ஸ்ரீயம் தாம் மஹாதேவ்யஹம் த்வாமவைமி॥

ஹே மஹாதேவியே! மின்னும் கௌஸ்துப மணியால் சோபிக்கின்றதும், ஆகாயம் போன்ற நீல நிறம் உள்ளதுமான விஷ்ணுவின் மார்பில் வஸிப்பவளும், உலகத்திற்குப் பிடித்தவளும் எல்லா உலகங்களுக்கும் ஈச்வரியுமான அந்த லக்ஷ்மி தேவியாகவே உன்னை அறிகிறேன். லக்ஷ்மீ த்யானத்தை,

भूयाद्भूयो द्विपद्माऽभयवरकरा तप्तकार्तस्वराभा
शुभ्राभ्राभेभ युग्मद्वय करधृत कुंभाद्भिरासिच्यमाना ।
रत्नौघाबद्धमौलि र्विमलतरदुकूलार्तवालेपनाढ्या
पद्माक्षी पद्मनाभोरसि कृतवसतिः पद्मगा श्रीः श्रियै नः ॥

ஸௌபாக்யலக்ஷ்மீ உபநிஷத் முதல் கண்டத்தில் காண்க.

எழுவகைத் தாயரும் புவனேசியே என்று இதனால் விளக்கப்படுகின்றது.

अजाद्रीड्गुहाब्जाक्ष-पोत्रीन्द्रकाणां
महाभैरवस्यापि चिन्हं वहन्त्यः ।
विभो मातरः सप्त तद्रूपरूपाः
स्फुरन्त्य स्त्वदंशाः महादेवि ताश्च ॥



அஜாத்ரீட் குஹாப்ஜாக்ஷ போத்ரீந்த்ரகாணாம்
மஹாபைரவஸ்யாபி சின்ஹம் வஹந்த்ய:।
லிபோ மாதர: ஸப்த தத்ரூப ரூபா:
ஸ்புரந்த்ய: த்வதம்சா: மஹாதேவி தாச்ச॥

எங்கும் நிறைந்த மஹாதேவியே! பிரம்மா, ருத்ரன், குஹன், விஷ்ணு, வராஹர், இந்திரன், மஹா பைரவர் இவர்களுடைய சின்னத்தை (அடையாளம், வாஹனம், ஆயுதம் இவற்றை) ஏற்றிருப்பவர்களும் பிரம்மாதியர் உருவம் போன்ற உருவம் கொண்டவர்களாகவும் விளங்குகின்ற ஏழு விதமான ஜகன்மாதாக்களும் 'உன் அம்சமானவர்களே!

नूनं सर्वेषु देवेषु नाना नामधराह्यहम् ।
भवामि शक्तिरूपेण करोमि च पराक्रमम् ॥
ब्राह्मी माहेश्वरी चैव कौमारी वैष्णवी तथा ।
वाराही च तथेन्द्राणी चामुण्डा स्सप्तमातरः ॥

என்ற இவர் மணித்வீபத்தில் பதிமூன்றாவதாகிய வைடூர்ய ப்ராகாரத்தில் जगत्कल्याणकारिण्यः உலகத்திற்கு மங்களம் செய்யும் பொறுப்புள்ளவர்களாய் அமர்ந்திருக்கின்றனர் என்று தேவீ பாகவதம் கூறும். சாரதா திலகத்தில் இவர் லக்ஷணம் வகுக்கப் பெற்றிருக்கின்றது.

1. பிராம்ஹீ: ஹம்ஸம் வாஹனம். கண்கள் மூன்று. தண்டம் கமண்டலம், அக்ஷமாலை, அபயம் தாங்கும் கரங்கள், பொன்னிறம், கிருஷ்ணாஜினத்தை ஆடையாய்த் தரித்திருப்பாள்.
2. மாஹேச்வரீ: வாஹனம் வ்ருஷபம். கண்கள் மூன்று. சூலம், பரசு, சிறு துந்துபி, மனிதன், எலும்பு இவை ஏற்ற கரத்தினள், வெண்ணிறம் கொண்டவள்.
3. கௌமாரீ: இரண்டு கண்கள். மயில் வாஹனம். அங்குசம், தடி, கட்வாங்கம், பாசம் இவை மிளிரும் கரங்கள். செவ்வரத்தைப் பூப் போன்ற சிவந்த மேனி. விருப்பமெல்லாம் அளிப்பவள்.
4. வைஷ்ணவீ: இரண்டு கண்கள். கருடன் வாஹனம், சக்கரம், மணி, கபாலம், சங்கு இவை கைகளில் தரித்திருப்பாள். தமாலம் போன்ற நீல நிறம்.

5. வாராஹி: மூன்று கண்கள், மஹிஷ வாஹனம், வராஹ முகம் கொண்டவள். உலக்கை கத்தி கேடயம், கலப்பை இவற்றை கரங்களால் தரித்திருப்பாள். கருநிறம் படைத்தவள்.

6. இந்திராணி: இரண்டு கண்கள். ஐராவதம் வாஹனம். அங்குசம், தோமரம், மின்னல், வஜ்ரம் இவை விளங்கும் கரத்தினள். இந்திரமணி போன்ற நீல நிறம். எல்லாம் வழங்குவாள்.

7. சாமுண்டா: மூன்று கண்கள். வாஹனம் ப்ரேதம். சூலம், கத்தி, மனிதனின் தலை, கபாலம் இவற்றால் விளங்கும் கரகமலத்தினள். முண்ட மாலை அணிந்தவள். மாம்ஸமில்லாத உடல் கொண்டவள். சிவந்த நிறம்.

இவர்களின் தியான ச்லோகங்கள்.

दण्डं कमण्डलुं पश्चात् अक्षसूत्रमथाऽभयम्।
बिभ्रती कनकच्छाया ब्राह्मी कृष्णाजिनोज्वला॥ १ ॥

शूलं परश्वधं क्षुद्र दुन्दुभिं नृकरोटिकां।
वहन्ती हिमसंकाशा येया माहेश्वरी शुभा॥ २ ॥

अंकुशं दण्ड खड्वांगौ पाशं च दधती करैः।
बन्धूक पुष्प संकाशा कौमारी कामदायिनी॥ ३ ॥

चक्रं घण्टां कपालं च शंखं च दधती करैः।
तमाल श्यामला येया वैष्णवी विभ्रमोज्वला॥ ४ ॥

मुसलं करवालं च खेटकं दधानी हलम्।
करैश्चतुर्भिर्वाराही येया कालघनच्छविः॥ ५ ॥

अंकुशं तोमरं विद्युत्कुलिशं बिभ्रती करैः।
इन्द्रनीलनिभेन्द्राणी येया सर्वसमृद्धिदा॥ ६ ॥

शूलं कृपाणं नृशिरः कपालं दधती करैः।
मुण्डस्रङ्मण्डिता येया चामुण्डा रक्तविग्रहा॥ निर्मांसा च॥ ७ ॥



இந்த சுலோகத்தால் ஹ்ரீங்கார மந்த்ரத்தினால் உபாஸிக்கப்படும் ஸ்ரீ புவனேச்வரீ தேவியின் ஸ்வரூபம் கூறப்பட்டுகின்றது.

★ समुद्यद्दिवाकृत्सहस्र प्रभासा
सदा सन्तताशेष विश्वावकाशे।
लसन्मौलि बद्धेन्दु लेखे सपाशा
ङ्कुशाभीत्य भीष्टात्त हस्ते नमस्ते॥

ஸமுத்யத்திவாக்ருத் ஸஹஸ்ர ப்ரபாஸா
ஸதா ஸந்ததா சேஷ்விச்வாவகாசே।
லஸன்மௌளி பத்தேந்துலேகே ஸபாசாங்
குசாபீத்ய பீஷ்டாத்தஹஸ்தே நமஸ்தே॥

உதிக்கின்ற ஆயிரம் சூர்யர்களின் ஒளி போன்ற ஒளியால் அகில உலகங்களின் இடைவெளியைப் பரவச் செய்பவளும் ஒளிரும் கிரீடத்தில் சூட்டிய சந்திர கலையுடன் கூடியவளும் எப்போதும் பாசம், அங்குசம், வரம், அபயம் இவைகளைத் தரித்திருப்பவளும் ஆகிய ஸ்ரீ புவனேச்வரீ! உனக்கு நமஸ்காரம்.

"உலகத்தின்கண் விளங்கும் சக்திகளின் வகை அனைத்தும் ஸ்ரீ புவனேச்வரீ தேவியின் அம்சங்களே" என்பது இந்த சுலோகத்தால் விளக்கப்படுகின்றது.

प्रभाकीर्ति कान्तीन्दिरा रात्रि सन्ध्या
क्रियाशा तमिस्रा क्षुधा बुद्धि मेधाः।
स्तुतिर्वाक् मतिस्सन्नतिः श्रीश्च शक्तिः
त्वमेवेशि येन्ये च शक्ति प्रभेदाः॥ १७ ॥

ப்ரபாகீர்த்தி காந்தீந்திரா ராத்ரி ஸந்த்யா
க்ரியாசா தமிஸ்ரா க்ஷுதாபுத்திமேதாः।
ஸ்துதிர்வாக் மதிः ஸன்னதிः ஸ்ரீச்ச சக்திः
த்மேவேசி யேன்யேச சக்தி ப்ரபேதாः॥

ஹே ஈச்வரீயே! ஒளி, புகழ், அழகு, ஸம்பத்து, இரவு, ஸந்த்யை, செயல், ஆசை, இருள், பசி, புத்தி, நுண்ணறிவு, ஸ்துதி, சொல், நிச்சயம்,

செய்யும் அறிவு, பணிவு, சோபை, சக்தி இவைகளும் இவை போன்ற மற்ற சக்திகளின் வகையும் நீயே.

சக்தி என்பது நெருப்பில் சூடு, ஜலத்தில் சீதம் இது போன்ற வஸ்துக்களில் ஒன்றியிருக்கும் திறனாகும். சக்திகளைப் பற்றிய ஸப்த சதியின் 5வது அத்தியாயத்தில்,

या देवी सर्वभूतेषु विष्णुमायेति शब्यते।
नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥

என்ற 12ஆம் சுலோகத்திலிருந்து விளக்கமாய்க் கூறப் பெற்றிருக்கின்றன. அவை பற்றி அங்கே காண்க.

ஹ்ரீங்காரமும் அதன் பேதங்களும் புவனேச்வரியே என்று இதனால் கூறப்படுகின்றது.

हरे बिन्दुनादैः स शक्त्याख्य शान्तैः
नमस्तेस्तु भेदैः प्रभिन्नैरभिन्ने।
सदा सप्त पाताल लोकाचलाब्धि
ग्रह द्वीप धातुस्वरादि स्वरूपे ॥ १८ ॥

ஹரே பிந்து நாதைஃ ஸசக்த்யாக்யசாந்தைஃ
நமஸ்தேஸ்து பேதைஃ ப்ரபின்னைரபின்னே।
ஸதா ஸப்தபாதாள லோகாசலாப்தி
க்ரஹ த்வீப தாதுஸ்வராதி ஸ்வரூபே ॥

ஹகாரம், ரேபம், ஈகாரம் (மாயை) இவைகளால் இணைக்கப்பட்ட ஹ்ரீங்கார ஸ்வரூபிணியான புவனேச்வரீ தேவியே பிந்து, நாதம், சக்தி, சாந்தம் என்ற விதங்களால் வகுக்கப்பட்டவளும் (உண்மையில்) பேதம் இல்லாதவளும், எப்போதும் ஏழாகிய பாதாள லோகங்கள், மலைகள், கடல்கள், க்ரஹங்கள், தீவுகள், தாதுக்கள், ஸ்வரங்கள் இவைகளின் ஸ்வரூபமாய் உள்ளவளுமான உனக்கு நமஸ்காரம்.

ஹ்ரீம் என்பது சக்தி ப்ரணவம். இதை தாரம் என்ற சொல்லாலும் அழைப்பர். அது.



हकार रेफ मायाश्च बिन्दुनादौ तथैव च।
शक्ति शान्तौ च संप्रोक्ताः शक्तेः भेदाश्च सप्तधा ॥ (प्र.सा.पटलं र)

ஹகாரம், ரேபம், ஈகாரம், பிந்து, நாதம், சக்தி, சாந்தம் என்ற ஏழு பேதங்கள் கொண்டதாகும். இவ்வாறு ஏழு பேதங்கள் கொண்ட ஹ்ரீங்காரத்தினின்று உண்டானவையே ஏழாக வகுக்கப்படும் பாதளம் முதலியன. இது பற்றிய விரிவை ப்ரபஞ்ச ஸாரத்தில் காண்க.

| | |
|---|---|
| 1. பாதாளங்கள் 7 | அதலம், விதலம், சுதலம், கபஸ்திமான், மஹாதலம், நிதலம், பாதாளம் என்பன. |
| 2. பர்வதங்கள் 7 | மேரு, நிஷதம், ஹேமகூடம், ஹிமவான், நீலம், ச்வேதம், ச்ருங்கீ என்பன. |
| 3. தீவுகள் 7 | ஜம்பூ, ப்லக்ஷம், சால்மலி, குசம், க்ரௌஞ்சம், சர்கம், புஷ்கரம். |
| 4. ஸமுத்ரங்கள் 7 | உப்பு, கரும்பு, ஸுரை, நெய், தயிர், பால், ஜலம். |
| 5. க்ரஹங்கள் 7 | சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்ரன், சனி. |
| 6. ஸ்வரங்கள் 7 | நிஷாதம், ரிஷபம், காந்தாரம், ஷட்ஜம், மத்யமம், தைவதம், பஞ்சமம். |
| 7. தாதுக்கள் 7 | தோல், ரத்தம், மாம்ஸம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்ரம். |
| 8. ரிஷிகள் 7 | பரத்வாஜர், காச்யபர், கௌதமர், அத்ரி, விச்வாமித்ரர், ஜமதக்னி, வஸிஷ்டர். |

எல்லாமே நீயே என்று இதனால் கூறப்படுகின்றது.

नमस्ते नमस्ते समस्तस्वरूपे
समस्तेषु वस्तुष्वनुस्यूत शक्ते।
अतिस्थूल सूक्ष्म स्वरूपे महेशि
स्मृते बोधरूपेऽप्यबोधस्वरूपे ॥ १९ ॥

நமஸ்தே நமஸ்தே ஸமஸ்தஸ்வரூபே
ஸமஸ்தேஷு வஸ்துஷ்வனுஸ்யூத சக்தே।
அதிஸ்தூல ஸூக்ஷ்மஸ்வரூபே மஹேசி
ஸ்ம்ருதே போதரூபே(அ)ப்ய போதஸ்வரூபே॥

ஹே மஹேச்வரி! எல்லாப் பொருள்களின் உருவமாய் உள்ளவளே! எல்லாப் பொருள்களிலும் இடைவிடாது அமைந்திருக்குட் சக்தியாய் இருப்பவளே. மிகப் பெரியதும், மிகச் சிறியதும் ஆகிய பொருள்களாய் இருப்பவளே. நினைப்பாகவும், அறிவாகவும், அறிவற்றதாகவும் இருப்பவளே. உனக்கு நமஸ்காரம்.

மாயையின் காரியங்கள் இரண்டு. ஒன்று ஆவரணம். மற்றொன்று விக்ஷேபம். அதில் ஆவரண சக்தியாய் (மறைக்கும் சக்தி) இருப்பதால் அஞ்ஞான ஸ்வரூபிணியாகவும் பராசக்தி இருக்கிறாள்.

अन्तर्द्दक् दृश्ययोर्भेदं बहिश्च वाह्य सर्गयोः।
आवृणोत्यपराशक्तिः सा संसारस्य कारणम् ॥ *(ஸரஸ்வதி ரஹஸ்யோபநிஷத்)*

विद्याऽविद्ये तु ताभ्यां द्वे रूपे जानीहि पार्थिव।
विद्यया मुच्यते जन्तुः ब यतेऽविद्यया पुनः ॥ *(தேவீ பாகவதம் 4 ஸ்கந்தம்)*

என்பதாலும் இதனை அறியலாம்.

எல்லாம் வல்ல நீ என்னைப் பொறுத்தருள்வாயாக என்று இதனால் அறிவிக்கப்படுகிறது.



मनोवृति रस्तु स्मृतिस्ते समस्ता
तथा वाक् प्रवृत्तिः स्तुतिः स्यान्महेशि।
शरीर प्रवृत्तिः प्रणाम क्रिया स्यात्
प्रसीद क्षमस्य प्रभो सन्ततं मे ॥ २० ॥

மனோவ்ருத்தி ரஸ்து ஸ்ம்ருதிஸ்தே ஸமஸ்தா
ததா வாக் ப்ரவ்ருத்திঃ ஸ்துதிঃ ஸ்யான் மஹேசி।
சரீரப்ருவ்ருத்திঃ ப்ரணாமக்ரியா ஸ்யாத்
ப்ரஸீத க்ஷமஸ்வ ப்ரபோ ஸந்ததம் மே॥

ஹே மஹேச்வரி! என் மனத்தில் எழும் எண்ணமெல்லாம் உன்னைப் பற்றிய நினைவாகவும், என் சொல்லின் செயல் எல்லாம் உன் துதியாகவும், சரீரத்தின் செயல் எல்லாம் உனக்குச் செய்யும் நமஸ்காரமாகவும் அமையட்டும். எல்லாம் வல்லவளே எப்போதும் என்னிடம் அன்பு காட்டி (நான் செய்த குற்றங்களை) பொறுத்தருளுவாயாக. இங்கு जपो जल्पः என்ற ஸௌந்தர்ய லஹரீ சுலோகம் நினைவில் கொள்ளுவதற்குரியதாகும்.

இந்தப் புவனேச்வரீ ஸ்தோத்திரத்தைப் படிப்பதனால் ஏற்படும் பயன் கூறப்படுகின்றது.

हृल्लेखाजपविधि मर्चना प्रभेदान्
एतांस्तां स्तुतिमपि नित्यमादरेण।
योऽभ्यस्येत् स खलु परां श्रियं च लब्ध्वा
शुद्धं तद्व्रजति पदं परस्य धाम्नः ॥

ஹ்ருல்லேகா ஜபவிதி மர்சனா ப்ரபேதான்
ஏதாம் ஸ்தாம் ஸ்துதிமபி நித்யமாதரேண।
யோ ப்யஸ்யேத் ஸ கலு பராம் ஸ்ரீயம் ச லப்த்வா
சுத்தம் தத்வ்ரஜதி பதம் பரஸ்ய தாம்நঃ॥

ஸ்ரீ புவனேச்வரியின் ஹ்ரீங்கார ஜப முறையையும் அர்ச்சனை வகைகளையும் இந்த ஸ்துதியையும் தினந்தோறும் அன்புடன் அப்யஸிப்பவன் மிக்க ஐச்வர்யம் பெற்று துக்க ஸம்பந்தமில்லாத அந்தப் பராசக்தியின் லோகத்தை அடைகின்றான்.

## குண்டலினீ யோகம்

இங்கு குண்டலினீ யோகம் பற்றிச் சுருக்கமாகக் கூறப்படுகின்றது. இது விரிவாக தேவீ பாகவதம் ஷட்சக்ர நிரூபணம் முதலிய நூல்களில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. அதன் விளக்கத்தை இங்கு காண்போம்.

சரீரத்தில் மூன்றரை கோடி நாடிகள் இருக்கின்றன. அவற்றுள் பத்து முக்கியமான நாடிகள் என்றும் அவற்றுள்ளும் இடை, பிங்கிளை, ஸுஷும்னா என்ற மூன்று நாடிகள் மிகவும் முக்கியமானவை என்றும் கூறுவர். இம் மூன்று நாடிகளும் மேரு தண்டம் என்று கூறப்படுகின்ற முதுகு எலும்பைச் சுற்றிக் கொண்டு மேலே செல்லுகின்றன.

அவற்றுள் இடை என்ற நாடி இடது புறமுள்ளது. வெண்மை நிறமானது. இது ஸ்த்ரீ ரூபமென்றும் சந்திரன் போன்று பிரகாசிக்கும் என்றும் கூறுவர்.

பிங்களை என்பது புருஷ ஸ்வரூபம். சூரியன் போன்று பிரகாசிக்கக் கூடியது. வலது புறத்தில் உள்ளது.

சுஷும்னா என்பது வன்ஹி (நெருப்பு) ரூபம், இடை, பிங்களை என்ற நாடிகளுக்கு இடையில் உள்ளதாகும். இந்த சுஷும்னா நாடியின் விசித்ரம் என்ற பெயர் கொண்ட மத்ய பாகத்தில் இச்சா, ஞான, க்ரியா ஸ்வரூபமான ஸ்வயம்பு லிங்கம் இருக்கின்றது. அதன் மேல் மாயாபீஜமான ஹ்ரீங்காரம் இருக்கின்றது. அதன் மீது தீபத்தின் சிகை போன்று செந்நிறம் உள்ளதும், தாமரைத் தண்டின் இடையிலுள்ள நூல் போன்ற மெல்லியதுமாகிய குண்டலினீ என்ற சக்தி ப்ரகாசிக்கின்றாள். இந்தக் குண்டலினீ பராசக்தியான ஸ்ரீ புவனேச்வரீயே.

## மூலாதாரம்

இதன் வெளியில் மூலாதாரம் என்றொரு பத்மம் (தாமரைப் பூப் போன்றது) இருக்கின்றது. அது பொன்னிறமானது. व श ष स என்ற நான்கு அக்ஷரங்களுக்கு ஆதாரமான நான்கு தளங்கள் (இதழ்கள்) கொண்டது. இது குத ஸ்தானத்திற்கு மேலும், லிங்கத்திற்குக் கீழும் இருக்கும். அந்தப் பத்மம் இனிக் கூறப்படும் பத்மங்களுக்கு ஆதரமாய் இருப்பதால் இதை மூலாதாரம் என்று யோகிகள் கூறுர். இங்கு பிரம்மா



பால ரூபம் கொண்டு இருப்பார். இங்குள்ள சக்திக்கு ஸாகினீ என்று பெயர்.

இதற்கு மேல் ஸர்வாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆஞ்ஞாசக்ரம், ஸஹஸ்ராரம் என்ற பத்மங்கள் இருக்கின்றன.

ஸ்வாதிஷ்டானம்: இதன் ஸ்தானம் லிங்க மூலம். ब भ म य र ल என்ற ஆறு அக்ஷரங்களுக்கு ஆதாரமான ஆறு இதழ்கள் கொண்டது இந்தப் பத்மம். இங்கு யுவாவாக விஷ்ணு விளங்குகின்றார். இங்குள்ள சக்தி காகினீ.

மணிபூரகம்: இதன் ஸ்தானம் நாபியாகும். ड ढ ण त थ द ध न प फ என்ற பன்னிரண்டு அக்ஷரங்களுக்கு ஆதாரமான பத்து இதழ்கள் கொண்டது இந்தப் பத்மம். பல வர்ணங்கள் கொண்ட மணிகளின் ஒளிபோல் இது பிரகாசிப்பதால் மணிபூரகம் என்று பெயர் பெறுகின்றது. இங்கு விஷ்ணு வாசம் செய்கின்றார் என்று தேவீ பாகவதம் கூறுகின்றது.

இங்கு ருத்ரர் வ்ருத்தராய்த் தோன்றுகிறார் என்று கூறும் ஷட்சக்ர நிரூபணம். இங்குள்ள சக்திக்கு லாகினீ என்று பெயர்.

அனாஹதம்: இதன் ஸ்தானம் ஹ்ருதயம் உதிக்கும் சூரியன் போன்றது. இது பிரகாசமாய் இருக்கும். क ख ग घ ङ च छ ज झ ञ ट ठ என்ற பத்து அக்ஷரங்களுக்கு ஆதாரமான பன்னிரண்டு இதழ்கள் கொண்டது இந்தப் பத்மம். இங்குள்ள சக்திக்குப் பெயர் ராகிணீ. இங்குச் சப்தங்கள் உருவம் அற்றிருக்கும். இங்குப் பாணலிங்கம் இருக்கின்றது. இதற்கு ஈசன் தெய்வம்.

விசுத்தி: இதன் இடம் கழுத்து. தாம்ர வர்ணமாகவும் மிக்க ஒளி பொருந்தியதாகவும் இருக்கும். பதினாறு உயிர் எழுத்துக்களுக்கு ஆதாரமாய் உள்ள பதினாறு தளங்கள் கொண்டது இந்தப் பத்மம். இங்கு யோகி சித்தத்தை நிலைநிறுத்தும்போது ஜீவனுக்கு ஹம்ஸன் என்ற பகவானுடைய தர்சனம் கிடைக்கின்றது. அதனால் ஜீவன் விசேஷமான தூய்மை (சுத்தி) பெறுகிறான். ஆகவே இந்தப் பத்மத்தை விசுத்தி என்று கூறுகின்றனர். இதன் சக்தி டாகினீ.

ஆஞ்ஞா சக்ரம்: புருவங்களின் இடைவெளி இதன் இடம். இது ह क्ष என்ற இரண்டு அக்ஷரங்களுக்கு ஆதாரமான இரண்டு தளங்கள் கொண்டது. இங்கு சித்தத்தை நிலைநிறுத்தும் ஜீவனுக்கு "இப்படியிருந்தது. இப்படி இருக்கும். இனி இவ்வாறு செய்ய

வேண்டும்'' என்ற ஆஞ்ஞை ஈசனிடமிருந்து கிடைக்கின்றது. ஆகவே, ஜீவன் இங்கு ஈசனிடம் இருந்து ஆஞ்ஞையைப் பெற முடிவதால் இதை ''ஆஞ்ஞா சக்ரம்'' என்று அழைக்கின்றனர். இங்குள்ள சக்திக்குப் பெயர் ஹாகினீ.

இதற்கு மேல் ''கைலாசம்'', ''ரோதினீ'' என்ற இரண்டு ஸ்தானங்கள் இருக்கின்றன. இதற்கு மேல் ''ஸஹஸ்ராரம்'' என்ற ஆயிரம் இதழ்கள் கொண்ட பத்மம் இருக்கின்றது. இதை ''த்வாதசாந்தம்'' என்றும் ''ப்ரம்மரந்த்ரம்'' என்றும் கூறுவர். இங்குதான் பராசக்தியாகிய குண்டலினீ பரசிவத்தோடு சேர்ந்து சந்தோஷமாய் இருக்கிறாள் என்பதாகத் தியானிக்க வேண்டும்.

மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் என்ற இந்த இரண்டு பத்மங்களுக்கு மேல் ''ப்ரம்மக்ரந்தி'' என்ற முடிச்சும், மணிபூரகம், அனாஹதம் என்ற இரண்டு பத்மங்களுக்கு மேல் ''விஷ்ணுக்ரந்தி'' என்ற முடிச்சும், விசுத்தி ஆஞ்ஞாசக்ரம் என்ற இரண்டு பத்மங்களுக்கு மேல் ''ருத்ர காந்தி'' என்ற முடிச்சும் இருப்பதாய்க் கூறுவர்.

ஆகவே, மூலாதாரத்தில் இருக்கும் குண்டலினீயை, ஸாதகன் யோக சக்தியால் எழுப்பி, சுஷும்னா நாடியின் வழியாக மேலே செலுத்த வேண்டும். மேற்கூறிய ஒவ்வொரு சக்ரங்களையும் கிரந்திகளையும் பேதனம் செய்து கொண்டு ஸஹஸ்ராரம் சென்று பரமனோடு கலந்து சந்தோஷமாய் இருப்பவளாகத் தியானிக்க வேண்டும்.

அங்கு பெருகும் த்ராக்ஷாரஸம் போன்ற அமிர்தத்தைக் குண்டலினீ சக்தி அனுபவித்து அங்கிருந்து புறப்பட்டு சென்ற வழியே திரும்பி வரும்போது ஆங்காங்கு உள்ள பத்மங்களின் தெய்வங்களை அமிர்த வர்ஷத்தால் திருப்தி செய்து கொண்டு மீண்டும் தன் இருப்பிடமான மூலாதாரம் வந்து அடைகின்றாள்.

இப்படிக் குண்டலினீ சக்தியை உபாஸிப்பவனுக்கு எல்லா மந்த்ரங்களும் சித்தியாகும். கிழத் தன்மை, மரணம் இவையின்றி துக்கமற்றும் சுகமாக வாழ்வான். இங்கு குண்டலினீ பற்றி,

प्रकाशमानां प्रथमे प्रयाणे
प्रति प्रयाणेऽप्यमृतायमानां।
अन्तः पदव्यामनु संचरन्तीं



आनन्दरूपा मबलां प्रपद्ये ॥

என்று தேவீ பாகவதம் கூறுகின்றது. இதன் விளக்கத்தைக் குருமுகமாய்த் தெரிந்து கொண்டு அப்யஸிப்பதே உபாஸகனுக்கு நன்மை அளிக்கும்.

''சிவாகம சேகரம்'' என்ற ஆகம நூல், சிவலிங்க ப்ரதிஷ்டா விதியில் (இரண்டாம் பகுதியில்) ஆறு ஆதார சக்ரங்களில் உபாஸிக்க வேண்டிய தெய்வங்கள் பற்றியும் அதன் சக்திகள் பற்றியும் கீழ்க்கண்டவாறு வர்ணிக்கின்றது. அதையும் காண்போம்.

1. மூலாதார சக்ரத்தில் உபாஸிக்க வேண்டியவர் கணபதி. அவர் சக்திகள் 1) ஸித்தி லக்ஷ்மீ 2) வல்லபாம்பா.

2. ஸ்வாதிஷ்டானத்தில் உபாஸிக்க வேண்டியவர் சதுர்முக ப்ரம்மா. இவர் சக்திகள் ஸாவித்ரீ, காயத்ரீ.

3. மணிபூரகத்தில் உபாஸிக்கத் தக்கவர் விஷ்ணு. இவர் சக்திகள் லக்ஷ்மீ, பூமி.

4. அனாஹதத்தில் தியானிக்கத் தகுந்தவர் ருத்ரர். இவர் சக்திகள் கௌரீ, அம்பிகை.

5. விசுத்தியில் சிந்திக்கத் தக்கவர் மஹேச்வரர். இவர் சக்திகள் உன்மனீ, வாக்வாதினீ.

6. ஆஞ்ஞா சக்ரத்தில் உபாஸிக்கத் தகுந்தவர் ஸதாசிவன். இவர் சக்திகள் மனோன்மணி, தர்மசக்தி.

(சிவகாமசேகரம் 2ம் பகுதி பக்கம் 222)

## श्रीभुवनेश्वरीचरितम्
## ஸ்ரீ புவனேச்வரீ சரிதம்

**सर्वचैतन्यरूपां तामाद्यां विद्यां च धीमहि।**
**बुद्धिं या नः प्रचोदयात्॥**

ஸர்வசைதன்ய ரூபாம் தாமாத்யாம் வித்யாம் ச தீமஹி।
புத்திம் யாநः ப்ரயோதயாத்॥

### மணித்வீபம்

ஸ்ரீ புவனேச்வரீ வஸிக்கும் இடம் "மணித்வீபம்" என்று அழைக்கப்படுகின்றது. இம் மணித்வீபம், பிரம்மலோகம், கைலாஸம், வைகுண்டம், கோலோகம் முதலிய உலகங்களுக்கு மேற்பகுதியில் அமைந்திருக்கின்றது. இம் மணித்வீபமே ஸுபாலோப நிஷத்தில் सर्वलोकः (ஸர்வலோகः) என்ற பெயரால் குறிப்பிடப்படுகின்றது. ஸர்வலோகம் என்ற சொல்லிற்கு தேவீ பாகவதத்தின் உரையாகிய திலகம் सर्वस्मादधिको लोकः ஸர்வஸ்மாத் அதிகோ லோகः ஸர்வலோகः எல்லா உலகங்களைக் காட்டிலும் உயர்ந்திருக்கும் உலகம் என்று பொருள் கூறுகின்றது. மேற்கூறிய ஸுபாலோப நிஷத்தில் 'सर्वलोकाः आत्मनि ब्रह्मणि मणय इव ओताश्च प्रोताश्च इति ஸர்வலோகாः ஆத்மனி ப்ரம்ஹணி மணயஇவ ஓதாச்ச ப்ரோதாச்ச இதி'' ஸர்வ லோகங்களும் மணிகள் போன்று குறுக்கும் நெடுக்குமாக ஆத்மாவாம் ப்ரம்ஹத்தினிடத்தில் தொகுக்கப்பட்டிருக்கின்றன என்று கூறப்பட்டிருப்பதால் இந்த ஸர்வ லோகத்தைப் புராணங்கள் மணித்விபம் என்று அழைக்கின்றன.

உலகங்களுக்கு எல்லாம் காரணமாகிய புவனேச்வரீ தேவீ உலகங்கள் அனைத்தையும் படைப்பதற்கு முன் தான் தாங்குவதற்குரிய இடம் வேண்டுமென்று எண்ணி, தன் திரு உள்ளத்தாலேயே இம் மணித்வீபத்தைப் பொலிவுறப் படைத்தாள். இவ்வழகிய மணித்வீபத்திற்கு ஸமமான உலகம் எங்கும் கிடையாது.

இந்த மணித்வீபம் உலகம் அனைத்தினுக்கும் மேலே குடை போல் அமைந்து, தன் கீழுள்ள அநேகம் பிரமாண்டங்களுடைய தாபத்தைப் போக்கி, நிழல் அளித்துக் கொண்டிருக்கின்றது. இம் மணித்வீபத்தைச்



சுற்றி அமிர்தக் கடல் சூழ்ந்திருக்கிறது என்பதை,

ब्रह्मलोकादूर्ध्वभागे सर्वलोकोऽस्ति यः श्रुतः।
मणिद्वीपः स एवास्ति यत्र देवी विराजते॥

सर्वस्मादधिको यस्मात् सर्वलोकः ततस्स्मृतः।
पुरा परांबयैवायं कल्पितो मनसेच्छया॥
सर्वादौ निजवासार्थं प्रकृत्या मूलभूतया॥

कैलासादधिको लोकः वैकुण्ठादपि चोत्तमः।
गोलोकादपि सर्वस्मात् सर्वलोकाधिकः स्मृतः॥

न तत्समं त्रिलोक्यां तु सुन्दरं विद्यते क्वचित्।
छत्रीभूतं त्रिजगतः भवसन्तापनाशकम्॥

छायाभूतं तदेवास्ति ब्रह्माण्डानां तु सत्तम।
मणिद्वीपस्य परितः वर्तते च सुधोदधिः॥

ப்ரம்ஹலோகாதூர்த்வபாகே ஸர்வலோகோஸ்தி யः ச்ருதः।
மணித்வீபः ஸ ஏவாஸ்தி யத்ர தேவீ விராஜதே॥

ஸர்வஸ்மாத் அதிகோ யஸ்மாத் ஸர்வலோகः ததः ஸ்ம்ருதः।
புரா பராம்பயைவாயம் கல்பிதோ மனஸேச்சயா॥
ஸர்வாதௌ நிஜவாஸார்த்தம் ப்ரக்ருத்யா மூலபூதயா॥

கைலாஸாததிகோ லோகः வைகுண்டதபி சோத்தமः।
கோலோகாதபி ஸர்வஸ்மாத் ஸர்வலோகாதிகः ஸ்ம்ருதः॥

ந தத்ஸமம் த்ரிலோக்யாம் து ஸுந்தரம் வித்யதே க்வசித்।
சத்ரீபூதம் த்ரிஜகதः பவஸந்தாபநாசகம்॥

சாயாபூதம் ததேவாஸ்தி ப்ரம்ஹாண்டானாம் து ஸத்தம।
மணித்வீபஸ்ய பரிதः வர்த்ததே ச ஸுதோததிः॥

என்று இதன் பெருமையை தேவீ பாகவதம் வர்ணிக்கின்றது.

## அம்ருதக் கடல்

அங்கு வீசும் காற்றால் அக் கடலிலினின்றும் அலைகள் அநேகம் எழும். மீன்களும் சங்குகளும் அதில் கணக்கற்றிருக்கும். குளிர்ந்த காற்று வீசும். அதன் கரைகள் எங்கும் ரத்னங்கள் போன்ற மணல் பரந்து கிடக்கும். அடர்ந்த உன்னதமான மரங்களும் நிறைந்திருக்கும்.

## முதல் பிராகாரம் (இரும்பு)

இந்த மணித்வீபத்தில் பதினெட்டு மதில் சுற்றுகள் (பிராகாரங்கள்) இருக்கின்றன. அவை முறையே இரும்பு, வெண்கலம், செம்பு, ஈயம், பித்தளை, பஞ்சலோஹம், வெள்ளி, செம்பொன், புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வைரம், வைடூர்யம், நீலம், முத்து, மரகதம், பவளம், நவரத்னங்கள் இவற்றால் அமைக்கப்பட்டனவாகும்.

அவற்றுள் இரும்பால் அமைக்கப் பெற்ற பிராகாரம் நான்கு வாயில்களைக் கொண்டது. ஏழு யோஜனை உயரம் கொண்டது. இதில் வல்லவர்களாகிய பல காவலர்கள் காத்து நிற்பர். புவனேச்வரீயை தர்சனம் செய்ய வரும் பிரம்மாதி தேவர்களின் தொண்டர்களும் அவர் தம் வாஹனங்களும் இங்கு நிறைந்திருக்கும். ஆங்காங்கே நல்ல தடாகங்களும் உண்டு. இவ்வாறு தோற்றமளிக்கும் முதல் பிராகாரம்.

## இரண்டாம் பிராகாரம் (வெண்கலம்)

இதன் பின் வெண்கலத்தினால் ஆன மதில் இருக்கின்றது. அது வானளாவி நிற்கும் கோபுர வாயில்களுடன் விளங்கும். அதனுள் எப்போதும் பழம், புஷ்பம், தளிர், நறுமணம் இவைகளுடன் கூடிய பல்வேறு உலகங்களிலுள்ள எல்லா வ்ருக்ஷங்களும் இருக்கும். வனங்கள், உபவனங்கள், பல ரஸங்களைப் பெருக்கும் நதிகள். இவை அழகு செய்யும். மயில்களும் குயில்களும் குதூஹலத்துடன் கூவும். கிளி, ஹம்ஸம், புறா முதலியவற்றின் சிறகடிப்பால் எழும் காற்று அங்குள்ள மரங்களை அசைக்கும்.

## மூன்றாம் பிராகாரம் (செம்பு)

சதுரமாய் ஏழு யோஜனை உயரம் கொண்டதாய் செவ்விய செம்பினால் அமைக்கப் பெற்ற மூன்றாம் பிராகாரத்திற்கும் பிந்திய ஈயப் பிராகாரத்திற்கும் இடையில் கல்பவாடிகை (தோட்டம்) இருக்கின்றது. பொன்னிறம் கொண்ட புஷ்பங்களும் இலைகளும் நிறைந்த கற்பகத் தருக்கள் இதில் அடர்ந்திருக்கும். அத் தருக்களின் நறுமணம் பத்து யோஜனை தூரம் மணக்கும். இங்கு "மதுஸ்ரீ, மாதவஸ்ரீ" என்ற இரண்டு மனைவியருடன் பூமலர் அணி கொண்டு பூக்குடை தரித்து மலர்களினால் ஆன ஆஸனத்தில் அமர்ந்திருப்பான் வஸந்தன் (ருது) இந்த பிராகாரத்தின் அதிபதி அவன். மங்கையர் சூழ கந்தர்வர் இங்கு இசை மணமும் பெருக்குவர்.



## நான்காம் பிராகாரம் (ஈயம்)

ஏழு யோஜனை உயரம் கொண்டதும் ஸந்தான வாடிகையுடன் விளங்குவதுமாகிய ஈயத்தால் ஆன இம்மதில் சுற்றில் அநேக வ்ருக்ஷங்கள் உண்டு. அவை அமிர்தம் போல் இனிக்கும் பழங்களை நல்கும். இங்கு "சுகஸ்ரீ, சுசிஸ்ரீ" என்ற இரு மனைவியருடன் க்ரீஷ்மர்து அமர்ந்திருப்பான். பல ஸித்தர்களும் பல தேவர்களும் மலர் மாலைகளுடனும் சந்தனப் பூச்சுடனும் கூடிய பாவையர் பலரும் அங்கே நிறைந்திருப்பர்.

## ஐந்தாம் பிராகாரம் (பித்தளை)

இது பித்தளையினால் அமைந்தது. ஏழு யோஜனை உயரம் உடையது. ஹரிசந்தனத் தருக்கள் இங்கே அடர்ந்திருக்கும். வர்ஷத்து இதன் நாயகன் அதனால் இங்கு நிறைந்த மழை பொழியும். நபஸ்ரீ, நபஸ்யஸ்ரீ, ஸ்வரஸ்யா, ரஸ்யமாலினீ, அம்பாதுளா, நிரத்னீ, அப்ரமந்திகா, மேகயந்திகா, வர்ஷயந்தீ, சிபுணிகா, வாரிதாரா என்ற பன்னிருவர் இவன் மனைவியவராவர். பசும்புல் படர்ந்த அகலிடம். நதிகளும் நதங்களும் இங்கு ஏராளம். தேவீ ப்ரீதிக்காக கிணறு, குளம் இவை அமைத்தவர்களும் தேவரும் சித்தரும் தேவிக்குத் தொண்டு செய்தோரும் இங்கு மனைவியருடன் மகிழ்ந்திருப்பர்.

## ஆறாவது பிராகாரம் (பஞ்சலோஹம்)

இதுவும் ஏழு யோஜனை உயரம் கொண்ட மதில் சுவர்களுடன் கூடியது. இங்கு மந்தார வாடிகை மகிழ்ச்சி அளிக்கும். "இஷலக்ஷ்மி, ஊர்ஜலக்ஷ்மி" என்ற இரு மனைவியருடன் கூடிய சரத் ருது இதன்

தலைவன். பல பூங்கொடிகளும் இங்கே நிறைந்திருக்கும். பரிவாரத்துடன் மங்கையர் சூழ இங்கே சித்தர் பலர் தங்கியிருப்பர்.

## ஏழாவது பிராகாரம் (வெள்ளி)

வெள்ளியால் அமைந்தது ஏழாவது மதிற் சுற்று. இதில் பாரிஜாதாடவீ (காடு) இருக்கின்றது. இப் புஷ்பங்களின் நறுமணம் பத்து யோஜனை தூரம் கமழும். தேவீ ப்ரீதிக்காக வ்ரதம் அனுஷ்டித்தவர் இப் புஷ்பங்களைத் தரித்து மகிழ்வர். "ஸஹஸ்ரீ, ஸஹஸ்யஸ்ரீ" என்ற இரு மனைவியருடன் இங்கு ஹேமந்த ருது வஸிக்கின்றான். ஸித்தர்களும் தேவீ ப்ரீதிக்காக வ்ரதம் அனுஷ்டித்தவர்களும் இங்கு குடி கொண்டிருப்பார்.

## எட்டாவது பிராகாரம் (ஸுவர்ணம்)

இது செம்பொன்னால் நிர்மாணிக்கப்பட்டதாகும். இதுவும் ஏழு யோஜனை உயரம் உடையது. இங்கு கதம்பவாடி இருக்கின்றது. "தபஸ்ரீ, தபஸ்யஸ்ரீ" என்ற இரு மனைவியருடன் சிசிரருது வாஸம் செய்கிறான். புவனேச்வரீ தேவியின் ப்ரீதிக்காகத் தானம் செய்தவர் மங்கையருடனும் பரிவாரத்துடனும் இங்கு மகிழ்வுடன் இருப்பர்.

## ஒன்பதாவது பிராகாரம் (புஷ்பராகம்)

புஷ்பராகக் கற்களால் அமைக்கப்பட்ட இம் மதிற்சுற்று ஏழு யோஜனை உயரம் கொண்டது. குங்குமம் போன்ற சிவந்த நிறமுடையது இங்குள்ள பூமி, வனங்கள், தருக்கள், பக்ஷிகள், மண்டபங்கள், தூண்கள், ஓடைகள், தாமரைப் பூக்கள் எல்லாமே புஷ்பராகம் போன்று சிவந்ததாக இருக்கும். ஒவ்வொரு பிரம்மாண்டங்களிலும் உள்ள திக்பதிகளுக்கும் மூல காரணமான (ஸமஷ்டி) திக்பதிகள் இங்கு வஸிக்கின்றனர்.

1. கிழக்கில் பெருமை பொருந்திய அமராவதியில் தேவ ஸேனை புடை சூழ இந்திராணியுடன் ஐராவதத்தின் மீது அமர்ந்து வஜ்ரபாணியாய் இந்திரன் காட்சி கொடுக்கின்றான்.
2. தென்கிழக்கில் தன் பட்டனத்தின் தன் வாஹனம் தன் பரிவாரம் சூழ ஸ்வாஹா, ஸ்வதா என்ற இரு மனைவியருடனும் அக்னி பகவான் அமர்ந்திருக்கின்றார்.
3. தெற்குத் திக்கில் யம பட்டணம் இருக்கின்றது. இங்கு தன் சக்தியுடனும் சித்ரகுப்தன் முதலிய பரிவாரங்களுடனும் சூர்ய புத்திரனாகிய யமன் தண்டம் தரித்தவனாய் அமர்ந்திருக்கின்றான்.
4. தென்மேற்கில் அரக்கர்களுடனும் தன் சக்தி பரிவாரங்களுடனும் கத்தி ஏந்திய கரத்தினனாய் நிருருதி வீற்றிருக்கிறான்.
5. மேற்கில் மீன் மீது அமர்ந்தவனாய் பாசதாரியாய் தன் மனைவி, பரிவாரங்களுடன் வருணன் வஸிக்கிறான்.
6. வடமேற்கில் பிராணாயாமம் செய்யும் யோகிகள் புடைசூழ, தன் சக்தி, பரிவாரங்களுடன் மான் மீது அமர்ந்து வாயு பகவான் காட்சி கொடுக்கிறார்.
7. வடக்கில் விருத்தி, ருத்தி முதலிய சக்திகளுடனும் ஒன்பது நிதிகளுடனும், மணிபத்ரன், பூர்ணபத்ரன், மணிமான், மணிகந்தரன், மணிபூஷன், மணிஸ்ரக்வீ, மணிகார்முகன் முதலிய ஸேனாபதிகளுடனும் தொந்தியுடைய குபேரன் அமர்ந்திருக்கின்றான்.
8. வடகிழக்கில் ருத்ரலோகம் இருக்கின்றது. சரக்கூடும் வில்லும் தாங்கி, இடையில் புலித் தோலும் தோளில் யானைத் தோலும் முண்டமாலையும் அணிந்து டமருகத்தை ஒலிக்கச் செய்து கொண்டு ஈசானன் இங்கே வீற்றிருக்கின்றான். வீரபத்திரரும், டாமர்யாதி கணங்களும் பத்ரகாளி முதலிய மாத்ருகணங்களும் இங்கு தங்கியிருக்கின்றனர். மூன்று கண்களும் பல கைகளும் பல கால்களும் கொண்டு ஆகாயத்திலும் பூமியிலும் திரியும் ருத்ராத்யாயத்தினால் வர்ணிக்கப்பட்ட பல ருத்திரர்கள் சூலபாணிகளாய் இங்கு குழுமியிருப்பர்.

| | பட்டிணம் | மனைவி |
|---|---|---|
| 1. இந்திரன் | அமராவதி | இந்திராணீ (சசீ) |
| 2. அக்னி | தேஜோவதீ | ஸ்வாஹா, ஸ்வதா |
| 3. யமன் | ஸம்யமினீ | இளா |
| 4. நிருருதி | கிருஷ்ணாங்கனா | காளிகா |
| 5. வருணன் | ச்ரத்தாவதீ | வருணானீ (பத்மினீ) |
| 6. வாயு | கந்தவதீ | |
| 7. குபேரன் | அலகாபுரீ | விருத்தி, ருத்தி |
| 8. ஈசானன் | யசோவதீ | ருத்ராணீ |

## பத்தாவது. பிராகாரம் (பத்மராகம்)

பத்மராகக் கற்களால் அமைக்கப் பெற்ற இம் மதிற் சுற்றும் சிவந்திருக்கும். இது கோபுரங்களுடன் கூடியதாய் பத்து யோஜனை உயரம் இருக்கும். தன் வாஹனம், ஆயுதம், பரிவாரம் இவைகளுடன் இங்கு 64 சக்திகள் அமர்ந்திருப்பர்.

1. பிங்களாக்ஷி
2. விசாலாக்ஷி
3. ஸம்ருத்தி
4. சிரத்தா
5. ஸ்வாஹா
6. ஸ்வதா
7. மாயா
8. தேவகி
9. ஸம்க்ஞா
10. வஸுந்தரா
11. த்ரிலோகதாத்ரீ
12. ஸாவித்ரீ
13. காயத்ரீ
14. த்ரீதசேச்வரீ
15. ஸுரூபா
16. பஹுரூபா
17. ஸ்கந்தமாதா
18. அச்சுதப்ரியா
19. விமலா
20. அமலா
21. அருணீ
22. ஆருணீ
23. ப்ரக்ருதி
24. விக்ருதி
25. ஸிருஷ்டி
26. ஸ்திதி
27. ஸம்ஹ்ருதி
28. ஸந்த்யா
29. மாதா
30. ஸதீ
31. ஹம்ஸீ
32. மர்த்திகா
33. வஜ்ரிகா
34. தேவமாதா
35. பகவதீ
36. தேவகி
37. கமலாஸனா
38. த்ரிமுகி
39. ஸப்தமுகி
40. ஸுராஸுரவிமர்தினீ
41. லம்போஷ்டீ
42. ஊர்த்துவகேசீ
43. பஹுசிர்ஷா
44. வ்ருகோதரீ
45. ரதரேகா
46. சசிரேகா
47. பரா
48. ககனவேகா
49. பவனவேகா
50. புவனபாலா
51. மதனாதுரா
52. அனங்கா
53. அனங்கமதனா
54. அனங்கமேகலா
55. அனங்ககுஸுமா
56. விச்வரூபா
57. ஸுராதிகா
58. க்ஷயம்கரீ
59. அக்ஷோப்யா
60. ஸத்யவாதினீ
61. பகுரூபா
62. சுசிவ்ரதா
63. உதாரா
64. வாகீசீ

என்பன இவர் பெயர்களாகும்.



पिङ्गलाक्षी विशालाक्षी समृद्धिर्वृद्धिरेव च।
श्रद्धा स्वाहा स्वधाभिख्या माया संज्ञा वसुन्धरा॥

तिलोकधात्री सावित्री गायत्री त्रिदशेश्वरी।
सुरूपा बहुरूपा च स्कन्दमाताऽच्युतप्रिया॥

विमला चामला तद्वत् अरुणी पुनरारुणी।
प्रकृतिर्विकृतिस्सृष्टिः स्थितिः संहृतिरेव च॥

सं या माता सती हंसी मर्दिका वर्जिका परा।
देवमाता भगवती देवकी कमलासना॥

त्रिमुखी सप्तमुख्यन्या सुरासुरविमर्दिनी।
लम्बोष्ठी चो र्ध्वकेशी च बहुशीर्षा वृकोदरी॥

रथरेखाह्वया पश्चात् शशिरेखा तथापरा।
गगनवेगा पवनवेगा विख्याता च ततःपरम्॥

अग्रे भुवनपाला स्यात् तत्पश्चान्मदनातुरा।
अनङ्गानङ्ग मथना तथैवानङ्गमेखला॥

अनङ्गकुसुमा पश्चात् विश्वरूपा सुराधिका।
क्षयङ्करी भवेच्छक्तिः अक्षोभ्या च ततःपरम्॥

सत्यवादिन्यथ प्रोक्ता बहुरूपा शुचिव्रता।
उदाराख्या च वागीशी चतुष्षष्टिमिताः स्मृताः॥

இவர் ஜ்வலிக்கும் நாக்கும் முகமும் கொண்டவர். நெருப்பைக் கக்குவார். ஜலத்தை உறிஞ்சவும், நெருப்பை அழிக்கவும், காற்றை அடக்கவும், உலகத்தை அழிக்கவும சக்தி உடையவர். வில், அம்பு ஏந்தியவராய் யுத்தத்தில் நாட்டம் உடையவர். ஒவ்வொருவரும் லக்ஷம்

பிரம்மாண்டங்களை அழிக்கும் திறனுடையவர். இம் மதிற் சுற்றுக்குள்ளே பராசக்தியின் யுத்தத் தளவாடங்கள் நிறைந்திருக்கின்றன. ரதங்கள், யானைகள், குதிரைகள், ஆயுதங்கள், படைகள் இவைகளுக்கு எல்லையே இல்லை.

## பதினோறாம் பிராகாரம் (கோமேதகம்)

இது எங்கும் கோமேதக மயமாய் இருக்கும். இங்கு 32 சக்திகள் வீற்றிருப்பர்.

1. வித்யா
2. ஹ்ரீம்
3. புஷ்டி
4. ப்ரஞ்ஞா
5. ஸிநீவாலி
6. குஹூ:
7. ருத்ரா
8. வீர்யா
9. ப்ரபா
10. நந்தா
11. போஷிணீ
12. ருத்திதா
13. காளராத்ரீ
14. மஹாராத்ரீ
15. பத்ரகாளீ
16. கபர்தினீ
17. விக்ருதி:
18. தண்டினீ
19. முண்டினீ
20. இந்துகண்டா
21. சிகண்டினீ
22. நிசும்ப சும்பமதனீ
23. மஹிஷாசுரமர்தினி
24. இந்த்ராணீ
25. ருத்ராணீ
26. சங்கரார்தசரீரிணீ
27. நாரீ
28. நாராயணீ
29. த்ரிசூலினீ
30. பாலினீ
31. அம்பிகா
32. ஹ்லாதினீ

என்பன இவர் பெயர்களாகும். இவர்கள் பயங்கர முகம் உடையவர்கள். சக்ரம் தாங்கும் கையினர். ஒவ்வொருவருக்கும் 10 அக்ஷௌஹிணீ சேனை உண்டு. ஒவ்வொருவரும் லக்ஷம் பிரம்மாண்டங்களை அழிக்கும் சக்தி படைத்தவர்கள். இங்குள்ள ரதம் முதலியவை கணக்கில் அடங்காதவை. இங்கு தேவியின் யுத்தத் தளவாடங்கள் நிறைந்திருக்கும். இவர்கள் யுத்தத்தில் தோல்வி காணாதவர்கள்.



विद्या ह्री पुष्टयः प्रज्ञा सिनीवाली कुहूस्तथा।
रुद्रा वीर्या प्रभा नन्दा पोषिणी ऋद्धिदा शुभा॥

कालरात्रिः महारात्रिः भद्रकाली कपर्दिनी।
विकृति र्दण्डि मण्डिन्यौ सेन्दुखण्डा शिखण्डिनी॥

निशुम्भशुम्भमथनी महिषासुरमर्दिनी।
इन्द्राणी चैव रुद्राणी शङ्करार्धशरीरिणी॥

नारी नारायणी चैव त्रिशूलिन्यपि पालिनी।
अम्बिका ह्लादिनी पश्चात् इत्येवं शक्तयः स्मृताः॥

## பன்னிரண்டாம் பிராகாரம் (வஜ்ரம்)

பத்து யோஜனை உயரம் கொண்டது. மதிற் சுற்றுச் சுவர்கள் வைரக் கற்களால் ஆனவை. இங்குள்ள பவனங்கள் அனைத்தும் வைரத்தால் ஆனவை. இங்கு ஸ்ரீபுவனேச்வரீ தேவிக்குப் பணிபுரியும் எட்டு சக்திகள் வசிக்கின்றனர். இவர் ஒவ்வொருவருக்கும் பணிபுரிய லக்ஷம் பணிப் பெயண்கள் உண்டு. இந்த எண்மரும் சாமரம் வீசுதல், சுவைமிக்க பானம் அளித்தல், தாம்பூலம் அளித்தல், குடை ஏந்துதல், வஸ்திரம், புஷ்பம், கண்ணாடி, குங்குமப் பூச்சு முதலிய உதவுதல், கால் பிடிப்பு முதலிய ஏவல் புரிவர். தேவியின் திருவருளுக்குப் பாத்திரமான இவர் உலகங்களைத் துச்சமென மதிப்பர்.

1. அனங்கரூபா
2. அனங்கமதனா
3. மதனாதுரா
4. புவனவேகா
5. புவனபாலிகா
6. ஸர்வசிசிரா
7. அனங்கவேதனா
8. அனங்கமேகலா

என்ற பெயர்களை உடையவர்கள். மின்னல் போன்ற ஒளியும், மின்னல் கொடி போன்ற உடலும் உடையவர்கள். பிராகாரத்திற்கு வெளியில் எண்மருக்கும் பவனங்கள் உண்டு. இவர் பிரம்பு தாங்கும் கையுடன் திகழ்வர்.

एता देव्यः स्मृता दूत्यः शृङ्गारमदगर्विताः।
तासां नामानि वक्ष्यामः श्रृणु मे नृपसत्तम॥

अनङ्गरूपा प्रथमा अनङ्गमदनाऽपरा।
तृतीया तु ततः प्रोक्ता सुन्दरी मदनातुरा॥

ततो भुवनवेगा स्यात् तथा भुवनपालिका।
स्यात्सर्वशिशिराऽनङ्ग वेदना ऽनङ्गमेखला॥
विद्युल्लतासमानाङ्ग्यः क्वणत्काञ्चीगुणान्विताः॥

## பதின்மூன்றாம் பிராகாரம் (வைடூர்யம்)

வைடூர்யம் நிறைந்த திருமதிற் சுற்று பத்து யோஜனை உயரம் கொண்டது. வீடுகள், வீதிகள், வழிகள் யாவுமே இங்கு வைடூர்யம். இங்கு எட்டுத் திக்கிலும் ஒவ்வொரு பிரம்மாண்டங்களிலும் உள்ள மாத்ரு கணங்களின் ஸமஷ்டி ரூபமான ப்ராம்ஹீ, மாஹேச்வரி, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹி, இந்திராணீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மி என்ற எட்டு மாத்ரு சக்திகள் வசிக்கின்றனர். இச் சக்திகள் பிரும்மா, ருத்ரன் முதலிய தெய்வங்களின் உருவம் போன்ற உருவத்தினர். உலகங்களுக்கு எல்லாம் நல் வாழ்வு அளிப்பவர். இத்திரு மதிற் சுற்றின் நான்கு வாயில்களிலும் இவர்களது வாஹனங்கள் இருக்கின்றன. ஹம்ஸம், ஸிம்ஹம், கருடன், மயில், விருஷபம் இவை பூட்டப்பட்ட ரதங்களும் யானைகளும் பலவிதமான விமானங்களும் இங்கு நிறைந்திருக்கின்றன.

## பதினான்காம் பிராகாரம் (நீலம்)

இது இந்த்ர நீலக் கற்களால் அமைக்கப் பெற்றது. 10 யோஜனை உயரம் உடையது. இதன் நடுப்பகுதி 16 தளங்கள் கொண்ட தாமரைப் பூப் போன்ற வடிவத்தில் அமைக்கப் பெற்றிருக்கின்றது. இதன் ஒவ்வொரு தளத்திலும்,



| | |
|---|---|
| 1. கராளீ | 9. ச்ருதி |
| 2. விகராளீ | 10. ஸம்ருத்தி |
| 3. உமா | 11. த்ருதி |
| 4. ஸரஸ்வதி | 12. சிரத்தா |
| 5. ஸ்ரீ: | 13. மேதா |
| 6. துர்கா | 14. மதி: |
| 7. உஷா | 15. காந்தி: |
| 8. லக்ஷ்மீ | 16. ஆர்யா: |

என்ற 16 சக்திகள் அமர்ந்திருப்பர்.

ஸ்ரீ புவனேச்வரீ பூஜா யந்த்ரத்தில் உள்ள பதினாறு தளங்களிலும் இவர் பூஜைக்குரியவர் ஆவார்.

करालि विकराली च तयोमा च सरस्वती।
श्रीर्दुर्गोषा तथा लक्ष्मीः श्रुतिश्चैव स्मृति धृतिः॥

श्रद्धा मेधा मतिः कान्तिः आर्या षोडशशक्तयः।
सेनान्यः सकला एताः श्रीदेव्याः जगदीशितुः॥

இவர் மேகம் போன்று கருத்த மேனியர். கேடயம், கத்தி தாங்கிய கரத்தினர். இவர் அனைவரும், புவனேச்வரீ தேவியின் ஸேனாதிபதிகள் ஆவர். ஒவ்வொரு பிரம்மாண்டங்களிலும் உள்ள இந்தப் பதினாறு சக்திகளுக்கும் இவரே மூலமானவர். பல்வேறு சக்தி படைத்தவர். இவர் தம் பெருமை சொல்லுதற்கு அரியதாகும்.

## பதினைந்தாம் பிராகாரம் (முத்து)

முத்துக்களால் ஆன இந்தப் பிராகாரம் 12 யோஜனை உயரம் உடையது. இதன் நடுப்பகுதி எட்டு தாமரைத் தளங்கள் கொண்ட தாமரைப் பூப் போல அமைந்திருக்கும். இதில் புவனேச்வரீ போன்ற உருவத்தினராய் தேவியின் ஆயுதங்களான பாசாங்குசங்களையும் வராபயங்களையும் தாங்கும் கரத்தினராய் புவனேச்வரிக்கு ஸமமான வஸ்த்ராதிகளைத் தரிப்பவராய், பேரழகிகளாய்த் திகழ்வர்.

1. அனங்ககுஸுமா
2. அனங்ககுஸுமாதுரா
3. அனங்கமதனா
4. அனங்கமதனாதுரா
5. புவனபாலா
6. ககனவேகா
7. சசிரேகா
8. ககனரேகா

என்ற பெயர் கொண்ட இவ்வெண்மரும் புவனேச்வரீ தேவியின் மந்த்ரிணீக்கள் ஆவர். இவர்கள் தேவியின் கார்யத்தில் ஈடுபட்டவராய் உலகங்களின் செய்தியை புவனேச்வரிக்கு உரைப்பர். குங்குமம் போன்ற சிவந்த மேனியர். ஸ்ரீ புவனேச்வரீ பூஜா யந்த்ரத்தில் உள்ள எட்டுத் தள பத்மத்தில் இந்த . எட்டு சக்திகளும் (மந்த்ரிண்யம்பாக்கள்). பூஜைக்குரியவர் ஆவர்.

## பதினாறாவது பிராகாரம் (மரகதம்)

மரகத மயமான இம் மதிற் சுற்று பத்து யோஜனை உயரம் கொண்டது. இதன் மத்தியப் பகுதி ஆறு கோணங்கள் உடையதாய் அமைந்திருக்கும்.

1. இங்கே கிழக்கு கோணத்தில் காயத்ரீ தேவியுடன் கூட சதுர்முக பிரம்ஹா வீற்றிருப்பார். கமண்டலம், ருத்ராக்ஷ மாலை, அபயம், தண்டம் இவைகளைத் தரித்திருப்பார். மேற் கூறியவைகளையே தரித்திருப்பாள் காயத்ரீ தேவியும். வேதங்கள், சாஸ்திரங்கள், ஸ்ம்ருதிகள், புராணங்கள் இவை அனைத்தும் உருவத்துடன் விளங்கும். பிரம்மதேவனின் பல உருவங்களும் காயத்ரீயின் பல உருவங்களும் வ்யாஹ்ருதியின் பல உருவங்களும் அங்கே இருக்கும்.
2. வடகிழக்கில் சங்கு, சக்கரம், கதை, தாமரை மலர் இவை தரித்திருக்கும் ஸாவித்ரீயும், மஹா விஷ்ணுவும் வீற்றிருப்பார். மத்ஸ்யம், கூர்மம் முதலிய விஷ்ணுவின் திருவவதார மூர்த்திகளும், ஸாவித்ரீ தேவியின் பல மூர்த்திகளும் அங்கே இருக்கும்.
3. வாயு கோணத்தில் பரசு, ருத்ராக்ஷ மாலை, அபயம், வரம் இவைகளுடன் மஹா ருத்ரரும், ஸரஸ்வதியும் அமர்ந்திருப்பர். தக்ஷிணா மூர்த்தி முதலிய ருத்ரரின் பல்வேறு மூர்த்திகளும் பார்வதீ தேவியின் பல அவதார மூர்த்திகளும் ஆங்கே காணப்படும். அறுபத்து நான்கு ஆகமங்களும் அங்கு உருவத்துடன் விளங்கும்.



4. அக்னி கோணத்தில் (தென்மேற்கில்) ரத்ன கும்பத்தையும், மணிகரண்டத்தையும் இரண்டு கைகளில் வைத்துக் கொண்டு குபேரனும் மஹாலக்ஷ்மியும் இருப்பர்.
5. வருண திக்கில் (மேற்கில்) பாசம், அங்குசம், வில், அம்பு இவைகளுடன் கூடிய கரத்தினனாய் ரதி தேவியுடன் மன்மதன் அமர்ந்திருப்பான்.
6. ஈசான கோணத்தில் (வடக்கில்) பாசாங்குசதரராய் புஷ்டி என்ற சக்தியுடன் மஹாகணபதி அமர்ந்திருப்பார், விநாயகரின் பல மூர்த்திகளும் ஆங்கிருக்கும்.

புவனேச்வரீ யந்த்ரத்தில் உள்ள ஷட்கோணங்களில் பூஜைக்குரியவர் இத்தெய்வங்கள்.

## பதினேழாவது பிராகாரம் (பவழம்)

நூறு யோஜனை உயரம் கொண்டது இந்த பிராகாரம். இங்கு ஹ்ருல்லேகா, ககனா, ரக்தா, காராளிகா, மஹோச்சுஷ்மா என்ற ஐம்பெரும் பூதங்களின் தெய்வங்களாகிய ஐவரும் இருப்பர். இந்த ஐவரும் அந்தப் பூதங்களின் நிறம் கொண்டு இருப்பர். புவனேச்வரிக்கு உரித்தான வேஷமும் எல்லையில்லா ஆபரணங்களும் தரித்திருப்பர். பாசம், அங்குசம், வரம், அபயம் இவற்றைத் தரித்திருப்பர்.

## பதினெட்டாவது பிராகாரம் (நவமணீமயம்)

நவமணிமயமானது இந்த மதிற்சுற்று. இங்கு அனைத்தும் நவரத்னமாய் விளங்கும்.

இங்கு பூர்வாம்னாய தேவதா, பச்சிமாம்னாய தேவதா, தக்ஷிணாம்னாய தேவதா, உத்தாரம்னாய தேவதா, ஊர்த்வாம்னாய தேவதா என்ற ஆகம ப்ரஸித்தமான ஆம்னாய தேவதைகள் கோயில் கொண்டிருப்பர்.

## பல புவனேச்வரிகள்

இங்கு ஸ்ரீ புவனேச்வரி தேவியினுடைய 1. பாசாங்குச புவனேச்வரி, 2. பைரவி, 3. கபால புவனேச்வரீ, 4. அங்குச புவனேச்வரீ, 5. ப்ரஸாத புவனேச்வரீ, 6. ஸ்ரீக்ரோத புவனேச்வரீ, 7. த்ரிபுரா, 8. அச்வாரூடா, 9. நித்யக்லின்னா, 10. அன்னபூர்ணா, 11. த்வரிதா முதலிய இந்த மூர்த்திகள் புவனேச்வரீ ஸம்ஹிதையில் உள்ளதாக தேவீ பாகவத "திலக" உரைகாரர் கூறுவர். புவனேச்வரீயின் அவதாரங்கள் இங்கே இருக்கின்றன.

மஹா வித்தைகளான காளீ, தாரா, மஹா வித்யா, ஷோடசி முதலிய பத்து வித்தைகளும் அவற்றின் மூர்த்திகளும் உள்ளன. ஏழு கோடி மஹா மந்த்ரங்களின் தேவதைகளும் ஆங்கே அமர்ந்திருப்பர்.

## நான்கு மண்டபங்கள்

இங்குள்ள வஸ்துக்கள் அனைத்தும் சிந்தாமணிக் கற்களால் அமைந்தவை. சூரியன், சந்திரன், மின்னல் இவை போன்று பிரகாசிக்கின்ற கற்களால் ஆக்கப்பட்ட ஆயிரக் கணக்கான தூண்கள் இம் மண்டபங்களைத் தாங்கி நிற்கும்.

இங்குதான் புவனேச்வரீ தேவியின் இருப்பிடம் விளங்குகின்றது. 16 தளம், 8 தளம், ஷட்கோணம் உள்ள புவனேச்வரீ யந்த்ரத்தின் நடுப் பகுதியே பிந்துஸ்தானம் என்பர். இதுவே புவனேச்வரீ தேவியின் திருமாளிகை ஆகும்.

இங்கு 1. சிருங்கார மண்டபம், 2. முக்தி மண்டபம், 3. ஞான மண்டபம், 4. ஏகாந்த மண்டபம் என்ற நான்கு மண்டபங்கள் இருக்கின்றன. இங்கு எப்போதும் சந்தனம், அகில் முதலிய தூபங்களின் வாஸனை கமழும். இம் மண்டபங்களைச் சுற்றிலும் "மஹாபத்மாடவீ" என்ற தாமரை நிறைந்த ஓடை சூழ்ந்திருக்கும். அதனுடைய நறுமணம் எங்கும் வீசும்.



1. ச்ருங்கார மண்டபத்தில் புவனேச்வரீ ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பாள். சிறந்த தேவர் அவையில் வீற்றிருப்பர். வசினீ முதலிய சக்திகளும் தேவ லோகத்திய அரம்பையர்களும் இன்னிசை முழங்குவர். அதில் ஈடுபட்டு மகிழ்ந்திருப்பாள் அன்னை புவனேச்வரீ.

2. முக்தி மண்டபத்தில் அமர்ந்து ஸ்ரீ புவனேச்வரீ தேவீ ஒவ்வொரு பிரம்மாண்டத்திலும் உள்ள பக்தர்களுக்கும் ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்ற முக்திகளைக் கொடுத்து அருள்வாள்.

3. ஞான மண்டபத்தில் தன் பக்தர்களுக்கும் ஞானத்தை உபதேசிப்பாள்.

4. ஏகாந்த மண்டபத்தில் அமர்ந்து மந்த்ரிணீ தேவிகளுடன் ஜகன்மாதா ஸ்ரீ புவனேச்வரீ அகில உலகங்களையும் காத்து அருளுவாள்.

## சிந்தாமணி க்ருஹத்தில் ஸ்ரீ புவனேச்வரீ

சிந்தாமணி க்ருஹத்தில் ஓர் அழகிய மஞ்சம் இருக்கின்றது. ★பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹாதேவன் இந்நால்வரும் கால்களாய் அமைய ஸதாசிவன் இதன் மேலுள்ள பலகையாய்த் திகழ்வார்.

★ पञ्चभूतात्मका ह्येते पञ्चवस्थात्मका अपि।
अहं त्वव्यक्तचिद्रूपा तदतीतास्मि सर्वथा॥
ततो विष्टरतां याताः शक्तितन्त्रेषु सर्वदा॥

பூமி முதலிய பஞ்ச பூதங்களுக்கு அதிபர்கள் பிரம்மா முதலானவர்கள். தேவீ அவ்வைந்து பூதங்களுக்கும் காரணமாகிய அவ்யக்த ரூபிணீ. ஆகவே அவர்களை விட மேம்பட்டவள். அவ்வாறே பிரம்மாதியர், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, துர்ய, துர்யாதீத ரூபமான ஐந்து அவஸ்தைகளுக்கும் அதிபர் ஆவார். தேவீ துர்யாதீத அவஸ்தைக்கு மேற்பட்ட ப்ரம்ஹ ஸ்வரூபிணீ என்பது இதனால் குறிக்கப் பெறுகின்றது.

निवृत्याद्याःकलाः पंच ततो बिन्दुकलाः पुनः ।
नादः शक्तिः सदापूर्वः शिवश्चप्रकृते विंदुः ॥

निवृत्तिः सुप्रतिष्ठास्यात् विद्याशान्तिरनन्तरं ।
शान्त्यतीतेति विज्ञेयाः नाददेहसमुद्भवाः ॥

இம்மந்த்ரத்திற்கு பத்து சக்தி தத்துவங்களே படிகளாய் அமையும்.

## புவனேச்வரர்

அந்த ஸதாசிவன் மீது புவனேசர் விளங்குகின்றார். புவனேச்வரி தேவி தன் விளையாட்டிற்காகத் தன்னையே ஆணாகவும், பெண்ணாகவும் இரண்டாக ஆக்கிக் கொண்டாள். அதில் ஆணுருவம் புவனேச்வரன். அவர்தான் ஸதாசிவத்தின் மீது அமர்ந்திருப்பார். அவர் புவனேச்வரியின் அரை பாகம். கோடி மன்மதர் கூட்டம் போன்ற பேரழகு வாய்ந்தவர். ஐந்து முகங்களும் மூன்று கண்களும் உடையவர். மான், அபயம், பரசு, வரம் இவை தாங்கும் கரத்தினர். 16 வயதினராய்த் தோற்றம் அளிப்பார். கோடி சூரியர்களின் ஒளியும், கோடி சந்திரர்களின் தன்மையும், ஸ்படிகம் போன்ற வெண்மையும் அவர் மேனியில் தோன்றும்.

## புவனேச்வரீ

இந்தப் புவனேச்வரரின் இடது மடியின் மீது அமர்ந்திருப்பாள் ஸ்ரீ புவனேச்வரீ தேவி. பல ரத்னங்கள் பதித்த ஒட்டியாணம் அவள் இடையில் மின்னும். தங்கத்தால் கட்டப்பட்ட வைடூர்ய மணிகளால் ஆன தோள்வளை அவள் கைகளால் அழகு பெறும். ஸ்ரீசக்ரம் போன்று அமைந்த தோடுகள் காதுகளிலே திகழும். அவள் நெற்றி பிறைச் சந்திரனை வெல்லும். சிவந்த உதடுகள் கோவைக் கனியைப் பழிக்கும். குங்குமம், கஸ்தூரி முதலியவற்றாலான திலகம் முகத்திலே ஜ்வலிக்கும். சந்திரன், சூரியன் போன்ற சூடாமணி, உதிக்கும் சூரியன் போன்ற மூக்குத்தி, அழகிய முக்தாஹாரம், சந்தனம், கற்பூரம், குங்குமம் இவை பூசிய மார்பகம், சங்கம் போன்ற கழுத்து, மாதுளம் முத்துக்கள் போன்ற பற்கள். இவை எல்லாம் அன்னையின் அழகிய திருமேனிக்கு அழகைக் கூட்டும். சிரத்தில் அழகிய ரத்னங்களால் ஆன கிரீடம் ஜ்வலிக்கும்.



வண்டுகள் கூட்டம் போன்று மின்னும் அளகங்கள், களங்கம் அற்ற குறையாத சந்திரன் போன்ற வதனம், மாணிக்கம் பதித்த மோதிரங்கள் நிறைந்த விரல்கள், தாமரை மலர் போன்ற மூன்று கண்கள், பத்மராகம் போன்ற சிவந்த திருமேனி, அழகிய கிங்கிணிகள் ஒலிக்கும் கை வளையல்கள், முக்தாஹாரத்தில் திகழும் பதக்கங்கள், மல்லிகைப் பூவின் நறுமணம் கமழும் கபரீபாரம் (கேசம்) இவை எல்லாம் அவள் செவ்விய திருமேனியில் அழகு பெற்றிருக்கும்.

வரம், பாசம், அங்குசம், அபயம் இவைகளைத் திருக்கரங்களால் தரித்திருப்பாள். சிருங்கார வேஷத்தைத் தாங்கி நிற்கும், அன்னையின் மெல்லிய தேஹம். அழகின் உறைவிடம் அவள் உருவம். கருணையே அவள். வீணையை விஞ்சும் அவள் மதுரமான பேச்சு. கோடிக் கணக்கான சந்திர சூரியர்களின் ஒளியை வீசும் அவள் மின்னுரு.

இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி இவைகள் இவள் சந்நிதியில் உருப் பெற்றிருக்கும். லஜ்ஜா, துஷ்டி, புஷ்டி, கீர்த்தி, காந்தி, க்ஷமா, தயா, புத்தி, மேதா, ஸ்ம்ருதி, லக்ஷ்மீ இவர்கள் அனைவரும் உருவம் பெற்று இவள் பக்கத்திலேயே காத்திருப்பர்.

ஜயா, விஜயா, அஜிதா, அபராஜிதா, நித்யா, விலாஸினீ, தோக்த்ரீ, அகோரா, மங்களா, நவா என்ற பெயர்களைக் கொண்ட பீட சக்திகள் இவள் பக்கத்திலிருந்து துதிப்பர். சங்க நிதியும், பத்ம நிதியும் அவளுடன் இருக்கும். அவைகளிலிருந்து ரத்னங்களையும், சுவர்ணத்தையும், ஏழு தாதுக்களையும் பெருக்கும் நதிகள் அமிர்தக் கடலிடை சென்று சேரும்.

இவளுடைய உறவினால்தான் எல்லோருக்கும் இறைவனாய் இருக்கும் பெருமை மஹேச்வரருக்குக் கிடைத்தது.

## சிந்தாமணி க்ருஹம்

இந்தச் சிந்தாமணி க்ருஹம் ஆகாயத்தில் வேறு பிடிப்பு இல்லாது பிரகாசிக்கின்றது. அது ஆயிரம் யோசனை அகலம் கொண்டது. ஸ்ருஷ்டி காலத்தில் அது விரிவடையும். பிரளய காலத்தில் சுருங்கும். ஒவ்வொரு உலகங்களிலும் உள்ள தேவீ உபாஸகர்களான, தேவர், நாகர், மனிதர், மற்றவர் இங்கு வந்து சேருவர். சாக்த க்ஷேத்திரங்களில் பிராணனை விட்டவர், தேவீயின் அர்ச்சனையில் ஈடுபட்டவர் அனைவரும் இங்கு

வருவர். தேன், தயிர், அமிர்தம், திராக்ஷா ரஸம், மாம்பழ ரஸம், கருப்பஞ்சார் இவைகளைப் பெருக்கும் நதிகள் ஆயிரக் கணக்கில் ஓடும். இங்குள்ள தருக்கள் இஷ்டமானவற்றை அளிக்கும். கிணறுகள் அருந்துவதற்குப் பிடித்தமான பானங்களை நல்கும்.

ரோகம், கிழத் தன்மை, கவலை, பொறாமை, காமம், க்ரோதம் இவை போன்ற கேடுகள் இங்கே கிடையாது. ஆயிரம் சூரியர்களின் ஒளி பொருந்தியவர்களாய் நித்ய யுவர்களாய் இங்குள்ளவர் மனைவியருடன் புவனேச்வரீ மாதாவை உபாஸித்துக் கொண்டிருக்கின்றனர்.

இங்குப் பூர்ணமான ஐச்வர்யம், சிருங்காரம், ஸர்வஞ்ஞதை, தேஜஸ், பராக்ரமம், தயை இவை எல்லாம் நிறைந்திருக்கின்றன. அரசனின் ஆனந்தத்திலிருந்து பிரம்மானந்தம் வரையில் உள்ள ஆனந்தம் அனைத்தும் இங்கே பூர்ணமாய் இருக்கின்றன.

## காயத்ரீயின் பொருள் புவனேச்வரீ

மூன்று வர்ணத்தவரும் கட்டாயமாக காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யா விட்டால் பாபம் நேருமென்றும் அதற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே தினந்தோறும் மூன்று வேளைகளிலும் (ஸந்த்யோபாஸனம்) காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும்.

இந்தக் காயத்ரீயினால் உபாஸிக்கப்படும் தெய்வம் சிவன் என்று சைவர்களும், விஷ்ணு என்று வைஷ்ணவர்களும், சூரியன் என்று சௌரர்களும் பலவிதமாய் அர்த்தம் கூறுகின்றனர்.

மேற்கூறிய எம் மதத்தைச் சார்ந்தவராயினும் காயத்ரீயை அவசியம் உபாஸிக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. ஆயினும் இந்தக் காயத்ரீயின் பொருள் பராசக்தியான ஸ்ரீ புவனேச்வரீ தேவியே என்பது வியாசாசார்யாரின் அபிப்பிராயமாகும். இது,

तस्मात् सर्वे द्विजाः शक्ताः न शैवा न च वैष्णवाः ।
आदिशक्तिमुपासन्ते गायत्रीं वेदमातरम् ॥

தஸ்மாத் ஸர்வே த்விஜாః சாக்தாః ந சைவா ந ச வைஷ்ணவாः।



ஆதிசக்திமுபாஸந்தே காயத்ரீம் வேத மாத்ரம் ॥ (தேவீ பாகவதம்)

இரு பிறப்பாளர் அனைவரும் வைஷ்ணவரும் அல்லர், சைவருமல்லர். அனைவரும் சாக்தரே (சக்தியை வழிபடுவோரே). ஏனென்றால் வேத மாதாவாகவும் ஆதிசக்தியுமாகிய காயத்ரீயை அல்லவா அனைவரும் உபாஸிக்கின்றனர்.

## ஒருமைப்பாடு

ஒவ்வொருவரும் சைவராயினும் வைணவராயினும் இவ்வாறே தாம் வழிபடும் தெய்வத்தால் மாறுபட்ட மத்ததினராயினும் காயத்ரீயை உபாஸிப்பவர் என்ற முறையில் அனைவரும் சாக்தராகி ஒற்றுமை ஏற்படுத்துகின்றனர். இது சாக்த மதத்தினின்றும் நமக்குக் கிடைக்கும் பெரும் நன்மை. சாக்தம், வழிபடும் தெய்வத்தைக் கொண்டு மாறுபட்ட கருத்து கொண்ட மக்கள் ஸமுதாயத்தை ஒற்றுமைக்கு வழியுண்டாக்கும் மாபெரும் சக்தியாய் விளங்குகின்றது. இதனால் சாக்தம் ஒற்றுமைக்கு உயர்ந்த வித்தளிக்கின்றது.

## உரைகாரர் காட்டும் பிரமாணம்

இதிலிருந்து காயத்ரீயினால் தெரிவிக்கப்படும் தெய்வம் சிவனல்ல. விஷ்ணு முதலிய தெய்வங்கள் அல்ல என்பதை திலகம் என்ற உரையின் ஆசிரியர் ஒரு பிரமாணத்தைக் கொண்டு எளிய முறையில் அழகாய் எடுத்துக் காட்டியிருக்கின்றார்.

காயத்ரீயினால் குறிக்கப்படும் தெய்வம் 'ஸ்த்ரீ' என்பதில் ஐயமில்லை என்பதை,

आयातु वरदा देवि (ஆயாது வரதா தேவி) என்ற காயத்ரீ ஆவாஹன மந்த்ரத்தில் 'தேவி' என்று கூறி ஆவாஹனம் (இருக்கச் செய்வது) செய்யப்படுவதனாலும், உபஸ்தான மந்த்ரத்தில் (அனுப்புதல்) उत्तमे शिखरे देवि (உத்தமே சிகரே தேவீ) என்று கூறப்படுவதனாலும் ஆவாஹனம் செய்யப்பட்டவளும் அனுப்பப்பட்டவளும் பெண் தெய்வமே என்பது உறுதியாகின்றது. காயத்ரீ மந்த்ரத்திற்கு முன்னும் பின்னும் ஆவாஹன, விஸர்ஜன மந்த்ரங்கள் கூறப்படுகின்றன. ஆகவே ஆவாஹனமும், விஸர்ஜனமும் காயத்ரீக்குத்தான் என்பது

தெளிவாகின்றது. ஆகவே காயத்ரீயின் பொருள், பெண் தெய்வமான புவனேச்வரீயே என்பது உரைகாரரின் அபிப்பிராயம். வியாஸாசாரியாரும் கூட,

तस्मात्सर्वात्मना राज संसेव्या परमेश्वरी ।
न विष्णूपासना नित्या न शिवोपासना तथा ।।
नित्या चोपासना शक्तेः तां विना तु पतत्यधः ।।

தஸ்மாத் ஸர்வாத்மனா ராஜன் ஸம்ஸேவ்யா பரமேச்வரீ।
ந விஷ்ணூபாஸனா நித்யா ந சிவோபாஸனா ததா ॥
நித்யாசோபாஸனா சக்தேஃ தாம் வினாது பதத்யதஃ॥

ஆகையால் விஷ்ணு, சிவோபாஸனைகள் நித்யமல்ல. சக்தி உபாஸனை நித்யம். அவ்வுபாஸனை இல்லையானால் வீணாகி விடுவான். ஆகவே எப்படியும் பரமேச்வரீயை உபாஸிக்க வேண்டும் என்பதனால் இதைத் தெளிவுபடுத்தி இருக்கிறார். அந்தச் சக்தி புவனேச்வரீயே தான் என்பதும்,

सच्चिदानन्द रूपां तां गायत्री प्रतिपादिताम् ।
नमामि ह्रीं मयीं देवीं धियो यो नः प्रचोदयात् ।।

ஸச்சிதானந்தரூபாம் தாம் காயத்ரீ ப்ரதிபாதிதாம்।
நமாமி ஹ்ரீம் மயீம் தேவீம் தியோ யாநஃ ப்ரசோதயாத் ॥

ஸத், சித், ஆனந்த ரூபமான காயத்ரீயினால் கூறப்படுகின்ற, நம் புத்தியைப் பிரேரணை செய்கின்ற, ஹ்ரீங்கார ரூபியான (புவனேச்வரீ) தேவியை வணங்குகின்றேன் என்பது, இந்தச் சுலோகத்தினால் தெரிகின்றது. இங்கு ஹ்ரீம் என்பது ஸ்ரீ புவனேச்வரீ தேவியைக் குறிக்கும்.

## மும்மூர்த்திகளுக்கு புவனேச்வரீ தர்சனம்

ஒரு பிரம்மாண்டம் சிருஷ்டிக்குத் தயாராகிறது. எங்கும் ஜல மயம். பராசக்தியின் திருவருள் துணை கொண்டு மதுகைடபர்களைக் கொன்று விஷ்ணு மகிழ்வுடன் இருக்கிறார். பிரமனுக்குப் பயம் பறந்து விட்டது.



இதன் இடையில் இவ்விருவரோடு ருத்ரனும் வந்து சேருகின்றார். ஸர்வாலங்கார பூஷிதையாய் ஆகாயத்தில் தோற்றம் அளிக்கும் பத்ரகாளியைக் கண்டு பணிந்து பரவி நிற்கின்றனர் மூவரும்.

அன்னை பராசக்தி மூவரையும் நோக்கி ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூன்று காரியங்களையும் தொடங்குங்கள். மற்றும் உங்களுக்குரிய உலகங்களையும் அமைத்துக் கொள்ளுங்கள் என்று ஆணையிட்டாள். ''எங்கும் ஜல மயமாய் இருக்கின்றது. சிருஷ்டிப்பதற்கான கருவிகள் ஏதுமில்லை? எவ்வாறு எம் காரியங்களைச் செய்வோம்'' என்று பிரமன் கேட்டார். அது கேட்டுப் புன்முறுவல் பூத்தாள் பராசக்தி. அதே ஸமயத்தில் அங்கு அழகிய விமானம் ஒன்று வந்தது. ''பயமின்றி இதில் அமருங்கள். அற்புதம் காண்பீர்'' என்று பராசக்தி கூறவே மூவரும் அதில் அமர்ந்தனர்.

பராசக்தியின் சக்தியினால் மனோவேகமாய்ச் செல்லும் விமானத்தில் அமர்ந்த மூவரின் கண்களுக்கும் ஜலம் தென்படவில்லை. அங்கு பழம் நிறைந்த மரங்கள், பூமி, மலை, வனம், ஸ்த்ரீ, புருஷன், அருவி இவற்றுடன் அழகிய நகரம் தென்பட்டது. இதைக் கண்டவுடன் யார் இதைச் சிருஷ்டித்தனர் என்று சிந்தித்தனர்.

## ஸ்வர்கம்

இதன்மேல் நந்தவனம் பாரிஜாத மரத்தினடியில் தங்கியிருக்கும் காமதேனு, நான்கு தந்தமுள்ள வெள்ளை யானை இவையெல்லாம் தென்பட்டன. இது ஸ்வர்கம் என்று மூவருக்கும் ஞாபகம் வந்தது. மந்தாரவாடியின் நடுவில் மேனகை முதலிய அரம்பையர்கள் யக்ஷர், கந்தர்வர், வித்யாதரர் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் மகிழ்ந்திருந்தனர். அங்கு இந்திராணியுடன் இந்திரன் இருந்தான். வருணன், குபேரன், யமன், சூரியன், அக்னி மற்றுமுள்ள தேவர்களையும் கண்டு வியப்பெய்தினர். விமானம் மேலே பறந்து கொண்டு இருக்க அதன்மேல் அம்பிகையும் தென்படுகிறாள்.

## பிரம்ம லோகம்

தேவர் வணங்குவதற்குரிய பிரம்மலோகம் தென்பட்டது. அங்கு பிரம்ம ஸபையில் பிரமனைக் கண்டு வியந்தனர். அங்கங்களுடன்

உருவம் கொண்ட வேதங்களையும் மற்றவற்றையும் கண்டு வியந்தனர். ருத்ரனும், விஷ்ணுவும் விமானத்தில் இருக்கும் பிரமனைக் கண்டு ''இந்தப் பிரம்மா யார்?'' என்று கேட்க நான் அறியேன் என்று பதில் கூறினார் பிரம்ம தேவன்.

## கைலாஸம்

விமானம் மேலே செல்லுகிறது. அங்கே கைலாஸம் தென்படுகின்றது. யக்ஷ கணங்கள் சூழ, கிளியும், குயிலும் கூவும் மந்தாரவாடிகை அழகு செய்ய, வீணை முதலிய வாத்யங்கள் முழங்க கைலாஸ சிகரத்தினின்றும் ருத்ரன் வெளி வந்தார். முக்கண்ணும் ஐந்து முகங்களும் பத்து கைகளும் கொண்டு புலித் தோல் ஆடையும் கரித்தோல் மேலாடையும் விளங்க வீர சிரேஷ்டர்களான கணபதியும், முருகனும் பின்தொடர மாத்ருகணம் புடைசூழ நந்தியங்கணத்தவர் ஜய விஜயீபவ என்று வாழ்த்த அவர் வந்து கொண்டிருந்தார். இதுவும் வியப்பை அளித்தது.

## வைகுண்டம்

விமானம் அங்கிருந்து மேலே செல்கின்றது. அது வைகுண்ட லோகம். விஷ்ணு அதைக் கண்டு ஆச்சரியமுற்றார். திருக்கோயிலின் முன் தாமரைக் கண்ணும் நீல மேனியும், பொன்னாடையும், நான்கு திருக்கரங்களும், ஸர்வாபரணங்களும் பொலிய விஷ்ணு வெளியே வந்தார். லக்ஷ்மீ தேவி சாமரம் வீசக் கருடன் மீது அமர்ந்தார். பகவான் மஹாவிஷ்ணு, மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்து வியந்து கொண்டனர்.

## மணித்வீபம்

அதன் மேலும் செல்லுகின்றது விமானம். பேரலை நிறைந்த அமிர்தக் கடல் தென்படுகின்றது. மந்தாரம், பாரிஜாதம் முதலிய விருக்ஷங்கள் அங்கு நிறைந்திருக்கின்றன. திவ்ய வாசனை வீசுகின்றது. அங்கு சிந்தாமணி க்ருஹத்தில் சிவ மயமான ஸிம்ஹாஸனத்தில் ஸ்ரீ புவனேச்வரீ தேவீ அமர்ந்திருக்கின்றாள்.

அவள் சிவந்த மாலை, சிவந்த ஆடை, சிவப்புப் பூச்சு, சிவந்த உதடுகள் கொண்டவளாய்ப் பிரகாசிக்கின்றாள். சிவந்த கண்களும் அழகிய முகமும் கொண்ட புவனேசி கோடி மின்னல் கொடிகளின் ஒளியும் கோடிக் கணக்கான லக்ஷ்மீ தேவிகளின் அழகை விஞ்சும் அழகும், சூரிய பிம்பம் போன்ற பிரகாசமும் கொண்டிருக்கின்றாள். வரம், பாசம், அங்குசம், அபயம் இவை அவள் கைகளில் விளங்குகின்றன. இந்தப் பராசக்தியை மூவரும் இதுவரைக் கண்டதில்லை. அவளுக்கு முறுவல் அணியாகின்றது. ஹ்ரீங்கார ஜபம் செய்யும் பக்ஷிகள் அவளை ஸேவிக்கின்றன. பலவித ரத்னங்களாலான பூஷணங்கள், பொன்மயமான தோள்வளை, கிரீடம் முதலியன அவள் திருமேனியில் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன.



ஸ்ரீ சக்ராகாரமான தோடுகள் அவள் காதுகளில் பிரகாசிக்கின்றன. ''ஹ்ருல்லேகா புவனேசி'' என்று ஸதா ஜபம் செய்து கொண்டிருக்கும் தோழிகளாலும் ஹ்ருல்லேகா முதலிய சக்திகளாலும் அனங்ககுஸுமா முதலிய ஆவரண தேவதைகளாலும் சூழப்பட்ட ஸ்ரீபுவனேச்வரீ தேவி ஷட்கோணத்தின் இடையில் ஸ்ரீ புவனேச்வரன் இடது மடியில் அமர்ந்திருந்தாள். அவளைக் கண்டு பெரும் வியப்பெய்தினர்.

விஷ்ணு மற்றிருவரிடமும், ''நமக்கெல்லாம் மூலமானவள் இவள். இவளே மஹாமாயா. யோகிகளினால் அடையத் தகுந்தவள். மற்றவர்களால் எய்துவதற்கு அரியவள். பகவானுடைய இச்சா ஸ்வரூபிணி. இவள் உலகம் அழிந்த பின்னும் மகிழ்வுடன் இருக்கின்றாள். நாம் முன் செய்த தவப் பயனாலேயே இவளைக் காணும் பேறு பெற்றோம். இவளை எனக்கு நன்றாகத் தெரிகின்றது. உலகம் எல்லாம் ஜல மயமான போது நான் குழந்தையாய்க் கால் கட்டை விரலை வாய் சேர்த்துச் சுவைத்துக் கொண்டிருந்த போது, பாட்டுப் பாடி என்னைத் தாலாட்டியவள் இவள். இவள் நம் தாய்'' என்று கூறினார்.

நாம் விமானத்திலிருந்து இறங்கி, இவள் சந்நிதிக்குச் செல்லுவோம். வாயில் காப்போர் தடுப்பரேல் அங்கேயே நின்று அன்னையைத் துதிப்போம். இவள் நமக்கு வேண்டிய வரங்களை நிச்சயம் நல்குவாள் என்று கூறி, விமானத்தில் இருந்து இறங்கிச் சென்றனர்.

வாயிற்படி அருகே வந்த அம் மூவரையும் முறுவலால் பெண்ணுருவாக்கினாள் அன்னை. அம் மூவரும் அழகிய ஆபரணம் அணிந்த யுவதிகளாய் அன்னையின் பக்கம் சென்றனர். அன்னையின் கருணைக்குப் பாத்திரமான மூவரும் அவளை வணங்கி பாதம்

வைத்தருளும் பீடத்தை நோக்கினர். அன்னையை வணங்கிய மூவரும் அவள் திருவடியில் உள்ள கண்ணாடி போன்ற நகத்தில் ஸ்தாவர ஜங்கமங்கள் நிறைந்த பல பிரம்மாண்டங்களைக் கண்டனர். பிரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், வாயு, அக்னி, யமன், சூரியன், வருணன், சந்திரன், த்வஷ்டா, குபேரன், இந்திரன் முதலிய தேவர்களையும் ஆங்கே கண்டனர். பர்வதங்கள், கடல்கள், நதிகள், கந்தர்வர், அப்ஸரஸ்கள், அசுவினீ தேவர்கள், வசுக்கள், ஸாத்யர், ஸித்தர், பித்ருக்கள், சேஷன் முதலிய நாகர்கள், ராக்ஷஸர்கள், கைலாஸம், வைகுண்டம் முதலிய லோகங்களையும் கண்டனர். கடலில் சேஷசாயியாக வீற்றிருக்கும் திருமாலின் உந்தியிலே மலர்ந்த தாமரையில் அமர்ந்திருக்கும் பிரமனையும் பக்கத்திலே மது கைடபர்களையும் கண்டனர். இவை அனைத்தையும் கண்டு "இவள்தான் உலகத்தின் தாய்" என்பதை உணர்ந்தனர். இப்படி நூறு வருடங்கள் தேவியின் பக்கத்திலிருந்து அவளுக்குப் பணிவிடை செய்து மகிழ்வெய்தினர்.

பின்னொரு ஸமயம் விஷ்ணு, சிவன், பிரம்மா இம் மூவரும் அன்னையை அழகிய பாக்களால் துதித்தனர். ★

இதனால் மகிழ்ந்த பராசக்தி அஹங்காரத்தை உள்ளிட்ட ஏழு பேதங்களைக் கொண்ட மஹத்தத்துவத்தை பிரமனிடம் கொடுத்து அதிலிருந்து பஞ்ச பூதங்களையும் உண்டாக்கிக் கொள்ளும் என்று கூறினாள். ரஜோ குணம் உடையவளும், வெண்ணாடை தரித்தவளும், அழகிய சிரிப்பு உள்ளவளுமான மஹா ஸரஸ்வதியையும் அவருக்குக் கொடுத்தாள். "இவள் என்னுடைய விபூதி. இவளை நீர் எப்போதும் கௌரவிக்க வேண்டும். இவளுடன் ஸத்யலோகம் சென்று சிருஷ்டியைத் துவக்கும் என்றும், ஸத்துவ குணப் பிரதானராகிய விஷ்ணுவை எப்போதும் கௌரவிக்க வேண்டும். அவர் ஆபத்தைத் தவிர்த்து பல அவதாரங்கள் எடுத்து உங்களுக்கு உதவுவார். நவாக்ஷர மஹா மந்த்ரத்தை எப்போதும் ஜபம் செய்யும். அது விருப்பம் அனைத்தையும் நிறைவேற்றும்" என்றும் கூறி அனுக்கிரஹம் செய்தாள்.

விஷ்ணுவை நோக்கி, மனத்திற்கு உகந்த இந்த மஹா லக்ஷ்மியை நீர் ஏற்றுக் கொள்ளும். இவள் உம்முடைய மார்பில் எப்போதும் உறைந்திருப்பாள். அவள் எல்லாப் பாக்யங்களையும் நல்குவாள். இவளை எப்போதும் கௌரவிக்க வேண்டும். பிரமன், விஷ்ணு, சிவன்



இம் மூவரும் என்னுடைய குணங்களால் உதித்தவர். சிவனுக்கும் விஷ்ணுவிற்கும் பேதம் கற்பிப்பவர் நரகம் எய்துவார். வாக்பீஜம் (ஐம்), காமராஜபீஜம் (க்லீம்), மாயாபீஜம் (ஹ்ரீம்) என்ற மூன்று அக்ஷரங்கள் கொண்ட என்னால் உபதேசிக்கப்பட்ட ஸ்ரீ புவனேசி மந்த்ரத்தை ஜபம் செய்யும். வைகுண்டத்தில் அமர்ந்து என்னை ஸ்மரித்துக் கொண்டு மகிழ்ந்திரும்" என்று அருளினாள்.

சங்கரரைப் பார்த்து மனத்திற்கு உகந்த இந்த மஹா காளியை உம் சக்தியாய் ஏற்றுக் கொள்ளும். கைலாயத்தில் அமர்ந்து உம் காரியத்தைச் செய்யும். உமக்கு எம்மால் அளிக்கப்பட்ட நவாக்ஷரீயை ஜபம் செய்யும் என்று அருளினாள்.

நீங்கள் உங்கள் இருப்பிடம் செல்லலாம் என்று தேவீ ஆணையிட, அங்கிருந்து புறப்பட்டவுடன் அம் மூவரும் முன் போன்று ஆணுருவம் பெற்று மகிழ்ந்தனர். மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே வந்து தேவியின் திருவருள் துணை கொண்டு தத்தம் சக்திகளுடன் சேர்ந்து தத்தம் காரியங்களைச் செய்தனர்.

இதனால் உலகத்தின் மூலமானவள் புவனேச்வரீ என்று நிரூபணமாகின்றது. பல கோடி பிரம்மாக்களும், விஷ்ணுக்களும், ருத்ரர்களும் அவளை ஸேவிக்க வருகின்றனர் என்பதும் புலனாகின்றது. அவள் அனந்த கோடி பிரம்மாண்டங்களைப் படைத்தவள் அல்லவா!

ஜய ஜய ஸ்ரீ புவனேச்வரீ

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ த்ரிபுரா பைரவீ வித்யா

❋❋❋

# V

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில் ஸ்ரீ த்ரிபுர பைரவி

❋❋❋

## "श्री दशमहाविद्यासु श्री त्रिपुरभैरवीविद्या"

अज्ञानतिमिरध्वंसि संसारार्णवतारकं ।
आनन्दबीजमवतात् अतर्क्यं त्रैपुरं महः॥

அஞ்ஞானதிமிரத்வம்ஸி ஸம்ஸாரார்ணவதாரகம் ।
ஆனந்தபீஜமவதாத் அதர்க்யம் த்ரைபுரம் மஹ: ॥

"அஞ்ஞான இருளை அழிக்கக்கூடியதும், ஸம்ஸாரக் கடலினின்றும் கரையேற்றுவதும் ஆனந்தத்தின் உத்பத்திஸ்தானமும் மனோவாக்குகளால் அளவிட முடியாததுமான த்ரிபுரை என்ற ஜோதிஸ்ஸம்மை காக்கட்டும். (சாரதா திலகம்)

# श्री भैरवी विद्या

## ஸ்ரீ பைரவீ வித்யா

ஓம் ஓம் ஓம்

ஸ்ரீ தச மஹா வித்யைகளில் பைரவீ வித்யை ஐந்தாவதாகும். ஸ்ரீ பைரவீ ப்ரக்ருதி. ஸ்ரீ வடுக பைரவர் புருஷன். இவளுடைய காயத்ரீ:—

क्लीं त्रिपुरा देवि विद्महे कामेश्वरि धीमहि।
तन्नः क्लिन्ने प्रचोदयात्॥ (शारदा तिलकं)

க்லீம் த்ரிபுராதேவி வித்மஹே காமேச்வரி தீமஹி।
தன்ன: க்லின்னே ப்ரசோதயாத்॥ (சாரதா திலகம்)

இந்தக் காயத்ரீக்கு உத்தார ச்லோகம் சாரதா திலகத்தில் கூறப்பட்டுள்ளது.

मान्मथं त्रिपुरा देवि विद्महे पदमीरयेत्।
उक्त्वा कामेश्वरि पदं प्रवदेद्धीमहि ततः॥
तदन्ते प्रवदेद्भूयः तन्नः क्लिन्ने प्रचोदयात्।
गायत्र्येषा समाख्याता त्रैपुरी सर्वसिद्धिदा॥

மான்மதம் த்ரிபுரா தேவீ வித்மஹே பதமீரயேத்।
உக்த்வா காமேச்வரி பதம் ப்ரவதேத் தீமஹி தத:॥
ததந்தே ப்ரவதேத் பூய: தன்ன: க்லின்னே ப்ரசோதயாத்।
காயத்ரியேஷா ஸமாக்யாதா த்ரைபுரீ ஸர்வ ஸித்திதா॥

இந்தக் காயத்ரீ ஜபம் அனைத்து ஸித்திகளையும் அளிக்க வல்லது என பலச்ருதியில் கூறப்பட்டுள்ளது. எவளை த்ரிபுராதேவி என்று அறிகின்றோமோ, எவளைக் காமேச்வரீ என்று தியானிக்கின்றோமோ, அந்த க்லின்னா என்ற பைரவீ தேவீ எங்களை அவளுடைய ஞானத்திலும் தியானத்திலும் தூண்டட்டும். த்ரிபுரா என்பதற்கு ப்ரபஞ்ச ஸாரம்

त्रिमूर्ति सर्गाच्च पुराभवत्वात् त्रयीमयत्वाच्च पुरैव देव्याः
लये त्रिलोक्या अपि पूरकत्वात् प्रायोंबिकायाः त्रिपुरेति नाम ॥

த்ரிமூர்த்தி ஸர்காச்ச புராபவத்வாத்
த்ரயீமயத்வாச்ச புரேவ தேவ்யா।
லயே த்ரிலோக்யா அபிபூரகத்வாத்
ப்ரயோம்பிகாயா: த்ரிபுரேதி நாம॥

த்ரிமூர்த்திகளையும் ஸ்ருஷ்டி செய்வதாலும், முன்னமேயே இருப்பதாலும் மூன்று வேத ஸ்வரூபமாய் இருப்பதாலும் அழிந்த பின்னும் முன் போலவே மூவுலகங்களையும் பூர்த்தி செய்வதாலும் அம்பிகைக்கு த்ரிபுரா எனப் பெயர் ஏற்பட்டது எனக் கூறுகின்றது. இக்கருத்து ஸித்தேச்வரீ தந்த்ரத்திலும் காணப்படுகின்றது.

ब्रह्मविष्णुमहेशानैः त्रिदेवैरर्चिता पुरा।
त्रिपुरेति तदा नाम कथितं दैवतैः पुरा ॥

ப்ரம்ஹ விஷ்ணு மஹேசானை: த்ரிதேவைரர்சிதா புரா।
த்ரிபுரேதி ததா நாம கதிதம்தைவதை! புரா॥

ப்ரம்ஹா, விஷ்ணு, மஹேசன் என்ற மூவரால் முன்பு பூஜிக்கப்பட்டவளாதலால் த்ரிபுரா என்ற பெயர் தேவதைகளால் கூறப்பட்டது. வாராஹீ தந்த்ரத்தில்,

ब्राह्मी रौद्री वैष्णवीति शक्तयः तिस्र एव हि।
पुरं शरीरं यस्याःसा त्रिपुरेति प्रकीर्तिता ॥

ப்ராம்ஹீ ரௌத்ரீ வைஷ்ணவீதி சக்தய: திஸ்ர ஏவ ஹி।
புரம் சரீரம் யஸ்யா: ஸா த்ரிபுரேதி ப்ரகீர்த்திதா॥

ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, காளீ என்ற மூன்று சக்திகளும் எவளுக்கு சரீரமாய் இருக்கின்றனரே அவள் த்ரிபுரை எனப்படுகின்றாள். வாக்பவ பீஜத்தால் உணரப்படுபவள் என்பதாலும் த்ரிபுரா எனப்படுகின்றாள். ऐं ஐம் என்பது வாக்பவ பீஜம். அதில் ருக் வேதத்தின் முதலெழுத்தாகிய அகாரம். யஜுர் வேதத்தின் இகாரம் ஸாம வேதத்தின் அகாரம் இந்த மூன்று அக்ஷரங்களும் உள்ளன. இவற்றின் இணைப்பே ஐம் என்ற



பீஜாக்ஷரம். முதலில் ஸாம வேதத்தின் அகாரத்தையும் யஜுர் வேதத்தின் இகாரத்தையும் இணைக்க ए ஏ என்றாகும். பின் ருக் வேதத்தின் அகாரத்தை முன் இணைக்க ऐं ஐம் என ஆகும். ஆக மூன்று வேதங்களுடைய ரூபமாகின்றது ஐம். இந்த ஐம்மை முன்னுடையது இவள் மந்த்ரம். ஆகவே த்ரிபுரா என அழைக்கப்படுகின்றாள்.

ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களில் உள்ளவள் என்பதாய் இவள் த்ரிபுரா எனக் கூறப்படுகின்றாள். ஆக स्थूल सूक्ष्म कारण रूप पुर त्रयं अस्या इति त्रिपुरा ஸ்தூல ஸூக்ஷ்ம காரண ரூப புரத்ரயம் அஸ்யா இதி त्रिपुरा என்பது இதன் விவரணம். மந்த்ர மஹார்ணவத்தில் பைரவீ காயத்ரீ இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

ओं त्रिपुरायै च विद्महे भैरव्यै च धीमहि।
तन्नो देवी प्रचोदयात् ॥

ஓம் த்ரிபுராயை ச வித்மஹே பைரவ்யை ச தீமஹி।
தன்னோ தேவீ ப்ரசோதயாத்॥

இந்தக் காயத்ரிக்கு அங்கநியாஸ கரந்யாஸங்களும் கூறப்பட்டுள்ளன.

(1) ओं त्रिपुरायै च - अंगुष्ठाभ्यां नमः — हृदयाय नमः
(2) ओं विद्महे - तर्जनीभ्यां नमः — शिरसे स्वाहा
(3) ओं भैरव्यै च - मध्यमाभ्यां नमः — शिखायै वषट्
(4) ओं धीमहि - अनामिकाभ्यां नमः — कवचाय हुं
(5) ओं तन्नोदेवी - कनिष्ठिकाभ्यां नमः — नेत्रत्रयाय वौषट्
(6) ओं प्रचोदयात् - करतलकरपृष्ठाभ्यां नमः — अस्त्राय फट्

(1) ஓம் த்ரிபுராயை ச - அங்குஷ்டாப்யாம் நம: — ஹ்ருதயாய நம:
(2) ஓம் வித்மஹே - தர்ஜநீப்யாம் நம: — சிரஸே ஸ்வாஹா
(3) ஓம் பைரவ்யை ச - மத்யமாப்யாம் நம: — சிகாயை வஷட்
(4) ஓம் தீமஹி - அனாமிகாப்யாம் நம: — கவசாய ஹூம்
(5) ஓம் தன்னோதேவீ - கனிஷ்டிகாப்யாம் நம: — நேத்ரத்ராய வௌஷட்
(6) ஓம் ப்ரசோதயாத் - கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: — அஸ்த்ராய பட்

**भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः** - **ध्यानं** பூர்புவஸ்ஸுவரோமிதிதிக்பந்தः -த்யானம். பைரவீ மூல மந்திரத்திற்குரியது. லமித்யாதி பூஜை. மூல மந்த்ரம் முன் கூறிய காயத்ரியாகும். பைரவீ மூலமந்த்ரம் பின்வருமாறு.

**हसरैं हसकलरीं हसरैं रौंः**

**ஹஸரைம் ஹஸகலரீம் ஹஸரௌம்ः**

இதன் உத்தார சுலோகம் சாரதா திலகத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

वियद्भृगुहुताशस्थो भौतिको बिन्दुशेखरः।
वियत्तदादिकेन्द्राग्निस्थितं वामाक्षिबिन्दुमत्॥
आकाशभृगुवन्हिस्थो मनुः सर्गेन्दुखण्डवान्॥

வியத்ப்ருகுஹுதாசஸ்தோ பௌதிகோ பிந்துசேகரः।
வியத்ததாதிகேந்த்ராக்னி ஸ்திதம் வாமாக்ஷிபிந்துமத்॥
ஆகாசப்ருகுவன்ஹிஸ்தோ மனுः ஸர்கேந்துகண்டவான்॥

वियत् = हकारः, भृगुः = सः, हुताशो रेफः, भौतिकः = ऐं बिन्दुशेखरः = अं (हसरैं)

वियत् = हकारः तदादि = सः, कः = स्वरूपं, इन्द्र = लं, अग्निः = रः वामाक्षिः = ईं, बिन्दुरनुस्वारः (हसकलरीं)

आकाशो = हः भृगुः = सः वन्हिः = रः मनुः औ सर्गो = विसर्गः इन्दुखण्डः = अनुस्वारः (हसरौंः) 11 அக்ஷரங்கள். ப்ரபஞ்சஸார ஸார ஸங்க்ரஹத்தில் இந்த மந்த்ரம் இவ்வாறு கூறப் பெற்றிருக்கின்றது.

**ह्स्रैं ह्स्क्ल्रीं ह्स्रौंः**

**ஹ்ஸ்ரைம் ஹ்ஸ்க்ல்ரீம் ஹ்ஸ்ரௌம்ः**



## ரிஷி முதலியன

இம் மந்த்ரத்திற்குத் தக்ஷிணா மூர்த்தி ரிஷிः பங்க்திः சந்தः த்ரிபுரபைரவீ தேவதா ஹஸரைம் பீஜம் ஹஸரௌம் சக்திः (சாரதா திலகம்). மந்த்ர மஹார்ணவத்தில், இம் மந்திரத்திற்கு தக்ஷிணா மூர்த்தி ரிஷிः பங்க்திः சந்தः த்ரிபுர பைரவீ தேவதா. ஐம் பீஜம் ஹ்ரீம் சக்திः க்லீம் கீலகம் எனக் கூறப்பட்டுள்ளது.

சாரதா திலகம்: ஹஸரைம் வாக்பவக் கூடம் என்றும், ஹஸகலரீம் காமராஜ கூடமெனவும், ஹஸரௌம்ः சக்தி கூடமெனவும் பகருகின்றது.

1. வாக்பவபீஜம் மேன்மையான வாக்கையும் சிறந்த ஐச்வர்யத்தையும் அளிக்கும்.
2. காமராஜபீஜம் மூவுலகையும் க்ஷோபணம் செய்து வச்யத்தையும் ஆகர்ஷணத்தையும் அளிக்கும்.
3. சக்தி பீஜம் (ஔ சேர்ந்திருப்பதால்) விஷம் போக்கி கவிதை அளிக்கும். இது முக்கியமாக வித்யை, ஐச்வர்யம், சுகம், மோக்ஷம் இவற்றை அளிக்கும்.

## மந்த்ர மஹிமை

இந்த மந்திரம் மிகவும் ரஹஸ்யமானது. கர்ணா கர்ணிகையாக (அதாவது உபதேச மூலமாகவே) வந்துள்ளது. இது குடும்பப் பெண் போல் மிகவும் ரஹஸ்யமாக காப்பாற்றப்பட வேண்டிய மந்திரமாகும். இதை,

एषा सा शांभवी विद्या गुप्ता कुलवधूरिव।
कर्णात्कर्णोपदेशेन संचरत्यवनीतले॥

ஏஷா ஸா சாம்பவீ வித்யா குப்தா குலவதூரிவ।
கர்ணாத்கர்ணோபதேசேன ஸஞ்சரத்யவனீதலே॥

என்று பெருமையுடன் பேசுகின்றது சாரதா திலகத்தின் உரை. இந்த மந்த்ர ஞானத்தால் உபாஸகன் அனைத்து ஸித்திகளுக்கும் அதிபதியாகின்றான்.

अथ वक्ष्ये परां विद्यां त्रिपुरामतिगोपितां।
यां ज्ञात्वा सिद्धिसंघानां आधिपो जायते नरः ॥ (शारदा तिलकं)

அத வக்ஷ்யே பராம்வித்யாம் த்ரிபுராமதி கோபிதாம்।
யாம் ஞாத்வா ஸித்திஸங்கானாம் அதிபோ ஜாயதே நரः॥
(சாரதா திலகம்)

இந்த த்ரிபுர பைரவீ மந்த்ரத்தை பஞ்சகூடாத்மிகமான மந்த்ரம் என அழைப்பர். இதில் ஹ் ஸ் க் ல் ர் என்ற ஐந்து மெய் எழுத்துக்கள் உள்ளன. (ர்) இல்லாததை சதுஷ்டகூட மந்த்ரம் எனவும், ரேபம்(ர்) சேர்ந்ததை பஞ்சகூடமெனவும் நாத யோகத்தால் ஷட்கூடமெனவும் கூறுவர். இது மொத்தம் 30 மந்திரங்களாய் பெருகும் எனக் கூறுவார் சாரதா திலகத்தின் உரைகாரர்.

வாக்பவ பீஜம், காமராஜ பீஜம், சக்தி பீஜம் கொண்டதாய் முன்பு இம் மந்திரம் கூறப்பட்டது. அவற்றிற்கான தனித் தனியான தியானங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

**வாக்பவ பீஜத்திற்கான தியானம்**

नव कुन्दनिभां देवीं मुक्ताजालविभूषणां।
मुद्रा कपाल विद्याक्षमालाराजन्महाभुजां ॥
ध्यात्वा—: ..........................
वाग्भवं यो महेशानि लक्षं जपति संयतः।
कविता जायते तस्य नानावृत्तार्थ शोभना ॥

நவகுந்தநிபாம் தேவீம் முக்தாஜாலவிபூஷணாம்।
முத்ரா கபால வித்யாக்ஷமாலா ராஜன் மஹாபுஜாம்॥
த்யாத்வா ... ......................
வாக்பவம் யோ மஹேசானி லக்ஷம் ஜபதி ஸம்யதः।
கவிதா ஜாயதே தஸ்ய நானா வ்ருத்தார்த்த சோபனா॥

புதிய வெள்ளொளுத்திப் பூவின் நிறத்தினளும் முத்துக்களாலான பூஷணங்கள் உடையவளும் சின்முத்ரை, கபாலம், புஸ்தகம், ருத்ராக்ஷ



மாலை விளங்கும் சிறந்த நான்கு கரங்களை உடையவளும் ஆகிய தேவியைத் தியானித்துக் கொண்டு எவன் வாக்பவ பீஜத்தை ஒரு லக்ஷம் ஜபம் செய்கின்றானோ மஹேச்வரீயே! அவனுக்குப் பல வ்ருத்தங்கள் (சந்தம்) பல அர்த்தங்கள் இவற்றால் அழகிய கவிதை வரும்.

**2. காமராஜ பீஜத்திற்கான தியானம்**

रक्तां सुरतरोर्मूले विलसन्मणिपीठगां।
सृणिपाश कपालेक्षु मातुलिंग धनुः करां ॥
रक्तैरलं कृतां पुष्पैः मदाघूर्णितलोचनां।
हेलाविलाससंपन्नां नवयौवनसुन्दरीम् ॥
देवीं ध्यात्वा जपेल्लक्षं यो बीजं मध्यमं वशी।
त्रैलोक्यं क्षोभयेदाशु पुरावत् सिद्धिभागसौ ॥

ரக்தாம் ஸுரதோர்மூலே விலஸன்மணிபீடகாம்।
ஸ்ருணிபாச காபாலேக்ஷு மாதுலிங்கதனுः கராம்।
ரக்தைரலங்க்ருதாம் புஷ்பைः மதாகூர்ணிதலோசனாம்।
ஹேலா விலாஸஸம்பன்னாம் நவயௌவன ஸுந்தரீம்।
தேவீம் த்யாத்வா ஜபேல்லக்ஷம் யோ பீஜம் மத்யமம் வசீ॥
த்ரைலோக்யம் க்ஷேபயேதாசு புராவத் ஸித்திபாகஸௌ॥

கல்பக விருக்ஷத்தின் அடியில் அழகிய மணிபீடத்தில் அமர்ந்திருப்பவளும் சிவப்பு நிறத்தினளும், அங்குசம், பாசம், கபாலம், கரும்பு, மாதுளம் பழம், வில் இவற்றைத் தரித்த ஆறு கரத்தினளும் சிவப்புப் பூக்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளவளும் மதத்தால் சுழலும் கண்ணினளும் விளையாட்டில் திளைத்தவளும் புதிய யௌவனத்தால் அழகியவளும் ஆகிய தேவியைத் தியானித்துக் கொண்டு காமராஜ பீஜத்தை லக்ஷம் ஜபம் செய்பவன் மூன்று உலகங்களையும் கலக்குவான். சீக்கிரமாகவே முன் போல் கவிதா சக்தியையும் பெறுவான்.

3. சக்தி பீஜ தியானம்

अक्षमाला सुधाकुंभ मुद्रा पुस्तक धारिणीं।
नवकुन्देन्दुसंकाशां राजन्मौक्तिक भूषणां॥
शक्तिं सविन्मयीं ध्यात्वा बीजं सारस्वतं वशी।
यो जपेज्जायते तस्य कविता भुवि संमता॥

அக்ஷமாலா ஸுதாகும்ப முத்ரா புஸ்தக தாரிணீம்।
நவகுந்தேந்துஸங்காசாம் ராஜன்மௌக்திக பூஷணாம்॥
சக்திம் ஸம்வின்மயீம் த்யாத்வா பீஜம் ஸாரஸ்வதம் வசீ।
யோ ஜபேத் ஜாயதே தஸ்ய கவிதா புவி ஸம்மதா॥

அக்க மாலை, அம்ருத கும்பம், சின்முத்ரை, புஸ்தகம் தரித்தவளும், புதிய வெள்ளொளுத்திப் பூ, சந்திரன் இவை போன்று விளங்குபவளும் அழகிய முத்துக்களால் ஆன அணியை உடையவளும் ஆகிய ஞான ரூபிணியானவளுமான சக்தியைத் தியானம் செய்து கொண்டு ஸாரஸ்வத பீஜத்தை எவன் ஜபிக்கின்றானோ அவனுக்கு பூவுலகில் அனைவருக்கும் பிடித்த கவிதை உண்டாகும்.

வேறொரு தந்த்ரத்தில் வாக்விலாஸம் வேண்டுபவன் கடைசி பீஜத்தை மூன்று லக்ஷம் ஜபம் செய்தால் அழகிய பூஷணங்கள், வஸ்திரங்கள் பெற்று, அபரிமிதமான கீர்த்தியுடன் கவிச்ரேஷ்டனாக விளங்குவான் எனக் கூறப்பட்டுள்ளது.

वाणी विलास मधिगन्तुमाना यो
बीजमन्त्यमपि पुष्करलक्षं।
संजपेद्विमल भूषणवासोऽ
सौ भवेत् कवि वरोऽमित कीर्तिः॥

வாணீவிலாஸ மதிகந்து மனா யோ
பீஜமந்த்யமபி புஷ்கர லக்ஷம்।
ஸஞ்ஜபேத் விமல பூஷண வஸ்த்ரோ(அ)
ஸௌ பவேத் கவிவரோ(அ)மித கீர்த்திः॥



## ஸமஷ்டி தியானம்

उद्यद्भानु सहस्रकान्ति मरुणक्षौमां शिरोमालिनीं
रक्तालिप्तपयोधरां जपवटीं विद्याम मीतिं वरं।
हस्ताब्जैर्दधतीं त्रिनेत्र विलसद्वक्त्रारविन्दश्रियं
देवीं बाल हिमांशुरत्नमकुटां वन्देऽरविन्दस्थितां॥

உத்யத்பானு ஸஹஸ்ரகாந்தி மருண க்ஷௌமாம் சிரோமாலினீம்
ரக்தாலிப்தபயோதராம் ஜபவடீம் வித்யாமபீதிம் வரம்।
ஹஸ்தாப்ஜைர்ததீம் த்ரிநேத்ரவிலஸத்வக்த்ராரவிந்த ஸ்ரீயம்
தேவீம் பாலஹிமாம்சுரத்ன முகுடாம் வந்தே(அ)ரவிந்த ஸ்திதாம்॥

உதிக்கும் ஆயிரம் சூரியர்களின் ஒளி, சிகப்புப் பட்டாடை, முண்ட மாலை, செஞ்சந்தனம் பூசிய ஸ்தனம், ஜபமாலை, புஸ்தகம், அபயம், வரம் கொண்ட கர கமலங்கள், முக்கண் விளங்கும் தாமரைத் திருமுகம், அர்த்த சந்திரனுடன் பிரகாசிக்கும் ரத்னக் கிரீடம் இவையுடைய, தாமரை மலரின் மீது அமர்ந்தருளும் தேவியை வணங்குகின்றேன்.

குறிப்பு: மேற்கரங்கள் இரண்டில் ஜபமாலை புஸ்தகம், கீழிரண்டில் அபய வரங்கள் இருப்பதாகத் தியானிக்க வேண்டும்.

## வேறு தியானம்

பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹத்தில் தியானம் கூறப்பட்டுள்ளது.

आताम्रार्कायुताभां कलितशशिकला रश्मिदीप्तां त्रिनेत्रां
देवीं पूर्णेन्दुवक्त्रां विधृतजपवटी पुस्तकाभीत्यभीष्टां।
पीनोत्तुंगस्तनार्तां वलिकलितविलग्नामसृक् पंकराजत्
मुण्डस्रङ्मण्डितांगीं अरुणतरदुकूलानुलेपां नमामि॥

ஆதாம்ரார்காயுதாபாம் கலித சசிகலா ரச்மி தீப்தாம் த்ரிநேத்ராம்
தேவீம் பூர்ணேந்து வக்த்ராம் வித்ருத ஜபவட புஸ்தகா

பீதியபீஷ்டாம்।
பீனோத்துங்கஸ்தனார்த்தாம்
வலிகலிதவிலக்னாமஸ்ருக்பங்கராஜத்
முண்டஸ்ரங்கமண்டிதாங்கீம் அருணதரதுகூலானுலேபாம்
நமாமி॥

பத்தாயிரம் உதய சூரியன் ஒளியினள், சூடிய பிறையின் கிரணங்களால் பிரகாசிப்பவள், முக்கண்ணினள், பூர்ண சந்திரன் போன்ற முகத்தினள். ஜபமாலை, புஸ்தகம், அபயம், வரம் தரித்தவள், பருத்த நிமிர்ந்த மார்பகத்தினள், மூன்று மடிப்புடைய இடையினள், ரத்தம் தோய்ந்த முண்ட மாலை அணியும் அங்கத்தினள், மிகச் சிவந்த பட்டாடை பூச்சுடையவள் இவ்வாறான ஸ்ரீ பைரவீ தேவியை வணங்குகின்றேன்.

## ஸ்ரீ பைரவீ தேவியின் தோற்றம் பற்றிய வரலாறு

ஸ்ரீ காளி தேவியே பைரவீ என்பது வரலாற்றின் மூலமாய்த் தெரிகின்றது. காளீ ஏன் பைரவீ ரூபத்தை ஏற்றுக் கொண்டாள்?

ஈச்வரன் இவ்வரலாற்றை ஈச்வரிக்குக் கூறுகின்றார். இது புராணம் கூறும் வரலாறு. அல்லது மிகப் பழைமையான வரலாறு என்று இவ்வரலாற்றை பகவானே குறிப்பிடுகின்றார்.

**आख्यायिकां कथ्यमानां पौराणीं मत्त ईश्वरि।**

**ஆக்யாயிகாம் கத்யமானாம் பௌராணீம் மத்த ஈச்வரீ।**

ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகசிபுவின் வரலாறு பற்றிப் பல புராணங்கள் வர்ணித்துள்ளன. ஒரு சமயம் ஹிரண்யாக்ஷன் பல்லாண்டுகள் தவம் புரிந்து சிவனின் மூன்றாவது கண்ணையே சிவானுக்ரஹத்தினால் புத்திரனாகப் பெற்றான். அவன் பெற்ற வரங்கள், மூவாயிரம் கோடி கல்பம் தனக்கு யமனால் ஆபத்து நேரக் கூடாது; பிரம்மா, விஷ்ணு, இந்த்ரன் முதலான தேவர் தன்னை வெற்றி கொள்ளக் கூடாது என்பதாகும். இவ்வரங்களைக் கொடுத்த பகவான், "இவன் பல தவறுகள் புரிவானாயினும், இவனை நான் கொல்ல மாட்டேன்.



ஆயினும் இவன் காம போகாபிலாஷியாய் பார்வதீ தேவியை அபஹரிக்க முயலும்போது இவனைக் கொல்லாமல், இவன் கொழுப்பை அடக்கி இவனை நல்வழிப்படுத்துவேன்" என்று பேரருளும் புரிந்தார்.

இவன் புகை நிறைந்தகண்ணினனாய் பிறந்ததால் இவனுக்கு அந்தகன் (अन्धकः) எனப் பெயர் ஏற்பட்டது. அந்தகன் என்றால் பொட்டை. ஆனால் இவன் பொட்டையல்ல. பொட்டை போன்று இருந்தான்.

இவன் ஒரு ஸமயம் தேவரை ஜயித்து, மந்த்ர மலையில் வஸிக்கும் பார்வதீ தேவியை அபஹரிக்க பல கோடி அவுணர்களுடன் வந்தான். எதிர்த்த நந்தி தேவரையும், ப்ரமத கணங்களையும் ஜயித்து விரட்டினான். உடன் சிவபிரான், சூலம் தாங்கி அந்தகனுடன் போர் புரிந்தார். அவுணர்களை அழித்தார். இச் சண்டை இரண்டு யாமம் நடந்தது. பின் அந்தகாஸுரனை, சூலத்தின் முனை முதுகைப் பிளந்து கொண்டு மேல் வருமாறு அவனுடைய மார்பில் குத்தி, குடைபோல் அவனை சூலாயுதத்தில் தூக்கி நிறுத்தினார்.

இவ்வாறு அவன் சிவபிரான் தலைமீது சூலத்தில் தொங்கும்போது, வஜ்ரம் போன்ற தன் கதையினால் சிவனின் சிரத்தைத் தாக்கினான்.

அவர் சிரத்தினின்றும் மலையிலிருந்து அருவிபோல் ரத்தம் கொட்டிற்று. ரத்த பீஜன் என்ற அசுரனை அடித்ததால் அவன் உடலினின்று ரத்தம் சிந்த, அந்த சிந்திய ரத்தினின்றும் பல அவுணர்கள் அவன் போல் உதித்தார்கள். அவ்வாறே பகவானின் சிந்திய ரத்தத்தினின்றும் சிவன் போன்ற உருவமுள்ள பல பைரவர்கள், சிவனின் சிரத்தின் எட்டுத் திக்குகளினின்றும் (கிழக்காக ஆரம்பித்து) ஒவ்வொரு திக்கிலும் எட்டு எட்டாகப் பெருகினர். உதித்த அத்தனை பைரவர்களும் அனைத்து அவுணர்களையும் பஸ்மமாக்கினர். சிவன் சண்டையிடும் போது எந்த ரூபத்தில் இருந்தாரோ அந்த ரூபத்தில் அவ்வாறான கைகள் உடையவராய் குழந்தை வடிவினராய் அந்தப் பைரவர்கள் காட்சி அளித்தனர்.

பின் சூலத்தில் தொங்கும் அந்தகாஸுரனைச் சிவன் ஆயிரம் வர்ஷம் வெய்யிலில் காய வைத்தும், மழையில் நனைவித்தும், காற்றால் வற்றச்

செய்தும் துன்புறுத்தினார். அவ்வாறு செய்யும்போது அவன் உடலினின்றும் தோன்றிய ரத்தத்தினின்றும் பயங்கரமான முகமுடைய கோடிக் கணக்கான சிவகணங்கள் தோன்றினர்.

அச் சமயத்திலும் அந்தகன் சிவபெருமானை நோக்கி, "ஐயனே! நான் உமக்கு மேல் இருக்கிறேன். நீர் எனக்குக் கீழே இருக்கின்றீர். ஆக, நானே வெற்றி பெற்றேன்" என்றும் கூறிக் கொண்டிருந்தான்.

அந் நிலையிலும் அவன் கூறியதைக் கேட்டு மகிழ்ந்த சிவன், "அந்தகா! நான் இப்போது மகிழ்ந்திருக்கிறேன். பார்வதியைத் தவிர வேறு வேண்டிய வரங்கள் கேள். தருகிறேன்" என்றார்.

அந்தகன், "ஐயனே, நான் பார்வதியை அபஹரிக்க நினைத்த பாபம் என்னை விட்டு அகலட்டும். தாங்கள் என் தந்தை. ஜகஜ்ஜனனியான பார்வதி தேவி என் தாய். நான் தங்களின் புதல்வன். எப்படி கணத் தலைவனாகிய நந்திதேவர் தங்களுக்குக் குஹனை விடப் பிரியமானவரோ அவ்வாறே நானும் இருப்பேன். என் ரத்தத்தினின்றும் உதித்த கணங்களுடன் நான் தங்கள் கண நாயகனாய் இருந்து ஸேவை புரிவேன். அருள வேண்டும்" என்று வேண்டினான்.

தயாநிதியாகிய பகவான், அவனை சூலத்தினின்றும் விடுவித்தார். ம்ருத ஸஞ்ஜீவினி மந்திரத்தை ஜபம் செய்து கொண்டு அவன் மார்பில் ஊத, அவன் காயங்கள் இன்றி நல்ல சரீரம் பெற்றான். அவனுக்குப் பகவான், "ப்ருங்கி" என் நாமகரணம் செய்தார்.

இந்த ஸமயத்தில் அங்கு பார்வதி தேவி வர, அவளைக் கண்டு, அவள் பாதாரவிந்தங்களில் வீழ்ந்து வணங்கி, மன்னிக்குமாறு வேண்டிக் கொண்டான்.

भृंगीभूत्वान्धको दैत्यः गौरीशंकरयोः सुतः ।
बभूव वरदानेन तस्मिन्नेवहि जन्मनि ॥

ப்ருங்கீபூத்வாந்தகோ தைத்ய: கௌரீசங்கரயோ: ஸுத: ।
பபூவ வர தானேன தஸ்மின்னேவஹி ஜன்மனி ॥

இவ்வாறான அந்தகாஸுரனை அடக்கிய திவ்ய க்ஷேத்ரம் திருக்கோவலூர். இங்கு ஸ்வாமியின் பெயர் வீராட்டநாதர். அம்பிகை பெயர் சிவானந்த வல்லி.



சிவ சிரத்தினின்று வழிந்த ரத்தத்தினின்றும் உதித்த பைரவர்கள் சிவபிரானை நோக்கி, நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று கட்டளையிடுங்கள் என்றனர்.

பார்வதி தேவீ காண, சிவன் இவ்வாறு கூறினார். "நீங்கள் என் ரத்தத்தினின்றும் தோன்றியவர்கள். ஆகவே நீங்கள் அனைவரும் யானே என்பது நிச்சயம். எனக்கு ஸமமானவர்கள். என்னுடைய பலம், வீர்யம் கொண்டவர்கள். நீங்கள்தான் நான். நான்தான் நீங்கள். நம்மிருவருக்கும் எந்த வேற்றுமையும் கிடையாது. நாமிருவரும் வாச்யவாசக ரூபமானவர்கள். நான் எவ்வாறு மந்தர மலையில் தங்கியிருக்கின்றேனோ, அவ்வாறே நீங்கள் மலைகளில் தங்கியிருங்கள். ஒவ்வொரு மலையிலும் தங்கி, சிவ மந்த்ரங்களையும் சிவார்ச்சனை விதி க்ரமங்களையும் பலவிதமான ஆகமங்களையும் தந்த்ரங்களையும் வெளியிடுங்கள்" என்று அருளினார்.

உடன் தேவியைப் பார்த்துக் கூறினார். "பார்வதி! இந்தப் பைரவர்கள் எவ்வாறு உருவம் பெற்றிருக்கின்றனரோ, அவ்வாறான உருவத்தை நீயும் பெற்று, இவர்கள் உடன் இருப்பாயாக. இவர்கள் என்னைவிட வேறானவர் என்ற ப்ரமம் உனக்கு உதிக்கக் கூடாது. இந்தப் பைரவர் அனைவரும் நானே. இது ஸத்யம். ஸத்யம். இதில் ஸந்தேஹமே இல்லை". இவ்வாறு பார்வதியிடம் கூறி, பைரவர்களையும் பார்த்துக் கூறினார். "பைரவர்களே! இவள் இமயமலை அரசன் புத்திரி. இவள் கருநிறம் பெற்றிருப்பதால் காளீ என்று அழைக்கப்படுகின்றாள். இவளை நான் கோப்யமாய் வைத்திருப்பதால் இவள் குஹ்யா எனப்படுகின்றாள். காளீ என்பது இவள் பெயர். இவள் இந்த ரூபத்தை விட்டு விட்டு பைரவீ ஆக்ருதி (ரூபம்) கொண்டு உங்கள் சக்திகளாய்த் திகழ்வாள். இவளை 60 ஆண்டுகள் தவம் புரிந்து 22 அக்ஷரங்கள் கொண்ட இவளுடைய மூலமந்த்ரத்தை உபாஸியுங்கள். இவள் உங்களுடைய சக்திகளாய் ஆவாள்" என்றார்.

இது கேட்ட பைரவர்கள் "க்ரோதன்" முதலான பெயர்களைத் தங்களுக்கு வைத்துக் கொண்டு தவம் புரிந்தனர். பரமனின் ஆஞ்ஞையால் தேவியும், பைரவீக்களாகி அவரவர் சக்தியாய் இருந்தாள். அந்தந்த பைரவர்களின் முகம், வர்ணம், ஆயுதம் இவை தாங்கியும் திகழ்ந்தாள். இதைச் சிறப்பாய் தேவீ சப்ததீ கூறுவதையும் காணலாம்.

विद्याः समस्ताः तव देवि भेदाः
स्त्रियः समस्ताः सकला जगत्सु।
त्वयैकया पूरितमंबयैतत्
काते स्तुतिः स्तव्यपरा परोक्तिः ॥

வித்யா! ஸமஸ்தா! தவதேவி பேதா:
ஸ்த்ரிய: ஸமஸ்தா: ஸகலா ஜகத்ஸு।
த்வயைகயா பூரிதமம்புதைதத்
கா தே ஸ்துதி: ஸ்தவ்யபரா பரோக்தி:॥

இந்தப் பரமனின் ஆதிசக்தியான காளியையே மந்த்ர சாஸ்திரம் குஹ்ய காளீ என்று கூறும்.

## ஜப விதானம்

குறிப்பு: மந்த்ர மஹார்ணவம், பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹம், ஸ்ரீ சாரதா திலகம் முதலிய நூல்களிலிருந்து ஜபவிதானம் அளிக்கப் பெற்றுள்ளது. அவரவர் குருவின் உபதேசப்படி ஜபம் செய்து வழிபடுவதே நற்பயனை அளிக்கும்.

1. பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹம்

अस्य श्री त्रिपुरा भैरवी महामन्त्रस्य आराध ऋषिः, देवी गायत्रीछन्दः श्री त्रिपुरा भैरवी देवता ऐं बीजं क्लीं शक्तिः (सौः वाशक्तिः) मम सर्वाभीष्टसिद्धयर्थं जपे विनियोगः

| | करन्यासः | अङ्गन्यासश्च |
|---|---|---|
| (1) ह्सैं आं | अंगुष्ठाभ्यां नमः | हृदयाय नमः |
| (2) ,, ईं | तर्जनीभ्यां नमः | शिरसे स्वाहा |
| (3) ,, ऊं | मध्यमाभ्यां नमः | शिखायै वषट् |
| (4) ,, ऐं | अनमिकाभ्यां नमः | कवचाय हुं |
| (5) ,, औं | कनिष्ठिकाभ्यां नमः | नेत्रत्रयाय वौषट् |
| (6) ,, अः | करतलकरपृष्ठाभ्यां नमः | अस्त्राय फट् |



भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

आताम्रार्कायुताभां कलितशशिकला रंजिताशां त्रिनेत्रां
देवीं पूर्णेन्दुवक्त्रां विधृतजपवटी पुस्तकाभीत्यभीष्टां।
पीनोत्तुंगस्तनार्तां वलि लसितविलग्नामसृक्यंकराज
न्मुण्डस्त्रक्मण्डितांगीं अरुणतरदुकूलानुलेपां नमामि ॥

लमित्यादि पूजा

मूलमन्त्रः ह्सैं ह्स्क्लीं ह्सौः

हृदयादिन्यासः, भूर्भुवस्सुवरोमिति दिग्विमोकः ध्यानं लमित्यादिपूजा समर्पणं
गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा ॥

२. शारदातिलकोक्तप्रकारेण जपविधानं

अस्य श्री त्रिपुरा भैरवी महामन्त्रस्य श्री दक्षिणामूर्तिः ऋषिः पंक्तिः छन्दः श्री त्रिपुरा भैरवी देवता, हसैं बीजं हसकलरीं शक्तिः, हसरौंः वा शक्तिः, मम सर्वाभीष्टसिद्ध्यर्थे जपे विनियोगः

करन्यासः अंगन्यासश्चः சாரதா திலக உரைகாரரின் அபிப்பிராயப்படி இங்கு கராங்க நியாஸங்கள் கூறப்பட்டுள்ளன:

| | | |
|---|---|---|
| 1. सौं ह्स्क्ह्रां | अंगुष्ठाभ्यां नमः | हृदयाय नमः |
| 2. सौंः ह्स्क्ह्रीं | तर्जनीभ्यां नमः | शिरसे स्वाहा |
| 3. सौं ह्स्क्ह्रूं | मध्यमाभ्यां नमः | शिखायै वषट् |
| 4. सौंः ह्स्क्ह्रैं | अनामिकाभ्यां नमः | कवचाय हुं |
| 5. सौंः ह्स्क्ह्रौं | कनिष्ठिकाभ्यां नमः | नेत्रत्रयाय वौषट् |

| | | |
|---|---|---|
| 6. सौः ह्स्क्लृहः | करतलकरपृष्ठाभ्यां नमः | अस्त्राय फट् |

भूर्भुवस्सुवरोतिदिग्बन्धः

ध्यानं

उद्यद्भानु सहस्रकान्तिमरुणक्षौमां शिरोमालिनीं
रक्तालिप्तपयोधरां जपवटीं विद्यामभीतिं वरं॥
हस्ताब्जैर्दधतीं त्रिनेत्र विलसत् वक्त्रारविन्दश्रियं
देवीं बाल हिमांशुरत्नमुकुटां वन्देऽरविन्दस्थिताम्॥

लमित्यादिपूजा

मूलमन्त्रःहसैं ह सकलरीं हसौंः

हृदयादिन्यासः भूर्भुवस्सुवरोमिति दिग्विमोकः ध्यानं, लमित्यादिपूजा समर्पणं।

३. मन्त्रमहार्णवप्रकारेण

अस्य श्री त्रिपुर भैरवी महामन्त्रस्य दक्षिणामूर्तिः ऋषिः पंक्तिः छन्दः श्री त्रिपुरा भैरवी देवता ऐं बीजं ह्रीं शक्तिः क्लीं कीलकं, मम सर्वाभीष्ट सिद्ध्यर्थे जपे विनियोगः

| | | |
|---|---|---|
| 1. हसरां | अंगुष्ठाभ्यां नमः | हृदयाय नमः |
| 2. हसरीं | तर्जनीभ्यां नमः | शिरसे स्वाहा |
| 3. हसरूं | मध्यमाभ्यां नमः | शिखायै वषट् |
| 4. हसरैं | अनामिकाभ्यां नमः | कवचाय हुं |
| 5. हसरौं | कनिष्ठिकाभ्यां नमः | नेत्रत्रयाय वौषट् |
| 6. हसरः | करतलकरपृष्ठाभ्यां नमः | अस्त्राय फट् |

भूर्भुवस्सुरोमितिदिग्बन्धः

ध्यानं

उद्यद्भानु सहस्रकान्तिं (शारदा तिलकानुसारेण) पंच पूजा

मूलमन्त्रः



"हसैं हसकरीं हसैं" (अष्टाक्षरो मन्त्रः)

हृदयादिन्यासः भूरिति - दिग्विमोकः ध्यानं लमित्यादिपूजा समर्पणं

*3. முறையே சாக்த ப்ரமோதத்தில் கூறப்பட்டுள்ளது.*

अष्टाक्षरस्तु मन्त्रोयं भैरव्याः समुदा हृतः।
जपतो धारणाद्वापि सर्वसंपत्प्रदायकः॥

*அஷ்டாக்ஷர மந்த்ரத்தையே ஸம்பத் ப்ரதா பைரவீ என்பர் மந்த்ர சாஸ்த்ரம் அறிந்தோர்.*

## ஸ்ரீ த்ரிபுர பைரவீ ஜபவிதானம்

*1. பிரபஞ்ச ஸார ஸங்க்ரஹத்திலுள்ளபடி.*

அஸ்ய ஸ்ரீ த்ரிபுரா பைரவீ மஹா மந்த்ரஸ்ய ஆராதः ரிஷிः தேவீ காயத்ரீ சந்தः ஸ்ரீ த்ரிபுரா பைரவீ தேவதா. ஐம் பீஜம் க்லீம் சக்திः (அல்லது ஸௌः சக்திः) மம ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே வினியோக.

| | | |
|---|---|---|
| 1. ஹ்ஸ்ரைம் ஆம் | அங்குஷ்டாப்யாம் நமः | ஹ்ருதயாய நமः |
| 2. ஹ்ஸ்ரைம் ஈம் | தர்ஜநீப்யாம் நமः | சிரஸே ஸ்வாஹா |
| 3. ஹ்ஸ்ரைம் ஊம் | மத்யமாப்யாம் நமः | சிகாயை வஷட் |
| 4. ஹ்ஸ்ரைம் ஐம் | அனாமிகாப்யாம் நமः | கவசாய ஹும் |
| 5. ஹ்ஸ்ரைம் ஔம் | கனிஷ்டிகாபயாம் நமः | நேத்ரத்ராய வௌஷட் |
| 6. ஹ்ஸ்ரைம் அः | கரதலகர ப்ருஷ்டாப்யாம் நமः | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்தः

தியானம்

ஆதராம்ரார்க்காயுதாபாம் கலித சசிகலா ரஞ்சிதாசாம் த்ரிநேத்ராம்
தேவீம் பூர்ணேந்துவக்த்ராம் வித்ருத ஜபவட புஸ்தகா பீத்யபீஷ்டாம்
பீனோத்துங்கஸ்தனார்த்தாம் வளிலளித விலக்னாமஸ்ருபங்கராஜத்
முண்டஸ்ரங்கமண்டிதாங்கீம் அருணதரதுகூலானுலேபாம் நமாமீ॥

லமித்யாதி பூஜை

மூல மந்த்ரம் "ஹ்ஸ்ரைம் ஹ்ஸ்க்ல்ரீம் ஹ்ஸ்ரௌः" -

ஹ்ருதயாதிநியாஸ: "பூரிதி" திக்விமோக: தியானம் லமித்யாதி பூஜை ஸமர்பணம்

*2. சாரதா திலகத்தில் கூறியபடி.*

அஸ்ய ஸ்ரீ த்ரிபுரா பைரவீ மஹா மந்த்ரஸ்ய ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி: ரிஷி: பங்தி: சந்த: ஸ்ரீ த்ரிபுரா பைரவீ தேவதா. ஹ்ஸ்ரைம் பீஜம். ஹ்ஸ்க்லரீம் சக்தி: (அல்லது ஹ்ஸ்ரௌ: சக்தி:) மம ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே விநியோக:

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸௌ: ஹஸகலஹ்ராம் | அங்குஷ்டாப்யாம் நம: | ஹ்ருதயாய நம: |
| 2. | ஸௌ: ஹஸகல ஹ்ரீம் | தர்ஜநீப்யாம் நம: | சிரஸே ஸ்வாஹா |
| 3. | ஸௌ: ஹஸகல ஹ்ரூம் | மத்யமாப்யாம் நம: | சிகாயை வஷட் |
| 4. | ஸௌ: ஹஸகல ஹ்ரைம் | அனாமிகாப்யாம் நம: | கவசாய ஹும் |
| 5. | ஸௌ: ஹஸகல ஹ்ரௌம் | கனிஷ்டிகாப்யாம் நம: | நேத்ரத்ராய வௌஷட் |
| 6. | ஸௌ: ஹலகலஹ்ர: | கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த:

தியானம்

உத்யத்பானு ஸஹஸ்ரகாந்தி மருணக்ஷௌமாம் சிரோமாலினீம்
ரக்தாலிப்தபயோதராம் ஜபவடீம் வித்யாம் அபீதிம் வரம்।
ஹஸ்தாப்ஜைர்ததீம் த்ரிநேத்ர விலஸத் வக்த்ராரவிந்தஶ்ரீயம்
தேவீம் பாலஹிமாம்சு ரத்னமகுடாம் வந்தே(அ)ரவிந்த ஸ்திதாம்॥

லமித்யாதி பூஜை மூல மந்த்ரம்

"ஹ்ஸ்ரைம் ஹ்ஸ்க்லரீம் ஹ்ஸ்ரௌ:"

*மீண்டும் ஹ்ருதயாதி நியாஸம், "பூர்பு" இதி திக்விமோக: த்யானம் லமித்யாதி பூஜை, ஸமர்பணம்.*

*மந்த்ர மஹார்ணவப்படி*

அஸ்ய ஸ்ரீ த்ரிபுர பைரவீ மஹாமந்த்ரஸ்ய ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி: ரிஷி: பங்தி: சந்த: ஸ்ரீ த்ரிபுரா பைரவீ தேவதா ஐம் பீஜம் ஹ்ரீம் சக்தி: (ஸௌ: சக்தி:) க்லீம் கீலகம் மம ஸர்வாஸிஷ்ட ஸித்யர்த்தே



ஜபே விநியோக.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஹஸராம் | அங்குஷ்டாப்யாம் நம: | ஹ்ருதயாய நம: |
| 2. | ஹஸரீம் | தர்ஜநீப்யாம் நம: | சிரஸே ஸ்வாஹா |
| 3. | ஹஸரூம் | மத்யமாப்யாம் நம: | சிகாயை வஷட் |
| 4. | ஹஸரைம் | அனாமிகாப்யாம் நம: | கவசாய ஹும் |
| 5. | ஹஸரௌம் | கனிஷ்டிகாப்யாம் நம: | நேத்ரத்ராய வௌஷட் |
| 6. | ஹஸர: | கரதலப்ருஷ்டாப்யாம் நம: | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த:

*தியானம்(2)ல் கூறியபடி (உத்யபானு ஸஹஸ்ரகாந்திம்) லமித்யாதி பஞ்ச பூஜை.*

மூலமந்திரம்
"ஹஸைம் ஹஸகரீம் ஹஸைம்" (அஷ்டாக்ஷர மந்த்ரம்)

*மீண்டும் ஹ்ருதயாதி நியாஸம்! பூர்பு! இதி திக்விமோக: தியானம் லமித்யாதி பூஜை. ஸமர்பணம்.*

# त्रिपुरा भैरवी स्तुतिः

## த்ரிபுரா பைரவீ ஸ்துதி:

இது சாரதா திலக தந்த்ரத்தில் உள்ளதாகும். இது மொத்தம் பன்னிரண்டு சுலோகங்கள் கொண்டது. "த்யுமணி மாலை" என்பது இப் பிரபந்தத்தின் பெயர் என உரைகார் கூறுகின்றார். த்யுமணி மாலா என்ற ப்ரபந்த லக்ஷணத்தைப் ராமஹர் கூறியுள்ளார்.

अथ द्युमणिमाला स्यात् पद्यैः द्वादशभिः समैः ।
प्रत्येकं नायकोत्कर्ष प्रकाशन परायणैः ॥

मुखबन्धे श्लोकयुग्मं तथा शेषे द्वयं मतं।
कृता द्युमणि मालेयं कीर्तिं वृद्धिकरी नृणां॥

அத த்யுமணிமாலா ஸ்யாத் பத்யைஃ த்வாதசபிஃ ஸமைஃ।
ப்ரத்யேகம் நாயகோத்கர்ஷ ப்ரகாசனபராயணைஃ॥
முகபந்தே ச்லோகயுக்மம் ததாசேஷே த்வயம் மதம்।
க்ருதா த்யுமணி மாலேயம் கீர்த்தி வ்ருத்திகரீ ந்ருணாம்॥

ஸம வ்ருத்தங்களால் ஆன இந்தப் பிரபந்தம் பன்னிரண்டு சுலோகங்கள் கொண்டது. ஒவ்வொரு சுலோகத்திலும் ப்ரக்ருதமான நாயகன் அல்லது நாயகியின் பெருமையைப் முக்கியமாய் உணர்த்தும். முதல் இரண்டு சுலோகங்கள் முகபந்தமாகவும், பின் இரண்டு சுலோகங்களும் முகபந்த ரூபமாய் அமைய வேண்டும். இந்த த்யுமணி மாலை மனிதர்களுக்குக் கீர்த்தியை வளர்க்கும். மேற்கூறிய லக்ஷணத்துடன் அமைக்கப் பெற்றிருக்கின்றது இந்த ஸ்துதி. இது ருத்ர யாமளத்தினின்றும் எடுக்கப்பட்டிருக்கின்றது. முன்னும் பின்னும் பலச்ருதியும் கூறப் பெற்றிருக்கின்றது. அதில் முன்பாகக் கூறப்பட்டுள்ள பலச்ருதி இது.

स्तुत्यानया त्वां त्रिपुरे स्तोष्येऽभीष्ट फलाप्तये।
यथा व्रजन्ति तां लक्ष्मीं मनुजाः सुरपूजितां॥

ஸ்துத்யானயா த்வாம் த்ரிபுரே ஸ்தேஷ்யே(அ)பீஷ்ட பலாப்தயே।
யதா வ்ரஜந்தி தாம் லக்ஷ்மீம் மனுஜாஃ ஸுர பூஜிதாம்॥

தேவர் பூஜிக்கும் அந்த லக்ஷ்மியை மனிதர் பெறும் பொருட்டும் விரும்பிய பயனை அடையும் பொருட்டும் இந்த ஸ்துதியால் த்ரிபுர பைரவியே நான் உன்னைத் துதிக்கிறேன் எனத் தொடங்கும் 12 சுலோகங்கள் கூறப்பட்டுள்ளன. கடைசியில் இவ்வாறு பலச்ருதியும் கூறப்பட்டுள்ளது.

ये स्तुवन्ति जगन्मातः श्लोकैः द्वादशभिः क्रमात्।
त्वामनुप्राप्य वाक्सिद्धिं प्राप्नुयुस्ते परां गतिम्॥

யேஸ்துவந்தி ஜகன்மாதஃ ச்லோகைர் த்வாதசபிஃ க்ரமாத்।



த்வாமனுப்ராப்ய வாக்ஸித்திம் ப்ராப்னுயுஸ்தே பராம் கதிம்॥

ஜகன்மாதா! இந்த க்ரமமாகப் பன்னிரண்டு சுலோகங்களால் உன்னைத் துதிப்பவர் உன்னை அடைந்து வாக்ஸித்தி பெறுவர். அத்துடன் பரம கதியையும் அடைவர்.

## பல பைரவீகள்

| | | |
|---|---|---|
| 1. | संपत्प्रदा भैरवी | ஸம்பத்ப்ரதா பைரவீ |
| 2. | चैतन्य भैरवी | சைதன்ய பைரவீ |
| 3. | कामेश्वरी भैरवी | காமேச்வரீ பைரவீ |
| 4. | अघोर भैरवी | அகோர பைரவீ |
| 5. | महा भैरवी | மஹா பைரவீ |
| 6. | ललिता भैरवी | லலிதா பைரவீ |
| 7. | कामेश्वरी भैरवी | காமேச்வரீ பைரவீ |
| 8. | रक्तनेत्र भैरवी | ரக்தநேத்ர பைரவீ |
| 9. | षट्कूटा भैरवी | ஷட்கூடா பைரவீ |
| 10. | नित्या भैरवी | நித்யா பைரவீ |
| 11. | मृतसंजीविनी भैरवी | ம்ருதஸஞ்ஜீவினி பைரவீ |
| 12. | मृत्युंजया भैरवी | ம்ருத்யுஞ்ஜயா பைரவீ |
| 13. | वज्रप्रस्तारिणी भैरवी | வஜ்ரப்ரஸ்தாரிணீ பைரவீ |
| 14. | भुवनेश्वरी भैरवी | புவனேச்வரீ பைரவீ |
| 15. | कमलेश्वरी भैरवी | கமலேச்வரீ பைரவீ |
| 16. | सिद्धकौलेश भैरवी | ஸித்தகௌலேச பைரவீ |
| 17. | डामर भैरवी | டாமர பைரவீ |
| 18. | कामिनी भैरवी | காமினீ பைரவீ |

என பல பேதங்களும் அந்தந்த பைரவீக்களுக்கு த்யானங்களும் மூல மந்த்ரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. விரிவை மந்த்ர சாஸ்த்ரமறிந்தவர் மூலமாகவும், மந்த்ர சாஸ்த்ரங்களைப் படித்தும் அறிந்து கொள்க.

உ

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ சின்னமஸ்தா வித்யா

❀❀❀

# VI

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில்
## ஸ்ரீ சின்ன மஸ்தா மஹாவித்யா

❀❀❀

## "श्री दशमहाविद्यासु षष्ठी श्री छिन्नमस्ता विद्या"

ओं सर्वदा सुरसंघेन सेवितांघ्रिसरोरुहां ।
सेवे सकलसंपत्यै छिन्नमस्तां शुभप्रदाम् ॥

(श्रीछिन्नमस्ताहृदयस्तोत्रं)

ஸர்வதா ஸுரஸங்கேண ஸேவிதாங்ரி ஸரோருஹாம் ।
ஸேவே ஸகல ஸம்பத்யை சின்னமஸ்தாம் சுபப்ரதாம் ॥

(ஸ்ரீ சின்ன மஸ்தா ஹ்ருதய ஸ்தோத்ரம்)

# श्री छिन्नमस्ता देवी

## ஸ்ரீ சின்னமஸ்தா தேவீ

ஓ ஓ ஓ

*ஸ்ரீ சின்னமஸ்தா தேவீ காயத்ரீ:*

ओं वैरोचिन्यै विद्महे छिन्नमस्तायै धीमहि।
तन्नो देवी प्रचोदयात्॥

ஓம் வைரோசின்யை வித்மஹே சின்னமஸ்தாயை தீமஹி।
தன்னோ தேவீ ப்ரசோதயாத்॥

*எவளை சூரிய மண்டலத்தில் உறைபவளாக அறிகின்றோமோ, எவளை அரிந்த தலையுடையவளாகத் தியானிக்கின்றோமோ, அந்தத் தேவீ அவளுடைய ஞானத்திலும் தியனாத்திலும் எங்களைத் தூண்டட்டும். (भास्वन्मण्डलमध्यगा பாஸ்வன்மண்டலமத்யகாம் என சின்னமஸ்தா தேவீ சூர்ய மண்டலத்தில் உறைபவளாகக் கூறப்பட்டிருப்பதை அறியலாம்).*

### மூல மந்திரம்

ओं श्रीं ह्रीं ह्रीं ऐं वज्र वैरोचनीये ह्रीं ह्रीं फट् स्वाहा

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் ஐம் வஜ்ர வைரோசனீயே ஹ்ரீம் ஹ்ரீம் பட் ஸ்வாஹா

*17 அக்ஷரங்கள் கொண்டது இம் மந்திரம். மந்த்ர மஹார்ணவத்தில் (क्लीं) க்லீம் பீஜமும் சேர்க்கப்பட்டிருக்கின்றது.*

### உத்தார சுலோகம்

पद्मासना शिवायुमं भौतिकः शशिशेखरः।
वज्रवैरोचनी पद्म नाभयुक्तः सदागतिः॥
माया युग्मास्त्र दहन प्रियान्तः प्रणवादिकः॥

பத்மாஸ்னா சிவாயுக்மம் பௌதிகஃ சசிசேகரஃ।
வஜ்ரவைரேசனீ பத்மனாபயுக்தஃ ஸதாகதிஃ॥
மாயாயுக்மாஸ்த்ர தஹன ஜாயாந்தஃ ப்ரணவாதிகஃ॥

இந்த மந்திரத்திற்கு (भैरवः) பைரவர் ரிஷி, (संराट्) ஸம்ராட் சந்தஃ (छिन्नमस्ता भुवनेश्वरी देवता) சின்னமஸ்தா புவனேச்வரீதேவதா (ह्रीं) ஹ்ரீம் பீஜம் (स्वाहा) ஸ்வாஹாசக்தி.

மந்த்ர மஹார்ணவம் (ह्रीं ह्रीं) ஹ்ரீம் ஹ்ரீம் பீஜம் எனக் கூறும்.

இங்குள்ள மூல மந்த்ரத்தின் அக்ஷரங்களும் பல தெய்வங்களைக் குறிப்பிடுகின்றன என வேறு தந்த்ரத்தில் கூறப்பட்டுள்ளது.

तन्त्रान्तरे:—

लक्ष्मीः प्रथम बीजेस्ति लज्जाबीजे मनोभवः।
तृतीयेऽस्मिन्सदा देवी महापातक नाशिनी॥
चतुर्थेतु गुणातीता मुक्तिविद्या प्रदायिका।
वकारे वरुणः साक्षत् जकारे तु सुराधिपः॥
रेफे हुताशनो देवः वकारे वसुधाधिपः।
ऐं कारे त्रिपुरादेवी रेफे त्रिपुर सुन्दरी।
त्रैलोक्यविजया देवी सदैवोकार संस्थिता॥
चकारे चन्द्रमा देवः नकारे हि विनायकः।
ईकारे कमलासाक्षात् यकारे च सरस्वती॥
माया युग्मे सदा देवी प्रकृत्या सह संगता।
वैरवरी चैव फट्कारे स्वाकारे कुसुमायुधः।
हाकारे च रतिस्तिष्ठेत् एवं मन्त्र समुचये॥

லக்ஷ்மீஃ ப்ரதமபீஜேஸ்தி லஜ்ஜாபீஜே மனோபவஃ।
த்ருதீயேஸ்மின்மஹாதேவீ மஹாபாதக நாசினீ॥
சதுர்த்தேது குணாதீதா முக்தி வித்யா ப்ரதாயிகா।
வகாரே வருணஃ ஸாக்ஷாத் ஜகாரேது ஸுராதிபஃ।
ரேபே ஹுதாசனோதேவஃ வகாரே வஸுதாதிபஃ।



ஐம் கா்ரே த்ரிபுராதேவீ ரேபே த்ரிபுர ஸுந்தரீ।
த்ரைலோக்ய விஜயா தேவீ ஸதைவோகாரஸம்ஸிதா।
சகாரே சந்த்ரமாதேவஃ நகாரேஹி வினாயகஃ।
ஈகாரே கமலா ஸாக்ஷாத் யகாரேச ஸரஸ்வதீ॥
மாய யுக்மே ஸதா தேவீ ப்ரக்ருத்யாஸஹ ஸங்கதா।
வைகரீசைவ பட்காரே ஸ்வாகாரே குஸு மாயுதஃ।
ஹாகாரேச ரதிஸ்திஷ்டேத் எவம் மந்த்ர ஸமுச்சயே॥

श्रीं ஶ்ரீம் = லக்ஷ்மீ; ह्रीं ஹ்ரீம் = மன்மதன்; ह्रीं ஹ்ரீம் = மஹாபாதகம் போக்கும் தேவீ; ऐं ஐம் = குணாதீதா முக்தி வித்யை அளிப்பவள்; व வ = வருணன்; ज ஜ = இந்திரன்; र् ர் = அக்னி; व வ = பூமியின் நாயகன்; ऐं ஐம் = த்ரிபுரா தேவீ; र् ர் = த்ரிபுர ஸுந்தரீ; ओ ஓ = மூவுலகத்தையும் வெற்றி கொள்ளும் தேவீ; च ச = சந்திரன்; न ந = வினாயகர்; ई ஈ = கமலா; य ய = ஸரஸ்வதி; ह्रीं ह्रीं ஹ்ரீம் ஹ்ரீம் = ப்ரக்ருதியுடன் கூடிய தேவீ; फट् பட் = வைகரீ; स्वा ஸ்வா = மன்மதன்; हा ஹா = ரதி தேவீ என்பவள்.

## கரநியாஸ அங்க நியாஸங்கள்

இம் மந்திரத்திற்கு கரநியாஸ அங்க நியாஸங்கள், மற்ற மந்த்ரங்களுக்குப் போன்றதல்லாமல் விசேஷமாய்க் கூறப்பட்டிருக்கின்றன.

उच्चरेत्पूर्वमाकारं बिन्दु लांछितमस्तकं।
खड्गाय हृदयायेति स्वाहायुक्तं कनीयसि॥
ईकारं च ततो देवि चन्द्रकोटि समप्रभं।
सुखड्गाय ततो वाच्यं शिरसे तदनन्तरं॥
स्वाहा युक्तं ततो वाच्यं पवित्रां गुलिसंयुतं।
अकारं च ततो वाच्यं बिन्दुलांछितमस्तकं॥
सुवज्राय ततोवाच्यं शिखायै तदनन्तरं।
स्वाहान्तं मध्यमायांच विन्यसेत्तदनन्तरं॥

मात्रां द्वादशिकां देवीं विन्यसेच्च ततः परं।।
पाशायेति समुच्चार्य प्रवदेत्कवचाय च।
स्वाहान्तं विन्यसेन्मन्त्रं तर्जन्यां तदनन्तरं।।
औंकारं च ततो देवि चांकुशं तदनन्तरं।
नेत्रत्रयाय स्वाहान्तं अंगुष्ठे करयो द्वयोः।
अकारं च विसर्गान्तं सुरक्षाक्षर संयुतं।
असुरक्षाय संयुक्तं अस्त्रायेति ततः परं।।
षडक्षर समायुक्तं विन्यसेत्करयो र्द्वयोः।।

உச்சரேத்பூர்வமாகாரம் பிந்துலாஞ்சிதமஸ்தகம்।
கட்காய ஹ்ருதயாயேதி ஸ்வாஹாயுக்தம் கனீயஸி।
ஈகாரம் ச ததோதேவி சந்த்ரகோடி ஸமப்ரபம்॥
ஸுகட்காய ததோ வாச்யம் சிரஸே ததனந்தரம்।
ஸ்வாஹாயுக்தம் ததோவாச்யம் பவித்ராங்குளி ஸம்யுதம்॥
ஊகாரம் ச ததோவாச்யம் பிந்து லாஞ்சித மஸ்தகம்।
ஸுவஜ்ராய ததோவாச்யம் சிகாயை ததனந்தரம்॥
ஸ்வாஹாந்தம் மத்யமாயாம்ச வின்யஸேத் ததனந்தரம்।
மாத்ராம் த்வாதசிகாம் தேவீம் வின்யஸேச்ச தத: பரம்।
பாசாயேதி ஸமுச்சார்ய ப்ரவதேத் கவசாய ச।
ஸ்வாஹாந்தம் வின்யஸேன்மந்த்ரம் தர்ஜன்யாம் ததனந்தரம்॥
ஔம்காரம் ச ததோதேவி சாங்குசம் ததனந்தரம்
நேத்ர த்ராயய ஸ்வாஹாந்தம் அங்குஷ்டே கரயோர்த்வயோ:॥
அகாரம் ச விஸர்காந்தம் ஸுரக்ஷாக்ஷர ஸம்யுதம்।
அஸுரக்ஷாய ஸம்யுக்தம் அஸ்த்ராயேதிதத: பரம்॥
ஷடக்ஷரஸமாயுக்தம் வின்யஸேத் கரயோர் த்வயோ:॥

மந்த்ரமஹோததிப்படி இரண்டு ஹ்ரீங்காரம் சேர்க்கப்பட வேண்டும்.

करन्यासः

| | | | |
|---|---|---|---|
| 1. | ओं आं | खड्गाय ह्रीं ह्रीं फट् | कनिष्ठिकाभ्यां स्वाहा |
| 2. | ओं ईं | सुखड्गाय ह्रीं ह्रीं फट् | अनामिकाभ्यां स्वाहा |
| 3. | ओं ऊं | वज्राय ह्रीं ह्रीं फट् | मध्यमाभ्यां स्वाहा |
| 4. | ओं ऐं | पाशाय ह्रीं ह्रीं फट् | तर्जनीभ्यां स्वाहा |
| 5. | ओं औं | अंकुशाय ह्रीं ह्रीं फट् | अंगुष्ठाभ्यां स्वाहा |
| 6. | ओं अः | सुरक्षासुरक्षाय ह्रीं ह्रीं फट् | करतलकरपृष्ठाभ्यां स्वाहा |



हृदयादिन्यासः

| | | | |
|---|---|---|---|
| 1. | ओं आं | खड्गाय ह्रीं ह्रीं फट् | हृदयाय स्वाहा |
| 2. | ओं ईं | सुखड्गाय ह्रीं ह्रीं फट् | शिरसे स्वाहा |
| 3. | ओं ऊं | वज्राय ह्रीं ह्रीं फट् | शिखायै स्वाहा |
| 4. | ओं ऐं | पाशाय ह्रीं ह्रीं फट् | कवचाय स्वाहा |
| 5. | ओं औं | अंकुशाय ह्रीं ह्रीं फट् | नेत्रत्रयाय स्वाहा |
| 6. | ओं अः | सुरक्षासुरक्षाय ह्रीं ह्रीं फट् | अस्त्राय स्वाहा |

கரந்யாஸம்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஓம் ஆம் | கட்காய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | கநிஷ்டிகாப்யாம் ஸ்வாஹா |
| 2. | ஓம் ஈ | ஸுகட்காய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | அனாமிகாப்யாம் ஸ்வாஹா |
| 3. | ஓம் ஊம் | வஜ்ராய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | மத்யமாப்யாம் ஸ்வாஹா |
| 4. | ஓம் ஐம் | பாசாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | தர்ஜநீப்யாம் ஸ்வாஹா |
| 5. | ஓம் ஔம் | அங்குசாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | அங்குஷ்டாப்யாம் ஸ்வாஹா |
| 6. | ஓம் அ: | ஸுரக்ஷாஸுரக்ஷாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | கரதலகரப்ருஷ்டாப்யாம் ஸ்வாஹா |

ஹ்ருதயாதிந்யாஸ:

| | | | |
|---|---|---|---|
| 1. | ஓம் ஆம் | கட்காய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | ஹ்ருதயாய ஸ்வாஹா |
| 2. | ஓம் ஈ | ஸுகட்காய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | சிரஸே ஸ்வாஹா |
| 3. | ஓம் ஊம் | வஜ்ராய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | சிகாயை ஸ்வாஹா |
| 4. | ஓம் ஐம் | பாசாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | கவசாய ஸ்வாஹா |
| 5. | ஓம் ஔம் | அங்குசாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | நேத்ரத்ராய ஸ்வாஹா |
| 6. | ஓம் அ: | ஸுரக்ஷாஸுரக்ஷாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | அஸ்த்ராய ஸ்வாஹா |

குறிப்பு: இங்கு நியாஸம் ஸ்வாஹாந்தமாய்க் கூறப்பட்டிருப்பதுடன் கரநியாஸம் மட்டும் கனிஷ்டிகையிலிருந்து வ்யுத் க்ரமமாகக் கூறப்பட்டிருப்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## தியானம்

भास्वन्मण्डल मध्यगां निजशिरःछिन्नं विकीर्णालकं
स्फारास्यं प्रपिबत् गलात्स्वरुधिरं वामेकरे बिभ्रतीं।
याभासक्त रतिस्मरोपरिगतां सख्यौ निजे डाकिनी
वर्णिन्यौ परिदृश्य मोदकलितां श्रीछिन्नमस्तां भजे॥

பாஸ்வன்மண்டலமத்யகாம் நிஜசிரஃ சின்னம் விகீர்ணாலகம்
ஸ்பாராஸ்யம் ப்ரபிபத் களாத்ஸ்வருதிரம் வாமே கரே பிப்ரதீம்।
யாபாஸக்த ரதிஸ்மரோபரிகதாம் ஸக்யௌ நிஜே டாகிணீ
வர்ணின்யௌ பரித்ருச்ய மோதகலிதாம் ஸ்ரீசின்னமஸ்தாம்பஜே॥

சூரிய மண்டலத்தில் இருப்பவளும், அளகங்கள் பரந்து கிடக்கின்றதும் திறந்த வாயுடையதும், தன் கழுத்திலிருந்து பெருகும் ரத்தத்தை அருந்துகின்றதுமான வெட்டப்பட்ட சிரத்தை இடது கையில் பிடித்திருப்பவளும் புணரும் ரதி, மன்மதன் மேல் இருப்பவளும் தன் தோழிகளான டாகினீ, வர்ணினீ இருவரையும் பார்த்து மகிழ்கின்றவளுமான ஸ்ரீ சின்னமஸ்தா தேவியை உபாஸிக்கின்றேன். மற்றொரு தியானம்,

प्रत्यालीढपदां सदैव दधतीं छिन्नं शिरः कर्त्रिकां
दिग्वस्त्रां स्वकबन्ध शोणित सुधा धारां पिबन्तीं मुदा।
नागाबद्ध शिरोमणिं त्रिनयनां हृद्युत्पलालंकृतां
रत्या सक्त मनोभवोपरि दृढां ध्यायेत्जपा सन्निभां॥

ப்ரத்யாலீடபதாம் ஸதைவ தததீம் சின்னம் சிரஃ கர்த்ரிகாம்
திக்வஸ்த்ராம் ஸ்வகந்பந்த சோணித ஸுதா தாராம் பிபந்தீம்முதா।
நாகாபத்த சிரோமணிம் த்ரிணயனாம் ஹ்ருத்யுத்பலாங்க்ருதாம்
ரத்யாஸக்த மனோபவோபரி த்ருடாம் த்யாயேத் ஜபாஸன்னிபாம்॥



முன் இடது காலும் பின் வலது காலும் வைத்திருப்பவளும், வெட்டப்பட்ட தலை கத்தரிக்கோல் கரங்களில் வைத்திருப்பவளும், ஆடையற்றவளும், தன் தலையில்லா தேஹத்தினின்று எழும் ரத்தமாகும் அமிர்தத்தை மகிழ்வுடன் அருந்துபவளும், பாம்பு கொண்டு தன் சிரத்தில் மணியைக் கட்டிக் கொண்டிருப்பவளும், முக்கண்ணியும், மார்பில் நீலோத்பல மாலை அணிந்திருப்பவளும், செவ்வாரத்தம் பூப் போன்ற நிறத்தினளுமான ஸ்ரீ சின்னமஸ்தா தேவியை ரதியோடு சேர்ந்த மன்மதன் மேல் இருப்பவளாகத் தியானிக்க வேண்டும்.

ஸ்ரீ சின்னமஸ்தா தேவியின் வலது, இடது புறங்களில் அமர்ந்துள்ளதோழிகளாம் டாகினீ, வர்ணினீ தேவிகளின் தியானம். வலது புறத்திலிருப்பவள் வர்ணினீ தேவி,

दक्षे चातिसिता विमुक्तचिकुरा कर्त्री तथा खर्परं
हस्ताभ्यां दधती रजोगुणभवा नाम्नापि सा वर्णिनी।
देव्याःछिन्नकबन्धतः पतदसृग्धारां पिबन्ती मुदा
नागाबद्ध शिरोमणिः मनुविदा ध्येया सदा सा सुरैः॥

தக்ஷே சாதிஸிதா விமுக்த சிகுரா கர்த்ரீம் ததா கர்பரம்
ஹஸ்தாப்யாம் தததீ ரஜோகுணபவா நாம்னாபி ஸா வர்ணினீ।
தேவ்யாஃ சின்னகபந்ததஃ பததஸ்ருக்தாராம் பிபந்தீ முதா
நாகாபத்தசிரோமணிர் மனுவிதா த்யேயா ஸதா ஸா ஸுரைஃ॥

வலது புறத்தில் இருப்பவளும் வெண்ணிறம் உடையவளும் அவிழ்த்து விடப்பட்ட கேசத்தினளும் கத்தரிக்கோல், கபாலம் இவற்றை கைகளில் ஏந்தி இருப்பவளும் ரஜோ குணத்தினின்றும் உதித்தவளும் கழுத்து வெட்டப்பட்ட சின்னமஸ்தா தேவியின் தேஹத்தினின்றும் எழும் ரத்த தாரையை மகிழ்வுடன் அருந்துபவளும் பாம்பு கொண்டு கட்டப்பட்ட சிரோ ரத்னமுடையவளும் வர்ணினீ எனப் பெயர் கொண்டவளுமான தேவியாக மந்திரமறிந்தவராலும் தேவர்களாலும் தியானிக்கத் தகுந்தவளாய் இருக்கின்றாய். இடது புறமிருப்பவள் டாகினீ,

प्रत्यालीढपदा कबन्धविगलद्रक्तं पिबन्ती मुदा
सैषा या प्रलये समस्तभुवनं भोक्तुं क्षमा तामसी।

शक्तिः सापि परात्परा भगवती नाम्ना परा डाकिनी
ध्येया ध्यानपरैः सदा सविनयं भक्तेष्ट भूति प्रदा ॥

ப்ரத்யாலீடபதா கபந்த விகளத்ரக்தம் பிபந்தீ முதா
ஸைஷா யா ப்ரளயே ஸமஸ்த புவனம் போக்தும் க்ஷமா தாமஸீ।
சக்தி: ஸாபி பராத்பரா பகவதீ நாம்னா பரா டாகினீ
த்யேயா த்யானபரை: ஸதா ஸவினயம் பக்தேஷ்டபூதிப்ரதா ॥

இடது வலது கால்களை முன்னும் பின்னுமாக வைத்திருப்பவளும், தேவியின் வெட்ட்ப்பட்ட சிரமுடைய தேஹத்தினின்றும் பொங்கும் ரத்தத்தை மகிழ்வுடன் அருந்துபவளும், ப்ரளய காலத்தில் அனைத்து உலகங்களையும் சாப்பிட்டு விடும் சக்தி படைத்தவளும், பக்தர்களுக்கு இஷ்டமான ஐச்வர்யம் அளிப்பவளும், தாமஸ குணத்தினின்றும் உதித்தவளுமான பராசக்தி, பகவதிடாகினீ தேவி எப்போதும் வினயத்துடன் தியானிப்பவர்களால் தியானிக்கத் தகுந்தவளாய் இருக்கின்றாள். சின்னமஸ்தா தேவியின் விரிவான தியானம் பின்வருமாறு:

स्वनाभौ नीरजं ध्यायेत् ऊर्ध्वं विकसितं सितं
तत्पद्ममध्यकोशे तु मण्डलं चण्डरोचिषः ॥
जपाकुकुसुमसंकाशं रक्तबन्धूकसन्निभं।
रजस्सत्वतमो रेखा योनिमण्डल मण्डितं ॥
मध्ये तु तां महादेवीं सूर्यकोटिसमप्रभां।
छिन्नमस्तां करे वामे धारयन्तीं स्वमस्तकं ॥
प्रसारितमुखां भीमां लेलिहानाग्र जिह्विकां।
पिबन्तीं रौधिरीं धारां निजकण्ठविनिर्गतां ॥
विकीर्णकेश पाशांच नानापुष्प समन्वितां।
दक्षिणे च करे कर्त्रीं मुण्डमाला विभूषितां ॥
दिगंबरां महाघोरां प्रत्यालीढपदस्थितां।
अस्थिमालाधरां देवीं नागयज्ञोपवीतिनीं ॥



रति कामोपविष्टांच सदा ध्यायन्ति मन्त्रिणः।
सदा षोडश वर्षीयां पीनोन्नत पयो धराम् ॥

ஸ்வநாபௌ நீரஜம் த்யாயேத் ஊர்த்வம் விகஸிதம் ஸிதம்।
தத்பத்மமத்ய கோசேது மண்டலம் சண்ட ரோசிஷ: ॥
ஜபாகுஸுமஸங்கசம் ரத்தபந்தூக ஸந்நிபம்।
ரஜஸ் ஸத்வ தமோ ரேகா யோனிமண்ட்ல மண்டிதம்।
மத்யேது தாம் மஹா தேவீம் ஸூர்யகோடி ஸமப்ரபாம்।
சின்னமஸ்தாம் கரே வாமே தாரயந்தீம் ஸ்வமஸ்தகம்।
ப்ரஸாரிதமுகாம் பீமாம் லேலிஹானாக்ர ஜிஹ்விகாம் ॥
பிபந்தீம் ரௌதிரீம் தாராம் நிஜகண்டவிநிர்கதாம்।
விகீர்ணகேச பாசாம்ச நானாபுஷ்ப ஸமன்விதாம்।
தக்ஷிணே ச கரே கர்த்ரீமுண்டமா விபூஷிதாம் ॥
திகம்பராம் மஹாகோராம் ப்ரத்யாலீடபதஸ்திதாம்।
அஸ்திமாலா தராம் தேவீம் நாகயஞ்ஞோபவிதினீம்।
ரதிகாமோநவிஷ்டாம்ச ஸதா த்யாயந்தி மந்த்ரிண:।
ஸதா ஷோடசவர்ஷீயாம் பீனோன்னத பயோதராம் ॥

ஸாதகன் தன் தொப்புளில் மலர்ந்த வெண் தாமரையையும், அத் தாமரை மலரின் நடுவில் சூரிய மண்டலத்தையும் தியானிக்க வேண்டும். அங்கு செவ்வரத்தைப் பூப் போன்றும் (பந்தூகம்) உச்சித் திலகம் பூப்போலவும் பிரகாசிக்கும் ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற மூன்று கோடுகள் கொண்ட முக்கோண . மண்டலத்தையும் தியானிக்க வேண்டும். அதன் நடுவில் கோடி சூர்யப் பிரகாசம் கொண்டவளும், இடது கரத்தில் தன் தலையை வைத்திருப்பவளும், திறந்த வாயினளும், பயங்கரமானவளும், சஞ்சலமான நுனி நாக்கினளும், தன் கழுத்திலிருந்து எழும் ரத்த தாரையை அருந்துபவளும், பரந்து கிடக்கும் கேசத்தினளும்; பல புஷ்பங்கள் அணிந்திருப்பவளும், வலது கரத்தில் கத்தரிக்கோல் உடையவளும், முண்டமாலை அணிந்தவளும், ஆடையற்றவளும் மிகவும் கோரமானவளும், முன்னும் பின்னுமாகக் கால்கள் வைத்திருப்பவளும், எலும்பு மாலையணிந்தவளும் பாம்பை யஞ்ஞோபவீதமாய்க் கொண்டவளும், ரதியுடன் கூடிய காமன் மீது அமர்ந்திருப்பவளும், பருத்த நிமிர்ந்த ஸ்தனமுடையவளும் என்றும், 16 வயதுடையவளுமான ஸ்ரீ சின்னமஸ்தா தேவியை வலது பக்கம் வர்ணினியும் இடது பக்கம் டாகினியும் கொண்டவளாக உபாஸகர்கள்

உபாஸிக்கின்றனர். ரதி மன்மதர்களை விபரீத ரதம் உடையவர்களாகவும் உபாஸிக்க வேண்டும்.

வர்ணினீ

देवी गलोच्छलद्रक्त धारा पानं प्रकुर्वतीं।
वर्णिनीं लोहितां सौम्यां मुक्तकेशीं दिगंबरां।
कपाल कर्त्रिका हस्तां वामदक्षिण योगतः।
नाग यज्ञोपवीताढयां ज्वलत्तेजोमयीमिव।
प्रत्यालीढपदां विद्यां नानालंकारभूषितां।
सदा द्वादशवर्षीयां अस्थि माला विभूषितां।

தேவீ களோச்சலத்ரக்த தாராபானம் ப்ரகுர்வதீம்।
வர்ணினீம் லோஹிதாம் ஸௌம்யாம் முக்தகேசீம் திகம்பரம்।
கபால கர்த்ரிகா ஹஸ்தாம் வாமதக்ஷிண யோகதः।
நாகயஞ்ஞோபவீதாட்யாம் ஜ்வலத்தேஜோமயீமிவ।
ப்ரத்யாலீடபதாம் வித்யாம் நானாலங்கார பூஷிதாம்।
ஸதா த்வாதச வர்ஷீயாம் அஸ்திமாலா விபூஷிதாம்॥

தேவியின் கழுத்திலிருந்து பெருகும் ரத்தத்தை அருந்துபவளும், சிவந்தவளும், இனிமையானவளும், விரித்த கேசத்தினளும், திகம்பரையும், இடது வலது கரங்களில் கபாலம், கத்தரிக்கோல் வைத்திருப்பவளும், ஸர்பங்களைப் பூணூலாகக் கொண்டவளும், ஜ்வலிக்கின்ற நெருப்பு போன்றவளும், முன்னும் பின்னுமாகக் கால் வைத்திருப்பவளும் வித்யா ஸ்வரூபிணியும் பல அணிகள் கொண்டவளும் என்றும் பன்னிரண்டு வயதினளும் எலும்பு மாலை அணிந்தவளுமான ஸ்ரீ வர்ணினீ தேவியைத் தியானிக்க வேண்டும்.

ஸ்ரீ டாகினீ தேவீ

डाकिनीं वाम पार्श्वे तु कल्पसूर्यानलोपमां।
विद्युज्जटां त्रिणयनां दन्तपंक्ति बलाकिनीं॥
दंष्ट्राकरालवदनां पीनोन्नतपयोधरां।
महादेवीं महाघोरां मुक्तकेशीं दिगंबरां॥



लेलिहानमहाजिह्वां मुण्डमाला विभूषितां।
कपाल कर्त्रिकाहस्तां वाम दक्षिणयोगतः
देवीगलोच्छलद्रक्त धारापानं प्रकुर्वतीं
करस्थित कपालेन भीषणेनातिभीषणां।
आभ्यां निषेव्य माणां तां ध्याये द्देवीं विचक्षणः॥

டாகினீம் வாமபார்ச்வேது கல்பசூர்யானலோபமாம்।
வித்யுத்ஜடாம் த்ரிணயனாம் தந்தபங்திபலாகினீம்॥
தம்ஷ்ட்ராகராளவதனாம் பீனோன்னத பயோதராம்।
மஹாதேவீம் மஹாகோராம் முக்தகேசீம் திகம்பராம்।
லேலிஹானமஹாஜிஹ்வாம் முண்டமாலா விபூஷிதாம்॥
கபால கர்த்ரிகா ஹஸ்தாம் வாம தக்ஷிணயோகதः।
தேவீ களோச்சலத்ரக்த தாராபானம் ப்ரகுர்வதீம்॥
கரஸ்தித கபாலேன பீஷணேனாதி பீஷணும்।
ஆப்யாம் நிஷேவ்யமாணாம் தாம் த்யாயேத் தேவீம் விசக்ஷணः॥

டாகினீ இடது பக்கம் இருப்பவள். ப்ரளய காலத்து சூர்யன் போன்றும், நெருப்பு போன்றும் இருப்பவள். மின்னல் கொடி போன்ற நாக்கினள். முக்கண்ணி. வெளுத்த பல்வரிசை உடையவள். தெற்றிப் பற்களுடைய விசால முகத்தினள். பெரிய நிமிர்ந்த மார்பகத்தினள். மிகவும் கோரமானவள். விரித்த கேசத்தினள். திகம்பரை. சஞ்சலமான பெரும் நாக்கு. முண்டமாலை அணிந்தவள். இடது கையில் கபாலம், வலது கையில் கத்தரிக்கோல் கொண்டவள். தேவியின் கழுத்திலிருந்து பெருகும் ரத்த தாரையை அருந்துபவள். கையில் உள்ள பயங்கரமான கபாலத்தால் பயங்கரமானவள்.

இந்த இரண்டு சக்திகளாலும் ஸேவிக்கப்பட்டவளாக சின்னமஸ்தா தேவியைத் தியானிக்க வேண்டும்.

## விசேஷம்

இங்கு ஒரு சிறப்பு அம்சம். தேவியை வழிபடுபவர்கள் முன் கூறியபடி தியானித்து, வழிபட வேண்டும். அவ்வாறு செய்யவில்லையானால் தேவி அவனுடைய சிரத்தை வெட்டி, ரத்தம்

அருந்துவாள் எனக் கூறப்படுகின்றது. தியானம் அவ்வளவு முக்கியம் என்று இதிலிருந்து தெரிந்து கொள்ள வேண்டும்.

प्रचण्डचण्डिकामेवं अध्यात्वा यस्तु पूजयेत्।
सद्यस्तस्य शिरःछित्वा देवी पिबति शोणितं॥

ப்ரசண்ட சண்டிகாமேவம் அத்யாத்வா யஸ்து பூஜயேத்।
ஸத்யஸ் தஸ்ய சிரஃசித்வா தேவீ பிபதி சோணிதம்॥

## பிரசண்ட சண்டிகா

இவளுக்குப் ப்ரசண்ட சண்டிகா என்றொரு பெயர் உண்டு. இந்தப் பெயராலேயே ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம் இவள் படலத்தைத் துவக்குகின்றது. இந்த சக்தியின் புருஷர் விகராளிகர் என மந்த்ர சாஸ்திரம் பேசும்.

प्रचण्ड चण्डिकां वक्ष्ये सर्वकामफलप्रदां।
यस्याः प्रसाद मात्रेण नरः स्याद्धि सदाशिवः॥

ப்ரசண்ட சண்டிகாம் வக்ஷ்யே ஸர்வகாம பலப்ரதாம்।
யஸ்யாஃ ப்ரஸாத மாத்ரேண நரஃ ஸ்யாத்தி ஸதாசிவஃ॥

ப்ரசண்ட சண்டிகா (சின்னமஸ்தா தேவி) அனைத்து இஷ்டங்களையும் அளிப்பவள். இவருடைய அனுக்கிரஹத்தால் மனிதன் ஸ்ரீ ஸதாசிவனாகவே ஆகி விடுகின்றாள்.

## உத்கீலனம்

இவள் மந்த்ர ஜபத்தின் ஆதியிலும் கடையிலும் உத்கிலன மந்த்ரமாம் (ओं ह्रीं ओं) ஓம் ஹ்ரீம் ஓம் என்பதை ஜபம் செய்ய வேண்டும். அப்போதுதான் மந்த்ரம் ஸாதகனுக்கு இஷ்ட ஸித்தி அளிக்கும் என்று தெரிகின்றது.

## மூல மந்த்ரங்கள் பல

ओं श्रीं ह्रीं ह्रीं ऐं वज्र वैरोचनीये ह्रीं ह्रीं फट् स्वाहा இது மந்த மஹோாததி கொடுக்கும் மூலமந்த்ரமாகும். இந்த மந்த்ரம் क्लीं க்லீம் (காமாத்யமாகவும்), ऐं ஐம் (வாக்பவாத்யமாகவும்), ह्रीं ஹ்ரீம் (மாயாத்யமாகவும்), श्रीं ஸ்ரீம் (லக்ஷ்ம்யாத்யமாகவும்) உபாஸிக்க புருஷார்த்தங்கள் நான்கும் ஸித்திக்கும். அத்துடன் ஸ்ரீ முதலில் கொண்டு உபாஸித்தால் லக்ஷ்மீ நாலா பக்கமிருந்தும் கிடைக்கும். க்லீமை முதலாகக் கொண்டு உபாஸித்தால் பெண்கள் வச்யமும், ஹ்ரீமை முதலாகக் கொண்டு உபாஸித்தால் மஹா பாதகங்கள் நசித்தலும், ஐம் என்பதை முதலாகக் கொண்டு உபாஸித்தால் முக்தியும் கிடைக்கும் என பலச்ருதியில் கூறப்பட்டுள்ளது. 18 அக்ஷரங்கள் கொண்ட மந்திரம் பின்வருமாறு.

ह्रीं क्लीं हूं ऐं ह्रीं हूं ऐं वज्र वैरोचनीये हुं फट् स्वाहा

ஹ்ரீம் க்லீம் ஹூம் ஐம் ஹ்ரீம் ஹூம் ஐம் வஜ்ர வைரோசனீயே ஹூம் பட் ஸ்வாஹா.

6 அக்ஷரங்கள் கொண்டது பின்வருமாறு.

ह्रीं क्लीं हूं ऐं हूं फट्

ஹ்ரீம் க்லீம் ஹூம் ஐம் ஹூம் பட்

இந்த மந்திரத்திற்கு விசேஷ பலன்கள் கூறப்பட்டுள்ளன. இந்த வித்யையைக்கு ஸமமான வித்தை எவ்வுலகிலும் இல்லை. 6 அக்ஷரங்கள் கொண்ட இம் மந்திரம் மோக்ஷம் அளிக்கும் என்பதில் ஸந்தேஹமே கிடையாது.

अस्या हि सदृशी विद्या जगत्स्वपि न विद्यते।
षड्वर्णोयं मनुः साक्षात् मोक्षदो नात्र संशयः॥

அஸ்யா ஹி ஸத்ருசீ வித்யா ஜகத்ஸ்வபி ந வித்யதே।
ஷட்வர்ணோயம் மனுஃ ஸாக்ஷாத் மோக்ஷதோ நாத்ர ஸம்சயஃ॥

ஒருஏகாக்ஷர மந்த்ரம் கூறப்பட்டுள்ளது. "हूं" ஹூம். இம் மந்திரம் மூவுலகையும் கலங்கச் செய்யும் சக்தி உடையது.

एकाक्षरी महाविद्या त्रैलोक्यक्षोभ कारिणी

ஏகாக்ஷரீ மஹாவித்யா த்ரைலோக்ய க்ஷோபகாரிணீ

இப்படிப் பல மந்திரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அனைத்தையும் மந்த்ர சாஸ்திரங்களில் காண்க. பெரியோர்களிடம் கேட்டு உபாஸனை செய்வது நலம் பயக்கும்.

### பயன்கள்

यस्याः प्रसादमात्रेण नरः स्याद्धि सदाशिवः

யஸ்யா ப்ரஸாதமாத்ரேண நரஃ ஸ்யாத்தி ஸதாசிவஃ॥

இவளுடைய அருளால் மனிதன் ஸதாசிவனாகவே ஆகி விடுகின்றான்.

अपुत्रो लभते पुत्रं दरिद्रो धनमाप्नुयात्।
कवित्वं च सुपाण्डित्यं लभते नात्र संशयः॥
किं बहूक्तेन विद्यायाः अस्याः विज्ञानमात्रतः।
शास्त्रज्ञानं पापनाशः सर्व सौख्यं भवेद्ध्रुवं॥
उषस्युत्थाय शय्यायाँ उपविष्टो जपेच्छतं।
षण्मासाभ्यन्तरे मन्त्री कवित्वेन जयेत्कविम्॥

அபுத்ரோ லபதே புத்ரம் தரித்ரோ தன மாப்னுயாத்।
கவித்வம் ச ஸுபாண்டித்யம் லபதே நாதரை ஸம்சயஃ॥
கிம்பஹூக்தேன வித்யாயாஃ அஸ்யா விஞ்ஞான மாத்ரதஃ।
சாஸ்த்ர ஞானம் பாபநாசஃ ஸர்வ ஸௌக்யம் பவேத் த்ருவம்॥
உஷஸ்யுத்தாய சய்யாயாம் உபவிஷ்டோ ஜபேத் சதம்।
ஷண்மாஸாப்யந்தரே மந்த்ரீ கவித்வேன ஜயேத் கவிம்॥

புத்திரன் இல்லாதவன் புத்திரனையும், வறுமையுடையவன் தனத்தையும் பெறுகிறான். கவித்வம், பாண்டித்யம் இவைகளையும் பெறுவான். இதில் ஐயமில்லை. மிகச் சொல்லுவானேன்! இந்த வித்தையை தெரிந்து கொண்ட அளவிலேயே சாஸ்திர ஞானம், பாப நாசம், ஸர்வ ஸௌக்யம் இவை நிச்சயமாய் ஏற்படும். காலையில் எழுந்து பாயில் உட்கார்ந்தபடியே இம் மந்திரத்தை நூறு தடவை ஜபிக்க ஆறு மாதங்களுக்குள் ஸாதகன் தன் கவித்வ சக்தியால் மற்றைய கவியை வெற்றி கொள்வான்.



## ஸ்ரீ சின்னமஸ்தா தேவியின் ஆவிர்பாவ வரலாறு

ஸ்ரீ சின்னமஸ்தா தேவியின் வரலாறு பற்றி ஸ்ரீ சக்தி ஸங்கம தந்த்ரம் கூறுகின்றது. இந்த வரலாறு சிவ சக்தி ஸம்வாத ரூபமாய் அமைந்திருக்கின்றது. இதன் முடிவில் அசேஷாப்ய தாரா ஸம்வாதே தாரா சூக்தே எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அங்குக் கூறப்பட்டுள்ள வரலாற்றை நாம் இங்கே காண்போம்.

முன்னொரு சமயம் கைலாஸத்தில் மஹா தேவனாகிய மஹேச்வரன் தேவியுடன் கைலையங்கிரியில் அமர்ந்திருந்தார். அப்போது தேவி பரமனைப் பார்த்து, "ஐயனே! தாங்கள் முன்பொரு சமயம் ஸ்ரீ சின்னமஸ்தா தேவியைப் பற்றிக் குறிப்பிட்டீர்கள். ஆனால் முழு விபரத்தையும் சொல்லவில்லை. அவள் ஸ்வரூபம், அவள் ஸ்வபாவம், அவள் எப்படி உதித்தாள் என்ற அனைத்தையும் தாங்கள் எனக்குக் கூறி அருள வேண்டும்" எனப் பிரார்த்தித்தாள். அப்போது சிவன் தேவியிடம் பின்வருமாறு கூறினார். மஹாதேவன் கூறியதாவது:

முன்பொரு சமயம் கிருத யுகம் நடந்து கொண்டிருந்தது. அதைத் தேவ யுகம் என்பர். அப்போது நான் கைலாயத்தில் அமர்ந்திருக்கும்போது என் ப்ரக்ருதியாகிய மஹாமாயா தேவீ என்னுடன் பெண்மையின் ஆதிக்கத்தைக் குறிக்கும் வகையில் என்னுடன் இணைந்து சுகம் அனுபவித்தாள். மகிழ்வடைந்த தேவி என்னை விட்டுப் பிரிந்து சென்றாள். அப்போது உலகத்திற்குச் சுபமளிக்கும் இரண்டு சக்திகள் அவள் தேஹத்தினின்றும் ஆவிர்பவித்தனர். அவ்விருவரும் அவளுக்குத் தோழிகளாயினர். ஒருவளுக்கு வர்ணினீ என்று பெயர். மற்றவளுக்கு டாகினீ என்று பெயர். அம்பிகையின் வலப்புறமும் இடப்புறமும் அமர்ந்திருப்பர்.

இந்த வர்ணினீ என்பவள் ஸர்வ சக்திகளும் உடையவள் (இவள் தியானம் முன்பே கூறப்பட்டு விட்டது). டாகினீ என்பவள் (डाकिनी प्रेतरूपिणी) டாகினீ ப்ரேத ரூபிணி என்றபடி ப்ரேத ரூபம் உடையவள் (இவளுடைய தியானமும் முன்பே கூறப்பட்டு விட்டது).

உடன் சண்டீ தேவீ என்ற அந்த மஹாமாயா ஸாதுக்களைக் காக்கவும், துஷ்டர்களை அழித்தொழிக்கவும், விடியற்காலையில் தன் தோழிகளுடன் கூட புஷ்ப பத்ரா நதி தீரத்திற்குச் சென்றாகள். தேவி

ஸ்னானம் செய்யும்போது வர்ணினியும், டாகினியும் கூடவே ஸ்னானம் செய்து ஜலக்ரீடை புரிந்தனர். இவ்வாறிருக்கும்போது மத்யான்ஹ சமயத்தில் இரு தோழிகளுக்கும் பசி ஏற்படவே, சண்டிகா தேவியை நோக்கி, "அம்மா பசிக்கின்றது. அதைப் போக்கி அருளுங்கள்" என வேண்டினர்.

இவ்விருவரின் சொற் கேட்ட தேவி சிரித்தாள். திசைகள் அனைத்தையும் நோக்கினாள் (இவ்விருவர் பசியை யாரால் போக்க இயலும் என்று நினைத்தாள் போலும்). தன் கரத்திலிருந்த கத்தியால் தன் தலையை வெட்டினாள். கழுத்து வெட்டப்பட்டதும் தேவியின் கழுத்திலிருந்து இடது புறத்து நாடியின் வழியாய் ரத்தம் பீறிட்டு வழிந்தது. அதை டாகினி பருகுமாறு செய்தாள். வலது பக்கம் நாடியினின்றும் எழும் ரத்த தாரையை வர்ணினி அருந்துமாறு செய்தாள். கழுத்தின் நடுவிலிருந்து பெருகும் ரத்த தாரையால் தன் சிரம் பருகுமாறு செய்து மகிழ்ந்தாள் (இடது பக்கம் நாடிக்கு இடா என்று பெயர். இது சந்த்ர ஸ்வரூபிணி. வலது பக்க நாடிக்குப் பிங்களா என்று பெயர் இது சூர்ய ஸ்வரூபிணி. ஸர்வ தேஜோமயமாய் உள்ள நாடி நடுவில் இருக்கும் ஸுஷும்னா என்பர் யோக சாஸ்திரம் அறிந்தவர்). 72 ஆயிரம் நாடிகள் சரீரத்தில் உள்ளன. அதில் 2000 நாடிகள் முக்கியமானவை. அவற்றில் மூன்று நாடிகள் மிக முக்கியம். அவை இடா, பிங்கள, ஸுஷும்னா என்பவையாம். இங்கு சக்தி ஸங்கம தந்தரம். இடா, பிங்களா, ஸுஷும்னா என்ற நாடிகள் காளீ, தாரா, சின்னமஸ்தா தேவியின் ஸ்வரூபம் எனக் கூறுகின்றது. இடா காளீ, பிங்களா தாரா, சின்னமஸ்தா ஸுஷும்னா நாடியாகும். ஜீவர்களிடம் இவை என்றும் உள்ளன.

द्विसप्तति सहस्रासु देहसंस्थासु नाडिषु।
मुख्या सहस्र द्वितयी तन्मध्ये त्रितयं वरा॥
काली तारा छिन्नमस्ता नाडीत्रितयरूपिणी।
जीवमात्रे महेशानि सदा तिष्ठति नित्यशः॥

த்விஸப்ததி ஸஹஸ்ராஸு தேஹஸம்ஸ்தாஸு நாடிஷு।
முக்யா ஸஹஸ்ரத்விதயீ தன்மத்யே த்ரிதயம் வரா॥
காளீ தாரா சின்னமஸ்தா நாடீத்ரிதயரூபிணி।
ஜீவமாத்ரே மஹேசானீ ஸதா திஷ்டதி நித்யசஃ॥



அதில் ஸுஷும்னா நாடியின் வழியாய் வரும் அம்ருத தாரை தேவியைத் திருப்திப்படுத்துகின்றது என்பதை இந் நிகழ்ச்சி குறிப்பிடுவதாய்க் கூறலாம். தேவியின் தியானத்தில் தன் கழுத்திலிருந்து வரும் ரத்த தாரையை தேவி பருகுகின்றாள் எனக் கூறுமிடத்தில்,

स्वकबन्धशोणित सुधाधारां पिबन्तीं मुदा।

ஸ்வகபந்தசோணிதஸுதாதாராம் பிபந்தீம் முதா।

என ரத்தத்தை அமிர்த தாரையாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. இது சிந்தனைக்கு உரியதாகும்.

இங்குள்ள வரலாற்றை நோக்கும் போது தேவி கருணை உள்ளம் படைத்தவள். அவள் யாரும் பசித்திருப்பதைப் பார்க்க மாட்டாள். தன் தலையைக் கொடுத்தாவது பசியைப் போக்குவாள் என்பதை நிரூபிப்பதாகவே தோன்றுகிறது. அவரவர் புத்தி சக்திக்கு எட்டியபடி பல தத்வார்த்தங்களைக் கூறலாம். இதன் தத்துவத்தை ஸ்ரீ சின்னமஸ்தா தேவியேதான் அறிவாள்.

இரு தோழியரும் ரத்த தாரையைப் பருகி திருப்தியடைந்தவுடன் பராசக்தி, தன் வெட்டிய சிரத்தை மீண்டும் தன் கழுத்தில் முன்போல் பதித்துக் கொண்டாள். முன் போலவே காட்சி கொடுத்தாள். பின் மகிழ்வுடன் இரண்டு சக்திகளுடன் கூட மஹாமாயா பரமனிடம் வந்தாள்.

சிவன் மிகப் பராக்ரமமுடைய சண்டிகா தேவியே! உன் தொடர்பால் உன்னுடன் இங்கு வந்த இந்தத் தோழிகள் யார்! நீ மாறுபட்டவர்ண முடையவளாய் இருக்கின்றாய் (வெளிறியிருக்கின்றாய்) ஏன்! காலையில் நீ எங்கு சென்றிருந்தாய் பிரம்மா விஷ்ணு முதலிய தேவரோ அல்லது கந்தர்வர்களோ உன்னை அபஹரித்துச் சென்று விட்டார்களா! அனைத்து விபரங்களையும் கூறு" என்றார்.

பார்வதீ - ஐயனே! பிரம்மாவுக்கோ விஷ்ணுவுக்கோ அல்லது கந்தர்வர்களுக்கோ என்னை அபஹரிக்கும் சக்தி கிடையாது. நான் காலையில் புஷ்பபத்ரா நதிக்குச் சென்றிருந்தேன்.

வீரராத்ரி தினத்தில் ஆவிர்பவித்த நான் தோழியருடன் புஷ்பபத்ராநதிக்கு ஸ்னானம் செய்ய சென்றேன். (வீரராத்திரி என்றால் என்ன!)

चतुर्दशी भौमयुता मकारेण समन्विता ।
कुलकर्क्ष समायुक्ता वीररात्रिः प्रकीर्तिता ॥

செவ்வாய் கிழமையில் சதுர்தசியும் மகாநக்ஷத்ரமும் காளிக்குரிய நக்ஷத்திரமும் சேர்ந்தால் அதற்கு வீரராத்ரி என்று பெயர். அந்த ஸமயமே இந்த சின்னமஸ்தா தேவி ஆவிர்பவித்தாள்ஷி தோழியருக்கு பசி எடுக்க, அவர்களுக்கு உதவ என் தலையை வெட்டி அவர்கள் ரக்த பனம் செய்து மகிழ உதவினேன். அதனால் ரக்தம் அதிகமாய் வெளியேறியதால் கருநிறம் குறைந்திருக்கின்றது. இப்போது நான் ஸுந்தரியாய் உள்ளேன்' என்றார்.

## சின்னமஸ்தா உபாஸனைக்கு நியமங்கள் கிடையாது.

திக் நியமம் கால நியமம் ஆஸனநியமம் இவை ஏதும் இந்த மந்த்ர ஜபத்திற்குக் கிடையாது. பாதாளம் குகை பிரவேசிக்க முடியாத இடம் பர்வதம் நதி தீரம் ஆகாயம் பூமி அனைத்திடங்களிலும் ஜபம் செய்யலாம். ஸந்தேஹம் வேண்டாம்.

दिक्काल नियमो नास्ति स्थित्यादिनियमो नहि ।
पाताले कुहरे दुर्गे पर्वते तटिनी तटे ।
अन्तरिक्षे तथाभूमौ सर्वत्र जपमाचरेत्
न शंका नच वैशंका स्वेच्छया जपमाचरेत्

திக்காலநியமோ நாஸ்தி ஸ்த்தித்யாதி நியமோ நஹி ।
பாதாளே குஹரே துர்கே பர்வதே தடினீதடே ॥
அந்தரிக்ஷே ததாபூமௌ ஸர்வத்ர ஜபமாசரேத் ।
ந சங்கா ந ச வை சங்கா ஸ்வேச்சயா ஜபமாசரேத் ॥

## முக்கியமான நாமாக்கள்

இவள் நாமாக்கள் சிறந்தவை பன்னிரண்டாகும் அவையாவன :-

१) छिन्नग्रीवा - சின்னக்ரீவா



२) चिन्नमस्ता - சின்னமஸ்தா
३) चिन्नमुण्डधरा - சின்னமுண்டதரா
४) अक्षता - அக்ஷதா
५) क्षोदक्षेमकरी - க்ஷோதக்ஷேமகரீ
६) स्वक्षा - ஸ்வக்ஷா
७) क्षोणीशाच्छादनक्षमा - க்ஷோணீசாச்சாதனக்ஷமா
८) वैरोचनी - வைரோசனீ
९) वरारोहा - வராரோஹா
१०) बलिदान प्रहर्षिता - பலிதானப்ரஹர்ஷிதா
११) बलिपूजित पादाब्जा - பலிபூஜிதபாதாப்ஜா
१२) वासुदेव प्रपूजिता - வாஸுதேவப்ரபூஜிதா ॥

इति द्वादशनामानि छिन्नमस्ताप्रियाणि च ।
स्मरेत्प्रातः समुत्थाय तस्य नश्यन्ति शत्रवः ॥

இதி த்வாதச நாமானி சின்னமஸ்தா ப்ரியாணிச ।
ஸ்மரேத் ப்ராத: ஸமுத்தாய தஸ்ய: நச்யந்தி சத்ரவ: ॥

இந்த பன்னிரண்டு பெயர்களும் சின்னமஸ்தா தேவிக்குப் பிடித்தவை, காலையில் எழுந்து இந்த நாமாக்களை நினைக்கும் பக்தனுக்கு சத்துருக்கள். நசித்துப்போவர். இவள் கருணாமூர்த்தி.

# श्री छिन्नमस्ताष्टकम्

## ஸ்ரீ சின்னமஸ்தாஷ்டகம்

ஹூம் ஹூம் ஹூம்

१) वन्देहं छिन्नमस्तां तां छिन्नमुण्डधरां परां ।
छिन्नग्रीवोच्छटाच्छन्नां क्षौमवस्त्रपरिच्छदां ॥

வந்தேஹம் சின்னமஸ்தாம் தாம் சின்னமுண்டதராம் பராம் ।
சின்ன க்ரீவோச்சடாச்சன்னாம் க்ஷௌமவஸ்த்ர பரிச்சதாம் ॥

२) सर्वदा सुरसंघेन सेवितांघ्रिसरोरुहां ।
सेवे सकल संपत्यै छिन्नमस्तां शुभप्रदां ॥

ஸர்வதா ஸுரஸங்கேன ஸேவிதாங்க்ரி ஸரோருஹாம் ।
ஸேவே ஸகல ஸம்பத்யை சின்னமஸ்தாம் சுபப்ரதாம் ॥

३) यज्ञानां योगयज्ञाय यातु जाता युगे युगे ।
दानवान्तकरीं देवीं छिन्नमस्तां भजामि ताम् ॥

யஞ்ஞானாம் யோகஞ்ஞாய யாது ஜாதா யுகே யுகே ।
தானவாந்தகரீம் தேவீம் சின்னமஸ்தாம் பஜாமி தாம் ॥

४) वैरोचनीं वरारोहां वामदेव विवर्धितं ।
कोटिसूर्यप्रभां वन्दे विद्युद्वर्णाक्षिमण्डितां ॥

வைரோசனீம் வராரோஹாம் வாமதேவ விவர்த்திதம் ।
கோடிஸூர்யப்ரபாம் வந்தே வித்யுத்வர்ணாக்ஷி மண்டிதாம் ॥

५) निजकण्ठोच्छलद्रक्त धारया या मुहुर्मुहुः ।
योगिनीस्तर्पयन्त्युग्रा तस्याश्चरणमाश्रये ॥

நிஜகண்டோச்சலத்ரக்த தாராயா யா முஹுர் முஹு: ।



யோகினீ ஸ்தர்பயந்த்யுக்ரா தஸ்யா: சரண மாச்ரயே ॥

६) हूमित्येकाक्षरं मन्त्रं यदीयं युक्त मानसः ।
यो जपेत्तस्य विद्वेषी भस्मतां याति तां भजे ॥

ஹூமித்யேகாக்ஷரம் மந்த்ரம் யதீயம் யுக்தமானஸ: ।
யோ ஜபேத் தஸ்ய வித்வேக்ஷீ பஸ்மதாம் யாந்தி தாம் பஜே ॥

७) हूं स्वाहेति मनुं संयक् यः स्मरत्यार्तिमान्नरः ।
छिनत्ति छिन्नमस्त्म या तस्य बाधां, नमाम्यहं ॥

ஹூம் ஸ்வாஹேதி மனும் ஸம்யக் ய: ஸ்மரத்யார்திமான் நர: ।
சினத்தி சின்னமஸ்தா யா தஸ்ய பாதாம் நமாமிதாம் ॥

८) यस्याः कटाक्षमात्रेण क्रूरभूतादयो द्रुतं ।
दूरतः संपलायन्ते छिन्नमस्तां भजामि तां ॥

யஸ்யா: கடாக்ஷமாத்ரேண க்ரூபூதாதயோ த்ருதம் ।
தூரத: ஸம்பலாயந்தே சின்மைஸ்தாம் பஜாமி தாம் ॥

(छिन्नमस्ताहृदयस्तोत्रान्तर्गतं)

ஸ்ரீ சின்னமஸ்தாஹ்ருதய ஸ்தோத்திரத்தில் உள்ளது.

---

# श्री छिन्नमस्ता जपविधानं

## ஸ்ரீ சின்னமஸ்தா ஜபவிதானம்

अस्यश्री छिन्नमस्ता महा मन्त्रस्य भैरवः ऋषिः संराछन्दः श्री छिन्नमस्ता भुवनेश्वरी देवता, हीं बीजं स्वाहा शक्तिः ममाभीष्ट सिद्ध्यर्थे जपे विनियोगः

करन्यासः

| | | | |
|---|---|---|---|
| ओं | आं | खड्गाय हीं हीं फट् | कनिष्ठिकाभ्यां स्वाहा |
| ओं | ईं | सुखड्गाय हीं हीं फट् | अनामिकाभ्यां स्वाहा |
| ओं | ऊं | वज्राय हीं हीं फट् | मध्यमाभ्यां स्वाहा |
| ओं | ऐं | पाशाय हीं हीं फट् | तर्जनीभ्यां स्वाहा |
| ओं | औं | अंकुशाय हीं हीं फट् | अंगुष्ठाभ्यां स्वाहा |
| ओं | अः | सुरक्षासुरक्षाय हीं हीं फट् | करतलकरपृष्ठाभ्यां स्वाहा |

अंगन्यासः

| | | | |
|---|---|---|---|
| ओं | आं | खड्गाय हीं हीं फट् | हृदयाय स्वाहा |
| ओं | ईं | सुखड्गाय हीं हीं फट् | शिरसे स्वाहा |
| ओं | ऊं | वज्राय हीं हीं फट् | शिखायै स्वाहा |
| ओं | ऐं | पाशाय हीं हीं फट् | कवचाय स्वाहा |
| ओं | औं | अंकुशाय हीं हीं फट् | नेत्रत्रयाय स्वाहा |
| ओं | अः | सुरक्षासुरक्षाय हीं हीं फट् | अस्त्राय स्वाहा |

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

भास्वन्मण्डलमध्यगां निजशिरःछिन्नं विकीर्णालकं
स्फारास्यं प्रपिबत्गलात्स्व रुधिरं वामे करे बिभ्रतीं।
याभासक्त रतिस्मरोपरिगतां सख्यौ निजे डाकिनी
वर्णिन्यौ परिदृश्य मोदकलितां श्रीछिन्नमस्तां भजे॥



1) ओं लं पृथिव्यात्मिकायै गठन्धं समर्पयामि।
2) ओं हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि।
3) ओं रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।
4) ओं यं वाय्वात्मिकायै धूपं आघ्रापयानि।
5) ओं वं अमृतात्मिकायै अमृतं महावैवेयं समर्पयामि।
6) ओं सं सर्वात्मिकायै सवोपचारान्समपर्ययामि।

मूलमन्त्रः

''ओं श्रीं हीं हीं ऐं वज्रवैरोचनीये हीं हीं फ ट्स्वाहा'' (१७)

अंगन्यासः, ध्यानं, लमित्यादि पूजा
गुह्यातिगुह्यगोत्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवी त्वत्प्रसादान्मयि स्थिरा॥

## ஸ்ரீ சின்னமஸ்தா ஜபவிதானம்

அஸ்ய ஸ்ரீ சின்னமஸ்தா மஹாமந்த்ரஸ்ய பைரவரிஷி: ஸம்ராட்சந்த: ஸ்ரீ சின்னமஸ்தா புவனேச்வரீ தேவதா, ஹ்ரீம் பீஜம் ஸ்வாஹா சக்தி:॥

கரநியாஸ:

| | | | |
|---|---|---|---|
| ஓம் | ஆம் | கட்காய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | ஹ்ருதயாய ஸ்வாஹா |
| ஓம் | ஈம் | ஸுகட்காய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | சிரஸே ஸ்வாஹா |
| ஓம் | ஊம் | வஜ்ராய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | சிகாயை ஸ்வாஹா |
| ஓம் | ஐம் | பாசாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | கவசாய ஸ்வாஹா |
| ஓம் | ஔம் | அங்குசாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | நேத்ரத்ராய ஸ்வாஹா |
| ஓம் | அ: | ஸுரக்ஷாஸுரக்ஷாய ஹ்ரீம் ஹ்ரீம் பட் | அஸ்த்ராய ஸ்வாஹா |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த:

தியானம்

பாஸ்வன் மண்டலமத்யகாம் நிஜசிர: சின்னம் விகீர்ணாலகம்
ஸ்பாராஸ்யம் ப்ரபிபத்களாத் ஸ்வருதிரம் வாரே கரே பிப்ரதீம்।
யாபாஸக்த ரதிஸ்மரோபரிகதாம் ஸக்யௌ நிஜேடாகினீ
வர்ணின்யௌ பரித்ருச்ய மோதகலிதாம் ஸ்ரீசின்னமஸ்தாம்பஜே॥

1) ஓம் லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி
2) ஓம் ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி
3) ஓம் ரம் வன்ஹ்யாத்மிகாயை தீபம் தர்சயாமி
4) ஓம் யம் வாய்வாத்மிகாயை தூபம் ஆக்ராபயாமி
5) ஓம் வம் அம்ருதாத்மிகாயை அம்ருதம் மஹாநைவேத்யம் நிவேதயாமி
6) ஓம் ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி

மூலமந்த்ரம்
"ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீம் ஐம் வஜ்ர வைரோசனீயே ஹ்ரீம் ஹ்ரீம் பட் ஸ்வாஹா" (17 அக்ஷரங்கள்)

*மீண்டும் அங்கநியாஸம் திக்விமோக:, தியானம், லமித்யாதி பூஜை, ஸமர்பணம்.*

குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீத்வம் க்ருஹாணா ஸ்மத்க்ருதம்ஜபம்।
ஸித்திர் பவது மே தேவி த்வத்ப்ரஸாதான்மயிஸ்திரா॥

ஸ்ரீ மஹா கணபதயே நம:

❀❀❀

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில்
## ஸ்ரீ தூமாவதீ தேவீ
## "श्री दशमहाविद्यासु धूमावती देवी"

❀❀❀

ढक्कानादेन संतुष्टां ढक्कावादक सिद्धिदां।
ढक्कावादचलच्चित्तां भजे धूमावतीमहं॥

டக்கா நாதேன ஸந்துஷ்டாம் டக்கா வாதக ஸித்திதாம்।
டக்கா வாத சலச்சித்தாம் பஜே தூமாவதீமஹம்॥

रामाराध्यपदद्वन्द्वां रावणध्वंसकारिणीं।
रमेशरमणीपूज्यामहं धूमावतीं श्रये॥

ராமாராத்ய பதத்வந்த்வாம் ராவண த்வம் ஸ காரிணீம்।
ரமேச ரமணீபூஜ்யாம் அஹம் தூமாவதீம் பஜே॥
(தூமாவதீ ஹ்ருதய ஸ்துதி)

ஸ்ரீ மஹா கணபதயே நம:

# दश महाविद्यासु "श्री धूमावती विद्या"

## தசமஹாவித்யைகளில் "ஸ்ரீ தூமாவதீ வித்யா"

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ

ஸ்ரீ காளீ, தாரா, ஷோடசி, புவனேச்வரீ, பைரவீ, சின்னமஸ்தா, தூமாவதீ, பகளா, ராஜமாதங்கி, கமலாத்மிகா என்பன தச மஹா வித்யைகள் ஆகும். அதில் தூமாவதீ வித்யா (7) ஏழாவது வித்யையாகும். தச மஹா வித்யையில் தூமாவதி வித்யை தனித் தன்மை வாய்ந்ததாகும். இந்தத் தேவியின் காயத்ரீ.

ओं धूमावत्यै विद्महे संहारिण्यै धीमहि।
तन्नो धूमा प्रचोदयात्॥

ஓம் தூமாவத்யை வித்மஹே ஸம்ஹாரிண்யை தீமதி।
தன்னோ தூமா ப்ரசோதயாத்॥

எவளை புகையினின்றும் உதித்தவளாக அறிகின்றோமோ, எவளை (சத்ருக்களை) ஸம்ஹாரம் செய்பவளாகத் தியானிக்கின்றோமோ, அந்தத் தூமா என்ற பெயர் கொண்ட தூமாவதீ தேவீ நம்மை அவளுடைய ஞானத்திலும் தியானத்திலும் தூண்டட்டும்.

இவள் மந்த்ரம் எட்டு அக்ஷரங்கள் கொண்டது. சாரதா திலகத்தில்,

ओं धूं धूं धूमावति स्वाहा

ஓம் தூம் தூம் தூமாவதி ஸ்வாஹா

லக்ஷ ஜபம் புரச்சரண காலத்தில் செய்ய வேண்டும். இந்தத் தூமாவதி மந்த்ரத்தைக் கிருஷ்ண சதுர்தசி இரவில் சாப்பாடு இல்லாமல் தலையை விரித்துக் கொண்டு, திகம்பரனாய் பாழும் கோயிலில், ஜ்யேஷ்டா தேவியின் கோவிலில் அல்லது மலையில் காட்டில் ச்மசானத்தில் ஸ்ரீ தூமாவதியைத் தியானம் செய்து கொண்டு ஜபம் செய்ய மந்த்ரம் ஸித்தியாகும்.

पूर्वमेवं जपेत्पूर्वं ज्येष्ठागारे दिगंबरः।
रात्रौ कृष्णचतुर्दश्यां अनाशो मुक्तमूर्धजः॥
ततः शून्यालये शैले श्मशाने विपिनेपिवा।
पुरो धूमावतीं ध्यायन् जपेल्लक्षं क्षपाशनः॥

பூர்வமேவம் ஜபேத்பூர்வம் ஜ்யேஷ்டாகாரேதிகம்பரஃ।
ராத்ரௌ க்ருஷ்ணசதுர்தச்யாம் அனாசோ முக்தமூர்தஜஃ॥
ததஃ சூன்யாலயே சைலே ச்மசானே விபிநேபிவோ।
புரோ தூமாவதீம் த்யாயன் ஜபேத்லக்ஷம் க்ஷபாசனஃ॥

தூம்ாவதி கல்பத்தில் இவளுடைய தியானம் பின்வருமாறு.

काकारूढाऽतिकृष्णा प्रविरलदशना मुक्तकेशी विरक्ता
धूम्राक्षी क्षुत्तृषार्ता प्रतिभटचकिता चंचला कामलोला।
हृष्टा पुष्टालसांगी श्रमजलमलिना व्यक्तदर्पा विरूपा
भूतिं धूमावती वः प्रदिशतु विपुलां धूतशूर्पाग्रहस्ता॥

காகாரூடாதிக்ருஷ்ணா ப்ரவிரளதசனா முக்தகேசீ விரக்தா
தூம்ராக்ஷீக்ஷு த்த்ருஷார்த்தா ப்ரதிபடசகிதா சஞ்சலா காமலோலா।
ஹ்ருஷ்டா புஷ்டாலஸாங்கீ ச்ரமஜலமலினா வ்யக்ததர்பாவிரூபா
பூதிம் தூமாவதீவ: ப்ரதிசது விபுலாம் தூத சூர்பாக்ர ஹஸ்தா॥

காக்கையின் மீது வீற்றிருப்பவள். மிகவும் கருத்தவள். இடைவெளி கொண்ட பல்லினள். விரித்த கேசத்தினள். வெறுப்புடையவள். புகைநிறக் கண்ணினள். பசி, தாகத்தால் வருந்துபவள். சத்ருவைக் கண்டு அஞ்சுபவள். நிலையில்லாதவள். காமத்தில் ஈடுபட்டவள். மகிழ்வுடனும் இருப்பவள். கனத்த சோம்பல் படைத்த தேஹத்தினள். வேர்வை ஜலத்தால் அழுக்கடைந்தவள். கொழுப்புடையவள். அழகற்றவள். நுனிக் கையால் முறத்தை ஆட்டுபவள். இவ்வாறான தூமாவதி உங்களுக்கு நிறைந்த ஐச்வர்யத்தைக் கொடுக்கட்டும்.

ஸ்ரீ சாரதா திலகத்தின் உரைகாரர்:— ஸர்வ ஜனங்களுக்கும் துன்பத்தை விளைவிப்பவள். மிகவும் வெறுப்புடைய சித்தத்தினள். உயர்ந்த சரீரத்தினள் (நீண்ட உடலினள்). அழுக்கான ஆடையை உடையவள். அவிழ்த்து விடப்பட்ட முரட்டுக் கேசத்தினள். பதியற்றவள். இடைவிட்ட பல்லினள். காகத்தைக் கொடியாய் உள்ளவள். காக்கையின் குரலினள். முறம் போன்ற வயிற்றினள். கொடுங்கண்கள் மூன்றுடையவள். கலஹத்தில் ஈடுபாடுடையவள் என்று கூறுகின்றார்.



सर्वजनोद्वेगकारिणी अतिविषण्णचेताः दीर्घामलिनांबरा विमुक्त पुरुष केशा रुक्षा विधवा विरलदशना काकध्वजा काकरवा शूर्पोदरी रूक्षाक्षित्रितया कलहानुरक्तेतिध्यानं''

ஸர்வஜனோத்வேககாரிணீ அதிவிஷண்ணசேதாஃ தீர்கா மலினாம்பரா விமுக்த பருஷகேசா ரூக்ஷா விதவா விரளதசனா காகத்வஜா காகரவா சூர்ப்பேதரீ ரூக்ஷாக்ஷி த்ரயா கலஹானுரக்தேதி

இதே கருத்தைக் கொண்ட தியானத்தைக் கூறுகின்றது மந்த்ரமஹார்ணவம்.

अत्युच्चा मलिनांबराऽखिलजनोद्वेगावहा दुर्मनाः
रूक्षाक्षि त्रितया विशालदशना शूर्पोदरी चंचला।
प्रस्वेदांबुचिता क्षुधाकुलतनुः कृष्णातिरूक्ष प्रभा
ध्येया मुक्तकचा सदा प्रियकलिः धूमावती मन्त्रिणा॥

அத்யுச்சா மலினாம்பரா(அ)கில ஜனோத்வேகாவஹா துர்மனாஃ
ரூக்ஷாக்ஷித்ரிதயா விசாலதசனா சூர்ப்போதரீ சஞ்சலா।
ப்ரஸ்வேதாம்புசிதா க்ஷுதாகுலதனுஃ க்ருஷ்ணாதிரூக்ஷப்ரபா
த்யேயா முக்தகசா ஸதா ப்ரியகலிர் தூமாவதீ மந்த்ரிணா॥

மிக நீண்டவள். அழுக்காடை அணிந்தவள். அனைவருக்கும் துன்பம் தருபவள். நன் மனமில்லாதவள். கொடுமை விளைவிக்கும் முக்கண்ணினள். இடைவெளி உடைய பல்லினள். முறம் போன்ற வயிற்றினள். நிலையற்றவள். வேர்வை உடையவள். பசியுடையவள். கருத்தவள். துன்பம் விளைவிக்கும் காந்தியினள். விரித்த சடையினள். கலஹத்தில் ஈடுபட்டவள். இவ்வாறாக தூமாவதீயை ஜபிப்பவன். தியானிக்க வேண்டும். ப்ரபஞ்ச-ஸார ஸார ஸங்கஹம்: இவளுடைய தியானத்தை இரண்டு விதமாய்க் கூறியிருக்கின்றது.

இந்தத் தியானத்திற்காக மந்த்ரம் ஏழு அக்ஷரங்கள் கொண்டது.

धूं धूमावती स्वाहा, पंक्तिचन्दः ज्येष्ठादेवी देवता धूम् बीजं स्वाहा शक्तिः निग्रहे (सत्रुसंहारे) विनियोगः

தூம் தூமாவதீ ஸ்வாஹா ந்ருஸிம்ஹ ரிஷி! பங்தி சந்த: ஜ்யேஷ்டா தேவீ தேவதா. தூம் பீஜம் ஸ்வாஹா சக்தி: நிக்ரஹே *(சத்ருவை அழிப்பதில்)* வினியோக: (ஏழாயிரம் ஜபம்)

ध्यायेत्कालाभ्रनीलां विचलितवदनां काकनासाक्षिकण्ठां
संमार्जन्युल्कशूर्पैः युत मुसलकरां वक्रदन्तां विषास्यां।
ज्येष्ठां निर्वाणवेषां भ्रुकुटितनयनां मुक्तकेशामुदारां
शुष्कोत्तुंगाति तिर्यक्स्तन भरयुगलां निष्कृपां शत्रुहन्त्रीम्॥

த்யாயேத் காலாப்ரநீலாம் விவளிதவதனாம் காகநாஸாக்ஷிகண்டாம்
ஸம்மார்ஜன்யுல்கசூர்பைர்யுதமுஸலகராம் வக்ரதந்தாம் விஷாஸ்யாம்।
ஜ்யேஷ்டாம் நிர்வாணவேஷாம் ப்ருகுடித நயனாம் முக்தகேசாமு தாராம்
சுஷ்கோத்துங்காதிதிர்யக் ஸ்தன பரயுகலாம் நிஷ்க்ருபாம் சத்ருஹந்த்ரீம்॥

மேகம் போன்று கருத்தவளும், முகத்தைத் திருப்பிக் கொண்டிருப்பவளும், காக்கையின் மூக்கு, கண், கழுத்துக்களை உடையவளும், துடைப்பம், கொள்ளிக்கட்டை, முறம் இவற்றுடன் உலக்கை கொண்ட நாற்கரத்தினளும், கோணலான பற்களுடையவளும், விஷம் தோய்ந்த முகத்தினளும், திகம்பரையும், புருவம் சுளித்தகண்ணினளும், விரித்த சடையினளும், சிறந்தவளும், வற்றிய உயர்ந்த குறுக்காகப் படர்ந்த (குவியாத) ஸ்தன பாரமுடையவளும், கிருபை அற்றவளும் (தீயோரிடம்), சத்ருக்களை அழிப்பவளுமான ஜ்யேஷ்டா எனப் பெயர் கொண்ட ஸ்ரீ தூமாவதீ தேவியைத் தியானிக்க வேண்டும்.



வேறு கல்பத்தில் கூறப்பட்ட மற்றொரு தூமாவதீத் தியானமும் உள்ளது. இந்தத் தியானத்திற்கான மந்த்ரத்திற்கு க்ஷபணகர் ரிஷி, ஆகச்சந்த: ச்மசானவாஸினீ தேவதா யம் பீஜம் ரம் சக்தி: மாரணத்திலும், உச்சாடணத்திலும் உபயோகிக்கக் கூடியது இம் மந்திரம். யாம் யீம் என்று ஷடங்கங்களை கூறிக் கொள்ள வேண்டும். அந்த மந்த்ரம் பின்வருமாறு.

ओं यं रौं धूं धूमावति ओरुचुडले विरिविरि
अर्षल् अर्षल् वित्तेर कोण्डेनू कल्ळन् नरंबिनुळ्ळे
अपण्डु अपण्डु इरुन्दु इरुन्दु कडुघ कडुघ
विरिग विरिगपोह स्वाहा

ஓம் யம் ரௌம் தூம் தூமாவதி ஒருச்சுடலே விரிவிரி
அர்ஷல் அர்ஷல் வித்தேரகோண்டேன் கள்ளன் நரம்பினுள்ளே
அபண்டு அபண்டு இருந்து இருந்து கடுக கடுக
விரிக விரிகப் போக ஸ்வாஹா

என்று 10 ஆயிரம் முறைகள் ஜபிக்க வேண்டும் (இது வடமொழி மந்த்ரமாகத் தென்படவில்லை). இதன் பிரயோகாதிகள் மற்றை விபரங்களை *தஞ்சை ஸரஸ்வதி மஹால் லைப்ரரியிலிருந்து* வெளியான பிரபஞ்ச ஸார ஸங்க்ரஹம் மூலமாய்த் தெரிந்து கொள்ளலாம்.

द्विभुजां कृष्णवर्णां च त्रिनेत्रां सर्पभूषणां।
कपाल शूलं दधतीं चिन्तयेच्चितिवासिनीम्॥

த்விபுஜாம் க்ருஷ்ண வர்ணாம் ச த்ரிநேத்ராம் ஸர்பபூஷணாம்।
கபாலசூலம் ததீம் சிந்தயேச் சிதி வாஸினீம்॥

இரண்டு கையினள். முக்கண்ணி. ஸர்பங்களை அணியாகக் கொண்டவள். கபாலம், சூலம் கொண்ட இரு கரத்தினள். ச்மசான வாஸினி இவ்வாறாகத் தூமாவதீ தேவியைத் தியானிக்க வேண்டும்.

## தீயோரை அழிக்கவும் அவள் ஆவிர்பவிக்கிறாள்

இவளுடைய மந்த்ரம் சத்ரு நிக்ரஹம் செய்யப் பயன்படுகின்றது எனக் கூறப்பட்டுள்ளது. பக்தர்களைப் பரிபாலிப்பதற்காகத் தீயோர்களை மாய்ப்பதும் ஸ்ரீ பராசக்தியின் கடமையாகின்றதே! தேவீ பாகவதத்தில்,

यदा यदा हि साधूनां दुःखं भवति दानव।
तदा तेषां च रक्षार्थं देहं संधारयाम्यहं॥
अरूपायाश्च मे रूपं अजन्मायाश्च जन्म च।
सुराणां रक्षणार्थाय विद्धि दैत्य विनिश्चितं॥

யதா யதா ஹி ஸாதூனாம் துக்கம் பவதி தானவ।
ததா தேஷாம் ச ரக்ஷார்த்தம் தேஹம் ஸந்தாரயாம் யஹம்॥
அரூபாயாச்ச மே ரூபம் அஜன்மாயாச்ச ஜன்ம ச।
ஸுராணாம் ரக்ஷணார்த்தாய வித்தி தைத்ய விநிச்சிதம்॥

இது ஸ்ரீ துர்கா தேவியின் வாக்யம். மஹிஜாஸுரனைப் பார்த்து தேவீ கூறுவதாவது: "மஹிஷாஸுரா! எப்பொழுதெல்லாம் ஸாதுக்களுக்குத் துக்கம் நேருகின்றதோ, அப்போதெல்லாம் அவர்களைக் காக்கவே நான் தேஹம் எடுக்கிறேன். ரூபமற்றவள் நான். பிறப்பில்லாதவள் நான். ஆயினும் தேவர்களைக் காக்கவே ரூபத்தையும் பிறவியையும் எடுக்கிறேன் என்பதைத் திடமாக நம்புவாயாக" என்றாள். ஆக பயிரைக் காக்க களை எடுப்பது போல், உலகைக் காக்க சிலரை அழிக்கவும் வேண்டியிருக்கின்றது. ஆகவே, கருணைக் கடலான ஸ்ரீ பராசக்தி தூமாவதி போன்றவளாகவும் ஆவிர்பவிக்கின்றாள். இதை,

छेदिनीं दुष्टसंघानां भजे धूमावतीमहं। (७)
या जाता याचिता देवैः असुराणां विघातिनी॥ (८)

ச்சேதினீம் துஷ்டஸங்கானாம் பஜே தூமாவதீமஹம்। (7)
யா ஜாதா யாசிதா தேவைః அசுராணாம் விகாதினீ॥ (8)

என்ற "தூமாவதி ஹ்ருதய" ஸ்தோத்திரமும் வலியுறுத்துவதைக் காணலாம்.



உபாஸகன் இம் மந்த்ரத்தை ஜபம் செய்யும் போது தேவீ சத்ருவை நோக்கிச் செல்வது போலவும், தனக்கு முன்புறமாக இவ்வாறு போலவும் தியானம் செய்ய வேண்டும். இவள் சத்ருக்களை ஸம்ஹரிக்க, எருமை ரூபமாகவும், கழுகு ரூபமாகவும், பன்றியின் ரூபமாகவும் வருவாள் எனத் தெரிகின்றது.

## இம் மந்திரத்தினின்றும் காத்துக் கொள்ள வழிகள்

1. இந்த மந்திரத்தைத் தலைகீழாக 1000 முறை ஜபித்தால் சாந்தி ஏற்படும். மற்ற மந்த்ரங்களால் இம் மந்த்ர சக்தியைத் தடுக்க முடியாது என்று மந்த்ர சாஸ்திரம் கூறுகின்றது.
2. நிர்மால்ய தூபத்தால் இம் மந்திரம் சாந்தியடையும்.
3. அரசு இலை தூபத்தாலும் மந்திரம் சக்தி இழக்கும்.
4. பஞ்ச கவ்யம் அருந்துவதாலும், பாலினாலும் சாந்தி பெறும். இவ்வழிகள் அனைத்தையும் மந்திர சாஸ்திரங்களினின்றும் அனுபவம் மிக்கப் பெரியோர்களிடம் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

## ஜ்யேஷ்டா

இந்தத் தூமாவதியைக் குறிக்கும்போது "ஜ்யேஷ்டா" என்ற பெயரைக் குறிப்பிடுகின்றது மந்த்ர சாஸ்திரம் (சில இடங்களில்),

1. மந்த்ர மஹார்ணவத்தில் இந்தத் தூமாவதி மந்த்ரத்திற்கு பிப்பலாதர் ரிஷி. ந்ருசத் சந்த:, ஜயேஷ்டா தேவதா என்று குறிக்கப்பட்டிருக்கின்றது.
2. பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹத்தில் இவள் தியான சுலோகத்தில், "ध्यायेत्कालाभ्रनीलां ..... ज्येष्ठां निवार्णवेषां" என்று ஜ்யேஷ்டா என்ற பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. முதல் வெளியீட்டில் (756வது பக்கம்).
3. சாரதா திலகத்தில், அஸ்ய பிப்பலாதோ ரிஷி: ந்ருசத்சந்த: ஜ்யேஷ்டா தேவதா என்று கூறப்பட்டுள்ளது.
4. ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரத்தில்:—

धूमावतीमनुःप्रोक्तः शत्रुनिग्रहकारकः ।
पिप्पलादो मुनिःछन्दः निचृत् ज्येष्टा च देवता ॥

தூமாவதீமனுః ப்ரோக்தః சத்ருநிக்ரஹகாரகః।
பிப்பலாதோ முனிః சந்தః நிச்ருத் ஜ்யேஷ்டா ச தேவதா॥

என்று தேவதை இம் மந்திரத்திற்கு ஜ்யேஷ்டா எனத் தெரிகின்றது.

## ஸ்ரீ தூமாவதீ தேவியின் ஆவிர்பாவ ரஹ்யம்

முன்னொரு ஸமயம் பரமேச்வரன் தக்ஷ ப்ரஜாபதியின் புத்ரியான ஸதீ தேவியை மணந்து கொண்டார். பரமனைக் காண, கையிலை சென்ற அகந்தை கொண்ட தக்ஷனை, உள்ளே தர்சனம் செய்ய விடாமல் தடுத்து திரும்ப அனுப்பி விட்டார் நந்திகேச்வரர். தன்னைத் தன் மாப்பிள்ளையாகிய பரமன் வணங்கவில்லை என்றும், தக்ஷனுக்குச் சிவனிடம் கோபம் ஏற்பட்டது.

பிரம்மா செய்த வேள்வியில் நந்தி வந்தார். ஆனால் பரமன் கலந்து கொள்ளவில்லை. அங்குச் சிவனுக்கு ஹவிஸ் கொடுப்பதைத் தடுத்தான் தக்ஷன். நந்திகேச்வரர், "இனிச் சிவனை அழைத்து அவருக்கு ஹவிஸ் அர்ப்பணிக்காமல் வேள்வியைச் செய்வோரின் தலை போகும் என்றும், சிவனுக்கு ஹவிஸ் கொடுக்காத இவ் வேள்வியில் கலந்து கொண்ட தேவர்களுக்கு சூரனால் தொல்லை நேரிடும்" என்றும் சபித்து விட்டு கைலை திரும்பினார்.

அதுமுதற்கொண்டு யாரும் வேள்வி செய்யாமல் இருந்தனர். தக்ஷன் தான் துணிந்து சிவனை அழைக்காது, வேள்வியொன்றைச் செய்தான். அதில் மற்றைய தேவர்கள் கலந்து கொண்டனர். சிவனுக்கு அழைப்பு விடுக்கவில்லை.

இது தெரிந்த ஸதீ தேவி, யஞ்ய சாலைக்கு வந்தாள். தந்தையிடம் சிவனை அழைக்காமல் வேள்வி செய்வது நியாயமில்லை என்பதை எடுத்துரைத்தாள். அது அவன் செவியில் ஏறவில்லை. அகம் பிடித்த தக்ஷன் ஸதீயிடம், "உன்னையும் அழைக்கவில்லை; நீயும் செல்லலாம்" என்றான். ஸதீ கோபம் கொண்டாள். தக்ஷனின் ஸம்பந்தம் கொண்ட



தன் சரீரத்தை அந்த வேள்விச் சாலையிலேயே விடுவதாய் முடிவு கொண்டாள்.

इत्युक्त्वा योगमास्थाय स्वदेहोद्भवतेजसा।
निर्दहन्ती तदात्मानं........... ॥

இத்யுக்த்வா யோகமாஸ்தாய ஸ்வதேஹோத்பவ தேஜஸா।
நிர்தஹந்தீ ததாத்மானம்........ ॥ (புராணம்)

सती सती योगविसृष्टदेहा
ஸதீ ஸதீ யோகவிஸ்ருஷ்டதேஹா॥ (குமார ஸம்பவம் -காளிதாஸன்)

என்றபடி தன் தேஹத்தை தானே தன் யோக சக்தியால் அக்னிக் குண்டத்தில் வீழ்ந்து அழித்துக் கொண்டாள்.

இங்கு சாக்த தந்த்ரம் கூறும்:— ஸதீ தக்ஷ ப்ரஜாபதியின் வேள்வியில் குண்டத்தில் தன் சரீரத்தை வீழ்த்தினாள். அதனால் அதற்கு கௌரீ குண்டம் எனப் பெயர் ஏற்பட்டது. அந்த அக்னிக் குண்டத்திலிருந்து புகை எழுந்தது. அந்தப் புகை மண்டலமே தூமாவதீ என்ற சக்தியாய் ஆவிர்பவித்தது. தூமத்திலிருந்து எழுந்ததனால் அந்தச் சக்திக்கு தூமாவதீ என்ற பெயர் ஏற்பட்டது. இவள் வீர பத்திரர் காளிகள் பைரவிகள் இவர்களோடு கூடி, தக்ஷ யஞ்ஞத்தை அழித்திருப்பாள் எனத் தோன்றுகின்றது. தூமாவதீயின் ஆவிர்பாவம் மட்டுமே தந்த்ரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

இவள் ஆவிர்பவித்த ஸமயம், பால்குன மாதம், செவ்வாய்க் கிழமை, அக்ஷய்ய த்ருதீயை, ஸாயங்கால ஸமயம் உதித்தாள். இவள் सर्व संहारचंचला (ஸர்வ ஸம்ஹாரசஞ்சலா). அனைத்தையும் ஸம்ஹாரம் செய்யும் சக்தி படைத்தவள். கருத்த முகம் உடையவள். कालमुखी (காலமுகீ) என்றும் தந்த்ரம் பேசுகின்றது. ஆகவே, தூமாவதீ என்ற பெயர் எப்படி ஏற்பட்டது என்பதற்கான காரணத்தை விளக்கியிருக்கின்றது இந்த வரலாறு.

முன் தூமாவதீயை ஜ்யேஷ்டா என்ற சொல்லால் குறிப்பிடுகின்றது மந்த்ர சாஸ்திரம் என்று கூறப்பட்டது. அந்த ஜ்யேஷ்டா என்பவள் பற்றி

புராணங்கள் குறிப்பிடுகின்றன. அந்த ஜ்யேஷ்டா தேவியா தூமாவதி! புராணங்கள் கூறும் ஜ்யேஷ்டா தேவி பற்றிய வரலாற்றை இங்கே காண்போம்.

## பாத்ம புராணம் கூறும் ஜ்யேஷ்டா தேவீ

அம்ருத மதனத்தின் போது ஸ்ரீ மஹாலக்ஷ்மீ ஆவிர்பவித்தாள். விஷ்ணு அவளை மணப்பதற்குத் தயாரானார். தேவர்களும் விஷ்ணுவிடம் மஹா லக்ஷ்மியை மணக்குமாறு வேண்டினார்கள். அப்போது லக்ஷ்மீ கூறினாள்.

**अविवाह्य कथं ज्येष्ठां अलक्ष्मीं मधुसूदन।**
**तस्याः कनिष्ठां मां नाथ व्यूढां त्वं कर्तु मिच्छसि।।**
**ज्येष्ठायां च स्थितायां वै कनिष्ठा परिणीयते।।**

அவிவாஹ்ய கதம் ஜ்யேஷ்டாம் அலக்ஷ்மீம் மதுஸூதன।
தஸ்யா: கனிஷ்டாம் மாம் நாத வ்யூடாம் த்வம் கர்த்துமிச்சஸி॥
ஜ்யேஷ்டாயாம் ச ஸ்திதாயாம் வை கனிஷ்டா பரிணீயதே॥

எனக்கு மூத்தவளாகிய அலக்ஷ்மீக்கு விவாஹம் செய்யாமல் தங்கையாகிய என்னை விவாஹம் செய்து கொள்ள விரும்புகின்றீர். மதுஸூதனரே! மூத்தவள் இருக்கும்போது தங்கை விவாஹம் செய்து கொள்வாளா! இதுகேட்ட விஷ்ணு, உத்தாலகர் என்ற மஹர்ஷிக்குத் தேவர்களுடன் கூடி வைதிக முறைப்படி அலக்ஷ்மியை மணம் முடித்தார். பின் லக்ஷ்மீயைத் தான் ஏற்றுக் கொண்டார்.

## இந்த அலக்ஷ்மீ என்பவள் யார்?

பாற்கடல் கடையும்போது விஷம் வெளிவர, அதை தேவர் வேண்டுகோளுக்கு இணங்கி, பகவான் சாப்பிடவுடன் கடலிலிருந்து அலக்ஷ்மீ உதயமானாள். அவள் கருத்த முகத்தினள். சிவந்த கண்ணினள். மஞ்சள் நிறக் கேசத்தினள். கிழவியின் உருவம். இப்படி இருந்தாள் அலக்ஷ்மீ. அவள் தேவர்களைப் பார்த்து, "தேவர்களே! நான் என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டாள். தேவர்கள் துக்கிக்கும் அவளைப் பார்த்து, "எவர் வீட்டில் சண்டை நடக்கின்றதோ, அங்கு நீ ஸுகமாக



வாஸம் செய். எவர் கொடூரமாய்ப் பேசுகின்றனரோ, பொய் கூறுகின்றனரோ, ஸந்தியா காலத்தில் சாப்பிடுகின்றனரோ அவர் வீட்டில் அவர்களுக்குத் துக்கமளித்துக் கொண்டிரு. மண்டை ஓடு, கேசம், சாம்பல், எலும்பு, உமி, நெருப்பு உள்ள இடத்தில் நீ இரு. பாதங்களைச் சுத்தி செய்து கொள்ளாமல் சாப்பிடுபவர் வீட்டில், அவர்களுக்குத் துக்கத்தையும் வறுமையையும் கொடுத்துக் கொண்டு இரு. மணல், உப்பு, கரி இவற்றைக் கொண்டு பல் விளக்குபவர் வீட்டில் கலியுடன் கூட இரு. குரு, தேவர், அதிதிகளுக்கு எங்கு பூஜை நடைபெறவில்லையோ, வேத முழக்கம் எங்கு இல்லையோ அங்கு அசுபையாகிய நீ இரு. பிறர் மனைவியை விரும்புபவன், பிறர் பொருளை அபஹரிப்பவன், அந்தணன் மற்றும் நல்லோர் இவர்களுக்குப் பூஜை செய்யாதவன் இவர்கள் வீட்டில் பாபத்தையும், வறுமையையும் அளித்துக் கொண்டு இருப்பாயாக. இவ்வாறு கூறிவிட்டு, பின் அமிர்த மதனம் செய்தனர். இதன் பின்னர்தான் மஹாலக்ஷ்மி உதித்தாள். அவளை விஷ்ணு மணந்து கொண்டார்.

**ततोऽलक्ष्मी समुत्पन्ना कालास्या रक्तलोचना।**
**रक्तपिंगलकेशाच जरतीं बिभ्रती तनुं।।**
**साच ज्येष्ठाऽब्रवीद्देवान् किं कर्तव्यं मयेति वै।**
**देवास्तदा ब्रुवंस्तावे देवीं दुःखस्य भाजनं।।**
**येषां नृणां गृहे देवि कलहः संप्रवर्तते।।**
**तत्र स्थानं प्रयच्छामो वस ज्येष्ठे शुभान्विता।**
**निष्ठुरं वचनं ये च वदन्ति येऽनृतं नराः।।**
**सन्ध्यायां येहि चाश्नन्ति दुःखदा तिष्ठ तद्गृहे।।**
**कपालकेश भस्मास्थि तुषांगाराणि यत्रतु।**
**स्थानं ज्येष्ठे तत्र तव भविष्यति न संशयः।।**
**अकृत्वा पादयोर्धौतिं येचाश्नन्ति नराधमाः।**
**तद्गृहे सर्वदा तिष्ठ दुःखदारिद्र्यदायिनी।**
**वालुकालवणांगारैः कुर्वन्ति दन्तधावनं।**
**तेषां गेहे सदानिष्ठ दुःखदा कलिना सह।।**

...............................

...............................

...............................

गुरुदेवातिथीनां च यत्र पूजा न विद्यते।
यत्र वेदध्वनि र्नास्ति तत्र तिष्ठ सदाशुभे।
परदाररता यत्र परद्रव्यापहारिणः ॥
विप्रसज्जनवृद्धानां यत्र पूजा न विद्यते।
तत्र स्थाने सदा तिष्ठ पाप दारिद्र्यदायिनी ॥
इत्यादिश्य सुराः ज्येष्ठां सर्वे ते कलिवल्लभां।
क्षीराब्धे र्मथनं चक्रुः पुनस्ते सुसमाहिताः ॥

ததோலக்ஷ்மீ ஸமுத்பன்னா காலாஸ்யா ரக்த லோசனா।
ரத்தபிங்களகேசாச ஜரதீம் பிப்ரதீ தனும் ॥
ஸாச ஜ்யேஷ்டாப்ரவீத் தேவான் கிம் கர்த்தவ்யம் மயேதிவை।
தேவாஸ்ததாப்ருவன் தாம்வை தேவீம்துக்கஸ்ய பாஜனம் ॥
யேஷாம் ந்ருணாம் க்ருஹேதேவி கலஹ: ஸம்ப்ரவர்த்ததே।
தத்ரஸ்தானம் ப்ரயச்சாமோ வஸ ஜ்யேஷ்டே சுபான்விதா।
நிஷ்டுரம்வசனம்யேச வதந்தியே(அ)ன்ருதம் நரா:।
ஸந்த்யாயாம் யேஹி சாச்னந்தி துக்கதா திஷ்ட தத்க்ருஹே ॥
கபாலகேச பஸ்மாஸ்தி துஷாங்காராணி யத்ரவை।
ஸ்தானம் ஜ்யேஷ்டே தத்ர தவ பவிஷ்யதி ன ஸம்சய: ॥
அக்ருத்வா பாதயோர்தௌதிம் யேசாச்னந்தி நராதமா: ॥
தத்க்ருஹே ஸர்வதா திஷ்ட துக்கதாரித்ரிய தாயினீ ॥
வாலுகாலவணாங்காரை: குர்வந்தி தந்த தாவனம்।
தேஷாம் கேஹே ஸதா திஷ்ட துக்கதா கலினா ஸஹ ॥

...............................

...............................

...............................

குரு தேவாதிதீனாம் ச யத்ர பூஜா நவித்யதே।
யத்ர வேதத்வனிர் நாஸ்தி தத்ரதிஷ்ட ஸதாசுபே ॥
பரதாரரதா யத்ர பரத்ரவ்யாபஹாரிண:।



விப்ரஸஜ்ஜவ்ருத்தானாம் யத்ர பூஜா ந வித்யதே ॥
தத்ர ஸ்தானே ஸதா திஷ்ட பாபதாரித்ரிய தாயினீ।
இத்யாதிச்ய ஸுரா: ஜ்யேஷ்டாம் ஸர்வே தே கலிவல்லபாம் ॥
க்ஷீராப்தேர் மதனம் சக்ரு: புனஸ்தே ஸுஸமாஹிதா: ॥

## மத்ஸ்ய புராணத்தில் ஜ்யேஷ்டா

இங்கு அலக்ஷ்மியின் வரலாறு பத்ம புராணத்தின் பிற்பகுதிபோல் காணப்படுகின்றது.

விஷ்ணு வாக்கியப்படி அவளை மணந்து கொண்ட 'உத்தாலகர் (நீண்ட நாள் தவம் புரிந்தவர் सुदीर्घतपाः) அவளைத் தன் ஆச்ரமம் அழைத்துச் சென்றார். அந்த ஆச்ரமத்தில் வேதத்வனியும், ஹோமப் புகையின் நல் வாசனையும், வித்யா கோஷமும் நிறைந்திருந்தது. அதைக் கண்டு அவள் வேதனைப்பட்டாள். பர்த்தாவைப் பார்த்து, ''பகவன்! இம் மாதிரியான இடங்களில் நான் இருக்க மாட்டேன். வேறிடம் அழைத்துச் செல்லுங்கள்'' என்றாள். உனக்குப் பிடித்த இடத்தைக் கூறு என் உத்தாலகர் கேட்க, அவள், ''வேதத்வனி உள்ள இடம், அதிதி பூஜை நடக்கும் இடம், யஞ்ய தானாதிகள் செய்யுமிடம் இவை எனக்குப் பிடிக்காது. அனுகூலமான தம்பதியர் உள்ள இடம், பித்ரு தேவர்களுக்கு ஆராதனை செய்யுமிடம் எனக்கு உதவாது. சூதாடுபவர், பிறர் பொருளை அபஹரிப்பவர், பிறர் மனை விரும்புபவர் அங்கு நான் இருப்பேன். விருத்தர், நல்லோர், அந்தணர் இவர்க்கு அவமானம் நேருமிடத்திலும், கொடுஞ்சொல் உள்ள இடத்திலும் நான் இருப்பேன்'' என்றாள்.

இதைக் கேட்டு வேதனையுற்ற உத்தாலகர், விஷ்ணுவின் வாக்யத்தை நினைத்து ஒன்றும் கூறாது, எங்கும் தேடிப் பார்த்து இடம் கிடைக்காமல் ஒரு அரச மரத்தடியில் அவளை உட்கார வைத்து விட்டு, ''இடம் பார்த்து வருகிறேன்; அதுவரை இங்கேயே இரு'' என்று கூறிச் சென்று விட்டார்.

அவள் வருந்தினாள். அப்போது லக்ஷ்மீ, கருணா மூர்த்தியான விஷ்ணுவுடன் அவளிடம் வந்தாள். விஷ்ணு அவளிடம் கூறினார். ''நீ இந்த அரச மரத்தடியில் எப்போதும் இரு. இது என் அம்சமானது. சனிக் கிழமை தோறும் லக்ஷ்மீ இங்கு வருவாள். ஆகையால் சனிக்கிழமை மட்டும் நீ அரச மரத்தடியில் தங்காதே. ஆகையால் அசுவத்த விருக்ஷம்

(அரச மரம்) சனிக் கிழமையில் பூஜைக்குரியதாகின்றது. உன்னைத் தினமும் அர்ச்சிப்பவர்களிடம் உன் தங்கையாகிய மஹாலக்ஷ்மீ நிலைபெற்றிருப்பாள்'' எனக் கூறிச் சென்று விட்டார்.

## லிங்க புராணம் கூறும் ஜ்யேஷ்டா

லிங்க புராணமும் இதன் பின் வரலாறு போன்று அமைந்துள்ளது. உத்தாலகர் மார்க்கண்டேயரிடம் சென்று, விபரம் கூறி, எங்கு ஜ்யேஷ்டாவைத் தங்க வைக்கலாம் என்று கேட்க, மார்க்கண்டேயர் இவ்வாறு கூறினார்.

यस्य काली गृहे देवी प्रेतरूपा च डाकिनी।
क्षेत्र पालोऽथवा यत्र तत्र तूर्णं समाविश ॥

யஸ்ய காளீ க்ருஹே தேவீ ப்ரேதரூபா ச டாகினீ।
க்ஷேத்ர பாலோ(அ)தவா யத்ர தத்ர தூர்ணம் ஸமாவிச ॥

எவன் வீட்டில் தேவீ காளியும், ப்ரேத ரூபம் கொண்ட டாகினியும் அல்லது க்ஷேத்ரபாலன் இருக்கின்றார்களோ, அங்கு நீ பிரவேசித்திரு. பின் உத்தாலகர் அவளை அழைத்துச் சென்று, ''இங்கு இரு'' என அவளை இருத்தி விட்டு, ரஸாதலம் சென்று விட்டார். அவள் விஷ்ணுவிடம்,

भर्ता गतो महाबाहो विलं त्यक्त्वा स मां प्रभो।
अनाथाहं जगन्नाथ वृत्तिं देहि नमोस्तु ते ॥

பர்த்தா கதோ மஹாபாஹோ பிலம் த்யக்த்வா ஸமாம் ப்ரபோ।
அனாதாஹம் ஜகன்னாத வ்ருத்திம் தேஹி நமோஸ்து தே ॥

பர்த்தா என்னை விட்டு பாதாளம் சென்று விட்டார். நான் நாதனின்றி இருக்கிறேன். எனக்குக் கதி கற்பிக்க வேண்டும் எனக் கேட்டாள். விஷ்ணு சொன்னார்,

ये रुद्रमनघं शर्वं शंकरं नीललोहितं।
अंबां हैमवतीं चापि जनित्रीं जगतामपि ॥
मद्भक्तान्निन्दयन्त्यत्र तेषां वित्तं तवैव हि।



येपि चैवं महादेवं विनिन्द्यैव यजन्ति मां ॥
मूढा ह्यभाग्याः मद्भक्ताः अपि तेषां धनं तव ॥

யே ருத்ரமனகம் சர்வம் சங்கரம் நீலலோஹிதம்।
அம்பாம் ஹைமவதீம்சாபி ஜனித்ரீம் ஜகதாமபி ॥
மத்பக்தான் நிந்தயந்த்யத்ர தேஷாம் வித்தம் தவைவஹி।
யேபி சைவம் மஹாதேவம் வினிந்த்யைவ யஜந்திமாம் ॥
மூடாঃ ஹ்யபாக்யாঃ மத்பக்தாঃ அபிதேஷாம் தனம் தவ ॥

குற்றமற்ற பரமேச்வரனையும், ஜகஜ்ஜனனீயாகிய பார்வதியையும், என் பக்தர்களையும் நிந்திப்பவர் தனம் உன்னதாகட்டும். யார் மஹாதேவனை நிந்தித்துக் கொண்டு, என்னைக் குறித்து வேள்வி இயற்றுகின்றார்களோ, அந்தப் பாக்யமில்லா பக்தர்களின் தனமும் உனதாகட்டும் எனக் கூறிச் சென்று விட்டார். இவ்வாறு கூறி அலக்ஷ்மி இல்லாதிருக்க, விஷ்ணு சங்கரரைத் துதித்தார்.

இங்கு ஸதி தேவி யோக சக்தியால் அக்னியை உண்டாக்கி, தன்னை அதில் அர்ப்பணித்துக் கொண்டாள். அந்த அக்னியிலிருந்து உதித்த புகை வடிவினளே தூமாவதீ.

ஸதீ தேவீ மீண்டும் ஹிமாலயத்திற்குப் பெண்ணாய்ப் பிறந்தாள். இந்தத் தூமாவதியும் அமிர்தம் கடையும்போது ஜ்யேஷ்டா தேவியாய்ப் பிறந்திருக்கலாமோ எனத் தோன்றுகின்றது. தூமாவதி மந்த்ரத்திற்கு ஜ்யேஷ்டா தேவதா எனக் கூற, வேறு காரணங்களும் இருக்கலாம். இது பற்றி மந்த்ர சாஸ்திரம் நன்கறிந்த மஹாத்மாக்களே ஆராய்ந்து தெளிவுபடுத்த வேண்டும். ககாராதி க்ஷகாராந்தமாக இவள் ஸ்துதியும் மஹார்ணவத்தில் உள்ளது. படித்தும் பயன் பெறலாம். இந்தத் தூமாவதீ மந்த்ரத்தின் ரிஷி பிப்பலாதர் (पिप्पलादः) என்று கூறப்பட்டுள்ளது. அவர் பற்றிய செய்தி பாத்மஸ்காந்த புராணங்களில் உள்ளது. அதுவும் இங்கு நோக்குதற்குரியதாகும்.

## பாத்மம் பேசும் பிப்பலாதர் வரலாறு

முன்பொரு ஸமயம் தேவாஸுரப் போராட்டம் நடந்தது. அதில் அசுரர்களிடம் தேவர்கள் தோற்றனர். உடன் தேவர் தத்தம் ஆயுதங்களைப் பத்திரமாக இருக்கக் கருதி, ததீசியின் ஆச்ரமம் வந்து, அவரிடம் கூறி, அவர் ஆச்ரமத்தில் பாதுகாப்பாக வைத்து விட்டு மறைந்தனர். ததீசி

அவற்றைப் பாதுகாத்து வந்தார். ஒருநாள் அசுரர்கள் வரும் கோலாஹலச் சத்தம் கேட்டது. ஆயுதங்களை அசுரர் பறித்துக் கொள்வர் எனக் கருதி, ததீசி அவற்றை ஜலத்தில் கரைத்துக் குடித்து விட்டார்.

பன்னாட்கள் கழித்து தேவர்கள் வந்து, தத்தம் ஆயுதங்களைக் கேட்டனர். ததீசி விபரத்தைக் கூறினார். அதைக் கேட்ட தேவர்கள், "அப்படியானால் தங்கள் சரீரத்திலுள்ள அஸ்திகளை (எலும்புகளை) கொடுங்கள். அதனால் நாங்கள் எங்கள் ஆயுதங்களை மீண்டும் செய்து கொள்ளுகின்றோம்" என்றனர்.

ததீசி சரி எனக் கூறி, யோக சக்தியால் பிராணனை விட்டு விட்டார். தேவர் காமதேனுவை அழைத்து, அவர் தேஹத்திலுள்ள தோலையும் சதையையும் நக்கி எடுத்து விடுமாறு கூறினர். சுரபியும் அவ்வாறே செய்தது. தேவர்கள் அவருடைய எலும்புகளைக் கொண்டு தத்தம் ஆயுதங்களைச் செய்து கொண்டனர்.

ததீசியின் மனைவி, "ஸுவர்சா" என்பவள் ஆசிரமம் வந்து விபரமறிந்து, துக்கத்தில் அலறினாள். கோபம் கொண்டு, "தேவர்களே! நீங்கள் துஷ்டர்கள். பலரால் சபிக்கப்பட்டவர்கள். பேராசை பிடித்தவர்கள். இனி இந்திரன் முதலான தேவர்கள் அனைவருக்கும் புத்திரப்பேறு கிடைக்காது போகட்டும்" எனச் சாபமிட்டாள். அந்த ஸமயம் ஸுவர்சா கர்ப்பமுற்றிருந்தாள். அவள் உடன் அரச மரத்தடியில் அமர்ந்து, தன் வயிற்றைப் பிளந்தாள். அவள் வயிற்றிலிருந்து குழந்தை வெளி வந்தது. அந்தத் ததீசியின் குழந்தை ஸாக்ஷாத் ருத்ரனின் அவதாரம் என்று கூறுகிறது புராணம். அரச மரத்தடியில் பிறந்ததால் அந்தக் குழந்தைக்குப் பிப்பலாதன் எனப் பெயர் சூட்டி, "குழந்தாய் நீ இங்கேயே இரு. உலகத்திற்குச் சுபம் செய்" எனக் கூறி, பரம ஸமாதியில் அமர்ந்து, தன் சரீரத்தைத் தியாகம் செய்தாள் ஸுவர்சா.

அதன்பின் பிப்பலாதர் பன்னெடுங்காலம் தவம் செய்து, தாயின் வார்த்தையை நினைத்து, தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமையையும் நினைத்து, படபானலம் (எல்லாவற்றையும் அழிக்கும் நெருப்பு. இது ஸமுத்ரத்தின் நடுவில் உள்ளது என்பர்) போன்ற ஒரு கிருத்யாவை (மரணம் விளைவிக்கும் தேவதை) உண்டு பண்ணினார். அது அவர் ஆணைப்படி சென்று, கோலன் என்ற அசுரனைக் கொன்றது.



## கோலன் என்பவன் யார்?

முன்பு ததீசி அவர் ஆச்ரமத்தில் தவம் செய்யும்போது கோலன் என்ற அசுரன் அவர் தவத்திற்கு இடையூறு செய்தான். அதை அறிந்தார் பிப்பலாதர். அதற்காக க்ருத்யாவை உண்டாக்கினார். மற்ற புராணங்களில் உள்ள பிப்பலாத சரிதம் இதனுடன் தொடர்பு கொண்டதாய் இல்லை. ஆகவே ததீசி புத்ரராகிய பிப்பலாதர் உண்டாக்கிய க்ருத்யா ஸ்ரீ தூமாவதியாய்த்தான் இருக்க வேண்டும் எனத் தோன்றுகின்றது. ஸ்ரீ தூமாவதி தேவி அனைவருக்கும் மங்களம் உண்டாக்குவாளாக.

## श्री धूमावती जपविधानं
## ஸ்ரீ தூமாவதீ ஜபவிதானம்

अस्य श्री धूमावती महामन्त्रस्य पिप्पलाद ऋषिः नृचच्छन्दः ज्येष्ठा देवता धूं बीजं स्वाहा शक्तिः धूमावती कीलकं

**करन्यासः**

1. ओं धूं धूं अंगुष्ठाभ्यां नमः
2. ओं धूं तर्जनीभ्यां नमः
3. ओं मां मध्यमाभ्यां नमः
4. ओं वं अनामिकाभ्यां नमः
5. ओं तीं कनिष्ठिकाभ्यां नमः
6. ओं स्वाहा करतलकरपृष्ठाभ्यां नमः

**अंगन्यासः**

1. ओं धूं धूं हृदयाय नमः
2. ओं धूं शिरसे स्वाहा
3. ओं मां शिखायै वषट्
4. ओं वं कवचाय हुं
5. ओं तीं नेत्रत्राय वौषट्

உ

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ ராஜமாதங்கி வித்யா

❀❀❀

# IX

## ஸ்ரீ தச மஹா வித்யைகளில்
## ஸ்ரீ ராஜமாதங்கி வித்யா

❀❀❀

## ''श्री दशमहाविद्यासु राजमातङ्गिविद्या

माता मरकत श्यामा
मातंगी मधुशालिनी
कुर्यात्कटाक्षं कल्याणी
कदंबवन वासिनी ॥

மாதா மாகதச்யாமா
மாதங்கீ மதுசாலினீ ।
குர்யாத் கடாக்ஷம் கல்யாணீ
கதம் பவன வாஸினீ ॥

## श्री राज मातंगी

### ஸ்ரீ ராஜ மாதங்கி



माणिक्यवीणामुपलालयन्तीं
मदालसां मंजुलवाग्विलासां।
माहेन्द्रनीलद्युति कोमलांगीं
मातंगकन्यां मनसा स्मरामि॥ (कालिदासः)

மாணிக்யவீணா முபலால யந்தீம்
மதாலஸாம் மஞ்ஜுள வாக்விலாஸாம்।
மாஹேந்த்ர நீல த்யுதிகோமளாங்கீம்
மாதங்ககன்யாம் மனஸா ஸ்மராமி (காளிதாஸன்)

*மாணிக்க வீணையை அனாயாஸமாய் வாசிப்பவளும், மதம் உடையவளும் (காதம்பரீ மதுவை அருந்தியதால்), இனிமையான வாக்விலாஸம் உடையவளும், இந்திர நீலக்கல் போன்ற ஒளியுடைய அழகிய தேஹமுடையவளும், மதங்க மஹர்ஷியின் புத்திரியுமான ஸ்ரீ மாதங்கி தேவியை மனத்தில் ஸ்மரிக்கின்றேன் (தியானம் செய்கின்றேன்).*

## श्री मन्त्रिण्यंबा स्तुतिः

### ஸ்ரீ மந்த்ரிண்யம்பா ஸ்துதிः

अतिरमणीय विपंचिकयांचित कंकणभूषितमंजुकरे।
सबल विषंग विनाशिनि पालित लोकतते ललिताभिमते॥
निखिलकलामय चाप शरप्रद रम्यशुकाश्रित चारुकरे
जय सचिवेश्वरि सप्तमहावरणोज्वल गेयसुचक्ररथे॥

(मुत्तु स्वामि शास्त्री)

அதிரமணீய விபஞ்சிகயாஞ்சித கங்கணபூஷித மஞ்ஜுகரே।
ஸபலவிஷங்கவினாசினி பாலித லோக ததே லளிதாபிமதே॥

நிகிலகலாமய சாப சரப்ரத ரம்ய சுகாச்ரித சாருகரே।
ஜய ஸசிவேச்வரி ஸப்தமஹா வரணோஜ்வல கேய ஸுசக்ர ரதே॥
(முத்து ஸ்வாமி சாஸ்திரி)

ஏழு ஆவரணங்கள் கொண்ட கேய சக்ரம் என்ற ரதமுடையவளும், அனைத்துக் கலைகளின் உருவமாயும், வில், அம்பு இவற்றை அளிப்பதுமாயும் உள்ள கிளியுடன் கூடிய கையினளும், மிக அழகிய வீணை அலங்கரிக்கும் கங்கணமணிந்த அழகிய கரமுடையவளும் சேனையுடன் கூடிய விஷங்கனை அழித்தவளும், உலகங்களைக் காத்தவளும், ஸ்ரீ லளிதைக்கு வேண்டியவளுமான மந்த்ரிணீ அம்பா வெற்றியுடன் விளங்கட்டும்.



# श्री दशमहाविद्यासु मातंगिनी विद्या

## ஸ்ரீ தசமஹா வித்யைகளில் மாதங்கினீ வித்யா

ஐந்தூ ஐந்தூ ஐந்தூ

ऐं शुकप्रियायै विद्महे क्लीं कामेश्वर्यै धीमहि।
तन्नः श्यामा प्रचोदयात्॥ (मन्त्रमहोदधिः)

ஐம் சுகப்ரியாயை வித்மஹே க்லீம் காமேச்வர்யை தீமஹி।
தன்னஃ ச்யாமா ப்ரசோதயாத்॥ *(மந்த்ரமஹோததி)*

எவளைக் கிளியிடம் அன்பு கொண்டவளாக (இக் கிளி ஸர்வ கலைகளின் ஸ்வரூபமாகும்) அறிகின்றோமோ, எவளைக் காமேச்வரியாகத் தியானிக்கின்றோமோ (இஷ்டங்களை அளிக்கும் ஈச்வரியாக) அவள் அந்த ஞானத்திலேயும், தியானத்திலேயும் எங்களைத் தூண்டட்டும்.

### மதங்கர்

ஸ்ரீ காளி, தாரா, ஷோடசி (லலிதா), புவனேச்வரீ, பைரவீ, சின்னமஸ்தா, தூமாவதி, வகளா, மாதங்கி, கமலா எனப்படும் தச மஹா வித்யைகளில் ஒன்பதாவதாகக் கூறப்படுவது ஸ்ரீ மாதங்கி வித்யா. இந்த மாதங்கி என்ற சக்திக்கு "மாதங்கி" எனப் பெயர் வரந்த காரணத்தைப் புராண வரலாறு நமக்குத் தெரியப்படுத்துகின்றது. அதை இங்கே காண்போம்.

பிரளய காலத்தில் உலகெங்கும் ஜல மயமாய் இருந்தது. இந்த ஸமயம் பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்காக பிரம்மாவும், விஷ்ணு, ருத்ரரும் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்தனர்.

அதில் பிரம்மா சிவனை, "மதங்க" ரூபமாய் (அதாவது யானை வடிவில்) தியானம் செய்தார். அந்த ஸமயம் பிரம்மாவின் மனத்திலிருந்து ஒரு முனிவர் உதித்தார். அவரே பிரம்மாவின் மானஸ புத்திரராகிய மதங்க முனிவர். அவர் பிரம்ம தேவனின் ஆணையால்

பூமியில் சிவனைக் குறித்துத் தவம் செய்யப் புறப்பட்டார். உலகம் ஜல மயமாய் இருந்ததால் பூமி தென்படவில்லை. ஆகவே, ஆகாயத்திலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்த மதங்க முனிவர், நாரத மஹர்ஷியைக் கண்டு, தவம் செய்வதற்கு உசிதமான ஒரு இடத்தைக் காட்டுமாறு வேண்டினார். நாரதர் மதங்கரைப் பார்த்து, பூமியில் "சுவேத வனம்" (திருவெண்காடு) என்றொரு இடம் உள்ளது. அங்கு பிரம்ம தேவர் மஹா ப்ரளய காலத்தில் ஐக்கியமாகி விடுவார் (திருவெண்காட்டில் ப்ரம்ஹ சம்சானம் உள்ளது. அதைக் குறிப்பிட ஸ்ரீ பிரம்ம வித்யாம்பிகை கோயிலின் வட புறத்தில் சந்திர புஷ்கரினி தீர்த்தத்திற்கு மேற்புறத்தில் இன்றும் அமைக்கப்பட்டுள்ள ஸமாதியைக் காணலாம்). அது சுத்த ஸத்வ மயமான பூமியாகும். முனிவர்களுடைய சிறந்த வாஸஸ்தலம். மஹா ப்ரளய காலத்திலும் அந்த க்ஷேத்ரம் அழியாமல் இருக்கும். அது சிவ சூலத்தால் தாங்கப் பெற்றிருப்பதால் அது அழியாமல் இருக்கும் என திருவெண்காட்டுப் புராணம் கூறும்.

शूलाग्रे विधृतं शंभोः சூலாக்ரே வித்ருதம் சம்போ:

அங்குப் புரசு மரங்கள் அடர்ந்து கிடக்கும். அதனால் அப் பகுதியை பலாச வனம் என்றே புராணம் கூறும். அங்கு சென்று தவம் புரிந்து, ஸித்தி பெறும் என்று கூறினார்.

மதங்க மஹர்ஷியும் அங்கு வந்து பெரும் தவம் செய்தார். அவர் தவத்திற்கு இடையூறு விளைவிக்க வஸந்தனுடன் மன்மதனும், மோஹினி வேஷத்தில் மஹா விஷ்ணுவும் அங்கு வந்தனர். இதை அறிந்த தபஸ்வி மதங்கர், தவத்திற்கு இடையூறு செய்ய வந்த மன்மதனை, "சிவநேத்ராக்னியால் நீ அழிவாய்" எனச் சபித்தார். அவன் வேண்ட, "நீ பரமாத்மா ஸ்ரீ க்ருஷ்ணனின் புதல்வனாய் (ப்ரத்யும்னனாய்) பிறந்து சரீரம் பெறுவாய்" என்று அருளினார். மோஹினியைச் சபிக்கக் கருதிய முனிவர் முன்னே, பகவான் மஹாவிஷ்ணு தர்சனமளித்தார். "மஹர்ஷே! உம் தவத்தைச் சோதனை செய்து, பின் உமக்கு யோக சாஸ்திரம் அருளவே இங்கு வந்தேன். தவத்தில் நிலைத்துள்ள உம்மைக் கண்டு மகிழ்ந்தேன். வேண்டிய வரம் தருகிறேன்" என்றார். மதங்கர், பகவன்! மோஹினியாகவே தர்சனம் அளித்துக் கொண்டு, எப்போதும் இவ்விடத்திலேயே தங்கியருள வேண்டும் எனவும், கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனர், த்ரிவிக்ரமர்,



வாமனர், ஸ்ரீ தாரர், ஹ்ருஷீகேசர், பத்மனாபர், தாமோதரர் என்ற மூர்த்திகளாய் இங்கு எழுந்தருள வேண்டும் எனவும், தனக்கு யோகத்தையும் அருள வேண்டும் எனவும் பிரார்த்தித்தார்.

விஷ்ணு முதல் இரண்டு வரங்களையும் கொடுத்து, "மஹர்ஷே! நான் மோஹினீ வேஷத்திலிருந்து கொண்டு உமக்கு யோகம் உபதேசிப்பது பொருத்தமாகாது. ஆகவே நாம் பதரியில் தர்ம ப்ரஜாபதியின் புத்திரராய் (நாராயணராய்) அவதரிப்போம். அப்போது யோகத்தை உபதேசிப்போம். அதுவரை தாங்கள் இங்கு அருந்தவம் இயற்றிக் கொண்டிருங்கள்" எனக் கூறி மறைந்தார். அவ்வாறே பல காலங்களுக்குப் பிறகு மதங்கருக்கு யோகத்தையும் உபதேசித்தார்.

இப்படி மதங்கர் யோகத்தில் இருக்கும்போது அவர் ஹ்ருதயத்தில் மஹா கணபதி தோன்றினார். அவருக்கு மதங்க கணேசர் எனப் பெயர். அந்தக் கணபதியின் பேரருளால் அஷ்டாங்க யோகஸித்தி பெற்றார் மதங்கர் (திருவெண்காட்டில் இருந்து வடமேற்கே மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது மதங்காசிரமம். இது மிகப் பெரும் வைஷ்ணவ ஸ்தலமாகிய திருநாங்கூரின் ஒரு பகுதியாகும். இங்கு ஸ்ரீ மதங்கேச்வரர் கோயில் உள்ளது).

மதங்கர் தியானத்திலிருக்கும்போது பரமசிவன் அவருக்குக் காட்சி கொடுத்தார். அதனால் பேரானந்தம் அடைந்த மதங்க முனிவர் பரமசிவனை நோக்கி, "பகவன், நான் தவம் செய்த இந்த இடம் (க்ஷேத்ரம்) 'பலாச வனம்' என்றும், ஸத்வ குணம் நிறைந்ததுள்ளதால், 'சுவேத வனம்' என்றும் பெயர் பெற வேண்டும். நான் தவம் செய்ததால் 'மதங்காசிரமம்' என்றும் இதற்குப் பெயர் ஏற்பட வேண்டும். இந்த சுவேதாரண்யத்தில் பிறந்தாலும் இறந்தாலும் வஸித்தாலும் பூஜித்தாலும் பக்தர்களுக்குத் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களையும் கொடுத்தருளிக் கொண்டு, 'மதங்கேசர்' என்ற பெயர் கொண்ட லிங்க மூர்த்தியாய்க் காட்சி கொடுத்தருள வேண்டும்" என்றும் வரங் கேட்டுக் கொண்டார்.

அது மட்டுமல்லாமல், "ஆதி சக்தியானவள், என் புத்திரியாய்ப் பிறந்து, அவளைத் தாங்கள் திருமணம் செய்து கொண்டு என்னை க்ருதார்த்தனாய்ச் செய்ய வேண்டும்" என்றும் பிரார்த்திக் கொண்டார். இந்த மதங்காச்சிரமத்தில் உள்ள மதங்கேச மூர்த்தியை "தத்புருஷ பீடம்"

என்றும் பலாச வன மான்மியம் கூறும். இதைச் சுற்றிப் பன்னிரண்டு சிவ பீடங்கள் உண்டு என்றும் புராணம் அவற்றை விரித்துரைக்கும்.

பிரம்ம புத்திரர் மதங்கர் பரமேச்வரனை உபாஸிக்க, அவர் அம்பிகையுடன் காட்சி கொடுத்தார். இவ்வாறு மதங்கருக்குக் காட்சி கொடுத்ததால் இவர் மதங்கேச்வரர் என்ற பெயர் பெற்றார். மதங்கேசி என தேவியும் பெயர் பெற்றாள்.

மதங்கேசி மணித்வீபத்தில் வஸிக்கின்றாள். இவளே மஹா காளீ, மஹா லக்ஷ்மீ, மஹா ஸரஸ்வதி என்றும் போற்றப்படுகின்றாள். இந்தப் பராசக்தியே பண்டாசுர வதத்திற்காக சிதக்னியிலிருந்து (चिदग्निकुण्डसंभूता) ஆவிர்பவித்தாள். லலிதை எனத் திருநாமம் பெற்று, காமேச்வரரைப் பதியாய்ப் பெற்றாள். இந்த ஸ்ரீ லலிதா பரமேச்வரியின் வைபவம் அறிந்த மதங்க முனிவர், அவளைப் புத்திரியாகப் பெற, ஸ்ரீ மதங்கேச்வரியின் ஸந்நிதியில் அமர்ந்து ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டு தவம் இருந்தார். ஸ்ரீ மதங்கேச்வரியும் பிம்பத்திலிருந்து லலிதையாக வெளி வந்து, மதங்கரைப் பார்த்து, ''என்ன வரம் வேண்டும்'' என்றாள். மதங்கரும், ''நீ எனக்குப் புத்திரியாய்ப் பிறந்தருள வேண்டும். உன் பால லீலைகளைக் கண்டு நான் பேரானந்தம் பெற வேண்டும். இங்கு பரமசிவன் வந்து உன்னை விவாஹம் செய்து கொள்ள வேண்டும்'' என்று வேண்டினார்.

ஸ்ரீ லலிதா தேவி, ''மஹர்ஷே! நான் சித் ஸ்வரூபிணி. நான் உமக்குப் புத்திரியாக வர முடியாது. ஆயினும், என் ஆணையால் என் மந்திரிணி தேவி உமக்குப் புத்திரியாய்ப் பிறப்பாள். அவளைப் பரமேச்வரன் மணப்பார்'' என்று வரமளித்து, அத்துடன் ''உன் புத்திரனுக்கும் அவள் புத்திரியாய்ப் பிறந்து அவள், ச்வேதாரண்யேச்வரரை மணப்பாள்'' என் வரமும் அளித்து மறைந்தாள்.

உடன் மதங்க மஹர்ஷி, ஸ்ரீ ச்யாமளா தேவியாம் மந்த்ரிண்யம்பாவை வழிபட்டுத் துதித்தார்.

## ஸ்ரீ மஹா ச்யாமளை(மந்த்ரிண்யம்பா)யின் வரலாறு

தேவர் வேண்டுகோளுக்கு இணங்கி, ஸ்ரீ லலிதா தேவீ பண்டாஸுர ஸம்ஹாரத்திற்குப் புறப்பட்ட போது,



चतुर्भुजे चन्द्रकलावतंसे कुचोन्नते कुंकुमरागशोणे।
पुण्ड्रेक्षु पाशांकुशपुष्पबाण हस्ते नमस्ते जगदेकमातः ॥

சதுர்புஜே சந்த கலாவதம் ஸே
குசோன்னதே குங்குமராகசோணே।
புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ்பபாண
ஹஸ்தே நமஸ்தே ஜகதேகமாதঃ॥

என்றபடி சிவந்த திருமேனியளாய் கரும்பு வில், பாசம், அங்குசம், புஷ்ப பாணம், மிளிரும் கர கமலங்கள் நான்கு கொண்டவளாய் ஜகன்மாதா காட்சி கொடுத்தாள்.

அந்த ஸ்ரீ லலிதா தேவியின் அங்குசத்தினின்றும் யானைப் படைத் தலைவியான (संपत्करी) ஸம்பத்கரீ தேவி உதித்தாள். பாசத்தினின்றும் குதிரைப் படைத் தலைவியான ஸ்ரீ அச்வாரூடா தேவி உதித்தாள். தேவியின் புஷ்ப பாணங்களிலிருந்து ஸ்ரீ தண்டனாதா என்றும், மஹா வாராஹீ என்றும் பேசப்படுகின்ற படைத் தலைவி உதித்தாள். ஸ்ரீ லலிதா தேவியின் கரும்பு வில்லினின்றும் மந்த்ரிண்யம்பா உதயமானாள்.

இவளுடைய ரதத்திற்குக் கேய சக்ரம் எனப் பெயர். गेयचक्ररथारूढ मन्त्रिणी परिसेविता 'கேயசக்ர ரதாரூட மந்த்ரிணீ பரிஸேவிதா' எனப் பேசும் லலிதா ஸஹஸ்ரநாமம். வீணை, குழல், ம்ருதங்கம் இவை தரித்த நீல நிறத்தினர்களான ஸங்கீத யோகினிகள் என்ற சக்திகள் இவள் பக்கம் எப்போதும் இருப்பர். இந்த மந்த்ரிண்யம்பாவை கீழ் வரும் 16 நாமாக்களால் துதித்தனர் தேவர்கள்.

1. ஸங்கீத யோகினீ, 2. ச்யாமா, 3. ச்யாமளா, 4. மந்த்ரிநாயிகா, 5. மந்த்ரிணீ, 6. ஸசிவேசானீ, 7. ப்ரதானேசீ, 8. சுகப்ரியா, 9. வீணாவதி, 10. வைணிகி, 11. முத்ரிணீ, 12. ப்ரியகப்ரியா, 13. நீபப்ரியா, 14. கதம்பேசீ, 15. கதம்பவன வாஸினீ, 16. ஸதாமதா. இந்த நாமாக்களைக் கூறி மந்த்ரிணீயம்பாவை வழிபடுபவர்களுக்கு மூவுலகங்களும் வசமாகும். இவள் கரத்தில் அமர்ந்தருளும் கிளியினின்றும் தனுர் வேதம் உதயமாயிற்று. நாண் பூட்டிய வில், நான்கு கரங்கள், மூன்று சிரங்கள், முக்கண் இவற்றுடன் பிரகாசித்தது அந்த தனுர் வேதம். அந்தத் தனுர் வேதம் மந்த்ரிண்யம்பாவிற்குச் சித்ர ஜீவன் என்ற வில்லையும், பாணம் வற்றாத சரக் கூடு இரண்டையும் அளித்தது. இந்த மந்த்ரிண்யம்பாவிற்கு 1000 அக்ஷௌஹிணீ சேனை என்பர்.

ஸ்ரீபுரத்தில் பத்மாடவிக்கு மத்தியில் உள்ள சிந்தாமணி க்ருஹத்தில் கிழக்கு வாயிலில் இவளுடைய பவனம் உள்ளது. இது ஸ்ரீ லளிதா தேவிக்கு பக்கத்தில் இருந்து அவளுக்கு ஸேவை புரிவதற்காக அமைக்கப்பட்ட பவனம். வெள்ளி மயமான 7ம் பிராகாரத்தில் உள்ளதே மந்த்ரிண்யம்பாவின் நிரந்தர வாஸத்திற்கு உகந்த பவனம். இதைச் சுற்றி கதம்பவனம் உள்ளது. அதிலிருந்து காதம்பரீ என்ற மது உண்டாகிறது. அது மந்த்ரரிணீ தேவிக்கு மிகவும் பிடிக்கும். இக் கதம்பவனவாடியில் மாதங்க கன்யைகள் வீணை வாசித்துக் கொண்டு விளையாடுவர் (இம் மாதங்க கன்யைகள் பற்றி வரலாறு இச்சரிதத்தின் பின் பகுதியில் விளக்கப்பட உள்ளது. அங்கே காணலாம்). இவள் பண்டாசுர யுத்தத்தில், பண்டனின் இடது தோளிலிருந்து உதித்த விஷங்களை வீழ்த்தினாள். இதை मन्त्रिण्यबा विरचित विषंगवध तोषिता என்று லளிதா ஸஹஸ்ரநாமம் வர்ணிக்கும். இந்த மந்த்ரிணீ தேவி ஸ்ரீ லளிதா பரா பட்டாரிகாவிற்கு மிகவும் நெருக்கமானவள். இந்த மந்த்ரிணீ தேவியைப் பக்தியுடன் உபாஸித்து வந்தார் மதங்கர்.

## ஸ்ரீ மாதங்கீ ஆவிர்பாவம்

ஆடி மாதம் வெள்ளிக் கிழமை விடியற்காலத்தில் மதங்க தீர்த்தத்தில் நீலோத்பல மலரிலே மரகதப் பச்சை வர்ணமும், மை தீட்டிய கண்களும், வீணை, கிளி அலங்கரிக்கும் கர கமலங்களும் கொண்டு மஹா ச்யாமளா ஒரு பெண் குழந்தையாய்க் காட்சி அளித்தாள். விடியற்காலையில் ஸ்னானத்திற்கு வந்த மதங்க மஹர்ஷி, இக் குழந்தையை எடுத்து பரமானந்தத்தில் திளைத்து, பரா சக்தியின் கருணாவிலாஸத்தை நினைத்து நினைத்துக் கண்கள் ஆனந்த பாஷ்பம் சொறிய, ஆசிரமத்திற்குக் கொண்டு வந்து வளர்த்தார். இவள் தன் புத்திரியாய் அவதரித்ததால் இவளுக்கு மாதங்கி எனப் பெயர் சூட்டினார். லகு பட்டாரகராகிய மஹா கவி காளிதாஸன் இந்த மாதங்கியைப் பற்றியே ச்யாமளா தண்டகம் பாடினார்.

माता मरकतश्यामा मातंगी मधुशालिनी ।
कुर्यात्कटाक्षं कल्याणी कदंबवनवासिनी ॥

மாதா மரகதச்யாமா மாதங்கீ மதுசாலினீ।
குர்யாத்கடாக்ஷம் கல்யாணீ கதம்பவனவாஸினீ॥



जय मातंगतनये जय नीलोत्पलद्युते ।
जय संगीतरसिके जय लीला शुकप्रिये ॥

ஜய மாதங்கதனயே ஜய நீலோத்பலத்யுதே।
ஜய ஸங்கீதரஸிகே ஜய லீலா சுகப்ரியே ॥

माणिक्य वीणामुपलालयन्तीं
मदालसां मंजुल वाक्विलासां ।
माहेन्द्र नीलाद्युति कोमलांगीं
मातंक कन्यां मनसा स्मरामि ॥

மாணிக்ய வீணா முபலாலயந்தீம்
மதாலஸாம் மஞ்ஜுள வாக்விலாஸாம்।
மாஹேந்த்ர நீலத்யுதி கோமளாங்கீம்
மாதங்ககன்யாம் மனஸா ஸ்மராமி ॥

இவள் மதங்கரின் ஆச்ரமத்தில் தன்னுடைய பணிவிடைக்காக எட்டு கோடி சக்தி கணங்களைச் சிருஷ்டித்துக் கொண்டாள். அனைவரும் இவளுக்குச் சிச்ருஷை செய்து கொண்டு மதங்காசிரமத்தில் தங்கியிருந்தனர். இந்தப் பராசக்தியை மாதங்கி என்றும், ஆஞ்சனாக்ஷீ என்றும், சுகஹஸ்தா என்றும் அனைவரும் அன்புடன் அழைத்தனர்.

இந்த மாதங்கிக்கு வயது ஏழு ஆகிய போது முறைப்படி இவளுக்கு விவாஹம் செய்ய ஆசை கொண்டார் மதங்க மஹர்ஷி. பல மஹர்ஷிகளையும் தேவர்களையும் அழைத்துக் கொண்டு பகவான் மதங்கேச்வரரை சரணடைந்தார். ''பகவன் க்ருபை கொண்டு எனக்குப் புத்திரியாய்ப் பிறந்த இந்த மாதங்கியை முறைப்படி தாங்கள் திருமணம் செய்து கொண்டு எனக்கு அருள வேண்டும்'' எனப் பிரார்த்தித்தார்.

மதங்கேசரும் சித்திரை மாதம் சுக்ல பக்ஷம் ஸப்தமீ திதி கூடிய சுபயோக சுபதினத்தில் மணப்பதாய்த் திருவருள் புரிந்தார்.

உடன் மஹா ச்யாமாவான ஸ்ரீ மாதங்கி தெய்வ லோக சிற்பியான விச்வகர்மாவை அழைத்து, கல்யாண மண்டம் அமைக்க

உத்தரவிட்டாள். அவனும் (सप्तावरण) 7 ஆவரணங்கள் கொண்டதாய் யந்த்ர மயமான மாதங்கிபுரத்தையே ஸ்ருஷ்டித்தான்.

மதங்கர் சென்றழைக்கப் பகவான் தேவர்களும், முனிவர்களும், ப்ரமதர்களும், பூதர்களும் புடைசூழ சித்திரை மாத சுக்ல ஷஷ்டி அன்று மாலை மதங்காசிரமம் வந்து தங்கினார். தேவர்கள் ஸந்நிதியில் மறுநாள் மங்கள வாத்யங்கள் முழங்க, மஹர்ஷிகள் வேதகோஷம் ஒலிக்க, வித்யாதரர் பாட, அப்ஸரஸ்கள் ஆட மஹாச்யாமாவான மாதங்கியைப் பகவான் மதங்கேச்வரர் திருமணம் செய்து கொண்டார்.

"இந்தக் கோலத்திலேயே தாங்கள் எங்களுக்கு எப்போதும் காட்சி கொடுக்க வேண்டும்" என்று பகவானை மதங்க முனிவர் வேண்டினார். ஐந்து தினங்கள் முறைப்படி விவாஹ மஹோத்ஸவம் சிறப்பாக நடந்தது. பின் மாதங்கியுடன் மதங்கேசர் மதங்கேசலிங்கத்தில் மறைந்தார். ஆயினும் மதங்க முனிவர் ஹ்ருதய கமலத்தில் ஸ்ரீ மாதங்கியுடன் மதங்கேச்வரர் கல்யாண கோலத்தில் காட்சி கொடுத்துக் கொண்டு விளங்குகின்றார் எனப் பேசுகின்றது பலாச வன மஹாத்மியம். இவளையே ஸ்ரீ ராஜ மாதங்கி என மந்த்ர சாஸ்திரங்கள் புகழ்கின்றன. மந்த்ர சாஸ்திரங்களில் இவள் தியானம், மூல மந்த்ரம், யந்த்ரங்கள் இவை கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை கீழே காண்போம்.

### ஸ்ரீ ராஜ மாதங்கீ த்யானம்

ध्यायेयं रत्नपीठे शुककलपठितं शृण्वतीं श्यामलांगीं
न्यस्तैकांघ्रिं सरोजे शशिशकल धरां वल्लकीं वादयन्तीं।
कल्हाराबद्धमालां नियमित विकसच्चूलिकां रक्तवस्त्रां
मातंगीं शङ्खपत्रां मधुमदविवशां चित्रकोद्भासिभालाम्॥ (शारदा तिलके)

த்யாயேயம் ரத்னபீடே சுககலபடிதம்
ச்ருண்வதீம் ச்யாமளாங்கீம்

ந்யஸ்தைகாங்க்ரிம் ஸரோஜே சசிசகல
தராம் வல்லகீம் வாதயந்தீம்।
கல்ஹாராபத்தமாலாம் நியமிதவிகஸத்
சூளிகாம் ரக்தவஸ்த்ராம்



மாதங்கீம் சங்க பத்ராம் மதுமத
விவசாம் சித்ரகோத்பாஸிபாலாம்॥ (சாரதா திலகம்)

ரத்ன பீடத்தில் அமர்ந்து ஒரு சரணாரவிந்தத்தை தாமரை மலரில் வைத்துக் கொண்டிருப்பவளும், கிளியின் அழகிய சொல்லைக் கேட்பவளும், நீல நிறத்தினளும், சந்திர கலை தரித்தவளும், வீணை வாசிப்பவளும், செங்கழ நீர் பூமாலை அணிந்தவளும், கட்டிய அழகிய கேசம் உடையவளும், சிவந்த வஸ்த்ரம் தரித்தவளும், சங்குத் தோடணிந்திருப்பவளும், (காதம்பரீ) மது அருந்தி மதத்தினால் தன்னை மறந்திருப்பவளும், திலகம் விளங்கும் நெற்றியை உடையவளுமான ஸ்ரீ ராஜ மாதங்கியை நான் தியானிக்கிறேன்.

ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம் கூறும் ஸ்ரீ மாதங்கீ த்யானம்.

तस्य मध्ये सुखासीनां श्यामवर्णां शुचिस्मितां।
कदंबमालाभरणां पूजितां च सुरासुरैः॥ (१)

प्रलंबालक संयुक्तां चन्द्ररेखावतंसितां।
ललाटे तिलकोपेतां ईषत्प्रहसिताननां॥ (२)

किंचित्स्वेदांबुमधुर ललाट फलकोज्वलां।
वलीतरंगमध्यां तां रोमराजिविराजितां॥ (३)

सर्वाभरणसंयुक्तां मुक्ताहार विभूषितां।
नानामणिगणोन्नद्ध कटि सूत्रैरलंकृतां॥ (४)

वलयै रत्नखचितैः केयूरैर्मणिभूषितैः।
भूषितां द्विभुजां बालां मदघूर्णित लोचनां॥ (५)

आपीनमण्डलाभोग समुन्नतपयोधरां।
प्रलंबकर्णाभरणां कर्णोत्तंस विराजितां॥ (६)

तमालनीलां तरुणीं मधुमत्तां मतंगिनीं।
चतुष्षष्टिकलारूप पार्श्वस्थ शुकसारिकां॥ (७)

कोटि बालार्कसंकाशां जपाकुसुम सन्निभां।
एवं वा पीतवर्णां च ध्यायेन्मातंगिनीं पराम्॥ (८)

(श्री विद्यार्णवे)

தஸ்ய மத்யே ஸுகாஸீனாம் ச்யாமவர்ணாம் சுசிஸ்மிதாம்।
கதம்பமாலாபரணாம் பூஜிதாம் ச ஸுராஸுரை:॥ (1)

ப்ரலம்பாலக ஸம்யுக்தாம் சந்த்ரரேகா வதம்ஸிதாம்।
லலாடே திலகோபேதாம் ஈஷத் ப்ரஹஸிதானனாம்॥ (2)

கிஞ்சித்ஸ்வேதாம்பு மதுர லலாட பலகோஜ்வலாம்।
வளீதரங்கமத்யாம் தாம் ரோமராஜிவிராஜிதாம்॥ (3)

ஸர்வாபரண ஸம்யுக்தாம் முக்தாஹார விபூஷிதாம்।
நானாமணி கணோன்னத்த கடிஸூத்ரைரலங்க்ருதாம்॥ (4)

வலயை ரத்ன கசிதை: கேயூரைர் மணிபூஷிதை:।
பூஷிதாம் த்விபுஜாம் பாலாம் மத கூர்ணிதலோசனாம்॥ (5)

ஆபீன மண்டலாபோக ஸமுன்னதபயோதராம்।
ப்ரலம்பகர்ணாபரணாம் கர்ணோத்தம்ஸ விராஜிதாம்॥ (6)

தமாலநீலாம் தருணீம் மதுமத்தாம் மதங்கினீம்।
சதுஷ்ஷஷ்டி கலாரூப பார்ச்வஸ்த சுக ஸாரிகாம்॥ (7)

கோடி பாலார்க ஸங்காசாம் ஜபாகுஸும ஸந்நிபாம்।
ஏவம் வா பீத வர்ணாம்ச த்யாயேத் மாதங்கினீம் பராம்॥ (8)

(ஸ்ரீ வித்யார்ணவே)

ஸுகமாய் அமர்ந்திருப்பவளும், சியாமள வர்ணம் உடையவளும், அழகிய சிரிப்புடையவளும், கடம்பப் பூமாலை தரித்தவளும், தேவர் அசுரர் அனைவராலும் பூஜிக்கப்பட்டவளும், தொங்கும் சூர்ண குந்தளங்கள் உடையவளும், சந்திர கலை தரித்தவளும், நெற்றியில் திலகம் அணிந்தவளும், புன்சிரிப்புடன் கூடியவளும், அரும்பும் வேர்வையினால் அழகிய நெற்றியை உடையவளும், மடிப்பு உடைய



இடையினளும், இழையோடிய ரோமாளி உடையவளும், நிறைய ஆபரணங்கள் தரித்தவளும், முத்து மாலை அணிந்தவளும், பல மணிகள் கோர்த்த அரைஞாண் கயிற்றால் அலங்கிருதையும், மணிகளால் அமைந்த வளையல்கள் கேயூரங்கள் (தோள்வளை) இவற்றால் அலங்கரிக்கப்பட்டவளும், இரண்டு கர கமலங்கள் உடையவளும் , (பாலாம்) சிறுமியின் வடிவுடையவளாகவும் தியானிக்கலாம்.

மதத்தால் சுழலும் கண்ணினளும், பருத்து மண்டலாகாரமாய் உள்ள நிமிர்ந்த ஸ்தன பாரம் உடையவளும், தொங்கும் காதணி உடையவளும், காதில் பூ அணிந்திருப்பவளும், பச்சிலை மரம் போன்று நீல நிறத்தினளாகவும், மதுவால் மதம் கொண்டவளும், அறுபத்து நான்கு கலைகள் ரூபமான பக்கத்தில் உள்ள ஆண், பெண், இரு கிளிகளை உடையவளும், கோடி இளம் சூரியன் போன்று பிரகாசிப்பவளும், செவ்வரத்தைப் பூப் போன்று சிவந்த தருணியாகவும் இவ்வாறே மஞ்சள் நிறத்தினளாகவும் மாதங்கியைத் தியானிக்கலாம்.

பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹத்தில் மற்றும் இரண்டு தியானங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

उन्मीलद्यौवनोद्यत् निबिड मदभरोद्वेललीला विलासां
रत्नग्रैवेय हारांगद कनक कटी सूत्र मंजीर घोषां।
आनीयार्थानभीष्टान् स्मितमधुरदृशा साधकांस्तर्पयन्तीं
देवीं ध्यायेत् शुकाभां शुकमखिलकलारूपमस्याश्च पार्श्वे॥

உன்மீலத்யௌவனோத்யத் நிபிட
மதபரோத்வேல லீலா விலாஸாம்
ரதன் க்ரைவேய ஹாராங்கத கனக
கடீஸூத்ர மஞ்ஜீர கோஷாம்
ஆநீயார்த்தானபீஷ்டான் ஸ்மித மதுரத்ருசா
ஸாதகாம் ஸ்தர்பயந்தீம்
தேவீம் த்யாயேத் சுகாபாம் சுகமகில
கலாரூபமஸ்யாஸ்ச பார்ச்வே॥

யௌவனாரம்பத்தால் நேரும் மதத்தின் மிகுதியால் பொங்கும் லீலாகளுடன் விளங்குபவளும், ரத்ன மயமான அட்டிகை, ஹாரம்,

தோள் வளை, பொன் அரைஞாண் கயிறு, கோஷமிடும் பாதஸரம் இவைகளை உடையவளும், ஸாதகர்களுக்கு இஷ்டமான பொருளை புன்சிரிப்பால் அழகிய கண்ணால் அளிப்பவளும், கிளிப் பச்சை நிறத்தினளுமாய் ராஜ மாதங்கியைத் தியானிக்க வேண்டுமெ. அவ்வாறே அகில கலைகளின் வடிவாய் உள்ள கிளியையும் அவள் பக்கத்தில் இருப்பதாகவும் தியானிக்க வேண்டும்.

वामे विस्तृतशालिनि स्तनतटे विन्यस्य वीणामुखं
तंत्रीं तारविराविणीं स्वकरजै रास्फालयन्ती नखैः।
अर्धोन्मीलदपांग मंसविलसद्ग्रीवं मुखं बिभ्रती
माया काचन मोहिनी विजयते मातंगकन्यामयी॥

வாமே விஸ்த்ருதசாலினி ஸ்தனதடே வின்யஸ்ய வீணாமுகம்
தந்த்ரீம் தாரவிராவிணீம் ஸ்வகரஜைஃ ஆஸ்ப்பாலயந்தீம் நகைஃ
அர்த்தோன்மீலதபாங்கம் அம்ஸவிலஸத் க்ரீவம் முகம் பிப்ரதீ
மாயா காசன மோஹினீ விஜயதே மாதங்ககன்யாமயீ॥

விசாலமான இடது மார்பகத்தில் வீணையின் முகத்தை வைத்துக் கொண்டு உச்சமான த்வனி அளிக்கும் நரம்பை (வீணையின்) தன் கர கமலத்தின் நகங்களால் வருடுபவளாகவும், பாதித் திறந்த கடைக் கண்ணும், தோளைத் தொடும் கழுத்துமாயுள்ள முகத்துடன் கூடிய மாயா ஸ்வரூபிணியான வர்ணிக்க முடியாத அழகுடைய ஒரு மாதங்கன்யை என்ற மோஹினீ வெற்றியுடன் விளங்குகின்றாள் (பராசக்தியின் வீணை வாசிக்கும் தோற்றம் மிக அழுகாகவும், ஸ்வபாவமாகவும் வர்ணிக்கப்பட்டுள்ளது ரஸிகர்களின் உள்ளத்தைக் கவரும்).

## சாக்த ப்ரமோதம்

தச மஹா வித்யையைத் தனிச் சிறப்புடன் வர்ணிக்கும் சாக்த ப்ரமோதத்தில் மாதங்கினீ பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. அங்குள்ள தியானம் இது:

श्यामांगीं शशिशेखरां त्रिनयनां रत्नसिंहासनस्थितां।
वेदैर्बाहुदण्डैः असिखेटक पाशांकुशधरां एवं ध्यायेत्॥ (शाक्त प्रमो



ச்யாமாங்கீம் சசிசேகராம் த்ரிணேயனாம்
ரத்னஸிம்ஹாஸன ஸ்திதாம்।
வேதைர் பாஹு தண்டைஃ அஸிகேடக
பாசாங்குசதராம் ஏவம் த்யாயேத்॥ (சாக்த ப்ரமோதம்)

நீல நிறத்தினள். சந்திர கலை தரித்தவள். முக்கண்ணி. ரத்ன ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவள். கத்தி, கேடயம், பாசம், அங்குசம் இவற்றை நான்கு கர கமலங்களால் தரித்திருப்பவளாகத் தியானிக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

## மூல மந்திரங்கள்

1. *சாரதா திலகத்தில்,*

"ऐं ह्रीं श्रीं ओं नमो भगवति श्रीमातंगेश्वरि सर्वजनमनोहारि सर्वमुखराजि सर्वमुखरंजनि सर्वराजवशंकरि-सर्वस्त्री पुरुष वशंकरि सर्वदुष्टमृगवशंकरि सर्वसत्व वशंकरि सर्वलोकं अमुकं मे वशमानय स्वाहा" (८८ अक्षरात्मकोमन्त्रः)

"ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஓம் நமோ பகவதி ஸ்ரீ மாதங்கேச்வரி ஸர்வஜனமனோஹாரி ஸர்வமுகராஜி ஸர்வமுகரஞ்சனி ஸர்வராஜசங்கரி ஸர்வஸ்த்ரீ புருஷ வசங்கரி ஸர்வ துஷ்ட ம்ருக வசங்கரி ஸர்வஸத்வ வசங்கரி ஸர்வலோகம் அமுகம்மே வசமானய ஸ்வாஹா" *(88 அக்ஷரங்கள் கொண்டது இம் மந்திரம்).*

2. *பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹத்தில்,*

"ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः ओं नमो भगवति श्रीमातंगेश्वरि सर्वजनमनोहारि सर्वमुखरंजनि क्लीं ह्रीं श्रीं सर्वराजवशंकरि सर्वस्त्री पुरुष वशंकरि सर्वदुष्टमृगवशंकरि सर्वसत्त्ववशंकरि सर्वलोकवशंकरि अमुकंमे वशमानय स्वाहा सौः क्लीं ऐं श्रीं ह्रीं ऐं" (९९ अक्षरात्मको मन्त्रः)

"ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌஃ ஓம் நமோ பகவதி ஸ்ரீ மாதங்கேச்வரி ஸர்வ ஜன மனோஹாரி ஸர்வமுக ரஞ்ஜனி க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஸர்வராஜ வசங்கரி ஸர்வ ஸ்த்ரீ புருஷ வசங்கரி ஸர்வ

துஷ்ட ம்ருக வசங்கரி ஸர்வ ஸத்வ வசங்கரி ஸர்வலோக வசங்கரி அமுகம்மே வசமானய ஸ்வாஹா ஸௌ: க்லீம் ஐம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம்" *(99 அக்ஷரங்கள் கொண்டது இம் மந்திரம்).*

*ஸ்ரீ வித்யார்ணவத்தில் உள்ள மூல மந்த்ரம்.*

'ऐं ह्रीं श्रीं श्रीं नमो भगवति श्रीमातंगेश्वरि सर्वजनमनोहारि सर्वमुखराजि सर्वमुख रंजनि हसकल ह्रीं सर्वराज वशंकरि सर्वस्त्री पुरुष वशंकरि हसकहल ह्रीं सर्वदुष्ट मृग वशंकरि सकल ह्रीं सर्वलोक ममुकं मे वशमानय स्वाहा'' (९५ अक्षरात्मको मन्त्रः)

"ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஸ்ரீம் நமோ பகவதி ஸ்ரீ மாதங்கேச்வரி ஸர்வஜன மனோஹாரி ஸர்வமுக ராஜி ஸர்வமுக ரஞ்ஜனி ஹஸகல ஹ்ரீம் ஸர்வராஜ வசங்கரி ஸர்வ ஸ்த்ரீ புருஷ வசங்கரி ஹஸகஹல ஹ்ரீம் ஸர்வ துஷ்ட ம்ருக வசங்கரி ஸகல ஹ்ரீம் ஸர்வ லோக மமுகம்மே வசமானய ஸ்வாஹா" *(95 அக்ஷரங்கள் கொண்டது இந்த மந்திரம்).*

*ஸ்ரீ சாக்த ப்ரமோதத்தில் உள்ள மந்த்ரம்*

ओं ह्रीं क्लीं हूं मातंग्यै फट् स्वाहा (१० अक्षराणि)

ஓம் ஹ்ரீம் க்லீம் ஹூம் மாதங்யை பட் ஸ்வாஹா (10 அக்ஷர மந்த்ரம்)

### மாதங்கீ உபாஸனையால்<br>ஏற்படும் பலன்கள்

*1. சாக்த ப்ரமோதத்தில்,*

अथ वक्ष्ये महादेवीं मातंगीं सर्वसिद्धिदां।
अस्याः पूजनमात्रेण वाक्सिद्धिं लभते नरः ॥

அத வக்ஷ்யே மஹாதேவீம் மாதங்கீம் ஸர்வஸித்திதாம்
அஸ்யா: பூஜனமாத்ரேண வாக்ஸித்திம் லபதே நர: ॥



என்று மாதங்கி ஸர்வ ஸித்திகளையும் அளிப்பாள் (கவிதை, அக்னி, ஸ்தம்பம், ஜலஸ்தம்பம், சத்ருக்களுக்கு வாக்ஸ்தம்பம்) இவள் மந்த்ரத்தை ஜபிப்பவனுக்கு முக்கியமாக வாக்ஸித்தி ஏற்படும். ஸங்கீதக் கலையில் நல்ல தேர்ச்சி உண்டாகும். இவளை கான தேவதை என்றே மந்த்ர சாஸ்திரம் பேசும்.

काचिद्गायन देवता विजयते वीणावती।
காசித் காயனதேவதா விஜயதே வீணாவதீ।

*என்று இவள் ஸ்துதியில் கூறப்பட்டுள்ளது.*

मन्त्री जयति शत्रूंश्च तार्क्ष्यो भोगिकुलं यथा।
शास्त्रे वादे कवित्वेच बृहस्पतिरिवापरः ॥
अनेनैव विधानेन मातंगी सिद्धि दायिनी।
नूनं तद्गृह मागत्य कुबेरैर्दीयते वसु ॥
மந்த்ரீ ஜயதி சத்ரும்ச்ச தார்க்ஷ்யோ போகிகுலம் யதா।
சாஸ்த்ரே வாதே கவித்வேச ப்ருஹஸ்பதிரிவாபர: ॥
அனேனைவ விதானேன மாதங்கீ ஸித்திதாயினீ।
நூனம் தத்க்ருஹமாகத்ய குபேரைர் தீயதே வஸு ॥

*என்று நாற்சந்து ச்மசானம் அமர்ந்து மத்ஸ்ய மாம்ஸபாயஸம் நிவேதித்து தூபாதிகளைக் கொண்டு உபசரிப்பவர்களுக்கு சத்ரு ஜயம் ஏற்படும். சாஸ்திர ஞானத்திலும் கவிதை புனைவதிலும் அவன் ப்ருஹஸ்பதிக்குச் சமமாய் விளங்குவான். அவனைத் தேடி வந்து குபேரன் அவனுக்குத் தனம் வழங்குவான் என்று கூறப்பட்டுள்ளது.*

*ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரத்தில் இவ்வாறு ராஜ மாதங்கி மந்த்ரத்திற்கு (88) பலன் கூறப்பட்டுள்ளது.*

यत्पादद्वन्द्सरसीरुह संस्मृतितो नरः ।
लभते मुक्तिमतुलां दुष्प्रापां सिद्धिसंचयैः ॥ (१)

येन वाकर्षणं साध्यं वशीकारो यतो भवेत्।
येन वांछितमाप्नोति यशस्वी नियतं भवेत् ॥ (२)

दुरितौघ प्रतिध्वंसः सौभाग्याप्तिश्च निश्चिता।
सेवितं सन्तति करं नस्यान्निगडबन्धनं॥ (३)

समस्तेषु च शास्त्रेषु पाण्डित्यमधिकं भवेत्।
विशिष्टश्लिष्टगंभीर पदविन्यास कोमले॥ (४)

ललिते च कवित्वेसौ प्रगल्पः सुतरां भवेत्।
संगीते सर्वविद्यासु चात्यन्तं निपुणो भवेत्॥ (५)

मन्दिरे तस्य कमला साध्वनश्वर विभ्रमा।
निरन्तरं च वसति नात्र कार्या विचारणा॥ (६)

किमत्र बहुनोक्तेन वचसां पतिरेव सः।
कान्त्या रतिपतिः लक्ष्म्या कमलापतिरप्यसौ॥ (७)

யத்பாத த்வந்த்வஸரஸீருஹ ஸம்ஸ்ம்ருதிதே நரः।
லபதே முக்திமதுலாம் துஷ்ப்ராபாம் ஸித்தி யஞ்சயைः॥ (1)

யேனவாகர்ஷணம் ஸாத்யம் வசீகாரோ யதோ பவேத்।
யேன வாஞ்சிதமாப்னோதி யசஸ்வீ நியதம் பவேத்॥ (2)

துரிதௌக ப்ரவித்வம்ஸः ஸௌபாக்யாப்திச்ச நிச்சிதா।
ஸேவிதம் ஸந்ததிகரம் நஸ்யான் நிகட பந்தனம்॥ (3)

ஸமஸ்தேஷு ச சாஸ்த்ரேஷு பாண்டித்யமதிகம் பவேத்।
விசிஷ்டச் லிஷ்ட கம்பீர பதவின்யாஸ கோமளே॥ (4)

லளிதே ச கவித்வேஸௌ ப்ரகல்பः ஸுதராம் பவேத்।
ஸங்கீதே ஸர்வவித்யாஸு சாத்யந்தம் நிபுணோ பவேத்॥ (5)

மந்திரே தஸ்ய கமலா ஸாத்வனச்வரவிப்ரமா।
நிரந்தரம்ச வஸதி நாத்ர கார்யா விசாரணா॥ (6)

கிமத்ர பஹுனோக்தேன வசஸாம் பதிரேவ ஸः।
காந்த்யா ரதிபதிர் லக்ஷ்ம்யா கமலா பதிரப்யஸௌ॥ (7)

மாதங்கி தேவியின் பாதாரவிந்த ஸ்மரணத்தால் ஸாதகன் பல ஸித்திகளால் அடைய முடியாத முக்தியைப் பெறுகிறான். ஆகர்ஷணம்



வச்யம் ஏற்படுகிறது. விரும்பியது அனைத்தும் கிடைக்கின்றது. கீர்த்தி பெறுகிறான். பாபம் நசிக்கின்றது. ஸௌபாக்யம் நிச்சயம் ஏற்படும். பிள்ளைப் பேரளிக்கும். விலங்கேற்க நேரிடாது. அனைத்து சாஸ்திரங்களிலும் அதிக பாண்டித்யம் ஏற்படும். விசேஷமான சிலேடையுடன் கூடிய பதவின்யாஸத்தால் அழகிய லளிதமான கவித்துவத்தை நிச்சயம் பெறுவான். ஸங்கீதம் மற்றைய வித்தைகளில் நிபுணனாவான். அவன் வீட்டில் எப்போதும் சஞ்சலமின்றி லக்ஷ்மீ வாசம் செய்வாள். அவன் வாக்கிலே ப்ருஹஸ்பதியாகவும், அழகில் மன்மதனாகவும், ஐச்வர்யத்தில் ஸ்ரீ மஹா விஷ்ணுவாகவும் இருப்பான்.

अष्टाशीत्यक्षरः प्रोक्तः सर्वकामसमृद्धिदः।
रक्षार्थं सर्वलोकानां आयुरारोग्य वर्धनः॥ (११)

शान्तिके पौष्टिके चैव वृद्धिसिद्धिकरः प्रिये।
अपमृत्युजयश्रीदः अपस्मारक्षयं करः॥ (१२)

सर्वज्वरांश्च शूलानि शक्तो नाशयितुं क्षणात्।
राजद्वारे विशेषेण संग्रामे रिपुसंकटे॥ (१३)

अग्निचोरनिपातेषु सर्वग्रहनिवारणे।
राक्षसेषु पिशाचेषु गन्धर्वेषूरगेयु च॥ (१४)

नदी प्रतरणे दुर्गे संग्रामे प्राणसंशये।
असौ मन्त्रः प्रयुक्तः स्यात् एतत्सर्व निवारणः॥ (१५)

அஷ்டாசீத்யக்ஷர ப்ரோக்தः ஸர்வகாமஸம்ருத்திதः।
ரக்ஷார்தம் ஸர்வலோகானாம் ஆயுராரோக்ய வர்த்தனः॥ (11)

சாந்திகே பௌஷ்டிகே சைவ வ்ருத்திஸித்திகரः ப்ரியே।
அபம்ருத்யு ஜய ஸ்ரீதः அபஸ்மாரக்ஷயம் கரः॥ (12)

ஸர்வஜ்வராம்ச்சசூலானி சக்தோ நாசயிதும் க்ஷணாத்।
ராஜத்வாரே விசேஷேண ஸங்ராமே ரிபுஸங்கடே॥ (13)

அக்னிசோரநிபாதேஷு கந்தர்வேஷுரகேஷு ச।
ராக்ஷஸேஷு பிசாசேஷு கந்தர்வேஷுரகேஷு ச॥ (14)

நதீப்ரதாணே துர்கே ஸங்ராமே ப்ராண ஸம்சயே।
அஸௌ மந்த்ர: ப்ரயுக்த: ஸ்யாத் ஏதத் ஸர்வ நிவாரண:॥ (15)

88 அக்ஷரங்கள் கொண்ட இந்த மந்த்ர ஜபத்தால் ஸர்வ ஆசைகளும் பூர்ணமாகும். அனைவருக்கும் ரக்ஷை அளிக்கும். ஆயுளையும் ஆரோக்யத்தையும் வளர்க்கும். சாந்தி கர்மாவிலும் புஷ்டி அளிக்கும். கர்மாவிலும் இது அபிவிருத்தியையும் ஸித்தியையும் உண்டாக்கும். அபம்ருத்துவை ஜயித்து லக்ஷ்மீயைப் பெறுவாள். ஜ்வரங்களையும் சூல நோயினையும் அழிக்கும் சக்தி பெறுவான். அரசாங்கத்திலும் சண்டையிலும் சத்ருவினால் ஏற்படும் கஷ்டத்திலும் நெருப்பு, திருடன் இவர்களுடைய தாக்குதலிலும் க்ரஹங்களால் ஏற்படும் தீமையைப் போக்குவதிலும் இம்மந்திரம் சக்தியுடையது ராக்ஷஸ, பிசாசர், கந்தர்வர், ஸர்பங்கள் இவைகளிடம் இருந்தும் நிவாரணம் பெறுவான். நதியைக் கடப்பதிலும் யுத்தத்திலும் பிராணனுக்கு ஆபத்து நேரிடுவதிலும் இந்த மந்திரத்தை உபயோகப்படுத்த நிவாரணம் ஏற்படும்.

स्त्रीणां सौभाग्यहीनानां अपुत्राणां विशेषतः।
अपुष्पा यानपत्या या सदा पुष्पवती च या॥ (१६)

पतिद्वेष्या च या नारी दुष्टा श्वश्रुजनं प्रति।
या वन्ध्या मृतपुत्रा च निद्रालस्यमहाभयैः॥ (१७)

इत्येव मादिदोषैश्च दुष्टानां योषितामयं।
शक्तः तद्वेषहरणे स्मरणादेव निश्चितं॥ (१८)

स्त्रीवश्य नरवश्यादि सर्ववश्य जयप्रदः।
स्त्रीणां संमोहने शक्तो नराणां च विशेषतः॥ (१९)

मतंगमुनिना पूर्वं गीतः तेनाप्यनुष्ठितः।
वासुदेवेन गीतोयं तुंबुरु प्रमुखादिभिः॥ (२०)

जप्तः सदा महामन्त्रः वसिष्ठाद्यैः महर्षिभिः॥ (२१)



ஸ்த்ரீணாம் ஸௌபாக்யஹீனானாம் அபுத்ராணாம் விசேஷத:।
அபுஷ்பா யானபத்யா யா ஸதா புஷ்வதிச யா॥ (16)

பதித்வேஷ்யாச யா நாரீ துஷ்டா ச்வச்ருஜனம் ப்ரதி।
யா வந்த்யா ம்ருதபுத்ராச நித்ராலஸ்ய மஹாபயை:॥ (17)

இத்யேவமாதிதோஷைச்ச துஷ்டானாம் யோஷிதாமயம்।
சக்த: தத்வேஷஹரணே ஸ்மரணா தேவ நிச்சிதம்॥ (18)

ஸ்த்ரீவச்ய நர வச்யாதி ஸர்வவச்ய ஜயப்ரத:।
ஸ்த்ரீணாம் ஸம்மோஹனே சக்த: நராணாம்ச விசேஷத:॥ (19)

மதங்கமுனினா பூர்வம் கீத: தேனாப்யனுஷ்டித:।
வாஸுதேவேன கீதோயம் தும்புருப்ரமுகாதிபி:॥ (20)

ஜப்த:ஸதா மஹாமந்த்ர: வஸிஷ்டாத்யைர் மஹர்ஷிபி:॥ (21)

ஸௌபாக்யம் இழந்த ஸ்த்ரீகளுக்கும் புத்திரன் இல்லாதவர்க்கும் இது நிவாரணம் அளிக்கும். புஷ்பவதியாகாதவள், குழந்தை இல்லாதவள், எப்போதும் புஷ்பதியாயிருப்பவள், பர்த்தாவின் த்வேஷத்திற்கு ஆளானவள், மாமனார் மாமியாருக்குப் பிடிக்காதவள், மலடி, குழந்தையை இழந்தவள், இத்துடன் துக்கம், சோம்பல், பயம் இது போன்ற தோஷங்களுடையவர்களான ஸ்த்ரீகளுக்கு அந்த தோஷங்களைப் போக்கும் சக்தி உடையது இம் மந்திரம். ஸ்த்ரீ வச்யம் நர வச்யம் உண்டாகும். இது மதங்க முனிவரால் உபதேசிக்கப்பட்டதுடன் அவரால் அனுஷ்டிக்கப்பட்டதுமாகும். இது கிருஷ்ணரால் உபதேசிக்கப்பட்டதும் தும்புரு முதலியவர்களால் கானம் செய்யப்பட்டதுமாகும். இந்த மந்த்ரம் வசிஷ்டாதி மஹர்ஷிகளால் ஜபிக்கப்பட்டதுமாகும் என விஸ்தாரமாய்ப் பலச்ருதி கூறப்பட்டுள்ளது. இத மிகவும் சிறந்த மந்திரமாகும்.

## சில நியமங்கள்

(ஸ்ரீ ராஜ மாதங்கி உபாஸகன் கதம்ப மரத்தை வெட்டக் கூடாது. காளீ என்ற சொல்லை உச்சரிக்கக் கூடாது. வீணை, குழல், நாட்டியம், ஸங்கீதக் கச்சேரி இவைகள் நடக்கும்போது அலக்ஷியமாய் இருக்கக் கூடாது. பாடகர்களை நிந்திக்கக் கூடாது (ஸ்ரீ வித்யா ரத்னாகரம் — 245 பக்கம்).)

ஸ்ரீ சாரதா திலகத்தில் ஒரு ஸ்துதி கூறப்பட்டுள்ளது. மிகவும் அற்புதமானது. 11 சுலோகங்கள் கொண்டது. மாதங்கியை உபாஸிப்பவர்களுக்கு என்ன என்ன பயன்கள் உண்டாகும் என்பதையும் உணர்த்தும். இந்த ஸ்துதி உபாஸகர்கள் மனப்பாடம் செய்ய வேண்டிய ஸ்துதியாகும்.

## रत्नमाला स्तोत्रम्
## ரத்னமாலா ஸ்தோத்ரம்

देवतां जगतामाद्यां मातङ्गीमिष्टदायिनीं।
अवाप्तुमिष्टां तां वाचं भूषयेद्रत्नमालया॥

தேவதாம் ஜகதாமாத்யாம் மாதங்கீம் இஷ்டதாயினீம்।
அவாப்துமிஷ்டாம் தாம் வாசம் பூஷயேத் ரத்னமாலயா॥

உலகத்தின் ஆதியும், வேண்டியதை அளிப்பவளும் ஆகிய மாதங்கி தேவியை, தனக்கு இஷ்டமான வாக்குப் பெற ரத்ன மாலை என்னும் ஸ்துதியால் அலங்கரிக்க வேண்டும்.

आराध्य मातश्चरणांबुजं ते
ब्रह्मादयो विश्रुत कीर्तिमापुः।
अन्ये परं वाक्विभवं मुनीन्द्राः
परां श्रियं भक्तिभरेण चान्ये॥

ஆராத்ய மாதஃ சரணாம்புஜம் தே
ப்ரம்ஹாதயோ விச்ருத கீர்த்திமாபுஃ।
அன்யே பரம் வாக் விபவம் முனீந்த்ராஃ
பராம் ஸ்ரியம் பக்திபரேண சான்யே॥

ஜகஜ்ஜனனி! உன்னுடைய திருவடித் தாமரைகளை ஆராதித்து (வழிபட்டு) பிரம்மா முதலிய தேவர் சிறந்த புகழ் பெற்றனர். பல முனிச்வரர்கள் வாக் வைபவம் பெற்றனர். நிறைந்த பக்தி செய்து மற்றும் பலர் பெருஞ் செல்வம் பெற்றனர்.



नमामि देवीं नव चन्द्रमौलेः
मातंगिनीं चन्द्रकलावतंसां।
आम्नाय वाग्भिः प्रतिपादितार्थं
प्रबोधयन्तीं शुकमादरेण॥

நமாமி தேவீம் நவசந்த்ரமௌளேஃ
மாதங்கினீம் சந்த்ரகலாவதம் ஸாம்।
ஆம்னாய வாக்பிஃ ப்ரதிபாதிதார்த்தம்
ப்ரபோதயந்தீம் சுகமாதரேண॥

சந்த்ர கலை தரித்தவளும், வேத வாக்கியங்களால் விளக்கப்பட்ட பொருளை (பிரணவார்த்தத்தை) அன்புடன் கிளிக்கு போதிக்கின்றவளும் சந்திர கலாதரனாகிய பரமனுக்கு மனைவியுமாகிய ஸ்ரீ மாதங்கி தேவியை வணங்குகின்றேன். இந்தச் சுலோகத்தால் தேவி, "பட்ட ராஞ்ஞீ" என்ற குறிப்பு கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பார் உரைகாரர்.

विनम्र देवासुर मौलिरत्नैः
नीराजितं ते चरणारविन्दं।
भजन्ति ये देवि महीपतीनां
व्रजन्ति ते संपदमादरेण॥

வினம்ர தேவாஸுர மௌளி ரத்னைஃ
நீராஜிதம் தே சரணாரவிந்தம்।
பஜந்தியே தேவி மஹீபதீனாம்
வ்ரஜந்தி தே ஸம்பத மாதரேண॥

தேவி! வணங்கும் தேவர் அசுரர்களுடைய கிரீடத்தில் உள்ள ரத்னங்களால் ஆரத்தி எடுக்கப்பட்ட உன் சரணார விந்தத்தை எவர் அன்புடன் வழிபடுகின்றனரோ அவர் அரசருக்குரிய செல்வத்தைப் பெறுகின்றனர்.

मातंगि लीलागमने भवत्याः
शिंजान मंजीरमिपात् भजन्ते।

मातस्त्वदीयं चरणारविन्दं
अकृत्रिमाणां वचसां निगुंफाः ॥

மாதங்கி லீலாகமனே பவத்யாः
சிஞ்ஜான மஞ்ஜீரமிஷாத் பஜந்தே।
மாதஸ்த்வதீயம் சரணாரவிந்தம்
அக்ருத்ரிமாணாம் வசஸாம் நிகும்பாः॥

அம்மா! மாதங்கி தேவி நீ நடப்பது என்ற லீலை புரியும் போது காலில் அணியப்பட்ட சப்தமிடும் பாத ஸரங்கள் என்ற வியாஜம் கொண்டு வேத வாக்கியங்கள் உன் சரணார விந்தங்களைப் பஜிக்கின்றன.

पदात्पदं शिंजितनूपुराभ्यां
कृतार्थयन्ती पदवीं पदाभ्यां।
आस्फालयन्ती कलवल्लकीं तां
मातंगिनी मद्धृदयं धिनोतु॥

பதாத்பதம் சிஞ்ஜித நூபுராப்யாம்
க்ருதார்த்தயந்தீ பதவீம் பதாப்யாம்।
ஆஸ்பாலயந்தீ கலவல்லகீம் தாம்
மாதங்கினீ மத்ஹ்ருதயம் தினோது॥

ஒவ்வொரு அடி வைக்கும்போது சப்பமிடும் பாத ஸரம் உடைய பாதங்களால் (நடப்பதால்) செல்லுமிடத்தை பேறு பெற்றதாய்ச் செய்கிறவளும், ஒலிக்கும் வீணையை மீட்டிக் கொண்டிருப்பவளுமான ஸ்ரீ மாதங்கி என் ஹ்ருதயத்தைத் திருப்திப்படுத்தட்டும்.

नीलांशुकाबद्ध नितंबबिंबां
ताली दलेनार्पित कर्णभूषां।
माध्वीमदा घूर्णितनेत्रपद्मां
धनस्तनीं शंभुवधूं नमामि॥

நீலாம் சுகாபத்த நிதம்ப பிம்பாம்
தாளீதளேனார்பித கர்ணபூஷாம்।



மத்வீ மதா கூர்ணித நேத்ரபத்மாம்
கனஸ்தனீம் சம்புவதூம் நமாமி॥

நீலப் புடவை கட்டிய இடையும், பனை ஓலையாலான காதணியும், மது அருந்தியதால் சுழலும் கமலக் கண்ணும், கனமான மார்பகமும் கொண்ட சம்புவின் மனையாளை வணங்குகிறேன்.

तडिल्लताकान्त मनर्घ्यभूषं
चिरेण लक्ष्यं नवरोम राज्या।
स्मरामि भक्त्या जगतामधीशं
वलित्रयांकं तव मध्य बिंबम्॥

தடில்லதாகாந்த மனர்க்ய பூஷம்
சிரேண லக்ஷ்யம் நவரோம ராஜ்யா।
ஸ்மராமி பக்த்யா ஜகதாமதீசம்
வலித்ரயாங்கம் தவமத்யபிம்பம்॥

மின்னல் கொடி போன்று அழகியதும், விலை மதிக்க முடியாத அணிகலன்கள் கொண்டதும், அரும்பிய ரோமாவளியினால் அனுமானத்தால் (சிரமப்பட்டே) காணத் தகுந்ததும், உலகத்தை ஆளுகின்றதும், மூன்று மடிப்புகள் கொண்டதுமான தங்கள் இடையை பக்தியுடன் ஸ்மரிக்கிறேன்.

नीलोत्पलानां श्रियमावहन्तीं
कान्त्या कटाक्षैः कमला कराणां।
कदंब मालांचित केश पाशां
मातंग कन्यां हृदि भावयामः॥

நீலோத்பலானாம் ஸ்ரீயமாவஹந்தீம்
காந்த்யா கடாக்ஷைः கமலாகராணாம்।
கதம்பமாலாஞ்சித கேச பாசாம்
மாதங்ககன்யாம் ஹ்ருதி பாவயாமः॥

தேஹ காந்தியால் நீலோத்பல புஷ்பங்களின் அழகை ஏற்றிருப்பவளும் (நீல நிறத்தினளும்) கடாக்ஷங்களால் தாமரை

ஓடைகளின் அழகை ஏற்றிருப்பவளும், கடம்ப பூமாலை புனையப்பட்ட கேச பாசம் உடையவளுமாகிய ஸ்ரீ மாதங்க கன்னியை இதயத்தில் தியானம் செய்கின்றோம்.

ध्यायेय मारक्त कपोलकान्तं
बिंबाधरन्यस्त ललामरम्यं।
आलोल नीलालकमायताक्षं
मन्दस्मितं ते वदनं महेशि॥

த்யாயேய மாரக்த கபோலகாந்தம்
பிம்பாதரந்யஸ்த லலாம ரம்யம்।
ஆலோல நீலாளகமாயதாக்ஷம்
மந்தஸ்மிதம் தே வதனம் மஹேசி॥

மஹேச்வரியே சிவந்த கன்னத்தால் அழகியதும், கோவைப் பழம் போன்ற உதட்டைத் தொடுகின்ற ஆபரணத்தால் (பிலாக்) அழகியதும் அசையும் நீல நிற (மின்னிச்சி, குந்தளம்) கேசங்கள் கொண்டதும் நீண்ட கண்களுடையதும், புன்சிரிப்புடன் கூடியதுமான தங்கள் முகத்தைத் தியானிக்கிறேன்.

स्तुत्यानया शंकर धर्म पत्नीं
मातंगिनीं वागधि देवतां तां।
स्तुवन्ति ये भक्ति युता मनुष्याः
परां श्रियं नित्यं मुपाश्रयन्ति॥

ஸ்துத்யானயா சங்கர தா்ம பத்னீம்
மாதங்கினீம் வாகதி தேவதாம் தாம்।
ஸ்துவந்தி யே பக்தியுதா மனுஷ்யாஃ
பராம் ஸ்ரீயம் நித்ய முபாச்ரயந்தி॥

வாக்கு நல்கும் தேவதையும், சங்கரரின் தர்ம பத்னியுமான ஸ்ரீ மாதங்கியைப் பக்தியுடன் எவர் துதிக்கின்றனரோ அவர் பெருஞ் செல்வம் பெறுகின்றனர்.



குறிப்பு: இதற்கு மாதங்கி நவரத்னமாலா ஸ்துதி என்று பெயர். முன்னும் பின்னும் உள்ள சுலோகங்களில் அந்த ஸ்துதியில் பேசப்படும் தலைவன் அல்லது தலைவியின் பெயர் புனையப்பட்டிருக்க வேண்டும். இடையில் ஒன்பது சுலோகங்கள் இருக்க வேண்டும். ஆக 11 சுலோகங்கள் ஆகும். இவ்வாறான ஸ்துதியே நவரத்ன மாலிகா ஸ்துதி எனப் பெயர் பெறும்.

## அங்க தேவதைகள்

ஸ்ரீ ராஜ சியாமளா என்ற ராஜ மாதங்கிக்கு ஹஸந்தி ச்யாமளா, சுக ச்யாமளா, சாரிகா ச்யாமளா, வீணா ச்யாமளா, வேணு ச்யாமளா, லகு ச்யாமளா என்பவர் அங்க தேவதைகள். இதில் ஹஸந்தி ச்யாமளா பூர்வாங்க தேவதா, மற்றவர் உத்ராங்க தேவதைகள் ஆவர். இவருடைய மந்த்ரங்கள் பின்வருமாறு.

''ओं ह्रीं हसन्ति हसिता लापे मातंगिपरिचारिके। मम भय विघ्ना पदां नाशं कुरु कुरु ठः ठः हुं फट्स्वाहा'' (हसन्ती श्यामला)

"ஓம் ஹ்ரீம் ஹஸந்தி ஹஸிதா லாபே மாதங்கி பரிசாரிகே। மம பயவிக்னாபதாம் நாசம் குரு குரு டஃ டஃ ஹூம் பட் ஸ்வாஹா" (ஹஸந்தீ ச்யாமளா).

''ओं नमो भगवते महाशुकाय त्रिभुवनालंकाराय राजमद मर्दनाय शीघ्रं राजानं मे वशमानय स्वाहा'' (शुक श्यामला)

"ஓம் நமோ பகவதே மஹாசுகாய த்ரிபுவனாலங்காராய ராஜமத மர்தனாய சீக்ரம் ராஜானம் மே வசமானய ஸ்வாஹா" (சுக ச்யாமளா)

''ओं ऐं ओं नमो भगवति शां शारिके सकल कलाकोविदे विद्यां बोधय बोधय स्वाहा'' (शारिका श्यामला)

"ஓம் ஐம் ஓம் நமோ பகவதி சாம் சாரிகே ஸகல கலா கோவிதே வித்யாம் போதய போதய ஸ்வாஹா" (சாரிகா ச்யாமளா).

''ओं नमो भगवत्यै वीं वीणायै मम संगीतविद्यां प्रयच्छ स्वाहा'' (वीणा श्यामला)

"ஓம் நமோ பகவத்யை வீம் வீணாயை மம ஸங்கீத வித்யாம் ப்ரயச்ச ஸ்வாஹா" (வீணா ச்யாமளா)

"ॐ नमो भगवते व्यं वेणवे मम साहित्यविद्यां प्रयच्छ स्वाहा" (वेणु श्यामला)

"ஓம் நமோ பகவதே வ்யம் வேணவே மம ஸாஹித்ய வித்யாம் ப்ரயச்ச ஸ்வாஹா" (வேணு ச்யாமளா)

மேற்கூறியவர் முறையே 1. பயவிக்ன ஆபத்துக்களின் நாசம், 2. ராஜவச்யம், 3. வித்யை, 4. ஸங்கீத வித்யை, 5. ஸாஹித்ய வித்யை இவற்றைப் பக்தர்களுக்கு அளிப்பர்.

## காளிதாஸ மஹா கவியும்
## ஸ்ரீ ராஜ மாதங்கீயும்

ஸ்ரீ காளிதாஸ மஹா கவி இவளை உபாஸித்தே மஹா கவிகளுக்குள் முதல்வராய்த் திகழ்ந்தார். அவர் பராசக்தியின் திருவருள் பெற்றவுடன் மஹா ச்யாமளாவைக் குறித்துப் பாடிய முதல் ஸ்துதி ச்யாமளா தண்டகமாகும். மஹா கவி காளிதாஸனை லகுபட்டாரகர் என்பர் சாக்தர். சியாமளா தண்டகத்தில், இம் மஹா கவி இந்த ஸ்ரீ ராஜ மாதேங்கேச்வரீயே அனைத்தும் எனப் பாடியிருக்கிறார்.

"सर्वतीर्थात्मिके सर्वमन्त्रात्मिके सर्वतन्त्रात्मिके सर्वयन्त्रात्मिके सर्वशक्त्यात्मिके सर्व पीठात्मिके सर्वतत्वात्मिके सर्वविद्यात्मिके सर्वयोगात्मिके सर्वनादात्मिके सर्वशब्दात्मिके सर्वविश्वात्मिके सर्वदीक्षात्मिके सर्वसर्वात्मिके जगन्मातृके पाहि मां"

"ஸர்வ தீர்த்தாத்மிகே ஸர்வ மந்த்ராத்மிகே ஸர்வ தந்த்ராத்மிகே ஸர்வ யந்த்ராத்மிகே ஸர்வ சக்த்யாத்மிகே ஸர்வ பீடாத்மிகே ஸர்வ தத்வாத்மிகே ஸ்வ வித்யாத்மிகே ஸர்வ யோகாத்மிகே ஸர்வ நாதாத்மிகே ஸர்வ சப்தாத்மிகே ஸர்வ விச்வாத்மிகே ஸர்வ தீக்ஷாத்மிகே ஸர்வ ஸர்வாத்மிகே ஸர்வகே ஜகன்மாத்ருகே பாஹி மாம்"



என்று. இவள் அனைத்துமாய் இருப்பதால் இவள் உபாஸனை அனைத்துத் தெய்வங்கள் அளிக்கும் பாக்யங்களையும் அளிக்கும் என்று கூறப்பட்டதாகின்றது.

## श्री लघु श्यामला
## ஸ்ரீ லகு ச்யாமளா

लघु श्यामा லகு ச்யாமா என்பவளும் ஸாக்ஷாத் மாதங்கியே.

कलौ कलिजिते काले साधकस्य प्रसीदति।
लघु शीघ्रेण तेनेयं लघु श्यामेति गीयते॥

கலௌ கலிஜிதே காலே ஸாதகஸ்ய ப்ரஸீததி।
லகு சீக்ரேண தேனேயம் லகு ச்யாமேதி கீயதே॥

கலி வெற்றி கொண்டுள்ள இக் காலத்தில் (கலி காலத்தில்) உபாஸனை புரிபவனுக்கு இந்தச் சக்தியானவள் சீக்கிரமாக அருள் பாலிப்பதால் இவளுக்கு லகு ச்யாமா ஏன்ற பெயர் ஏற்பட்டது. மற்றபடி இவளும் ஸாக்ஷாத் மந்த்ரிண்யம்பா அவதாரமானவளே என்பது மந்த்ர சாஸ்த்ர ரஹஸ்யமாகும்.

இந்த ஸ்ரீ லகுமாதங்கியின் அவதார வரலாறு பற்றி இங்கே காண்போம்:

मतंगो नाम तपसां एकराशिस्तपोधनः।
महाप्रभावसंपन्नो जगत्सर्जन लंपटः॥
तपः शक्त्या तीव्रया च सर्वत्राज्ञाप्रवर्तकः॥

மதங்கோ நாம தபஸாம் ஏகராசிஸ் தபோதன:।
மஹாப்ரபாவஸம்பன்னோ ஜகத் ஸர்ஜன லம்பட:॥
தபச் சக்த்யா தீவ்ரயா ச ஸர்வத்ராஞாப்ரவர்த்தக:॥

முன் கூறப்பட்ட மதங்க மஹர்ஷி தவத்தின் குவியல். அற்புத ப்ரபாவம் கொண்டவர். உலகத்தை ஸ்ருஷ்டி செய்யும் ஆசை கொண்டவர். தன் உக்கிரமான தபஸ் சக்தியால் எங்கும் அவர் ஆஞ்ஞையைச் செலுத்துபவர் (இவருக்கு மஹா ச்யாமளா என்ற ராஜமாதங்கி புத்திரியாய்ப் பிறந்த வரலாறு முன் கூறப்பட்டு விட்டது).

இந்த மஹான் மதங்க மஹர்ஷிக்கு मातंगः மாதங்கர் என்றொரு புதல்வர் இருந்தார். இவரும் மஹா தபஸ்வி. அவரும் மதங்காசிரமத்திற்கு மேற்கில் सिद्धबिलं (மேலப் பெரும் பள்ளம்) என்ற இடத்தில் தவம் புரியும் (एरण्ड:) ஏரண்டர் என்ற மஹர்ஷியை அடைந்து भगवन् பகவன்! மாதங்கி என் தந்தைக்குப் பெண்ணாய்ப் பிறந்தாள். அவள் என் ஸஹோதரீ. எனக்கும் சக்தி புத்திரியாய்ப் பிறக்க வேண்டும் என்பது என் ஆசை. அதற்குத் தாங்கள் தான் உபாயம் கூற வேண்டும் என்று வேண்டினார். அவளருளால் தான் எனக்கு ப்ரம்ஹ வித்யா ஸித்தி ஏற்படும் என்றும் தெரிவித்துக் கொண்டார்.

अद्वैत वासना पुंसां आविर्भवति शोभना।
तथाप्यनुग्रहादेव तरुणेन्दुशिखामणेः ॥
अनुग्रहश्च देवस्य शक्त्या चिद्रूपया सह॥

அத்வைத வாஸனா பும்ஸா ஆவிர்பவதி சோபனா।
ததாப்யனுக்ரஹா தேவ தருணேந்து சிகாமணேः॥
அனுக்ரஹஸ்ச தேவஸ்ய சக்த்யசா சித்ரூபயா ஸஹ॥

என்று பிரம்ஹ வித்யா ப்ராப்தி சித்ருபிணியான சக்தியின் அருளால் அன்றோ ஏற்படும்?

ஏரண்ட மஹர்ஷி கூறினார்: "உன் பிதாவிற்கு சக்தி உபாஸ்ய தெய்வம். நீயோ எனக்குச் சிஷ்யன். உனக்கு இஷ்ட தெய்வம் கணபதி. ஆகவே முதலில் நீ பாலமாயிர க்ஷேத்திரத்தில் ஏகாக்ஷர மஹாகணபதியை உபாஸனை செய். பின் உனக்கு சக்தி ஸ்தவராஜத்தை உபதேசிக்கிறேன். அதனால் உனக்கு இஷ்ட ஸித்தி ஏற்படும்" என்றார். அப்படியே அவர் கணபதி மந்த்ரம் ஜபித்து ஸித்தி பெற்ற பின், ஏரண்டர் அவருக்கு, "ஸ்ரீ சக்தி ஸ்தவராஜத்தை" உபதேசித்தார். இது லளிதோபாக்யானத்தில் உள்ளது. இதை லளிதா ஸ்தவராஜம் என்றும் கூறுவர். இந்த ஸ்துதி மொத்தம் 38 சுலோகங்கள் கொண்டது.

ये स्तुवन्ति च मां भक्त्या स्तवेनानेन मानवाः।
भाजनं ते भविष्यन्ति धर्मश्री यशसां सदा॥



विद्याविनय संपन्नाः नीरोगा दीर्घजीविनः।
पुत्रमित्रकलत्राढ्याः भवन्तु मदनुग्रहात्॥

யே ஸ்துவந்தி ச மாம் பக்த்யா ஸ்தவேனானேன மானவா:।
பாஜனம் தே பவிஷ்யந்தி தர்ம ஸ்ரீயசஸாம் ஸதா॥
வித்யா வினய ஸம்பன்னா: நீரோகா தீர்கஜீவின:।
புத்ரமித்ரகளத்ராட்யா: பவந்து மதனுக்ரஹாத்॥

என்று இந்த ஸ்தவராஜத்தைப் பாராயணம் செய்பவர் தர்மம், ஸ்ரீ புகழ் இவற்றிற்கு இருப்பிடமாய் இருப்பர். வித்யா வினயம் உடையவர்களாகவும், ரோகமற்றவராயும், தீர்கஜீவிகளாகவும், புத்திரர், மித்திரர், மனைவி இவர் நிறைந்தவராகவும் என் அருளால் வாழ்வர் என்று ஸ்ரீ லளிதையே கூறியிருக்கின்றாள். அதில் சில சுலோகங்கள்.

जय देवि जगन्मातः जय देवि परात्परे।
जय कल्याणनिलये जय कामकलात्मिके॥ (१)

जय कामेशवामाक्षि जय कामाक्षि सुन्दरि।
जयाखिल सुराराध्ये जय कामेशि कामदे॥ (२)

क्रीडा ते लोकरचना सरवा ते चिन्मयः शिवः।
आहारस्ते सदानन्दः वासस्ते हृदयं सतां॥ (३)

या देवी परमाशक्तिः परब्रह्माभिधायिनी।
ब्रह्मनन्दामिधानायै तस्यै देव्यै नमो नमः॥ (४)

यदाज्ञया प्रवर्तन्ते वह्निसूर्येन्दु मारुताः।
पृथिव्यादीनि भूतानि तस्यै देव्यै नमो नमः॥ (५)

यत्रोदेति जगत्कृत्स्नं यत्र तिष्ठति निर्भरं।
यत्रान्तमेति काले तु तस्यै देव्यै नमो नमः॥ (६)

नमो नमोस्ते जगदेक मात्रे
नमो नमस्ते जगदेक पित्रे।

नमो नमस्तेऽखिल तन्त्ररूपे
नमो नमस्तेऽखिल यज्ञ रूपे ॥ (७)

ஜயதேவி ஜகன்மாதஃ ஜயதேவி பராத்பரே ।
ஜயகல்யாண நிலயே ஜய காம கலாத்மிகே ॥ (1)

ஜய காமேச வாமாக்ஷி ஜய காமாக்ஷி ஸுந்தரி ।
ஜயாகில ஸுராராத்யே ஜய காமேசி காமதே ॥ (2)

க்ரீடாதே லோகரசனா ஸகாதே சின்மயஃ சிவஃ ।
ஆஹாரஸ்தேஸதானந்தஃ வாஸஸ்தே ஹ்ருதயம் ஸதாம் ॥ (3)

யாதேவீ பரமாசக்திஃ பரப்ரம்ஹாபிதாயினீ ।
ப்ரம்ஹானந்தாபிதானாயை தஸ்யை தேவ்யை நமோ நமஃ ॥ (4)

யதாஞ்ஞயா ப்ரவர்த்தந்தே வந்ஹி சூர்யேந்து மாருதாஃ ।
ப்ருதிவ்யாதீனி பூதானி தஸ்யை தேவ்யை நமோ நமஃ ॥ (5)

யத்ரோதேதி ஜகத் க்ருத்ஸ்னம் யத்ர திஷ்டதி நிர்பரம் ।
யத்ராந்தமேதி காலேது தஸ்யை தேவ்யை நமோ நமஃ ॥ (6)

நமோ நமஸ்தே ஜகதேக மாத்ரே
நமோ நமஸ்தே ஜகதேக பித்ரே ।
நமோ நமஸ்தே(அ)கில தந்த்ரரூபே
நமோ நமஸ்தே(அ)கில யஞ்யரூபே ॥

இந்த ஸ்தவராஜத்தைப் பாராயணம் செய்து மதங்காசிரமத்திலுள்ள மாதங்கியின் ஸந்நிதியில் ஆராதனை செய்து வந்தார். ஒரு ஸமயம் மாதங்கி அவருக்குத் தர்சனம் அளித்தாள்.

तस्य पुत्रस्तु मातंगो मुद्रिणीमन्त्रनायिकां ।
घोरैस्तपोभिरत्यर्थं पूजयामास धीरधीः ॥
मन्त्रिणी कृतसान्निध्या वृणीष्व वरमित्यशात् ॥

தஸ்ய புத்ரஸ்து மாதங்கோ முத்ரிணீம் மந்த்ரநாயிகாம் ।
கோரைஸ்தபோபிரத்யர்த்தம் பூஜயாமாஸ தீரதீஃ ॥
மந்த்ரிணீக்ருத ஸான்னித்யா வ்ருணீஷ்வ வரமித்யசாத் ॥



மாதங்கர் முத்ரிணீ என்ற மந்த்ரிண்யம்பாவை உபாஸிக்க மந்த்ரிணி காட்சி கொடுத்து, "வேண்டிய வரத்தைக் கேள்" என்றாள். அவர் "அம்மா! உன்னை நினைத்த மாத்திரத்திலேயே எனக்கு அணிமாதி ஸித்திகளும் மற்றைய விபூதிகளும் ஏற்பட்டு விட்டன. உன் சரணாரவிந்த ஸ்மரணத்தால் மூவுலகிலும் நான் பெறாத பாக்யம் ஒன்றுமில்லை. ஆயினும், நீ ஒரு வரம் அளித்தருள வேண்டும். முன்னொரு ஸமயம் அன்பின் காரணமாக ஹிமவானுடன் (பரிஹாஸமாக) விளையாட்டாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது ஹிமவான், தான் கௌரீயின் தந்தை எனக் கூறி, என்னைவிடத் த்ன்னைப் பெ்ருமைப்படுத்திக் கொண்டான். எ்னக்கு அந்தப் பாக்யம் இல்லையே. ஸமமான குணமுள்ள சிநேகிதரில் ஒருவன் குணத்தால் சிறந்து நிற்கும்போது மற்றவனுக்கும் அந்தக் குணம் பெற ஆசை எழுவது இயற்கையே. ஆதலால் நானும் கௌரீக்குத் தந்தையாக ஆசை கொண்டேன். அதற்காகவே நானும் தவம் புரிந்தேன். ஆகவே மந்த்ரிணீ அம்மா! நீ எனக்குப் புத்திரியாய்ப் பிறக்க வேண்டும். அதனால் என்னுடைய பேரும் புகழ் பெறும்" என்றார்.

पूर्वं हिमवता सार्धं सौहार्दपरिहासवान् ।
क्रीडामतनवं वाक्यैः तत्र तेन प्रगल्भितं ॥
अहं गौरीगुरुरिति श्लाघामात्मनि तेनिवान् ।
तद्भाग्यं मम नैवाभूत् यतस्तत्राधिको गुणः ॥
उभयोर्गुण साम्ये च मित्रयो रधिके गुणे ।
एकस्य कारणाज्जाते तत्रान्यस्य स्पृहा भवेत् ॥
गौरीगुरुत्वश्लाघार्थं प्राप्तकामोप्यहं तपः ।
कृतवान्मन्त्रिणी नाथे तत्वं मत्तनया भव ॥
यतो मन्नामविख्यातं भविष्यति न संशयः ॥

பூர்வம் ஹிமவதா ஸார்த்தம் ஸௌஹார்த பரிஹாஸவான் ।
க்ரீடாமதனவம் வாக்யைஃ தத்ர தேன ப்ரகல்பிதம் ॥
அஹம் கௌரீ குரு ரிதி ச்லாகாம் ஆத்மனி தேனிவான் ।
தத்பாக்யம் மம நைவாபூத் யதஸ்தத்ராதிகோ குணஃ ॥
உபயோர்குணஸாம்யேச மித்ரயோ ரதிகேகுணே ।

ஏகஸ்யகாரணாத்ஜாதே தத்ரான்யஸ்ய ஸ்ப்ருஹா பவேத் ॥
கௌரீ குருத்வ ச்லாகார்த்தம் ப்ராப்த காமோப்யஹம் தப: ।
க்ருதவான் மந்த்ரிணீநாதே தத்த்வம் மத்தனயா பவ ॥
யதோ மந்நாம விக்யாதம் பவிஷ்யதி ந ஸம்சய: ॥

ஒரு நாள் மாதங்க மஹர்ஷியின் மனைவி ஸித்திமதி என்பாள் ஸ்ரீ பராசக்தி தன் காதணியிலிருந்து புன்னை மலர்க் கொத்தை தனக்கு அளிப்பது போன்ற ஸ்வப்னம் கண்டாள். இதன் பின்னர் ஒரு நாள் மாதங்கர் பாலமந்திர க்ஷேத்ரத்தில் கணேச தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து எழுந்திருக்கும் போது நீலோத்பல மலரில் வீணை, புஸ்தகம், நீலோத்பலம், உத்பலம், சுகம் இவை தரித்த கரத்தினளாய் ஸர்வாலங்கார பூஷிதையாய்ச் சியாம வர்ணம் உடையவளாய் மூன்று கண்கள் அழகு கூட்ட சந்திர கலையுடன் விளங்கும் பெண் குழந்தையைக் கண்டார் (ஸித்திமதியின் கர்பத்தில் உதித்தாள் என்று புராணம் கூறும்). எடுத்து தன் பார்யை சித்கலையிடம் (ஸித்திமதி என்றும் இவளுக்குப் பெயர் உண்டு) கொடுத்தார். முனிவர்கள் இவளுக்கு ब्रह्मविद्या ப்ரம்ஹவித்யா எனப் பெயரிட்டனர். இவள் தம் தந்தையிடமிருந்து ஸ்ருஷ்டி வித்தை பெற்று, தனக்கு ஸமமான கோடிக் கணக்கில் மாதங்க கன்யைகளை (தன் பணிவிடைக்காக) ஸ்ருஷ்டித்தாள் (இந்த மாதங்க கன்யைகளே ஸ்ரீ புரத்தில் மந்த்ரிண்யம்பாவிற்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கின்றனர்).

பின் இந்த பிரம்ஹ வித்யை என்ற லகு சியாமா தவம் இயற்றி, திருவெண்காட்டில் அருள் வழங்கிக் கொண்டிருக்கும் சுவேதவன நாதரை (ஸ்ரீ சுவேதாரண்யேசுவரரை) முறைப்படித் திருமணம் செய்து கொண்டாள் (இன்றும் இத் திருக் கல்யாணம் திருவெண்காடு மாசி மஹோத்ஸவத்தில் ஏழாம் நாள் மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகின்றது). இந்த லகு ச்யாமாவின் அருளால் மாதங்கர் பிரும்ம வித்தையில் ஸித்தி பெற்றார். இந்த லகு சியாமா திருவெண்காட்டில் ब्रह्म विद्या என்ற பெயருடனும், மதங்காச்ரமத்தில் அஞ்சனாக்ஷீ என்ற பெயருடனும் விளங்கிக் கொண்டு, பக்தர்களுக்கு அருள் பாலித்து வருகின்றாள்.

இந்தப் பிரம்ஹ வித்யாம்பிகா த்யானத்தை சுவேதாரண்ய க்ஷேத்ர மஹாத்மியத்தில் என் தமயனார் ப்ரம்ஹ ஸ்ரீ T.K. ராமசந்திர சாஸ்திரிகள் தம் கவிதையில் வடித்துள்ளார். அந்த சுலோகம்,



वीणा पुस्तक फुल्लपद्मशुक विभ्राजत्करा यांबिका
संजाता जगतां हितायच लघुश्यामा तपस्तोषिता ।
मांतगाख्य महामुनेस्तु तनयां तां ब्रह्मविद्याभिधां
यश्चोवाह यथाविधि प्रमुदितः तं श्वेतनाथं भजे ॥

வீணாபுஸ்தக புல்லபத்ம சுக விப்ராஜத்கரா யாம்பிகா
ஸஞ்ஜாதா ஜகதாம்ஹிதாய ச லகுச்யாமா தபஸ்தோஷிதா ।
மாதங்காக்ய மஹாமுனோஸ்து தனயாம் தாம் பிரம்ஹ வித்யாபிதாம்
யச்சோவாஹ யதாவிதி ப்ரமுதித: தம் சுவேத நாதம் பஜே ॥

இந்த லகு ச்யாமாவே உச்சிஷ்ட சாண்டாலினி என்று அழைக்கப்படுகிறாள்.

## உச்சிஷ்ட சாண்டாலினீ

உச்சிஷ்டன் என்ற அசுரன் பிரம்மாவிடம் வரம் பெற்று, மூவுலகங்களையும் ஜயித்து, தேவர்களைச் சிறையிட்டு விட்டான். வேதனை அடைந்த தேவ ஸ்த்ரீகள் பிரம்ம தேவன் கூறியபடி, ஸ்ரீ மஹா ச்யாமாவைச் சரணமடைந்தனர். மஹாசியாமா கோர ரூபம் கொண்ட उच्छिष्ट चाण्डालिनी உச்சிஷ்ட சாண்டாலினீ என்ற சக்தியை உண்டு பண்ணி, அவளை உச்சிஷ்டாஸுரனைக் கொல்லுமாறு ஆணையிட்டாள். அவளும் உச்சிஷ்டனுடன் சண்டை செய்து அவனை வதைத்தாள். தேவர்களையும் சிறையினின்றும் மீட்டாள். உடன் அவளைக் கண்டு, "நீ எனது க்ருஹத்திற்கு தூரத்தில் இருந்து வருவாயாக. என் பக்தர்கள் என்னுடைய பூஜையிலும், என்னுடைய யாகத்திலும் உனக்குப் பலி அளிக்கட்டும். அப்படிச் செய்யவில்லை என்றால் அந்தப் பூஜா பலனை நீ எடுத்துக் கொண்டு விடு" என அருளினாள்.

## ஸ்ரீ லகு ச்யாமாவின் த்யானம்

दिव्यामृतरसांभोधौ रत्नद्वीपे मनोहरे ।
कदंबकानने रत्नमण्टपान्ते महेश्वरीम् ॥ (१)

ध्यायेत्सिंहासनासीनां प्रसन्नवदनांबुजां।
इन्द्रनीलमणिश्यामां नवनीलोत्पलश्रियं॥ (२)

रक्तांशुकपरीधानां यावकार्द्रपदांबुजां।
उल्लसन्नवतारुण्य समुन्नत पयोधरां॥ (३)

पीयूषोदधिसंभूत कंबुकुण्डल मण्डितां।
विनम्रकामकोदण्ड सौन्दर्यविजयिभ्रुवं॥ (४)

बिंबाधरां स्मितज्योत्स्नां कपोल फलकोज्वलां।
लसत्कुरंगशावाक्षीं नासाकलित मौक्तिकां॥ (५)

पृष्ट देशोल्लसल्लोलवेल्लच्चामरवेणिकां।
कस्तूरितिलकां चारुचन्द्ररेखावतांसकां॥ (६)

दिव्यचन्दन दिग्धांगीं मदघूर्णित लोचनां।
मुक्ता प्रवाला वलिभिः विभूषितपृथुस्तनीं॥ (७)

मेखलाहारकेयूर मंजरीर समलंकृतां।
वीणाक्वणित विस्रंभ विश्रान्ता श्रान्त मानसां॥ (८)

स्विद्यत्कपोलफलकां आलोलालक वल्लरीं।
लसत्कदंबकल्हार प्रसूनैस्तु विराजितां॥ (९)

लीलाशुकं शिक्ष्यन्तीं चतुराम्नामपद्धतिं।
आत्मैक सुमुखीभूतां रश्मिभिः परिवारितां॥ (१०)

ध्यात्वा हृदि महादेवीं निश्चलेनान्तरात्मना।
साधकः परया भक्त्या भुक्तिमुक्तिं च विन्दति॥ (११)

(प्रपंच सार सार संग्रहे)

திவ்யாம்ருதரஸாம்போதௌ ரத்னத்வீபே மனோஹரே।
கதம்பகானனே ரத்னமண்டபாந்தே மஹேச்வரீம்॥ (1)



த்யாயேத் ஸிம்ஹாஸனாஸீனாம் ப்ரஸன்ன வதனாம் புஜாம்।
இந்த்ரநீலமணிச்யாமாம் நவநீலோத்பல ஸ்ரீயம்॥ (2)

ரக்தாம் சுகபரீதானாம் யாவகார்த்ர பதாம்புஜாம்।
உல்லஸத்நவ தாருண்ய ஸமுன்னத பயோதராம்॥ (3)

பீயூஷோததிஸம்பூத கம்புகுண்டலமண்டிதாம்।
வினம்ர காம கோதண்ட ஸௌந்தர்ய விஜயி ப்ருவம்॥ (4)

பிம்பாதராம் ஸ்மிதஜ்யோத்ஸ்னாம் கபோலபலகோஜ்வலாம்।
லஸத்குரங்கசாபாக்ஷீம் நாஸாகலித மௌக்திகாம்॥ (5)

ப்ருஷ்ட தேசோல்லஸத் லோல வேல்லத் சாமர வேணிகாம்।
கஸ்தூரீ திலகாம் சாரு சந்த்ர ரேகாவதம்ஸகாம்॥ (6)

திவ்யசந்தன திக்தாங்கீம் மதாகூர்ணித லோசனாம்।
முக்தா ப்ரவாளாவளிபிః விபூஷித ப்ருது ஸ்தனீம்॥ (7)

மேகலா ஹார கேயூர மஞ்ஜீர ஸமலங்க்ருதாம்।
வீணாக்ணித விஸ்ரம்ப விச்ராந்தாச்ராந்த மானஸாம்॥ (8)

ஸ்வித்யத்கபோல பலகாம் ஆலோலாலக வல்லரீம்।
லஸத்கதம்பகல்ஹார ப்ரஸூனைஸ்து விராஜிதாம்॥ (9)

லீலாசுகம் சிக்ஷயந்தீம் சதுராம்னாய பத்ததிம்।
ஆத்மைகஸுமுகீபூதாம் ரச்மிபிః பரிவாரிதாம்॥ (10)

த்யாத்வா ஹ்ருதி மஹாதேவீம் நிச்சலேனாந்தராத்மனா।
ஸாதகః பரயா பக்த்யா புக்திம் முக்திம்ச விந்ததி॥ (11)

*அம்ருதக் கடலில் அழகிய ரத்ன த்வீபத்தில் கதம்பவனத்தில் ரத்ன மண்டபத்தில் ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்திருப்பவளும், மஹேச்வரியும், மலர்ந்த முக கமலமுடையவளும், இந்திர நீலக் கல் போன்ற நீல நிறம் உடையவளும், புதிய நீலோத்பலத்தின் சோபையை உடையவளும், சிவந்த வஸ்திரம் தரித்தவளும், செந்நிறக் குழம்பு பூசிய சரண கமலம் உடையவளும், நவ யௌவனத்தால் நிமிர்ந்த ஸ்தனமுடையவளும், அமிர்தக் கடலினின்றும் வெளிவந்த சங்குக் குண்டலம் உடையவளும், வளைந்த மன்மதன் வில்லின் அழகை ஜயித்த புருவத்தினளும், கோவைப் பழம் போன்ற உதட்டினளும், புன்சிரிப்பை உடையவளும்,*

அகன்ற கன்னம் உடையவளும், மான் குட்டியின் கண்கள் போன்ற கண்களை உடையவளும், மூக்கில் தொங்கும் முத்துடையவளும் (பிலாக் அணிந்திருப்பவளும்), பின் பக்கம் அசைந்தாடும் சாமரங்களையும் பின்னலையும் உடையவளும், கஸ்தூரி திலகம் வைத்திருப்பவளும், பிறைச் சந்திரனை அணிந்தவளும், சந்தனம் பூசிக் கொண்டிருப்பவளும், மதத்தால் சுழலும் கண்ணினளும், முத்து பவளம் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட ஸ்தனம் உடையவளும், ஒட்டியாணம் ஹாரம் தோள்வளை பாதஸரம் இவை அணிந்தவளும், வீணை ஒலி அடிக்கடி கேட்டுச் சற்று ஒய்வுற்ற மனத்தினளும், வியர்க்கும் கன்னமும் அசையும் குந்தளமும் உடையவளும், கடம்பப் பூ செங்கழ நீர்ப் பூக்கள் சூடிக் கொண்டிருப்பவளும், கிளிக்கு நான்கு வேதங்களின் போக்கை உபதேசிப்பவளும், ஜீவர்களிடம் எப்போதும் ஸுமுகமாய் இருப்பவளும் (क्षितौ षट्पंचाशत्) க்ஷிதௌ ஷட்பஞ்சாசத் என்ற ஸௌந்தர்ய லஹரீ ஸ்தோத்திர சுலோகத்தில் கூறியபடியுள்ள 348 கிரணங்களால் சூழப்பட்டவளும் ஆகிய மஹேச்வரீயாம் லகு சியாமளையைத் தியானிப்பவன் போகத்தையும் மோக்ஷத்தையும் பெறுவான்.

मूल मन्त्रः "ऐं नमः उच्छिष्ट चाण्डाली मातंगि सर्ववशंकरि स्वाहा"

மூல மந்த்ரம்: "ஐம் நம: உச்சிஷ்ட சாண்டாளி மாதங்கி ஸர்வ வசங்கரி ஸ்வாஹா"

இது ஸுரேந்த்ர ஸம்ஹிதையில் கூறியபடி குறிக்கப்பட்ட தியானமும் மந்த்ரமும் ஆகும்).

## श्री राज मातंगी जपविधानम्
### ஸ்ரீ ராஜ மாதங்கீ ஜபவிதானம்

ஸ்ரீ மாதங்கி மந்திரங்கள் சாரதா திலகம், மந்த்ர மஹார்ணவம், மந்த்ர மஹோததி, பிரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹம், சாக்த ப்ரமோதம் முதலிய நூல்களில் காணப்படுகின்றன. அவற்றில் 10 அக்ஷரங்கள் கொண்ட மாதங்கி மந்த்ரம் ஒன்றும், 88 அக்ஷரங்கள் கொண்ட ராஜ மாதங்கி மந்த்ரம் ஒன்றும், 98 அக்ஷரங்கள் கொண்ட ராஜ மாதங்கி மந்த்ரம் ஒன்றும் ஆக மூன்று மந்த்ரங்கள் மாதங்கி மந்த்ரத்தில் உள்ளன. அவற்றில் ஸாதகர்கள் அதிகமாக உபயோகப்படுத்தும் 98 அக்ஷரங்கள் கொண்ட ராஜ மாதங்கி மந்த்ரம் ப்ரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹத்தில் உள்ளது. ஆகவே அந்த மந்த்ர ஜப விதானத்தையே இங்கு கொடுக்கின்றோம்.



## श्री राज मातंगीमन्त्र जपविधानं
### ஸ்ரீ ராஜமாதங்கீ மந்த்ர ஜபவிதானம்

अस्य श्री राजमातङ्गी महामन्त्रस्य मतंगःऋषिः महाविराड्छन्दः राजमातंगी देवता, ऐं बीजं, स्वाहा शक्तिः, सर्व वशंकरि कीलकं, मम इष्ट काम्यार्थे जपे विनियोगः

करन्यासः

| | |
|---|---|
| 1. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः ओं नमो भगवति | अंगुष्ठाभ्यां नमः |
| 2. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः श्रीमातंगेश्वरि सर्वजन मनोहारि | तर्जनीभ्यां नमः |
| 3. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः सर्वमुख रंजनि क्लीं ह्रीं श्रीं | मध्यमाभ्यां नमः |
| 4. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः सर्वराजवशंकरि सर्वस्त्री पुरुष वशंकरि | अनामिकाभ्यां नमः |
| 5. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः सर्वदुष्टमृग वशंकरि सर्व सत्व वशंकरि सर्वलोक वशंकरि अमुकं मे वश मानय स्वाहा | कनिष्ठिकाभ्यां नमः |
| 6. सौः क्लीं ऐं श्रीं ह्रीं ऐं | करतलकरपृष्ठाभ्यां नमः |

अंगन्यासः

| | |
|---|---|
| 1. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः ओं नमो भगवति | हृदयाय नमः |
| 2. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः श्रीमातंगेश्वरि सर्वजन मनोहारि | शिरसे स्वाहा |
| 3. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः सर्वमुख रंजनि क्लीं ह्रीं श्रीं | शिखायै वषट् |
| 4. ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः सर्वराजवशंकरि सर्वस्त्री पुरुष | |

| | | |
|---|---|---|
| | वशंकरि | कवचाय हुं |
| 5. | ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः सर्वदुष्टमृग वशंकरि सर्व सत्व वशंकरि सर्वलोक वशंकरि अमुकं मे वश मानय स्वाहा | नेत्रत्रयाय वौषट् |
| 6. | सौः क्लीं ऐं श्रीं ह्रीं ऐं | अस्त्राय फट् |

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

ध्यायेयं रत्नपीठे शुककलरणितं शृण्वतीं श्यामगात्रीं
न्यस्तैकाघ्रिं सरोजे राशिशकल धरां वल्लकीं वादयन्तीं।
कल्हारा बद्धमाला नियमितिविलसच्चूलिकां रक्तवस्त्रां
कर्णोद्यच्छंख पत्रां कठिनकुचभर क्रान्तकान्तावलग्नां॥

(प्रपंच सार सार संग्रहे)

ரத்ன பீடத்தில் அமர்ந்து ஒரு சரணாரவிந்தத்தை தாமரை மலரில் வைத்துக் கொண்டிருப்பவளும், கிளியின் இனிமையான சொல்லைக் கேட்பவளும், நீல நிறத்தினளும், சந்திர கலை தரித்தவளும், வீணை வாசிப்பவளும், செங்கழநீர்ப் பூமாலையால் கட்டப்பட்ட அழகிய கேசம் உடையவளும், செந்நிற வஸ்த்ரம் தரித்திருப்பவளும், சங்காலான தோடு அணிந்திருப்பவளும், கடினமான ஸ்தன பாரத்தால் சோர்ந்த அழகிய இடையை உடையவளுமான ஸ்ரீ மாதங்கி தேவியைத் தியானிக்கிறேன்.

लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि।
हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि।
यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि।
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।
वं अमृतात्मिकायै अमृतं महानैवेद्यं समर्पयामि।
सं सर्वात्मि कायै सर्वोपचारान्समर्पयामि।



मूलमन्त्रः

ओं ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः ओं नमो भगवति श्रीमातंगेश्वरि सर्वजन मनोहरि सर्वमुख रंजिनि क्लीं ह्रीं श्रीं सर्वराजवशंकरि सर्वस्त्रीपुरुष वशंकरि सर्वदुष्टमृगवशंकरि सर्वसत्ववशंकरि सर्वलोकवशंकरि अमुकंमे वशमानय स्वाहा सौः क्लीं ऐं श्रीं ह्रीं ऐं॥

இம் மந்திரத்தின் ஜபம் முடிந்தபின் அங்கநியாஸம் மட்டும் செய்து, "பூர்புவஸ்ஸுவரோமிதி திக்விமோகः भूर्भुवस्सुवरोमितिदिग्विमोकः" என்று கூறி தியான சுலோகம், லம் இத்யாதி பஞ்ச பூஜை செய்து,

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धि र्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा॥

எனக் கூறி முடிக்கவும்.

## ஸ்ரீ ராஜ மாதங்கீ ஜப விதானம்

அஸ்ய ஸ்ரீ ராஜமாதங்கீ மஹாமந்த்ரஸ்ய மதங்கः ரிஷிः, மஹா விராட்சந்தः ஸ்ரீ ராஜமாதங்கேச்வரீ தேவதா. ஐம் பீஜம், ஸ்வாஹா சக்திः ஸர்வவசம்கரி கீலகம், மம இஷ்ட காம்யார்த்தே ஜபே வினியோகः

கரநியாஸः

| | | |
|---|---|---|
| 1. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌः | ஓம் நமோ பகவதி | அங்குஷ்டாப்யாம் நமः |
| 2. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌः | ஸ்ரீ மாதங்கேச்வரி ஸர்வஜன மனோஹரி | தர்ஜனீப்யாம் நமः |
| 3. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌः | ஸர்வமுக ரஞ்ஜனி க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் | மத்யமாப்யாம் நமः |
| 4. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌः | ஸர்வராஜவசங்கரி ஸர்வ ஸ்த்ரீ புருஷ வசங்கரி | அனாமிகாப்யாம் நமः |
| 5. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் | | |

| | | |
|---|---|---|
| ஐம் க்லீம் ஸௌ: | ஸர்வ துஷ்டம்ருக வசம்கரி ஸர்வ ஸத்வ வசங்கரி ஸர்வ லோக வசங்கரி அமுகம்மே வசமானய ஸ்வாஹா | கனிஷ்டிகாப்யாம் நம: |
| 6. ஸௌ: க்லீம் ஐம் ஸ்ரீ ஹ்ரீம் ஐம் | | கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: |

அங்கநியாஸ:

| | | |
|---|---|---|
| 1. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: | ஓம் நமோ பகவதி | ஹ்ருதயாய நம: |
| 2. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: | ஸ்ரீ மாதங்கேச்வரி ஸர்வஜன மனோஹரி | சிரஸே ஸ்வாஹா |
| 3. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: | ஸர்வமுக ரஞ்ஜனி க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் | சிகாயை வஷட் |
| 4. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: | ஸர்வராஜவசங்கரி ஸர்வ ஸ்த்ரீ புருஷ வசங்கரி | கவசாய ஹும் |
| 5. ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: | ஸர்வ துஷ்டம்ருக வசம்கரி ஸர்வ ஸத்வ வசங்கரி ஸர்வ லோக வசங்கரி அமுகம்மே வசமானய ஸ்வாஹா | நேத்ரத்ரயாய வௌஷட் |
| 6. ஸௌ: க்லீம் ஐம் ஸ்ரீ ஹ்ரீம் ஐம் | | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோமிதிதிக்பந்த:

தியானம்

த்யாயேயம் ரத்னபீடே சுககலரணிதம் ச்ருண்வதீம் ச்யாமகாத்ரீம்
ந்யஸ்தைகாங்ரிம் ஸரோஜே சசிசகலதராம் வல்லகீம் வாதயந்தீம்।
கல்ஹாராபத்தமாலா நியமித விலஸத்சூளிகாம் ரக்த வஸ்த்ராம்
கர்ணோத்யத் சங்கபத்ராம் கடினகுசபர க்லாந்த காந்தாவ லக்னாம்॥

லம் ப்ருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி।
ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி।
யம் வாய்வாத்மிகாயை தூபமாக்ராபயாமி।
ரம் வன்ஹ்யாத்மிகாயை தீபம் தர்சயாமி।
வம் அம்ருதாத்மிகாயை அம்ருதம் மஹாநைவேத்யம் ஸமர்பயாமி।
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி



மூல மந்த்ரம்: ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ: ஓம் நமோ பகவதி ஸ்ரீ மாதங்கேச்வரி ஸர்வஜன மனோஹரி ஸர்வமுக ரஞ்ஜனி க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் ஸர்வ ராஜ வசங்கரி ஸர்வ ஸ்த்ரீ புருஷ வசங்கரி ஸர்வ துஷ்ட ம்ருக வசங்கரி ஸர்வ ஸத்வ வசங்கரிஸர்வ லோக வசங்கரி அமுகம்மே வசமானய ஸ்வாஹா ஸௌ: க்லீம் ஐம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம்" (98 அக்ஷரங்கள்)

*மூல மந்த்ர ஜபம் முடிந்ததும் அங்கநியாஸம் மட்டும் செய்து விட்டு "பூர்புவஸ்ஸுவரோமிதி திக்விமோக:" எனக் கூறித் தியானம், லம் இத்யாதி, பஞ்ச பூஜை செய்து இந்தக் கீழ் வரும் சுலோகத்தைக் கூறி முடிக்கவும்.*

குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீ த்வம்
க்ருஹாணாஸ்மத் க்ருதம் ஜபம்।
ஸித்திர்பவது மே தேவி
த்வத்ப்ரஸாதாத் மயி ஸ்திரா॥

# श्री लघु श्यामला मूलमत्रजपविधानं

## ஸ்ரீ லகு ச்யாமளா மூலமந்த்ர ஜபவிதானம்

*மந்த்ர மஹார்ணவத்தில் உள்ளபடி,*

अस्य श्री लघु श्यामला महामन्त्रस्य मदनः ऋषिः नृचत्गायत्री छन्दः लघु श्यामला देवता। ऐं बीजं स्वाहा शक्तिः, (सर्व वशंकरि कीलकं) (कीलकं न प्रोक्तं) अभीष्टसिद्ध्यर्थे जपे विनियोगः।

| | | करन्यासः | अंगन्यासः |
|---|---|---|---|
| 1. | ऐं नमः | अंगुष्ठाभ्यां नमः | हृदयाय नमः |
| 2. | उच्छिष्ट | तर्जनीभ्यां नमः | शिरसे स्वाहा |
| 3. | चण्डाली | मध्यमाभ्यां नमः | शिखायै वषट् |
| 4. | मात्तंगि | अनामिकाभ्यां नमः | कवचाय हुं |
| 5. | सर्ववशंकरि | कनिष्ठिकाभ्यां नमः | नेत्रत्रयाय वौषट् |
| 6. | स्वाहा | करतलकरपृष्ठाभ्यां नमः | अस्त्राय फट् |

### भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः

ध्यानं

माणिक्याभरणान्वितां स्मितमुखीं नीलोत्पलाभां वरां
रम्या लक्तकलिप्तपादकमलां नेत्रत्रयोल्लासिनीं।
वीणावादन तत्परां सुरनुतां कीरच्छद श्यामलां
मातंगीं शशिशेखरामनुभजे तांबूलपूर्णाननाम्॥

மாணிக்க ஆபரணங்கள் அணிந்தவளும், புன்சிரிப்புத் தவழும் முகத்தினளும், நீலோத்பலம் போல் காந்தியை உடையவளும், உயர்ந்தவளும், அழகிய மருதாணி பூசிய சரண கமலம் உடையவளும், முக்கண்ணியும், வீணை வாசிப்பதில் ஈடுபட்டவளும், தேவரால் வர்ணிக்கப்பட்டவளும், கிளியின் இறகு போன்ற பச்சை நிறம் உடையவளும், சந்திர கலை தரித்தவளும், தாம்பூலம் நிறைந்தவாயினளுமாகிய ஸ்ரீ லகு ச்யாமளாம்பிகையை பூஜிக்கிறேன்.

लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि।
हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि।
यं वाय्वात्मिकायै धूपं आघ्रापयामि।
रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।
वं अमृतात्मिकायै अमृतं महानैवेद्यं समर्पयामि।
सं सर्वात्मिकायै सर्वोपचारान्समर्पयामि।

मूलमन्त्रः "ओं ऐं नमः उच्छिष्ट चाण्डालि मातंगि सर्ववशंकरि स्वाहा" (२० अक्षरात्मको मन्त्रः)

ஜபம் முடிந்தபின் அங்கநியாஸம் மட்டும் செய்து भूर्भुवस्सुवरोमितिदिग्विमोकः எனக் கூறி தியானம், லமித்யாதி, பஞ்ச பூஜை செய்து, இந்தக் கீழ்வரும் சுலோகத்தைக் கூறி முடிக்கவும்.

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपं।
सिद्धिर्भवतु मे देवि त्वत्प्रसादान्मयि स्थिरा॥



### ஸ்ரீ லகு ச்யாமளா மந்த்ர ஜப விதானம்

அஸ்ய ஸ்ரீ லகு ச்யாமளா மஹாமந்த்ரஸ்ய மதனः ரிஷிः ந்ருசத் காயத்ரீசந்தः, லகுசியாமளா தேவதா, ஐம் பீஜம், ஸ்வாஹா சக்திः (ஸர்வ வசங்கரி கீலகம் கீலகம் கூறப்படவில்லை) மம ஸர்வாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே வினியோக.

| | | கரந்யாஸः | அங்கநியாஸः |
|---|---|---|---|
| 1. | ஐம் நமः | அங்குஷ்டாப்யாம் நமः | ஹ்ருதயாய நமः |
| 2. | உச்சிஷ்ட | தர்ஜனீப்யாம் நமः | சிரஸே ஸ்வாஹா |
| 3. | சாண்டாளி | மத்யமாப்யாம் நமः | சிகாயை வஷட் |
| 4. | மாதங்கீ | அனாமிகாப்யாம் நமः | கவசாய ஹூம் |
| 5. | ஸர்வ வசங்கரி | கனிஷ்டிகாப்யாம் நமः | நேத்ரத்ரயாய வௌஷட் |
| 6. | ஸ்வாஹா | கரதலகரப்ருஷ்டாப்யாம் நமः | அஸ்த்ராய பட் |

பூர்புவஸ்ஸுவரோமிதி திக்பந்தः

தியானம்

மாணிக்யாபரணான்விதாம் ஸ்மிதமுகீம்
நீலோத்பலா பாம் வராம்।
ரம்யாலக்தக லிப்த பாத யுகளாம்
நேத்ரத்ரயோல்லாஸினீம்॥
வீணாவாதன தத்பராம் ஸுரநுதாம்
கீரச்சத ச்யாமளாம்।
மாதங்கீம் சசிசேகராம் அனுபஜே
தாம்பூல பூர்ணானனாம்॥

*(உரை வடமொழி தியானத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. அங்கு காண்க).*

லம் பிருதிவ்யாத்மிகாயை கந்தம் ஸமர்பயாமி।
ஹம் ஆகாசாத்மிகாயை புஷ்பாணி ஸமர்பயாமி।
யம் வாய்வாத்மிகாயை தூபம் ஆக்ராபயாமி।
ரம் வன்ஹ்யாத்மிகாயை தீபம் தர்சயாமி।
வம் அம்ருதாத்மிகாயை அம்ருதம் மஹாநைவேத்தம் நிவேதயாமி।
ஸம் ஸர்வாத்மிகாயை ஸர்வோபசாரான் ஸமர்பயாமி।

மூல மந்த்ரம்: "ஓம் ஐம் நமः உச்சிஷ்ட சாண்டாளி மாதங்கி ஸர்வ வசங்கரி ஸ்வாஹா"

ஜபம் முடிந்தவுடன் அங்கநியாஸம் மட்டும் செய்து, "பூர்புவஸ்ஸுவரோமிதி திங்விமோகः" எனக் கூறி, தியானம் கூறி, லமித்யாதி பஞ்ச பூஜை செய்து, இந்தக் கீழ்க் கொடுக்கப்பட்ட சுலோகத்தைக் கூறி முடிக்கவும்.

குஹ்யாதி குஹ்ய கோப்த்ரீ த்வம்
க்ருஹாணாஸ்மத் க்ருதம் ஜபம்।
ஸித்திர் பவது மே தேவி
த்வத் ப்ரஸாதாத் மயி ஸ்த்ரா॥

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஸ்ரீ லக்ஷ்மீ தேவ்யை நம:

❀❀❀

# ஸ்ரீ தச மஹா வித்யைகளில்
# ஸ்ரீ கமலாத்மிகா வித்யா
# "श्री दशमहाविद्यासु श्री कमलात्मिका महाविद्या"

❀❀❀

समस्त संपत्सुखदां महाश्रियं
समस्त सौभाग्य करीं महाश्रियं।
समस्त कल्याण करीं महाश्रियं
भजाम्यहं ज्ञानकरीं महाश्रियम्॥ (श्रीलक्ष्मीहृदयं)

ஸமஸ்த ஸம்பத்ஸுகதாம் மஹாஸ்ரீயம்
ஸமஸ்த ஸௌபாக்யகரீம் மஹாஸ்ரீயம்।
ஸமஸ்த கல்யாணகரீம் மஹாஸ்ரீயம்
பஜாம்யஹம் ஞானகரீம் மஹாஸ்ரீயம்॥
(ஸ்ரீ லக்ஷ்மீ ஹ்ருதயம்)

ஸ்ரீ மஹா கணபதயே நமः

# दश महाविद्यासु "श्री कमलात्मिका विद्या"

## தசமஹாவித்யைகளில் "ஸ்ரீ கமலாத்மிகா வித்யா"

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ

## श्री लक्ष्मी गायत्री

## ஸ்ரீ லக்ஷ்மீ காயத்ரீ

महा देव्यै च विद्महे विष्णु पत्न्यै च धीमहि। तन्नो लक्ष्मी; प्रचोदयात्॥

மஹாதேவ்யை ச வித்மஹே விஷ்ணு பத்ந்யை ச தீமஹி। தன்னோ லக்ஷ்மீः ப்ரசோதயாத்॥

தேவிகளுக்குள் எவளை நாம் உயர்ந்தவளாக அறிகின்றோமோ, எவளை ஸ்ரீ மஹா விஷ்ணுவின் மனைவியாகத் தியானம் செய்கின்றோமோ அந்த லக்ஷ்மீ அவளுடைய ஞானத்திலும், தியானத்திலும் நம்மைத் தூண்டட்டும்.

### பஞ்ச ப்ரக்ருதிகளில் லக்ஷ்மீ

தேவி பாகவதத்தில் மூல ப்ரக்ருதி என்பவள் ஸ்ரீ புவனேச்வரீ தேவி. ராதா, துர்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதீ, ஸாவித்ரீ என்பவர் பஞ்ச ப்ரக்ருதிகள் என வர்ணிக்கப்படுகின்றனர். இதில் மூன்றாவது ப்ரக்ருதியாக வர்ணிக்கப் பட்டிருக்கின்றாள் ஸ்ரீ மஹாலக்ஷ்மீ. "ப்ர" என்றால் சிறந்தது எனப் பொருள். "க்ருதி" என்றால் ஸ்ருஷ்டி எனப் பொருள். ஆக ப்ரக்ருதி என்ற சொல்லுக்குச் சிறந்த ஸ்ருஷ்டி செய்பவள் (அதாவது அகில உலகங்களையும் ஸ்ருஷ்டித்தவள்) என்பது பொருளாகின்றது. அத்துடன் முக்குணங்களும் கொண்டவள் என்பதும் இதன் பொருளாகும்.

गुणे सत्वे प्रकृष्टे च प्रशब्दो वर्तते स्मृतः।
मध्ये रजसि कृश्चापि तिशब्दः तमसि स्मृतः॥

குணே ஸத்வே ப்ரக்ருஷ்டே ச ப்ரசப்தோ வர்ததே ஸ்ம்ருதः।
மத்யே ரஜஸி க்ருச்சாபி திசப்தः தமஸி ஸ்ம்ருதः॥

என்றபடி. ப்ர என்றால் ஸத்வ குணம். க்ரு என்றால் ரஜோ குணம். தி என்றால் தமோ குணம், ப்ரக்ருதி என்றால் முக் குணங்களும் கொண்டவள் என்பதும் ஸாக்ஷாத் மாயை என்பதும் பொருளாகின்றது. ஆக, மஹாமாயா ஸ்வரூபிணியாக மஹா லக்ஷ்மியை பேசுகின்றது புராணம்.

## शरणं प्रपद्ये
### சரணடைகிறேன்

வேதம் சில தெய்வங்களுக்கு சரணாகதி செய்ய வேண்டும் என்பதைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. "துர்காம் தேவீம் சரணமஹம் ப்ரபத்யே" "दुर्गां देवीं शरणमहं प्रपद्ये" என துர்கா ஸூக்தம் ஸ்ரீ துர்கா தேவியைச் சரணடையச் சொல்லுகின்றது. அவ்வாறே ஸ்ரீ தேவியின் பெருமைகளைப் பேசும் ஸ்ரீ ஸூக்தம் तां पद्मिनीमीं शरणमहं प्रपद्ये தாம் பத்மினீமீம் சரணமஹம் ப்ரபத்யே என ஸ்பஷ்டமாக ஸ்ரீ மஹாலக்ஷ்மியை சரணடைச் சொல்லுகின்றது.

चन्द्रां प्रभासां यशसा ज्वलन्तीं
श्रियं लोके देवजुष्टा मुदारां।
तां पद्मिनीमीं शरणमहं प्रपद्येऽ
लक्ष्मीर्मे नश्यतां त्वां वृणे॥

சந்த்ராம் ப்ரபாஸாம் யசஸா ஜ்வலந்தீம்
ஸ்ரியம் லோகே தேவஜுஷ்டாமுதாராம்।
தாம் பத்மினீமீம் சரணமஹம் ப்ரபத்யே
அலக்ஷ்மீர் மே நச்யதாம் த்வாம் வருணே॥ (ஸ்ரீ ஸூக்தம்)

ஸ்ரீ மஹா லக்ஷ்மி சந்திரன் போன்று பிரகாசிப்பவள். அதிகமாய்ப் பிரகாசிப்பவள். நற் புகழுடையவள். தேவர்களால் ஸேவிக்கப்படுகின்றவள். பதினான்கு உலகங்களிலும் பெருந்தன்மையுடன் கேட்டதெல்லாம் கொடுப்பவள். இரண்டு கரங்களிலும் தாமரை மலர் தரித்தவள். ஈ என்ற அக்ஷரத்தை பீஜமாகக்



கொண்டவள். இதையே காமகலா என்பர். இவ்வாறாக எல்லோராலும் அடையத் தகுந்த ஸ்ரீ ரூபிணியான உன்னைச் சரணடைகிறேன் என்பது இம் மந்திரத்தின் கருத்து.

## ஸ்ரீ ஸூக்தம் அறிமுகப்படுத்தும் ஸ்ரீ தேவி

மஹாலக்ஷ்மீ ஸுவர்ண நிறத்தினள். தங்கம், வெள்ளியாலான ஆபரணங்கள் அணிந்தவள். சந்திரனைப் போன்று மக்களை மகிழ்விப்பவள். பொன்னே உருவானவள். இவள் எந்த வீட்டில் வாஸம் செய்கின்றாளோ, அங்கு பொன் கோக்கள் (பசுக்கள்), குதிரைகள், நண்பர்கள், புத்திரர்கள், வேலையாட்கள் இவர் நிறைந்திருப்பர். ரத கஜ துரகம் காலாட்படை இவற்றால் குறிக்கப்படும் ராஜ்ய ஸம்பத்தை இவள் அளிப்பாள். இவள் முறுவல் பூத்த முகத்தினள். இவள் கோட்டை பொன்னால் ஆன மதிலுடையது. ஆபரணங்களாலும் உயர்ந்த குணங்களாலும் ஜ்வலிப்பவள். தான் திருப்தியுடையவளாய் இருந்து கொண்டு பிறரையும் திருப்திப்படுத்துபவள். செந்தாமரை நிறத்தினள். செந்தாமரை மலரில் வீற்றிருப்பவள். வாக்ரூபியான ஸரஸ்வதியாகவும் ப்ரம்ஹ ஸ்வரூபிணியாகவும் திகழ்பவள். தேவரால் ஸேவிக்கப்படுபவள். அனைத்து உலகங்களிலும் இவளே பெருந்தன்மை உடையவள். தாமரை மலர்த் தாங்கும் இரு கரத்தினள். ஈம் என்ற பீஜாக்ஷரமும் உடையவள். சரனம் அடையத் தகுந்தவள். சூரியன் போன்றும் பிரகாசிப்பவள். இவள் தவத்தின் பயனாய் உதித்தவையே விருக்ஷ ராஜாவாகிய பில்வ மரத்தின் பலங்கள். உள்ளும் புறமுமாயுள்ள துன்பம், வறுமை இவற்றை இவள் போக்குபவள். இவளைப் பூஜிக்கின்றவனை குபேரன், தன் கஜானாவின் அதிபதியாகிய மணிபத்ரனுடனும், புகழுக்குத் தேவதையான தக்ஷகன்யா கீர்த்தியுடனும் வந்தடைகிறான். சிந்தாமணி ரத்னமும் வந்தடைகின்றது. இவள் பக்தனுக்கு புகழையும் சங்க நிதி, பதும நிதி முதலானவற்றையும், குபேரனும் கீர்த்தியும் அளிப்பர். பசி, தாகம், பாப ரூபமான அலக்ஷ்மியும் இவள் உபாஸனையினால் போகும். வீட்டிலிருந்து வறுமையும் குறையும். அகலும். சுகந்தமுள்ள இடத்தில் வஸிப்பாள். எவராலும் அடக்க முடியாதவள். எப்போதும் செழிப்புடன் இருப்பவள். கோமயத்திலும் வஸிப்பாள். இவள் அனைத்து ஜீவராசிகளுக்கும் ஈசுவரி. இவள் உபாஸனையினால் மனதில் தோன்றிய ஆசைகள் ஸங்கல்பங்கள் நிறைவேறும். வாக்கில் உண்மை பசுக்களுக்கு அழகு,

அன்னத்திற்கு மாதுர்யம் ஏற்படும். இங்கு பக்தனால் லக்ஷ்மி குமாரர்களான கர்தமன், சிக்லீதன் இருவரும் என் வீட்டில் தங்கட்டும். அதனால் மஹா லக்ஷ்மியும் என் வீட்டில் தங்குவாள் என்று பிரார்த்தனையும் செய்யப்படுகின்றது. இது போன்று மஹாலக்ஷ்மி பற்றி பல செய்திகளை ஸ்ரீ ஸூக்தம் நமக்கு அறிவிக்கின்றது. ஆகவே, வறுமையைப் போக்கி வளமளித்திடுவாள் ஸ்ரீ மஹாலக்ஷ்மி என்று ஸ்ரீ ஸூக்தம் வர்ணிக்கின்றது.

## ஸ்ரீ மஹாலக்ஷ்மீயின் வாஸ ஸ்தானம்

பகவான் மஹா விஷ்ணு நித்ய வாஸம் செய்யும் இடத்திற்குப் பெயர் வைகுண்டம். இதற்கு என்றும் அழியாதது என்பது பொருள். இதையே பரமபதம் என்பர். இதன் மத்தியில் உள்ள நகரம் "அயோத்தி". "देवानां पूरयोध्या" "தேவானாம் பூரயோத்யா" எனக் கூறுகின்றது வேதம்.

பரமபதம் விரஜா நதிக்கும் பரமாகாசத்திற்கும் இடையில் விளங்குகின்றது. ரத்னம், பொன் முதலானவற்றாலான சித்திரங்கள் நிறைந்ததும், பலப்ராகாரங்களும் ரத்ன மயமான பல மாடிகளும் கொண்ட பவனங்கள் இங்கு நிறைந்திருக்கும். ரத்ன கோபுரங்கள் கொண்ட இந் நகரத்திற்கு நான்கு வாயில்கள்.

அதன் கிழக்கு வாயிற் படியில் சண்டன் பிரசண்டன், தெற்கில் பத்ரன் ஸுபத்ரன், மேற்கில் ஜயன் விஜயன், வடக்கில் தாதா விதாதா என்பவர் காவல் புரிகின்றனர். இப்பட்டிணத்தின் எட்டுத் திக்குகளிலும் குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், சங்குகர்ணன், ஸர்வநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டிதன் என்பவர்கள் காவல் காத்து நிற்கின்றனர். இங்கு பல பவனங்கள் அக்னி போல் ஜ்வலிக்கும். இங்கு நித்ய யௌவனம் உடையவர் ஆண்களும் பெண்களும்.

இந்த அயோத்தியின் நடுவில் அந்தப்புரம். மணிப்ராகாரங்கள். ரத்ன தோரணங்கள், விமானங்கள், பவனங்கள், பலப்ராஸாதங்கள் (மாடிகள்) அனந்தம். இங்கு எங்கும் அப்ஸரஸ்க்ரீகள் நிறைந்திருப்பர். அதன் நடுவில் ஒரு மண்டபம். ஆயிரக்கணக்கான மணிஸ்தம்பங்கள். எல்லாம் ரத்ன மயம். முக்தர்கள் நிறைந்த இவ்விடத்தில் எப்போதும் ஸாமகானம் ஒலிக்கும்.



அதன் நடுவில் ஒரு ஸிம்ஹாஸனம். அது வேதமயம். தர்மம், ஞானம், ஐச்வர்யம், வைராக்யம் என்ற பெயர் கொண்டு ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற வேதங்கள் கால்களாய் விளங்குகின்றன. சக்தி, ஆதார சக்தி, சித் சக்தி, ஸதா சிவா என்ற சக்திகள் மேற்கூறிய தர்மாதி தேவதைகளின் சக்தியாவார். அதன் நடுவில் சந்திரன், சூரியன், அக்னிகள் வஸிக்கின்றனர். கூர்மன், நாகராஜன், வேதமயமான கருடன், சந்தங்கள் அனைத்து மந்த்ரங்கள் இவை பீடமாயிருக்கின்றன. இதை ஸர்வாக்ஷரமயமான யோக பீடம் என்பர்.

இதன் நடுவில் ,உதிக்கும் சூரியன் போன்ற பிரகாசமுடைய அஷ்ட தள பத்மம். அதன் கர்ணிகையில் (நடுவில்) காயத்ரீயில் ஈச்வரீயும் தேவேசனும் அமர்ந்தருள் புரிகின்றனர்.

## விஷ்ணு ஸ்வரூபம்

இங்கு பகவான் ஸ்ரீமந் நாராயணர். இந்திவர புஷ்பம் போன்ற திருமேனி கொண்டிருப்பார். கோடி சூரியர்களின் ஒளி. அழகிய அவயவங்கள். மலர்ந்த தாமரை போன்ற நயனங்கள். கொடி போன்ற அழகிய புருவங்கள். முத்துப் போன்ற பற்கள். பவளம் போன்ற உதடுகள். பூர்ண சந்திரன் போன்ற புன்சிரிப்புத் தவழும் முகார விந்தம். உதயசூரியன் போன்று குண்டலங்கள் மின்னும் காதுகள். அழகிய நீலநிற அளகங்கள். மந்தாரம், பாரிஜாதம் சூடிய கேசபாசம். பானு போல் ப்ரகாசிக்கும் கௌஸ்துப ரத்னம். ஹாரங்கள் ஸுவர்ண மாலைகள் அணிந்த கழுத்து. ஸிம்ஹத்தின் தோள் போன்ற பருத்த தோள்கள். பெருத்து உருண்ட நீண்ட கைகள். மோதிரங்கள், கடகங்கள், கேயூரங்கள் அவற்றில் பளிச்சிடும். வனமாலை மிளிரும் விசாலமான மார்பு. பல ரத்னங்களால் விசித்ரமான கடகங்கள் கொண்ட திருவடிகள். பிரம்மனை உலகிற்களித்த நாபீ கமலம். பளபளப்பான பீதாம்பரம். சந்திரன் போன்ற நகங்கள். அவர் கோடி காமன் போன்று அழகின் கடலாய்த் திகழ்வார். சங்கம், சக்ரம் தரித்த மேற்கரங்கள். வரம் அபயமுத்ரை தரித்த கீழ்க் கரங்கள். இவ்வாறு விளங்கும் பகவான் மஹா விஷ்ணுவின் மடியில் அமர்ந்தருளுகின்றாள் மஹாலக்ஷ்மீ ஜகன்மாதா.

## பத்ம புராணத்தில் மஹாலக்ஷ்மீ

நித்யையான இந்த மஹாலக்ஷ்மீ விஷ்ணுவை விட்டுப் பிரியாதிருப்பாள்.

नित्यैवैषा जगन्माता विष्णोः श्रीरनपायिनी।

நித்யைவைஷா ஜகன்மாதா விஷ்ணோஃ ஸ்ரீரனபாயினீ।

இவள் கண்களின் மூடித் திறத்தலே உலகின் ஸ்ருஷ்டி ஸம்ஹாரமாகும்.

जगत्स्थितिलयौ यस्याः उन्मीलन निमीलनात्।

ஜகத் ஸ்திதிலயௌ யஸ்யாஃ உன்மீலனநிமீலனாத்॥

सर्वस्याद्या महालक्ष्मीः त्रिगुणा परमेश्वरी।
लक्ष्यालक्ष्य स्वरूपा सा व्याप्य कृत्स्नं व्यवस्थिता॥

ஸர்வஸ்யாத்யா மஹாலக்ஷ்மீஃ த்ரிகுணா பரமேச்வரீ।
லக்ஷ்யாலக்ஷ்ய ஸ்வரூபாஸா வ்யாப்ய க்ருத்ஸ்னம் வ்யவஸ்திதா॥

சக்திகளில் இவள் முதல்வி. முக் குணங்களும் கொண்டவள். இவள் கண்ணிற்குப் புலப்படக் கூடிய, கண்ணிற்குப் புலப்படாத ரூபமுடையவளாய் இருந்து கொண்டு இந்த அகில உலகையும் வ்யாபித்து நிற்கின்றாள். இவள் ஆதாரமாகி "பூமி" என்று பெயர் பெறுகின்றாள். ஜல ரூபமாகி "நீலா" தேவி என்றும் பெயர் பெறுகின்றாள். லக்ஷ்மீ ரூபிணியாய் இருந்து கொண்டு தனம், வாக் ரூபிணியாகவும் விளங்குகின்றாள்.

सा लक्ष्मीः धरणी चैव नीला देवीति विश्रुता।
आधारभूता जगतः पृथिवी रूपमाश्रिता॥
तोयादिरसरूपेण सैव नीलावपु र्भवेत्।
लक्ष्मीरूपत्व मापन्ना धन वाग्रूपिणी हि सा॥



ஸா லக்ஷ்மீஃ தரணீசைவ நீலா தேவீதி விச்ருதா।
ஆதாரபூதா ஜகதஃ ப்ருதிவீரூப மாச்ரிதா॥
தோயாதிரஸ ரூபேண ஸைவநீலா வபுர் பவேத்।
லக்ஷ்மீ ரூபத்வமாபன்னா தன வாக் ரூபிணீ ஹிஸா॥

இவளே ஸமஸ்த வித்யா பேதங்களாகவும் திகழ்கின்றாள். ஸௌந்தர்யம், சீலம், நன்னடத்தை, ஸௌபாக்யம் எல்லாம் இவளேயாம். அனைத்துத் தேவர்களுக்கும் ஙீற்பதவி பாக்யம் கிடைத்திருப்பதுவும் இவள் அருளாலேயேதான் என்பதும் நிச்சயம்.

## லக்ஷ்மீ புண்ய நாமாக்கள்

இவளுடைய புண்ணிய நாமாக்கள் இவை. இவற்றை ஜபம் செய்பவன் பெரும் செல்வம் பெறுவான்.

| | | |
|---|---|---|
| 1. | लक्ष्मीः | லக்ஷ்மீ |
| 2. | श्रीः | ஸ்ரீஃ |
| 3. | कमला | கமலா |
| 4. | विद्या | வித்யா |
| 5. | माता | மாதா |
| 6. | विष्णुप्रिया | விஷ்ணுப்ரியா |
| 7. | सती | ஸதீ |
| 8. | पद्मालया | பத்மாலயா |
| 9. | पद्महस्ता | பத்மஹஸ்தா |
| 10. | पद्माक्षी | பத்மாக்ஷீ |
| 11. | लोकसुन्दरी | லோகஸுந்தரீ |
| 12. | भूतानामीश्वरी | பூதானாம் ஈச்வரீ |
| 13. | नित्या | நித்யா |
| 14. | सत्या | ஸத்யா |
| 15. | सर्वगता | ஸர்வகதா |
| 16. | शुभा | சுபா |

| | | |
|---|---|---|
| 17. | विष्णु पत्नी | விஷ்ணு பத்னீ |
| 18. | महादेवी | மஹாதேவீ |
| 19. | क्षीरोदतनया | க்ஷீரோததனயா |
| 20. | रमा | ரமா |
| 21. | अनन्ता | அனந்தா |
| 22. | लोकमाता | லோகமாதா |
| 23. | भूः | பூஃ |
| 24. | नीला | நீலா |
| 25. | सर्वसुखप्रदा | ஸர்வஸுகப்ரதா |
| 26. | रुक्मिणी | ருக்மிணீ |
| 27. | सीता | ஸீதா |
| 28. | सर्वा | ஸர்வா |
| 29. | वेदवती | வேதவதீ |
| 30. | शुभा | சுபா |
| 31. | सती | ஸதீ |
| 32. | सरस्वती | ஸரஸ்வதீ |
| 33. | गौरी | கௌரீ |
| 34. | शान्तिः | சாந்திஃ |
| 35. | स्वाहा | ஸ்வாஹா |
| 36. | स्वधा | ஸ்வதா |
| 37. | रतिः | ரதிஃ |
| 38. | नारायणी | நாராயணீ |
| 39. | वरारोहा | வராரோஹா |
| 40. | विष्णोः नित्यानपायिनी | விஷ்ணோஃ நித்யானபாயினீ |

இவ்வாறு 40 நாமாக்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றைத் தினம் காலையில் படிக்க, பெரிய ஐச்வர்யத்தையும் தனம், தான்யம்



முதலியவற்றையும் பெறுவர்ன் என இதற்கு பலச்ருதியும் கூறப்பட்டுள்ளது.

## மஹா லக்ஷ்மீ ஸ்வரூபம்

वामाङ्के संस्थिता देवी महा लक्ष्मी महेश्वरी।
हिरण्यवर्णा हरिणी सुवर्ण रजतस्रजा॥
सर्वलक्षण संपन्ना यौवना रंभ विग्रहा।
दिव्य चन्दनलिप्तांगी दिव्यपुष्पोपशोभिता॥
मन्दार केतकीजाती पुष्पांचित सुकुन्तला।
सुभ्रूः सुनासाः सुश्रोणी पीनोन्नत पयोधरा॥
परिपूर्णेन्दु संकाश सुस्मिताननपंकजा।
तरुणा दित्यवर्णाभ्यां कुण्डलाभ्यामलंकृता॥
हस्तैश्चतुर्भिः संयुक्ता कनकां बुजभूषिता।
नाना विचित्र रत्नाढया कनकांबुजमालया॥
हारकेयूर कटकैः अंगुलीयैश्च शोभिता।
भुजंद्वयधृतोदग्र पद्मयुग्मोपशोभिता॥
गृहीतमातुलुगाख्या जांबूनद करांचिता।
एवं नित्यानपायिन्या महालक्ष्म्या महेश्वराः॥
मोदते परमे व्योम्नि शाश्वते सर्वदा प्रभुः।
पाश्र्वयोर्धरणीनीले समासीने शुभासने॥

வாமாங்கே ஸம்ஸ்திதா தேவீ மஹாலக்ஷ்மீஃ மஹேச்வரீ।
ஹிரண்யவர்ணா ஹரிணீ ஸுவர்ணரஜதஸ் ரஜா॥
ஸர்வலக்ஷண ஸம்பன்னா யௌவனாரம்பவிக்ரஹா।
திவ்யசந்தன லிப்தாங்கீ திவ்யபுஷ்போபசோபிதா॥
மந்தார கேதகீ ஜாதீ புஷ்பாஞ்சித ஸுகுந்தளா॥
ஸுப்ரூஃ ஸுநாஸா ஸுச்ரோணீ பீனோன்ன பயோதரா॥
பரிபூர்ணேந்து ஸங்காச ஸுஸ்மிதானை பங்கஜா।
தருணாதித்யவர்ணாப்யாம் குண்டலாப்யாம் விராஜிதா॥

ஹஸ்தைः சதுர்பிः ஸம்யுக்தா கனகாம்புஜபூஷிதா ॥
நானா விசித்ர ரத்னாட்யா கனகாம்புஜமாலயா ॥
ஹாரகேயூரகடகைः அங்குலீயைச்சசோபிதா ।
புஜத்வயத்ருதோதசர பத்தம யுக்மோபசோபிதா ॥
க்ருஹீத மாதுலுங்காக்யா ஜாம்பூநதகராஞ்சிதா ।
ஏவம் நித்யானபாயிக்யா மஹாலக்ஷ்ம்யா மஹேச்வரः ।
மோததே பரமேவ்யோம்நிசாச்வதே ஸர்வதா ப்ரபுः ।
பார்ச்வயோர்தரணீ நீலே ஸமாஸினே சுபா ஸனனே ॥

இந்த லக்ஷ்மீ பகவானின் இடது மடியில் அமர்ந்திருப்பாள். இவள் உருவம் யௌவனத்தின் துவக்கம் போன்றிருக்கும். சுருண்ட நீல நிற அளகங்கள். திவ்ய சந்தனம் பூசியிருப்பாள். திவ்ய புஷ்பம் தரித்தவள். மந்தாரம், தாழம்பூ, ஜாதிப்பூ முதலிய புஷ்பங்கள் அணிந்த கேச பாரம். அழகிய புருவம். அழகிய மூக்கு. பருத்து நிமிர்ந்த மார்பகங்கள். பூர்ண சந்திரன் போன்ற புன்முறுவல் திகழும் முகார விந்தம். உதய சூரியன் போன்ற குண்டலங்கள் அணிந்த காதுகள். உருக்கிய பொன் போன்ற மேனி. பொன்னாலான ஆபரணங்கள் அணிந்தவள். பல ரத்னங்களால் ஆன ஆபரணங்களும் கொண்டிருப்பாள். பொற்றாமரை மலர் மலையினள். கேயூரம், கடகம், மோதிரம் இவை அணிந்த நான்கு கரத்தினள். இரண்டு கரங்களில் பொற்றாமரை மலர் இருக்கும். மற்றிரு கரங்களில் மாதுளம் பழமும் பொற் கிண்ணமும் இருக்கும். இவள் என்றும் பகவானை விட்டுப் பிரியாதிருப்பாள். இந்த லக்ஷ்மீயுடன் பகவான் பரமபதத்தில் அமர்ந்து அருள் புரிகின்றான். அவரது இரு புறத்திலும் ஸிம்ஹாஸனத்தில் பூ தேவியும் நீலா தேவியும் அமர்ந்திருப்பார்.

முன் லக்ஷ்மீ அமர்ந்திருப்பது எட்டு தள பத்மத்தில் எனக் கூறினோம். அந்தப் பத்ம தளத்தின் எட்டுத் திக்குகளிலும் விமலா, உத்கர்ஷிணீ, ஞானா, க்ரியா, யோகா, ப்ரஹ்வா, ஸத்யா, ஈசானா என்ற சக்திகள் சாமரம் வீசிக் கொண்டிருப்பர். ஐநூறு அப்ஸரஸ்கள் பணிபுரிவர். அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர், நித்யமுக்தர் இவர் நித்தம் அவரைச் சூழ்ந்திருப்பர்.



## லக்ஷ்மீ லோகம்

மேற்குறிப்பிட்ட வைகுண்டம் ஏழு ஆவரணங்கள் கொண்டது.

1. முதல் ஆவரணத்தில் கிழக்கில் வாசுதேவர் மந்திரம்; அக்னி திக்கில் ஸ்ரீ மஹா லக்ஷ்மீ லோகம்; தெற்கில் ஸங்கர்ஷணர் ஆலயம்; நிருருதியில் ஸாரஸ்வதருடைய பவனம்; மேற்கில் ப்ரத்யும்ன லோகம்; வாயு திக்கில் ரதி லோகம்; வடக்கில் அனிருத்த லோகம்; ஈசான திக்கில் சாந்தி லோகம்.

2. இரண்டாம் ஆவரணத்தில் கேசவர் முதலான பகவானின் 24 மூர்த்திகளின் லோகங்கள்.

3. மூன்றாம் ஆவரணத்தில் மத்ஸ்ய, கூர்ம, வராஹ, ந்ருஸிம்ஹ, வாமன, பரசுராம, ராம, பலராம, கல்கி முதலிய அவதாரங்கள் வாசம் செய்யும் லோகம்.

4. நான்காம் ஆவரணத்தில் ஸத்யர், அச்சுதர், அனந்தன், துர்கை, விஷ்வக்ஸேனர், கஜானனர், சங்க நிதி, பத்ம நிதி முதலியவர் இருப்பர்.

5. ஐந்தாம் ஆவரணத்தில் நான்கு வேதங்கள், ஸாவித்ரீ, கருடன், தர்மம், மகம் (வேள்வி தேவதை) ஆக எட்டுப் பேர் இருப்பர்.

6. ஆறாம் ஆவரணத்தில் சங்கம், சக்ரம், கதை, பத்மம், கட்கம் (நந்தகம் என்ற கத்தி), சார்ங்கம் ஹலம் = (ஏறு போன்ற ஆயுதம்) உலக்கை, மந்த்ராஸ்த்ரமயமான அசுரம் இவை இடம் பெற்றுள்ளன.

7. இந்திரன் முதலிய எட்டுத் திக்பதிகள். சூரியன், சந்திரன், அக்னி இவை இங்குப் பிரகாசம் அளிக்க வேண்டியதில்லை. ஸ்வயம்பிரகாசமானது இந்த இடம். இது விஷ்ணு பக்தியுடையவரே செல்லத் தகுந்த இடமாகும். இங்கு சென்றவர் மீண்டும் பிறப்பதே இல்லை. ஆக வைகுண்டத்தின் ஆக்நேய திக்கில் லக்ஷ்மீ லோகம் இருக்கிறதாகவே தெரிகின்றது.

## வைஷ்ணவ லோகத்தில் லக்ஷ்மீ

இந்த வைஷ்ணவ லோகத்திற்கு ''ஸத்யம்'' எனப் பெயர். மத்யான்ஹ கோடி சூர்ய ப்ரகாசமுள்ளது. ஸாம கானம் ஒலிக்கும். இங்கு ஸ்வர்ண்மய்மான கல்பத் தருக்களும், ஸ்வர்ண ரத்ன மயமான தாமரை மலர்களும் மண்டிக் கிடக்கும். இங்கு 16 வயதிற்குக் குறைந்த யௌவனமுடைய ஸ்த்ரீ, புருஷர் நிறைந்திருப்பர். புருஷர் அனைவரும் சங்க, சக்ர, கதா பத்ம தாரிகளாய் இருப்பர்.

இதன், மத்தியில் அந்தப்புரம். அதில் கற்பக நிழலில் தாமரை மலரில்- சிறந்த ரத்ன- -மயமான கட்டிலில் லக்ஷ்மீ தேவியுடன் அமர்ந்திருப்பார் வாஸுதேவர். இங்கு லக்ஷ்மீக்கு ரமா, ருக்மிணீ, ஸீதா, பத்மா, பத்மாலயா, சிவா, ஸுலக்ஷணா, ஸுசீலா என்பவர்கள் அஷ்ட சக்திகள்.

## க்ஷீர ஸாகரத்தில் மஹாலக்ஷ்மீ

தேவர்களுக்குத் தர்சனமளிக்க, பகவான் பாற்கடலில் வாசம் செய்கிறார். இங்கு ஆயிரம் படமுடைய அனந்த சயனத்தில் பகவான் வீற்றிருப்பார். சங்கம், சக்ரம், கதை, சார்ங்கம், நந்தகம் தாங்கிய கரத்தினராய், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம் மின்னும் மார்பினராய் பிரகாசிப்பார். இவர் பக்கத்தில் ஜகன்மாதா, மஹாலக்ஷ்மீ வெண்ணிறப் பட்டாடை அணிந்து பொற்கரங்களில் பொற்றாமரை மலர்களையும் மற்ற இரு கரங்களால் பகவானைத் தழுவிக் கொண்டும் காட்சி அளிப்பாள். இங்கு லக்ஷ்மீ தன் கடாக்ஷத்தால் தேவர்களை நோக்குவாள். அவர்களும் பெரும் பாக்யம் பெறுவர். இங்குப் பகவான் தேவர்களுக்கு அபயமளித்து ராக்ஷஸர்களை வதம் செய்ய ஆயத்தமாவார்.

## சுவேத த்வீபத்தில் மஹாலக்ஷ்மீ

ஜல ஸமுத்திரத்தில் மறுகரையில் உள்ளது சுவேத த்வீபம். ஸகன, ஸனந்தனர் முதலான யோகிகளுக்குத் தர்சனமளிக்க இங்கு பகவான் வாஸம் செய்கிறார். நர-நாராயணர்களும் சுவேத த்வீபத்திலேதான்



வசிக்கின்றனர். இங்குள்ள பட்டினத்திற்கு ''ச்வேதவதீ'' என்று பெயர். இதில் உள்ள அந்தப்புரத்தில் மணிகாஞ்சன மண்டபத்தில் ஸிம்ஹாஸனத்தில் அஷ்ட தள பத்மத்தின் நடுவில் பகவான் அமர்ந்திருப்பார். கைகளில் சங்கு, சக்ரம், கதை, பத்மம் தரித்திருப்பார். இவரது இடது மடியில் வஸு பாத்ரம், மாதுளம் பழம், கண்ணாடி, பொற்றாமரை மலர் கொண்ட நான்கு கரத்தினளாய் லக்ஷ்மீ காட்சி கொடுப்பாள். லக்ஷ்மீக்கு இங்கு ஈசா வாஸ்யா, மஹாதேவீ, ஜான்ஹவீ, கமலாலயா, ஸாவித்ரி, ஸர்வகா பத்மா முதலியவர் சக்திகள். சிரத்தை, மேதை, த்ருதி, ப்ரஞ்ஞா, தாரணா, சாந்தி, சுருதி, ஸ்ம்ருதி, மதி, வன்யா, வ்ருத்தி, புத்தி, மனீஷிணீ இவர்கள் பணிவிடை செய்வர். அனந்தன், வைனதேயன் முதலியோரும் நித்ய கிங்கரராய் இருப்பர். விஷ்ணு, மந்த்ர ஜபம் செய்தவர் த்வாதசீ வ்ரதம் அனுஷ்டித்தவர் இங்கு வஸிப்பார்கள்.

## கோலாப்பூரில் லக்ஷ்மீ ஸ்தோத்ரம்

(அகஸ்திய மஹர்ஷியினால் அருளப்பட்டது)

முன்னொரு ஸமயம் நாரதர் வார்த்தையைக் கேட்டு மேரு மலையிடம் பொறாமை கொண்ட விந்திய மலை, சந்திர சூரியர்களின் வழியை மறைத்துக் கொண்டு வளர்ந்து நின்றது. சூரிய கதி தடை பட்டதால் பாரதத்தின் தெற்குப் பகுதி மக்கள் மிகவும் துன்பத்திற்கு ஆளானார்கள். சூர்யோதயம் இல்லாததால் இருள் சூழ்ந்தது. இதனால் வேள்விகளும் நித்ய கர்மாக்களும் நடைபெறவில்லை. ஹவிர்ப்பாகம் கிடைக்காததால் தேவர்களும் வருந்தினர். சூர்யோதயத்தைக் கொண்டே நாட்கள் கணக்கிடப்படுவதால் சித்ரகுப்தன்கூட கணக்கிடச் சிரமப்பட்டான்.

இதனால் தேவர், பிரம்மாவைச் சரணடைந்தனர். பிரம்மா ''காசியில் இப்போது அகஸ்தியர் தங்கியுள்ளார். அவரைச் சரணடையுங்கள். அவர் உங்கள் துன்பங்களைத் தீர்த்து வைப்பார்'' என்றார்.

தேவர்கள் காசி வந்து, அகஸ்தியாச்ரமத்தில் லோபாமுத்ரையுடன் இருக்கும் சிவபக்த சிகாமணியாகிய அகஸ்தியரை வணங்கி, விந்தியத்தை அமுக்கி உதவுமாறு கேட்டுக் கொண்டனர். அகஸ்தியரும்

ஒப்புக் கொண்டு பஞ்ச கணபதிகளைப் பிரார்த்தனை செய்து கொண்டு மனைவியுடன் புறப்பட்டு தென்னகம் சென்றார். வழியில் வளர்ந்து நிற்கும் விந்தியத்தைக் கண்டு வழிவிடுமாறு வேண்டினார். விந்தியம் மறுக்கவே, அதைத் தன் கரத்தால் அமுக்கினார். சிவ பக்தர்களால் ஸாதிக்க முடியாததும் உண்டோ! விந்தியத்தை அடக்கிய முனி கோலாப்பூர் வந்தார்.

கோலன் என்ற அசுரன் மூவுலகங்களுக்கும் துன்பம் கொடுத்துக் கொண்டிருந்தான். அவன் பன்றியின் உருவம் உடையவன். கருணைக் கடலான மஹாலக்ஷ்மீ கோலாபுரி வந்து, அவனை ஸம்ஹாரம் செய்து அங்கேயே திவ்ய ஸான்னித்தியம் கொண்டாள். அந்த மஹாலக்ஷ்மீயை அகஸ்தியர் மனைவியுடன் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். எட்டு அழகிய சுலோகங்களால் பக்தியுடன் துதித்தார்.

அப்போது லக்ஷ்மீ, "அகஸ்தியரே! உமக்கு மங்களம் உண்டாகட்டும். சுத்தமான வ்ரதமுடைய பதிவ்ரதையாகிய லோபாமுத்ரையே! எழுந்திரு. உங்களுடைய ஸ்துதியினால் நான் மிகவும் மகிழ்வுற்றேன். உங்களுக்குப் பிடித்தமான வரத்தைக் கேளுங்கள். லோபாமுத்ரே. நீ பாக்யசாலி. சுத்தமானவள். ராஜபுத்ரீ. நீ என் பக்கத்தில் உட்கார். உன் அங்க லக்ஷணங்களாலும், பவித்ரமான உன் வ்ரதங்களாலும், கோலன் என்ற அசுரனுடன் நான் சண்டையிட்டபோது, அவனது பாணங்களால் தாபமடைந்திருக்கும் என் தேஹத்தைக் குளிரச் செய்" எனக் கூறி லோபாமுத்ராவை ஆலிங்கனம் செய்து கொண்டாள். ப்ரீதியுடன் பவலிதமான ஸௌபாக்யமளிக்கும் (பூ, சந்தனம், குங்குமம், வஸ்த்ரம்) அலங்காரப் பொருட்களால் அவளை அலங்காரம் செய்து மகிழ்ந்தாள்.

அகஸ்தியர் தனக்கு மீண்டும் நிரந்தரமான காசி வாஸம் வேண்டும் என வரம் பெற்றார். லக்ஷ்மியும் அவ்வாறே வரம் அளித்தாள்.

தாங்கள் செய்த ஸ்தோத்ரத்தைப் படிப்பது என் ஸான்னித்தியத்தை ஏற்படுத்தும். ஸ்தோத்திரம் படிப்பவன் வீட்டில் அலக்ஷ்மீயும், காலகர்ணீயும் நுழைய மாட்டார்கள். யானை, குதிரை, பசு இவற்றின் சாந்திக்காக இந்த ஸ்துதியை எப்போதும் படிக்க வேண்டும். பாலக்ரஹங்களால் பீடிக்கப்பட்ட குழந்தைகளுக்கும் எழுதி கழுத்தில் கட்டிக் கொள்ள, சாந்தி ஏற்படும். இந்த மூல மந்த்ர ரஹஸ்யத்தை



முயன்று காப்பாற்ற வேண்டும். சிரத்தை இல்லாதவனுக்கோ சுத்தமில்லாதவனுக்கோ இதை உபதேசம் செய்யக் கூடாது.

இத்துடன், "அகஸ்திய மஹர்ஷே! தாங்கள் நிகழும் 29ம் துவாபர யுகத்தில் வ்யாஸராகப் போகின்றீர். அப்போது வேதங்கள், புராணங்கள் இவற்றை வகுத்து உலகினர்க்குத் தர்மத்தை உபதேசம் செய்து காசியை அடைந்து விரும்பிய ஸித்திகளை அடைவீர்" என்றும் வரமளித்தாள்.

"தாங்கள் சிறிது தூரம் சென்று எதிரில் இருக்கும் ப்ரபு, முருகப் பெருமானைக் காணுங்கள். தங்களுக்கு மகிழ்வு தரும் முன்பு சிவனால் கூறப் பெற்ற ஸ்ரீ காசி ரஹஸ்யத்தை ஷண்முகன் தங்களுக்கு உபதேசிதப்பான்" என்றும் வரமளித்தார். அகஸ்தியர் முருகனையும் கண்டுகளித்தார்.

## श्री महालक्ष्म्यष्टकं (अगस्त्यमुनि प्रोक्तं)
## ஸ்ரீ மஹாலக்ஷ்மீ அஷ்டகம்
(அகஸ்தியர் அருளியது)

मातर्नमामि कमले कमलायताक्षि
श्री विष्णु हृत्कमलवासिनि विवश्त्रमातः।
क्षीरोदजे कमल कोमल गर्भगौरि
लक्ष्मि प्रसीद सततं नमतां शरण्ये॥ (१)

மாதர்நமாமி கமலே கமலாயதாக்ஷி
ஸ்ரீ விஷ்ணு ஹ்ருத்கமல வாஸினி விச்வமாதః।
க்ஷீரோதஜே கமல கோமள கர்பகௌரி
லக்ஷ்மி ப்ரஸீத ஸததம் நமதாம் சரண்யே ॥

விரும்பியதை அளிப்பதால் கமலா என்ற பெயர் கொண்டவள். தாமரை இதழ் போன்று நீண்ட கண்களுடன் ஸ்ரீ மஹா விஷ்ணுவின் ஹ்ருதய கமலத்தில் வசிப்பவள். அனைத்து உலகங்களுக்கும் தாய். பாற்கடலில் உதித்தவள். தாமரை மலரின் உட்புறம் போன்ற நிறம் கொண்டவள். வணங்குபவருக்கும் சரண் அளிப்பவள். இவ்வாறு ஜகன்மாதாவாகிய ஸ்ரீ மஹாலக்ஷ்மீயே! எனக்கு அருள் வழங்குவாயாக.

त्वं श्री रुपेन्द्रसदने मदनैकमातः
ज्योत्स्नासि चन्द्रमासि चन्द्र मनोरमास्ये।
सूर्ये प्रभासि च जगत्रितये प्रभासि
लक्ष्मि प्रसीद सततं नमतां शरण्ये॥ (२)

த்வம் ஸ்ரீருபேந்த்ரஸதனே மதனைகமாதஃ
ஜ்யோத்னாஸி சந்த்ரமஸி சந்த்ரமனோரமாஸ்யே।
ஸூர்யப்ரபாஸி ச ஜகத்ரிதயே ப்ரபாஸி
லக்ஷ்மி ப்ரஸீத ஸததம் நமதாம் சரண்யே॥

அம்மா! நீ மஹா விஷ்ணுவின் மாளிகையில் (வைகுண்டத்தில்) ஸ்ரீ க்ஷ்மீ என்ற பெயர் கொள்ளுகின்றாய். சந்திரன் போன்று அழகிய முகம் டையவளே நீ சந்த்ரனிடம் நிலவாய்த் திகழ்கின்றாய். நீயே ரியனிடம் ஒளியாகவும் மூவுலகத்திலும் ஒளியாகவும் ர்காசிக்கின்றாய். வணங்குபவருக்குச் சரணம் அளிக்கும் மஹாலக்ஷ்மீ எனக்கு எப்போதும் அருளுவாயாக.

त्वं जातवेदसि सदा दहनात्मशक्तिः
वेधा स्त्वया जगदिदं विविधं विदध्यात्।
विश्वं भरोऽपि बिभृयात् अखिलं भवत्या
लक्ष्मि प्रसीद सततं नमतां शरण्ये॥ (३)

த்வம் ஜாதவேதஸிஸதா தஹனாத்ம சக்திஃ
வேதாஸ் த்வயா ஜகதிதம் விவிதம் விதத்யாத்।
விச்வம் பரோபி பிப்ருயாத் அகிலம் பவத்யா
லக்ஷ்மி ப்ரஸீத ஸததம் நமதாம் சரண்யே॥

நீயே அக்னியில் எரிக்கும் சக்தியாகவும் இருக்கின்றாய். னால்தான் பிரமன் இவ்வுலகைப் பலவிதமாகப் படைக்கின்றான். ன்னால் தான் அனந்தனும் அனைத்தையும் தாங்குகின்றான். தன்னை ணங்குபவருக்குச் சரணமளிப்பவளே லக்ஷ்மி நீ எனக்கு அருள் வாயாக.



त्वत्यक्त मेतदमले हरते हरोपि
त्वं पासि हंसि विदधासि परावरासि।
ईड्यो बभूव हरिरत्यमले त्वदास्या
लक्ष्मि प्रसीद सततं नमतां शरण्ये॥

த்வத் த்யக்தமேததமலே ஹ ரதே ஹரோபி
த்வம் பாஸி ஹம்ஸி விததாஸி பராவராஸி।
ஈட்யோ பபூவ ஹரிரத்யமலே த்வதாப்த்யா
லக்ஷ்மி ப்ரஸீத ஸிததம் நமதாம் சரண்யே॥

மாசற்றவளே! உன்னால் விடப்பட்ட இவ்வுலகை ருத்ரன் அழிக்கிறார். நீயே ஸ்ருஷ்டிக்கின்றாய். காக்கின்றாய். அழிக்கின்றாய். நீயே சிறந்த பொருளாயும் சிறப்பற்ற பொருளாயும் இருக்கின்றாய் உன்னை மனைவியாய்ப் பெற்றதால் மஹாவிஷ்ணுவுக்கு பிறர்த் துதிக்கும் பெருமை ஏற்பட்டுள்ளது. வணங்குபவர்க்கு அபயம் அளிப்பவளே நீ என்றும் எனக்கு அருளுவாயாக.

शूर! स एव स गुणी स बुधः स धन्यः
मान्यः स एव कुलशील कला कलापैः।
एकः शुचिः सहि पुमान् सकलोपि लोके
यस्त्रायते तव शुभे करुणा कटाक्षैः॥ (५)

சூரஃ ஸ ஏவ ஸகுணீ ஸ புதஃ ஸ தன்யஃ
மான்யஃ ஸ ஏவ குலசீல கலா கலாபைஃ।
ஏகஃ சுசிஃ ஸஹி புமான் ஸகலோபி லோகே
யஸ்த்ராயதே தவசுபே கருணா கடாக்ஷைஃ॥

மங்கள ரூபியே! உன் கருணா கடாக்ஷம் எவனைக் காக்கின்றதோ அவனே அனைத்து லோகங்களிலும் சூரனும் குணவானும் வித்வானும் பாக்யசாலியும் குலம், சீலம், கலை இவற்றால் மதிக்கத் தக்கவனாகவும் ஆகின்றான்.

यस्मिन्वसेः क्षणमहो पुरुषे गजेऽश्वे
स्त्रैणे तृणे सरसि देवकुले गृहेऽन्ने।

रत्ने पतत्रिणि पशौ शयने धरायां
सश्रीकमेव सकलं तदिहास्ति नान्यत्॥ (६)

யஸ்மின்வஸே: க்ஷணமஹோ புருஷே கஜேச்வே
ஸ்த்ரைணே த்ருணே ஸரஸி தேவகுலே க்ருஹேன்னே।
ரத்னே பதத்ரிணி பசௌ சயனே தராயாம்
ஸச் ஸ்ரீக மேவ ஸகலம் ததிஹாஸ்தி நான்யத்॥

மஹாலக்ஷ்மீ! பூமியில் கண நேரமாவது எந்த இடத்தில் நீ வஸிக்கின்றாயோ, அந்தப் புருஷன் யானை, குதிரை, பெண்டிர், புல், ஏரி, தேவர், வீடு, அன்னம், ரத்னம், பறவை, பசு, படுக்கை இவை அனைத்தும் லக்ஷ்மீ களை உள்ளதாய் ஆகின்றது. மற்றவை அப்படியிருப்பதில்லை.

त्वत्स्पृष्टमेव सकलं शुचितां लभेत
त्वत्यक्तमेव सकलं त्वशुचीह लक्ष्मि।
त्वन्नाम यत्र च सुमंगलमेव तत्र
श्रीविष्णुपत्नि कमले कमलालयेऽपि॥ (७)

த்வத் ஸ்ப்ருஷ்ட மேவ ஸகலம் சுசிதாம் லபேத
த்வத் த்யக்தமேவ ஸகலம் த்வசுசீஹ லக்ஷ்மி।
த்வன் நாம யத்ர ச ஸுமங்களமேவ தத்ர
ஸ்ரீ விஷ்ணு பத்னி கமலே கமலாலயேபி॥

கமலத்தில் வாஸம் செய்யும் விஷ்ணு பத்னி! கமலா எனப் பெயர் கொண்ட லக்ஷ்மீ! உன் தொடர்புடைய அனைத்தும் சுத்தமானதாகவும் (ஏற்கத் தகுந்ததாகவும்), உன் தொடர்பற்ற அனைத்தும் அசுசியாகவும் (ஏற்கத் தகாததாகவும்) ஆகின்றன. உன் பெயரான ஸ்ரீ எங்கு இருக்கின்றதோ அங்கே மங்களம் இருக்கும்.

लक्ष्मीं श्रियं च कमलां कमलालयां च
पद्मां रमां नलिनयुग्म करां च मां च।



क्षीरोदजां अमृतकुंभकरां इरां च
विष्णुप्रियामिति सदा जपतां क्वदुःखम्?॥ (८)

லக்ஷ்மீம் ஸ்ரீயம்ச கமலாம் கமலாலயாம் ச
பத்மாம்ரமாம் நளினயுக்மகராம் ச மாம் ச।
க்ஷீரோதஜாம் அம்ருதகும்பகராம் இராம் ச
விஷ்ணு ப்ரியாமிதி ஸதா ஜபதாம் க்வ துக்கம்?॥

அம்மா உனக்கு பல ஆயிரம் நாமாக்கள் இருந்தாலும் இந்த லக்ஷ்மீ, ஸ்ரீ கமலா, கமலாலயா, பத்மா, ரமா, நளினி, யுக்மகரா, மா, க்ஷீரோதஜா, அம்ருதா, கும்பகரா, இரா, விஷ்ணுப்ரியா என்ற பன்னிரண்டு நாமாக்களை ஜபம் செய்பவருக்கு ஏது துக்கம்?

इति स्तुत्वा भगवतीं महालक्ष्मीं हरिप्रियां।
प्रणनाम सपत्नीकः साष्टांगं दण्डवन्मुनिः॥

இதி ஸ்துத்வா பகவதீம் மஹாலக்ஷ்மீம் ஹரிப்ரியாம்।
ப்ரணனாம ஸபத்னீக: ஸாஷ்டாங்கம் தண்டவன்முனி:॥

இவ்வாறு துதித்த மனைவியுடன் மஹாலக்ஷ்மீயை வீழ்ந்து வணங்கினார் அகஸ்திய மஹர்ஷி.

## லக்ஷ்மீ கடாக்ஷம்

உலகைக் காக்கும் தெய்வமான விஷ்ணுவின் மார்பில் உறையும் இந்த மஹாலக்ஷ்மீ அனைவருக்கும் ஸந்தானம், வாஹனம், தனம், தான்யம், ராஜ்யம், ஸௌபாக்யம், வெற்றி இவற்றை தன் திவ்யக் கடாக்ஷத்தினால் அளிக்கின்றாள். அவள் அருளால்தான் தனம் கிடைக்கும். தனம் உள்ளவன் தானும் வாழ்ந்து பிறரும் வாழ உதவுகிறான். தனமுள்ளவனுக்குப் புகழ், மக்களிடையே மரியாதை, மனதிற்கு உகந்த வாழ்வு, அறிவு பெற வஸதி, உடலிலே வளப்பு இவை எல்லாம் கிடைக்கின்றன. தர்மம் செய்து புண்ணியம் ஸம்பாதிப்பதற்கும் இல்லறத்தில் இன்பம் காண்பதற்கும் நியாயமாய்ப் பெற்ற தனமே உதவுகின்றது. குறைகள் பல இருப்பினும் தனம் அவற்றை மறைத்து, குணம் காட்டும் சக்தியாய் இருக்கிறது. கற்றோரும் மற்றோரும் தனம் உள்ளவனைச் சார்ந்தே வாழ வேண்டியுள்ளது.

यस्यार्थाः तस्यमित्राणि यस्यार्थाः तस्यबान्धवाः
यस्यार्थाः सपुमान्लोके यस्यार्थाः स च पण्डितः ॥

யஸ்யார்த்தாஃ தஸ்ய மித்ராணி யஸ்யார்த்தாஃ தஸ்ய பாந்தவாஃ।
யஸ்யார்த்தாஃ ஸ புமான்லோகே யஸ்யார்த்தாஃ ஸ ச பண்டிதஃ॥

सर्वे गुणाः कांचन माश्रयन्ते।

ஸர்வே குணாஃ காஞ்சன மாச்ரயந்தே।

தனம் உள்ளவனுக்கு நண்பர்கள் பந்துக்கள் வந்து சேருகின்றனர். தனம் உள்ளவனே புருஷன். தனம் உள்ளவன் பண்டிதனாக மதிக்கப்படுகின்றான். அனைத்துக் குணங்களும் பொன்னைப் பெற்றிருப்பவனிடம் வந்தடைகின்றன என்ற பழமொழியே இதற்குச் சான்று.

''பொருளில்லார்க்குப் புண்ணியமில்லை'' என்றும், ''மருவுறு கீர்த்தியில்லை, மாந்தருள் பெருமையில்லை, கருதிய கருமமில்லை, கதிபெறு வழியுமில்லை, பெருநிலத்திடை நடக்கும் பிணமெனப்படுவரன்றே'' என்று கூறுகின்றார் ஒரு கவி.

இந்த லக்ஷ்மீ கடாக்ஷத்தால் பெறும் பேறுகளை வேங்கடாத்வரீ என்ற பெரும் புலவர் லக்ஷ்மீ ஸஹஸ்ரம் என்ற நூலில்,

शुचौ वंशेजन्म श्रुतिनयमतिः मातरतुला
विकंपा संपत्तिः विशदमतिगीता च कविता।
प्रसक्तिर्दैत्यारौ हितपरमत्यं शुभयशः
विवर्ताः सप्तामी ध्रुवम सदृशां तावकदृशां॥

சுசௌ வம் சே ஜன்ம ச்ருதிநயமதிர்மாதரதுலா
விகம்பா ஸம்பத்திஃ விசத மவிகீதா கவிதா।
ப்ரஸக்திர் தைத்யாரௌ ஹிதபரமபத்யம் சுபயசஃ
விவர்த்தாஃ ஸப்தாமீ த்ருவமஸத்ருசாம் தாவகத்ருசாம்॥

அம்மா நற்குடிப் பிறப்பு வேதங்களிலும் தர்க்க சாஸ்திரத்திலும் நுண்ணறிவு அழியாத ஸம்பத்து, குற்றமற்ற கவிதை, விஷ்ணுவிடம்



பக்தி, அன்பு மிக்க ஸந்தானம், நற்புகழ் இவை உன் இணையற்ற திருநோக்கின் விளைவுகளே.

## அஷ்ட லக்ஷ்மிகள்

இந்த லக்ஷ்மீ ஆதி லக்ஷ்மீ, ஸந்தான லக்ஷ்மீ, கஜ லக்ஷ்மீ, தன லக்ஷ்மீ, தான்ய லக்ஷ்மீ, ராஜ்ய லக்ஷ்மீ, ஸௌபாக்ய லக்ஷ்மீ, வீர லக்ஷ்மீ என எட்டு விதமான ரூபங்கள் கொண்டு உலகிற்கு அருளுகின்றாள்.

### 1. ஆதி லக்ஷ்மீ

वराभयालंकृतपाणिपद्मां पद्मोस्थितां कण्ठधृतांब्जमालां।
पार्श्वद्वये भासुरदीप शक्ति द्वयांचितां नौम्यहमादिलक्ष्मीं॥

வராபயாலங்க்ருதபாணிபத்மாம்
பத்மேஸ்திதாம் கண்டத்ருதாப்ஜமாலாம்।
பார்ச்வத்வயே பாஸுரதீப சக்தி
த்வயாஞ்சிதாம் நௌம்யஹமாதி லக்ஷ்மீம்॥

வரம், அபயம் தாங்கும் திருக்கரத்தினள். தாமரை மலர் மாலை அணிந்த கழுத்தினள். இரு பக்கங்களிலும் இரு தீப சக்திகளால் அலங்கரிக்கப்பட்டவள். தாமரை மலரில் வீற்றிருப்பவள். இவளே ஆதி லக்ஷ்மீ எனப்படுவாள்.

### 2. ஸந்தான லக்ஷ்மீ

सन्तानलक्ष्मीं जलपूर्णकुंभखड्गेतथामीति शिशू कराब्जैः।
मुदावहन्तीं धृतदीप शक्ति द्वन्द्वोपजुष्टां प्रमजेऽब्जनिष्टां॥

ஸந்தானலக்ஷ்மீம் ஜலபூர்ணகும்ப
கட்கே ததாபீதிசிசூ கராப்ஜைஃ।
முதாவஹந்தீம் த்ருத தீபசக்தி
த்வந்த்வோப ஜுஷ்டாம் ப்ரபஜே(அ)ப்ஜநிஷ்டாம்॥

ஜலம் நிறைந்த குடம், கத்தி, அபயம், குழந்தை இவற்றை நான்கு

கரங்களில் தரித்தவள். இரண்டு நீப சக்திகளால் அலங்கரிக்கப்பட்டவள். தாமரை மலரில் அமர்ந்திருப்பவள். இவளே ஸந்தான லக்ஷ்மீ.

**3. கஜ லக்ஷ்மீ**

गजश्रियं नौमिकटैः सरोजे वराभये चापि सदावहन्तीं।
गजोत्रमाभ्यां जलपूर्णं हेमकुंभद्वयेनाप्यमिषिच्यमानां॥

கஜ ஶ்ரீயம் நெளமி கரைஃ ஸரோஜே
வராபயே சாபி ஸதா வஹந்தீம்।
கஜோத்தமாப்யாம் ஜலபூர்ணஹேம
கும்பத்வயே நாப்யபிஷிச்யமானாம்॥

இரண்டு கரங்களில் இரு தாமரை மலர்களையும், இரண்டு கைகளில் வர அபயங்களையும் தாங்கிக் கொண்டிருப்பவள். ஜலம் நிறைந்த இரண்டு தங்கக் குடங்கள் கொண்ட இரண்டு யானைகளால் அபிஷேகம் செய்விக்கப்படுகின்றவள் கஜ லக்ஷ்மீ எனப்படுவாள். மஹா லக்ஷ்மீயின் இரு புறங்களிலும் உள்ள இரண்டு வெள்ளை யானைகளும் அஹங்கார மமகாரங்களாகும். அதன் துதிக்கைகளில் உள்ள இரண்டு குடங்கள் ப்ரீதி, ஆசை என்பனவாகும் என ஸ்ரீ ஸூக்த உரைகாரர் ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் கூறுவார்.

**4. தன லக்ஷ்மீ**

शंखं च चक्रं घट पद्मचाप शरान्करण्डं च तथाऽभयं च।
समुज्वलैः पाणितलैर्दधाना सेवे सुवर्णां धनदां च लक्ष्मीं॥

சங்கம் ச சக்ரம் கட பத்ம சாப
ஶரான் கரண்டம் ச ததா(அ)பயம் ச।
ஸமுஜ்வலைஃ பாணிதலைர் ததானா
ஸேவே ஸுவர்ணாம் தனதாம் ச லக்ஷ்மீம்॥

சங்கம், சக்ரம், குடம், தாமரை மலர், வில், அம்பு, கூடை, அபயம் இவற்றைத் தாங்கும் எண் கரத்தினள். தங்கம் போன்ற திருமேனியள் தன லக்ஷ்மீ எனப்படுகின்றாள்.



**5. தான்ய லக்ஷ்மீ**

वराभये पंकज मिक्षु दण्डं करैश्चतुभिर्दधतीमुपासे।
शाल्यादिसस्यैः कदलीद्रुमैश्च वृतांशुभैः धान्यकरींश्रियम् च॥

வராபயே பங்கஜ மிக்ஷு தண்டம்
கரைச்சதுர்பிஃ தததீமுபாஸே।
சால்யாதிஸஸ்யைஃ கதளீத்ருமைச்ச
வ்ருதாம்சுபைற தான்யகரீம் ஶ்ரீயம் ச॥

வரம், அபயம், தாமரை மலர், கரும்பு இவற்றைத் தரிக்கும் நான்கு கரத்தினளும், சம்பாப் பயிர், வாழை மரங்கள் முதலியவற்றால் தான்யச் செல்வத்தை அளிப்பவளாயும் உள்ள தான்ய லக்ஷ்மீயை ஸேவிக்கின்றேன்.

**6. ராஜ்ய லக்ஷ்மீ**

चक्रं च शंखं वरदाभये च पाशांकुशौ चाप्यसि खेटके च।
हस्तैर्दधानां नृपरूपरम्यां सिंहासनस्थां विजयां स्मरामि॥

சங்கம் ச சக்ரம் வரதாபயே ச
பாசாங்குசௌ சாப்யஸி கேடகே ச।
ஹஸ்தைர் தததானாம் ந்ருபரூப ரம்யாம்
ஸிம்ஹாஸனஸ்தாம் விஜயாம் ஸ்மராமி॥

சக்ரம், சங்கம், வரம், அபயம், பாசம், அங்குசம், கத்தி, கேடயம் இவற்றை எட்டுக் கரங்களால் தரிக்கின்றவள். ராஜ ரூபத்துடன் அழகியவள். ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவள். விஜயா என்ற பெயர் கொண்டவள் ராஜ்ய லக்ஷ்மீ ஆவாள்.

**7. ஸௌபாக்ய லக்ஷ்மீ**

अंभोजयुग्मं वरदाभये च हस्तैर्वहन्तीं गजयुग्मपूज्यां।
सुक्षौम वस्त्रां कमलासनस्थां सौभाग्यलीमीं सततं स्मरामि॥

அம்போஜயுக்மம் வரதாபயே ச

ஹஸ்தைர் வஹந்தீம் கஜயுக்ம பூஜ்யாம்।
ஸஹிகௌம வஸ்த்ராம் கமலாஸனஸ்தாம்
ஸௌபாக்யலக்ஷ்மீம் ஸததம் ஸ்மராமி॥

இரண்டு தாமரை மலர்களையும் வரதாபயங்களையும் தாங்குகின்ற நாற் கரத்தினளாய் இரண்டு யானைகளால் பூஜிக்கப்படுகின்றவளாய், வெண்ணிறப் பட்டாடை தரித்துக் கொண்டிருப்பவளாய்த் தாமரை மலரில் அமர்ந்திருப்பவள் ஸௌபாக்ய லக்ஷ்மியாவாள்.

8. வீர லக்ஷ்மீ

वराभये चापशरौ च शंख चक्रे तथा शूलकपालके च।
हस्तैर्दधानां कनकोज्वलांगीं तां वीर लक्ष्मीं हृदिमावयामि॥

வராபயே சாபசரௌ ச சங்க
சக்ரே ததா சூல கபாலகே ச।
ஹஸ்தைர் ததானாம் கனகோ ஜ்வலாங்கீம்
தாம் வீரலக்ஷ்மீம் ஹ்ருதி பாவயாமி॥

வரம், அபயம், வில், அம்பு, சங்கம், சக்ரம், சூலம், கபாலம் இவற்றைக் கர கமலங்களால் தரிக்கும் தங்கத் திருமேனியள் வீர லக்ஷ்மீ ஆவாள். அவளை மனத்தில் தியானிக்கிறேன்.

மேற்கூறிய இந்த அஷ்ட லக்ஷ்மிக்களும் புத்திரப் பேறு, யானை, குதிரை முதலிய வாஹனங்கள், தனம், தான்யம், ராஜ்யம், மங்களம், வெள்ளி இவற்றைத் தன்னை வழிபடும் அன்பர்களுக்கு அருளுவாள்.

ஸ்ரீ:

இந்த மஹா லக்ஷ்மியை ஸ்ரீ என்று அழைக்கின்றோம். எல்லாரும் இவளையே வந்தடைகின்றர் என்பதசாலேயே இவளுக்கு 'ஸ்ரீ:' என்று பெயர். ஸ்ரீ என்ற சொல் மங்களத்தைக் குறிக்கின்றது. அதனால் மஹா கவிகள் சிலர் தம் நூல்களின் முதல் சுலோகங்களை (மங்கள சுலோகங்களை) இந்த ஸ்ரீயை முதலில் வைத்தே பாடியுள்ளனர். பாரவி என்ற கவி, ''श्रियः कुरुणामधिपस्य पालिनी'' ''ஸ்ரீய குருணா மதிபஸ்ய பாலினீம்'' எனத் தொடங்கியுள்ளார். இப்படிப் பல கவிகள் செய்துள்ளனர்.



மதிப்பு மிக்க தேவர்களுக்கும் ஆசாரியர்களுக்கும் மனிதர்களுக்கும் அவரவர் பெயருக்கு முன் ஸ்ரீயைச் சேர்த்தே சொல்லுவது நம் வழக்கில் உள்ளது. இந்த ஸ்ரீ என்ற சொல்லின் பெருமையை,

गरुडध्वजवल्लभेशुभे गणवर्णादिज दोषशान्तये।
वरदे तववाचकं पदं कवयः काव्यमुखे प्रयुंजते॥

கருடத்வஜ வல்லபே சுபே கணவர்ணாதிஜ தோஷசாந்தயே।
வரதே தவ வாசகம் பதம் கவயஃ காவ்ய முகேப்ரயுஞ்ஜதே॥

ஹே மஹாலக்ஷ்மியே! கணம், வர்ணம் இவற்றால் நேரிடும் தோஷங்கள் போவதற்கு வரம் அளிக்கும் அன்னையே. உன் வாசகமான ஸ்ரீ என்ற சொல்லை கவிகள் காவியத்தின் முன் உபயோகிக்கின்றனர் என்று லக்ஷ்மீ ஸஹஸ்ரம் என்ற நூல் சிறப்பித்துக் கூறுகின்றது.

## ஸௌபாக்ய லக்ஷ்மீ உபநிஷத்

இம் மஹா லக்ஷ்மியின் பெருமையை ஸௌபாக்ய லக்ஷ்மீ உபநிஷத் அழகாக எடுத்துரைக்கின்றது. இந்த உபநிஷத்தில் ஓமென்ற பிரணவத்தை முன்னும் நமஃ என்பதைப் பின்னும் இணைத்து 32 நாமாக்கள் கூறப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| 1. | श्रीः | ஸ்ரீ: |
| 2. | लक्ष्मी | லக்ஷ்மீ |
| 3. | वरदा | வரதா |
| 4. | विष्णुपत्नी | விஷ்ணுபத்னீ |
| 5. | वसुप्रदा | வஸுப்ரதா |
| 6. | हिरण्यरूपा | ஹிரண்யரூபா |
| 7. | स्वर्णमालिनी | ஸ்வர்ணமாலினீ |
| 8. | रजतस्रजा | ரஜதஸ்ரஜா |
| 9. | स्वर्णप्रभा | ஸ்வர்ணப்ரபா |
| 10. | स्वर्णप्राकारा | ஸ்வர்ணப்ராகாரா |
| 11. | पद्मवासिनी | பத்மவாஸினீ |

| | | |
|---|---|---|
| 12. | पद्महस्ता | பத்மஹஸ்தா |
| 13. | पद्मप्रिया | பத்மப்ரியா |
| 14. | मुक्तालंकारा | முக்தாலங்காரா |
| 15. | चन्द्रा | சந்த்ரா |
| 16. | सूर्या | ஸூர்யா |
| 17. | बिल्वप्रिया | பில்வப்ரியா |
| 18. | ईश्वरी | ஈச்வரீ |
| 19. | बुद्धिः | புத்திः |
| 20. | बुद्धिः | புத்திः |
| 21. | मुक्तिः | முக்திः |
| 22. | विभूतिः | விபூதிः |
| 23. | ऋद्धिः | ருத்திः |
| 24. | समृद्धिः | ஸம்ருத்திः |
| 25. | कृष्टिः | க்ருஷ்டிः |
| 26. | पुष्टिः | புஷ்டிः |
| 27. | धनदा | தனதா |
| 28. | धनेश्वरी | தனேச்வரீ |
| 29. | श्रद्धा | சிரத்தா |
| 30. | भोगिनी | போகினீ |
| 31. | भोगदा | போகதா |
| 32. | धात्री | தாத்ரீ |

இவற்றை ஓம் ஸ்ரீயை நமः, ஓம் லக்ஷ்ம்யை நமः என்றவாறு கூறிக் கொள்ள வேண்டும்.

## லக்ஷ்மீ நிலைத்திருக்க

மஹாலக்ஷ்மீ நிலைத்திருக்க ஸ்ரீ ஸூக்த ஜபம் செய்ய வேண்டும். உண்மையே கூற வேண்டும். கிழக்கு முகமாக உட்கார்ந்து சாப்பிட



வேண்டும். பிரியமாகவும் அன்பாகவும் பேச வேண்டும். வஸ்த்ரமில்லாமல் ஜலத்தில் இறங்கக் கூடாது. எண்ணெ தேய்த்துக் கொண்டு உணவருந்தக் கூடாது. பூமியை வீணாகக் கிறக் கூடாது. பில்வம், தும்பைப் பூ, தாமரைப் பூ இவற்றைத் தலையில் அணியக் கூடாது. தாண்டவும் கூடாது. தனியாக உப்பைச் சாப்பிடக் கூடாது. அழுக்குடன் இருக்கக் கூடாது. அழுக்கடைந்த உணவை சாப்பிடக் கூடாது.

श्रियोमन्त्रं जपेन्मन्त्री श्री सूक्तानपि संजपेत्।
भूयसीं श्रिय माकांक्षन् सत्यवादी भवेत् सदा॥
प्रत्यगाशामुखोऽश्नीयात् स्थितः पूर्वंप्रियं वदेत्।
नग्नो नावतरेदंभः तैलाभ्यक्तो न भक्षयेत्॥
न वृथाविलिखेद्भूमिं न बिल्वं द्रोणमंबुजं।
धारयेन्मूर्ध्निनैवाद्यात् लोणं तैलं च केवलं॥
मालिनो न भवेज्जातु कुत्सितान्नं न भक्षयेत्॥
द्रोणपंकज बिल्वानि पद्भ्यां जातु न लंघयेत्॥

ஸ்ரீயோ மந்த்ரம் ஜபேன்மந்த்ரீ ஸ்ரீ ஸூக்தானபி ஸம்ஜபேத்।
பூயஸீம் ஸ்ரீயமாகாங்க்ஷன் ஸத்யவாதீ பவேத் ஸதா॥
ப்ரத்யகாசா முகோச்னீயாத் ஸ்திதः பூர்வம் ப்ரியம் வதேத்।
நக்னோ நாவதரேதம் பः தைலாப்யக்தோ நபக்ஷயேத்।
நவ்ருதா விலிகேத்பூமிம் ந பில்வம் த்ரோணமம்புஜம்॥
தாரயேந்மூர்த்நி நைவாத்யாத் லோணம் தைலம்ச கேவலம்।
மலினோ ந பவேத்ஜாது குத்ஸிதான்னம் ந பக்ஷயேத்॥
த்ரோணபங்கஜபில்வானி பத்ப்யாம் ஜாது ந லங்கயேத்॥

## இவர்களை லக்ஷ்மீ வந்தடைவாள்

वीर्यवन्तं त्वनलसं तपस्विनमकातरं।
दातारं चापि भोक्तारं युक्त्या सेवामि तंनरं॥

வீர்யவந்தம் த்வனலஸம் தபஸ்வின மகாதரம்।
தாதாரம் சாபி போக்தாரம் யுக்த்யா ஸேவாமிதம் நரம்॥

நல்ல வீரம் உடையவர், சோம்பலற்றவர், தவமுடையோர், பயமற்றவர், ஈகை உடையோர், செல்வத்தை நன்கு அனுபவிப்பவர் இவர்களை நான் அடைகிறேன் என்கிறாள் மஹாலக்ஷ்மீ.

## ஆதிசங்கர பகவத் பாதருக்காக ஸ்வர்ண மழை பொழிந்தாள்

ஆதிசங்கர பகவத் பாதர் அவர்கள் லக்ஷ்மீயைத் துதித்து ஏழையின் வீட்டில் பொன் நெல்லிக் கனிகளை மழையாகக் கொட்டச் செய்ததை இங்கு நினைவில் கொள்ளலாம். ஸ்ரீ சங்கராசாரியார் குழந்தைப் பருவத்தில் பிக்ஷாசரணம் செய்கிறார். ஒரு ஏழையின் வீட்டில் பிக்ஷை கேட்கின்றார். வீட்டுக்காரி தம் இல்லாமையைக் குறித்து வருந்துகின்றாள்.

विधिना खलुवंचितावयं वित्तरीतुं वत्तवेन शक्नुमः।

விதினாகலு வஞ்சிதாவயம் விதரீதும் வடவேன சக்னுமः।

தெய்வம் நமக்குப் பொருளை அளிக்கவில்லை. இந்தப் பிரம்மச்சாரிக்கு பிக்ஷையிட முடியாத துர்ப்பாக்கியம் நேர்ந்து விட்டதே எனக் கண்ணீர் வடிக்கின்றாள். மனம் இருப்பவரிடம் பொருள் இருப்பதில்லை. பொருள் உள்ளவரிடம் மனம் இருப்பதில்லை. இது உலகின் இயற்கை. மனம் நொந்து பரிதவிக்கும் அந்த ஸ்த்ரீயைக் கண்டு கருணை கொள்ளுகின்றார் சங்கரர். முன் ஜன்மாவில் பிறருக்குத் தானம் செய்யாதவருக்கும், புண்ணியம் செய்யாதவர்க்கும் இந்த ஜன்மாவில் தனம் அளிக்க மாட்டாள் மஹா லக்ஷ்மீ. சங்கரர் ஒரு முடிவிற்கு வருகின்றார். "அம்மா! இருப்பதைப் போடுங்கள்" என்றார். அந்த அம்மா ஆசார்யாளின் பாத்திரத்தில் ஒரு நெல்லிக் கனியைப் போடுகின்றாள்.

உடன் லக்ஷ்மீயை நோக்கி, "ஜகன்மாதா! இவள் எனக்கு பிக்ஷை இட்டிருக்கின்றாள். இந்தப் புண்ணியத்திற்கு இப்போது பலனாக இவருக்குப் பொருள் அளிக்க வேண்டும்" எனப் பிரார்த்தித்துக் கொண்டு மனம் உருகப் பாடுகின்றார் ஆதிசங்கரர். இதையே "கனக தாரா ஸ்தவம்" என்பர். அதில் ஒரு சுலோகம்,



अंगं हरेः पुलकभूषणमाश्रयन्ती
भृंगांगनेन वकुलाभरणं तमालं।
अंगीकृताखिलविभूतिरपांगलीला
मांगल्यदास्तु मम मंगलदेवतायाः॥

அங்கம் ஹரேः புலகபூஷண மாச்ரயந்தீ
ப்ருங்காங்கனேவ வகுளா பரணம் தமாலம்।
அங்கீக்ருதாகில விபூதிர பாங்கலீலா
மாங்கள்யதாஸ்து மம மங்கள தேவதாயாः॥

இந்த ஸ்துதியைச் செய்தவுடன் பொன் மயமான நெல்லிக் கனிகளாய் அன்னை அவள் வீடு நிறையப் பொழிந்தாள். இந்த ஸ்தோத்திரத்திற்குக் "கனக தாரா ஸ்தவம்" எனப் பெயர் வழங்கலாயிற்று.

## மஹா லக்ஷ்மியின் ஆவிர்பாவமும் லக்ஷ்மீ ஸ்வயம்வரமும்

विष्णोः सामर्थ्यरूपत्वात् विष्णु शक्तिः प्रगीयते।

விஷ்ணோः ஸாமர்த்யரூபத்வாத் விஷ்ணுசக்திः ப்ரகீயதே।

என்று இந்த மஹா லக்ஷ்மி, விஷ்ணு சக்தியாகப் போற்றப்படுகின்றாள். இந்த லக்ஷ்மீயின் திருவருள் கிடைத்தால்தான் விஷ்ணுவின் திருவருள் நமக்குக் கிடைக்கும். இந்த லக்ஷ்மீயை "புருஷகாரம்" என உரைப்பார் பெரியோர்.

लक्ष्म्या सह हृषीकेशः देव्याकाररूपया।
रक्षकः सर्वसिद्धान्ते वेदान्तेषु च गीयते॥

லக்ஷ்ம்யாஸஹ ஹ்ருஷீகேசः தேவ்யா காரண ரூபயா।
ரக்ஷகः ஸர்வஸித்தாந்தே வேதாந்தேஷு ச கீயதே॥

என்றபடி பக்தனுக்கு அருள் புரியும்படி பகவானை இவளே தூண்டுகின்றாள்.

முன்னொரு ஸமயம் விஷ்ணுவும் ருத்ரரும் ஹாலா, ஹலர் என்ற அசுரர்களைக் கொன்று விட்டு தம் இருப்பிடம் வந்தனர். லக்ஷ்மியிடமும் பார்வதியிடமும் தம் பராக்ரமச் செயல்களைக் கூறிப் பெருமிதம் கொண்டனர். இதைக் கேட்டு லக்ஷ்மியும் பார்வதியும் சிரித்தனர். அதனால் கோபம் அடைந்த இருவரும் இரு சக்திகளையும் அலக்ஷ்யமாய்ப் பேச, இருவரும் இருவரையும் விட்டுச் சென்று விட்டனர். அதனால் இருவரும் சக்தி இழந்து செயலற்றிருந்தனர்.

निस्तेजस्कौ च निश्शक्ती विक्षितौ च विचेतनौ।
अवमानात्तयोः शक्त्योः जातौ हरि हरौ तदा॥

நிஸ்தே ஜஸ்கௌச நிச்சக்தீ விக்ஷிப்தௌ ச விசேதனௌ।
அவமானாத்தயோ: சக்த்யோ: ஜாதௌ ஹரி ஹரௌ ததா॥

இதனால் அசுரர் பலம் பெற்றனர். தேவர், ராஜ்யாதிகள் இழந்து துயருற்றனர். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிய மஹா விஷ்ணுவின் யோசனைப்படி தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடி மந்த்ர மலையை மத்தாக்கி, வாசுகியைக் கடைக் கயிராக்கி, திருப்பாற்கடலைக் கடைந்தனர். கடல் கடைந்த தினம் ஏகாதசி. கடலிலிருந்து கற்பக விருக்ஷம் முதலிய பல அரிய வஸ்துக்களும், ஐராவதம், அப்ஸரஸ் முதலியவர்களும் உதித்தனர்.

த்வாதசி காலையில் ஸ்ரீ மஹா லக்ஷ்மீ அம்ருதக் கடலினின்றும் உதித்தாள். ஸ்வர்ண பாத்ரம், மாதுளம் பழம், தங்கத் தாமரை மலர்களை நான்கு கரங்களிலும் கொண்டு அவள் பிரகாசித்தாள்.

உடன் தேவர் படஹம் வாசித்தனர். திக்குகள் எங்கும் நிர்மலமாய்ப் பிரகாசித்தனர். அவளை வெள்ளி மலை போன்ற நான்கு யானைகள், ரத்னக் குடங்கள் கொண்டு அம்ருதத்தினால் அபிஷேகம் செய்வித்தன. தேவரைக் காக்கத் திருவுள்ளம் கொண்டு பாற்கடலினின்றும் தோன்றிய லக்ஷ்மீ, ஸகல குணங்களும் நிறைந்தவரும் அழகின் திருவுருவமானவரும் புருஷோத்தமனுமாகிய ஸ்ரீமந் நாராயணனைரைத் தம்பதியாக வரித்து, தேவர் முன்னிலையில் அவர் கழுத்தில் மலர்மாலை அணிவித்து திருவருள் புரிந்தாள்.

பின்னர் விஷ்ணு லக்ஷ்மீ கடாக்ஷம் பெற்றதால் சக்தி பெற்று விளங்கினார். ஜகன்மாதா மஹா லக்ஷ்மீயின் அருள் பார்வை



தேவர்களுக்கும் கிடைக்க அதனால் தேவர்களுக்கு அம்ருதம் கிடைத்தது. மூவுலக ஸாம்ராஜ்யமும் கிடைக்கப் பெற்று மகிழ்ந்தனர். லக்ஷ்மி கடாக்ஷம் பெற்றோருக்கு கிடைக்காததுவும் உண்டோ!

## श्री महालक्ष्मी महा मन्त्र जपविधानं
### ஸ்ரீ மஹா லக்ஷ்மீ மஹாமந்த்ர ஜபவிதானம்

இந்த மஹா லக்ஷ்மீயின் மஹா மந்த்ரங்கள், மந்த்ர மஹார்ணவம், மந்த்ர மஹோததி, சாரதா திலகம், ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம், ப்ரபஞ்ச ஸார ஸார ஸங்க்ரஹம் முதலான நூல்களில் பல கூறப்பட்டுள்ளன.

ஏகாக்ஷர மந்த்ரம் நான்கு அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரம், பத்து அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரம், 27 அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரம், 23 அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரம் என பல கூறப்பட்டுள்ளன. அவ்வாறே ஒவ்வொரு மந்த்ரங்களுக்கும் தியானச் சுலோகங்களும் பலவாறாகக் கூறப்பட்டுள்ளன.

ओं श्रीं महालक्ष्म्यै नमः (एकाक्षर मन्त्रः)

ஓம் ஸ்ரீம் மஹாலக்ஷ்ம்யை நம: (ஏகாக்ஷர மந்த்ரம்)

ओं ऐं श्रीं ह्रीं क्लीं (महालक्ष्म्यै नमः)

ஓம் ஐம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் (மஹாலக்ஷ்ம்யை நம:) 4

ओं नमः कमलवासिन्यै स्वाहा

ஓம் நம: கமலவாஸின்யை ஸ்வாஹா 10

ओं श्रीं ह्रीं श्रीं कमले कमलालये प्रसीद प्रसीद श्रीं ह्रीं श्रीं महालक्ष्म्यै नमः

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம் கமலே கமலாலயே ப்ரஸீத ப்ரஸீத ஸ்ரீ ஹ்ரீம் ஸ்ரீம் மஹாலக்ஷ்ம்யை நம:

ओं ऐं ह्रीं श्रीं क्लीं सौं जगत्प्रसूत्यै नमः

ஓம் ஐம் ஹ்ரீம் ஶ்ரீம் க்லீம் ஸௌம் ஜகத்ப்ரஸூத்யை நம:

ओं श्रीं ह्रीं क्लीं श्रीं लक्ष्मीरागच्छागच्छ मम मन्दिरे तिष्ठ तिष्ठ स्वाहा

ஓம் ஶ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஶ்ரீம் லக்ஷ்மீ ராகச்சாகச்ச மம மந்திரே திஷ்ட திஷ்ட ஸ்வாஹா

ओं श्रीं ह्रीं क्लीं महालक्ष्मिमहालक्ष्मि एह्येहि सर्वसौभाग्यं मे देहि स्वाहा

ஓம் ஶ்ரீம் ஹ்ரீம் க்லீம் மஹாலக்ஷ்மீ மஹாலக்ஷ்மீ ஏஹ்யேஹி ஸர்வஸௌபாக்யம் மே தேஹி ஸ்வாஹா॥

## श्री महा लक्ष्मी एकाक्षरी मन्त्रः श्रीं
## ஶ்ரீ மஹா லக்ஷ்மீ ஏகாக்ஷரீ மந்த்ர: (ஶ்ரீம்)

अस्य श्री महालक्ष्मी महामन्त्रस्य भृगुः ऋषिः निवृच्छन्दः श्री लक्ष्मीर्देवता शंबीजं ईं शक्तिः मम पुष्कलधना वाप्तये जपे विनियोगः

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | करन्यासः | | | अंगनियासः |
| ओं | श्रीं | अंगुष्ठेभ्यां नमः | ओं | श्रीं | हृदयाय नमः |
| ओं | श्रीं | तर्जनीभ्यां नमः | ओं | श्रीं | शिरसे स्वाहा |
| ओं | श्रूं | मध्यमाभ्यां नमः | ओं | श्रूं | शिखायै वषट् |
| ओं | श्रैं | अनामिकाभ्यां नमः | ओं | श्रैं | कवचाय हुं |
| ओं | श्रौं | कनिष्ठिकाभ्यां नमः | ओं | श्रः | नेत्रयाय वौषट् |
| ओं | श्रः | करतलकरपृष्ठाभ्यां नमः | ओं | श्रः | अस्त्राय फट् |

भूर्भुवस्सुवरयोमिति दिग्बन्धः

ध्यानं

कान्त्याकांचनसन्निभां हिमगिरि प्रख्यैः चतुर्भिर्गजैः

हस्तोत्क्षिप्त हिरण्मयामृत घटैः आसिच्यमानां श्रियं।



बिभ्राणां वरमब्जयुग्ममभयं हस्तैः किरीटोज्वलां

क्षीमावद्धनितंब विंब लसितां वन्देऽरविन्दस्थितां॥

தங்க நிறத்தினள். ஹிமாலயம் போன்ற நான்கு யானைகளின் துதிக்கைகளில் உள்ள பொன்மயமான அம்ருதக் கலசங்களால் அபிஷேகம் செய்விக்கப்பட்டவள். நான்கு கரங்களில் வரம் இரண்டு, தாமரை மலர்கள், அபயம் தரித்தவள். கிரீடத்தால் பிரகாசிப்பவள். இடையில் பட்டாடை தரித்திருப்பவள். இவளே மஹாலக்ஷ்மீ. இவள் தாமரை மலரில் வீற்றிருப்பாள். இவளை வணங்குகின்றேன்.

लं पृथिव्यात्मिकायै गन्धं समर्पयामि।

हं आकाशात्मिकायै पुष्पाणि समर्पयामि।

यं वाय्वात्मिकायै धूपमाघ्रापयामि।

रं वन्ह्यात्मिकायै दीपं दर्शयामि।

अं अमृतात्मिकायै अमृतोपहारं समर्पयामि।

सं सर्वात्मिकायै सर्वोपचारान्समर्पयामि॥

मूलमन्त्रः ओं "श्रीं"

जपान्ते अंगन्यासः भूर्भुवस्सुवरोमिति दिग्विमोकः

ध्यानं लमित्यादि पूजा —— समर्पणं कर्तव्यं॥

### ஏகாக்ஷரீ மஹாலக்ஷ்மீ மந்த்ர ஜபவிதானம்

அஸ்ய ஶ்ரீ மஹாலக்ஷ்மீ மஹா மந்த்ரஸ்ய ப்ருகு: ரிஷி: நிவ்ருத்சந்த: ஶ்ரீ லக்ஷ்மீர் தேவதா. சம்பீஜம் ஈம் சக்தி: புஷ்கள தனாவாப்தயே ஜபே வினியோக:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | கரநியாஸ: | | | அங்கநியாஸ: |
| ஓம் | ச்ராம் | அங்குஷ்டாப்யாம் நம: | ஓம் | ச்ராம் | ஹ்ருதயாய நம: |
| ஓம் | ஶ்ரீம் | தர்ஜனீப்யாம் நம: | ஓம் | ஶ்ரீம் | சிரஸே ஸ்வாஹா |
| ஓம் | ச்ரூம் | மத்யமாப்யாம் நம: | ஓம் | ச்ரூம் | சிகாயை வஷட் |
| ஓம் | ச்ரைம் | அனாமிகாப்யாம் நம: | ஓம் | ச்ரைம் | கவசாய ஹும் |

